10 Apr 2018

# ரங்க ராஜ்ஜியம் - புதிய தொடர்



ரங்க ராஜ்ஜியம் - புதிய தொடர்

இந்திரா செளந்தர்ராஜன் படங்கள்: என்.ஜி.மணிகண்டன்

**ஆராத வருளமுதம் பொதிந்த கோயில்**
**அம்புயத்தோ னயோத்தி மன்னற்களித்தகோயில்**
**தோலாத தனிவீரன் றொழுத கோயில்**
**துணையான வீடணற்குத் துணையாங்கோயில்**
**சேராத பயனெல்லாஞ் சேர்க்குங் கோயில்**
**செழு மறையின் முதலெழுத்துச் சேர்ந்த கோயில்**
**தீராத வினையனைந்து தீர்க்குங்கோயில்**
**திருவரங்க மெனத்திகழுங் கோயில் தானே!**
**- ஸ்ரீதேசிகப் பிரபந்தம் -**

வாசக நெஞ்சங்களுக்கு என் வந்தனங்கள்!

ஆழ்வார்களை ஆராதிப்போம், சுந்தர காண்டம், கண்ணன் வருவான், எனும் வரிசையில் நான் எழுதப் போகும் ஒரு தொடரே ‘ரங்க ராஜ்ஜியம்’ என்னும் இத்தொடர்!



ஸ்ரீவைஷ்ணவ திவ்ய தேசங்களில் முதலா வதும் பூலோக வைகுண்டம் எனப்படுவதுமான திருவரங்கம் இத்தொடரின் பிரதான களம்! காவிரி நதியையே தன் தோள்மாலை போல் நிலமிசை சூடிக்கொண்டு, தாமச நித்திரையில் துயில் கொண்டிருப்பது போல் தோற்றம் தரும் அரங்கநாதப் பெருமாளே இத்தொடரின் நாயகன்!

அரங்கன், தொடரின் நாயகன் மட்டுமல்ல, ஈரேழு பதினான்கு உலகங்களுக்கும் அவனே நாயகன்! மண்மிசை குடிகொண்டிருக்கும் இவன் கோயிலின் பின்புலத்தில்தான் எத்தனை ரசமான சங்கதிகள்! `கோயில்' என்றாலே பிரதான மிக்கதாயும், வரலாற்றுத் தொடர்புடையதாகும் அற்புதங்களின் நிலைக்கலனாகவும் இருப்பதை, நாம் நம் மண்மிசை உள்ள பல கோயில்களை வைத்து உணரலாம்.

ஆனால், இத்திருவரங்கன் கோயிலோ புராதன வரலாறு கடந்து புராணத் தொடர் போடும், அதனின் மேலான பல அரிய அமைப்புகளுடனும் உடைய கோயிலாகும். அதனாலேயே பதினோரு ஆழ்வார்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருத் தலமாகவும், ஸ்ரீவேதாந்த தேசிகன் தொட்டு திருப்பாணாழ்வார், ஸ்ரீராமாநுஜர் ஆகியோர் பரமபதம் அடையக் காரணமாயும் திகழ்கிறது.

ஸ்ரீராமாநுஜரின் குருவான பெரிய நம்பி முதல், வைணவச் செல்வம் எனப்படும் பிள்ளை லோகாச்சார்யார் முதலானோர் அவதரித்ததும் இம்மண்ணில்தான். மிகமிக சூட்சமமான உட்பொருளோடு கூடிய ஏழு பிராகாரங்கள் இத்திருக்கோயிலின் தனிப்பெரும் சிறப்பாகும்.

ஏழாம் எண்ணை எண்ணும்போதே ஏழு பிறப்பு முதல் ஏழு அதிசயங்கள் தொட்டு, சப்த ஸ்வரங்கள், வண்ணங்கள், ரிஷிகள் என்று நம் எண்ணம் விரியும்.

பஞ்சபூதங்களாலான மானிடன், விசேஷமாக ஆறாம் அறிவு பெற்று, அதன் காரணமாக ஏழாகிய சப்தம் எனும் மனம் வாய்க்கப் பெற்று, வாய்த்த அந்த மனதால் எட்டவேண்டியதே ஒன்ற வேண்டியதே ஒன்பதாகிய இறைவனின் திருவடி என்று ஒன்று முதல் ஒன்பது எண்களுக்கு ஒரு வியாக்கியானம் உண்டு. இதில் ஏழுதான் முக்கிய இடத்தில் இருக்கிறது. இந்த ஏழு, திருவரங்கத்தில் ஏழு பிராகாரங்களாக உள்ளது. அந்தப் பிராகாரங்களை வலம் வந்து அரங்கனை வணங்குபவர்களுக்கு, ஏழு பிறப்பில் உருவான நன்மை தீமைகள் நேராகின்றன.



கர்மம் நேர்ப்பட்டாலே அவன் திருவடியை யும் சரண் புக முடியும். இப்படி உட்பொதியோடு கூடிய விஷயங்களோடு, பிரபந்தத் தமிழை வளர்த்த பெரும் சிறப்போடு, நாம் நுட்பமாய் அறிய வேண்டிய ஏராளமான விஷயங்களோடும் உள்ள அரங்கப்பெருமானைப் பணிந்து வணங்கி தொடங்குகிறேன். இந்த அரங்கனைத் திருவரங்கனை நீங்களும் தொடருங்கள்.

பூலோகம்!

இப்பூலோகத்தில் சூர்யகுலத் தோன்றலான இக்ஷவாகுவின் காலம். இவன் காலத்தில்தான் இன்று நாம் பூஜித்து சென்னிமேல் வைத்துக் கொண்டாடும் இத்திருவரங்கப் பெருமான் பிரம்மாவின் சத்யலோகத்தில் இருந்து பூலோகத்துக்கு வந்தார்!

பூலோகத்தில் எண்ணில்லாத ஆலயங்கள்! இவற்றில் சுயம்புவாய் தோன்றியவையும் உண்டு, ராஜராஜசோழன் எழுப்பிய தஞ்சை பிரகதீஸ்வரம் போல அரசர் பெருமக்களால் தோற்றுவிக்கப் பட்டவையும் உண்டு. ஆனால் விண்ணிலே இருந்து மண்ணுக்கு வந்த முதலும் கடைசியுமான ஒரே ஆலயம் திருவரங்கப் பெருமான் ஆலயம் மட்டும் தான்!

இப்படி மண்மிசை இது பூலோகவாசிகளுக்கு கிடைக்க ஒரே காரணமாக திகழ்ந்தவன் சூர்ய குலத்தோன்றலான இக்ஷவாகு என்பவன்தான்! அயோத்தியை தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்த இவனது காலத்தை துல்லியமாக அனுமானிக்க முடியவில்லை. ஆனால் ஒரு தோராயக் கணக்கு போட்டுப் பார்க்க முடிகிறது.

இந்த தோராயக் கணக்கை போடுவதற்கு முன் பிரம்ம சிருஷ்டி மற்றும் பிரம்மாவால் கால நிர்வாகம் செய்ய தோற்றுவிக்கப்பட்ட பதினான்கு மனுபுருஷர்கள் பற்றி நாம் அறிய வேண்டியது அவசியம். இவர்களை அறிந்தாலே அந்த தோராயக் கணக்கை நாம் போட முடியும். அப்படிப்போட்டாலே இன்று நாம் சென்னிமேல் வைத்து பூஜித்து வரும் திருவரங்கப் பெருமானின் அநாதிகாலப் பிரமாணம் தெரிய வந்து நாம் பிரமிக்கவும் முடியும்.

நாம் இப்போது நமது ஆட்சியாளர்களின் கணக்குப்படி கி.பி. 2018-ல் இருக்கிறோம். இந்த கி.பி.க்கு முன்பாக கி.மு. என்று ஒரு காலக்கணக்கு உள்ளது. அதையெல்லாம் கடந்து பல்லாயிரம் ஆண்டுகள் பின்னோக் கிச் சென்றால்தான் அந்த தோராயக் கணக்கையே நம்மால் போட முடியும்! முன்னதாக நாம் எம்பெருமானிடமிருந்தே தொடங்குவோம். ஆழியில்லை, ஊழியில்லை,

ஆல், அரசு என்றும் ஏதுமில்லை. ஈ எறும்பு முதல் புழு பூச்சி தொட்டு ஊர்பவை, பறப்பவை, நீந்துபவை, நடப்பவை என்று ஓர்உயிர்க்கூட்டம் ஒன்று உருவாகும் முன் அவன் மட்டும்தான் இருந்தான்!

தன்னில் இருந்து முதன் முதலாய் நான்முகனைப் படைத்த அவன், அவனைக் கொண்டே நால்வகை வேதம் எனும் சப்தப் பிரபஞ்சத்தை படைத்தான். பிறகே ஈரேழு பதினான்கு புவனங்களும் உருவாகி, உயிர்களும் தோற்றுவிக்கப்பட்டன!



பூமிக்கு மேலே புவஹ, சுவஹ, மஹஹ, ஜனஹ, தபஹ, சத்யம் என்று மொத்தம் ஏழு லோகங்கள்! பூமிக்குக் கீழே அதள, விதள, சுதள, ரசாதள, தளாதள, மகாதள, பாதாள என்று ஏழு லோகங்கள்! இதுபோக வாயு, அக்னி, வருணன், இந்திரன், சூர்ய, சந்திரர்கள் மற்றும் சப்தரிஷி மண்டலம் முதல் நட்சத்திர மண்டலங்கள் என்று தோன்றியதாக ஸ்ரீரங்க மஹாத்மியம் கூறுகிறது.

ஆகக்கூடி ஒன்றுக்கு பதினான்கு லோகங் களும் வேதங்களும், உயர்வாழ்க்கைகளும் தோன்றிய நொடி காலம் என்கிற ஒன்றும் தோன்றிவிட்டது. இதன்படி கிருத யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலி யுகம் என்று யுகங்களும் தோன்றின. இதில் கலியுகத்தின் நீளம் 4 லட்சத்து 32000 வருடங்கள்! ஏனைய யுகங்களில் துவாபரம் இதுபோல்

இருமடங்கு கொண்டதாகும். திரேதா யுகம் மூன்று மடங்கும், கிருத யுகம் நான்கு மடங்கும் கொண்டதாம்!

இதனை நம் சிறு மூளை கொண்டு கற்பனை செய்து பார்க்க முனைந்தால் ஆயாசமே மிஞ்சும். இந்த யுகக் கணக்கை நிர்வகிக்க பிரம்மா பதினான்கு மனுக்களைப் படைத்தார். இந்தப் பதினான்கு பேரில் விவஸ்வான் எனும் ஏழாவது மனுவின் காலநிர்வாகத்தில் அவன் புத்ரனான இக்ஷவாகுவால்தான் அரங்க நாதப் பெருமானின் பிரணவாகார விமானமுடன் கூடிய அர்ச்சா ரூப திவ்ய திருமேனி பூ உலகம் வந்தது. அதாவது இப்போது நிகழ்ந்தபடி இருக்கும் கலியுகத்துக்கும்முன் துவாபரயுகம் அதற்கும் முன் திரேதாயுகம்... இந்த யுகமே சூர்ய வம்சத்தில் ஸ்ரீராமபிரானின் காலமாகும்!

பிந்தைய துவாபரயுகம் மகாபாரத காலமாய் ஸ்ரீகிருஷ்ணனுக்கான காலமாய் இருந்தது... பிறகே கலியுகம் தொடங்கி அதில்தான் இன்று நாம் இருக்கிறோம். என்றால் பின்னோக்கிய இக்கால வெளியை நம்மால் கற்பனை செய்து பார்க்க மிகுந்த சக்தி வேண்டும் என்பதே யதார்த்தமாகும். துவாபார யுகத்து மகாபாரதச் சம்பவங்களை வைத்து சில காலக்கணக்குகளை சிலர் போட்டுள்ளனர். பாரத யுத்தம் தொடங்கிய காலம் இதனால் ஓரளவு தெரிய வந்திருக்கிறது.

அதற்கும் முந்தைய யுகத்திலேயே எம்பெருமானின் ஸ்வயம்வ்யக்த (தானாய் தோன்றுதல்) திருமேனி இக்ஷாவாகுவால் பூ உலகுக்கு வந்து விட்டது.

இது ஏன் விண்ணில் இருந்து மண்ணுக்கு வர வேண்டும்? எதனால் இக்ஷாவாகு இதனைக் கொணர்ந்தான் என்பதும் அறியப்பட வேண்டிய சங்கதிகளே! பார்ப்போமா?

பூ உலக உயிர்களின் வாழ்க்கை என்பது பொழுதுகளில் இரவு, பகல் போல உணர்வுகளில் இன்பம், துன்பம் எனும் இரண்டை உடைய தாக இருந்தது. இருக்கிறது. இனியும் அப்படியே இருக்கும். அப்படி இருந்தாலே வாழ்வென்பதும் மாற்றங்கள் கொண்டதாய் சுவாரஸ்யமானதாய் விளங்க முடியும். எல்லாம் இரண்டிரண்டாய்

இருப்பதே பூ உலக யதார்த்தம்!

இனிப்பென்றால் கசப்பு, இன்பமென்றால் துன்பம், இருள் என்றால் ஒளி, ஆண் என்றால் பெண்... இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம். இப்பட்டியலில் பாவம் என்றால் புண்ணியம் என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். இரண்டையும் சார்ந்தே மனித வாழ்வு நடை பெறுகிறது.

இதனால் பாவபுண்ணியங்கள் கொண்ட ஒரு வாழ்வே மனித வாழ்வாக உள்ளது. இந்த இரட்டைக் கணக்கு மனிதனுக்கு மட்டும்தான். ஏனைய உயிர்களுக்கு இல்லை. மனிதன் மட்டுமே தன அறாம் அறிவு காரணமாக தன்னையறிந்தும், உலகையறிந்தும், தான் வாழும் உலகம் பற்றியும் அறிந்து முக்காலம் கொண்டு விளங்குகிறான். ஏனைய உயிர்களுக்கு வாழ்வு என்பது உணர்வுப் பூர்வமானது மட்டுமே! அதில் சொற்ப அறிவுபூர்வம் இருந்தாலும் அவற்றுக்கு தங்களை அறியும் ஆற்றலோ, பிரபஞ்சப் புரிதலோ கிடையாது. எனவே அவை பாவ புண்ணியங்களுக்கு ஆட்படுவதில்லை.

தன்னையும் தான் வாழும் உலகையும் அறிய முடிந்த மனிதனோ பாவ புண்ணியங்களுக்கு ஆட்பட்டே வாழ வேண்டியுள்ளது. பின் அவற்றுக்கேற்ப சொர்க்க, நரகங்கள் காண்பது, மறுஜன்மம் கண்டு வாழ்வது என்பவை எல்லாம் திகழ்கின்றன.

இந்த இரு நிலைகளில் இருந்தும் விடுபட்டு எம்பெருமான் திருவடிகளை அடைவது என்பதற்கே வாழ்க்கை அருளப்பட்டது. இது தெரிந்தபோதிலும் நம் வாழ்க்கைச் சாகரத்தில் புண்ணிய காரியங்கள் மட்டுமே செய்து வாழ்வதும் சரி, பாவங்களைச் செய்து மீள்வதும் சரி இயலாத ஒன்றாகவே உள்ளது. இந்த இயலாத ஒன்றை இயலுமாறு ஆக்கவே குருநாதர்களை இறைவனாய் எம் பெருமான் நம் பொருட்டு அனுப்பி வைக்கிறான். அது மட்டுமின்றி மன்மிசை கோயில் கொண்டு நம்மை பூஜிக்கச் செய்து மெல்ல ஞானத்தைத் தந்து பிறவி என்னும் தளையில் இருந்து விடுபட வைக்கிறான்.

அயோத்தியில் சூர்ய வம்சத்தில் அரசாட்சி புரிந்து வந்த வைவஸ்வத

மனு புக்ரனான இக்ஷாவாகுவுக்கும் இப்படித்தான் அவன் வாழ்வில் ஞானம் குறித்த எண்ணம் ஏற்பட்டது. ‘ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு நொடியும் மாறிடும் தன் உடல் திசுக்கள், இளமை முதுமை எனும் அதன் அடையாளங்கள், சற்றும் எதிர்பாராமல் வரும் உடல் உபாதைகள், உடன் இருந்து அன்பு காட்டுபவரின் மரணங்கள்’ என்று அவன் வாழ்வின் சம்பவங்கள், `மாற்றம் ஒன்றே இந்த உலகில் மாறாதது’ என்பதை அவனுக்கு உணர்த்தியதோடு, இப்பூவுலகில் நிலைத்த இளமையோடு வற்றாத சக்தியோடு வாழ்ந்தவர் என்றோ, வாழப்போகிறவர் என்றோ ஒருவர் கூட இல்லை என்கிற உண்மையையும் அவனுக்கு உணர்த்திற்று.

தனக்கும் முதுமை வரும், தன் வாழ்வும் ஒரு நாள் முடிந்து போய்விடும் என்கிற எண்ணம் அவனை நெருடத் தொடங்கி விட்டது. இந்த நெருடல், `நிறைவான பூரணமான வாழ்வென்பது எது’ என்கிற கேள்வியையும் எழுப்பியபோது, அதற்கான விடை அவன் தந்தையான மனுவிடமிருந்தே அவனுக்குக் கிடைத்தது.

விண்ணில் இருந்து வந்த அவர் தன் மகனிடம் “நீ விசாரத்தில் இருப்பது போல் தெரிகிறதே?” என்று ஆரம்பித்தார். “ஆம் தந்தையே... ஒரு பொழுது போல் மறுபொழுது இல்லை. சில நேரங்களில் மாற்றங்கள் மகிழ் வைத் தருகின்றன. சில நேரங்களில் அதுவே துன்பமளிப்பதாக உள்ளன. வேட்டைக்குச் சென்ற சமயத்தில் தனித்து விடப்பட்ட நான் உண்ண உணவின்றி பசியால் துடித்தேன். அப்போது பசியாதிருக்க வழியில்லையா என்ற கேள்வி எழும்பியது.

அதேநேரம் பசித்தாலல்லவா ருசியால் உண்ணுதல் என்பதும் சாத்தியம் என்று தோன்றிற்று. வாழ்க்கை என்பது இப்படி இரு தன்மையாகவே உள்ளது. இந்த இரண்டு மற்ற ஒரு நிலை இருக்கிறதா?” என்று கேட்டான்.

“மகனே! உன் விசாரம் எனக்கு புரிகிறது. விசாரப்படுவதும் ஒரு வகையில் நல்லதே. இல்லாவிட்டால் என்னிடம் நீ இப்படி ஒரு கேள்வியை எழுப்புவாயா?”

“நான் கேட்ட கேள்விக்கு இதுவா பதில்?”

“உனக்கான பதிலை நான் இனி கூறுவேன். நான் கூறப்போகும் பதில் உனக்கு மட்டுமல்ல... இந்த மண்ணில் உன்னைப்போல் தோன்றியிருக்கும் சகல உயிர்களுக்கும் சேர்த்துத்தான்...” என்று பீடிகையோடு பேசிய மனு, தன்னைப்படைத்த பிரம்மனே தான் வாழ்ந்திடும் சத்யலோகத்தில் அன்றாடம் பக்தியோடு ஶ்ரீமன் நாராயணனின் சயன கோல ரூபத்தை வழிபட்டு வருவதைக் கூறியபோது, இக்ஷவாகுவிடம் வியப்பு.

“மகனே! பிரம்மன்தான் என் வரையில் தாயும் தந்தையுமானவர். அவரே அந்தச் சயனக் கோல ரூபத்தை எனக்கும் காட்டி, `நீயும் நானும் தோன்றிட இவரே காரணம். இவராலேயே எல்லாம் உருவாயிற்று. இவரிடமிருந்தே நாம் வந்தோம். இவரைத் துதித்தும் பிறரை துதிக்கச் செய்வதினாலுமே எனக்கு ஆனந்தம் உண்டாகிறது’ என்றார். நானும் அவரோடு சேர்ந்து பிரணவர்கார பொன் மயமான விமானத்தோடு கூடிய அந்த மேனியை மலர் கொண்டு அர்ச்சித்து பூஜித்தேன். அதனால் இனம்புரியாத இன்பத்துக்கும் அனுமதிக்கும் ஆளானேன்” என்ற மனுவை இக்ஷவாகு வியப்பு குறையாமல் பார்த்தான்.

“என்ன அப்படிப் பார்க்கிறாய்?”

“உங்களுக்குக் கிடைத்த அந்த இன்பமும் அமைதியும் எனக்கும் கிடைக்குமா?”

“எப்போது இப்படி ஒரு கேள்வி உனக்குள் தோன்றி விட்டதோ அப்போதே நீ முக்தனுக்குரிய இடத்துக்கு வந்துவிட்டாய். நமக்கெல்லாம் கடமை இருக்கிறது. எனக்கு யுக நிர்வாகம். உனக்கு இம் மண்ணில் அரசாட்சி. இந்தக் கடமையை செய்தபடியே நீ இதற்கான வழியைத் தேடு. உற்ற குருவாய் விளங்கிடும் வசிஷ்ட முனிவர் உனக்கு நல்வழியைக் காட்டுவார்’’ என்ற தந்தையிடம், “அவர் காட்டுவது இருக்கட்டும் அந்தப் பிரணவாகார விமான மூர்த்தியை தாங்கள் எனக்குக் காட்டியருளக் கூடாதா?’’ எனக் கேட்டான் இக்ஷவாகு.

அதற்கு வைவஸ்வத மனு, “அதிசயங்களுக்கெல்லாம் அதிசயமான அதனை நான் காண நேர்ந்ததே பிரம்மனின் கருணையாலும் எனது நேரியக் கடமை யாலும்தான்! அவருக்கே கூட அப்பெருமான் கடுந்தவத்தின் வரமாய் கிட்டியவரே. எனவே நான் இப்போது கூறப்போகும் விவரங்களைக் கொண்டு உன் மனதால் ஒரு கோயில் எழுப்பி மானசீகமாய் வழிபாடு செய். உன் விருப்பம் காலத்தால் ஈடேறும்” என்ற மனு, திருவரங்கனை அவர் பள்ளி கொண்டிருக்கும் பிரணவாகார விமானத்தை பக்திப் பரவசத்தோடு விவரிக்கத் தொடங்கினான்.

**- தொடரும்...**



## பரிணாமத்தை உணர்த்தும் பத்து அவதாரங்கள்

**உ**யிர்களின் பரிணாம வளர்ச்சிக்கு ஏற்ப அவதாரங்களை எடுத்து பூமிக்கு வந்திருக்கிறார் என்பதையே பகவானின் தசாவதாரங்கள் நமக்கு உணர்த்துகின்றன.

**மச்சாவதாரம்:** நீரில் வசிக்கும் மீன்.

**கூர்மம்:** நீரிலும் நிலத்திலும் தென்படும் ஆமை.

**வராகம்:** நிலத்தில் வசிக்கும் பன்றி.

**நரசிம்மம்:** விலங்கு நிலையும் மனித நிலையும் கலந்தது.

**வாமனர் :** குள்ள மனிதனாக இருந்து த்ரிவிக்ரமனாக விஸ்வரூபம் அடைந்தது உருவ வளர்ச்சியைக் குறிப்பது.

**பரசுராமர் :** கோபம் கொண்ட மனித நிலை.

**பலராமர் :** சாதாரண மனித நிலை.

**கிருஷ்ணன்:** விளையாட்டும் வினையும் கலந்த மனிதத் தன்மை.

**ராமன் :** பொறுமையுடன் விவேகம் நிறைந்த மனிதத் தன்மை.

**கல்கி:** மனித நிலையைக் கடந்தது

- சிலம்பொலி செல்லப்பன் ஒரு சொற்பொழிவில் பேசியது.

24 Apr 2018

# ரங்க ராஜ்ஜியம்-2




ரங்க ராஜ்ஜியம்

இந்திரா சௌந்தர்ராஜன் ஓவியம்: சில்பி

கங்கையிற் புனிதமாய
  காவிரி நடுவு பாட்டு
பொங்கு நீர் பரந்து பாயும்
  பூம்பொழில ரங்கந்தன்னுள்,
எங்கள்மா லிறைவனீசன்
  கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன்
  ஏழையே னேழையேனே!

-தொண்டரடிப்பொடியாழ்வார்



'தகதகவென மின்னும் பொன் விமானம், திருப் பாற்கடலின் நடுவிலிருந்து கோடானுகோடி கதிரொளியோடு தோன்றிய ஒன்று!

அதை, கருட ராஜன் தன் தோளில் தாங்கிப் பிடித்திருக்கிறார். அதனுள் நாரதர், தும்புரு ஆகியோரின் வீணா கானங்கள் எப்போதும் ஒலித்தபடி இருக்கின்றன.

இந்திராதி தேவர்கள் முதல் சித்தசாத்ய கணங் களும் அதனுள் வணங்கிய கோலத்தில் காட்சி தருகின்றனர். ஆதிசேஷன் படம் விரித்திருக்க, அதுவே குடைப்பந்தலாகத் திகழ, அதன் கீழ் சூரிய சந்திரர் சாமரம் வீசிட, சேனாதிபதியான விஷ்வக் சேனர் கையில் பிரம்போடு நிற்க, எம்பெருமான் அரங்கநாதனாக பள்ளிகொண்டிருக்கிறார். தமது தாமச நித்திரைக்கு நடுவில் ஈரேழு பதினான்கு புவனங்களையும் தன் மானசத்தாலேயே இயக்குபவ ராக இருக்கிறார்’

- என்று விவஸ்வான் விவரிக்க, இக்ஷ்வாகுவின் மனதுக்குள் பொன்மயமான பிரணவாகாரப் பெருமாளின் திருக்கோலம் ஆழப்பதிந்துவிட்டது. அதே தருணம், ஞான பிதாவான விவஸ்வான் கரம் பற்றி அழைத்துச் சென்று தரிசனம் செய்விக்காமல், ‘உனது பக்திப் பிரயாசையால் அந்தத் தரிசனத்தை அடைய முயற்சி செய்’ என்று கூறியது உவப்பாகவும் இருந்தது, சற்று கசப்பாகவும் இருந்தது.

உவப்போ, கசப்போ மனதிலேயே வைத்துக்கொண்டிருக்க முடியுமா என்ன? அகத்தின் அழகு முகத்தில் தெரியுமே? அதிலும் வசிஷ்டர் போன்ற ராஜரிஷிகளுக்குத் தெரியாமல் போகுமா? இஷ்வாகுவின் முகவாட்டத்தைக் கண்டுகொண்ட வர், அதுபற்றி அவனிடம் நேராகவே கேட்கவும் செய்தார்.

“மேன்மைகள் மிகுந்த அயோத்திக்கு அரசனே! ஆகாய ரவியின் பூலோகப் பிறவியே! உனக்குக் கூடவா மனச்சலனம்... எதனால் உன் வதனத்தில் வாட்டம்?” என்று கேட்டார். இக்ஷ்வாகுவும் தன் கண்ணிரண்டையும் விண்மேல் வைத்த வனாக, “மகா குருவே! நான், என் தந்தை என்னுள் மூட்டிய பக்தியின் பெருக்கால், அந்த பிரம்மதேவன் அனுதினமும் வைத்து வணங்கி வரும் பிரணவாகாரப் பெருமாளின் சயனக் கோலம் குறித்தே சதா சிந்தித்த வண்ணமிருக்கிறேன். திருப்பாற் கடலில் தோன்றிய அந்தத்

திருவுருவத்தை ஒரு முறையாவது கண்ணாரக் காண வேண்டும் என்று மனது விம்முகிறது!



என்னதான் நான் ரவிகுலத் தோன்றலாய், மனுப்புத்திரனாய், ஆள், அம்பு, சேனை என்று ராஜ்ஜியாதிபதியாக இருப்பினும், அந்தத் தரிசனம் என்பது எனக்கு எட்டாத உயரத்தில் உள்ளது. சுயமாய் பறந்து செல்ல நானோ தேவபுருஷன் இல்லை. செல்லும் வழியும் தெரியவில்லை'' என்று இக்ஷ்வாகு சற்று விஸ்தாரமாகவே வருந்தினான். வசிஷ்டர் அதைக் கேட்டு பூரித்தார்.

``இக்ஷ்வாகு! நீ பற்றுவைக்க இந்த மண்மிசை எவ்வளவோ உள்ளன. காதுக்கினிய பாட்டு, கண்களுக்கினிய கணிகையர் ஆட்டம், நாவுக்கினிய அறுசுவை பதார்த்தங்கள், ஆவிக்குரிய தேகமானது அரிதுயில் கொள்ள பஞ்சணை என்று ராஜ சுகங்கள் அணிவகுத்து நிற்கின்ற நிலையிலும், நீ அவற்றை லட்சியம் செய்யாமல், பள்ளிகொண்ட பெருமாளை எண்ணி நெகிழ்வது மிகவும் போற்றுதலுக்குரியதாகும். உன்னைப் போல் பக்தியில் நெகிழ்வோருக்கு வழிகாட்டுவதற்கே என் போன்ற ரிஷிகளை அவையில் ராஜகுருக்களாக வரித்துள்ளனர். கவலைப்படாதே! உன் விருப்பம் ஈடேற வழி உண்டு.'' - என்றார் வசிஷ்டர்.

“குரு மகானே, தாங்கள்தான் அது என்ன வழி என்று காட்டி யருள வேண்டும்” என்று அவரின் கரங்களைப் பற்றினான் இக்ஷ்வாகு!

“ஒரு வார்த்தையில் அந்த வழியைக் காட்டிவிடுகிறேன். அந்த வழியின் பெயர் தவம்” என்றார் வசிஷ்டர்.

“தவமா?”

“ஆம், தவமேதான்!”

“அது, உம் போன்ற வேதியர்க்கும் ஞானியர்க்குமல்லவா விதிக்கப்பட்டது?”

“அப்படியல்ல... உயர்ந்த விருப்பங்களை ஈடேற்றிக்கொள்ள விழையும் எவர்க்கும் அதுவே உன்னதமான வழி.”

“எனில், இந்த ராஜ்ஜிய பாரத்தை யார் சுமப்பது?”

“இப்படி நீ அடுத்தடுத்து கேள்விகளாய்க் கேட்டுக்கொண்டிருந்தால், தவம் புரிய இயலாது. தவம் புரிய ஒன்றே ஒன்றுதான் தேவை”

“என்ன அது?”

“வைராக்கியம்.”

“அதில் நான் குறைந்தவனல்ல...”

“அதைத் தவத்தில் காட்டு. நாட்டைப் பற்றிய கவலையை விடு. உன் தவமே நாட்டையும் நலம் படப் பார்த்துக்கொள்ளும்.”

“என்றால் இது ஒன்றுதான் வழியா?”

“சத்யலோகம் சார்ந்தவற்றைத் தவத்தாலேயே விரைந்து அடைய முடியும். பிரம்மன் தவசிகளுக்கு மிகவே இரங்குபவர். வரங்களை விரைந்து தருவ திலும் வள்ளல் அந்த மூர்த்தி”

“நல்லது... அவர் குறித்தே தவத்தைத் தொடங்கு கிறேன். எனது விருப்பத்தை அவர்தான் நிறைவேற்றவும் வேண்டும்.”



“அதற்கு முன் உனது இலக்கைத் தெளிவாய் வகுத்துக்கொள்.”

“என் இலக்கு அந்த பிரணவாகார விமானமும் எம்பெருமானுமே.”

“அப்பெருமாளை நீ மட்டும் தரிசித்தால் போதுமா?”

“நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?”

“உன் தவ முயற்சி எல்லோருக்குமானதாய் இருக்கட்டும்.”

“நல்ல கருத்து. அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?”

“அந்தப் பிரணவாகார விமானமும் எம்பெரு மானும் உனது இந்த அயோத்திக்கு வரவேண்டும். உன்னைச் சார்ந்த என் போன்றோரும் துதித்து மகிழ்வதோடு, பிறப்பெனும் பெருங்கடலை நீந்திக் கடந்து

அவரோடு சேர்ந்திட, அது எங்களுக்குப் பெரிதும் உதவும்!"

"அற்புதமான கருத்து. இந்த நொடி முதல் என் இலக்கும் அதுவே."

இக்ஷ்வாகு உணர்ச்சிப் பெருக்கோடு வசிஷ்ட ரின் வழிகாட்டலில் தவத்துக்குத் தயாரானான். வசிஷ்டரும் வழிமுறைகளைக் கூறலானார்.

"இக்ஷ்வாகு... என் இனிய சத்ரியனே! அரச வாழ்வென்பது புலன்களின் பெருக்கத்தில் உச்சம் காண்பது. தவமெனப்படுவதோ புலன்களின் சுருக்கத்தில் உச்சம் காண்பது.

இச்சைகளில் ஊறிய உன் உடல், நீ தவம்புரியத் தொடங்கும்போது அடங்க மறுக்கலாம்! குறிப்பாக மனதை அடக்க முனையும்போதுதான், அது புரவிபோல் முன்கால் இரண்டும் ஆர்த்தெழ கட்டவிழ்ந்து ஓட முனையும். அதனால் மருண்டு போய் தவத்தைக் கைவிட்டுவிடாதே. அந்த மனப் புரவியை வைராக்கியத்தோடு அடக்கி சூன்ய மெனும் லாயத்தில் கட்டு. ஒரே சிந்தையாய் பிரம்மனை எண்ணிடு. உன் வைராக்கிய தவம் சத்யலோகத்தையே நடுங்கவைக்க வேண்டும்."

"மகா குருவே! கேட்கிறேன் என்று தவறாகக் கருதிவிடாதீர்கள். இந்தப் பூ உலகில் நான் எனக்குள் பிரம்மனை எண்ணுவது, விண்ணில் சத்யலோகத்தில் எப்படி எதிரொலிக்கும்? என் தந்தை போல் விண்ணுக்கும் மண்ணுக்கும் போய் வர முடிந்தவர்கள் சத்யலோகம் போய் சொல்வதன் மூலம்தான் அந்த பிரம்மா அறிவாரா?"

இக்ஷ்வாகுவின் பாமரமான கேள்வியை எண்ணிச் சிரித்த வசிஷ்டர், "இக்ஷ்வாகு! நீ, நான், நாம் என்று எல்லோருமே பிரம்மனால் படைக்கப் பட்டவர்களே. ஆனால் நாமும், ஈரேழு பதினான்கு புவனங்கள் தொட்டு, புல் பூண்டு முதல் புழுப்பூச்சி வரை சகல உயிரினமும் உருவாக மூலக்காரணம், அந்த பிரம்மனையும் படைத்த பரந்தாமனே!

அவரே பாற்கடலில் பள்ளிகொண்டிருப்பவர். அவரை அர்ச்சாரூபமாகத் தினமும் கண்டு வணங்கவே நீ இந்தத் தவத்தை மேற்கொள்கிறாய். இதை முதலில் புரிந்துகொள்.

இடம், காலம், நேரம் எனும் பிரமாணங்களால் நாம் தொலைவில் இருக்கின்றபோதிலும் அவரோடு எப்போதும் நாம் தொடர்பிலும் உள்ளோம். அதை உணராதபடி நம் வாழ்வும், தேகம் சார்ந்த பசி, தாகம் முதலானவையும் இருக்கின்றன. இதை அறிவால் உணர்ந்து அவற்றை வென்றிடும்போதுதான் ஞான ஸித்தி ஏற்படுகிறது. ஞான ஸித்தி ஏற்படும்போதே இடம், காலம் எனும் பிரமாணங்கள் சிறிதாகி, நமக்குள்ளேயே நாம் சகலத்தையும் காணலாம்.

இதற்கு மேல் நான் வார்த்தைகளில் கூறுவதை விட, நீயே உன் தவத்தால் உனது கேள்விகளுக்கு விடை காண்பதே சாலச் சிறந்தது. எனவே வைராக்கியமாய் தவத்தில் மூழ்கு!

எத்தனை நாட்கள், எவ்வளவு காலம் போன்ற கேள்விகளை எல்லாம் புறந்தள்ளி, `தவமே இனி என் வாழ்வு' என்றாகுமளவு தவத்தில் மூழ்கு. அந்தத் தவம் உனக்கு எல்லாமும் தரும். ஒன்றை மட்டும் மறந்துவிடாதே. தவம் புரியத் தொடங்குவோர்க்கு இடர்ப்பாடுகள் ஏற்படுவது இயல்பு. அவை உன் உறுதிக்கான சோதனைகள்! பரீட்சை கள்! அவற்றில் நீ தோற்றுவிடக் கூடாது.''

வசிஷ்டர், சொல்ல வேண்டிய சகலத்தையும் சொல்லி, அந்த அரசனைத் தவசியாக்கினார்.

கிரீட, கவச-குண்டலங்களை எல்லாம் களைந்தவன், மரவுரி தரித்து, திறந்த மார்போடு, தண்ட கமண்டலங்களோடு, அயோத்தியை ஒட்டி ஓடும் சரயு நதிக்கரையில் ஆசிரமம் கண்டு தவத்தில் மூழ்கினான்.

நாடே ஆச்சர்யப்பட்டது? அவர்களுக்குத் தெரியாது. எதற்கு இந்தத் தவம் என்று?

- தொடரும்...

படங்கள்: என்.ஜி.மணிகண்டன்



## களிமண்ணே காப்பு!

இரும்புப் பெட்டி, பாதுகாப்பு அறைகள் ஆகியவற்றைப் பூட்டி, அரக்கு சீல் வைப்பதுதான் வழக்கம்.

ஆனால், மதுரை - அழகர் கோயிலில் கர்ப்பக்கிரகம், தானிய அறை, ஆபரண அறை, மற்ற விக்கிரகங்கள் உள்ள இடங்கள், ஆவண அறைகள் ஆகியவற்றைப் பூட்டி களி மண்ணால் சீல் வைக்கின்றனர்.

இத வழக்கம் எத்தனையோ தலைமுறைகளாகத் தொடர்கிறது.அழகர் கோயிலுக்கு அருகிலுள்ள வலையப்பட்டி எனும் கிராமத் திலிருந்து வெட்டி எடுத்து வரப்படும் இந்த மண்ணை வேறு எதற்கும் உபயோகப்படுத்தக் கூடாதாம். மீறினால் தெய்வக் குற்றமாகிவிடும் என்பது பக்தர்களின் நம்பிக்கை.

08 May 2018

# ரங்க ராஜ்ஜியம் - 3



ரங்க ராஜ்ஜியம்

குல குரு வசிஷ்டர் சொன்னபடி, ஓர் உன்னத லட்சியத்துக்காக தவமியற்ற முடிவு செய்துவிட்ட அயோத்தி அரசன் இக்ஷ்வாகு, தன்னுடைய கிரீடம், அழகழகான ஆபரணங்கள், கவச குண்டலங்கள் ஆகிய அனைத்தையும் களைந்து, மரவுரி தரித்து, அயோத்தியையொட்டி ஓடும் சரயு நதிக்கரையில் ஆசிரமம் அமைத்துத் தவத்தில் மூழ்கினான்.

மன்னனின் தவத்துக்கான காரணம் புரியவில்லையென்றாலும், அரசபோகங் களை விடுத்து, தங்கள் மன்னன் தவ வாழ்க்கை மேற்கொண்டதைக் கண்டு நாடே ஆச்சர்யப்பட்டது. வசிஷ்டர் மூலம் மன்னனின் தவத்துக்கான காரணம் பற்றித் தெரிந்துகொண்ட பிறகோ, நாட்டு மக்களின் ஆச்சர்யம் பல மடங்கு அதிகரித்ததுடன், தங்கள் பொருட்டு மன்னன் தவமிருப்பது குறித்து மகிழ்ச்சியும் அடைந்தனர்.

வற்றாத நதிக்காக, குறைவில்லாத ஆயுளுக்காக, உலகத்தையே ஒரு குடையின்கீழ் ஆட்சிபுரியும் விருப்பத்துக்காக என்று சுயநலம் சார்ந்த இச்சைக்கு உரிய எந்த நோக்கமும் இல்லாமல், தன்னைப் போன்றே பூலோகவாசிகள் எல்லோரும் வணங்கி நற்கதி பெற 'பிரணவாகார விமானமும் பள்ளிகொண்ட மூர்த்தியும் தன் நாட்டுக்கு வேண்டும்' என்கிற இக்ஷ்வாகுவின் விருப்பம், அதுநாள்வரையில் பூ உலகம் கண்டிராத விருப்பம்!

விளைவு சத்யலோகத்தில் எதிரொலிக்கத் தொடங்கியது. நான்முகனாகிய பிரம்மாவுக்கே முதலில் வியப்புதான் ஏற்பட்டது. விவஸ்வானின் கால நிர்வாககதியில், பூ உலகில் அவன் பெற்ற பிள்ளை, தன் பூஜைக்கு உரிய பிரணாவாகார மூர்த்தத்தைப் பெற முயற்சிசெய்கிறான் என்பது, பிரம்மனுக்குச் சற்று கோபத்தையும் கூட அளித்தது. அதனால் அவர், விவஸ்வானையும் அவன் தந்தையான சூரியனையும் அழைத்து விசாரித்தார்.



“விவஸ்வான்! உன் பூலோக புத்திரனின் வேட்கை விநோதமாக உள்ளதே?” பிரம்மனின் கேள்விக்குமுன் விவஸ்வான் மௌனம் காத்தான்.

“பதில் சொல் விவஸ்வான்... உனது மௌனத்தை நான் எப்படிப் புரிந்து கொள்வது?”

“என் தலைவனே! இதற்கு நான் என்ன பதில் கூற முடியும்? சகலத்தையும் படைத்த தங்களுக்குத் தெரியாததும் உண்டா?”

“தெரிந்ததால்தான் கேட்கிறேன். இங்கு என் நித்திய வழிபாட்டிலிருக்கும் பெருமானை, தான் அடைய வேண்டும் என்று நினைப்பது எந்த வகையில் சரி? இப்படியோர் எண்ணம் உன்னாலேயே தோன்றியிருக்க வேண்டும்.”

“ஆம்! எம்பெருமான் குறித்த எண்ணம், இக்ஷ்வாகுவுக்குள் ஒரு விதையாய் விழுந்தது என்னாலேயே. குழந்தைப் பிராயம்தொட்டே பக்தியில் ஈடுபாடுடைய என் பிள்ளையின் மனதில் நான் போட்ட ஒரு

விதை, இப்படி ஒரு விருட்சமாகும் என்பது நானே அறியாத ஒன்று எம்பிரானே..."

"அப்படியானால் அந்த விருட்சத்தை நீயே வெட்டிவிடு. உன் பிள்ளை புரியும் தவத்தையும் கலைத்துவிடு."

"ஐயனே! தாங்களா இப்படிச் சொல்வது?"

"விவஸ்வான்... காரணமின்றிக் காரியங்கள் இல்லை. அதைப் புரிந்துகொள். எது எங்கிருக்க வேண்டுமோ அங்குதான் இருக்கலாம். மூர்த்தியின் தரிசனம் வேண்டும் என்று தவமிருந்தால், அதை ஏற்கலாம். தரிசனத்துக்கு உரிய மூர்த்தத்துக்கே ஆசைப்படுவது என்பது மிக அதீதமானது."

"புரிகிறது பிரபோ! தங்கள் சித்தப்படி நடக்க முயற்சி செய்கிறேன்" என்ற விவஸ்வான், அடுத்து நேராக தவத்தில் ஆழ்ந்திருக்கும் இக்ஷ்வாகு முன்பாகத்தான் வந்து நின்றான்.

இக்ஷ்வாகுவின் மிக எளிமையான சந்நியாசிக் கோலம் ஆச்சர்யத்தை அளித்ததோடு பிரமிப்பை யும் அளித்தது, விவஸ்வானுக்கு.

பொதுவாக தவம் என்பது மானுடச் செயல்பாடு களிலேயே மகத்தானது. ஒரு பெண்ணானவள் தன் கருவில் ஒரு கருவைச் சுமப்பதைப் போன்றது, ஓர் ஆணானவன் தன் மனதால் தவத்தைச் சுமப்பது! எப்படிக் கருவைக் கலைப்பது பெரும் பாவமோ, அதுபோன்றதே ஒருவர் புரியும் தவத் தைக் கலைப்பதும்.

சாஸ்திர தர்மங்களை உலகுக்குப் போதிக்கும் ஆசான் பொறுப்பில் உள்ள மனுவான விவஸ்வான், அந்த சாஸ்திர நெறியை எண்ணி, தன் புத்திரனின் தவத்தைக் கலைக்கத் தயங்கி நின்றான். அதே நேரம் மனதுக்குள் `மகனே... ஒரு பூச்செடிக்கு ஆசைப்பட வேண்டியவன், பூந்தோட்டத்துக்கே ஆசைப்பட்டது போலாகிவிட்டதே உன் செயல். உனக்குள் இப்படி ஒரு வைராக்கியம் இருப்பதை நானே இப்போதுதான் உணர்கிறேன்' என்று மகனின் தவக்கோலத்தின் முன் நின்று

மறுகியவன் அடுத்து வசிஷ்டரை நாடிச் சென்றான்.

“மகரிஷியே! இக்ஷ்வாகு இப்படி ஒரு தபஸ்வியாக நீங்களே காரணம்” என்றான்.

“உண்மை மனு பிரபு. ஆனால், முதல் காரணம் அந்த மூர்த்தமே. இரண்டாவது காரணம், அதன் பிரதாபம் குறித்துப் பேசிய நீ. மூன்றாவது காரணமே நான்” என்றார் வசிஷ்டர்.

“இருக்கலாம். ஆனால் இந்தத் தவம் தொடர் வதை பிரம்மதேவரே விரும்பவில்லை. தடுத்து நிறுத்தத்தான் என்னை அனுப்பியுள்ளார்.”

“அப்படியா? பிரம்மதேவரே ஒருவனின் தவத் தைக் கலைக்கச் சொல்கிறார் எனில், அது ஆச்சர்யம்... பெரும் ஆச்சர்யம்!”

“ஆச்சர்யமோ, அதிர்ச்சியோ... அவர் என் எஜமானர். அவரது கட்டளையைச் செயல்படுத்த வேண்டியது எனது கடமை.”

``அதுவும் சரிதான். ஆனால், தர்மநெறிகளை வகுத்த உனக்குத் தெரியாததை நான் சொல்லப் போவதில்லை. உலகில் தவம் போல் ஒரு பெரும் செயல் கிடையாது. அசைவே வாழ்வு. அந்த அசைவையே துறந்து வாழாமல் வாழ்வதே தவம். அதைக் கலைப்பது பாவம் என்று நெறிகளை வகுத்தவனே அதை மீற முற்படுவது, தவறான முன் உதாரணமாகாதா?” - வசிஷ்டரின் கேள்வி விவஸ்வானை தடுத்துவிட்டது.

“உண்மை மகரிஷி! நீங்கள் சொல்வது பேருண்மை. வகுத்தவனே வகுத்ததை மீறுவது தர்மம் அல்ல.”

“அப்படியானால் என்ன செய்வதாய் உத்தேசம்?”



“என் எஜமானரிடம் மன்னிப்புக் கோரி மன்றாடுவதைத் தவிர வேறு வழியில்லை.”

“எதுவாயினும் இங்கே உனக்கு வேலையில்லை. புறப்படு!” வசிஷ்டர் வானத்தை நோக்கிக் கைகளைக் காட்டினார்.

அப்படியே இக்ஷ்வாகுவை மனதில் எண்ணி, ‘அப்பனே! உனக்கான சோதனை தொடங்கி விட்டது. பிரம்மா அடங்கிப் போகப் போகிறாரா, இல்லை உன்னைத் திரும்பவும் அடக்கப் போகி றாரா என்பதைப் பொறுத்திருந்து பார்க்கிறேன்...' என்று தனக்குள் கூறிக்கொண்டார்!

போன வேகத்தில் திரும்ப வந்து நின்ற விவஸ்வா னைக் கண்ட பிரம்மா, ‘`என்ன நடந்தது? இக்ஷ்வாகு வின் தவம் கலைந்ததா?” என்று எதுவுமே தெரியாதவர் போலக் கேட்டார்.

“ஐயனே! எல்லாம் அறிந்தவர் தாங்கள். தாங்கள் அறிந்திராத ஒன்றை என்னாலும் அறிய முடியாது. நான் அறிந்ததைத் தாங்கள் அறியாமலும் இருக்க முடியாது. அப்படியிருக்க, என்னைக் கேட்டால் நான் என்ன

சொல்வேன்?

எதன் பொருட்டு ஒருவர் தவம் புரிந்தாலும் அந்தத் தவத்தைக் கலைப்பது பாவமல்லவா? அதை உலகுக்குச் சொன்ன நானே அதைச் செய்ய லாமா?” என்று விவஸ்வான் கேட்டு நிற்க, “தேவலோக நியதிகள் பூலோகத்துக்குப் பொருந் துமா? அந்த நியதிக்கு எதிராகவே ஒருவன் தவம் புரிந்தால், அதை எப்படி அனுமதிக்க முடியும்?” என்று திருப்பிக் கேட்டார் பிரம்மன்.

“என்னை மன்னியுங்கள்! இது விசித்திரச் சிக்கல். இதில் நான் பலியாவது சரியல்ல என்பதை யும் தாங்கள் அறிவீர்கள். எனவே, என்னைக் காத்தருள வேண்டும். தாங்களே நேரில் சென்று தவப் பிரசன்னமாகி இக்ஷ்வாகுவுக்கு எடுத்துக் கூறுங்கள். எல்லாம் நேர்ப்பட்டுவிடும்!” - என்ற விவஸ்வானை சற்று கருணையோடு பார்த்தார் பிரம்மா.

‘`விவஸ்வான், நீ செம்மையாக நடந்து கொண் டாய். உன் மேல் எனக்குக் கோபமில்லை. நீ போக லாம்! எனது பிரசன்னம் என்பதும் எளிதானதல்ல! முற்றும் துறந்தவர்க்கே நான் முன்செல்பவன். ஒரு பற்றோடு தவம் புரிபவர், அதற்கு உரிய விலையைத் தரும்போதுதான் வரமானது ஸித்திக்கும்.” என்ற பிரம்மா அடுத்து சந்தித்தது இந்திரனை!

ஏகபோகங்களையும், அதன் நேர் எதிர்களையும் ஒரு நேர்கோட்டில் கொண்டு செயலாற்றி வருப வன், செயலாற்றவும் வேண்டியவன் இந்திரன். ஆனாலும், சில தருணங்களில் இவனது செயல்பாடு களாலேயே தேவருலகம் பல சிக்கல்களைச் சந்திக்கும். பின் அதிலிருந்து மீண்டும் வரும்.

அப்படிப்பட்ட இந்திரனை அழைத்த பிரம்மா ‘‘பூ உலகில் இக்ஷ்வாகு மேற்கொள்ளும் தவம் சத்யலோகத்தைச் சாதாரணமானதாக்கிப் பூ உலகை சத்யலோகமாக மாற்றிவிடும்’’ என்று கூறி, அதை தடுத்து நிறுத்தவேண்டியது இந்திரனின் பொறுப்பு என்றும் கூறினார்.

பிரம்மா அவ்வாறு கூறியது, ஆடத் தெரிந்தவன் காலில்

சதங்கையையும் சேர்த்துக் கட்டியதுபோல் ஆக்கிவிட்டது! என்ன செய்தால் இந்த இக்ஷ்வாகு வின் தவம் கலையும் என்று இந்திரன் உடனே யோசிக்கத் தொடங்கிவிட்டான்!

வழக்கம் போல் கடுமையான மழை, புயல் என்றெல்லாம் முயற்சி செய்து பார்த்தான். இக்ஷ்வாகு அசரவில்லை!

அடுத்து `அரம்பையர்' கூட்டம். அவர்களும் ஆட்டம்பாட்டம் என்று இக்ஷ்வாகுவின் மன ஒருமையைக் கலைக்க எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தார்கள். ஒன்றும் நடக்கவில்லை. இந்திரனுக்கே சற்று வெட்கமாகவும் தோன்றியது.

இக்ஷ்வாகு ஏதோ மேலெழுந்தவாரியான ஒரு இச்சைக்காக தவமியற்றவில்லை. அவனது தவமானது, உன்னதமான நோக்கத்துக்கானது என்பது புரிந்தது. வாயுவைக்கூட ஸ்தம்பிக்க வைத்து மூச்சுத் திணறடிக்கப் பார்த்தான்.

ஆனால், ஒரு அளவுக்கு மேல் வாயுதேவனே, ‘`இத்தகைய தவசியைக் கொன்ற பாவத்துக்கு ஆளாகி நான் கறைபடத் தயாரில்லை'' என்று கூறிவிட்டதுடன், இக்ஷ்வாகுவைப் படுத்திய பாட்டுக்குப் பிராயச்சித்தமாக தென்றலாய் வீசித் தழுவத் தொடங்கிவிட்டான்.

இக்ஷ்வாகுவின் மனவுறுதி, போக நிஷ்டையில் இருந்த பிரம்மாவுக்கு மட்டுமல்ல, யோக நித்திரைக் காரனான சுந்தர பரந்தாமனுக்கும் தெரியவந்தது!

**- தொடரும் ...**

**படங்கள்: என்.ஜி.மணிகண்டன்**

22 May 2018

# ரங்க ராஜ்ஜியம் - 4



ரங்க ராஜ்ஜியம் - 4

**ஒன்றும் மறந்தறியேன் ஓதநீர் வண்ணனை நான்**
**இன்று மறப்பனோ ஏழைகாள் - அன்று**
**கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன் கண்டேன்**
**திருவரங்கமேயான் திசை.** - **பொய்கையாழ்வார்**

ஸ்ரீவைகுண்டம்! பரந்தாமனின் தாமச நித்திரைக்கு நடுவே, ஏதோ சொப்பனம் காணு கிறார்போல், அவரின் திருமுகத்தில் ஒரு செம்முறு வல். ஹ்ருதயவாசினியான லட்சுமிதேவியே அது கண்டு ஆச்சர்யம் கொண்டாள்.

பரந்தாமன், தன் நீல நயனங்களை மலர்த் தினார். அவருக்கு இப்போது லட்சுமி தரிசனம். திருமகள் புன்னகைத்தாள்.

"நிர்வாக நித்திரை முடிந்துவிட்டதா ப்ரபு" என்று வினாவத் தொடங்கினாள்.

"அதற்கு முடிவேது லட்சுமி. சற்று ஓய்வெடுக்க எண்ணியே கண் மலர்ந்தேன்" என்ற பரந்தாமனை இம்முறை அதீத வியப்போடு நோக்கினாள் லட்சுமி.

"வியந்து வழிகிறாயே... ஏன்?''

பரந்தாமனும் கேள்வியோடு தனது உரையாட லைத் தொடங்கினார்.

"ஆம்! உயிர்களுக்கெல்லாம் உறக்கமே ஓய்வு. எம்பெருமானுக்கோ விழிப்பே ஓய்வெனில், எப்படி வியக்காமலிருக்க முடியும்?"

"இதைவிட வியப்பான விஷயங்கள் நிறைய நடந்தபடி உள்ளன தேவி!"

"அதனால்தான் உறக்கத்திலும் புன்னகையோ?"

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல், திருமகள் குறித்த தனது பெருமிதத்தை வெளிப்படுத் தினார் பகவான்: "நீ எப்போதும் என் திருமுகத் தையே தியானித்த படி இருப்பதை, உனது கேள்வியின் மூலம் உணர்கிறேன்"

ஆனால், திருமகள் விடவில்லை. "ஸ்வாமி! நீங்கள் குறிப்பிட்ட அந்த

வியப்பான விஷயங்களை நானறியலாமா?”



“உன்னை நான் புகழக்கூடாதா தேவி?”

“உங்கள் மார்போடு கிடப்பவள் நான். நீங்கள் வேறு நான் வேறில்லாத நம்மை, நாமேவா புகழ்ந்து கொள்வது?”

“அப்படியானால், என்னுள் இருந்தே சகலமும் தோன்றின. அவை வேறு நான் வேறு இல்லை என்றும் கூறலாம் அல்லவா?”

“அதுதானே சத்தியம்?”

“அந்தச் சத்தியம் உனக்குப் புரிந்திருக்கும் அளவு, பிரம்மனுக்குப் புரிந்திருக்கவில்லை என்று கருதுகிறேன்...”

“இது என்ன விந்தை?”

“விந்தைதான்... அதை எண்ணியே நகைத்தேன்!”

“விரிவாகக் கூறலாமே?”

“என் அர்ச்சா ரூபமான பிரணவாகார விமான ரூபத்தை நீ அறிவாய் அல்லவா?"

“இது என்ன கேள்வி? பிரம்மதேவனை நெறிப் படுத்தவும் நிறைப்படுத்தவும் வேண்டி, தங்களின் சூட்சுமத்தால் உருவாக்கப்பட்டதல்லவா அந்தப் பிரணவாகார விமானம்?”

“சரியாகச் சொன்னாய். நெறிப்படுத்த வேண் டிய அதுவே, பிரம்மனையே சற்று குறைப்படுத்தி விடுமோ என்று இப்போது நான் எண்ணுகிறேன்.”

“பிரம்மம்கூட குறைவுபடுமா என்ன?”

“சத்திய லோகத்தில், பிரம்மனின் வசம் தினமும் பூஜைகள் கண்டுவரும் அந்தப் பிரணவாகாரத்தை, பிரியவேண்டி வந்துவிடுமோ என்று இப்போது கலக்கத்தில் இருக்கிறான் பிரம்மன். `பிரம்ம கலக்கம்' என்பது ஒரு குறைவுதானே?”

“அப்படியானால், அசுரர் எவரேனும் உங்களை அடைவதற்கான ஒரு குறுக்கு வழியாக, அந்தப் பிரணவாகாரத்துக்குக் குறிவைத்துவிட்டார்களா என்ன?”

“அடடா... அப்படி நடந்தால்கூட நன்றாயிருக்குமே?”

“எனில், அசுரர்கள் காரணமில்லை என்று தெரிகிறது. பீடிகை போடாமல் விஷயத்தை நேரடியாகவே கூறிவிடுங்களேன்...”

“என் மார்போடு கிடக்கும் உனக்குக்கூடவா, என்னுள் எழும் எண்ணங்களின் போக்கு தெரிய வில்லை?”

‘`ஒட்டுக்கேட்கச் சொல்கிறீர்களா?”

“ஒன்றிக் கேட்கச் சொன்னேன். போகட்டும்! நான் விஷயத்துக்கு வந்துவிடுகிறேன். பூ உலகைச் சேர்ந்த அயோத்தி அரசனும் ஏழாம் மனுவின் புத்திரனுமான இக்ஷ்வாகு, பிரணவாகார விமானம் தனக்கும் தன்னைச் சார்ந்தவர்க்கும் வேண்டும் என்று பிரம்மனைக் குறித்து தவம் செய்கிறான். எங்கே அவன் தவம் பலித்துவிடுமோ, அந்த விமானத்தை, இழந்துவிடுவோமோ என்று பிரம்மனும் கலக்கத்தில் உள்ளான்!”

“விவஸ்வானின் புத்திரன் அந்தளவுக்குப் பெரிய பக்தனா பிரபு?"

“அப்படி அவனைப் படைத்தவனே பிரம்மன் தான். தான் படைத்த ஒன்றிடம் தானே சிக்கிக் கொள்வது என்பது இதுதானோ?”

“இப்படிக் கேட்பதன் மூலம் தாங்களும் அல்லவா சிக்கிக்கொண்டிருக்கிறீர்கள்?”

திருமகளின் இந்தக் கேள்வியைக் கேட்டுப் புன்னகைத்தபடி பதில் சொன்னார் பகவான்:

“ `நாம்' என்று கூறு!”

“ஆம்! இக்ஷ்வாகுவின் தவம் தங்களின் நித்திரை யையே கலைத்து, இவ்வளவுதூரம் என்னோடு பேசவைத்துவிட்டது என்றால், அவன் தவத்தின் செம்மையை அறிய முடிகிறது. இப்போது என்ன செய்யப்போகிறீர்கள் பிரபு?”

“நீதான் கூறேன்?”

“நான் எனும் செருக்கின்றி பக்தியோடு ஒருவர் வாழ வேண்டும் எனும் நல்ல நோக்கில், தங்களின் சூட்சுமத்தால் உருவான அந்தப் பிரணவாகார விமானத்துக்கான பக்தி, பிரம்மாவிடமிருந்தே தொடங்கப்பட வேண்டும் என்றே, தாங்கள் அதை பிரம்மனுக்கு அளித்தீர்கள்.

பிரம்மன் அந்தப் பக்தியை விவஸ்வானுக்கு ஏற்படுத்த, விவஸ்வான் இக்ஷ்வாகுவுக்கு ஏற்படுத்தி யுள்ளான். இதில் இக்ஷ்வாகு பூலோகவாசியாகவும் பூவுலக அரசனாகவும் இருப்பவன். அப்படியான

வன், பிரணவாகாரத்தை அடைந்து பூஜிப்பதன் மூலம், பூவுலகில் தங்களது அனுக்கிரகம் பரவலாகி 'சாந்தம், செல்வம், சந்தோஷம், பக்தி, ஞானம், ஆரோக்கியம், மோட்சம்' ஆகிய சப்த நிதிகள் மானுடர்க்குக் கிட்டும். இப்படியெல்லாம் அவர்களுக்குக் கிடைக்கவேண்டும் எனும் தங்களின் திருவுள்ளச் சித்தம்தானே, தாங்கள் அதை பிரம்மாவுக்கு அளிக்கக் காரணம்?''



லட்சுமிதேவி வெகுஅழகாக காரணகாரியங் களோடு கூறியதைக் கேட்டு மகிழ்ந்த பரந்தாமன், "லட்சுமி! என்னுள் பூரணமாய் நீ நிரம்பியிருப்பதால்தான், என் திருவுள்ளக்கிடக்கை புரிந்து சரியாகக் கூறியுள்ளாய். நீ கூறியதே நிதர்சனம். சக்தியுள்ள ஆகாரங்களால் உடலானது வலுப் பெறுவதுபோல், அகங்காரமற்ற பக்தியால் மனம் வலுப்பெறும்.

மனோவலிமையே ஆத்மவலிமையாக மாறு கிறது. எத்தனை வலிமையான உடலும், வயதாகும் போது வலுவிழக்கும். ஆனால், ஆத்ம வலிமை என்பது காலத்தால் கூடுமேயன்றி குறைவுபடாது. என்னுள்

தோன்றிய உயிர்கள், இந்த ஆத்ம பலத்தால் மட்டுமே திரும்ப என்னுள் வந்து சேரவும் முடியும். அதன் நிமித்தம் உருவானதே இந்தப் பிரணவா கார விமானமும், அதனுள் நித்திரையில் இருக்கும் என் கோலமும்! என்னை வணங்குவோர் சகல தேவர்களையும், சப்தரிஷிகளையும், அஷ்டவசுக்களையும், துவாதச ஆதித்தியர்களையும், நவகிரகங்களையும் ஒருசேர வணங்கிய பலனை அடைகிறார்கள். சுருக்கமாகக் கூறினால், உலக வாழ்க்கை என்பது ஓர் அரங்கில் நடக்கும் நாடகம் போன்றது. அந்த நாடகத்தை நடத்தும் நாதனாய் நான் திகழ்வதால்தான், இங்கே என் நாமம் அரங்கநாதன் என்றாகிறது. 'ரங்கா' எனும் பதம் தலைவன் என்றாகிறது."

பரந்தாமனின் விளக்கத்தைக் கேட்ட லட்சுமி உடனே இடைமறித்து, ``தலைவன் இல்லை; `தலையாயவன்' '' என்றுகூற, பரந்தாமன் புன்னகைத்தார். அது அவள் கருத்தை ஆமோதித் ததுபோலும் இருந்தது, `பேசியது போதும். இனி செயலாற்றுவோம்' என்பது போலும் இருந்தது!

சத்யலோகம்!

அங்கே ஸ்ரீநாராயணரின் பிரவேசம் நிகழவும், பிரம்மதேவன் பூரித்துப் போனார்.

"எந்தையே! தாங்கள் என்னை எண்ணிய அந்த நொடியே நான் வைகுண்டம் ஏகியிருப்பேனே... இப்போது, தாங்களே நேரில் வரும்படியானதால், தங்களை நான் சிரமப்படுத்திவிட்டேனே" என்று வணங்கிப் பணிந்தார்.
"பூலோக மானுடன் ஒருவன் குறித்த உனது சிந்தை, பூலோக மானுடர்களைப் போலவே உன்னையும் பேசவைக்கிறது. போகட்டும்... உனக்குமா கலக்கம்?"

பரந்தாமன் அப்படிக் கேட்ட நொடியில் பிரம்மனிடம் ஒரு சிலிர்ப்பு.

"கலக்கம்தான் பிரபு. ஆனால், அதற்கான காரணம், தாங்கள் அறியாததல்ல. தங்களின் பிரணவாகாரம் பூவுலகில் நிலை கொள்ளும் பட்சத்தில், நித்ய பூசனைகள் குறைவுபடாமல் நிகழவேண்டும்.

மானுடர்கள் யுக மாயாக்களுக்கு ஆட்படும் பட்சத் தில், ஊறு நேர்ந்துவிட்டால் என்ன செய்வது என்பதே என் கலக்கத்தின் அடிநாதம்!”

“பூமிப் பந்தே இரவு பகல் என்று இரு நிலைகளில் உள்ளது. அங்கு வாழ்ந்திடும் மானுடர் வாழ்விலும் தீதும் நன்றும் கலந்தே இருக்கும். அது பிரணவாகாரம் வரையிலும்கூட எதிரொலிக்கக்கூடும். ஆயினும், பிரணவாகாரம் தீதை அடக்கி, நன்மையைப் பெருக்கி வாழ உறுதுணையாக இருக்கும். அப்படி இருக்கவேண்டும் எனும் எனது விருப்பத்தால் உருவானவையே அந்தப் பிரணவாகார விமானமும் எனது அரங்கநாத கோலமும். இதை, நான் எடுத்துக்கூறினால்தான் உனக்குப் புரியுமா?”

பரந்தாமனின் கேள்விமுன் பணிந்து நின்ற பிரம்மன் ‘`எம்பெருமானே, அதை நான் அறிந் திருந்தபோதிலும், தங்கள் வாயால் கேட்க விரும்பியே கலக்கத்தை வெளிப்படுத்தினேன். பொசிந்த பச்சைத் தளிரானது மரத்தில் இருக்கும் வரை மரமென்றே அழைக்கப்படுகிறது. உதிர்ந்து மண்ணில் விழுந்துவிட்டாலோ சருகென்றாகி விடுகிறது. உண்மையில் மரம் வேறல்ல, சருகும் வேறல்ல. இரண்டும் ஒன்றே! காலத்தால் பிரத்யேகமாகி வெவ்வேறு பெயர் பெறுகின்றன. இங்கே நானும் அவ்வாறே `பிரம்மன்' என்ற பெயரில் தங்களால் சிருஷ்டிகர்த்தாவாக உள்ளேன். இந்தக் கர்த்தாவின் கர்த்தா தாங்களே. ஆணையிடுங்கள்... நான் என்ன செய்ய வேண்டும்?” என்று வேண்டினார்.

“இதை இக்ஷ்வாகுவிடம் சேர்த்துவிடு. வைகுண்டத்தில் தோன்றிய என் பிரதிமம், சத்யலோகம் சென்று பின் பூலோகம் சென்றது என்றாகட்டும். அதனால் இது இருக்கும் இடமும் பூலோக வைகுண்டம் என்றாகட்டும்.”

“அவ்வாறே நடந்திட அனுக்கிரகம் செய்யுங்கள்.’’

பிரம்மன் பணிந்தார். பரந்தாமனும் அருளிமறைந்தார்!

சரயு நதிக்கரை - இக்ஷ்வாகுவின் தவக்கோட்டம்.

இக்ஷ்வாகுவின் நெடிய தவம் பூமியின் பருவகாலங்கள் அனைத்தையும் கண்டுவிட்ட நிலையில், அவனது அயராத மன உறுதியால் மேலும்

தொடர்ந்தவண்ணமிருந்தது.

இக்ஷ்வாகுவும் ‘ஓம் ஸ்ரீரங்கதாமா’ என்கிற அரங்கநாத கோலத்தையே தன் தவச் சிந்தனையாக்கிக் கொண்டிருந்தான்.இக்ஷ்வாகுவின் உதடுகளிரண்டும் உதிர்த்தபடி இருந்த, ‘ஓம் ஸ்ரீரங்கதாமா’ என்ற அந்தச் சொல் சரயு நதிக்கரை முழுக்க எதிரொலித்ததில், அந்தச் சூழலே மாறியிருந்தது.

எப்போதோ இடி விழுந்து பட்டுப்போயிருந்த ஒரு பன்னீர் மரம் துளிர்த்துவிட்டிருந்தது! நதி தீரத்தில் மானும் புலியும்கூட தங்களின் சுபாவத்தை மறந்து ஒன்றாய் நின்றிருந்தன. அவற்றின் காலருகே முதலைகள்... தங்களுக்கான உணவிருந்தும், உண்ணாது, உண்ணவும் தோணாது கிடந்தன.

‘ஸ்ரீரங்கதாமா’ எனும் சொல்லின் பரவலுக்கே, இப்படி இயற்கையைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் இருக்குமானால், அந்தச் சொல்லுக்கு உரியவன் எத்தனை ஆற்றல் கொண்டவனாயிருக்க வேண்டும்? இக்ஷ்வாகுவின் தவத்தை நெறிப்படுத்தி வரும் வசிஷ்டர், சரயு நதிக்கரையின் சூழல் கண்டு நெகிழ்ந்தார்.

பிரம்மஞானிகளுக்குப் பெரிது சிறிது கிடையாது. பெரிதும் சிறிதும் ஒன்றோடு ஒன்று ஒப்பிடுவதால்தான் உருவாகிறது. பிரம்மஞானிகள் அந்தத் தவற்றைச் செய்யமாட்டார்கள். அதே தருணம், ஒரு பிரம்மஞானி தன்னைப் போல ஒரு பிரம்மஞானி தோன்றும்போது பெரிதாக மகிழவும் மாட்டான். மிக இயல்பாக எடுத்துக்கொள்வான். ஒரு பெரும் நிறைவு மட்டும் நெஞ்சு நிரம்ப இருக்கும். அது வசிஷ்டரிடம் நிரம்பியிருந்தது.

கொடி ஒன்றுக்குப் பற்றிக்கொள்ள மரம் ஒன்று கிடைத்தால் எப்படியிருக்கும்? அதுபோல், பூலோக மாந்தர்களுக்கு இக்ஷ்வாகு மூலமாக அரங்கநாதப் பெருமான் கிடைக்கப் போவதாகக் கருதினார். அதற்கான அறிகுறிகளும் விண்ணில் தோன்றின!

**- தொடரும்...**

**படங்கள்: என்.ஜி.மணிகண்டன்**

05 Jun 2018

# ரங்க ராஜ்ஜியம் - 5



ரங்க ராஜ்ஜியம் - 5

**‘சரங்களைத் துரந்து வில்வளைத்து மன்னவன்
சிரங்கள் பத்தறுத்து தீர்த்த செல்வர்மன்னு பொன்னிடம்
பரந்து பொன் நிரந்து நுந்தி விந்தலைக்கும் வார்புனல்
அரங்கமென்பர் நான்முகத்தயன் பணிந்த கோயிலே!”**

திருச்சந்த விருத்தத்தில்’-திருமழிசையாழ்வார்.

பூலோக மாந்தர்களுக்கு இக்ஷ்வாகு மூலமாக அரங்கநாதப் பெருமான் கிடைக்கப் போவதாக வசிஷ்டர் நினைத்துக்கொண்டிருந்த வேளையில், அதற்கானச் சூழல் விண்ணிலும் எதிரொலித்தது.
மெல்லிய கார்மேகங்கள் வானில் பந்தல் விரித்தார் போல் கூடி நின்ற நிலையில், பிரணவாகார விமானத்தைக் கருடன் தன் முதுகின் மேல் வைத்து சுமந்த நிலையில் பறந்து வந்தார். பிரம்மனும் அன்ன வாகனம் மேல் அமர்ந்த நிலையில், அந்தச் சரயு நதிக்கரையை நோக்கி வந்தார்!

தவம் புரிந்தபடி இருந்த இக்ஷ்வாகுவுக்கு நேர் எதிரில் மணி மண்டபம் ஒன்று க்ஷணத்தில் தோன்றிய நிலையில், அதன் மேல் மலர்களால் ஆன மேடை ஒன்றும் திகழ, பிரணவாகார விமானத்தை ஸ்ரீகருடன் அதன் மேல் இருத்தினார்! பிரம்மாவும் அன்ன வாகனம் நீங்கி இக்ஷ்வாகுவின் எதிரில் தோன்றி, அவனைக் கண்மலரப் பணித்தார். கண் மலர்ந்தவன் முதலில் கண்டது பிரணவாகார விமானத்தையே. பிறகே, பிரம்மதேவனைக் கண்டான். கண்கள் பனிக்க பிரம்மதேவரின் காலில் விழுந்து வணங்கினான்!

அந்த வேளையில் வசிஷ்டர் உள்ளிட்ட ரிஷிகள் மட்டுமின்றி விவஸ்வானும் வந்துவிட, அயோத்தி அந்த நொடியே பூலோக வைகுண்டமாகிவிட்டது.

“இக்ஷ்வாகு! உன் தவத்தால் நான் உள்ளம் பூரித்தேன். சோதனைகளையெல்லாம் சாதனைகளாக்கிக்கொண்டு, இறுதியில் இந்த அயோத்தியையும் பூலோக வைகுண்ட மாக்கிவிட்டாய். உன் தவம் என்னை மட்டுமல்ல, எம்பெருமானையும் நெகிழ்த்தி விட்டது. இந்தப் பிரணவாகார விமானம் இன்று இங்கு குடிகொள்ள வந்திருப்பது, உன் தவத்தாலான என் விருப்பத்தால் மட்டுமல்ல, எம்பெருமானின் அளவற்ற கருணையால் என்பதே மேலான உண்மை.

எம்பெருமானின் அந்தக் கருணை, இனி பூவுலகில் எம்பெருமானை எண்ணுபவர், எண்ணாதவர் என்று சகலருக்கும் கிடைக்கும். பாயும் புனலுக்குத் தாகம் தீர்ப்பதே கணக்கு. மானுடர், விலங்கினம் எனும்

பாகுபாடுகள் எப்படி நீருக்குக் கிடையாதோ, அப்படியே எம்பெருமான் பேதமின்றி பூவுலகத்தவர்க்குக் கருணையைப் பொழி வார். இது சத்தியம். நீ வாழ்க! நின் கொற்றமும் மக்களும் மற்றுமுள சகலரும் வாழ்க... வாழ்க!" என்று வாழ்த்திய பிரம்மன், அந்தப் பிரணவாகார விமானத்தையும் வணங்கியவராக விடைபெற்றார்!

ஏழாவது மனுவான விவஸ்வான் வேகமாக வந்து தன் புதல்வனை ஆரத்தழுவி மகிழ்ந்தான். அப்படியே, "மகனே.. உன்னால் ஒரு பெரும் ராஜபரம்பரை தோன்றப்போகிறது. சூர்ய வம்சம் என்று அது பெயர் பெற்றிடும். எம்பெருமானேகூட இந்த வம்சத்தில் பிறப்பெடுத்து அவதாரம் நிகழ்த்தலாம். ஒரு காலக்கணக்கனாய் நான் கூறுவதை, எல்லாரும் காலத்தால் உணர்வர். அதே தருணம் உன் பெயரும் உன்னால் என் பெயரும் மண்ணில் நிலைபெற்றுவிடும். உன் பக்தியால் நீ இதை எல்லாம் சாதித்துவிட்டாய். அதற்காக நான் பெருமைப்படுகிறேன்" என்று ஆனந்தக் கண்ணீர் சிந்தினான்.

இக்ஷ்வாகுவோ தனக்குக் கிடைத்த சகல நற்பெயரையும் வசிஷ்டருக்கே காணிக்கையாக்கி, அந்தப் பிரணவாகார விமானத்து அரங்கநாதப் பெருமானை ஆறு காலமும் வந்தித்துத் தொழுதான். காலச்சக்கரமும் சுழன்றதில் அவனைத் தொடர்ந்து அவன் பிள்ளைகள் வழிபடத் தொடங்கினர். அதாவது ஓர் அரசனைத் தொட்டு அவனது வம்சத்தவர்கள் மாத்திரமே தொழுதிடும் பெருமானாக அரங்கநாதனும் திகழ்ந்தார்.

இதற்காகவா விண்ணில் இருந்து மண்ணுக்கு வந்தது இந்தப் பிரணாவாகார விமானம்? இது உயிர்கள் அவ்வளவுக்கும் பொதுவானதல்லவா? பொதுவான ஒன்று அனைவருக்கும் பொதுவாக வேண்டாமா? அந்த நாளும் வந்தது... தர்மவர்மா எனும் சோழ சாம்ராஜ்ஜியாதிபதி வடிவில்!

அயோத்தியில் இக்ஷ்வாகு வம்சத்தின் தொடர்ச்சியில் தச ரதனின் காலம்! ஒன்றுக்கு மூன்று மனைவியர் இருந்தும் தசரதனுக்குப் புத்திர ப்ராப்தி இல்லாத காலமும்கூட. இதனால், தசரதன்

மனமுடைந்துபோயிருந்தான். எப்போதும் எந்த ஒன்றும் கிடைத்தபடி இருக்கும்போது, அதன் மதிப்பு பெரிதாகத் தெரியாது. கிடைக்காமல் போகும்போது, அதைத் தவிர வேறு எதுவுமே பெரிதாகத் தோன்றாது.



தசரதனும் 'பிள்ளை... பிள்ளை...' என்று அதே நினைப்பில்தான் இருந்தான். தனக்குப் பின் வம்சாவளி அற்றுப்போய் அயோத்தியே அழிந்து, ரவிகுலமே பூ உலகில் ஒரு முடிவைக் கண்டுவிடுமோ என்று அவன் மனது பேதலித்தது. அதன் எதிரொலியாக ராஜ குருவும், வழிகாட்டியுமான வசிஷ்டரிடம் புலம்பத் தொடங்கி விட்டான் தசரதன்.

"என் இஷ்ட குருவே, இந்த வம்சத்தவர்களை மூப்பை வென்று

வழிநடத்தி வரும் பிரம்மரிஷியே... எனக்கு எதனால் பிள்ளைப் பேறு இல்லை? என் வம்சம் என்னோடு முடிந்துபோய்விடுமா?" என்று கதறினான்.
"தசரதா! முதலில் நீ உன் பத்தினியர்களோடு, சரயு நதி தீரத்தில், தமஸா எனும் பாகத்தில் கோயில் கொண்டிருக்கும் பிரணவாகாரப் பெருமாளை வணங்கிப் பிரார்த்தனை செய்து விட்டு வா. பிறகு இதுகுறித்துப் பேசுவோம்" என்று தசரதனையும் அவன் பத்தினியர் மூவரையும் அனுப்பிவைத்தார் வசிஷ்டர்.தசரதனும் தம் பத்தினியரோடு புறப்பட்டான்.

சரயு நதியில் புதுப்புனலில் அட்டகாசம். மும்மாரியிலும் குறையே இல்லை. திரும்பின பக்கமெல்லாம் பசுமையான காட்சிகள்.

தசரதன், நான்கு புரவிகள் பூட்டிய ரதத்தில் அயோத்தி நகரத்து வீதிகளில் விரைந்தபோது, சாலையில் போவோர் வருவோர் எல்லாம் ஒதுங்கி வழிவிட்டு நின்றது மாத்திரமல்ல, "பேரரசர் வாழ்க... ரவிகுல திலகர் வாழ்க..." என்று தாங்களாகவே வாழ்த்து முகமன்களைப் பாடினர்.

அந்தக் காட்சிகள், தசரதன் தனக்குள் ஒரு தராசு அமைத்து அதில் தன் ஆட்சியைத் தனக்குத் தானே எடைபோட்டுக்கொள்ள உதவியாக இருந்தன. 'எல்லாம் நன்றாகவே உள்ளது. எல்லோரும் ஒன்றாக உள்ளனர். என் ஆட்சியில் ஒரு குறையுமில்லை. அப்படியிருக்க, எதனால் எனக்குப் புத்திர உற்பத்தி இல்லை?'

இதே கேள்வியோடு நதி தீரத்து ஆலயத்தில் பிரணவா காரப் பெருமாள் முன் நின்றான். கண்களில் கண்ணீரின் பெருக்கு. சந்நிதி வைதீகர் அதைக் கண்டார். எம்பெருமா னின் பிரசாதத்தைத் தரும்போது "மன்னவா... தங்களுக்குக் கூடவா மன வருத்தம்?" என்று கேள்வி எழுப்பினார்.

"ஆம் வைதீகரே! பிறப்பால் மட்டுமே நான் ஆண்மகன் என்றாகிவிடுவேனோ என அச்சப்படுகிறேன். வம்சம் தழைத்தால் அல்லவா என் குலம் விருத்தி ஆகும். அது என்னோடு

முடிந்துபோய்விட்டால் நானோர் முடவன் என்றாகிவிடாதா?” என்று தசரதன் அந்த வைதீகரிடம் திருப்பிக் கேட்டான்.



“மன்னவரே! இப்பெருமாளின் சந்நிதி யிலா இப்படி ஒரு வருத்தம்? வைகுண்டத் திலிருந்து சத்யலோகத்துக்கும், பின் அங்கிருந்து இந்தப் பூலோகத்துக்கும், குறிப்பாக இந்தச் சரயு நதி தீரத்துக்கும் இப்பெருமாள் வந்திருக்கிறாரே, அவர் தன் பொருட்டாவது இம்மட்டில் அருளாமல் போவாரா?

அவ்வாறு அருளாமல் போனால் இந்தச் சந்நிதியுமல்லவா இருளடையும்? தானும் ஒளிர்ந்து, தான் சார்ந்தவற்றையும் ஒளிர வைக்கவென்றே வந்துள்ள எம்பெருமான் இருக்க, தாங்கள் கவலை

கொள்ளலாமா?" என்று திருப்பிக் கேட்டார் வைதீகர்.

"நீர் சொல்வதும் சரிதான்! ஆனால் காலம் கடந்துகொண்டிருக்கிறதே?"

"வித்துக்கள் விளைவதற்கு ஒரு காலம் இருப்பதுபோல், தங்கள்வரையிலும்கூட காலமிருக்கலாம். யார் கண்டது, தங்கள் முன்னோர்களில் ஒருவர் இப்பெருமாளை சிலை வடிவில் பெற்றார். தாங்கள், பிள்ளை வடிவில் பெறலாமல்லவா?"

"தங்கள் வாக்கு பலிக்கட்டும், பொன் வாக்காய் மாறட்டும். ஆயிரம் பொற்காசு களால் தங்களுக்கு அபிஷேகமே செய் கிறேன்" என்று தசரதன் சொன்ன நொடியில், திருச்சந்நிதிப் புலத்துக்குள் இருந்து ஒரு கௌளி அதை ஆமோதிப்பது போல் குரல் கொடுத்தது.

தசரதனும் அவன் பத்தினியர் மூவருமே உச்சிக்குளிர்ந்து போயினர். அதே மகிழ் வோடு திரும்பி, வசிஷ்டரிடம் நடந்ததைக் கூறவும், அவர் முகத்திலும் மலர்ந்த புன்னகை!

"தசரதா! உன் மனவருத்தம் நீங்கும் நாள் வந்துவிட்டது. அதற்கான அறிகுறிகளை அறியவே உன்னை ஆலயம் சென்றுவரப் பணித்தேன். நீயும் அந்த அறிகுறிகளை அறிவித்துவிட்டாய். அடுத்து நீ செய்ய வேண்டியது யக்ஞம். புத்திரகாமேஷ்டி யக்ஞம். இதைச் செய்தமாத்திரத்தில் காலத் தடை உடைந்து பிள்ளைப்பேறும் ஸித்திக் கத் தொடங்கிவிடும். இதில் எனக்கு எந்த சந்தேகமும் இல்லை" என்றவர் தொடர்ந்து, "முன்னதாக சகலதோஷ நிவர்த்தியாக அஸ்வமேத யாகத்தையும் நிகழ்த்திவிட வேண்டும். அதன் பொருட்டு பூ உலகில் உள்ள சகல ராஜ்ஜியாதிபதிகளுக்கும் ஓலை போக்குவோம். அனைவரும் இந்த அயோத்திக்கு வந்து யாகத்தில் பங்குகொள்ளட்டும். இதனால் யாக திரவியங்கள் ஒருபுறம் சேரும். மறுபுறம் இந்தப் பூலோகமே அதன் நிமித்தம் புண்ணியச் செயலுக்கு உள்ளாகும்" என்றார்.

வசிஷ்டரின் விருப்பம் செயல்படத் தொடங் கியது. பூ உலகின் சகல பாகங்களுக்கும் அயோத்தி யின் தூதர்கள் செய்தி கொண்டு சென்றனர்.

அதில் ஒருவன், சோழ மண்டலத்தை ஆண்டு வந்த தர்மவர்மா முன் வந்து நின்றான். தசரதனின் வேள்விச் செய்தியை அறிவித்தான். அதைக்கேட்ட தர்மவர்மாவுக்கும் வடதேச யாத்திரை குறித்த எண்ணம் தோன்றியது.

குறிப்பாக, 'வைகுண்டத்தில் இருந்து பூ உலகில் கோயில் கொண்டிருக்கும் பிரணவாகாரப் பெருமாள் முன்னிலையில் இந்த வேள்வி நிகழும். அரசர் பெருமக்கள் எம்பெருமானை தரிசனம் செய்திட இது ஓர் அரிய வாய்ப்பு' என்கிற தகவல், தர்மவர்மாவின் மனதில் தானும் இந்த வேள்வியில் பங்கேற்கவேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்தி விட்டது.

உடனேயே அந்தத் தூதனுக்கு பதிலளித்தான்.

"யாம் இந்த வேள்வியில் பங்குகொள்வது உறுதி. எம்மோடு நூறு குடம் காவிரி ஜலம் முதல், எம்மண்ணின் விசேஷச் சிறப்பான வாழை, வெற்றிலைகளுடன் சேர மலை நாட்டின் தேனை யும் சுமந்துகொண்டு வருவோம்" என்று அவன் கூறவும், தூதனும் மகிழ்வுடன் திரும்பினான்.

அதன்பின் ஒரு மண்டல கால அளவிலான பயணத்தில் தர்மவர்மா அயோத்தியை அடைந்த போது, நகரமே விழாக்கோலம் பூண்டிருந்தது. தர்மவர்மாவும் அயோத்தியின் அரசவைப் பிரதானிகளால் வரவேற்கப்பட்டான். பின் சரயு நதியோரமாக அரசர்களுக்கென உருவாக்கப்பட்ட குடிலில் தங்கினான். அப்போதுதான் 'தமஸா' எனும் இடத்தில் பிரணவாகாரப் பெருமாள் குடிகொண்ட ஆலயத்தையும் அதன் நெடிதுயர்ந்த கோபுரத்தையும் கண்டான். அதைக்கண்ட மாத்திரத்தில், தொடக்கத்தில் இக்ஷ்வாகுவுக்கு ஏற்பட்ட அதே தாக்கம் தர்மவர்மாவுக்கும் ஏற்பட்டது. இக்ஷ்வாகுபோல் தவம் செய்தாவது இந்த ஆலயத்தை சோழ தேசத்துக்குக் கொண்டு சென்று விடத் துணிந்தது, அவன் மனது!

**- தொடரும்...**

19 Jun 2018

# ரங்க ராஜ்ஜியம் - 6



ரங்க ராஜ்ஜியம் - 6

இந்திரா சௌந்தர்ராஜன், ஓவியம்: ம.செ

**‘விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர் வேங்கடம்**
**மண்ணகரம் மாமாட வேளுக்கை - மண்ணகத்த**
**தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி**
**தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு'**

**- பேயாழ்வார்**

தசரதரின் அழைப்புக்கிணங்க அயோத்தியை அடைந்த தர்மவர்மா, பிரணவாகார விமானத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைக் கண்டமாத்திரத்தில், இக்ஷ்வாகுவுக்கு ஏற்பட்ட உணர்வும் சிலிர்ப்பும் தர்மவர்மாவுக்கும் ஏற்பட்டது. இக்ஷ்வாகுபோல் தவம் செய்தாவது எம்பெருமானின் ஆலயத்தைச் சோழ தேசத்துக்குக் கொண்டு சென்று விடத் துணிந்தது அவர் மனம். இங்ஙனம், தர்மவர்மாவின் எண்ணங்கள் பிரணவாகாரப் பெருமாளின் மேலேயே இருக்க, தசரதர் மறுபுறத்தில் வேள்விக்கான ஏற்பாடுகளில் மும்முரமாயிருந்தார்.

வேள்வியின் தலைவராக ரிஷ்யசிருங்கர் எனும் மாமுனியின் வருகையும் அயோத்தியில் அமைந்தது. ரிஷ்யசிருங்கரின் பாதம் பட்ட இடத்தில் மழை பொழியும் - சுபிட்சம் கூத்தாடும் என்பதால், அவரது வரவை அரசர்கள் கொண்டாடி மகிழ்வார்கள். அப்படிப்பட்ட ரிஷ்யசிருங்கரையே முன்னிலைப்படுத்தி, அவரை நடுநாயகமாய் அமரச்செய்து, தனது வேள்வியைத் தொடங்கினார் தசரதர். அவ்வேளையில், பிரார்த்தனை உரையை யும் நிகழ்த்தினார்.

`‘அரியதொரு நிகழ்வான இந்த வேள்விக்காக, இந்தக் கோசல தேசமே மகிழ்வுறும் வண்ணம் தன்னுடைய திருப்பாதங்களைப் பதித்திருக்கும் ரிஷ்யசிருங்க மாமுனிவரே! எங்கள் ரவி குலத்தை வழிநடத்தும் எம் குலகுருவாம் வசிஷ்ட மாமுனி வரே! வேள்வியின் பொருட்டு திரண்டு வந்திருக்கின்ற ரிஷிகளே, முனிகளே!

இப்பூவுலகில் நாடுகள் பல கண்டு, அவற்றைத் தர்மத்தோடும் தகைமையோடும் ஆட்சி செய்து வரும் என் மித்ர ராஜாக்களே! என்னிடம் மிகுந்த அன்பும் பாசமும் கொண்ட அயோத்தியின் பிரஜைகளே, மற்றுமுள்ள வேதியர்களே! இவ்வேள் வியைத் திட்டமிட்டு

நிகழ்த்தும் ஸ்தானீக மஹநீயர்களே! அனைவரது சித்தமும் குளிரும்படி நடக்கப்போகும் இந்த வேள்விக்கு வந்திருக்கும் உங்களை மனதார வரவேற்று வந்தனம் புரிகிறேன்.



எங்கள் ரவிகுலம் பெற்ற பெரும்பேறான பிரணவாகாரப் பெருமாளின் தண்ணருளாலே நிகழ இருக்கும் இவ்வேள்விக்கான பொதுவான நோக்கம், இப்பூவுலகம் அமைதியாகவும் பசி - பஞ்சமின்றியும் திகழவேண்டும் என்பதே! அடுத்து, எங்கள் ரவிகுலம் தொடர்ந்து தழைத்திட, எனக் கான புத்திரப்பேறு வேண்டியும் இங்கே இந்த வேள்வி நிகழ்த்தப்படுகிறது.

ஒருவேளை, முன்னமே எனக்குப் புத்திரப்பேறு ஏற்பட்டிருந்தால், இங்கே இந்த வேள்வி நிகழ வாய்ப்பே ஏற்பட்டிருக்காது. உங்கள் எல்லோரை யும் இந்தச் சரயு நதி தீரத்தில் ஒருசேரச் சந்திக்கும் பாக்கியமும் வாய்த்திருக்காது. இதனாலேயே எனக்குப் புத்திரப்பேறு தாமதப்பட்டதாக நான் திருவுள்ளம் கொள்கிறேன்.

இன்று நடக்கப்போகும் இந்த வேள்வியால் காலகாலத்துக்கும்

நன்மைகள் விளையட்டும். நம் எல்லோருடைய குறைபாடுகளும் தீரட்டும். நம் குறைகளையெல்லாம் எம் குலதெய்வமான அரங்கநாதப் பெருமாள் தீர்த்துவைப்பாராக. வைகுண்டத்திலிருந்து சத்யலோகத்துக்கும், பின் சத்யலோகத்திலிருந்து பூவுலகில் இந்த அயோத்திக் கும் வந்து, நமது அயோத்தியையே பூலோக வைகுண்டமாக்கியிருக்கும் அந்தப் பெருமாளின் கழல்களைப் பணிந்து, வேள்வியானது தொடங்கிட வேண்டுகிறேன்'' - தசரதரின் இந்த உரை, தர்ம வர்மாவை வெகுவாகச் சிந்திக்கவைத்தது.

பிரணவாகாரப் பெருமாளின் திருச்சந்நிதி முன்னால் வேள்விக் கூடம் அமைக்கப்பட்டிருந்தது. சுற்றிலும் வட்ட வடிவில் அரசப் பெருமக்களுக்கு ஆசனங்கள் போடப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்றில் அமர்ந்திருந்த தர்மவர்மாவின் பார்வை வேள்விக்கூடம் கடந்து பிரணவாகாரப் பெருமாளின் திருச்சந்நிதி நோக்கியே இருந்தது. பள்ளிகொண்டிருந்த அரங்கநாதனின் தோற்றம், தர்ம வர்மாவை பலவாறு எண்ணம் கொள்ளச் செய்தது.

‘எம்பெருமானே! ஒரு பக்தனின் பொருட்டு விண்ணிலிருந்து மண்ணுக்கு வந்து நீ கோயில் கொண்டுள்ளாய் என்றால், உன் கருணையை என்னவென்பேன்? கருணை மிகுந்த உன் ஸ்தூலம் காண, நான் தெற்கிலிருந்து இந்த வடக்கு நோக்கி வருவதற்கு எவ்வளவு பிரயாசைப்பட்டிருப்பேன் தெரியுமா? என்னைப்போல் என் நாட்டவரால் வர இயலுமா? அவர்களுக்கெல்லாம் உன் தரிசனம் என்பது எட்டாக்கனிதானா?

வைகுண்டம், சத்யலோகம், அயோத்தி என மூன்று இடங்களைக் கண்ட நீ, நான்காவதாக என் சோழ நாட்டுக்கு ஏன் வரக் கூடாது? இந்த ரவிகுலத்தவர்களைவிட இன்னும் சிறப்பாக நாங்களும் உன்னைக் கொண்டாடி மகிழ்வோமே?

இந்த வேள்வியில் எல்லோருக்கும் ஒரு பிரார்த் தனை உள்ளது. எனது பிரார்த்தனை என்ன தெரியுமா? நீ என் மண்ணில் கோயில்கொள்ள வேண்டும் என்பதுதான்! இந்த வேள்வி முடியும் வரை மட்டுமல்ல...

இனி, நீ என் மண்ணை அடையும்வரை அது ஒன்றே என் எண்ணம், நோக்கம், வாழ்வு எல்லாம்!' - என்று ஒரு முடிவுக்கு வந்தான் தர்மவர்மா.

வேள்வி முடிந்து சோழ தேசம் திரும்பியவன், அமைச்சர்களை அழைத்து அவர்களிடம் மனம் விட்டுப் பேசினான். தர்மவர்மாவின் பேச்சைக் கேட்ட அமைச்சர்களும் ``அரசே! தங்கள் விருப்பம் மிக மேலானது. தெய்வத்திடம் நாம் எதையும் வேண்டிப் பெற்றிட முடியும். ஆனால், தசரதச் சக்ரவர்த்தி, தங்களைப் போல் தாய் தந்தையர் வயிற்றில் பிறந்த ரத்தமும் சதையுமான புருஷர். அவரிடம் எப்படி நாம் எம்பெருமானை வேண்டிப் பெற முடியும்? ஒருவேளை, போரிட்டு அவரை வெற்றிகொண்டால், உங்கள் விருப்பம் சாத்தியமாக லாம். ஆனால், அதுவும் நம் வரையில் சாத்தியம் இல்லை. போருக்குப் பகை மிக முக்கியம். தசரதச் சக்ரவர்த்தியோ நம்மோடு நட்பு, அன்பு என்று மிக இணக்கமானவராக இருக்கிறார். அவரை எப்படிப் பகைக்க முடியும்? எனவே, எப்படிப் பார்த்தாலும் உங்களின் மேலான விருப்பம் கைகூட வாய்ப்பில்லை. வேண்டுமானால், அந்த ஆலயம் போன்ற ஓர் ஆலயத்தை நாம் இங்கே கட்ட முனையலாம்'' என்றனர்.

“இல்லை! அதுபோல் நூறு ஆலயங்களை நாம் இங்கே கட்டலாம்தான். ஆனால், அவையெல்லாம் வைகுண்ட சாந்நித்தியம் கொண்டதாகிவிடாது.அந்தப் பிரணவாகாரமும் எம்பெருமானின் மூர்த் தமும் எம்பெருமானாலேயே தோற்றுவிக்கப் பட்டனவாம். அந்த ஸ்வாமி, உளி படாத ரூபம்; உருக்கி வார்க்காத தங்கம்.

கூடவே, தேவாதிதேவர்களுடன் சித்தசாத்ய கணங்கள் சூழ, தும்புரு, நாரதரின் வீணாகானம் எப்போதும் ஒலித்தபடி இருக்க, சந்திர - சூரியரே சாமரம் வீசியபடி அங்கே திருப்பணி செய்கின்றனர். இதெல்லாம் நாம் எழுப்பும் ஆலயத்தில் சாத்தியமா?"

தர்மவர்மாவின் கேள்வியின் முன் அமைச்சர் கள் மௌனம் சாதித்தனர். தர்மவர்மாவோ விடுவதாயில்லை.

“அருமை அமைச்சர்களே! விண்ணிலிருந்தே ஒருவனால் அப்பெருமாளை மண்ணுக்குக் கொண்டுவர முடிந்திருக்கிறது. அந்தப்

பெருமாளை இம்மண்ணில் வடக்கிலிருந்து தெற்கே கொண்டு வருவதா கடினம்? நான் இம்மட்டில் எனக்கு முன்னோடியான இக்ஷ்வாகுவின் வழியிலேயே செல்ல முடிவு செய்துவிட்டேன்" என்றார். அமைச்சர்கள் அதிர்ந்தார்கள்.

"மன்னா! தவம் சாதாரண விஷயமில்லை. நம் போன்ற க்ஷத்ரிய புருஷர்களின் புலன்கள் அடங்குவதும் எளிதல்ல..." என்ற ஓர் அமைச்சரின் கருத்து, தர்மவர்மாவுக்குக் கோபத்தையே வரவழைத்தது.



"சுலபமாக அடைவதற்கு, அதுவொன்றும் சரீர இச்சை சார்ந்ததல்ல. ஆத்ம விடுதலைக்கானது. அந்த அரங்கனே என் சுதந்திரதேவன். நான் இனி இரண்டாம் இக்ஷ்வாகு..." என்று உறுதியாகக் கூறிய தர்மவர்மா, பெருந்தவத்தில் அமர்ந்துவிட்டான்.

ஒருபுறம் தர்மவர்மாவின் தவம், மறுபுறம் தசரதரின் வேள்வி நோக்கம் ஈடேறிய நிலையில், ஸ்ரீராம, பரத, லக்ஷ்மண, சத்ருக்னர்களின் பிறப்பு. காலமும் உருளத் தொடங்கியது!

தர்மவர்மா புரியும் தவம் எல்லோருக்கும் தெரிய ஆரம்பித்தது. குறிப்பாக, காவிரிக் கரையை ஒட்டிய புலஸ்திய முனிவரின் சிஷ்யரான தாலப்யர் எனும் முனிவரின் ஆசிரமத்தைச் சேர்ந்த முனிவர்கள் சிலர், தர்மவர்மாவின் தவத்தை அறிந்து தர்மவர்மாவின் தவக்கோட்டத் துக்கு வந்தனர்; அவனது தவத்தைக் கண்டு சிலிர்த்தனர். அதே உணர்வோடு, தர்மவர்மாவின் தவத்தை இடையூறு செய்யாதவண்ணம் தர்ம வர்மாவின் மேல் மலர்களைத் தூவினர்.

மலர்களின் மணமும் ஸ்பரிசமும் தர்ம

வர்மாவைக் கண்திறக்கச் செய்தன. எதிரே தென்பட்ட முனிவர்களைக் கண்டு வியந்தவனாக எழுந்த தர்மவர்மா, அவர்களுக்குத் தன்னுடைய வந்தனங்களைப் புரிந்தான்.

“அநேக வந்தனங்கள் முனி பெருமக்களே... என்னுடைய அநேக வந்தனங்கள் உங்களுக்கு உரித்தாகுக...”

“மகிழ்ச்சி அரசே... பெரும் மகிழ்ச்சி! உனக்கும் எங்களின் நல்லாசிகள் உரித்தாகட்டும்.”

“மிக்க நன்றி. தாங்கள் யாரென்று நான் அறிய லாமா?”

“நிச்சயமாக. நாங்கள் வந்திருப்பதும் உன்னைக் கண்டு, உனது தவ நோக்கம் பலிக்கப்போகிறது என்பதைக் கூறவே."

“எனது பெரும் விருப்பம் ஈடேறப் போகிறதா... நிஜமாகவா? அடியேன் தன்யனானேன்!” - நெகிழ்ந்தான் தர்மவர்மா.

“ஆம்! ஆனால் இப்போதோ, இன்றோ அல்லது நாளையோ அல்ல..."

“என்றால்..?”

“நாங்கள் கூறப்போகும் செய்திகளை முதலில் நீ அறிந்துகொள். பிறகு, அனைத்தும் உனக்குத் தானாகத் தெரியவரும்"

“நல்லது! கூற வந்ததை தாராளமாய்க் கூறுங்கள்.”

“முதலில், நீ உனது தவப் பீடத்திலிருந்து நீங்கி, எங்களுக்கான ஆசனங்களை அளித்து, ஒரு சீடனுக்குரிய தன்மைகளோடு அணுகு."

தர்மவர்மாவும் அவர்கள் கூறியபடியே நடந்து கொண்டான். அந்த முனிவர்கள், உயரிய மேடை யில் விரிக்கப்பட்ட பட்டு விரிப்பின் மேல் அமர்ந்துகொண்டனர். அவர்கள் முன் தரையில் கீழே அமர்ந்தான் தர்மவர்மா. அந்த முனிவர்கள், தாங்கள் கூற வந்ததை விவரிக்கத் தொடங்கினர்.

“அரசனே! நாங்கள் காவிரி நதி தீரத்தில் தவம் புரிந்து வரும் தாலப்ய முனிவரின் சீடர்கள். அவரின் விருப்பப்படியே, செய்திகளை உன்னிடம் இப்போது கூறப்போகிறோம்.

இங்கிருந்து ஐம்பது காத தூரத்தில் நீலிவனம் என்றொரு வனம் உள்ளது. விசேஷ தன்மைகள் கொண்ட அந்த வனம், எங்களைப் போன்ற முனிவர்களுக்கு ஏற்றதாக, நாங்கள் தவம் புரிய உகந்த இடமாகத் திகழ்ந்தது. அங்கே, ‘வியாக்கிரன்’ எனும் அசுரன் உருவில் ஆபத்து புகுந்தது. ‘இது என் வேட்டைக்காடு. இங்கே யாரும் தவம் புரியக் கூடாது’ என்று கூறியதுடன், தன்னையே வணங்க வேண்டும் என்றும் எங்களைப் போன்ற தவசிகளுக்குக் கட்டளையிட்டான்.

பரம்பொருளை ஜபித்த வாயால், இழிவான அந்த அசுரனைப் பற்றிப் பேசுவதுகூட இழிவு என்பதால், நாங்கள் மறுத்தோம். அதனால், எங்களில் பலரை வெட்டிக் கொன்றதுடன், நர மாமிசமாக அவர்களை உண்ணவும் செய்தான்.

ஞானியர் மேனியும் இறைவனின் ஆலயமும் ஒன்றல்லவா? புனிதமான

ஆலயத் திருமேனி, நர உணவாகவா ஆவது? ஆகவே, கோபத்தை நினைத்தும் பார்க்கக்கூடாத நாங்கள், அவன் மீது சினம் கொண்டோம். எம்பெருமானை உத்தேசித்து உக்ர தவக்கோலம் பூண்டோம். நீருக்குள்ளும், நெருப்பிலும், ஒரு காலை மட்டும் தரையில் ஊன்றியபடியும், தலைகீழாகத் தொங்கியபடியும் அவரவர் சக்திக்கேற்ப தவம் புரிந்தோம்.

எப்போதும், எந்த எதிர்பார்ப்புமின்றி அறத்தை நிலைநிறுத்தும் நோக்கோடு செய்யப்படும் தவத் துக்குரிய பலனைத் தர தேவர்கள் ஓடி வருவர். தேவர்களே ஓடி வரும்போது, எம்பெருமான் வாராதிருப்பாரா? எனவே, அவரும் பிரசன்ன மானார். அத்துடன், வியாக்ரனை சம்ஹாரம் செய்து எங்களது தவத்தையும் மெச்சினார்.

அப்போது நாங்கள் அத்தனைபேரும் முதல் நன்றியை வியாக்கிரனுக்கே கூறினோம். அவனால் அல்லவா எம்பெருமானின் காணக்கிடைக்காத காட்சியும் காணக் கிடைத்தது! நாங்கள் எதற்காக தவமியற்றினோமோ அந்த நோக்கம். ஈடேறவும், காட்சியளித்த எம்பெருமான் மறைந்துவிட்டார்!

எம்பெருமானின் அந்தத் திருக்காட்சி, முனிவர் பெருமக்களை பெரும் பிரமைக்கு ஆளாக்கியது. அந்தக் காட்சியைத் திரும்பவும் காணத் துடித் தோம். மீண்டும் தவத்தில் ஆழ்ந்தோம். இம்முறை, தவத்தின் நோக்கமும் மாறிவிட்டது. முன்பு உயிருக்காகத் துடித்தோம். இப்போது விருப்பத்துக் காகத் துடித்தோம்.

மட்டுமின்றி, எம்பெருமானின் கருணைக்குரிய அந்தச் செயலும், முனிவர் பெருமக்களின் தவமும், ஏதோவொரு கால நிகழ்வாகக் கால வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படுவதை நாங்கள் விரும்ப வில்லை. எனவே, மீண்டும் நாங்கள் எம்பெருமா னின் தரிசன நிமித்தமும், அது அன்றாடம் நினைத்தபோதெல்லாம் நிகழ்ந்திடவும், எம்பெருமானின் ஆலயம் ஒன்று இந்த மண்மிசை அமையவேண்டியும், குறிப்பாக அயோத்தியில் அமைந்தது போலவே ஒரு கோயில் இங்கும் அமையவேண்டியும் மீண்டும் கடும் தவம் புரிந்தோம். எங்கள் தவத்தின்

பயனாக ஓர் அசரீரி ஒலிக்கக் கேட்டோம். நாங்கள் செவிகுளிரக் கேட்ட அந்தச் செய்தி இதுதான்...

‘முனி பெருமக்களே! உங்கள் தவத்தால் மகிழ்ந் தேன். உங்கள் விருப்பம், வருங்காலத்தில் ஈடேறும்! எது தர்மம் என்பதை உலகம் நன்கு அறிய வேண்டியும், வியாக்கிரன் போல பல அசுரர்களை சம்ஹரிக்கும் பொருட்டும் அவதாரம் எடுக்கவுள் ளேன். பூலோக வைகுண்டமெனத் திகழும் அயோத்தியே நான் அவதரிக்கப்போகும் பூமி. அயோத்தி மன்னனே எனக்குத் தந்தையாகப் போகிறவன்.

இந்தப் பிறப்பில் என்னுடைய செயல்களில் ஒன்றாக, நீங்கள் விரும்பும் ஓர் ஆலயம் என்னுடைய சகல சாந்நித்தியங்களோடும் இம்மண்ணில் வருங் காலத்தில் அமையும். அது யுகங்களைக் கடந்தும் நிலைத்து நிற்கும். இதே விருப்பத்தோடு தவம் புரியும் தர்மவர்மாவிடமும் இந்தச் செய்தியைக் கூறி காத்திருக்கச் சொல்லுங்கள். வாழ்க உங்கள் பக்தி! வளர்க உங்கள் அருள்நிதி!’ என்று அந்தச் செய்தி விண்ணில் ஒலித்து அடங்கியது. அதைக் கூறவே நாங்கள் உன்னை நாடி வந்தோம்"

முனிவர்கள் அனைத்தையும் விவரமாகக் கூறி முடிக்க, தர்மவர்மா அகம் மகிழ்ந்தான். அதேநேரம், அந்த மன்னவனின் தவக்கோட்டத்துப் பசு ஒன்று `ம்மா...' என்று குரலெழுப்பி, மன்னவனின் மகிழ்ச் சியை இரட்டிப்பாக்கியது!

**- தொடரும்...**



## மௌன விரதம்!

சந்நியாசி ஒருவரிடம் வந்த பக்தர் “ஸ்வாமி, நான் மாதம் ஒருமுறை மௌன விரதம் இருக்க முடிவு செய்துள்ளேன்" என்றார். உடனே சந்நியாசி, “அது உன்னால் முடியாது. வேண்டுமானால், மௌனமாக இருக்கப்போகிறேன் என்று சொல். அதை ஏற்கிறேன்" என்றார். பக்தர் புரியாமல் விழித்தார்.

அவருக்குச் சந்நியாசி அளித்த விளக்கம்: ``சிலர், மௌன விரதம் இருப்பார்கள். அது எதற்கு? ஓய்வு வாய்க்கா, நாவுக்கா, தொண்டைக்கா..? நிச்சயமாக மனதுக்கல்ல! அடுத்தவர்களின் புகழ்ச்சிக்காகவோ, விளம்பரத்துக்காகவோ விரதம் இருந்தால், அது மனதின் ஓய்வுக்கு எதிரான எண்ணம் ஆகும். மனம் எண்ணமற்று இருப்பது அல்லது மனதில் எண்ணங்கள் குறைவாக இருப்பதுதான் விரதம். ஆக, எண்ணங்களை அலைபாய விடுவதைவிட, பேசிக் கொண்டிருப்பது நல்லது."

03 Jul 2018

# ரங்க ராஜ்ஜியம் - 7



ரங்க ராஜ்ஜியம் - 7

இந்திரா சௌந்தர்ராஜன், ஓவியம்: ம.செ

**‘ஆமையாய்க் கங்கையா யாழ்கடலாய்**
**அவனியா யருவ ரைகளாய்,**
**நான் முகனாய் நான் மறையாய் வேள்வியாய்த்**
**தக்கணையாய்த் தானு மானான்,**
**சேமமுடை நாரதனார் சென்று சென்று**
**துதித்திறைந்தக் கிடந்தான் கோயில்,**
**பூ மருவிப் புள்ளினங்கள் புள்ளரையன்**
**புகழ் குழறும் புனலரங்கமே.’**

- **பெரியாழ்வார் திருமொழி**

தவக்கோட்டத்தில் ஒலித்த பசுவின் குரல், தர்ம வர்மாவுக்கு நல்ல சகுனமாகப் பட்டது. முனிவர் களின் வாக்கு வரும் காலத்தில் நிச்சயம் பலிக்கும் என்கிற ஒரு நம்பிக்கையையும் உருவாக்கிற்று.
காலசக்கரம் சுழலத் தொடங்கியது.

அயோத்தியில் ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர் குழந்தைப் பிராயம் கடந்து இளமைப் பிராயத்துக்குள் சென்ற நிலையில், வசிஷ்டரே அவர்களுக்குக் குருவாய் இருந்து எல்லாவிதமான கல்வியையும் போதித்தார். இந்த போதனையோடு பிரணவாகாரப் பெருமாள் வழிபாட்டையும் சொல்லிக்கொடுத்தார்.

அதன் நிமித்தம் ஒரு நாள் நான்கு பேரையும் பெருமாள் முன் அழைத்துச் சென்று நிறுத் தினார். அப்போது அரங்கநாதப் பெருமாள் மேனியில் சாத்தப்பெற்ற மனோரஞ்சிதத்தின் வாசம் ராமன் மேலும், ஆதிசேஷனின் மேலிருந்து வரும் தைல வாசம் லக்ஷ்மணன் மேலும் வீசுவதைக் கண்டு சந்நிதி வைதீகர் ஆச்சர்யப்பட்டார்.



இருவருமே மண்மிசை மானுட அவதாரம் எடுத்து வந்திருப்பது அவருக்குப் புலனாக வில்லை. ஆனால், வசிஷ்டர் பிரம்மரிஷி ஆதலால், அதை அந்தச் சந்நிதியில் உறுதிபட தெரிந்துகொண்டதோடு “ராமா... உன் தந்தை யைத் தொடர்ந்து நீயும் இதை வழிபட வேண்டும். இப்படி நீ செய்யும் வழிபாடு என்பதும் ஒரு வழிகாட்டலே! உன் வம்சாவளி யில் வைவஸ்வத மனுவில் தொடங்கி இன்று உன் வரை

வந்துள்ளது. உன்னைத் தொடரப் போகிறவர்கள், உன் வம்சாவளியினரா இல்லை உலகத்தவரா என்பதை வரும் காலம் தீர்மானம் செய்யும். முன்னதாக எவரெல்லாம் இந்தப் பெருமாளை வணங்கித் துதித்தனர் என்பதைக் கூறுகிறேன் கேட்டுக்கொள்...

வைவஸ்வதமனு, இக்ஷ்வாகு, காகுத்தன், பின்னர் ஒரு பெண்ணின் கர்ப்பம் தவிர்த்து, ஆணின் தொடையிலுள்ள மாமிசத்தைக் கொண்டே கருப்பிண்டமாகி, பின்னர் பிள்ளை யாகப் பிறந்த மாந்தாதா, இந்த மாந்தாதாவைத் தொடர்ந்து முசுகுந்தன், அதன் பின்னர் சிபிச் சக்ரவர்த்தி, சகர புத்திரர்கள், பகீரதன், ரகு, அம்பரீஷன், நகுலன், யயாதி, திலீபன், அயன்... இவர்களில் அயன் எனப்படும் உன் தாத்தனுக்கும், இந்துமதி எனும் உன் பாட்டிக்கும் பிறந்த உன் தந்தை தசரதன் வரை, உன் சூர்ய வம்சம் வழிபட்ட பெருமானே இந்தப் பெருமாள்..!

இவர்களோடு நீயும் சேர்ந்து வழிபடுவாயாக. இவர்கள் வழிபட்டதற்கும், நீ வழிபடுவதற்கும் நிறைய வேற்றுமை உண்டு. ஒரு வகையில், உன்னை நீயே வழிபடுவது போன்றதே இந்தச் செயல்! `தானே பிரம்மம்' என்று உணரும் ஞானத்துக்கு இணையானது நீ புரியப்போகும் பூசனைகள். இதற்குமேல் நான் சொல்லவும் ஒன்றுமில்லை. நீ அறிந்திராத ஒன்றை என்னாலும் சொல்ல இயலா தென்றே கருதுகிறேன்'' - என்று கூறிய வசிஷ்டர், மேலும் தொடர்ந்து, ``ராமா! இந்தப் பூசனையில் உன் திருமேனிக் கரங்கள், இந்தத் தெய்வத் திருமேனியை ஸ்பரிசிக்கட்டும். அந்த ஸ்பரிசமே காலகாலத்துக்கும் இந்தத் திருமேனிக்கு வைகுண்ட சாந்நித்யத்தை நிலைநிறுத்தட்டும்'' என்றார்.

ராமனும் அடியார் கோலம் பூண்டு பிரணவா காரத்து அரங்கநாதப்பெருமாளுக்கு, தன் கையா லேயே அபிஷேக ஆராதனைகளைச் செய்ய விழைந்தான். அவனுக்கு அவன் சகோதரர்கள் உதவி செய்தனர்.
லக்ஷ்மணன் பால் குடத்தை அபிஷேகிக்கத் தந்தான். பரதன் தேன் குடத்தைத் தந்தான். சத்ருக்னன் பன்னீரைத் தர, இப்படி நான்கு பேரும் செய்யத் தொடங்கிய அந்த பூசனைகள், நான்கு வேதங்களும் மானுட

வடிவம் கொண்டு, தங்க ளைப் படைத்த தயாபரனை வழிபடுவது போல வும் இருந்தது. வசிஷ்டர் எட்ட நின்று கண்குளிர அந்தக் காட்சியைக் கண்டார். பிரம்ம ஞானியாதலால் பெரிதாய்ப் பரவசப்படக்கூடாத சமநிலையிலும், அவருக்குள் பரந்தாமனின் திருவருள்செயல்பாடு ஆச்சர்யத்தையும் மகிழ்ச்சி யையும் அளித்திருந்தது.

அவருக்கு ஓர் உண்மை நன்றாகத் தெரியும். தன்னைத் தானே வணங்கிடும் நிலை என்பது ஒரு சுற்று. அடுத்த சுற்று, தான் படைத்தவர்கள் தன்னை வணங்கித் தன்னை அடைதல் என்பது. அந்த நாளை நோக்கிக் காலச் சக்கரமும் சுழன்றது.

இலங்கை! ராவணப்பட்டினம் என்றும் கூறலாம். பின்னாளில் `திருவரங்கம்' என்றொரு திவ்ய முதல் தேசம் உருவாகத் தேவைப்பட்ட காரணங்களில் முதல் காரணம் தர்மவர்மாவின் பக்தியும் தவமும் எனில், இரண்டாவதுக் காரணம் இந்த நகரமும் இதனை ஆண்ட ராவணனும்தான்!

ராமாயணத்தின் வழி ராவணனைப் பார்ப்பதற்கும் தனித்து ராவணனைப் பார்ப்பதற்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. இந்த ராவணனை முழுவதுமாய் அறிந்தால்தான் விபீஷணனையும் நாம் அறிய முடியும். விபீஷணனை அறிந்தால்தான் திருவரங்கத்தை அணுசுத்தமாய் அறிய முடியும்.

முதலில் ராவணனை அறிவோமா? ஒரு வகையில், ராவணனின் ஆரம்பம் பிரம்மனிட மிருந்தே தொடங்குகிறது. பிரம்மாவின் புத்திரர் களில் புலத்தியரும் ஒருவர். தவத்தில் நிகரற்றவர். இவர் மனைவியின் பெயர் ஆவிர்ப்பூ. இவர்களுக் குப் பிறந்தவன் விஸ்ரவசு. இந்த விஸ்ரவசுதான் ராவணன், விபிஷணன் மற்றும் கும்பகர்ணனின் தந்தை. இவர்கள் தாயின் பெயர் கேகசி.

விஸ்ரவசுவோடு கூடி மூன்று பிள்ளைகளையும், சூர்ப்பணகையையும் பெற்ற கேகசி, மூத்தவன் ராவணனைச் சர்வலோக சக்ரவர்த்தியாக்கிப் பார்க்க விரும்பினாள். அதன்பொருட்டு, முதலில் குபேர நிதிக்காக பிரம்மனை எண்ணித் தவம் செய்யச் சொன்னாள். ராவணனும் தவம்

செய் தான். சாதாரண தவமல்ல... தன் சிரசுகளை ஒவ்வொன்றாக வெட்டி அக்னியில் ஆஹுதியாகப் போட்டு இவன் செய்த தவத்துக்குப் பிரம்மனும் மனமிரங்கினார். ராவணன் முன் காட்சியளித்து, ``என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார்.



அற்ப மனிதர்களாலன்றி வேறு எவராலும் தனக்கு மரணம் நேரக்கூடாது என்கிற வரத்தோடு, தான் ஆஹுதியாய் அக்னியில் இட்ட தலைகளும் கரங்களும் தனக்கு மீண்டும் கிடைக்கவேண்டும் என்று வேண்டினான். பிரம்மனும் அவன் கோரிய வரத்தை அளித்து மறைந்தார். `குபேர' சம்பத்தை தன் பலத்தால் குபேரனிடமிருந்து கைப்பற்ற தீர்மானித்தான். அதை ஒரு வரமாக பிரம்மாவிடம் பெற விரும்பவில்லை!

குபேரனுக்குச் சொந்தமானது இலங்கை. திரும்பிய பக்கமெல்லாம் செல்வச் செழிப்போடு மயனால் நிர்மாணிக்கப்பட்ட இலங்கையை, குபேரனை மிரட்டிப் பணியவைத்துத் தனதாக்கிக் கொண்டான். இந்த குபேரன், ராவணனின் சிற்றன்னை ‘இளி’ என்பவளுக்குப் பிறந்தவன். ராவணனுக்கு ஒன்றுவிட்ட சகோதரன்! இவன் வசம் இலங்கை

மட்டுமின்றி புஷ்பக விமானமும், சங்கநிதி, பதுமநிதி என வகைதொகையின்றி செல்வங்களும் இருந்தன. அனைத்தை யும் ராவணன் தனதாக்கிக் கொண்டான். அப்படியே இலங்கையை உருவாக் கிய மயனின் மகளான மண்டோதரி யையும் மணந்துகொண்டான்.

தனது எழில் நகரமான இலங்கை காலத்தால் அழியாதிருக்க சிவ பெருமானை எண்ணிக் கடும் தவம் புரிந்தான். அவரும் காட்சி தந்து தன் இன்னருளை ஒரு ஸ்படிக லிங்கத்தில் அடக்கி அதை ராவணன் வசம் தந்து, ‘‘இதை நீ உன் இலங்கை நகரில் வைத்து பூஜித்து வா. உன் நகரம் ஒரு நாளும் அழியாது. உன்னையும் எவராலும் வெல்ல முடியாது’’ என்று வரம் தந்தார்.

ராவணன் அந்த ஸ்படிக லிங்கத்தை இலங்கைக்குக் கொண்டு சென்று வணங்கத் தொடங்கி விட் டால், அதன்பின் அவன் சர்வலோக சக்ரவர்த்தியாகி எல்லோரையும் அடிமைப்படுத்திவிடும் ஆபத்து உண்டு என்பதை உணர்ந்த இந்திரன், அந்த ஸ்படிக லிங்கப் பிரதிஷ்டை இலங்கையில் நிகழக்கூடாது என்று கருதினான்.

ஸ்படிக லிங்கத்தின் பின்புலத்தில் இரண்டு நிபந்தனைகள் இருந்தன. ஒன்று அசுத்தமான நிலையில் அதைத் தீண்டக்கூடாது. அடுத்து, அதை எங்கே கீழே வைத்தாலும் அது அங்கேயே கோயில் கொண்டு விடும். அதன் பின் அதை அசைக்க இயலாது. இந்த நிபந்தனைகளைப் பயன்படுத்தியே தனது விருப்பத்தை ஈடேற்ற எண்ணிய இந்திரன், விநாயகப்பெருமானிடம் சென்று தனக்கு உதவிட வேண்டினான். விநாயகரும், ராவணன் ஸ்படிக லிங்கத்தை எடுத்து வரும் வழியில், அவனுக்கு ஜல உபாதை நேரும்படிச் செய்தார். அப்படியே அவன் எதிரில் ஒரு பிரம்மச் சாரி பிள்ளையாக நடந்துசென்றார். ஜல உபாதை தாளாத ராவணன், பிரம்மச்சாரி பிள்ளையான விநாயகரிடம் ஸ்படிக லிங்கத்தைத் தந்து பத்திரமாகக் கையிலேயே வைத்திருக்கச் சொல்லிவிட்டுச் சென்றான். ஆனால், விநாயகர் அதை அங்கேயே வைத்துவிட்டார். அதுமட்டுமல்ல, ராவணன் வந்து கேட்டபோது, ‘‘தன்னால் அந்த லிங்கத்தைச் சுமக்க முடிய வில்லை. அதனால் கீழே வைத்துவிட்டேன்’’ என்றார்.

அதன்பின் ராவணன் எவ்வளவு முயன்றும் அந்த லிங்கத்தை அசைக்கக்கூட முடியவில்லை. ஆனால் பசுவின் காது போல் குழைந்துபோனது. பின்னர் அந்த இடம் ‘கோகர்ணம்’ எனும் தலமாகியது. ஏமாற்றத்துடன் இலங்கை திரும்பிய ராவணன், அதன் பின் நிறையவே அட்டகாசம் புரியத் தொடங்கினான்.

குபேரனிடம் அபகரித்த விமானத்தில் ஏறி, பறந்து திரிவதில் மிகவும் மகிழ்ந்தான். ஒரு தருணத்தில், அந்த விமானம் ஈசனின் கயிலாயத்துக்கு மேல் பறக்க முனைந்தபோது, நந்திதேவர் தடுத்தார். அவரை ராவணன், குரங்கைப் போல முகம் சுழித்துப் பழித்தான். இதனால் வெகுண்ட நந்தி, ‘உன் பட்டணம் குரங்கா லேயே அழியக்கடவது’ என்று சபித்தார்.

இதே வேளையில்தான் கயிலாயத்தைத் தூக்கி தன் பலத்தை யும் காட்ட முற்பட்டான். அதைக் கண்ட சிவபெருமான் தன் கால் கட்டை விரலால் கயிலாய கிரியை அழுத்தி - ராவணன் கை நசுங்கி அலறும்படிச் செய்தார். வலி தாளாமல் அழுததால்தான் அவனுக்கு ராவணன் என்கிற பெயர் ஏற்பட்டது. பின் அவ்வழி வந்த வாகீச முனிவரின் வழிகாட்டுதலால், சாமகானம் பாடி ஈசன் மனதைக் கனியச்செய்து கைகளைத் திரும்பப் பெற்றான். எத்தனை பட்டாலும், ‘நான்’ எனும் செருக்கினால் தொடர்ந்து தவறுகள் செய்தான். வேதவதி என்னும் தவம் செய்த பெண்ணிடம் தவறான எண்ணத்துடன் அணுகி, அவளால் `குலம் அழியும்' சாபம் பெற்றான். நூறு திங்களுக்கு ஒரு திங்கள் குறைவாய் 99 திங்கள், இவன் பாதாளத்தில் தவம் செய்து வருணனை வெற்றிகொண்டு, அவன் வசமிருந்த பாசத்தைப் பிடுங்கிக்கொண்டதோடு, வருணனின் மகனையும் வெற்றிகொண்டு அவன் மனைவியை இலங்கைக்குத் தூக்கிச் சென்றான்!

குபேரன் மகனான நளகூபரனின் மனைவி ரம்பை! ஒரு வகையில் இவள் ராவணனுக்கு மருமகள். இருப்பினும் அவளை விட்டுவைக்க வில்லை ராவணன். அவள், பிரம்மாவிடம் சென்று அழுது புலம்பினாள். பிரம்மா, ``உன்னை விரும்பாத எந்தப் பெண்ணை நீ தொட்டாலும் உன்

தலை வெடித்துச் சிதறும்'' என்று ராவணனுக் குச் சாபமிட்டுவிட்டார்! இதனாலெல்லாம் ராவணன் அடங்கிவிட வில்லை. கார்த்தவீர்யார்ஜுனனுடன் மோதினான்; அவனால் சிறைப்பட்டான். பின் புலத்தியர் வந்து விடுவித்தார். அதேபோல் சிவபூஜை செய்யும் நேரத்தில் வாலியோடு மோதி, அவனிடம் அகப்பட்டுப் பின் நட்பு பாராட்டி விடுபட்டான். ஒருமுறை, சூரியனையே இலங்கையில் உதிக்காமல் செய்துவிட்டவன் ராவணன்!

மகாபலிச் சக்ரவர்த்தி பாதாளத்தில் சிறையில் இருந்ததற்குக் காரணம் ஸ்ரீமஹாவிஷ்ணு என அறிந்து, வைகுண்டத்துக்குச் சென்று அவருடன் மோத முற்பட்டான். சிவபெருமான் மற்றும் பிரம்மா தந்திருக்கும் வரங்களை உத்தேசித்து ஸ்ரீமஹாவிஷ்ணு இவன் வந்த நேரத்தில் வைகுண்டம் விட்டு நீங்கினார். அதை எண்ணி ஸ்ரீமஹாவிஷ்ணுவே தனக்குப் பயந்து ஓடிவிட்ட தாகக் கொக்கரித்தான் ராவணன். ஸ்ரீராமனின் பாட்டன்மார்களில் ஒருவரான மாந்தாதா என்பவரோடும் மோத முற்பட்டு, காலவ முனிவர் ராவணனைச் சமாதானம் செய்து அனுப்பி வைத்தார். சந்திரனுடன் மோதி, அதனால் சில மந்திர ஸித்திகளை அடைந்தான். இறுதியாக மூன்றரை கோடி வருடங்கள் உயிர் வாழ்ந்தான். இப்படிப்பட்டவனை, அவனது வரஸித்திக்கு ஏற்ப அழிக்கவே, ஸ்ரீராமனும் அவதரித்தார்.

**- தொடரும்...**

17 Jul 2018

# ரங்க ராஜ்ஜியம் - 8



ரங்க ராஜ்ஜியம் - 8

இந்திரா சௌந்தர்ராஜன், ஓவியம்: ம.செ

**‘மற்றுமோர் தெய்வமுண்டோ**
**மதியிலா மானி டங்காள்,**
**உற்ற போதன்றி நீங்கள்**
**ஒருவனென் றுணர மாட்டீர்,**
**அற்றமே லொன்றறியீர்**
**அவனல்லால் தெய்வமில்லை,**
**கற்றினம் மேய்த்த வெந்தை,**
**கழலினை பணிமினீரே.**

**-தொண்டரடிப் பொடியாழ்வார்.**

ராவணனின் தம்பி விபீஷணன். எல்லா வகையிலும் ராவணனுக்கு நேர் எதிராக நடந்து கொண்டவன். விபீஷணனின் முற்பிறப்பு பிரம்ம புத்ரரான புலத்தியர் பிறப்பாகும். தாயான கேகசி ராவணனைத் தவம் செய்யச் சொன்ன நேரத்தில் மற்ற தன் இருபிள்ளைகளான விபீஷணன் மற்றும் கும்பகர்ணனையும் கூட தவம் செய்யப் பணித்தாள்.

இதில் கும்பகர்ணன் அண்ணன் ராவணனைப் போலவே எவராலும் வெல்லப்பட முடியாத வரஸித்திக்கு முனைந்தான். அதைக் கண்டு தேவருலகமே நடுங்கியது. ஒரு ராவணனையே தாளமுடியாத நிலையில் இவனும் வந்துவிட்டால் அவ்வளவுதான் என்று அஞ்சி நடுங்கியவர்கள், பிரம்மாவிடமே சென்று முறையிட்டனர்.



பிரம்மாவோ ‘கடுந்தவத்துக்கு வரம் தருவது என் கடமை. இப்போதே கும்பகர்ணன் குறித்து வருந்துவது மடமை’ என்று கூறிவிட, தேவர்கள் கலங்கி நின்றனர். அப்போது அவர்களின் நிலையை அறிந்த சரஸ்வதிதேவி ‘‘தேவர்களே கலங்காதீர்கள். தைரியமே தேவலட்சணம்’’ என்றாள்.

“உண்மைதான்... ஆனாலும் அசுர சக்திகள் நம்மாலேயே பலம் பெற்று நம்மையே நசுக்க முற்படுவது எந்த வகையில் சரி?” - என்று திருப்பிக் கேட்டனர். இறுதியாக, சரஸ்வதி கும்பகர்ணன் விஷயத்தை தான் பார்த்துக்கொள்வதாகக் கூறினாள். எப்படி என்று கூறவில்லை. கும்பகர்ணன் தவத்ததால் மகிழ்ந்து பிரம்மா பிரசன்னமாகி வரம் தரத் தயாரானபோது, எல்லோருடைய நாவையும் தன் இருப்பிடங்களில் ஒன்றாகக் கொண்டிருந்த சரஸ்வதி கும்பகர்கணன் நாவிலும் அப்போது செயல்பட ஆயத்தமானாள்.

அண்ணனைப் போல் ‘நித்யத்வம்’ வேண்டும் என்று கேட்க விழைந்த கும்பகர்ணன், நாப்பிசகி ‘நித்ரைத்வம்’ வேண்டும் என்று கேட்கச் செய்தாள். பிரம்மாவும் ‘அவ்வாறே தந்தேன்’ என்று வரம் அளித்தவராக மறைந்தார். அதனாலேயே கும்ப கர்ணனும் தூங்கு மூஞ்சியாகிப் போனான்!

நல்லவேளை விபீஷணன் வரையில் தேவர்களும் அஞ்சவில்லை, நாமகளும் தேவைப்படவில்லை. தன் முன் தோன்றிய பிரம்மனிடம் ‘என்றும் தர்ம சிந்தையோடு பரம்பொருளை மறவாத உள்ளம் போதும்’ என்று கேட்டான். பிரம்மா மகிழ்வோடு அதை அருளினார்.

அதனாலேயே ராவணன் அவையில் விபீஷணன் தனித்துத் தெரிந்தான். அனுமன் சீதை யைத் தேடி இலங்கைக்குள் நுழைந்து ராவணனின் அரண்மனைக்குள் இரவில் புகுந்து, ஒவ்வோர் இடமாக காணும் தருணத்தில், விபீஷணரின் சப்ரமஞ்ச கூடத்தில் விபீஷணனை உறக்கத்தில் பார்த்து வியந்தார்.

அனுமன் கம்பனின் கண் கொண்டு பார்ப்பதை சுந்தரகாண்டமும் அழகாய் பாடல் வடிவில் சொல்கிறது.

**“பளிக்கு வேதிகைப் பவழத்தின் கூடத்துப் பசுந்தேன்**
**துளிக்கும் கற்பகப் பந்தரில் கருநிறத் தோர்பால்**
**வெளுத்து வைகுதல் அரிதென அவர் உருமேவி**
**ஒளித்து வாழ்கின்ற தருமம் அன்னான் தனை**
**உற்றான்”**

எனும் அந்தப் பாடல் ‘பளிங்குக்கல் மேடையில் பவழ மண்டபத்தில் பசுந்தேன் துளிர்க்கும் கற்பகப் பந்தலில், கருப்பு நிற அரக்கர்கள் மத்தியில் வெண்ணிறத்தனாய் வாழுதல் அரிது என்று அரக்கர்களின் கருநிறத்தை ஒளித்து வாழும் தர்ம தேவனாய் வீபிஷணனைக் கண்டான்’ - என்கிறது.

இப்படிப்பட்ட விபீஷணன்தான் அனுமன் ராவண சபையில் துன்புறுத்தப்பட்டபோது ‘தூது வந்தவனைத் துன்புறுத்துவது பெரும்

தவறு’ என்று துணிந்து சொன்னவன். தொடர்ந்து ராவணனின் தவறுகளைச் சுட்டிக்காட்டியதால், அரண் மனையை விட்டும் துரத்தப்பட்டவன்.

அப்படி துரத்தப்பட்ட நிலையில் விபீஷணன் அடைக்கலம் என்று வந்தது ராமனிடம்தான். அடைக்கலம் கேட்டு வந்த விபீஷணனை ராமலக்ஷ்மணரைத் தவிர எவரும் நம்பத் தயார் இல்லை. ராவணனால் உளவுபார்க்க அனுப்பப் பட்டவனாகத்தான் விபீஷணனைப் பார்த்தார்கள்.

ஆனால், ராவண சபையில் விபீஷணன் தனக்காகப் பரிந்து பேசியதை அனுமன் எடுத்துச் சொல்லி, விபீஷணனுக்கு ராமன் அடைக்கலம் தரக் காரணமானான்.

அதன் பின் நடந்த போரில் இந்திரஜித்தின் பிரம்மாஸ்திரம், சகலரையும் வீழ்த்திய வேளையில், ஜாம்பவான் மூலம் அனுமனை அனுப்பி சஞ்ஜீவி பர்வதத்தையே தூக்கிவரச் செய்து, லக்ஷ்மணனின் மூர்ச்சையை மட்டுமின்றி வானரசேனை மொத் தத்தையும் எழுப்பியவன் விபீஷணன்.

உச்சபட்சமாக இந்திரஜித் நிகும்பலை எனும் யாகம் செய்து, தான் மாயா சக்தியால் ஒரு மாய சீதையை உருவாக்கி ராமன் மற்றும் வானரர் முன் நிறுத்தி, அந்தச் சீதையை வாளால் வெட்டிக் கொன்று, உண்மைச் சீதையை அசோகவனத்தி லேயே இருக்கச் செய்தபோது ‘இது மாயா விளையாட்டு - நம்பிவிடாதீர்கள்’ என்று இந்திர ஜித்தின் ஜாலத்தை ராமலக்ஷ்மணர்க்கு உணர்த் தியவன்.

இறுதியாக ராவண வதம் முடியவும், ஸ்ரீராமனால் இலங்கை அரசனாக முடி சூட்டவும் பெற்றவன்.

ஆயினும் விபிஷணரின் தேவகுணத்துக்கும், உதவிகளுக்கும் ராமன் தர விரும்பிய பரிசு பொன்னோ, பொருளோ அல்ல... பிரணவாகாரப் பெருமாள்! ஏன்?



அயோத்தியில் அன்று எங்கு பார்த்தாலும் குதூகலம்! வானிலும் வெய்யக் கதிரோனின் கிரணங்கள், பந்தல் போட்டது போன்ற கார் மேகங்களுக்கு இடையே துணுக்குத் துணுக்காய் உள்ள இடைவெளி வழியாக ஊடுருவிக் கொண்டிருந்தன!

அயோத்தி மக்கள் அத்தனைபேரும் புத்தாடை தரித்திருந்தனர். ஒரு படி மேலே போய் தங்கள் இல்லத்து பசுக்களுக்கும் குதிரைகளுக்கும்கூட முதுகாடை அணிவித்து, அதன் நாற்புர நுனிகளில் மணிகளைத் தொங்கவிட்டிருந்தனர். அந்த மணிகள் ஒலியெழுப்பியபடி இருந்தன.

வீதிகளெங்கும் வசந்தக் கொடிகளும் மாவிலைத் தளிர்களும் கட்டப்பட்டு, அவை காற்றிலாடிக் கொண்டிருந்தன. அனைத்துக்கும் ஒரே காரணம்... வனவாசம் முடிந்து திரும்பிய ஸ்ரீராமனுக்கு அன்றுதான் பட்டாபிஷேகம்!

அதுநாள் வரை அயோத்தியில் ஓர் அசாத்ய அமைதி நிலவி வந்திருந்தது. பரதனின் நல்லாட்சி யில் ஒரு குறையும் இல்லைதான்.

ஆயினும் ஸ்ரீராமனும் சீதையும் இல்லாததே குறை என்றாகி, அவ்வளவு நிறைக்கும் ஈடாக அந்தக் குறை இருந்து வந்தது. இன்று அந்தக் குறை நீங்கிவிட்டதில் அயோத்தியில் ஒரு புத்தொளி... மக்கள் மனங் களிலும் பெரும் உற்சாகம்!

தங்கள் உற்சாகத்தை, ஆடத் தெரிந்த விரலியர் ஆடிக்காட்டியபடியே தெருக்களில் சென்றனர். மல்லாடுபவர்களும் மல்லாடிக்கொண்டு நடந்தனர். அயோத்தி நகரின் மாடங்களில் எல்லாம் தெருவில் நடப்பதை வேடிக்கை பார்த்தி டும் ஜனத்திரள்தான். அன்றைய தினத்தின் அந்த நொடிகளில், 'ஆகாய சொர்க்கமானது விண்ணிலே செயலிழந்து மண்ணில் அயோத்திக்குத் தன்னை இடம் மாற்றிக் கொண்டுவிட்டது போலும்' என்பதாகப் பலரும் உணர்ந்தனர்.

வீட்டுக்கு வீடு கல்யாண விருந்து! விருந்து உணவை ஒருவர்கூட தாங்கள் உண்ணவில்லை. மகிழ்வோடு தங்களின் உறவுகளுக்கும், நண்பர் களுக்கும், தோழியர்க்கும் ஊட்டிவிட, பதிலுக்கு அவர்கள் இவர்களுக்கு ஊட்டிவிட்டனர்.

அவ்வப்போது 'ஜெய்ஸ்ரீராம்' என்கிற உற்சாகக் குரல் பலராலும் எழுப்பப்பட்டு, அதைக் கேட்போரும் பதிலுக்கு 'ஜெய்ஸ்ரீராம்' என்று எதிரொலித்தனர். ஊருக்குள் நிலவிய உற்சாகத் தைப் போல பல மடங்கு உற்சாகம் அரண்மனைக்குள்!

ஸ்ரீராமனோடு வந்திருந்த சுக்ரீவனின் வானரப் படை அரண்மனைக்குள் மட்டுமின்றி அயோத்தியின் வீதிகளிலும் உலா வந்தனர். தங்கள் மண்ணில் திரியும் அந்த வானரர்களை அயோத்தி மக்கள் சந்தோஷமாய் வரவேற்று மகிழ்ந்தனர். சிலர் கட்டியணைத்து ஆலிங்கனம் புரிந்தனர்.

"எங்கள் பிரபுவுக்கு நீங்கள் செய்த உதவிக்கு நாங்கள் உங்களுக்கு காலமெல்லாம் கடமைப் பட்டிருக்கிறோம்" என்றனர். சுக்ரீவன், அங்கதன், நீலன் உள்ளிட்டோர் தனியே ரதங்களில் அயோத் தியை வலம் வந்தபடி இருந்தனர்.

அனுமனோ பட்டாபிஷேகக் காரியத்தில் கண்ணாயிருந்தான். பட்டாபிஷேக தர்பார் மண்டபத்தில், லக்ஷ்மணனின் மேற்பார்வையில் ஆசனங்களை வகைப்படுத்திக் கொண்டிருந்தான். இடையில் பரதனும் சத்ருக்னனும் வந்து அனுமனிடம் ‘`தொண்டாற்றியது போதும். நீங்கள் இப்போது எங்கள் விருந்தினர். பேசாமலிருந்து ஓய்வு எடுக்கலாமே..." என்றபோது ‘`ஸ்ரீராம காரியம்தான் எனக்கு உகந்த ஓய்வு...” என்று அவர்கள் வாயை அடைத்தான் அனுமன்.

விபீஷணனோ பிரணவாகாரப் பெருமாள் சந்நிதியில் இருந்தான். வைத்த விழி வாங்காது எம்பெருமானின் சயனத் திருக்கோலத்தின் மேலேயே கண்ணாயிருந்தான்.

என்னவொரு சாந்நித்தியம்... என்னவொரு சௌலப்யம்! விண்ணில் இருந்து மண்ணுக்கு வந்திருக்கும் அந்த மூர்த்தம் விபீஷணனுக்குள் பல சிந்தனைகளை உருவாக்கியிருந்தது.

‘இம்மூர்த்தியாலேயே இம்மண் இத்தனை சிறப்போடு உள்ளது. வற்றாத நதியோட்டம், வளமான சோலைகள், மேடுபள்ளம் இல்லாத சாலைகள், சாலையோரங்களில் மாளிகைகள், மக்களிடம் எவ்வித பேதமும் இல்லாத இணக்கம், அரசனைத் தாய்-தந்தைக்கு மேலாகக் கருதிடும் மனோபாவம்... அத்தனையும் சிறப்பு' என்று அயோத்தியையும், அயோத்தி மக்களையும் எண்ணிப் பார்த்தான்.

அப்படியே லங்காபுரி குறித்த நினைவும் வந்தது. ‘தேவலோக மயனால் வடிவமைக்கப்பட்ட ஒரு சொர்க்கபுரிதான் இலங்கை. ஆனபோதிலும் அதற்கு உரியவன் குபேரன். அவனிடமிருந்து லங்காபுரியை ராவணன் தட்டியல்லவா பறித்துக் கொண்டான். அத்துடன், தனக்கு தலைவணங்கா விட்டால் சிரத்தையே கொய்துவிடும் அச்சத்தை உருவாக்கியல்லவா மக்களை ஆண்டான்?’

விபீஷணனின் மனம், அயோத்தியையும் இலங்கையையும் தராசிலிடத் தொடங்கி விட்டிருந்தது. ‘இன்று அயோத்திக்கு ஸ்ரீராமனின் வனவாசப் பூரணம் ஒரு புத்துயிரை அளித்து விட் டது. ஆனால், இலங்கையோ நடந்த யுத்தத்தால் சர்வநாசமல்லவா அடைந்துள்ளது? மக்களும்கூட

யுத்தத்தில் தங்கள் உறவுகளை இழந்து ஊனப் பட்டல்லவா கிடக்கிறார்கள்? போதாக்குறைக்கு சீதையால் உண்டான களங்கம் வேறு... அன்றாடம் சீதையிட்ட சாபங்களால் சூழ்ந்த பூமியாக அல்லவா இலங்கை உள்ளது?' - விபிஷணன் மார்பை அவன் பெருமூச்சே சுட்டது.

'எப்படி அந்த மண்ணை திருத்தப் போகிறோம்? எவ்வளவு அழகிருந்தும் அசுரக் குணப்பாடே ஊடுருவிக் கிடக்கும் நிலையில், தேவ குணங்களும் தெய்விகமும் அங்கே இனி எவ்வாறு பரவும்? இந்தப் பெருமாள் இலங்கையில் கோயில் கொண்டால் ஒருவேளை அம்மண்ணும் திருமண்ணாய் மாறுமோ?' - விபீஷணன் மனதில் கேள்வி எழும்பி நின்றது. எழும்பிய வேகத்தில் கலையவும் பார்த்தது.

விபீஷணன், பிரணவாகாரப் பெருமாளைப் பார்த்து பலவித கேள்விகளுக்கும் பதில்களுக்கும் ஆளான நிலையில், பட்டாபிஷேகம் நடக்க உள்ள தர்பார் மண்டபத்துக்கு அழைப்பு வரவும், புறப்படத் தயாரானான்!

**- தொடரும்...**

31 Jul 2018

# ரங்க ராஜ்ஜியம் - 9



ரங்க ராஜ்ஜியம் - 9

இந்திரா சௌந்தர்ராஜன், ஓவியம்: ம.செ

அயோத்தி அரண்மனையின் தர்பார் மண்டபம் திமிலோகமாய் காணப்பட்டது. நடுநாயகமாய் ரத்ன சிம்மாசனம். அருகில் இருபுறமும் இரண்டிரண்டாய் சிம்மாசனங்கள். அவற்றை அடுத்து வசிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காஸ்யபர், காத்யாயனர், ஸ்ரீயக்ஞர், கௌதமர், விஜயர் ஆகிய அஷ்ட ரிஷிகளுக்கான ஆசனங்கள். அதுபோக மிதிலாபுரி ஜனங்களுக்கும், விபீஷண னுக்கும் பிரத்யேக ஆசனங்கள்.

இவை இப்படியென்றால், வெள்ளி மற்றும் தாமிரங்களால் ஆன பலதரப்பட்ட ஆசனங்களில் கோசலை, கைகேயி, சுமித்ரை உள்ளிட்ட ரவிகுல பந்துக்களும் சக ராஜ்ஜியாதிபதிகளும் அமர்ந் திருந்தனர். இவை போக, மண்டபத்தில் விரிக்கப் பட்டிருந்த ரத்தினக் கம்பளங்களில் அயோத்தி நகர வேத விற்பன்னர்கள் முதல் மகாஜனங்கள் வரை சகலரும் அமர்ந்திருந்தனர்.

அவர்கள் வரையிலும் இனிதான் ராம ராஜ்ஜியம் தொடங்கப்பட வேண்டும். இதுநாள் வரை பாதுகை ஆண்டது; இனி, பாதுகைக்கு உரியவனே ஆளப்போகிறான்.

அதற்கேற்ப ஸ்ரீராமன், சீதாபிராட்டி சகிதம் ராஜாங்கபூஷிதனாய், மரவுரியோடு தரித்திருந்த துவராடையை நீக்கி, பட்டும் பீதாம்பரமுமாய், பரிமள சுகந்தத்துடன், பரந்துவிரிந்த மார்பில் ரத்னஹாரம், முத்துவடகம் போன்ற ஆபரணங்கள் மின்னிட காட்சி தந்தான். அவன் கரம் பற்றி வந்த சீதை, பாற்கடலைவிட்டு மகாலட்சுமியானவள் அப்படியே எழுந்து வந்தது போல் லட்சுமிகரமாய் காட்சி தந்தாள். அவர்களுடன், ஒரு புறம் பரதனும், மறுபுறம் லட்சுமணனும், வெண்கொற்றக் குடை ஏந்திய வனாய் சத்ருக்னனும் வந்தார்கள்.

அந்தக் காட்சியால் மனம் கசிந்தவனாய் கண்களில் நீர் பனிக்க 'ராம்... ராம்... ' என்று உணர்ச்சி மேலிடக் குரல் கொடுத்தான் அனுமன். மக்கள் கூட்டம் அதை அப்படியே எதிரொலித்தது.

அதனூடே ராமன் சீதையுடன் ரத்தின சிம்மாசனத்தின் முன் நின்றிட, அருகில் லட்சு மணன், பரதன், சத்ருக்னன் நின்றிருக்க, ராமன் பணிவுடன்

அவையோரை வணங்கினான். அப்படியே சீதையுடன் சென்று அஷ்ட ரிஷிகளை நெருங்கி அவர்கள் காலில் விழுந்து ஆசிபெற்றான்.



வசிஷ்டர் அவனை அழைத்துச் சென்று ரத்தின சிம்மாசனத்தில் அமர்த்தினார். அவன் அமர்ந்த நிலையில், வெண்கொற்றக் குடை சிரத்துக்குமேல் பந்தல்போட்டது போல் நிறுத்தப்பட்டது. அதை சத்ருக்னன் பிடித்தபடி இருந்தான். ராமனின் தாயான கோசலை ஆனந்தக் கண்ணீரோடு அதைக் கண்ட நிலையில், லட்சுமணனின்

தாயான சுமித்திரையும் மிகச் சிலிர்ப்புடன் கைகேயி சகிதம் அந்த காட்சியைக் கண்டாள்.

ராமனுக்கு ராஜ்ஜியாபிஷேக வைபவம் தொடங்கியது. ஜாம்பவான், அனுமன், வேகதர்சீ, சிஷபன் உள்ளிட்டோர் பூலோகத்தில் பாயும் சர்வ நதிகளின் தீர்த்தத்தையும் கொண்டு வந்திருந்தனர். சுஷேணன், ரிஷபன், கவயன், நளன் ஆகிய நால்வரும் நாலாபுற சமுத்திர தீர்த்தத்தைக் கொண்டு வந்திருந்தனர். தீர்த்தக் கலசங்களை எட்டு ரிஷிகளும் தங்கள் கைகளால் தொட்டு ஆசீர்வதித்து தந்த நிலையில், ரவிகுல குருவான வசிஷ்டர் அந்த நீரால் ராமனை அபிஷேகித்தார். இவ்வேளையில் சத்ருக்னன் வெண்கொற்றக்குடை பிடித்திட, சுக்ரீவன் வெண் சாமரம் வீசிட, வாயு பகவான் தங்கத் தாமரை களாலான மாலைகளையும் ஒன்பது ரத்தினங்கள் நடுவே முத்து சேர்த்த மாலையையும் அணிவித்தார். பின், வேத மந்திர கோஷத்துக்கு இடையே ராமனுக்கு வசிஷ்டர் மணிமுடியான கிரீடத்தை சூட்டவும், ராமனை வாழ்த்திடும் கோஷம் அயோத்தி யின் விண் பாகத்தையே கிழிப்பதுபோல் ஒலித்து அடங்கியது. அதை முதலில் எழுப்பியவன் அனுமனே!

அடுத்து லட்சுமணனுக்கு இளவரசப்பட்டம் சூட்ட தயாராயினர். ஆனால், லட்சுமணன் மறுத்து பரதனைப் பணித்த நிலையில், பரதன் யுவ ராஜனானான்.

இந்தக் காட்சிகளைக் கண்கொட்டாது பார்த்துச் சிலிர்த்த வர்களில் விபீஷணனும் ஒருவன். அவன் வரையில் ஸ்ரீராமனும் சரி, ஸ்ரீராமன் கடந்துவந்த நிகழ்வுகளும் சரி... அவை, நுட்பமான அரிய உட்பொருளைக் கொண்டிருந்ததை எண்ணிப் பார்த்தான்.

‘ராமன் யாரோ அல்ல... ஸ்ரீவிஷ்ணுவின் அவதாரம்! அயோத்தி இம்மட்டில் மோட்ச தளம் என்றால், இதன் மூல புருஷர் தசரதன். அவரின் மனைவியர் மூவரும் மூன்று விதமான மாயையைக் குறிப்பவர்கள்.

கோசலை- சுத்த மாயையைக் குறிப்பவள். அவளிடம் தூய ஆத்மாவாக தோன்றியவன் ஸ்ரீராமன். மெய்ஞ்ஞானம் ஆகிய வசிஷ்டர் (குருவின்)

மூலம் தன்னை உணர்ந்து, விஞ்ஞானம் எனும் விசுவாமித்திரன் மூலம் அஞ்ஞானக் கானகத்தில் பிரவேசித்து, அரக்க மாயை எனும் தாடகையை அழித்து, ஞானம் எனும் வேள்வியைக் காத்தான்... இப்படியான சம்பவங் களுடன் தொடர்ந்து நீண்ட ஸ்ரீராமனின் வாழ்க்கைப் பயணத் தையும் அது உணர்த்திய உட்பொருள் ஒவ்வொன்றையும் எண்ணிச் சிலாகித்தது விபீஷணனின் மனம்!

ஸ்ரீராமன் காமம் எனும் மாரீசனை விரட்டியடித்து, குரோதம் எனும் சுபாஹுவை ஒழித்து, அறியாமை எனும் அகலிகைக் கல்லைப் பெண்ணாக்கி, ஆனந்தம் எனும் சக்தியைக் குறிக்கும் சீதையை அடைய, ‘மமகாரம்’ எனும் வில்லை ஒடித்து, தன்னலக் கைகேயி, கோபம் எனும் கூனியின் சொல்லால் தூண்டப்பட்டு வரம் கேட்க, தவம் எனும் வனவாசம் சென்று, நிஷ்காம்யம் என்கிற குகனுடன் நட்பு கொண்டு, ஆசை எனும் கங்கையைக் கடந்ததை எண்ணிப் பார்த்தான் விபீஷணன்.

மேலும், ஸ்ரீராமன் உறுதி எனும் சித்ரக்கூட மலையிலிருந்து, பரஞானம் அபர ஞானம் எனும் பாதுகைகளைப் பரதனுக்குத் தந்து, விரோதம் மிகுந்த விராதனை வென்று, கருணைக்கு இனமில்லை என்பதை உணர்த்த ஜடாயுவை நேசித்து, மோக நெருப்பெனும் சூர்ப்பணகையைத் தவிர்த்து, ராட்சஸ குண ராவணனால் ஆனந்தமெனும் சீதை அபகரிக்கப்பட, அவளைத் தேடி `அவித்யை' என்ற அயோமுகியை நீக்கி, கவலை எனும் கவந்தனை வென்று, நிர்விகல்பம் எனும் சபரிக்கு மோட்சம் அளித்து, அடங்காமை எனும் வாலியை அடக்கி அழித்து, பரிசுத்தமாகிய சுக்ரீவனுக்குப் பட்டம் கட்டியதையும் எண்ணிச் சிலிர்த்தான் விபீஷணன்.

தொடர்ந்து, மெய்ஞ்ஞானமெனும் அனுமனால், ஆனந்தச் சீதையின் இருப்பிடத்தை அறிந்து, பிறவிப் பெருங்கடலுக்கே அணை கட்டி, துர்க்குணங்கள் எனும் அரக்கர்களை அழித்து, தாமச குணமெனும் கும்பகர்ணனையும் அழித்து, ராட்சஸ குணவானான ராவணனையும் கொன்று, சத்வ குணபூஷணான விபீஷணனுக்குப் பட்டம் கட்டி, ஆனந்தச் சீதையைக் கைப்பற்றி மோட்ச உலகான அயோத்திக்கு ராமன் அரசனாக மூடி சூட்டிக் கொண்டதையும் தரிசித்து மகிழ்ந்தான்.

இங்ஙனம், விபீஷணன் அனைத்தையும் எண்ணி நெக்குருகி நின்றிட, தான் இன்று சக்ரவர்த்தியாக நிற்பதற்குக் காரணமான சகலரையும் எண்ணிப் பார்த்து அவர்களை கௌரவிக்கத் தயாராகியிருந்தான், ஸ்ரீராமன்.

கௌரவத்துக்கு உரியவர்கள் வரிசையாக அழைக்கப்பட்டனர். சுக்ரீவன், ஜாம்பவான், நீலன் என்று வரிசையாக அனைவரையும் அழைத்து கௌரவித்த நிலையில், விபீஷணனும் அழைக்கப்பட்டான். விபீஷணன் குவிந்த கைகளோடு பணிந்த மனதோடு அனைவர் முன்னாலும் வந்து நின்ற நிலையில், ஸ்ரீராமன் சீதை சகிதம் விபீஷணனைப் பார்த்த பார்வையில், ஆயிரம் உட்பொருள். விபீஷணன் பெறப்போகும் மரியாதைக்குரிய பரிசு எதுவாக இருக்கும் என்று எல்லோரிடமும் யூகம்!

அப்போது, பிரணவாகாரப் பெருமாளின் தங்க விமானத்தைச் சுமந்துவந்து அங்கே நிறுத்தினான் அனுமன். அஷ்டரிஷிகளும்கூட அதை எதிர்பார்க் காதவர்கள் போல் முகத்தில் அதிர்ச்சியை எதிரொலித்தனர். விபீஷணன் அங்கே அந்தப் பெருமாளைப் பார்த்தமாத்திரத்தில் சாஷ்டாங்கமாக தரையில் விழுந்து வணங்கினான். அவனது வணக்கத்தை எல்லோரும் கண்ட நிலையில், ராமன் பேசத் தொடங்கினான்.
‘‘என் இஷ்டமித்ர பந்துக்களே... அயோத்தி வாழ் மகா ஜனங்களே! உங்கள் முன் பணிவோடும் பக்தியோடும் காட்சி தரும் ஸ்ரீஸ்ரீ விபீஷணர் லங்காபுரியில் எனக்கு உற்ற துணையாக இருந்தவர். தன் சகோதரனான ராவணனை என் பொருட்டும் தர்மத்தின் பொருட்டும் துணிந்து எதிர்த்து, அதனால் ராவணனால் துரத்திவிடப்பட்ட நிலையில் என்னிடம் சரண் புகுந்தவர்.

ராவண மாயையை எனக்கு அடையாளம் காட்டியதோடு ராவணனுக்கு உரிய தர்மோப தேசமும் செய்தவர். அன்போடும் பாசத்தோடும் விபீஷணர் செய்த முயற்சி ராவணன் வரையில் பலிதமாகவில்லை. அம்போடும் கோபத்தோடும் நான் செய்த முயற்சியே ராவணனை

அடக்கி அழித்தது. அந்த அழிவைக் கண்டு பாசத்தால் ஒருபுறம் துடித்தபோதும், என்பால் உள்ள நேசத் தால் அதை அடக்கிக்கொண்டு, நான் அயோத்திக்கு வெற்றியோடு திரும்புவதற்குப் பெரிதும் காரணமானவர்.

என்னைப் பற்றி சிந்திக்கும்போது, விபீஷணரை எவராலும் தவிர்க்க இயலாது. ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாக இருந்தும் சகோதரர்களிடமிருந்து மாறுபட்டு, விபீஷணர் சர்வகுண முனியாக தன்னைச் செதுக்கிக்கொண்ட செயல் போற்றப் பட வேண்டிய ஒன்று. ஓர் அரசன் எப்படி இருக்க வேண்டும் என்று நீதி நெறிகள் கூறுகின்றனவோ, அப்படி பரிபூரண நற்குணத்தினராய் திகழ்பவர் இவர். இந்த நிலையில் விபீஷணருக்கு ஒரு பெரும் கடமையும் காத்திருக்கிறது. அது யுத்தத்தால் பாழ் பட்டிருக்கும் இலங்கையை புதுப்பிப்பதும் சிறப்பிப்பதுமேயாகும். அதன்பொருட்டு, மனித சக்தியோடு தெய்வ அனுக்கிரகமும் தேவைப்படுகிறது. எந்த மண்ணில் ஆராதனைகளும், வழிபாடுகளும் நிகழ்கிறதோ அங்கே காம, குரோதங்கள் அழிந்து பக்தியும், பக்தியால் புத்தியும் தெளிவு பெறும்.

உடம்பானது உரிய பயிற்சிகளால் உறுதியாவது போல், மனமானது பக்திவழி அதன் அனுஷ்டானங் களால் உறுதியும் ஞானமும் அடையும். இலங்கை யின் இப்போதைய முதல் தேவையும் அதுவே. ராவணனின் கீழ்மையால் இலங்கை பாழானது. என்றாலும் என் பங்கும் அதில் இருப்பதால், அதன் பொருட்டு இலங்கையின் மேன்மைக்கு நான் ஏதாவது செய்ய வேண்டும்.

ஆகவே, இதுநாள் வரை எங்கள் ரவிகுலம் தொழுது வந்த இந்தப் பிரணவாகாரப் பெருமாளை, உத்தம அருள்நிதியாகவும் உகந்த பரிசாகவும் விபீஷணருக்கு அளிக்க விரும்புகிறேன். யாருக்கும் இதில் எந்த ஆட்சேபமும் இருக்காது என்பதோடு இருக்கவும் கூடாது என்றும் விரும்புகிறேன்.”

ராமனின் நெடிய பேச்சும், அதில் வெளிப்பட்ட கருத்துகளும் எல்லோரையும் மௌனிக்கச் செய் தது. விபீஷணனோ மெய்சிலிர்த்துப்

போயிருந்தான். அவன் கண்களில் ஆனந்தப் பனிப்பு!

இந்த ராமன்தான் எத்தனை மேலானவன்? இவனுக்கு இணையாக ஒரு மானிடன் இந்த மண்ணில் இருந்ததில்லை, இனி இருக்கப் போவதுமில்லை. யாருக்கு, எதை, எப்போது, எப்படித் தர வேண்டும் என்பதில் ஒரு கணக்கும் கருணையும் இருக்கின்றன. அவற்றை நூறு சதவிகிதம் ஒருவன் பின்பற்றுவது என்பது, மாயை நிறைந்த இந்த உலகில் இயலாத காரியம்.

சிலர், தங்கள் உயிரையே தர சித்தமாயிருப்பர் - உயிரை அதுபோல் தந்தவர்களும் உண்டு. ஆனால், உயிரினும் மேலானதை, உயிர்களுக்கெல் லாமும் காரணமானதைத் தருவது என்பது எத்தனை பெரிய செயல்?



அதுதான் இப்போது நடந்திருக்கிறது!

ஒன்றைக் கொடுத்துவிட்ட பிறகு அதை தன்னு டையதாக நினைப்பது, கொடுத்ததைக் கெடுத்து விடும் இழிவான செயலாகும். எனவே அந்த அவையில் உள்ளோரும், மிகுந்த சிரமத்துடன் `பிரணவாகாரப் பெருமாள் தங்களுடையவர்' என்ற அந்த எண்ணத்தை மாற்றிக்கொள்ள முற்பட்டனர். இனி, அந்தப் பெருமாளுக்குப் பதிலாக ஸ்ரீராமனையே தங்களின் பெருமானாகக் கருதுவது என்றும் தீர்மானித்தனர்.

அதுவும் சரிதானே? உரியவனே இருக்கும்போது அவன் வரித்தது

இரண்டாம்பட்சமாவது இயல்புதானே?

விபீஷணனுக்கோ ஸ்ரீராமன் தன்னையே பிரணவாகாரப் பெருமாள் வடிவில் ஒப்படைத்து விட்டதுபோல் தோன்றியது. இனி, தன் மண்ணும் அயோத்தி போல் தர்மபுரியாகும் என்ற நம்பிக்கை அவனுக்குள் சுடர்விடத் தொடங்கியது.

அதுவரை அங்கு நடந்ததைக் கண்ட நிலையில் ஏதும் பேசாதிருந்த வசிஷ்ட மகரிஷி புன்னகை யோடு விபீஷணனைப் பார்த்து பேசத் தொடங் கினார்.

``இலங்கை வேந்தனே! நீ பெரும் புண்ணியவான். உனக்குப் பரிசாகத் தரப்பட்டிருக்கும் இந்தப் பெருமாள் விண்ணகத்தே பிரம்மனால் வழிபடப் பட்டவர்.

பின்னர், இம்மண்ணகத்தே ரவிக்குலத்தவரால் வணங்கப்பட்டு, இறுதியாய் ஸ்ரீராமனே வணங்கிய மூர்த்தி; அணு நுட்பம் போல் பல நுட்பம் கொண் டவர். எல்லோரும் இம்மூர்த்தியை தவத்தாலேயே பெற்றனர். நீயோ பரிசாகவே பெற்றுவிட்டாய்!

இதைப் பெறுவதுகூட பெரிதல்ல; உரிய முறையில் பேணுவது மிகப் பெரிது. நீ அதில் கவனமாயிருக்க வேண்டும்.

இல்லாவிட்டால்...?''

**- தொடரும்...**

14 Aug 2018

# ரங்க ராஜ்ஜியம் - 10



ரங்க ராஜ்ஜியம் - 10

இந்திரா சௌந்தர்ராஜன் - ஓவியம்: ம.செ

***விரும்பிநின் றேத்த மாட்டேன் விதியிலேன் மதியொன் றில்லை***
***இரும்புபோல் வலிய நெஞ்சம் இறையிறை யுருகும் வண்ணம்***
***சுரும்பமர் சோலை சூழ்ந்த அரங்கமா கோயில் கொண்ட***
***கரும்பினைக் கண்டு கொண்டேன் கண்ணிணை களிக்கு மாறே.***

*-தொண்டரடிப்பொடியாழ்வார்*

ஸ்ரீராமபிரான், தன்னையே பிரணவாகாரப் பெருமாள் வடிவில் ஒப்படைத்துவிட்டதாக நினைத்துப் பூரிப்புடன் இருந்த விபீஷணனிடம், சூரிய வம்சத்தின் குலகுரு வசிஷ்டர் புன்னகையுடன் பேசத் தொடங்கினார்.

‘`இலங்கை வேந்தனே! நீ பெரும் புண்ணியவான். மற்றவர்கள் தவத்தின் பயனாகப் பெற்ற மூர்த்தியை நீ பரிசாகவே பெற்றுவிட்டாய். இந்த மூர்த்தி யைப் பெறுவது பெரிதல்ல. உரிய முறையில் போற்றி வழிபடவும் வேண்டும். இல்லாவிட்டால்...’’ என்று எச்சரிப்பது போல் கூறிய வசிஷ்டர் சற்றே நிறுத்த, விபீஷணன் கூர்ந்து கேட்கத் தொடங்கினான்.

‘`ஆசார அனுஷ்டானங்கள் துளியும் தவறக் கூடாது. தர்ம சிந்தையோடும் இருக்கவேண்டும். அப்படி இல்லாத பட்சத்தில், இந்தப் பிரணவாகாரம் தன் வழியைத் தானே பார்த்துக்கொண்டுவிடும். இதை நாம் பயன்படுத்தவோ இயக்கவோ முடியாது. இதுவே நம்மைப் பயன்படுத்தி இயக்குகிறது எனும் ஞானமும் மிக முக்கியம்’’ என்று வசிஷ்டர் கூறி முடித்தார். கூடுதலாய் இன்னொன்றையும் கூறினார்.

“விபீஷணச் சக்ரவர்த்தியே! இந்தப் பிரணவாகார விமானத்தை முதலில் சுமந்தவன் கருடன். அடுத்து சுமந்தவன் அனுமன். மூன்றாவதாய் நீ சுமக்க இருக்கிறாய். உன் பொருட்டு எவரும் இதைச் சுமப்பது எளிதல்ல. எந்த ஒரு வினைக்கும் ஒரு பதில் வினை உண்டு என்பதால், இதைச் சுமப்பவருக்கும் ஒரு பதில் வினை உண்டு. அது, நித்யசூரியாய் வைகுண்டத்தில் வாசம் புரிவ தாகும். பாக்கியத்துக்கு உரிய அந்த வினைக்கு நான்கூட இன்னும் தகுதி படைத்தவனாக

ஆனேனா எனத் தெரியவில்லை. எனவே, உனக்குக் கிடைத்த இந்த வாய்ப்பை நீ நன்கு பயன்படுத்திக்கொள். இலங்கைக்குச் சென்று சேரும்வரை இதை நீயே உன் தலையில் சுமந்து நடக்கவேண்டும். உன்னால் இயலுமா?”



வசிஷ்டர் கேட்ட விதமே. ‘அது உன்னால் முடியாது’ என்று கூறுவது போலவும் இருந்தது. விபீஷணனோ அதைக் கேட்டு பதறிப்போனான்.

‘`மாமுனியே! இது என்ன கேள்வி? இயலுமா என்று கேட்டுவிட்டீரே..!

இயன்றாகவேண்டும். யாருக்குக் கிடைக்கும் இப்படி ஒரு பாக்கியம்? என் வரையில் இது பாக்கியம் மட்டுமல்ல... பரிகாரமும் கூட. பாழ்பட்டு கிடக்கும் என் இலங்கை மண்ணை ரட்சிக்கப்போகும் இப்பெருமானை நான் சுமக்காவிட்டால் வேறு யார் சுமப்பார்? வேறு யாரும் முன் வந்தாலும் நான் அதற்குச் சம்மதிக்கமாட்டேன். எப்பாடு பட்டாவது இப்பெருமானை என் சென்னிமேல் வைத்துச் சுமப்பேன். இது சத்தியம்'' என்று விபீஷணன் உணர்ச்சிப் பிரவாகமானான்.

அனைத்தையும் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த ஸ்ரீராமனும் சீதாவும், விபீஷணனை அதன் நிமித்தம் ஆசீர்வதித்தனர். அத்துடன், பூசனைக்குரிய சாளக்ராமக் கற்கள் மற்றும் தீர்த்தப் பாத்திரங்கள், சாற்று நகைகள் கொண்ட ஒரு பெட்டியையும் ஆலயத்து வைதீகர் முன்வந்து ஒப்புவித்தார் (ஆலய கைங்கர்யம் புரிவோரைப் பட்டர்கள் என்று விளிக்கும் ஒரு வழக்கம், விஜய நகர சாம்ராஜ்ஜியம் தோன்றியபிறகே உருவாயிற்று).

பிரணவாகாரப் பெருமாளை விபீஷணன் சுமக்கத் தொடங்கவும் கூட்டம் கோஷமிட்டது. விபீஷணனோடு வந்த அவன் உபகர்த் தர்கள் அந்தப் பெட்டியைத் தங்கள் சென்னிமேல் வைத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட எத்தனித்தனர்.

விபீஷணனைத் தொடர்ந்து சுக்ரீவன், ஜாம்பவான் உள்ளிட் டோரும் அவரவர் ஊருக்குப் புறப்பட் டனர். அவர்களை வழியனுப்பும் சம்பவம் ஒரு விழா போல நடைபெறத் தொடங்கியது. அயோத்தி நகர எல்லை வரை அரசவைப் பிரதி நிதிகளும், ஊர்ஜனங்களும் சென்று வழியனுப்பினர்.
விபீஷணனும் தன் சிரத்தின் மீது பிரணவாகாரப் பெருமாள் விக்கிரகம் இருந்திட, கம்பீரமாய் நடக்கலானான். வீதிமருங்கில் சூழ்ந்திருந்தவர்கள் பிரணவாகாரப் பெருமாள் மேல் மலர்களைத் தூவி கைகூப்பி வணங்கினர். சிலர் விபீஷணனை முறைத்துப் பார்த்தனர். 'நீ பட்டாபிஷேக வைபவத்தில் கலந்துகொள்ள வந்தாயா... இல்லை, எம்பெருமானைக் கவர்ந்து செல்ல வந்தாயா?' என்று மனதுக்குள் கேள்வி கேட்டு முணுமுணுத்தனர்; வெளிப்படையாகக் கேட்கத்

தோன்றினாலும் ஸ்ரீராமனின் நிமித்தம் அதை மனதுக்குள் அடக்கிக்கொண்டனர்.

அதேநேரம், ஓர் அதிசயம் போன்று விண்ணில் வருணனும் மேகம் கொண்டு பந்தலிட்டு, விபீஷ ணன் நடக்கும் வழியெங்கும் இதமான நிழலைப் பரப்பியதுடன், குளிர்ச்சியான பூந்துளிகளையும் தெளித்து தன் பங்குக்கு சேவை செய்தான். சூரியனும் அவ்வப்போது எட்டிப்பார்த்து, தன் குல தெய்வத்தை வணங்கி தனது பக்தி உணர்வைக் காட்டினான். வாயுவும் இதமாக வீசி விபீஷணன் மேனியைக் குளிர்வித்தான். விண்ணவர்களில் மற்றவர்களும் பூவுலகில் நிகழும் அந்தக் காட்சியை கண்கொட்டாதபடி பார்த்து மகிழ்ந்திருந்தனர்!

வைகுண்டத்தில் எம்பெருமாட்டியிடம் மட்டும் சிந்தனை கலந்த தோற்றம்! எம்பெருமான் விடுவாரா என்ன?

“லட்சுமி! எது குறித்து இத்தகைய சிந்தனை?”

“நீங்கள் நிகழ்த்தும் நாடகம் குறித்துதான்...”

“நீ எதைச் சொல்கிறாய்?”

“அயோத்தியை விட்டுப் பிரிந்து புறப்பட்டு விட்டீர்களே... அதைச் சொல்கிறேன்.”

“அங்கேதான் நான் ராமனாக நடமாடிக் கொண்டே இருக்கிறேனே..?"

“அப்படியானால், என்னைச் சிறைப்பிடித்து சித்ரவதை செய்த இலங்கைக்குச் செல்வதில்தான் இப்போது உங்களுக்கு மகிழ்ச்சியா?”

“அதில் தவறென்ன... காயத்துக்குத்தானே மருந்து தேவை?”

“மருந்துக்கு ஒரு விபீஷணன் போதுமா?”

“போதாதென்று கருதுகிறாயா?”

“தாங்கள் அறியாததா? அந்த மண்ணை நினைத் தாலே என்

சிறைப்பாடல்லவா நினைவுக்கு வருகிறது?"

"லட்சுமி... கடலில் விளைந்தவள் நீ. நிலம் கோதக் கிடைத்ததால் 'கோதை' என்றானவள். அதனாலோ என்னவோ அந்த மண் மக்கள் போலவே நீயும் பேசுகிறாய். உனக்குள்ளுமா சாமான்யப் பெண் பாவனை?"

"நான் எனக்காக எங்கே பேசுகிறேன். என்னை யொத்த பெண்ணினம் எப்படிச் சிந்திக்கும் என்றெண்ணிப் பேசுகிறேன்."

"முடிவாக என்ன சொல்ல விழைகிறாய்?"

"நான் சொல்ல என்ன இருக்கிறது. நீங்கள்தான் சிலருக்கு வாக்குக் கொடுத்துள்ளீர்கள். அதனை எண்ணிப் பாருங்கள்."

"சோழ அரசன் தர்மவர்மாவையும், நீலி வனத்து ரிஷிகளையும் நீ எனக்கு ஞாபகப்படுத்து கிறாயா... நான் அவர்களை மறக்கவில்லை..."

"அவர்களை மறக்காத நிலையில், விபீஷணன் வசம் ஏன் சேர்ந்தீர்கள்? அதுதான் புரியவில்லை..."



"முதலில் பட்சியாகிய கருடன், அடுத்து விலங் காகிய அனுமன் மூன்றாவதாய் மனிதனாகிய விபீஷணன் என்று மூவர் சென்னிகளும் பட விரும்பினேன். பட்டுவிட்டன! தனது தவத்தின் போது அண்ணன் ராவணனைப் போல், 'அது வேண்டும், இது வேண்டும்' என்று விபீஷணன்

எங்கே கேட்டான்? என்னை மறவாத உள்ளம் வேண்டும் என்று மட்டுமே வேண்டினான். அப்படிப்பட்ட அவனையும் எவரும் மறந்து விடக் கூடாதல்லவா... அதற்காகவே அவனுக்கு இந்த வாய்ப்பு."

"நீங்கள் சொல்லச் சொல்லத்தான் நுட்பங்கள் புரிகின்றன. உயிரினங்களில் வேற்றுமை எனக் கில்லை என்பதை கருடன், அனுமன், விபீஷணன் மூலம் உணர்த்துவதும் புரிகிறது. அதேநேரம் சோழனையும் ரிஷிகளையும் எப்படித் திருப்திப் படுத்துவீர்கள்?

"என் திருப்திதானே அவர்கள் திருப்தி. அவர்கள் வேறு நான் வேறா என்ன?"

"அப்படியானால் விபீஷணனோடு செல்வதில் தான் உங்களுக்குத் திருப்தியா? இலங்கையில் கோயில் கொள்வதுதான் உங்கள் விருப்பமா?"

"அது கூடாது என்பது போல் நீ பேசுவது புரிகிறது. ஏன் கூடாது என்பதற்குச் சரியான பதிலைச் சொல். நான் சிறைப்பட்ட இடம், காயப் பட்ட இடம் என்றெல்லாம் சராசரியாகப் பேசாதே."

"பிரபோ... நான் பேசுவதெல்லாம் என் பேச்சா என்ன? என் பேச்சு மூச்சு என்று எல்லாமே நீங்கள் தானே? அதனடிப்படையில் கூறுகிறேன். இலங்கை யில் கோயில் கொண்டால், வேதியர் ஆராதனைகள் எவ்வாறு நிகழும்? அவர்கள் அனுமன் போல் கடல் கடந்தல்லவா வரவேண்டும். அது வேதியர்க்குத் தோஷமாகிவிடுமே... தோஷமுள்ள வழிபாடுகள் உரிய பயனைத் தராதே. ஒருவேளை அதற்கென ஒரு பரிகாரத்தை தாங்கள் உருவாக் கினாலும், ஒரு சிறு தீவா உங்களின் முதல் கோயிலாய் ஆவது?"

- லட்சுமிதேவி உணர்ச்சி மேலிடக் கேட்டு முடிக்கவும் பெருமாளும் பதிலுக்குப் புன்னகைத் தவராக "இனி என்ன நடக்கப் போகிறது என்று பார்..." என்றார். லட்சுமிதேவியும் ``ஆவலாயிருக் கிறேன்'' என்றார்!

**சோ**ழ மண்டலம்! உறையூர்ப் பெருநகரம். அரண்மனையில்

உறக்கத்திலிருந்த சோழ அரசன் தர்மவர்மாவின் கனவில் ஒரு கருட பட்சியானது காவிரியின்மிசை வட்டமடித்துக் கொண்டே இருந்தது. அதன் கால்களில் ஒரு பூமாலை!

அந்தப் பூமாலை அதன் கால்களில் இருந்தும் நழுவி, கீழே காவிரி இருகூறாகப் பாய்ந்த நிலையில் நடுமையில் இருக்கும் நிலப்பரப்பின் ஒரு பகுதி மேல் வந்தும் விழுந்தது. கனவும் கலைந்து போனது. எழுந்து அமர்ந்த தர்மவர்மா சிறிது சிந்தனைக்குப் பின் மந்திரிப்பிரதானிகளை அழைத்து, தான் கண்ட கனவு குறித்துக் கூறினான்.

“அரசே இது ஒரு நல்ல கனவுதான். கருடன் கனவில் வருவது மிக விசேஷம். ஏதோ நல்லது நடக்கப்போவதாக நான் கருதுகிறேன்” என்றார் ஒருவர்.

“ஆம்! இது ஒரு சுபசகுனம். கருட புருஷர் எம்பெருமானின் ஆப்த தூதர். எனவே, எம்பெருமான் தொடர்பான ஒரு நிகழ்வு நடக்கப் போவதாகவும் கருதலாம்” என்றார் இன்னொருவர்.

அதற்கேற்ப சற்றைக்கெல்லாம் ஒற்றன் ஒருவன் ஒரு செய்தியுடன் வந்து நின்றான்.

“அரசே! லங்காதிபதி ஸ்ரீ ஸ்ரீ விபீஷணச் சக்கரவர்த்தி, அயோத்தி நகரிலிருந்து பிரணவா காரப் பெருமாள் சகிதம், காவிரி மார்க்கத்தில் வந்து கொண்டிருக்கிறாராம். நம் சோழ தேசம் கடந்து பாண்டிய நாடு வழியாக, சேதுப்பாலம் எழுப்பிய கடற்பகுதிக்குச் சென்று, அங்கிருந்து கடல் மார்க்கமாக இலங்கையை அடைவது அவரது பயணத்திட்டமாம்.”

“அப்படியா! பிரணவாகாரப் பெருமாள் சகிதம் வருகிறாரா... நன்றாகத் தெரியுமா?”

“செய்தியில் பிழையேதும் இல்லை அரசே. இன்று மதியம் அவர்கள் கருவூரைக் கடந்துவிடக் கூடும். அதன்படி பார்த்தால், மாலைக்குள் அவர்கள் நம் சோழ தேசத்து காவிரிப்படுகைக்கு எழுந்தருளக் கூடும்.”

ஒற்றனின் செய்தி தர்மவர்மாவை ஆச்சர்யத்தில் மட்டுமல்ல, சலனத்திலும் ஆழ்த்தியது.

“எதற்காக இந்தச் சலனம் அரசே?” - என்று மந்திரி ஒருவரும் கேட்டார்.

“நான் நமக்கென விரும்பிய பிரணவாகாரப் பெருமாள் இலங்கைக்குச் செல்கிறார் என்பதை ஏனோ என்னால் ஜீரணிக்க முடியவில்லை. அன்று நான் புரிந்த தவத்துக்கு, பிரணவாகாரப் பெருமாளின் விஜயம் மட்டும்தானா பரிசு?”

‘`கவலை வேண்டாம் மன்னா. எம்பெருமான் சித்தத்தை உணரும் வல்லமை நம்மில் ஒருவருக்கும் கிடையாது. அதே தருணம், தாங்கள் கண்ட கனவின்படி பார்த்தால், எம்பெருமான் இங்கே வருவதையே தங்களுக்கு உணர்த்தியுள்ளார். அநேகமாக கருடன் மாலையைப் போட்ட இடம் அவர் எழுந்தருளப் போகும் இடமாகவும் இருக்க லாம் அல்லவா?" - இப்படி அவர்கள் பேசிக்கொண்டனர்.

அதற்கேற்பவே எல்லாமும் நடந்தன. காவிரி ஆற்றில் ஒரு பெரும் படகில் பயணித்தபடி வந்த விபீஷணன், ஆற்றோரமாக சோழ மக்கள் நின்று பார்ப்பதை அறிந்து, படகைக் கரையோரம் நிறுத்தக் கட்டளையிட்டான். பின்னர், சென்னியின் மீது பிரணவாகாரப் பெருமாளை சுமந்த நிலையிலேயே தரையிறங்கியவன், தொடர்ந்து நடந்தான். சகாக்கள் பின்தொடர்ந்தனர். விபீஷணனோடு எப்போதும் உற்ற துணை யாயிருக்கும் மார்கரிஷி என்பவர், ‘`அரசே! இன்றைய நித்ய பூசைக்கும் நாளைய பூசனைகளுக்கும் இந்த இடமே மிக உகந்த இடம். அனைவரும் நீராடிட காவிரி ஆறு உள்ளது. உண்டு பசியாறிட அருகிலேயே உறையூர் நகரும் உள்ளது. எனவே, நாம் இங்கே தங்குவதே சாலச் சிறந்தது” என்றார்.

விபீஷணனுக்கும் பயணக் களைப்பு! உடனே, ‘சரி’ என்றான். அப்படியே தன் சிரசில் இருக்கும் பெருமாளை இறக்கிவைக்க உகந்த இடத்தைப் பார்த்தபோது, அற்புதமான ஓரிடம் கண்ணில் பட்டது.

*- தொடரும்...*



**உ**யிர்கள் அனைத்திலும் வெறுப்பின்றி, நட்பும் கருணையும் உடையவனாக, தன்னடக்கம் உடையவனாக, திட சித்தம் உள்ளவனாக, என்னிடத்தில் மனம் புத்தியைச் சமர்ப்பித்தவனாக எவன் பக்தனாகிறானோ... அவனே எனக்குப் பிரியமானவன்.

*- பகவத் கீதை*

***வம்பிலாம் கூந்தல் மண்டோதரி காதலன் வான்புக***
***அம்பு தன்னால் முனிந்த அழகனிட மென்பரால்***
***உம்பர் கோனு முலகேழும் வந்தீண்டி வணங்கும், நல்***
***செம்பொ னாரும் மதில்சூழ்ந் தழகார்தென் னரங்கமே!***

*- பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார்.*

தர்மவர்மா கனவில் கண்டபடியே அந்தப் புண்ணிய பூமியில் பூமாலை ஒன்று விழுந்துகிடக்க, அதன் நடுவில் கருடனும் அமர்ந்திருந்தார். அந்தக் காட்சி யைக் கண்ட விபீஷணனுக்கு, அதைவிடச் சிறப்பான வேறோர் இடம் இருக்க முடியாது என்ற எண்ணம் ஏற்பட்டது.

அதேநேரம், தர்மவர்மாவும் பூர்ணகும்பம் சகிதம் வந்து நின்றான். பிரணவாகாரத்தையும், தரையில் கிடக்கும் மலர் மாலையையும், விண்ணேகிப் பறக்கும் கருடனையும் கண்டு மெய்சிலிர்த்தான்; அவன் கனவு நனவாகி விட்டதே! அந்தச் சிலிர்ப்பு விலகாமல் விபீஷணனை வணங்கி நின்றான்.

“சோழ சாம்ராஜ்ஜியாதிபதிக்கு என் வந்தனங்கள்” என்று அவனுக்குப் பதில் வந்தனம் தெரிவித்தான் விபீஷணன். தொடர்ந்து தர்மவர்மா பேசினான்.

“லங்காதிபதியே, தங்கள் வரவு நல்வரவாகுக. சற்று முன்தான் ஒரு கனவு கண்டேன். கனவில், ஒரு கருடப் பட்சி மாலை ஒன்றை இந்தக் காவிரிக்கரை தீரத்தில் போட்டது. அதைத் தொடர்ந்து தங்களின் வருகைச் செய்தி ஒற்றர்கள் மூலம் கிடைத்தது.

மகாரதராகிய தசரதர் புத்ர காமேஷ்டி யாகம் செய்தபோது, நானும் அயோத்திக்கு வந்திருந்தேன். அங்கே இந்தப் பிரணவாகாரப் பெருமாளை தரிசித்தபின், என்னை இவர் பெரிதும் ஆட்கொண்டுவிட்டார். இவர் பொருட்டு நான் தவசியாகிப்போனேன். எனது தவத்தின் பயனாகவே இன்று இவர் இங்கு எழுந்தருளியுள்ளார். அதற்குக் காரணமான உங்களுக்கு என் நன்றிகள் உரித்தாகட்டும். அப்படியே,

தாங்கள் எனது அரண்மனைக்கு வந்து ஓய்வெடுக்கவும் வேண்டுகிறேன்'' என்றான்.



தர்மவர்மாவின் அன்பைக் கண்டு உச்சிக் குளிர்ந்தான் விபீஷணன். நெடுந்தூரம் பயணித்ததால் சோர்வடைந்திருந்தான் அவன். மேனியெங்கும் ரோமங்கள் பெருகி வளர்ந்திருக்க, கிட்டத்தட்ட ஒரு ரிஷியைப் போலவே காட்சி தந்தான் விபீஷணன்.

“சோழாதிபதியே! உனது உபசரணைக்கு நன்றி. நான் இப்போது அரசன் இல்லை. இந்தப் பிரணவாகாரத்தின் தொண்டன். அதனால், உன்னோடு அரண்மனைக்கு வந்து விருந்துண்ணவோ, வேறு உபசரணைக்கோ நான் ஆட்படக்கூடாது. அது அபசாரம். எனவே என்னை மன்னிப்பாயாக.

அத்துடன், இன்றைய நித்ய கர்மானுஷ்டா னங்களும் பாக்கி உள்ளன. அவற்றை நான் நதியின் மிசை நீராடிவிட்டு வந்து செய்தாக வேண்டும்.

பிரம்மதேவரே வணங்கிய மூர்த்தம் தனது பயணத்தில் வழிபாட்டை இழந்துவிட்டது என்றோ, இல்லை... ஏதோ பெயரளவிலான பூஜைக்கு ஆளானதென்றோ எவரும் கூறிவிடக் கூடாது" என்று பயத்தோடும் பொறுப்போடும் பேசிய விபீஷணன், நீராடக் கிளம்பிச் சென்றான். நதி நீரில் மூழ்கி எழுந்தான்.

அவன் உதவியாளர்கள் ஓடி வந்து மாற்று உத்தரீயத்தை அளித்தார்கள். அதை அணிந்து கொண்டவனாக பூஜைக்கும் தயாரானான் விபீஷணன். அவனோடு சேர்ந்து நீராடிய மார்க ரிஷியும் முறைப்படியான பூஜைகளில் அவனை ஈடுபடுத்தத் தொடங்கினார்.

தர்மவர்மாவோ, தனக்கு இதுபோல் ஒரு பாக்கியம் கிடைக்கவில்லையே என்கிற ஏக்கத்துடன் அந்த பூஜையைக் கண்டான். அவனோடு சேர்ந்து உறையூர் வாழ் மக்களும் அந்த பூஜையை தரிசித்தனர். கருடன் விண்ணில் பறந்தபடியே இருந்தான். கருடனின் பார்வையில், கீழே காவிரி ஆறு ஒரு மாலை போல் ஓடிக்கொண்டிருப்பது தெரிந்தது. பெருமாளின் பார்வை ஒரு நேர்க் கோட்டில் தென் திசையிலுள்ள இலங்கையை இங்கிருந்தே பார்ப்பது போலவும் இருந்தது.

கோயிலில்லா, கொத்தளங்களில்லா, மதிலில்லா, மாடமில்லா சந்நிதி மட்டும் கொண்ட ஒரு க்ஷேத்திரமாகக் கருடனின் பார்வையில் பதிவான அந்தக் காட்சிதான் திருவரங்கத் தோற்றத்தின் முதல் காட்சி!

அப்போது, நீலி வனத்து ரிஷிகளும் தாலப்ய முனிவரும் பிரணவாகாரப் பெருமாளை வணங்கி மகிழ்ந்திட வேண்டி, தன் சீடர் குழாமுடன் வந்து கொண்டிருந்தனர். மொத்தத்தில் அந்தச் சோழ தேசத்து காவிரிக்கரைப் பகுதியானது, ஜன சமுத்திரத்தாலும் சூழப்பட்டது.



காவிரி மையம். அந்த மையத்தில் பிரணவாகாரப் பெருமாளின் திருக்கோலம், இருமருங்கிலும் காவிரியின் கலகலவென்ற பாய்ச்சல், மீதமுள்ள அந்தத் தீவு முழுக்க திரும்பின பக்கமெல்லாம் மனிதக் கூட்டம். குறிப்பாக ஒருபுறம் சோழன் தர்மவர்மனும் அவன் சகாக்களும், மறுபுறம் நீலிவனத்து ரிஷிகளும் அவர்களின் தொண்டர் குழாமும் என்று அந்த காவிரித் தீவு ஒரு குறுநாடுபோல் பரபரப்போடு காணப்பட்டது.

வழிபாட்டுக்குப் பிறகு, விபீஷணனின் கைகளைப் பிடித்துக் கொண்டு `சில நாட்களாவது இங்கே தங்கித்தான் செல்லவேண்டும்' என்று தர்மவர்மன் வேண்டிக்கொள்ள, விபீஷணனும் சம்மதித்தான்.

அதனைத் தொடர்ந்து நீலிவனத்து ரிஷிகள், ``ஒரு பிரம்மோற்சவத்தை இங்கே நாம் நிகழ்த் தலாமே'' என்றனர் முதலில். பிறகு அவர்களே, ``பிரம்மோற்சவம் என்பது நிலையாகக் குடிகொண்ட பெருமாளுக்கே சாத்தியம். இந்தப் பெருமாள் யாத்திரையில் இருப்பவர். எனவே, பிரம்மோற்சவத்துக்கு இணையான ஓர் உற்சவத்தை நிகழ்த்துவோம்'' என்றனர்.

அதைக் கேட்டு விபீஷணன் பூரித்துப் போனான். உற்சவமும் தொடங்கியது. வேக மாகப் பந்தலிட்டு அன்னக்கூடம் அமைத்து, வேள்விச்சாலையும் உருவானது. வேள்விக்குத் தேவைப்படும் சகலத்தையும் சோழ தேசத்தின் கைங்கர்யமாக வாரி வழங்கினான் தர்மவர்மா. அதைத் தொடர்ந்து சகல நிகழ்வுகளும் ஏழு நாள்கள் நடைபெற்று நிறைவுக்கு வந்தன. விபீஷணனும் தனது யாத்திரையைத் தொடங் கத் தயாரானான்.

பிரணவாகாரத்துடன் அவன் புறப்படப் போவதை எண்ணி மனம் கலங்கினான் தர்மவர்மா. மனதுக்குள் 'எம்பெருமானே... இப்படி ஏழே ஏழு நாள்கள் மட்டும் இங்கே நீங்கள் தங்கிச் செல்லவா நான் அன்று அத்தனை கடும் தவம் புரிந்தேன். இந்த நீலிவனத்து முனிவர்களும்கூட என்னைப் போல் தவம் புரிந்தனரே... தவத்துக்குக் காலத்தே பலன் தருவதாகக் கூறிவிட்டு, இப்படிப் பிரிந்து செல்வது தகுமா. நாவல (பாரத) தேசத்தின் பாதம் போன்றதல்லவா இந்தத் தென்னகம். திருவடி காட்டி அறிதுயில் கொண்டிருக்கும் உமக்குப் பாத பாகம் பொருத்தமானதல்லவா. இதைவிடுத்து கண்ணீர்த் துளி வடிவிலான இலங்கைக்குப் போய் நீர் கோயில் கொள்வதால், பெரிதாய் ஆகப்போவதென்ன. இரக்க மனம் கொண்ட எங்களையெல்லாம் விட்டு, அரக்க மனம் கொண்ட மண்ணுக்கா நீ செல்வது' - என்று தர்மவர்மாவுக்குள் ஏராளமான கேள்விகள்!

இப்படி, தர்மவர்மாவின் மனம் அலைபாய்ந்து கொண்டிருந்தபோதுதான் அந்த அதிசயம் அரங்கேறத் தொடங்கியது.

எவ்வளவு முயன்றும் விபீஷணனாலோ, அவன் சகாக்களாலோ, பிரணவாகாரப் பெருமாளை அங்கிருந்து நகர்த்த முடியவில்லை. விபீஷணன் களைத்துப்போய் அமர்ந்ததோடு, விண்ணைப் பார்த்து, ``எம்பெருமானே! இதென்ன சோதனை... ஏன் இப்படி அசைய மறுக்கிறீர்'' என்று கேட்டான். அப்போது விண்மிசை ஓர் அசரீரி ஒலிக்கத் தொடங்கியது.

``விபீஷணா! யாம் இனி இக்காவிரி சூழ் மையத்திலேயே இருப்போம். காலமெல்லாம் இங்கிருந்துகொண்டே உலகத்தவரை ரட்சிப் போம். இந்த மகத்தான செயலைச் செய்த உன்னையும் ரட்சித்தோம். நீ பெற்ற பூத உடலுக்கான காலம் முடியும் தறுவாயில், நீ எம்மை அடைவாய். அதன்பிறகு, உனக்கு மறுபிறப்பு இல்லை. இவ்வாறு யாம் கூறுவதால், உனது இலங்கையை யாம் புறக்கணித்ததாய் பொருளில்லை. என் நேரிய பார்வை படும் ஒரு நிலப்பரப்பாய் அது திகழும். மூன்றுவிதமான தீட்சைகளில் இலகுவானது நேத்ர தீட்சை. அதற்குரிய நாடாக உன் இலங்கை திகழட்டும். வருத்தங்களின்றி நீ உனது பயணத்தைத் தொடங்கு. யாம் கோயில் கொண்ட இந்தத் தலம் உள்ளவரை நீயும் சிந்திக்கப்படுவாய்''

தர்மவர்மாவைக் குதூகலிக்கச் செய்த அந்த அசரீரி தொடர்ந்தது...

“நீலிவனத்து முனிகளே! மாண்புமிக்க சோழ மன்னனே! உங்கள் பக்தி உன்னதமானது. அதன் பொருட்டு மாத்திரமன்றி, இந்தக் காவிரியின் பொருட்டும் யாம் இங்குக் கோயில்கொள்ள உள்ளோம். `நதம்' என்றால் காத்தல் என்றொரு பொருள் உண்டு. இதிலிருந்தே `நதி' என்ற சொல் உண்டானது. நதிகளே உலகிலுள்ள உயிர்களை உணவளித்துக் காக்கின்றன. உச்சியில் தோன்றி, சமதளத்தில் நடந்து, ஆழ்கடலில் கலந்து, மீண்டும் ஆவியாகி, மேகமாகி, மழையாகின்றன. ஆறு வகை செயல்பாடுகளைக் கொண்டதால், ஆறு என்றும் அழைக்கப்படும் அந்த நதிகளில், கங்கைக்கு என் பாத சம்பந்தமிருப்பதால், சகல

பாவங்களையும் போக்கும் தன்மை கொண்டு மிளிர்கிறாள்.

தனக்கும் அதுபோல் ஒரு பெருமை வேண்டும் என்று காவிரி ஒரு காலத்தில் என்னை எண்ணித் தவம் செய்தாள். `கங்கைக்குப் பாதங்களைத் தந்த நான், உன் பொருட்டு தேகத்தையே தருவேன்' என்று அன்று நான் தந்த வரத்தின்படி இன்று இங்கே கோயில்கொண்டுவிட்டேன்.

இன்று முதல் காவிரிக்கும் கங்கைக்கு நிகரான பெருமையும் வளமையும் உண்டாகட்டும். காவிரிசூழ் புனலரங்கமாய் இந்தத் தலமும் திகழட்டும். உயிர்களின் போக்கில் மனித வாழ்வின் தன்மை, மேன்மை, கேண்மைகளை நானே ஞானியர் வடிவில் வந்து உணர்த்துவேன். அதற்கேற்ப விண்ணகத்துப் பிரணவாகாரம் மண்ணகத்தே மிளிரட்டும். அனைவர்க்கும் நல்லாசிகள்" - என்று அந்த அசரீரி முடிந்தது.

அதைக் கேட்டு ரிஷிகளும் மன்னனும் பூரித்தனர்.

ஆதிகாலத்தில், காவிரி குடகில் தோன்றி தென்னாட்டில் தஞ்சைக்கருகில் பெரும்பள்ளம் எனும் ஊர் வரை வந்து, பின்னர் பாதாள நதியாகப் பூமிக்குள் பாய்ந்து மறைபவளாகவே இருந்தாள். இன்றுபோல் தஞ்சையைச் செழிக்கச் செய்து, பூம்புகாரில் கடலில் கலப்பவளாகக் காவிரி அன்று இல்லை.

ஏரகண்டர் எனும் முனிவர் ஒருவரின் தியாகத்தாலும், தர்மவர்மாவுக்குப் பின் தோன்றிய சோழ அரசன் ஒருவனாலும்தான் காவிரி தஞ்சையில் பாய்ந்து கழனிகளைச் செழிக்கச் செய்தாள்.
அது ஓர் ஆச்சர்யமான வரலாறு!

*- தொடரும்...*

11 Sep 2018

# ரங்க ராஜ்ஜியம் - 12



ரங்க ராஜ்ஜியம் - 12

இந்திரா சௌந்தர்ராஜன் - படம்: என்.ஜி.மணிகண்டன்

சோழ தேசத்தின் ஒரு பாதியோடு பாதாள நதியாகிவிடும் காவிரியை எண்ணி சோழமன்னன் ஒரு நாள் வெகு நேரம் சிந்தித்தான். 'பாயும் புனல் இப்படியா பாதாளத்தில் விழுந்து பாழாகவேண்டும்? சமுத்திர சம்பந்தம் இல்லாத நதிகள் பாவத்தைப் போக்கும் சக்தியற்றவையாகி விடுகின்றன. சமுத்திரக் கலப்பின்போதுதான் அவை பெரும் சக்தி படைத்தவையாகின்றன. எனவே, காவிரி குறித்து யாது செய்வது ' என்று எண்ணியவன், கொட்டையூர் எனும் ஆமணக்குச் செடி விளையும் ஊரில், ஓர் ஆமணக்குச் செடியின் அருகில் தவம் செய்யும் ஏரகண்டரிடம் சரண் புகுந்தான்.

ஏரகண்டர் அரசனின் பொதுநல நோக்கை எண்ணிப் பூரித்தார். ``ஓர் அரசன் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு நல் உதாரணம் நீ'' என்றவர் தொடர்ந்து, ``காவிரியின் கணவனான அகத்தியரும் என் போல் ஒரு முனியே. எனவே, அவரை நாடிச் சென்று இதற்கொரு விடையைக் கண்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு, அகத்தியர் தவம் செய்யும் பொதிகைமலை நோக்கிப் புறப்பட்டார்.

அங்கே அகத்தியரை தரிசித்து, ``காவிரி சோழ மண்டலம் முழுக்க பாய்ந்திட உதவவேண்டும்'' என்றார். அகத்தியர் அதை எண்ணி மகிழ்ந்தாலும் “மண்மிசை ஒரு நதியைப் பெற நாடோ இல்லை ஊரோ... அவை உரிய பாக்கியம் செய்திருக்க வேண்டும்" என்றார்.

“மண்கூடவா பாக்கியம் செய்திருக்க வேண் டும்?” என்ற ஏரகண்டர் கேள்வி எழுப்ப, பதில் சொன்னார் அகத்தியர்.

``மண்ணே பிரதானம். மனிதன் பின்னேதான். ஒரு மனிதன் தனது வாழ்நாளில் ஒருமுறைதான் மண்ணைக் காண்கிறான். ஆனால் மண்ணோ பலகோடி மனித வாழ்வை அனுதினமும் பார்த்த படி உள்ளது. எனவே, மண்ணை மலிவாகக் கருதி விடாதே. அதிலிருந்தே பசிக்கான உணவும் கிடைக்கிறது” என்றார்.



அத்துடன், ``மண்ணுக்கான மதிப்பு அதன்மேல் வாழும் மனிதர்களாலும் உருவாகும். குறிப்பாக, தியாகிகள் வாழும் மண்ணில் நன்மைகள் விரைந்து ஏற்படும். எனவே, சோழன் தன் நிலத்தில் காவிரி பாய விரும்பினால், அவள் விரும்பும் ஒரு பெரும் தியாகத்தைச் செய்யத் தயாராக இருக்க வேண்டும். அப்படிச் செய்தால் காவிரி பாய்ந்து மண்ணும் செழிப்புறும்'' என்றார்.

ஏரகண்டர் அதைக் கேட்டு ஒரு முடிவுக்கு வந்தார். சோழ அரசனுக்குப் பதில் தாமே பெரும் தியாகத்தைச் செய்வதென முதலில் தீர்மானித்தார். சோழன் இதற்கு முதலில் சம்மதிக்கவில்லை. ஏரகண்டர் அவனைச் சமாதானம் செய்தார். பின்னர், `பெரும் பள்ளம்' எனும் பகுதியில் பாதாளத்தில் காவிரி பாயும் இடத்தில் போய், காவிரியை மனதாரப் பிரார்த்தித்துக்கொண்டு தன் உயிரைத் தரும் விதமாகப் பள்ளத்து நீருக்குள் குதித்துவிட்டார்!

இதைக் காவிரி சற்றும் எதிர்பார்க்கவில்லை. கொஞ்சமும் சுயநலமில்லாமல் பிறர் நலன் கருதி உயிரை மாய்த்துக்கொள்ளத் துணிந்த ஏரகண்ட ரின் மரணத்துக்கு, தான் காரணமாகிவிடக் கூடாது என்று கருதியவள், உள்ளே குதித்த முனிவரை வெளியேற்றும் நோக்குடன் திரும்பிப் பாய்ந்து, மண்மேல் அவரைத் தள்ளிவிட்டு ஓடத் தொடங்கினாள். ஏரகண்டரும் பிழைத்து காவிரி யும் சோழ நாட்டுக்கு முழுமையாய்க் கிடைத்தாள். அதன்பின் காவிரி, தஞ்சை மண்டலம் முழுக்கப் பாய்ந்து சமுத்திர ராஜனுடன் இணைந்து கரைந் தாள். இதனால் உச்சம், மத்திமம், ஆழம் எனும் மூன்றும் கொண்டவளாக விளங்கினாள்.

மலையில் விளைவதால் உச்சமும், நிலத்தில் தவழ்வதால் மத்திமமும், கடலில் கலப்பதால் ஆழமும் அவளுக்கு ஏற்பட்டது. அதன் காரண மான பெரும் விசைப்பாடே அவளுக்குப் புனிதத் தன்மையையும் ஏற்படுத்திற்று. எல்லாம் பிரணவாகாரம் காவிரித் தீவில் கோயில் கொள்ளத் தொடங்கியதால்தான் என்றும் கூறலாம்.

தர்மவர்மன் அதன்பின் பிரணவாகாரப் பெருமானுக்கு ஏற்ற ஒரு கோயிலைக் கட்டத் தீர்மானித்தான். அவனது முயற்சிக்கு நீலிவனத்து ரிஷிகள் உதவி செய்யத் தொடங்கினர்.

எந்த ஓர் ஆலயமும் மூன்றுவித சிறப்போடு இருத்தல் அவசியம். அதில் முதலானது மூர்த்தி. அடுத்தது தீர்த்தம். மூன்றாவது விருட்சம். இதில் மூர்த்தியின் சிறப்பைச் சொல்ல எந்த மொழி களிலும் சொற்களில்லை. எம்பெருமானே தன்னைச் சிலாரூபமாக்கித் தந்த சிறப்பு கொண் டது. தீர்த்தச் சிறப்புக்குக் காவிரி ஒருபுறம் இருந் தாலும், தீர்த்தக்குளங்களும் வேண்டுமே!

ஓடும் நதியில் நாம் நம்முடைய கர்மங்களைத் தொலைக்க, நதி கடலில் சேர்ந்து இறுதியாக விண்ணை அடையும். குளங்களே அருள்கதிர்களை தன்னுள் மூழ்குபவர்களுக்கு அள்ளித் தரும். இதனாலேயே தீர்த்தவாரிகள் குளங்களில் நிகழ்த்தப்படுகின்றன. விடுவதற்கு ஆறு எனில், பெறுவது குளத்தில்தான். எனவே,

பிரணவாகாரப் பெருமாளான அரங்கன் ஆலயத்துக்கென அருள்மிகுந்த குளங்களை உருவாக்க முதலில் ஆலோசனை கூறினர்.

அதற்கேற்ப ஆலயம் அமைந்த இடத்துக்கு அருகில் இயற்கையாகவே ஒரு குளம் சந்திர புஷ்கரணியாக விளங்கிற்று. சந்திரபுஷ்கரணி என்றால் மூழ்குபவர்க்கு மன அமைதியும் தெளிவும் தரும் குளம் என்று பொருள். அந்தக் குளத்தை மையமாகக் கொண்டு எட்டுத் திசை களிலும் எட்டு திருக்குளங்களை தர்மவர்மன் உருவாக்கினான்.



வில்வ தீர்த்தம், நாவல் தீர்த்தம், அரசு தீர்த்தம், புன்னை தீர்த்தம், மகிழ தீர்த்தம், புரசு தீர்த்தம், கடம்ப தீர்த்தம், மா தீர்த்தம் என எட்டு விருட்சங்

களின் பெயர்களையும் சுவைகளின் குணங் களையும் கொண்ட திருக்குளங்கள் உருவாயின. வில்வ தீர்த்தம் ஒருவருக்குச் செல்வம் தரும்; நாவல் தீர்த்தம் நோயகற்றும்; அரசு பிள்ளைப்பேறு தரும்; புன்னை மங்கலங்கள் எல்லாம் தரும்; மகிழ தீர்த்தம் புகழைத் தரும்; புரசு ஞானம் தரும்; கடம்பம் உறுதியான தன்மைகளைத் தரும்; மா தீர்த்தம் சகல சௌபாக்கியங்களையும் தரும்.

இந்த எட்டு தீர்த்தங்களிலும் நீராடி, நிறைவாக சந்திரபுஷ்கரணியிலும் நீராடி பிரணவாகாரப் பெருமாளை வழிபட, பிறப்பின் நோக்கம் தெளிவாகி, அவரின் திருவடி நிழலில் அகல மாட்டாத இடம் கிடைக்கும்.

இந்தத் தீர்த்தங்களை உருவாக்கும்போதே குளக் கரையில் அதற்கான விருட்சங்களும் இடம் பெற்று தழைத்து வளர்ந்ததோடு, நவசக்தி தரும் ஒரு க்ஷேத்திரமாக திருவரங்கத்தை ஆக்கின. இதனால் நவகிரகங்களால் அரங்கன் பக்தர்களை ஆட்டுவிக்க இயலாதபடி ஓர் இயலாமை தோன்றிற்று.

தீர்த்தச் சிறப்பைத் தொடர்ந்து, ஒரு கோயிலின் சிறப்பும் பலமும் அதன் விமானம் அமைவதில் இருக்கிறது. இதன் சூத்திரத்தை அறிந்தவன் தேவருலகில் மயன் ஆவான். விஸ்வகர்மாக்களும் இதை அறிந்தவர்களே, அவர்களின் துணையோடு அரங்கன் சந்நிதியின் சொர்ண விமானம் வடிவமைக்கப்பட்டு அதில் பரவாசுதேவனாய் அரங்கனே காட்சி தரும் கோலம் உருவாக்கப்பட்டது. உள்ளே பிரணவாகார அரங்க தரிசனம் முடிந்து, புறத்தில் பரவாசுதேவனையும் வணங்கு வது என்பது, உள்ளும் புறமும் அவரே நிறைந்திருக்கிறார் என்பதை உணர்த்துவதாகும்.

இந்த அரங்கக் கோபுர விமானக் கலசங்கள் காயத்ரியின் தலைப்பகுதிகளாகும். கீழுள்ள அரங்க மண்டபமோ 24 தூண்களை உடையது. இவை காயத்ரியின் இருபத்து நான்கு அட்சரங்களை எதிரொலிப்பதாகும். ஆலயம் இப்படிப் பெரும் மந்திரச் சிறப்போடும் வலிவோடும் உருவாக்கப்பட்ட அதே தருணத்தில் அரங்கன்

ஆலயத்தைச் சுற்றி ஏழு மதில்கள் உருவாக்கப் பட்டன. ஏழு மதில்களுக்கு இடையில் ஏழு சுற்றுகள்!

இந்த ஏழு சுற்றுகளையும் சுற்றி முடிந்து, காயத்ரியின் அட்சர வலிமையுள்ள அரங்க மண்டபத்தில் நுழைந்து, உள்ளே சயனக் கோலத்தில் அருளும் அரங்கனை தரிசனம் செய்வதே பிறவித்தளையிலிருந்து விடுபடச் செய்வதாகும்.

ஏழு சுற்றுகளும் ஏழு உலகங்கள் இருப்பதையும், ஓர் உயிர் எடுக்கும் எழு பிறப்புகளையும் குறிப்பன. பூலோகம், புவர்லோகம், ஸுவர் லோகம், மஹர்லோகம், ஐநோ லோகம், தபோலோகம், சத்யலோகம் என்று ஏழு உலகங்கள் இருப்பதையே இந்த சுற்றுகள் காட்டுகின்றன.

இந்த மதில்களும் சுற்றுகளும் தொடக்கத்தில் பூலோகச் சுற்று, புவர்லோகச் சுற்று, சுவர்லோகச் சுற்று, மஹர்லோகச் சுற்று என்று அந்தந்தப் பெயர்களிலேயே அழைக்கப்பட்டன. இறுதிச் சுற்று இவற்றை அடைந்து கடக்கும் சுற்று. அது 'அடையவளைஞ்சான்' என்றழைக்கப்பட்டது.

ஒவ்வொரு சுற்றின் நடுவிலும் வாயில்கள் அமைக்கப் பட்டன. வாயில்களின் மேல் கோபுரங்கள் அமைக்கப் பட்டன. இதில் ஆறு, ஏழு, அடையவளைஞ்சான் ஆகிய சுற்றுகளில் மனிதர்கள் வீடுகளோடு வசித்தனர். ஏனைய சுற்றுகள் ஆலயத்துக்குள் அமைந்த சுற்றுகளாயின. இதன் பொருட்டே, திருவரங்கத்துச் சிறப்பினை நூற்றியெட்டு திருப்பதியந்தாதியானது இப்படிச் சிறப்பிக்கிறது...

***சீர்வந்த வுந்தித் திசைமுகனா லல்லாதென்***
***சோர்வந்த சொல்லிற் சுருங்குமோ? ஆர்வம்***
***ஒருவரங்கக் கோயிலுகந்தவரை யாள்வான்***
***திருவரங்கக் கோயிற் சிறப்பு***

இந்தச் சுற்றுகளே திரிவிக்ரமசோழன் சுற்று, கிளிச் சோழன் சுற்று, திருமங்கை மன்னன் சுற்று, குலசேகரன் சுற்று, ராஜமகேந்திரசோழன் சுற்று, தர்மவர்மன் சுற்று என்று காலத்தால் பெயர் மாற்றம் கொண்டன.

அப்படி அவை பெயர்மாற்றம் கொள்ளுமுன், இத்தனைச் சிறப்பான இந்த ஆலயமானது தர்மவர்மன் காலத்துக்குப் பின் சிலகாலம் மண்மூடியும் போனது! காவிரிதான் பொங்கிப் பெருகி வந்து, பூமியின் நிகரில்லாத இந்த ஆலயத்தை சில காலம் மண்ணுக்குள் புதையச் செய்தாள்.

ஏன்... எதனால்?

*- தொடரும்...*



## தேங்காய் உடைக்கும்போது...

பூஜைக்குத் தேங்காய் உடைக்கும்போது, `க்ஷீரபலா ஸப்த பலா பரசுராம சுபம், சுபம்' என்றபடி உடைக்கவேண்டும். காரணம், தேங்காய் பரசுராமரால் பூமிக்குக் கொண்டுவரப்பட்டது என்பர். தேங்காய் மூன்றில் இரு பங்காக உடைந்தால் மனமகிழ்ச்சி உண்டாகும்; ஐந்தில் இரு பங்கானால் செல்வம் சேரும். உடைக்கும்போது, தேங்காய் கைதவறி கீழே விழுந்தாலோ, அழுகியிருந்தாலோ மனக்கலக்கம் தேவையில்லை. வேறு தேங்காயை உடைத்து வழிபடலாம்.

*- ரமணா, பெங்களூரு*



## நவகிரகங்களும் நிவேதனங்களும்

நவகிரகங்களை ஆலயங்களில் 9 முறை வலம் வந்து பணிந்து துயர்களிலிருந்து விடுதலை பெறுவது வழக்கம். அத்துடன், விசேஷ காலங்களில் கீழ்க்காணும் நிவேதனங்களைச் சமர்ப்பித்து வழிபட்டால் சகல நலன்களும் கைகூடும்.

சூரியனுக்குச் சர்க்கரைப் பொங்கலும், சந்திரனுக்கு பால் பாயசமும், செவ்வாய்க்கு வெண்பொங்கலும், புதனுக்கு புளியோதரையும், குருவுக்கு தயிர் சாதமும், சுக்கிரனுக்கு நெய் சேர்த்த பொங்கலும்,

சனி பகவானுக்கு எள் சாதமும், ராகுவுக்கு உளுந்து சாதமும், கேதுவுக்கு சித்ரான்னமும் சமர்ப்பித்து வழிபடவேண்டும்.

*- கே.சித்ரா, கடலூர்*

25 Sep 2018

# ரங்க ராஜ்ஜியம் - 13



ரங்க ராஜ்ஜியம் - 13

இந்திரா சௌந்தர்ராஜன் - படம்: என்.ஜி.மணிகண்டன்

*‘சரங்களைத் துறந்து வில்வளைத்து இலங்கை மன்னவன்*
*சிரங்கள் பத்தறுத்துதீர்த்த செல்வர் மன்னு பொன்னிடம்*
*பரந்து பொன் நிரந்துநுந்தி வந்தலைக்கும் வார்புனல்*
*அரங்கமென்பர் நான்முகத்தயன் பணிந்த கோயிலே!’*

- திருமழிசை ஆழ்வார்



திருவரங்கம் தோன்றிவிட்டது. பிரணவாகாரப் பெருமாளுக்கு `ரங்கநாதன்' என்ற ஒரு திருப் பெயரும் விரைவில் தோன்றியது.

விண்ணகத்துப் பெருமாள் மண்ணகம் வந்து, அயோத்தி நகரில் பல தலைமுறைகளின் ராஜ பூஜைகளில் தண்ணருளைப் பிரவாகமாக்கி, பின் காலத்தால் காவிரித் தீவை அடைந்த நிலையில், சோழ மண்டலவாசிகள் எம்பெருமானை எண்ணியும் பக்தி செய்தும் ஆனந்தக்

கூத்தாடினர்.
கூத்தாடுமிடம் எப்போதும் அரங்கமே...

கூத்தாடக் காரணம் எம்பெருமாளே!

எம்பெருமாளின் பொருட்டு அந்தத் தீவில் அனைவரும் ஆனந்தக் கூத்தாடியதால், அந்தத் தீவு அரங்கத் தீவு என்றாகி, பின் `திரு' சேர்ந்து திருவரங்கமானது. இந்தத் திருவரங்கத்துக்கே நாதனாக பெருமாள் விளங்கியமையால் திருவரங்க நாதர் என்ற பெயர் பிரணவாகாரப் பெருமாளுக்கு இம்மண்மிசை உண்டானது.

அவன் இவ்வுலகுக்குத் தலைவன். இவ்வுலகம் அவனால் வந்ததே... எனவே, `உலகுக்கெல்லாம் தலைவன்' எனும் பொருளில் அரங்கநாதன் எனும் திருப்பெயர் தோன்றியது என்றும் கூறுவர்.

தர்மவர்மாவின் பரம்பரையினர், எம்பெரு மானைக் கண்ணின் இமைபோல காத்து பூஜித்தனர். காலம் சுழன்றது. அதன் சக்கரச் சுழற்சியில் ஓர் ஊழிப்பிரளயம் ஏற்படும் நேரம்!

**வி**ண்ணில் வைகுண்டத்தில் பெருமாளும் பெருமாட்டியும் அதன் பொருட்டு விவாதித்தனர். பெருமாளைவிட பெருமாட்டியே அந்தப் பிரளயம் குறித்து அதிகம் வருந்தினாள். அது அவளது பேச்சிலும் நன்கு புலப்பட்டது.

“எம்பெருமானே! இதென்ன விபரீதம். பிரளய காலம் வந்துவிட்டது போல் தெரிகிறதே” என்று தொடங்கினாள்.

“ஆம் தேவி! பூலோகத்தைத் தோற்றுவித்து, அதில் மானிடர்களை வாழச் செய்து ஒரு நாகரிக சமுதாயத்தைப் படைத்துவிட்ட நிலையில், பல மன்வந்தரங்கள் கழிந்துவிட்டன. இதனால் பூமியில் பல பாகங்களில் வறட்சியும், சில பாகங் களில் குளிர்ச்சியும், இன்னும் சில பாகங்களில் மலட்டுத்தன்மையும் உருவாகிவிட்டன. மானுட வாழ்வின் பாவ புண்ணியங்களின் பாரமும் பங்கும்கூட இதன் பின்புலத்தில் உள்ளன. இவற் றைச் சுத்திகரிக்கும் செயல்பாடே பிரளயம்.”

“பிரளயம் என்றால் சுத்திகரிப்பா... அது பேரழிவு இல்லையா?”

“நீ உன் விருப்பப்படி சொல்லிக்கொள். பேரழிவு, பிரளயம், சுத்திகரிப்பு எல்லாமே ஒன்றுதான்.”

“இதனால் கோடானுகோடி உயிர்கள் அழிந்து போகுமே..?”

“ஏன் அழிவதாகக் கருதுகிறாய். உன் மானுட பாவனையை மாற்றிக்கொண்டு பார். அழிவதன் பின், ஒரு மாற்றமும் அதனால் ஏற்றமுமே நிகழப் போகிறது”

“இப்போது இதற்கு என்ன அவசியம்?”

“யுகங்களில் கலி பிறக்கப் போகிறது. அதற்கேற்ப, பூ உலகில் மாற்றங்களைச் செய்யவேண்டியது சிருஷ்டி கர்த்தாவின் கடமைகளில் ஒன்று. இதனால் புதிய மலைகள், நதிகள், தளங்கள், கனிம வளங்கள் தோன்றும். மனித சமூகம் இதனூடே தன்னை இணைத்துக்கொண்டு பணிபுரியும்."

“அதற்கு மனித சமூகம் அழியாது இருக்க வேண்டுமே?”

“பிரளயத்தில் தப்பிப் பிழைக்கப்போகும் கூட்டங்களும் உண்டு தேவி. அவர்கள் தங்களின் அறிவு, குணம், ஆற்றல் ஆகியவற்றின் துணை கொண்டு தங்களுக்கான நாட்டை தாங்களே உருவாக்கிக்கொள்வார்கள். அதற்கு எம்மிடம் பக்தி கொண்ட ரிஷிகளும், முனிவர்களும் துணை செய்வதோடு, எனக்கான வந்தனைகளையும் பூசனைகளையும் வரையறுப்பார்கள். என் தண்ணருளும் துணை செய்யும்.”

“அப்படியானால் இப்போது உங்கள் கோயிலாக விளங்கும் திருவரங்கத்தின் நிலை?”

“அது சிறிது காலம் மண்மூடிக் கிடக்கும்."

“இது என்ன விபரீதம்?”

“இதில் எங்கிருக்கிறது விபரீதம்?”

“ஒப்பற்ற சொர்ணப் பிரணவாகாரம் மண்மூடிப் போவதா? அதுவும் பலகாலம்! இப்படி ஒரு செயல் பாட்டை விபரீதம் என்று சொல்லாமல், வேறு எப்படிச் சொல்வது?”

“தேவி! நீயேகூட எப்படித் தோன்றினாய் என்று எண்ணிப் பார். தேவாசுர முயற்சியான அமிர்தக் கடைவில், அதன் விளைவுகளில், இடிபாடுகளில் தோன்றியவள் நீ. அமிர்தக் கடைவில் நீ மட்டுமா தோன்றினாய்? ஆலகாலம் எனும் விஷம் முதல் அமிர்த சஞ்ஜீவினி வரை முரண்பட்டவையும் தோன்றின. அந்த அமிர்தக் கடைவும் பிரளயத்துக்கு இணையானதே. அன்று அது நிகழாமல் போயிருந் தால் இன்று நீ இல்லை, தேவர்கள் இல்லை, அசுரர்கள் இல்லை. அட்சய பாத்திரம் முதல் காமதேனு, கற்பக விருட்சம் என்று எதுவுமே இல்லாமல் போயிருக்கும்.”

“நீங்கள் வரிசைப்படுத்தியவற்றைக் கடைந்து தான் பெற்றிருக்கவேண்டுமா? தாங்கள் நினைத்த மாத்திரத்தில் மானச சிருஷ்டியாக அவற்றை... ஏன் என்னையும்தான், உருவாக்கியிருக்கலாமே? எதற்காக அப்படி ஒரு நிகழ்வு..?”

“மானசங்கள் காலத்தைக் காட்டாது. காலத்தா லேயே சம்பவங்கள்... சம்பவங்களில் இருந்தே வரலாறுகள் தோன்ற முடியும்! வரலாற்றைக் கொண்டே கால பரிமாணத்தை அறிய முடியும், வரும் காலத்தில் வாழப்போகிறவர்கள், தங்கள் வாழ்வில் கால ஞானம் பெறவும் வினைப்பாடு களைப் பற்றிய அறிவைப் பெறவும் அவற்றை உள்ளடக்கிய சம்பவங்கள் அவசியம்.”

“அப்படியானால் இப்போது நேரிடப் போகும் பிரளயமும், தாங்கள் சொல்வதுபோன்ற கால ஞானத் தையும், அறிவையும் பெற உதவுமா?”

“ஆம். சில காலம் என் பிரதிமையும் பிரணவாகாரமும் பூமிதேவியின் மண் சம்பந்தம் கொண்டு புதைந்து கிடக்கப் போகிறது! சரியான ஒரு தருணத்தில் சரியான ஒருவனாலோ, ஒருத்தியாலோ அந்தப் பிரதிமை

திரும்ப வெளிப்பட்டு, வழிபாடுகள் எனப்படும் வழிப்பாடுகள் தொடரும்."

"ஆஹா! வழிபாடு - வழிப்பாடு. என்ன ஒரு சொல் நயம். வழிபாடுதான் சிறந்த வழிப்பாடா பிரபு?"

"ஆம். அகந்தை உள்ளவர்களால் வழிபட இயலாது. 'நான்' எனும் அகந்தையின்மையே வழிபாட்டின் முதல்பொருள். மானுடர்கள் அகந்தையின்றி இருக்கவே வழிபாடுகள் உதவுகின்றன!"

"வழிபாடுகளின்றி ஒருவரால் சிறந்த வழிப்பாட்டில் செல்ல இயலாதா பிரபு.?"

"இயலாது தேவி."

"அகந்தை அத்தனை கொடியதா?"

"ஆம். அதுவே புத்தியை பக்தியற்றதாக்கி சுயநலத் தோடும் சுய பிரதாபத்தோடும் வாழச் செய்துவிடும்."

" `அசுரர்கள் போல்' என்றும் கூறலாமல்லவா?"

"சரியாகச் சொன்னாய். சுரம் தப்பினால் அசுரம்! புலனடக்கம் மற்றும் ஒடுக்கம் எனும் தவம் மிகுந்தால் தேவம். தேவம் வளர பக்தி துணை செய்யும். அசுரம் வளர அகந்தை துணை செய்யும்."

"அற்புதமான விளக்கம். உலக நாயகனாகவும் அரங்கநாதனாகவும் உள்ள தங்களின் சிருஷ்டி விநோதங்கள் வியக்கவைக்கின்றன. இருளாகவும் பகலாகவும் பூமி இருப்பது போல், தேவமாகவும் அசுர மாகவும் மானுடர்கள் இருப்பதன் பின்புலம் எனக்குப் புரிகிறது. இவர்கள் அனைவருக்கும் பொதுவாக தாங்கள் இருப்பதும் புரிகிறது."

- லட்சுமிதேவி நெகிழ்ந்துபோனாள். பிரளயம் குறித்து தொடக்கத்தில் அஞ்சியவள், நிறைவில் `அது ஒரு புதிய தொடக்கத்துக்கான மாற்றம்' என்று பரந்தாமனாலேயே அறியப்பெற்றாள். எல்லாம் அறிந்திருந்தும் அறியாதவள் போல், அவள் மானுடர் பொருட்டே கேள்விகளைக்

கேட்கவும் செய்தாள். பதிலும் கிடைக்கப் பெற்றாள்.

காலத்தால் பிரளயத்துக்கு இணையாக இயற்கை சீறியதில் கடல் ஒரு புறமும் நதிகள் மறுபுறமும் பொங்கிப் பிரவாகித்தன. திருவரங்கத் தீவே நீரில் மூழ்கி, நிலப்பரப்பே தெரியாதபடி ஜல சமுத்திரமானது.

பாற்கடலில் ஆதிசேஷன் மேல் பள்ளிகொண்ட பெருமானாய் யோகம், தாமசம் எனும் நித்திரைகளில் ஜகத் திரையை அகற்றி, காட்சிகளை அரங்கேற்றும் எம்பெருமான், தான் படைத்த பூ உலகில் - தான் படைத்த காவிரிக்குள், நீர்ச் சம்பந்தத்தோடு சில காலமும், பின் அதன் மண் வாரிதியால் மூடப்பட்டு சில காலமும் கிடக்கத் தொடங்கினார்.

விண்ணிலிருந்து மண்ணுக்கு வந்து கோயில் கொண்ட தடயங்களே இல்லாதபடி எங்கும் மண் வாரிதி! ஏழு வீதிகளோடும் மாடங்களோடும் திருவரங் கம் புதைந்துகிடந்தது!

கோயில் இருந்ததற்கான சாட்சிகளாய் கல்வெட்டோ, நூல்வெட்டோ, முதிர்ந்தோர் ஞாபகக் கூற்றோ எதுவும் இல்லாதபடி காலம் சுழன்றது.



தர்மவர்மனின் குடிப்பிறப்புகள் மாத்திரம் இதற்கு நடுவில் எப்படியோ தொடர்ந்தார்கள். அவர்கள் நடுவே நீலிவனத்து ரிஷி பரம்பரையும் தொடர்ந்தது. இந்தப் பரம்பரையில் வந்தவர்களே, தங்களின் ஆழ்ந்த தவத்தால் தங்கள் முன்னோர் பற்றியும், அவர்கள் போற்றித் துதி செய்த பிரணவாகாரப் பெருமாளான அரங்கநாதப் பெருமாள் குறித்தும் அறியத் தொடங்கினர்.

இவர்களே பிரணவாகாரப் பெருமாள் புதையுண்ட வரலாற்றையும் கொஞ்சம் கொஞ்சமாக அறிந்தனர். அதன் மூலம் `அரங்கம் மீள வேண்டும்; மக்களால் மீண்டும் சூழ வேண்டும்' என்று விரும்பி வழிபாடுகள் செய்யத் தொடங்கினர்.

வழிபாடுதானே வழிப்பாடு? வழியும் புலனாகத் தொடங்கியது.

**இ**துதான் பெற்றோர் இட்ட பெயர் என்று திண்ண மாகக் கூற முடியாத நிலையில், சோழர் பரம்பரையில் வந்து உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்த சோழ மன்னன் ஒருவன், ஒருநாள் காவிரி ஆற்றின் பக்கம் வந்தான்.

ஜலசமுத்திரமாய் திருவரங்கத்தையே விழுங்கி ஓடியபடி இருந்த காவிரி, காலத்தால் திரும்ப மாலை போல் பிரிந்து, திருவரங்க நிலப்பரப்பை வெளிக்காட்டிய படி இருந்தாள். நீந்திக் குளித்த சோழ மன்னன் மறுகரை எனும் தீவுப்பகுதிக்குள் கால் வைத்தான்! அவனை அந்த நன்னீர்த் தீவு இருகரம் நீட்டி வரவேற் றது. எங்கு பார்த்தாலும் அடர்ந்த மரங்கள் - மரங்களில் கனிகள், இடைப்பட்ட இடங்களில் மலர்ச்செடிகள். மரங்களில் ஏராளமாய் பட்சிகள்... குறிப்பாய் கிளிகள்!

சோழ மன்னன் அந்தக் காட்சிகளைக் கண்டு மனம் சிலிர்த்தான். கிள்ளைகளின் மொழி அவனுக்குச் சங்கீதமாய் தித்தித்தது. அவன் உடம் பெங்கும் ஒரே பரவசம்! அவன் தன் வாழ்நாளில் அதுபோல் ஓர் அனுபவத்துக்கு ஆட்பட்டதே இல்லை எனும்படியான பரவசம் அது. அப்போது அவன் காதில் ஒரு மந்திரப்பாடல் ஒலிக்கத் தொடங்கியது.

*`காவேரி விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்*
*ஸ வாசுதேவோ ரங்கேச: ப்ரத்யட்சம் பரமம் பதம்*
*விமாநம் ப்ரணவாகாரம், வேதச்ருங்கம் மஹாத்புதம்*
*ஸ்ரீரங்கசாயீ பகவாந் ப்ரணவார்த்த ப்ரகாசக:'*

- என்று அவன் காதில் ஒலித்த மந்திரப் பாடலை ஒரு கிளிதான் பாடியபடி இருந்தது. திரும்பத் திரும்பப் பாடியதோடு, ஒரு மண்திட்டின் மேல் சென்று அமர்ந்து தன் சிறகால் படபடத்து மணலைக் கிளறிக்

காட்டியது!

சோழ மன்னன் உடனே புரிந்துகொண்டான். அவனோடு வந்திருந்த வேத விற்பன்னர்களில் ஒருவர் நீலிவனத்தோடு தொடர்பு உடையவர். அவருக்கு அந்தக் கிளி சொன்ன ஸ்லோகப் பாடல் தெளிவாகப் புரிந்தது. அவர் மன்னனுக்கு அதன் பொருளைக் கூறத் தொடங்கினார்.

“அரசே! இது சாதாரண பட்சி ஜன்மக் கிளியல்ல. சுகர் எனும் ரிஷிபுருஷர் போல மிகுந்த ஞானமுள்ள கிளி. பட்சிகளில் கிளியும் காகமுமே மானுடர்களின் பழக்க சம்பந்தமுடையவை. காகம் மனிதர்களைப் போல் அக்னி சம்பந்தத்தால் சமைக்கப்பட்ட உணவை உண்ணும். கிளி மனிதர் களைப்போலப் பேசும்!

இதில் காகம் கருப்பு நிறம் கொண்டு மறைந்து விட்ட பித்ருக்களின் சம்பந்தத்தை நமக்கு உணர்த்துபவை. கிளியோ செழிப்பின் நிறமான பச்சை நிறத்தைக் கொண்டு, தாவர சம்பந்தத்தை நமக்கு உணர்த்துபவை. அப்படிப்பட்ட இரு பறவைகளில் காகம் சனியின் வாகனம். கிளியோ எம்பெருமானின் பச்சை மாமலை போன்ற மேனி சம்பந்தம் கொண்டு, அவர் நினைவை நமக்குள் ஊட்டுகின்ற ஒன்றாகும்.

அவ்வகையில் இந்தக் கிளி வேத மொழியான சம்ஸ்க்ருதத்தின் வழி நின்று பாடிய பாடலின் பொருளைச் சொல்கிறேன் கேளுங்கள்.

`எம்பெருமானின் வைகுண்டத்தில் விரஜை எனும் நதி ஒன்று ஓடியபடி உள்ளது. அந்த நதிதான் பூ உலகில் இதோ ஓடுகின்ற காவிரியாகக் காட்சி தருகிறது. அதனால், நாம் நிற்கும் இந்த நிலப்பரப்பும் பூலோக வைகுண்டமாகும். அதுபோல் ஸ்ரீரங்க விமானமே ஸ்ரீவைகுண்டத்தில் அவர் இருக்கும் இடத்தைக் குறிப்பதாகும். அதில் பரமபதநாதனாக அவர் காட்சி தருகிறார். அவரே ரங்கநாதனாக இங்கு எழுந்தருளியுள்ளார்' என்பதே இப்பாடலின் பொருளாகும்” என்று கூறி முடித்தார்.

சோழன் அதைக் கேட்டு மகிழ்ந்தான்.

``விரஜா நதியா இந்தக் காவிரி... இந்த இடம்தான் பூலோக

வைகுண்டமா... அப்படியானால், பரமபத நாதனாக அவர் எழுந்தருளிய அந்த ஸ்ரீரங்க விமானம் எங்கே" என்றும் கேட்டான்.

கிளி தன் சிறகால் படபடத்து மண்ணைக் கிளறியதை ஒரு தூண்டுதலாகக்கொண்டு, அந்த இடத்தைத் தோண்டப் பணித்தான். மணலானது அப்புறப்படுத்தப்பட்டு, முதலில் ஸ்ரீரங்க விமானம் தட்டுப்பட்டது. பின் பரமபத நாதர் தட்டுப் பட்டார். பல்லாண்டு காலம் மண்மிசை மூடிக் கிடந்த நிலையிலும் விமானத்தில் துளி மாசில்லை - மருவில்லை!

அந்தக் காட்சியில் சோழன் உயிரே சிலிர்த்தது. அந்த நொடியே அந்தச் சோழன் கிளிச்சோழன் என்றானான். அவனது மேற்பார்வையில் ஆயிரக் கணக்கானோர் ஒன்றிணைந்து புதையுண்ட திருவரங்கத்தை மீட்கத் தொடங்கினர்.

அசாதாரண மீட்சி!

சப்த பிராகாரங்களும், மதில்களும், மாடங்களும் வெளிப்பட்டன. அவையே அந்தத் தீவு ஒரு மனித சமூகமானது பெரும் பக்திச் சிறப்போடு ஒரு பெருவாழ்வு வாழ்ந்ததைச் சொல்லி நின்றன.

`அந்த நாளிலேயே இப்படி ஒரு மேலான வாழ்வை நம் முன்னோர்கள் வாழ்ந்துள்ளனர். இந்த நாளில் அதனினும் மேலான ஒரு வாழ்வை நாம் வாழ்ந்து காட்டவேண்டும்' என்று கிளிச் சோழன் தனக்குள் எண்ணிக்கொண்டான்.

நீலிவனத்து ரிஷிகளும் வந்து நின்று, திருவரங் கத்தின் பூர்வச் சிறப்பை வைவஸ்வத மனுவில் தொடங்கி, அது ஒரு பிரளயத்தால் மண்மூடிப் போனது வரை கூறி முடித்தனர். அதை அப்படியே பதிவு செய்து ‘கோயிலொழுகு’ போன்ற ஒரு ஏடகத்தையும் உருவாக்கினான் கிளிச்சோழன்.
பூலோக வைகுண்டமும் புத்துயிர்ப்போடு தன் அருளாட்சியை மீண்டும் தொடங்கியது!
*- தொடரும்...*



## துளசி தீர்த்த மகிமை!

பாண்டுரங்கனின் பக்தரான சாங்கதேவர், பேதரி என்ற இடத்தில் தனது அடியார்களுடன் கூடி நாம சங்கீர்த்தனம் செய்துகொண்டிருந்தார்.

அப்போது அங்கே வந்த முதியவர் ஒருவர், ``அரசனின் மகள் பாம்பு கடித்து இறந்து மூன்று நாள்கள் ஆகின்றன. எனவே அரசன் துக்கத்திலிருக்கிறான்.இங்கு பக்திக்கும் பாகவதர்களுக்கும் இடமில்லை. உடனே ஊரைவிட்டு வெளியே சென்றுவிடுங்கள்'' என்றார்.

``பாம்புக்கடியானால்... நானே அரசரின் மகளை எழுப்புகிறேன் என்று அவரிடம் போய் சொல்லுங்கள்'' என்றார், சாங்கதேவர்.

அப்படியே மன்னனுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது. `என்ன செய்தும் பிழைக்காத பெண்ணை, இவர் மட்டும் எப்படி எழுப்புகிறார் என்று பார்ப்போம்' என்று எண்ணிய மன்னர், சாங்கதேவரை தன் மகளின் உடம்பு இருக்கும் இடத்துக்கு அழைத்துச் சென்றார்.

பாண்டுரங்கனை மனதில் ஜபித்தபடி துளசி தீர்த்தத்தை எடுத்து மன்னனிடம் கொடுத்த சாங்கதேவர், ``இந்தத் தீர்த்தத்தை உனது மகளின் மீது தெளி'' என்றார். மன்னனும் அப்படியே செய்ய, மறுகணம் துயில் எழும் பெண்ணைப் போல் அவள் எழுந்தாள். அரசன் திகைத்தான்; சாங்கதேவரை வணங்கி பணிந்தான். அரண்மனை ஆனந்தத்தால் மூழ்கியது! `பகவான் அருளிருந்தால், பாகவதன் சொல் எப்படி பொய்யாகும்' என்பதற்கு சாங்கதேவர் சரிதம் ஓர் உதாரணம்.

*- எம். வி. குமார், மதுராந்தகம்*



## பகவானின் கருணை!

பரமபக்தையான எச்சம்மாள், தன் வீட்டில் ஒரு லட்சம் தளிர் இலைகளால் `லக்ஷ பத்ர பூஜை' செய்யவிருப்பதை பகவான் ரமணரிடம் தெரிவித்தாள். பகவான் வெறுமனே கேட்டுக்கொண்டார்.

எச்சம்மாளும் அர்ச்சனையை ஆரம்பித்து செய்துவந்தார். ஐம்பதாயிரம் ஆகியிருக்கும்போது, கோடை வந்தது. தாவரமெல்லாம் கருகின. பகவானிடம் தமக்கு தளிர் கிடைக்காததை கூறினார் எச்சம்மாள்.

``ஓஹோ! இலை கிடைக்கவில்லையா? அப்படீன்னா... உன்னையே கிள்ளி கிள்ளி அர்ச்சனை பண்றதுதானே'' என்றார் ரமணர். இந்தப் பதிலை எதிர்பாராத எச்சம்மாள் ``பகவானே! அது சித்ரவதையாக இருக்காதா" என்றார்.

``அதுசரி... உன்னைக் கிள்ளிண்டால் உனக்குச் சித்ரவதையாக இருக்கும்னா, கொழுந்தைப் பறிச்சா மரம் செடிகளுக்கு மட்டும் அப்படி இருக்காதா'' என்று கேட்டார். பகவானுக்கு உவக்காததை செய்தோமே என வருந்திய எச்சம்மாள் ``சுவாமி! முன்னமேயே நீங்கள் ஏன் இப்படிச் சொல்லவில்லை'' என்று கேட்டார்.

பகவான் ரமணர் பதில் சொன்னார்: ``உன்னை கிள்ளிண்டா உனக்கு வலிக்குதுன்னு நான் சொல்லியா தெரிஞ்சுண்டே? உன்மாதிரித்தான் அந்தச் செடி- கொடிகளும். இது, நான் சொல்லித்தான் தெரியணுமா?"

உண்மை உணர்ந்தார் எச்சம்மாள்!

*- வி.லக்ஷ்மணன், மயிலாடுதுறை*

09 Oct 2018

# ரங்க ராஜ்ஜியம் - 14



ரங்க ராஜ்ஜியம் - 14

இந்திரா சௌந்தர்ராஜன் - படம்: என்.ஜி.மணிகண்டன்

*‘மரவடியை தம்பிக்கு வான் பணயம்*
*வைத்துப் போய் வானோர் வாழ*
*செருவுடைய திசைக்கருமம் திருத்திவந்*
*துலகாண்ட திருமால் கோயில்,*
*திருவடிகன் திருஉருவும் திருமங்கை*
*மலர்க் கண்ணும் காட்டி நின்று,*
*உருவுடைய மலர் நீலம் காற்றாட்ட*
*ஓசலிக்கு மொளிய ரங்கமே!*

*- பெரியாழ்வார் திருமொழி*

கிளிச் சோழனால் மீட்சி பெற்ற திருவரங்கம், ஜனக்கூட்டத்தால் சூழப்பெற்று அன்றாட ஆராதனைகளால் வழிபாடு கண்டு வழிப்பாடும் தொடங்கிற்று. கிளிச்சோழன் அனுதினமும் ஆலயத்துக்குச் சென்றான். அவனோடு அடியார்களும் பொதுமக்களும் சென்றனர்.

இப்படி ஆலயத்துக்குச் செல்கையில், உடன் வந்த அடியார்களிடமும், நீலிவனத்து ரிஷிகள் மூலமாகவும் பல அரிய செய்திகளை கேட்டு அறிந்தான். அதில் பிரதானமானது, எம்பெருமானின் அவதாரங்களில் இது மூன்றாவது அவதாரம் எனும் செய்தியே! எம்பெருமான் இந்த உலகை நிலைநிறுத்தும் பொருட்டு முதலாக எடுத்தது மத்சாவதாரம், அடுத்தது கூர்மம்!



மூன்றாவது இன்றுள்ள உலகோர் கணக்குப்படி வராகம். ஆனால் மூன்றாவது அவதாரமாய் பிரணவாகார விமானத்தில் அர்ச்சாரூபம் கொண்டு அவதாரமெடுத்தார். எனவே இந்த ஸ்ரீரங்கநாதனும் அவதாரமூர்த்தியே என்ற கருத்தை நீலிவனத்து ரிஷியானவர் கிளிச்சோழனுக்கு கூறிட, சோழனும் உற்சாகமாகி, ‘‘முந்தைய இரு அவதாரங்கள் எதற்கு என்பதை எனக்கு விளக்கவும். அப்படியே மற்ற அவதாரங்களையும் அறிய துடிக்கிறேன்'' என்றான். நீலிவனத்து ரிஷியும் உற்சாகத்துடன் கூறத் தொடங்கினார்.

“சோழமன்னா! உலகைப் படைத்து அதில் உயிர்களைப் படைத்தால் ஆயிற்றா? அந்த உயிர்கள் எப்படி வாழவேண்டும் என்பதைக் கூறுவதோடு, உலகில் பிறந்த உயிர்கள் திரும்பவும் அவரிடம் சென்று சேர பெரிதும் துணை செய்பவை வேதங்களே! வேதவழி நடப்பவருக்கு ஒரு குறைவும் வராது. அவர் ஞானியாகத் திகழ்ந்து தன்னைச் சார்ந்தவர்களையும் ஞானியாக்கி மகிழ்வார். எப்போதும் எந்த ஒரு விஷயத்துக்கும் எதிர்ப்பதமாய் ஒன்று இருப்பதே உலக இயற்கை. அந்த வகையில் வேதம் பெரிது என்று சொல்லும்போது, இல்லையில்லை அது கொடிது என்று சொல்லவும் சிலர் இருந்தனர். அவர்களே அசுரர்கள் எனப்பட்டனர்.

எப்படி வாழ வேண்டும் என்பதற்கு தேவம் ஓர் உதாரணம் எனில், எப்படியெல்லாம் வாழக் கூடாது என்பதற்கு அசுரம் ஓர் உதாரணம். இந்த அசுரர்களையும் எம்பெருமானே படைத்தார். தான் படைத்த அந்தத் தகாதவர்களோடு மோதவும் செய்து திருவிளையாடல்களும் புரிந்தார்.

அந்த வகையில் மனித வாழ்வை நெறிப்படுத்தும் வேதங்களை அசுரர்கள் அழிக்க முற்பட்டனர். அவற்றைத் தந்திரமாக பிரம்மாவிடமிருந்து கவர்ந்து சென்று கடலுக்கு அடியில் சோமுகாசுரன் தலைமையில் ஒளித்தும் வைத்தனர். அதன்பின் அந்த வேதங்களைக் கண்டறிய எவராலும் இயலவில்லை.

இந்த நிலையில், எம்பெருமானிடம் தேவர்கள் சரண் புகுந்தனர். எம்பெருமான் வேதங்களை மீட்கும் பொருட்டு எடுத்ததே

மத்சாவதாரமாகும். மீன் அவதாரம் எடுத்து, கடலுக்குள் புகுந்து சோமுகாசுரன் எனும் அசுரனால் கவரப்பட்ட வேதங்களை அவனிடமிருந்து மீட்டெடுத்தது இவ்வேளையில்தான்.

பூ உலகில் அப்போது சத்தியவிரதன் என்பவன் அரசனாகத் திகழ்ந்தான். சப்தரிஷிகளும் அவனுக்கு வழிகாட்டிகளாக விளங்கினர். இவர்களே மூலிகைகள், பலவித தாவர வித்துக்களை சத்தியவிரதனுக்கு வழங்கிட, சத்தியவிரதன் அவற்றைக்கொண்டு மூலிகை வனங்களை உருவாக்கி மனிதர்கள் நோயின்றி வாழ வழி செய்தான்.

சோமுகாசுரனுடன் எம்பெருமான் மத்ஸாவதாரம் எடுத்து போரிட்ட நேரம், கடலானது பொங்கி நாடு நகரங்கள் அழியப் பார்த்தன. அவ்வாறு நேராதபடி சோமுகாசுரனைக் கொன்று பூ உலகைக் காப்பாற்றியது மத்சாவதாரமே. இதனாலேயே இன்று இந்த மண்ணில் வேதங்கள் உள்ளன. மூலிகைகள் மற்றும் பலவித தாவரங்களும் உள்ளன" என்று மத்சாவதாரச் சிறப்பைக் கூறி முடிக்கவும் கிளிச் சோழன் பூரித்தான்.

“அற்புதம்... அடுத்து கூர்ம அவதாரச் சிறப்பையும் கூறுங்கள்” என்றான் கிளிச்சோழன்.

“கூறுகிறேன்... கூர்ம அவதாரம் எந்த வதையும் செய்யவில்லை. மாறாக இந்த உலகத்துக்கு அது பல அதியசங்களை அள்ளித் தந்தது...”

“அதிசயங்களா... என்ன அவை?”

“கூறுகிறேன்... மனிதர்களில் நல்லவர் கெட்டவர் போல், விண்ணுல கில் தேவர்கள் அசுரர்கள் திகழ்ந்தனர். இவர்களில் எப்போதும் அசுரர்கள் கையே ஓங்கி, தேவர்கள் அசுர சக்திக்கு அஞ்சி நடுங்கும் நிலை இருந்தது. இதனால் வருந்திய தேவர்கள், அசுரர்களுக்கு மேலான சக்தியோடு அழியா தன்மை கொண்டவர்களாகத் திகழ்ந்திட என்ன வழி என்று யோசித்து, எம்பெருமானிடம் பிரார்த்தித்தனர். அதன் பொருட்டு நிகழ்த்தப்பட்டதுதான் அமிர்தக் கடைசல்!”

ரிஷியானவர், ‘அமிர்தக் கடைசல்’ என்று பாதியில் நிறுத்தவும்,

கிளிச்சோழன் மேலும் உற்சாகமானான். ‘‘மகரிஷியே... அமிர்தக் கடைசல் என்று ஒரு வார்த்தையில் கூறினால் எப்படி? விவரமாகக் கூறுங்கள்...’’ என்று கேட்டுக்கொண்டான்.

“நிச்சயமாக நானறிந்ததைக் கூறுகிறேன். அமிர்தக் கடைசல் நிகழ்வு என்பது, தேவாசுர வரலாற்றில் ஒரு மைல்கல் நிகழ்வு. எம்பெருமான் பள்ளிகொண்டிருக்கும் பாற்கடலை, மேரு மலையையே மத்தாகக் கொண்டு, வாசுகி எனும் பாம்பைக் கயிறாக்கி, மலையோடு போட்டு பிணைத்துக் கட்டி, ஒரு புறம் தேவர்களும் மறுபுறம் அசுரர்களும் தயிர் கடைவது போல் கடைந்த செயலே அமிர்தக் கடைசல் நிகழ்வாகும்.



இவ்வாறு கடைவதன் மூலம் பாற்கடலானது அமிர்தத்தை உருவாக்கித் தரும். அதைப் பருகினால் அழியாப் பெருவாழ்வு வாழலாம். எனவேதான் இந்த நிகழ்வு நிகழ்த்தப்பட்டது. இது உண்மையில் அசுர சக்திகளுக்கு எதிரானது. ஆனால், இதில் அசுரர்களைத் தவிர்க்க முடியவில்லை. அவர்கள் சக்தியும் பெரிதும் தேவைப்பட்டது. எனவேதான் அவர்கள் ஒருபுறமும், மறுபுறம் தேவர்களும் அமிர்தக் கடைசலில் பங்குகொண்டனர்.

இது ஒரு பிரமாண்ட நிகழ்வு. மனித மனத்தால் கற்பனைகூட செய்து பார்க்க முடியாத நிகழ்வு. இந்த நிகழ்வில் மூலாதாரமாய் விளங்கியதே கூர்மாவதாரமாகும். முதலில் மேரு மலையை மத்தாக்கிக் கடைந்தபோது மலை சரிந்து விழுந்தது. அது நின்று இயங்கக் கடலுக்கு கீழே ஸ்திரமான நிலம் இல்லை. அதனால், இந்த அபூர்வ நிகழ்வுக்கு இனி வழியில்லை என்று எல்லோரும் எண்ணிய தருணம், எம்பெருமான் கூர்மம் எனும் ஆமை வடிவம் கொண்டு கடலுக்கு அடியில் படுத்து, தன் முதுகையே நிலப்பரப்பாக ஆக்கிட, அதன் மேல் மேருமலையும் ஸ்திரமாக நின்றது.

ஓர் உலக்கை போல் நின்ற அதனை வாசுகிப் பாம்பு வளைத்துப் பிடித்துக்கொள்ள அதன் தலைப் பகுதியில் தேவர்களும், வால் பாகத்தில் அசுரர்களும் நின்று தயிர் கடைவது போல் கடைந்தனர்.

இந்த நிகழ்வில் அகலபாரத்தையும் கூர்ம வடிவில் எம்பெருமான் தாங்கிக்கொள்ள, தொடக்கத்தில் வலி தாளாது வாசுகிப் பாம்பானது கதறியது. அப்போது, அதனிடமிருந்து ஆலகாலம் எனும் விஷம் பீறிட்டுக் கிளம்பியது. அதை முகர்ந்தாலே எல்லோரும் இறந்துவிடுவர் என்கிற நிலையில், பரமேஸ்வர மூர்த்தி தாமே முன்வந்து அந்த விஷத்தை எல்லாம் உறிஞ்சி, அது எங்கும் எதிலும் கலந்துவிடாதபடி தடுத்து, விழுங்க முற்பட்டார்.

அதைக் கண்ட அவரின் சரிபாதியான பார்வதி தேவி, அந்த விஷம் அவரது கழுத்தைக் கடந்து வயிற்றில் இறங்கி விடாதபடி தடுத்து நிறுத்தினார். இதனால் பரமேஸ்வர மூர்த்தி நீலகண்டர் எனும்

புதியதொரு நாமம் பெற்றார்; அவர் நீலகண்டராகிய அந்த வேளை, ப்ரதோஷ வேளை என்றானது.

இதன் பின் வாசுகிப் பாம்பின் விஷம் தீர்ந்து அதன் வலியும் குறைந்த நிலையில் கடைசல் தொடர்ந்தது. அந்தக் கடைசலில் முதலில் காமதேனு எனும் பசு வெளிவந்தது. அடுத்து உச்சைசிரவஸ் எனும் சிறகுகள் கொண்ட வெண்குதிரை, அதனைத் தொடர்ந்து வெள்ளை யானை எனும் ஐராவதம், பின் பஞ்ச தருக்கள் எனப்படும் அரிசந்தன மரம், கற்பக மரம், பாரிஜாத மரம், சந்தன மரம், மந்தாரம் ஆகியவை தோன்றின. அடுத்து கௌஸ்துப மணி மாலை தோன்றியது. பின் ஜேஷ்டாதேவி எனும் மூதேவி தோன்றினாள். இவளைத் தொடர்ந்து 60 கோடி தேவலோகப் பெண்கள், மது, சுராதேவி, சிந்தாமணி என்று அதிசயமான அதுவரை உலகம் காணாதவை தோன்றியபடியே இருந்தன. பின் மகாலட்சுமி எனும் ஸ்ரீதேவி தோன்றினாள்.

ஸ்ரீதேவியைத் தொடர்ந்து சீந்தல் கொடி, அட்டைப்பூச்சி, அமிர்தகலசமுடன் கதாயுதம் சகிதம் இறுதியாக தன்வந்திரி தோன்றினார். தன்வந்திரி வசம் இருந்த அமிர்தக் கலசத்து அமிர்தம் அதன்பின் தேவர்கள் வசமானது. அதைத் திருடப் பார்த்த அசுரர்களுக்கு, பின்னர் அது மறுக்கப்பட்டது! இந்நிகழ்வால் ராகு கேது எனும் இரு சாயா கிரகங்களும் தோன்றினர்...''

நீலிவனத்து ரிஷி கூர்மாவாதரச் சிறப்பைக் கூற வந்த நிலையில், அது தொடர்பான அதிசயங்கள் அவ்வளவையும் பட்டியலிட்டு முடித்தவராய், ‘‘இவ்வளவும் கிடைக்க முழுமுதற் காரணம் அடித்தளத்தில் அசராது நின்ற கூர்ம வடிவிலான எம்பெருமானின் பெருங்கருணையே'' என்று முடித்தார். கிளிச்சோழன் பிரமிப்பில் ஆழ்ந்தான்!

``முதலில் சப்தப் பிரபஞ்சத்தை படைத்து, அதன் ஆணிவேராக வேதங்களை உருவாக்கி, அதன்பின் பிரம்மனைப் படைத்து, அந்த பிரம்மன் மூலம் உலக உயிர்கள் அனைத்தையும் உருவாக்கி, வேதங்களை அசுரர்கள் ஒளித்த தருணம் அதை மத்சம் எனும் மீன் வடிவம் எடுத்து மீட்டார். பின்னர், அமிர்தக்கடைசல் நிகழ்வுக்குக்

காரணமாகி கூர்மமாக நின்று மேரு மலையைத் தாங்கி, அதன் காரணமாய் காமதேனு தொடங்கி மகாலட்சுமி வரை பல அரியவை கிடைக்கவும் காரணமானார். இன்று இந்த உலகம் நாம் காணும் இவ்விதத்தில் திகழக் காரணமே எம்பெருமான்தான். விண்ணில் இந்த இரு அவதார நிமித்தம் செய்த செயல்கள் ஒருவிதம் என்றால், அதே விண்ணில் அதே அவதார நிமித்தம் எடுத்த இந்த அர்ச்சா சொரூபமும் இன்னொரு விதம். இதுவே மூன்றாம் அவதாரம்!

ஆனால் தோன்றி மறைகின்ற, குறித்த காலம் கொண்ட அந்த அவதாரங்களைப் போல் இன்றி, என்றும் அழியாமல் காலங்களை வென்று வாழ்வதே இந்த அரங்கநாத அர்ச்சா ரூபம். ஆகையால்தான், தோன்றி மறைந்துவிட்ட அந்த அலங்காரங்களின் வரிசையில் இந்த அர்ச்சா ரூப அவதாரம் இடம் பெறவில்லை.'' என்று திருவரங்க நாதனிடம் வந்து நின்றார் அந்த மகரிஷி!

“அற்புதம் அற்புதம்! இந்த திருவரங்கப் பெருமானை அறியப் புகுந்ததால் முதலிரண்டு அவதாரச் சிறப்பையும் அறிந்தேன். மற்ற அவதாரச் சிறப்புகளோடு எம்பெருமானுக்கு உகந்த வழிபாட்டு முறைகளையும் அதன் கொள்கை கோட்பாட்டினையும் கூற இயலுமா மகரிஷி?'' என்று கேட்ட கிளிச்சோழன் தொடர்ந்து அறியலானான்.

``சோழமன்னா! அவதாரம் என்றால் விண்ணில் இருந்து இந்த மண்ணுக்கு இறங்கி வருவதைக் குறிக்கின்ற செயலாகும். எப்போதெல்லாம் தர்மம் தடுமாறி அதர்மம் அதிகரிக்கிறதோ, அப்போதெல் லாம் அதைச் சீர்செய்ய, படைப்பாளன் எனும் முறையில் படைத்தவனே இறங்கி வருகின்ற நிகழ்வே அவதாரம்.

அந்த அவதாரங்களில் ஒன்பது அவதாரங்கள் நிகழ்ந்து முடிந்துவிட்டன. பத்தாவது அவதாரம் கல்கி எனும் பெயரில், வரும் நாள்களில் தர்மம் பெரிதும் நலியும்போது நிகழப் போவதாம்.

நிகழ்ந்த ஒன்பது அவதாரங்களில் முதல் இரண்டாகிய மத்சாவதாரம் மற்றும் கூர்மம் பற்றி நீ அறிந்துகொண்டாய். அடுத்தது வராகம்!

இரண்யாட்சகன் எனும் அசுரனை அழிப்பதற் காகப் பன்றி வடிவில் எடுத்த அவதாரமே வராக அவதாரம். அந்த அசுரன் பாதாள உலகில் போய் ஒளிந்துகொண்டதால், அவனை எவராலும் கண்டறிய இயலவில்லை அவனால் தேவர்கள் மிகவும் துன்புற்றனர். அவனை அழித்தாலன்றி தேவர்களைக் காக்க இயலாது எனும் நிலை வந்தபோது, பாதாளத்தில் ஒளிந்திருந்த அசுரனைக் கண்டறிய ஏதுவாக, எம்பெருமான் எடுத்த அவதாரமே வராக அவதாரமாகும். இதில் இரண்யாட்சகன் வதம் செய்யப்பட்டான்" என்று ரிஷியானவர் கூறிமுடிக்கவும் கிளிச்சோழனுக்குள் ஒரு கேள்வி.

“மகரிஷியே எம்பெருமான் எல்லோரையும் பக்தி உடையவர்களாயும் சாந்தமான குணக் குன்றுகளாகவும் படைத்துவிட்டால், அவர் படைத்த ஒன்றை அவரே வந்து அழிக்கத் தேவை இல்லைதானே?” என்ற அவனது அந்தக் கேள்வி ரிஷியைப் புன்னகைக்கச் செய்தது.

“என் கேள்விக்கு புன்னகையா பதில்?”

“இந்தப் புன்னகைக்கு பல பொருள்கள் உள்ளன மன்னா. உனக்கு ஒரு சில வரிகளில் இதற்கொரு பதிலை நான் கூறிவிட முடியும். இந்த சோழ மண்டலத்துக்கே நீ ஒருவன்தான் அரசன். இங்கே எல்லோரையும் அரசனாகப் படைத்து விட்டால், யார் இந்த நாட்டை ஆள்வது? இதற்கு நீ சொல்லப்போகும் பதிலில்தான், எம்பெருமான் எல்லோரையும் மாறுபாடுகளோடு படைப்பதன் காரணத்துக்கான விடை உள்ளது."

கிளிச்சோழன் பதில் சொல்ல ஆரம்பித்தான்.

*- தொடரும்...*



**மகா விஷ்ணு அமைத்த கூட்டணி!**

*அறிவில் சிறந்தவன் மனிதன்.*
*ஆற்றலில் சிறந்தது சிம்மம்.*

*இரணியனை அழிக்க அறிவு, ஆற்றல் இரண்டுமே அவசியம்.*

*எனவேதான், அறிவையும் ஆற்றலையும் இணைத்து நரசிம்ம அவதாரம் எடுத்து இரண்யகசிபுவை அழித்தார் மகாவிஷ்ணு.*

*ஒழிக்கப்படவேண்டிய ஒரு தீய சக்தியை வெல்ல, கூட்டணி அமைக்கவேண்டும் என்பதை முதலில் உணர்த்தியவரே மகாவிஷ்ணுதான்!*

*- வாரியார் சுவாமிகள்*



## முள்வாய் விளங்க நின்ற பெருமாளே!

அருணகிரிநாதர் தமது திருப்புகழில் `முள்வாய் விளங்க நின்ற பெருமாளே' என்று போற்றிப் பாடியுள்ளார். அருணகிரியார் `முள்வாய்' என்று போற்றும் தலம் எது? திருப்புகழ் ஆராய்ச்சியாளர் தணிகைமணி அவர்கள் இதுகுறித்து `இடம் இன்னதென்று விளங்கவில்லை' என்று குறிப்பிட்டுள்ளார். ஆனால், முருகவேள் முன்னின்று உணர்த்தினால் புலப்படாததும் உண்டோ?

வேலூர் மாவட்டத்தில் அரக்கோணம் அருகே, கோணலம் என்ற ஊர் உள்ளது. அங்கிருந்து சுமார் 5 கி.மீ சென்றால் முள்வாய் என்ற கிராமத்தை அடையலாம். இதனை `முள்வாய் பாளையம்' என்று கூறுகிறார்கள்.

இதுவே அருணகிரியார் போற்றிய தலம் என்கிறார்கள், முருகன் அடியார்கள்!

23 Oct 2018

# ரங்க ராஜ்ஜியம் - 15



ரங்க ராஜ்ஜியம் - 15

இந்திரா சௌந்தர்ராஜன் - படம்: என்.ஜி.மணிகண்டன்

**கங்கையிற் புனித மாய**
**காவிரி நடுவு பாட்டு**
**பொங்குநீர் பரந்து பாயும்**
**பூம்பொழிலரங்கந் தன்னுள்,**
**எங்கள்மா லிறைவ னீசன்**
**கிடந்ததோர் கிடக்கை கண்டும்**
**எங்கனம் மறந்து வாழ்கேன்**
**ஏழையே னேழை யனே!**

- தொண்டரடிப் பொடியாழ்வார்

``எல்லோரையும் அரசனாகப் படைத்து விட்டால், யார் இந்த நாட்டை ஆள்வது? இதற்கு நீ சொல்லப்போகும் பதிலில்தான் எம்பெருமான் எல்லோரையும் மாறுபாடுகளோடு படைப்பதன் காரணத்துக்கான விடை உள்ளது'' என்று நீலிவனத்து ரிஷி கூற, அதற்குக் கிளிச் சோழன் தெளிவாகப் பதில் சொன்னான்.



“எல்லோரும் அரசன் என்றால், எவராலும் ஆள முடியாது. ஒரு நாட்டுக்கு ஓர் அரசனே இருக்க முடியும். அதேபோல் எல்லோரும் நல்லவர் எனும்போது வேறுபாடு, மாறுபாடு என்று ஏதும் இருக்காது. நான் இதை உணராமல் அவசரப்பட்டு கேட்டுவிட்டேன்.”

“உனக்குப் புரியவேண்டும் என்பதற்காகவே நானும் அவ்வாறு சொன்னேன். ஏற்ற இறக்கங்களும் வேற்றுமை வித்தியாசங்களும் நம் செயலாலேயே உருவாகின்றன. கருணை, அன்பு, பாசம் போன்ற உணர்வுகளே எல்லோருக்கும் பொதுவானவை. வீரம், செல்வம், கல்வி, ஞானம் போன்றவை அவரவர் பாடுகளுக்கேற்பவே இருக்கும். இதனாலேயே எல்லோரிடமும் அன்புகொண்டு கருணையோடு வாழும்படி உபதேசங்கள் கூறுகின்றன.

மற்றபடி, ஏற்றத்தாழ்வுகள் இருந்தே தீரும். அவற்றை, ஒருவரின் அப்போதைய நிலையாக மட்டுமே கருதவேண்டும். மாறாக, அந்த நிலையை நிரந்தரமானதாக ஒருபோதும் கருதிவிடக் கூடாது. அதேபோல், அந்தந்த நிலைகளுக்கேற்ப அன்பும், கருணையும், பாசமும் கொள்ளுதல் தவறாகும்.”

கிளிச்சோழன் புரிந்துகொண்டான். மகரிஷிக்கு நன்றி சொன்னான். அத்துடன், “தாங்கள் மேலும் உள்ள அவதாரச் சிறப்புகளையும் கூறுங்கள்” என வேண்டிக்கொண்டான். நீலிவனத்து ரிஷி, நரசிம்ம அவதார மகிமையைக் கூறத் தொடங்கினார்.

“தன்னையே பரப்பிரம்மமாக, எம்பெருமா னுக்கும் மேலானவனாகக் கருதிய இரண்யகசிபு எனும் அரக்கனுக்கு, அவன் மகன் மூலமே பாடம் நடத்தி, அவனை அவன் வரஸித்திக்கு ஏற்ப அழித்த மிக உக்ரமான அவதாரமே நரசிம்மம்!”

“இப்போதும் ஒரு கேள்வி...”

“தாராளமாகக் கேள்.”

“அசுரர்கள், எந்த அடிப்படையில் தங்களைப் படைத்த

இறைவனைவிடவும் தங்களை மேலானவர்களாகக் கருதுகிறார்கள். எவ்வளவு பட்டாலும் திருந்தாமல், எந்தத் தைரியத்தில் திரும்பத் திரும்ப எதிர்க்கிறார்கள்?”

கிளிச்சோழனின் கேள்வியைச் செவிமடுத்து புன்னகைத்த நீலிவனத்து ரிஷி, பதில் சொல்லத் தொடங்கினார்.

‘‘சோழ மன்னா! உனது கேள்விக்கான விடை மிக நுட்பமானது. என்னால் இயன்ற அளவு, உனக்குப் புரியும் விதமாகப் பதிலளிக்க முடியுமா என்று முயற்சி செய்கிறேன்.

எம்பெருமானின் திரு உள்ளக் கிடக்கையின்படி சகல ஜீவராசிகளையும் படைத்தவர் பிரம்மன். படைக்கும்போதே உயிர்களுக்கென்று ஓர் இலக்கணமும் தேவைப்படுகிறது. தாவரங்கள் என்றால் நீரும் ஒளியும், மிருகங்கள் என்றால் நீரோடு தாவரங்கள் மற்றும் மாமிசங்கள், பறவைகளுக்குப் புழு பூச்சிகள், மனிதனுக்கு ஆறுவித ருசி, ஏழு வர்ணம், எட்டுத் திசைகள், ஒன்பதுவித சக்தி என்ற கணக்கு... இதனடிப்படையிலேயே மனமும் குணமும் அமைகின்றன. அப்படி அமைந்த பிறகு, அதனதன் தன்மைக்கேற்ப செயலாற்றுகின்றன. இதில் எம்பெருமான் தலையிடுவதில்லை.

இதுபோலவே தேவர்களும் அசுரர்களும்! உலக மாயை, நல்லவர்களையும் கெட்டவர்களாக்க முயலும். அப்படியிருக்க, ரௌத்திர வழிமுறை களிலேயே வந்தவர்கள், தங்களின் அறிவைக் கடந்து சிந்திக்கமாட்டார்கள். அப்படிச் சிந்திக்கவும் அவர்களால் இயலாது. எனவே, அவர்கள் சுவரில் எறிந்த பந்துபோல் மீண்டும் வருவார்கள்.”

“அப்படியானால், அவர்களோடு மோதி அவர் களை அழிப்பதும் கட்டுப்படுத்துவதும்தான் அவதாரங்களின் நோக்கமா?"

“ஆம். அதன் மூலம் உலகத்தவர்க்கு பாடம் கிடைக்கச் செய்வதே இதன் அடிப்படையான விஷயம்.”



“மகரிஷியே! தங்களிடம் எம்பெருமான் குறித்து பேசப் பேச என்னுள் பரவசம் ஏற்படுகிறது. இந்தத் திருவரங்கக் கோயிலை புனருத்தாரணம் செய்ததை எண்ணி மிகவும் மகிழ்கிறேன். ஆயிரமாயிரம் ஆண்டுகள் இந்த ஆலயம் இந்த மண்ணில் அருள்பணியைத் தொடரவேண்டும் என்று விரும்புகிறேன்” என்ற கிளிச்சோழன், அவதாரம் மதிமையை தொடர்ந்து விளக்கும்படி வேண்டினான். அதை ஏற்றுக்கொண்ட நீலிவனத்து ரிஷி, அந்த மன்னனுக்கு ஒன்றை அறிவுறுத்தினார்.

``விளக்கமாக விவரிக்கிறேன் சோழனே. ஆனால், அதை நீ மட்டும் அறிந்தால் போதாது. இந்த ஆலயத்துக்கு வருபவர்களும் அறிவது நல்லது. அப்போது அவர்கள் உள்ளம் மேலும் நெகிழ்ந்து, எம்பெருமானிடம் அவர்கள் விரைவில் நெருங்கிட இயலும்.”

“அதற்கு நான் என்ன செய்யவேண்டும்?”

“இந்த ஆலயத்தில் பௌராணிகர்கள் உரை நிகழ்த்துவதற்கு ஏற்பாடு செய். அதற்கென பிரத்தியேக மண்டபமும், ஜனக் கூட்டம் அமர்ந்து கேட்டிட பெருவெளியும் இருக்குமாறும் செய்.”

“நல்ல ஆலோசனை...”

“பக்தியோடு பாதம் நோக நடந்து வருபவர்கள், தாக சாந்தி அடையும்விதம் தண்ணீர்ப்பந்தலும், அவர்கள் பசியாற அன்னக்கூடமும் உருவாக்கு.

அதேபோல், ஆலயத்துக்கென பிரத்தியேகமான நிர்வாக முறைகளை வகுத்து, வேதபண்டிதர்கள் அருகிலேயே இருக்கும்படியாக அவர்களுக்கு குடில்களை அமைத்துக்கொடு.”

“நிச்சயமாகச் செய்கிறேன் மகரிஷி...”

“உன் ராஜ்ஜிய நிர்வாகத்துக்கும் இதற்கும் வேற்றுமைகள் உண்டு என்பதைப் புரிந்துகொள். எம்பெருமான் முன்னிலையில் அரசனும் ஆண்டியும் ஒன்றே. இங்கே உயர்ந்தவன் தாழ்ந்தவன் கிடையாது.”

“புரிந்துகொண்டேன் மகரிஷி. அவ்வண்ணமே நான் செயல்படுவேன்.”

கிளிச்சோழன் அந்த நீலிவனத்து மகரிஷியின் கருத்துக்கேற்ப ஆலயத்தில் ஏற்றங்களையும் மாற்றங்களையும் செய்யத் தொடங்கினான். குறிப்பாக ஒரு கிளியால்தான் நம்பெருமானை உணர நேர்ந்தது என்பதால், ஒரு மண்டபத்தில் கூண்டுப்பந்தல் அமைத்து, அதில் கிளிகள் வந்து தங்கி இளைப்பாறவும், உண்டு களிக்கவும் ஏற்பாடு செய்தான்.

அந்த நொடிமுதல் `கிளி மண்டபம்' என்று அந்தப் பகுதி பேர் பெறலாயிற்று. மகரிஷியின் ஆக்ஞைப்படி கிளி மண்டபத்துக்கு நேர் எதிரில் அர்ஜுன மண்டபம் அமைந்திருக்க, அதையே பௌராணிகர்கள் புராணக் கதைகள் சொல்லும் இடமாக்கினான்.

கல் தூண்களில் தீப்பந்த வளையங்கள் அமைக்கப்பட்டன. அந்த வளையங்களோடு இணைந்திருக்கும் எண்ணெய்ச் சட்டிகளில் நாள்தோறும் எண்ணெய் நிரப்புபவன் செக்காளன் என்றும், அந்த எண்ணெயைக் கொண்டு தீப்பந்தங்களை எரிப்பவன் தீக்காளன் என்றும் அழைக்கப்பட்டார்கள். அவர்களுக்குத் தான்ய மான்யங்களும் வழங்கப்பட்டன.

விசேஷ நாள்களில் அர்ஜுன மண்டபத்தில் பௌரானிகர்கள் புராண முழக்கம் செய்தனர். அங்கே நிரந்தரமாக ஏடு தாங்கிகள், பாவை விளக்குகள் ஆகியவை வைக்கப்பட்டன. பௌராணிகர்கள் சிவிகைகளில் ஆலயத்துக்கு எழுந்தருளினார்கள். அவர்களுக்கு நிவந்த காணிக்கையாக அரங்கனின் பட்டு அளிக்கப் பட்டது. அதுபோக, பக்தர்கள் தங்கள் காணிக்கை பொருள்களைப் பொன்னாகவும் பொருளாகவும் பௌராணிகச் சேவர்களிடம் அளித்தனர்.

வைகுண்ட ஏகாதசியன்று இரவில் விடிய விடிய ஹரிகதா காலட்சேபங்கள் நடந்தன. அந்நிகழ்வில் கிளிச்சோழனும் பங்குகொண்டு திருவரங்கனின் ஐந்து நிலைகளை அறியப் பெற்றான்.

முதல் நிலை பரப்பிரம்ம நிலை. இந்த நிலையில் முதலும் முடிவுமான பரமாத்மா அவனே. அவனால் தோற்றுவிக்கப்பட்ட நாமெல்லோருமே ஜீவர்களாகிய ஜீவாத்மாக்கள்.

அந்தப் பரப்பிரம்மத்தை முழுமையாக நம் எவராலும் அறிய இயலாது. அப்பரப்பிரம்மமே மகாவிஷ்ணுவாகப் பாம்பணைமேல் பாற்கடலில் காட்சி தருகிறது. இது `வியூகம்' எனும் நிலை!

தேவர்களும் மானிடர்களும் பெரும் துயருக்கு ஆளாகும்போது, அவர்களின் துயர்துடைக்க எம்பெருமான் அவதாரமெடுத்து வருவார். இந்த நிலை `விபவம்' எனப்படும்.

இந்தப் பரப்பிரம்மனே ஈ, எறும்பு முதல் மானுடரான நம் ஹ்ருதயம் வரை சகலத்திலும் இருக்கிறார். அவர் இல்லாத இடம் இல்லை. இந்த நிலையே `அந்தர்யாமி' எனும் நிலை.

இந்த நான்கு நிலைகள் குறித்து நாம் எவ்வளவுதான் அறிந்துகொண்டாலும் நம்மால் கசடறப் புரிந்துகொள்ளவோ... அப்படிப் புரிந்து கொண்டு நெருக்கமாய் பக்தி செலுத்தவோ முடிவதில்லை. எனவே, நம் பொருட்டு, நம் அறியாமை மற்றும் பக்குவமற்ற நிலைக்கு ஏற்ப, அவர் அழகிய திருமேனி கொண்டு சிலா ரூபமாய் எழுந்தருளி காட்சி தருகிறார். இதுவே ஐந்தாம் நிலையான அர்ச்சை நிலை!

இப்படி அவர் அர்ச்சை நிலை கொண்டாலும், எல்லோராலும் அவரை அவரவர் இல்லங்களில் சிலா ரூபத்தில் வைத்து வணங்க முடிவதில்லை. பொருளாதாரத்தில் தொடங்கி இன்னும்பல காரணங்களால் நாம் நம்மையே பல தருணங்களில் மறந்துவிடுகிறோம். எனவேதான் எல்லோருக்கும் பொதுவாய் ஆலயங்கள் கட்டப்பட்டன. இங்கே நிகழ்த்தப்படும் வழிபாடு `பரார்த்தம்' எனப் பட்டது. வீட்டில் பிரத்யேகமாக செய்யும் வழிபாடு `ஆத்மார்த்தம்' என்றானது. இந்தப் பரார்த்த வழிபாட்டிலும் பல வழிமுறைகள் உருவாக்கப்பட்டு அவை செயல்படுத்தப்பட்டன.

ஆலய கோபுரம் என்பது ஒட்டுமொத்த ஆலயத்துக்குச் சமமான ஒன்று. எனவே அதைக் கண்ட மாத்திரத்தில் வழிபடுவது என்பது உயர்ந்த செயலாகும். இந்த தரிசனமே கோடிப் புண்ணியம் தரவல்லதாகவும் ஆனது.

அடுத்து கோயிலில் நுழையுமுகத்தில் பலிபீடம் அமைக்கப்பட்டிருக்கும். அங்கே, நாம் விழுந்து வணங்கி, நம் கீழ்மையான எண்ணங்களை பலி கொடுத்துவிட்டு மேன்மையான எண்ணத்தோடு உள்ளே செல்லவேண்டும்.

அடுத்து கொடிமரம்! இது விண்ணோடு தொடர்புகொண்டு மொத்த ஆலயத்துக்கும் சக்தியை ஸ்வீகரித்து அளிக்கவல்லது. இங்கேயும் வணங்கவேண்டும், பின் ஆலயத்திலுள்ள தெய்வத்தின் வாகனம். அந்த வாகனம் வணங்க வேண்டிய தெய்வத்தின் நினைவை விசிறிவிடும். அதோடு அப்படியே திருச்சந்நிதிக்குச் சென்றிட சந்நிதிக் கதவுகள் சாத்தப்பட்டிருக்கும். அங்கே எம்பெருமானின் தரிசனத்துக்காகக்

காத்திருக்க சந்நிதிக் கதவுகள் திறக்கப்பட்டு கற்பூர ஆரத்தி காட்டப்படும்.

நம் ஜீவாத்மாவும் அந்த ஆரத்திச் சுடர் போல் ஒரு சுடரே! எம்பெருமானாகிய பரமாத்மாவும் ஒரு சுடரே! இந்த இரண்டு சுடர்களுக்கு நடுவிலும் அதை ஞாபகப்படுத்துவது போல் கற்பூரச் சுடர் காட்டப்படுகிறது. அந்தச் சுடரில் நாம் ஒன்றும்போது, நமது ஜீவச் சுடர் அதோடு கலந்து, பின்னர் அச்சுடர் பரமாத்மாவுடன் கலந்து ஒரே சுடராகிறது. இவ்வாறு கலப்பதற்காகவே நாம் பிறவி எடுத்துள்ளோம்.

ஆலய வழிபாட்டில் இந்த வகைச் சடங்குகள் ஒரு பயிற்சியைப் போன்றவை. இவ்வாறு தீபச்சுடர் தரிசனம் கண்டு பரமாத்மாவுடன் தற்காலிகமாய் ஜீவாத்மா கலந்து கிடக்கும் நிலையில் ஒலிக்கும் மணி, நம் மனதில் பல்வேறு எண்ணங்கள் எழாதபடி செய்யும். மணி சத்தத்துக்கு நாதம் என்று பெயர்.

நாதமே மனமாகிய சத்தக்கூடத்துக்கு மருந்து. கண்ணில் கண்ட காட்சி - புலப்படும் சகலத்துக்கும் மருந்து! இப்படி மருந்தை உண்ட நிலையில் ஆலய வெளியில் தூய்மையான இடமாகப் பார்த்து அமர்ந்து தியானிப்பது முக்கியம். அதாவது மனதை ஒருநிலைப்படுத்துவது அவசியம். இதனால், நம்மையும் அறியாமல்... சீரான சுவாசம், சீரான இதயத்துடிப்பு, ரத்த ஓட்டம் என்று உடலியக்கமும் சீராக இயங்கத் தொடங்குகிறது.

உடல் மனம் என இரண்டும் ஒரு நேர்க் கோட்டில் நிற்க, ஜீவாத்மா ஒரு உன்னத அனுபவத்துக்கு ஆளாகிறது!

**- தொடரும்...**

06 Nov 2018

# ரங்க ராஜ்ஜியம் - 16



ரங்க ராஜ்ஜியம் - 16

இந்திரா சௌந்தர்ராஜன் - படம்: என்.ஜி.மணிகண்டன்

**‘காலா யிரமுடி ஆயிரம்**
**ஆயிரம் கைபரப்பி**
**மேலா யிரந்தலை நாகம்**
**கவிப்பவின் பூத்தகஞ்சம்**
**போலா யிரங்கண் வளரும்**
**பிரான்பொன் அரங்கனென்றே**
**மாலா யிரங்கவல் லார்கெய்த**
**லாந்திரு வைகுந்தமே!**

**- திருவரங்கக் கலம்பகம்**

திருக்கோயில் வழிபாடு பற்றி கிளிச்சோழனுக்கு சொல்லும் சாக்கில் அனைவருக்கும் விவரித்தார் பௌராணிகர்.அத்துடன், எம்பெருமானின் ஐந்து நிலைகளை பற்றியும், ஆலய வழிபாடு எப்படி இருக்க வேண்டும் என்றும், அப்படி இருப்பதால் உருவாகும் நன்மைகளையும் கூறி முடித்திட கிளிச்சோழனிடம் பெரும் சிலிர்ப்பு!



அதைத் தொடர்ந்து திருவரங்கத்தின் மேலான சிறப்பை, பௌராணிகர் ஒருவர் தன் வசமிருந்த ஏடுகளை உற்றுநோக்கி அறிந்தவராக, ``நான் இப்போது இந்தத் திருவரங்கத்தின் அதிமேலான சிறப்பை மனித வாழ்வோடு பொருத்திச் சொல்லப் போகிறேன்'' என்று தொடங்கினார்.

``இந்தத் திருவரங்கமே பூ உலகின் முதல் கோயில். வடிவிலும் பெரிய கோயிலாகத் திகழ்ந்திடும் இந்தத் திருவரங்கமே பூலோக வைகுண்டமாகும். இந்தக் கோயிலுக்கு வருபவன் `முமுக்ஷு' என்று அழைக்கப்படுவான். இந்த முமுக்ஷு இந்தக் கோயிலை தரிசிக்க வருகையில், பரமபதத்தை அடைபவன் போல் ஆறு லோகங்களைக் கடந்து வர வேண்டும். அந்த ஆறு லோகங்களைப் போன்றவையே இந்த ஆலயத்தைச் சுற்றிலும் உள்ள ஆறு சுற்றுகள்.

ஏழாவதாகவும் ஒரு சுற்று உண்டு. அது, கலியுக ராமன் சுற்று எனப்படும். ஆறாவது சுற்று - இது விக்கிரம சோழன் திருச்சுற்று. ஐந்தாவது அகளங்கன் திருச்சுற்று; நான்காவது ஆலிநாடன் சுற்று; மூன்றாவது குலசேகரன் திருச்சுற்று; இரண்டாவது ராஜமகேந்திரன் திருச்சுற்று; முதலாம் சுற்று தர்மவர்மா சுற்று ஆகும்'' என்று சுற்றுகளைப் பற்றி விவரித்த பௌராணிகர், தொடர்ந்து பேசினார்.

``ஒரு மனிதன் அரங்கன்பால் பக்தியோடு காவிரியில் நீராடி, இந்த ஏழு சுற்றுகளின் வழியாக வந்து அரங்க தரிசனம் செய்யும்போது, பிறவிகளைத் தொலைத்துக் கடைத்தேறியவன் ஆகிறான். ஒவ்வொரு சுற்றின்போதும் உடலின் ஒவ்வொரு பிரதான நாடியோடு, பூலோக வைகுண்ட ஆலயத்தின் சாந்நித்யம் தொடர்பு கொள்கிறது. இந்தத் தொடர்பு மூச்சுக்காற்றின் வழி நடந்து சப்த நாடிகளையும் கர்மசுத்தி அடையச் செய்கின்றன. அந்த நாடிகளின் துடிப்பால், உள்ளே கிடக்கும் ஆத்மா, வாழைப்பழத் தோலைத் தவிர்த்த பழம் போல், அந்திமத்தில் உடம்பைத் தவிர்த்து லகுவாக பரமாத்மாவை அடைந்துவிடும்'' என்று உடம்போடு தொடர்புப் படுத்தியும் அரங்கன் கோயில் கட்டுமானத்தை விவரித்து முடித்தார்.

கிளிச்சோழன் இதன் மூலம் மேலான ஞான நிலைக்கே சென்றான்.

நீலிவனத்து மகரிஷியால் இன்னும் சொல்லப்பட வேண்டிய அவதாரங்களாக மீதமிருந்த நரசிம்மம், வாமனம், பரசுராமம், ராமம், கிருஷ்ணம், பலராமம் மற்றும் கல்கி என்று ஏழு அவதாரக் கதைகளையும் அங்கேயே அறியலானான்.

இதில் பலிச்சக்ரவர்த்தியோடு தொடர்புடைய வாமன அவதாரம், 'தான்' எனும் அகந்தை மனிதனுக்குக் கூடாது என்று உணர்த்தியதோடு, எம்பெருமான் எத்தனைப் பெரியவன் என்றும் காட்டிய ஓர் அவதாரமாகும்!

கிளிச்சோழன் அறியப் போந்த வாமனாவதாரம் ஒரு வாழ்நாள் பாடம்! கூர்ந்து நோக்கினால் அதில் ஒருவன் கேட்பதற்கு கேள்விகளும் ஏராளம் - பதில்களும் தாராளம். ஆச்சர்யங்களும் தாராளம்! குறிப்பாக வாமனாவதாரம் என்றாலே பலிச் சக்ரவர்த்தி ஞாபகமே வரும் வண்ணம் அது அனைவரும் அறிந்த ஒன்றாக இருக்கிறது.

ஆனால், அந்த மகாவிஷ்ணுவான அரங்கன் இந்த ஒரு அவதாரத்தை மட்டும் இருமுறை நிகழ்த்தினார் என்று ரிஷிகளில் ஒருவர் அர்ஜுன மண்டபத்துக் காலட்சேபத்தின்போது கூறவும் கிளிச்சோழன் ஆச்சர்யத்தின் உச்சிக்கே சென்று விட்டான்.

"மகரிஷி... இது என்ன விந்தை! ஒரே அவதாரம் இருமுறையா?" என்று எல்லோரையும் போல் வினாவெழுப்பினான்.

"தேவைப்பட்டால் ஆயிரம் முறைகூட நம் அரங்கர் அவதாரம் புரிவார். அவரின் அர்ச்சாவதார சொரூபம் கண்டு `உறக்கத்தில் இருப்பவர்தானே' என்று அஞ்ஞானமாக கருதி விடக் கூடாது!"

"அற்புதம்... இந்த வாமனத்தின் முதல் அவதாரத்தை முதலில் கூறுங்கள். இடையில் நான் வினாக்கள் தொடுக்கலாமா?"

"தாராளமாய்... நல்ல கேள்விகளே நல்ல விடைகளுக்குக் காரணமாய் அமையும். நல்ல விடைகளே தெளிவை ஏற்படுத்தும்"

“மிக்க மகிழ்ச்சி. தாங்கள் இதுவரை எவரும் அறிந்திராத அந்த முதல் வாமனாவதாரத்தைப் பற்றி கூறுங்கள்.” - என்று கிளிச்சோழன் தயாராகிட, அரங்கன் ஆலயத்து அர்ஜுன மண்டபத்தில் முதல் வாமனம் பிரவாகப் பெருக்கெடுக்கத் தொடங்கியது.



‘`துந்து என்று ஓர் அசுரன்! இவன் காஸ்யப முனிவருக்குப் பிறந்தவன். முனிபுத்ரர்கள் முனியாகத்தான் பிறக்கவேண்டும் என்றில்லை. ஒரு முனிவனுக்கு அவரின் முன்வினை காரணமாக எப்படி வேண்டுமானாலும் பிள்ளைகள் பிறக்கலாம். அந்த வகையில் காஸ்யபரின் பொல்லாத கர்மவினையின் காரணமாய் பிறந்தவனே துந்து. அசுர குணங்களே இவனிடம் தடித்துக் காணப்பட்டன. முன்கோபம், சுயநலம், அதிக உறக்கம், மிகுந்த காமம் என்று பொல்லாத உணர்வுகளின் கேந்திரமாய் விளங்கினான்.

குறிப்பாய் வரசித்தி உள்ள தேவர்களைக் கண்டு பொறாமை கொண்டு, தந்தையான காஸ்யபரிடம் சென்று ‘தந்தையே... இந்தத் தேவர்களுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம். இவர்கள் மட்டும் எப்படி இவ்வளவுப் பொலிவோடு இருக்கிறார்கள்?’ என்று கேட்டான். காஸ்யபர் முதலில் சிரித்தார். பிறகு மகனுக்குப் பதில் கூறலானார்.

‘புத்ரனே... ஆண், பெண் என்று மானுடம் ஓர் இனப்பிரிவு கொண்டிருப்பது போல், தேவம் அசுரம் என்று ஒரு குணப்பிரிவும் கொண்டுள்ளது. இதில் தேவத்துக்கு ஆத்மசக்தி அதிகம்; அசுரத்துக்குத் திரேக சக்தி அதிகம். ஆத்மசக்தி அதிகரிக்கும்போது பிரகாசம் தானாய் வந்து விடும்’ என்று பதிலளித்தார்.

‘ஆத்மசக்தி அதிகரிக்க என்ன செய்ய வேண்டும்?'

‘புலன்களை அடக்கித் தவம் செய்ய வேண்டும்.’

‘அவ்வளவுதானா?’

‘என்ன அவ்வளவுதானா? புலனடக்கம் என்பது சாமான்யப்பட்ட உணர்வல்ல. அடக்க அடக்க அது பீறிட்டெழ முயலும்.’

‘அப்படியானால் அவர்களால் மட்டும் எப்படி முடிந்தது?’

‘புத்ரா... நீ கூட முயற்சி செய்யலாம். தேவை மன உறுதி - அவ்வளவுதான்!”

காஸ்யபர் இப்படிக் கூறவும், துந்து தவத்தில் ஆழ்ந்துவிட்டான். தன் பதில், தன் பிள்ளையை தன்னைப் போல் ஒரு முனிவனாக்கியதில் மிகவே மகிழ்ந்தார் காஸ்யபர். ஓர் ஆச்சர்யம்போல் அவரையே மிஞ்சும் வண்ணம் தவத்தில் ஆழ்ந்து பிரம்ம தரிசனமும் கிடைத்துவிட்டது துந்துவுக்கு.

துந்து சாகாவரம் வேண்டினான். பிரம்மாவோ `அப்படி ஒரு வரத்தைத் தர இயலாது. அதற்கு இணையான வரத்தைக் கேள்' என்றிட, `இம்மண்ணில் எங்கும், எவராலும், எந்த வகை ஆயுதத்தாலும், தேவராலும், முனிவராலும், உம் போன்ற மூவராலும் கூட எனக்கு ஆபத்து நேரிட்டுவிடக் கூடாது’ என்று சாமர்த்தியமாக வரத்தை வாங்கிக்கொண்டான்.

`ததாஸ்து' என்று அவன் கேட்ட வரத்தை அளித்துவிட்டு மறைந்தார் பிரம்மா!”

-நீலிவனத்து ரிஷி இவ்வாறு கூறவும் கிளிச் சோழனிடம் ஒரு கேள்வி.

“மகரிஷி... இந்த வரமும்கூட சாகாவரத்துக்கு இணையானதுதானே?”

“ஆம், அதிலென்ன சந்தேகம்?"

‘`இதற்கு அவன் கோரிய சாகாவரத்தையே பிரம்மதேவர் தந்து விட்டிருக்கலாமே?’’

‘`சோழ மன்னா... வரங்களிலேயே கொடியது சாகாவரமே! அழிவின்றி வாழ்ந்துகொண்டே இருப்பதைப் போல், ஒரு கொடிய துன்பம் இருக்கவே முடியாது. ஒன்று அழிக்க முடியாததாக ஆகிவிடும் பட்சத்தில், அதிலிருந்து ஆயிரமாயிரம் அழிக்க முடியாதவை தோன்றி உலகமே ஜனக் காடாகி விடும். நிற்க, அமரக்கூட இடம் இருக்காது. எவரும் எவரையும் அழிக்க முடியாது என்றாகி விட்டால், எவரும் தங்கள் வாழ்வின் நிமித்தம் உழைத்துப் பிழைக்கவும் விரும்பமாட்டார்கள். சண்டை சச்சரவுகளும் இருக்காது. யாரும் யாரையும் கொல்லவோ, கொல்வதால் வெல்வதோ நடக்கவே நடக்காது.’’

‘`மொத்தத்தில் இந்தப் பூமியே இப்போதிருப்பது போல் இன்றி, பெரும் ஜனாபாரத்தோடு விளங்கிடும் என்கிறீர்கள், அப்படித்தானே?’’

‘`அதிலென்ன சந்தேகம்?’’

‘`ஓர் அசுரனுக்கு அப்படி வரம் தருவதால், எல்லாமும் அப்படி மாறிவிடும் என்று எப்படிக் கருதமுடியும்?"

‘`எல்லோருமே துந்து போல் தவம் புரிந்தால் அப்படி ஆவது சாத்தியம்தானே?’’

‘`தவம் புரிந்தால்தானே?’’

‘`சாகாவரம் கிடைக்கும் என்றால் போதும், உலகத்தவர் எல்லோருமே தவத்தில் இறங்கிவிடுவர். இல்லாவிட்டால், அப்படியொரு வரம்

பெற்றவனால் கொல்லப்படும் ஆபத்து ஏற்பட்டு விடுமே?"

"சரி, பிறகு என்னாயிற்று?'

‘‘என்னாகும்... ஒரே அட்டகாசம்தான். தன் வரஸித்தியை மையமாக வைத்து, வரம் கொடுத்த பிரம்மனின் லோகத்தையே ஆட்டிப் படைக்கத் தொடங்கினான் துந்து’’

``இது என்ன கொடுமை?’’

‘‘அசுரம் எப்போதுமே இப்படிப்பட்டதுதான்.’’

``பிறகு?''

‘‘பிறகென்ன நிகழ முடியும்? பிரம்மாவுடன் இந்திரன் முதலான தேவர்கள் ஸ்ரீவைகுண்டம் சென்று மகாவிஷ்ணுவின் பாதாரவிந்தங்களைப் பணிந்தனர்.

துந்துவை அழிக்கவோ அடக்கவோ அப்போது வழியில்லை. துந்துவும் பூமியில் அப்போதுள்ள எவராலும் தன்னை அழிக்க முடியாதபடி வரம் பெற்றிருந்தான். எனவே, பூமியிலுள்ள எவரைப் போலவும் இன்றி வாமனமாய் அதாவது குள்ள வடிவினனாய் ஒரு பிராமணர் போல் புறப்பட்டார் மகாவிஷ்ணு. அப்போது துந்துவும் அசுவமேதயாகம் செய்ய முனைந்திருந்தான்..."

‘‘வரசித்தி பெற்றவனுக்கு எதற்கு அசுவமேத யாகம்?’’

"வரசித்தி என்பது உடம்புக்கும் உயிருக்கும்தான். பட்டம், பதவி, அதிகாரத்துக்கு அல்லவே...? துந்து இந்திர பதவியை அடைய விரும்பினான். அதற்கு நூறு அசுவமேத யாகம் புரியவேண்டும். எனவேதான் அசுவமேத யாகம் புரியத் தயாராகிக் கொண்டிருந்தான்."

‘‘இதனால்தான் தனது பதவிக்குஆபத்து என்று இந்திரன் திருமாலின் காலில் விழுந்தானோ?’’

``ஆம். துந்து இதுபோல் வேள்வி செய்து தேவர்களின் எல்லா சக்தியையும் பறித்து தன்னைச் சார்ந்த அசுரர்களுக்கு அளித்துவிட்டு, தேவர்களை அடிமைகளாக்க விரும்பினான்...''

``கொடுமை..."

``கொடியது என்பதால்தானே அப்படியான குணத்தை அசுரம் என்கிறோம்.''

``பிறகு என்னாயிற்று? வாமனராய் வந்த விஷ்ணு என்ன செய்தார்?''

``வெகு அழகாய் ஒரு தந்திரம் புரிந்தார்!''

``தந்திரமா.. என்ன அது?''

``தேவிகா என்றொரு நதி. அந்த நதிக்கு நீராட துந்து வந்த தருணத்தில், அதில் குதித்து தற்கொலை புரிய முனைபவர் போல் நாடகமாடினார்.''

``இது என்ன விந்தை?''

``ஆம். துந்து எதிரில் இப்படி விந்தை புரியப் போய்தான், அவனும் நெருங்கி வந்து 'ஓய் குள்ள பிராமணரே... என்னாயிற்று என்று தற்கொலைக்கு ஆசைப்படுகிறீர்?' என்று கேட்டான்.

'உனக்கென்னப்பா... நீ இந்த உலகுக்கே சக்ரவர்த்தி. உன்னைப் பார்த்து மும்மூர்த்திகளே பயப்படுகின்றனர். நானோ வறுமையால் வாடும் ஏழை. என் சகோதரன் எங்கள் சொத்தை எல்லாம் தான் எடுத்துக்கொண்டு, இந்த நதியிலும் தள்ளி விட்டுச் சென்றுவிட்டான். கேட்டால்... என்னைப் போன்றவர்களுக்குச் சொத்தில் பங்கு தர விதியில்லை என்று ஏதேதோ கூறுகிறான். குள்ளனாய்ப் பிறந்தது என் குற்றமா மன்னா... நீயே சொல்...' என்றார்.

வாமனரின் பேச்சு துந்துவை அசைத்தது. தனது ராஜ்ஜியத்தில் தன் இஷ்டப்படியே எல்லோரும் நடக்கவேண்டும் என்று விரும்பும் அவனது மனோபவம், வாமனரின் பேச்சால் கொதி நிலைக்குப் போயிற்று!

‘குள்ள பிராமணரே... உங்கள் சகோதரன் முன்னால், நான் உங்களை வாழவைத்துக் காட்டுகிறேன். உங்களுக்கு என்ன வேண்டுமோ என்னிடம் கேளுங்கள். அசுவமேத யாகத்தின் பொருட்டு நானும் அந்தணருக்குத் தானம் செய்ய வேண்டிய கடமை கொண்டவனாவேன். அந்தத் தானம் உமக்கானதாய் இருக்கட்டும்' என்றான்.’’

“பிறகு?”

“பிறகுதான் ஆரம்பமாயிற்று வாமனலீலை!" என்றார் ரிஷி. அந்த அற்புத லீலையைப் பற்றி அறிய பெரும் ஆவலுடன் தயாரானான் கிளிச் சோழன்!

**- தொடரும்...**

20 Nov 2018

# ரங்க ராஜ்ஜியம் - 17



ரங்க ராஜ்ஜியம் - 17

இந்திரா சௌந்தர்ராஜன்

**மச்சணி மாட மதிளரங்கர் வாமனனார்**
**பச்சைப் பசுந்தேவர் தாம்பண்டு நீரேற்ற**
**பீச்சைக் குறையாகி யென்னுடைய பெய்வளைமேல்**
**இச்சையுடையரே லித் தெருவே போதாரே**

**- நாச்சியார் திருமொழி**



`அந்தணரே! உங்கள் சகோதரன் முன்னால் உங்களை நான் வாழவைத்துக் காட்டுகிறேன். உங்களுக்கு என்ன வேண்டுமோ என்னிடம் கேளுங்கள். அசுவமேத யாகத்தின் பொருட்டு நானும் அந்தணருக்கு தானம் செய்யவேண்டிய கடமை கொண்டவன்.

அந்தணருக்கான அந்த தானம் உமக்கானதாய் இருக்கட்டும்...' என்றான்.''

“பிறகு?”

“பிறகுதான் ஆரம்பமாயிற்று வாமனலீலை. ‘அப்பனே நீ அதிகமெல்லாம் எனக்கு எதையும் தரவேண்டாம் என் கால்களால் மூன்றடி நிலம் கொடுத்தால் போதும்’ என்று வாமனர் கூற, துந்து சிரித்துவிட்டான்.
‘அற்பம்... இது மிகமிக அற்பம்! மூன்றடி என்ன? மூன்று கோடி அடிகள்கூட கேளுங்கள் தருகிறேன். இந்த உலகம் என் உலகம். இந்த வானம் என் வானம். சர்வம் என் வசம்’ என்று அவன் பேசிய பேச்சில் செருக்கின் செம்மாப்பு!'' - மகரிஷி சற்று இடைவெளி விட்டு கிளிச்சோழனைப் பார்த்தார்.

“மகரிஷி... எதற்கிந்த பார்வை?''

“அகந்தை கொடியது - அதிலும் அசுர அகந்தை கொடிதினும் கொடியது! நம்மை நாம் அறியத் தொடங்கவே ஒரு பிராயம் தேவைப்படுகிறது. அப்படி அறியத் தொடங்கும்போது, முழுமையாக நம்மை நாம் அறிந்துகொள்கிறோமா என்றால் அதுவுமில்லை. நம் தாய் தந்தையை நாம் தீர்மானிக்கவில்லை - நம் பிறப்பு ஆண் என்றோ பெண் என்றோகூட நாம் தீர்மானிப்பதில்லை. பிறந்ததால் வளர்கிறோம், வளர்வதால் வாழ்கிறோம், வாழ்வதால் காண் கிறோம், காண்பதால் அறிகிறோம், அறிவதால் உணர்கிறோம் - இப்படி நம்மைச் சுற்றி உள்ளவற்றாலேயே நாம் ஆளாகிறோம். இதில் அடுத்து என்ன நடக்கும் என்பதும் நமக்குத் தெரியாது. நடக்க நடக்கவே எதுவும் தெரியும். கூட்டிக்கழித்துச் சொல்லப்போனால் பிரமாண்டமான இந்த உலகத்தில் கோடானு கோடி தூசுகளில் ஒரு தூசு நாம்... இதுதான் யதார்த்தம்! ஆனாலும் உலக மாயை ஆட்டுவிக்கத் தொடங்கிவிட்டால் எப்படி ஆகிவிடுகிறோம். என்று பார்த்தாயா?”

“புரிகிறது மகரிஷி. நீங்கள் இத்தனை விரிவாகக் கூறும்போது, எனக்கேகூட மேனி சிலிர்க்கிறது. தவறியும் அகந்தை வயப்படக்கூடாது என்கிற எச்சரிக்கை ஏற்படுகிறது.”

"அதற்காகவே உன்னை அப்படிக் கண்டேன். என் பார்வையின் பொருள் புரிந்து நீயும் சரியாக பதில் கூறிவிட்டாய்."

"மகரிஷி... வாமனர் அடுத்து என்ன செய்தார்?''

"என்ன செய்தாரா? துந்து முன் விசுவரூபம் எடுத்து நின்றார்! அதைக் கண்ட துந்து மிரண்டு போய் 'விஷ்ணு நீயா?' என்று அதிர்ந்தான்.



'நானேதான். பிறராலோ, என்னாலோ, பிரம்மன், ஈசன் என்கிற மூர்த்திகளாலோ மரணம் கூடாது என்று நீ வரம் வாங்கிவிட்டால் போதுமா? `என்னாலும் எனக்கு மரணம் நிகழக்கூடாது' என்று உன்னையும் இணைத்துக் கேட்க உனக்கு அறிவில்லாது போய்விட்டதே துந்து' என்று விஸ்வரூப வாமன விஷ்ணு கூறவும் துந்து பதறிப் போனான்.

'அப்படியானால் எனக்கு என்னால் மரணம் ஏற்படுமா?' என்று கேட்டான்.

'ஏற்படுமா என்ன... ஏற்படப் போகிறது பார்...' என்று தன் ஒரு காலால் பூமியை ஒரு மிதிமிதித்தார் விசுவரூப வாமன விஷ்ணு! அப்படி அவர் மிதித்த இடத்தில் ஒரு பெரும் பள்ளம் உண்டாயிற்று, அந்தப் பள்ளத்தில் துந்துவும் தடுமாறி விழுந்திட, அப்படியே அவன் உடலைப் பள்ளத்தால்

உண்டான மண்ணே பொங்கிப் பின் சரிந்து மூடிற்று. விஸ்வரூப வாமன விஷ்ணுவும் வைகுண்டபதியாகிட, பிரம்மா உள்ளிட்ட தேவர்கள் போற்றித் துதி செய்தனர்.”

“அருமை... அற்புதம்... ஆனந்தம்... பேரானந்தம்...” - கிளிச்சோழன் குதூகலித்தான்.

“இதற்கே இப்படி என்றால், பலிச் சக்கரவர்த்தி யின் கர்வபங்க நிமித்தம் எடுத்த வாமனாவதாரம் மேலும் உன்னை குதூகலிக்கச் செய்யுமே?” என்றார் மகரிஷி!

“நான் பாக்கியன் - பரமபாக்கியன் - எப்பேர்ப்பட்ட மூர்த்தியின் ஆலயத்தை மீட்டுள்ளேன். அடேயப்பா... நினைக்க நினைக்கச் சிலிர்க்கிறதே..!” - என்று ஆனந்தக் கூத்தாடியவன் “அந்த அவதாரத்தையும் கூறிவிடுங்கள்” என்றான்!

கிளிச்சோழன் பக்தியோடு கேட்க, நீலி வனத்து மகரிஷி வாமனாவதாரத்தின் இரண்டாம் பாகத்தைக் கூறத் தொடங்கினார்.

‘` `பலி’ என்கிற சொல்லைக் கேட்டாலே எல்லோருக்கும் அச்சமே ஏற்படும். உடம்பை விட்டு உயிரைச் செயற்கையாகப் பிரித்தெடுக்கும் செயலுக்கான பெயர் அது. உண்மையில் பலி எனும் சொல்லுக்கு முக்தி என்றொரு பொருள் உண்டு. இந்த `பலி' என்பது இறைநிமித்தம் மட்டுமே நிகழும்.

ஆலயங்களிலும் பலி பீடங்கள் இருக்கும்! இங்கே நாம், ஆணவம், அறியாமை முதலான நம் எண்ணங்களைப் பற்றியிருக்கும் உணர்வுகளைப் பணிந்து வணங்கிப் பலியிடுவோம். இதனால் சுத்திகரிப்புக்கு உள்ளாவோம். இப்படிச் சுத்திகரிப்புக்கானதாகவும் இறைவழியாகவும் உள்ள ஒரு செயலுக்கான பெயரையே தன் புத்திரனுக்குச் சூட்டியிருந்தான் விரோசனன் என்பவன்! இந்த விரோசனன் யாரோ அல்ல... நரசிம்மாவதாரம் என்று ஓர் அவதாரமே நிகழக் காரணமான பக்த பிரகலாதனின் புத்திரன்தான் விரோசனன்! இவன் புதல்வனும், பிரகலாதனின் பேரனும்தான் ‘பலி’ எனப்பட்டான்!

பாட்டன் பிரகலாதன் வழியில் விஷ்ணு பக்தியோடு வளர்க்கப்பட்டதால் மகாபலி என்றானான். பாட்டனே இவனுக்கு ஆன்மிக குருநாதரும் கூட! ஆனபோதிலும் அசுர வம்ச வித்தாக இருந்தமையால், அசுரர்களின் குருவான சுக்கிராச்சார்யர் இவனுக்கும் ராஜகுருவாக ஆனதோடு, பலியை பிரகலாதனிடமிருந்து பிரித்து அவனை பெரும் ஆசாபாசங்களுக்கு ஆட்படுத்தி, இந்திரன் முதலான தேவர்களை எல்லாம் அடிமைகளாக்கும்படிச் செய்தார்.

அசுரகுலத்தில் ஹிரண்யனுக்குப் பிறகு அவனது கொள்ளுப் பேரனான பலி அசுர புத்திக்கு ஆளாகி பெரும் கர்வமும் கொண்டவனானான்.

'பலி! உன் கொள்ளுப் பாட்டன் ஹிரண்யன் சாதிக்காததை நீ சாதிக்கவேண்டும். ஈரேழு பதினான்கு புவனங்களும் அசுர சாம்ராஜ்ஜியம் என்றாகி, தேவர்கள் இங்கெல்லாம் பணியாளர் களாகி ஜீவிக்கவேண்டும்' என்று நாள்தோறும் கூறி வந்தார். அதோடு, `அசுர குலம் தழைக்க வேண்டும் என்றால் யக்ஞம் எனப்படும் வேள்வி மிக முக்கியம். இந்த வேள்வியில் வழங்கப்படும் அவிர்பாகங்களாலேயே அசுர சக்தி தேவசக்தியை விஞ்சும் சக்தியாக மாற முடியும். இந்த உலகின் மிக உன்னதமான ஒரு செயல்பாடு உண்டென்றால் அது யக்ஞமே' என்று பலியை யக்ஞம் புரியவும் தூண்டினார்.

மகாபலியும் யக்ஞம் புரிந்ததோடு அவிர் பாகங்களை அசுர சக்திகளுக்கு வழங்கிட, உலகின் சமநிலை மெள்ளக் கெடத் தொடங்கியது. ரிஷிகள், முனிகளால் ஆத்மார்த்த தவம் இயற்ற முடியாது போயிற்று. சத்வ குணம் கொண்டவர்கள் நிம்மதி இழந்தனர். காமம் பெருகி அசுர வித்துக்கள் ஏராளமாய் தோன்றினர். சத்யமும், தர்மமும் நலிந்து கொண்டே போயின. பலியின் ராஜ்ஜிய நிர்வாகம் பிற அசுரர்களின் கொடூர நிர்வாகமாக இல்லை, அதேநேரம் தேவதமும் துளியுமில்லை.



இதனால் கவலைகொண்ட இந்திராதி தேவர்கள், வழக்கம் போல் மகாவிஷ்ணுவை தஞ்சம் அடைந்து, வினோதமான ஓர் அசுர ஆட்சியை தாங்கள் கண்டு வருவதாகவும் இது தொடர்ந்தால் சத்ய, தர்மங்கள் பூண்டோடு அழிந்துவிடும் என்று முறையிட்டனர்.

ஸ்ரீமகாவிஷ்ணுவும், 'காலத்தால் உங்கள் குறை தீரும். அச்சமும் சலனமும் இன்றி நீங்கள் உங்கள் ஜபதபங்களை தொடருங்கள். இது போன்ற தருணங்களில் நீங்கள் காட்டும் தீர்க்கமே மாற்றத்துக்குச் சக்தி தரும்' என்றார்.

அப்போது ரிஷிகளும் 'அப்படி தவத்தில் ஈடுபட எங்களால் முடியவில்லை. நாங்கள் புலனடக்கத்துக்கு முயலும் போதெல்லாம் எங்கிருந்தோ ஓர் அசுரன் எங்கள் முன் தோன்றி எங்களைத் தடுக்கிறான். மீறினால் வெட்டிக் கொலையே செய்துவிடுகிறான். சிலர், எங்கள் வேள்வியின் அவிர்பாகத்தை அசுர சக்திக்கு அளிக்க வலியுறுத்துகின்றனர். இதனால் தேவர்களுக்கான வேள்வி முற்றாக நின்று போய் தேவர்கள் பசியோடு நலிந்து வருகின்றனர்' என்று நீண்ட விளக்கமளித்தனர்.

`இனி அவ்வாறு நிகழாது! யாம் அதிதி எனும் ரிஷி பத்தினியின் கர்ப்பத்தில் மானுடப் பிறப்பெடுக்க உள்ளோம். காஸ்யபரே இந்தப்

பிறப்பில் என் தந்தை. இவராலேயே துந்து முதல் சகல அரக்கக் குலமும் தோன்றியது. எனவே, இவரின் மூலம் பிறந்து யாம் புரியப்போகும் லீலை, காலகாலத்துக்கும் ஓர் அழியாப் பாடமாய் திகழப் போகிறது. எனவே, நீங்கள் உங்கள் வேள்விகளைத் தொடருங்கள். இனி, அசுர சக்திகள் மெள்ள தங்கள் வலிமையை இழக்கப் போவதைக் காண்பீர்கள்' என்று கூறினார். பின் அவ்வாறே அதிதியின் கர்ப்பத்தில் கலந்து மானுட கருப்பிண்டமாய் வளரத் தொடங்கினார்.

அதிதியின் கர்ப்பம் வளர வளர புறத்தில் அசுரர்கள் மெள்ள தங்கள் வீரியத்தை இழக்கத் தொடங்கினர். நீண்ட உறக்கம், அசமந்தம், அஜீரணம், உடல் நலிவு, மனச்சலனம் என்று உடல் தொடர்பான வினைகளுக்கு ஆட்பட்டனர். இதையறிந்த சுக்ராசார்யர் தன் தீட்சையாலே சகலத்துக்கும் காரணம் அதிதியின் கர்ப்பம் என்பதை உணர்ந்துகொண்டார். தான் உணர்ந்ததை மகா பலியடமும் கூறினார். அதைக் கேட்டு கோபம்கொள்ள வேண்டிய மகாபலி, 'மகாவிஷ்ணு இத்தனை ஆற்றல் படைத்தவரா!' என்று வியக்கவே செய்தான்.

'நீ வியப்பதற்காக நான் இந்த ரகசியத்தைக் கூறவில்லை. உன்னை மேலும் வலிமைப்படுத்திக் கொள். இல்லாவிட்டால் நீயும் உன் கொள்ளுப் பாட்டன் போல் விஷ்ணுபக்தனாகி, அரக்கர் குலத்தைத் திரும்ப தேவர்களுக்குக் கீழே கொண்டு சென்றுவிடுவாய்'' என்றார்.

மகாபலியும் சுக்ராசார்யரின் வழிகாட்டுதலில், வேள்வி புரிந்து பலம் பெருக்க முனைந்தான். அதேவேளை, அதிதியும் ஒரு புரட்டாசி மாத சுக்லபட்ச சிரவண துவாதசி திதியில் அபிஜித் நட்சத்திரத்தில் (காலங்களில் மகோன்னதமான காலம்) அழகாய் கருக்கொண்ட மகாவிஷ்ணுவை ஒரு ஆண் மகவாய் பெற்றெடுத்தாள். மகாவிஷ்ணு வும் வாமனனாக இங்கே வளரத் தொடங்கினார்.

இந்தப் பிள்ளை தங்கள் கலி (துயர்) தீர்க்கப் பிறந்த பிள்ளை என்பதால், சூரியன் தன் பங்குக்கு சாவித்திரி மந்திரத்தை உபதேசித்தான். குருவான பிரகஸ்பதி பிரம்ம சூத்திரத்தை தேடி வந்து உபதேசித்தார். காஸ்யபரும் `முஞ்சி' எனும் மரத்தடியை கொடுத்திட, பூதேவி ஆசனம்

கொடுத்தாள். சந்திரன் தண்டம் கொடுத்தான், தாயான அதிதி கௌபீனம் கொடுத்தாள். பிரம்மன் கமண்டலம் கொடுத்தான். குபேரன் பிக்ஷை பாத்திரம் கொடுத்தான், பார்வதி அதில் முதல் பிக்ஷை இட்டாள்.

பின் பிரத்வாஜ முனிவர் இவருக்கு உபநயனம் செய்வித்து வேத அத்யயனம் செய்வித்தார். ஆங்கீரச முனி இசைபட சாமவேதத்தை சொல்லித் தந்தார்.

மொத்தத்தில் ஒரு அவதார நாடகம் அதற்குண்டான திட்டங்கள் துளியும் குறைவின்றி நடந்தேறிட, வாமனமுனி எனும் வாமனப் பிள்ளை குட்டையான உருவில், அதேநேரம் ஜொலிக்கும் தேஜஸுடன் தன் அவதார நோக்கின் உச்சக்கட்டத்துக்குச் செல்லலானான்!

மிகச் சரியாக பலிச்சக்ர வர்த்தியும் வேள்விகளுக் கெல்லாம் வேள்வியான அஸ்வமேத யாகத்தைக் `குருக்ஷேத்திரம்' எனுமிடத்தில் நிகழ்த்தத் தயாராகியிருந்தான். இந்த வேள்வியை அவன் பலமுறை செய்துவிட்டான். இதை நூறுமுறை செய்யும் ஒருவன் எப்படிப்பட்ட பிறப்பாளனாக இருந்தாலும் இந்திரனுக்கும் மேலானவனாகி விடுவான். அவனை அமிர்தம் தேடி வரும். தேவ பொக்கிஷங்கள் சகலத்துக்கும் அவன் அதிபதியும் ஆகிவிடுவான். அந்த வகையில் மகாபலி தனது நூறாவது வேள்வியைத் தொட்டு அதன் முனைப்பில் இருந்தான்.

இவ்வேள்வியில் தானம் பிரதானம். தானம் பெறுபவர் குறையை உணர்ந்தால் வேள்வி முழுமை பெறாது. எனவே, மகாபலி குறைவின்றி இந்த வேள்வியை நடத்திடும் நிலையில், இதில் பங்குபெற வாமனனும் புறப்பட்டான். பலியின் வேள்வியை நினைத்த மாத்திரத்தில் அதில் சேர்க்கப்பட்ட அசுரர்களுக்கான அவிர்பாகம் அவ்வளவும், அந்த வாமன மூர்த்தியைச் சென்று சேரத் தொடங்கின!

அதைப் பெற வேண்டிய அசுராதியர் ஓலமிட, மகாபலி அதிர்ந்தான். குருவான சுக்ராசார்யரிடம், 'எதனால் இப்படி நடக்கிறது?' என்று கேட்டான். அவரும் கண்களை மூடி நிஷ்டையில் ஆழ்ந்து வாமனராய் ஸ்ரீமகாவிஷ்ணு வருவதை உணர்ந்தார். அதிர்ந்தார்!

**- தொடரும்...**

04 Dec 2018

# ரங்க ராஜ்ஜியம் - 18



ரங்க ராஜ்ஜியம் - 18

இந்திரா சௌந்தர்ராஜன் - ஓவியம்: ம.செ

நீலிவனத்து மகரிஷி திருக்கதையைத் தொடர்ந்தார்.

''அவிர்பாகம் அவ்வளவும் வாமன மூர்த்தி யைச் சென்று சேரத் தொடங்க, அவற்றைப் பெற வேண்டிய அசுராதியர் ஓலமிட்டார்கள்; மகாபலி அதிர்ந்தான். குருவான சுக்ராச்சார்யரிடம், 'எதனால் இப்படி நடக்கிறது?' என்று கேட்டான்.



அவரும் கண்களை மூடி நிஷ்டையில் ஆழ்ந்து, வாமனராய் ஸ்ரீமகாவிஷ்ணு வருவதை உணர்ந்தார், அதிர்ந்தார்!

'மகாபலி! எல்லாம் அந்த பாம்பணையான் செயல். அவன் அம்சமே

வாமனமாக உன் பரம்பரையில் தோன்றி, உன்னை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. உன் வேள்விக்கான உச்சக்கட்ட சோதனையும் தொடங்கிவிட்டது. நீ அந்த வாமனன் விஷயத்தில் கவனமாக இருந்தால் போதும்... வேறு ஏதும் செய்யத் தேவையில்லை..' என்றார்.

'என் பொருட்டு அந்த மகாவிஷ்ணுவேவா வருகிறார்..? அதிசயம், ஆச்சர்யம்! உலகமே அவரைத் தேடி அலைகையில், அவர் என்னைத் தேடி வருவதே எனக்குப் பெரிய பெருமை. வரட்டும்... வரட்டும்...' என்று அச்சமின்றி அவர் வருகையைச் சிந்தித்தவன், அதை அகந்தையோடு உணர்ந்ததுதான் பிழை! 'அடேய் பலி... மகிழாதே. விஷ்ணு பற்றி நீ அறியாய். மாமாயன் அவன். உன் நிமித்தம் பிரம்மசாரி பிராமணனாய் தானம் கொள்ள வருகிறான். எச்சரிக்கை!'

'இதில் எச்சரிக்கைக்கொள்ள என்ன இருக்கிறது குருவே? இது எனக்கு எவ்வளவு பெருமை? சகல புவனங்களையும் சகல ஜீவராசிகளையும் படைத்ததாகப் பெருமை கொள்பவர், தான் படைத்த ஒருவனிடமே யாசகம் பெற வருகிறார் என்றால், இதில் யார் பெரியவர்... பெறுபவரா, தருபவரா?'

மகாபலிக்குள் இருந்த ஆணவமே அப்படிக் கேட்கச் செய்தது.

'வேண்டாம் பலி... உன் ஆணவம் உன்னைக் கவிழ்த்துவிடும்.'

'என்ன குருவே... என் தைரியத்தைப் புதிதாய் ஆணவம் என்கிறீர்? இவ்வளவு நாள்கள் இல்லாத ஆணவம் இப்போது வந்துவிட்டதா என்னிடம்?'

'அடேய் அறிவிலி! அது இப்படித்தான் வெளிப் படும். அதை ஆராய இப்போது காலமுமில்லை. உன் கவனமெல்லாம் வேள்வியில் மட்டும் இருக்கட்டும்.'

'அதிலென்ன சந்தேகம்? அதேநேரம், அவர் என்னிடம் யாசிப்பது என்பதும் வேள்வியின் ஓர் அங்கம்தானே? நான் அதை மறுத்தால் வேள்வி பங்கப்படாதா?'

‘உண்மைதான்... இனி உன்னிடம் பேசிப் பயனில்லை. பொறுத்திருந்து பார்த்து அதற்கேற்பவே நடக்கவேண்டும். நீ உன் கடமையைச் செய்...’ என்று ஒதுங்கி நின்றார் சுக்கிராசார்யர்!



வாமனனும் யாகசாலைக்குள் நுழைந்தார்!

தாழங்குடை பிடித்து, கமண்டலம் ஏந்தி, பூ மண்டலம் மயங்க ஜோதிப்பிழம்பு போல வந்த அந்தப் பிள்ளையைக் கண்டு, அங்கிருந்த சகலரும் ஒரு வினாடி தங்களை மறந்தனர்.

காணக்கிடைக்காத காட்சி... காட்சிகளுக்கெல்லாமும் காட்சி!

“வாரும் அதிதி புத்ரரே... எம் வழித்தோன்றலே... சீரிய வேதகரே... உம் ஒருவர் வருகை ஆயிரமாயிரம் வேதியர்க்குச் சமமானது. என்ன ஒரு தேஜஸ்... என்ன ஒரு காந்தம்... என்ன ஒரு திவ்யம்... என்ன ஒரு பரிமளம்..! தாங்கள் என்னிடம் தாராளமாய் எதையும் வேண்டலாம். அதேநேரம், அது உமது தேவைக்கானதாக மட்டுமே இருக்கவேண்டும். என்னை குறைவுபடுத்துவதாக இருந்துவிடக் கூடாது.”

-சுக்கிராசார்யரின் எச்சரிக்கையை மனதில் கொண்டும் அதேநேரம் தான் ஒரு மாமன்னன் என்பதை மறந்துவிடாமலும் வேள்விக்கான நீதியோடு பேசி முடித்தான் மகாபலி.

புன்னகைத்தார் வாமனன்! சகல ஜீவராசிகளுக்குள்ளும் ஒரு சிலிர்ப்பு அதன் நிமித்தம் ஏற்பட்டது. மகாபலியும்கூட அதை உணர்ந்தான்.

‘மகாபலி... மிகுந்த எச்சரிக்கையோடு பேசியிருக்கிறாய். இந்த வேள்வியில் தானம் ஓர் அங்கம். இல்லாவிட்டால், நானும் இங்கு வந்திருக்கமாட்டேன்; நீயும் இப்படிப் பேசியிருக்கமாட்டாய்.’

‘உண்மைதான்... ஆயினும், வராது வந்த மாமணி தாங்கள். அந்த மாமணியே என்னிடம் யாசகம் பெறப்போகிறது என்றால், அதைவிட வேறு பெருமை எனக்கு இருக்க முடியுமா என்ன?’

‘யாசகம் தாழ்வல்ல மகாபலி... அதுவொரு கர்வபங்கம் - தன்னடக்கம்!’

‘ஆஹா... தாழ்வில்லாத உயர்ந்த ஒன்றுக்கு நான் ஆட்படப் போகிறேன் என்பது பெருமைக்கும் பெருமையல்லவா?’

‘உன்னை மையமாக வைத்தே சிந்திக்கிறாய். நான் கேட்கப் போவதைத் தர இயலாமல் போனால், நீ என்ன ஆவாய் என்று எண்ணிப் பார்க்கிறேன்.’

‘என்னிடம் இருப்பதைக் கேட்கும்பட்சத்தில் அதற்கெல்லாம் இடமே இல்லை அதிதி புத்ரரே...’

‘இல்லாத ஒன்றைக் கேட்பவன் நல்ல யாசகன் இல்லை மகாபலி.’

‘பிறகென்ன கேளுங்கள்... நாடு, நகரம், வீடு, வாசல், மாடு, மடுவு, காடு, கழனி... எது வேண்டும்? இந்தப் பூவுலகே என் சொத்துதான்...’

மகாபலி அப்படிக் கேட்கவும் அருகில் நின்றுகொண்டிருந்த சுக்கிராசார்யர் தொண்டையைச் செருமிக் கொண்டார். தன் கண் வழியே... ‘மகாபலி எனும் மகாகர்வியே... வாயை விடாதே. பாம்பைத்

தேடி வந்த தவளை ஆகாதே...' என்பது போல் பார்த்தார்.அதெல்லாம் மகாபலிக்குப் புரியவுமில்லை; வாமனனுக்குப் புரியாமலுமில்லை. 'அப்படியா?' என்று பலபொருள்பட கேட்டுவிட்டு, 'சுக்ராசார்யர் ஏதோ சொல்ல விரும்புவது போல் தெரிகிறது. என்னவென்று கேள் மகாபலி...' என்று அப்போதும் ஒரு வாய்ப்பை மகாபலிக்கு அளித்தார்.

'எங்கே நீங்கள் நான் தர முடியாத தைக் கேட்டு... அதனால் வேள்விக்கு பங்கம் நேரிட்டுவிடுமோ என்று அவருக்குள் அச்சம்' - என்றான் மகாபலி.

'அதுதானே நல்ல குருவுக்கும் அழகு. போகட்டும்... உனக்கு அந்த அச்சம் இல்லையா?'

'என்ன முனி புத்ரரே! என்னைச் சோதிக்கிறீரா?'

'சோதனையா... நாராயணா! நான் சாதாரணமாகத்தான் கேட்டேன்.'

'எப்படிக் கேட்டாலும் சரி, நீர் என்னிடம் கேட்பது எனக்குப் பெருமை. உம் கை தாழ்ந்திருக்க, என் கை உயர்ந்திருக்க... யாருக்குக் கிடைக்கும் இப்படி ஒரு பாக்கியம்?"

மகாபலி இப்படிச் சொல்லும் போது அவன் மார்பு விரிந்தது. முகத்தில் செருக்கு தாண்டவமாடியது.

'பிறகென்ன... உனக்கு பாக்கிய மான அந்த யாசகத்தை நானும் கேட்டுவிடுகிறேன். எனக்குத் தேவை மூன்றடி நிலம். அதுவும் என் காலின் அளவில் மூன்றே மூன்றடி. அவ்வளவுதான்!'

வாமனனின் அந்த 'அவ்வளவு தான்' என்ற முடிப்பு, மகாபலியை வாய்விட்டுச் சிரிக்க வைத்துவிட்டது. சுக்கிராசார்யரோ ஒரு பெரும் வலைக்குள் மகாபலி அகப்படப்போவதை உணர்ந்தவர் போல் தவிக்கத் தொடங்கினார்!''

**- தொடரும்...**



**சிறப்புக்குச் சிறப்பு...**

**ந**மக்குத் தெரிந்த திருத்தலங்கள், நாம் வணங்கும் அடியார்களின் சிறப்புப் பெயர்களைத் தெரிந்துகொள்வோமா?

**திருமங்கையாழ்வார்:** நாலுகவிப் பொருமாள்

**திருநாவுக்கரசர்:** தாண்டகவேந்தர், வாகீசர்.

**திருவாதவூரர்:** மாணிக்கவாசகர்.

**கங்கை:** பாகீரதி

**வைகை:** வேகவதி

**உத்திரபிரதேஷம்:** பிரம்மரிஷி தேசம்

**கேரளம்:** கடவுளின் தேசம்

**திருப்பதி:** அஞ்சனகிரி

**திருச்செந்தூர்:** திருச்சீரலைவாய், செந்தில்.

**மதுரை:** திருஆலவாய், நான்மாடக்கூடல்.

**திருநள்ளாறு:** ஆதிபுரி

**நாங்குநேரி:** வானமாமலை

**சிதம்பரம்:** தில்லை, சிற்றம்பலம்.

18 Dec 2018

# ரங்க ராஜ்ஜியம் - 19



ரங்க ராஜ்ஜியம் - 19

இந்திரா செளந்தர்ராஜன் - ஓவியம்: ம.செபடங்கள்: என்.ஜி.மணிகண்டன்

**“ஏழை ஏதலன் கீழ்மகனென்னாது**
**இரங்கி மற்றவற்கு இன்னருள் சுரந்து**
**மாழை மான்மட நோக்கி உன் தோழி**
**எம்பி எம்பியென்றொழிந்திலை உகந்து**
**தோழன் நீ எனக்கு இங்கொழியென்ற**
**சொற்கள் வந்து அடியேன் மனத்திருந்திட**
**ஆழி வண்ண! நின்னடியிணையடைந்தேன்**
**அணி பொழில் திருவரங்கத்தம்மானே!”**

- பெரிய திருமொழி

மகாபலி, வாமனர் கேட்ட அந்த மூன்றடி நிலம் எனும் வரதானத்தை எண்ணி சிரியாய்ச் சிரித்தான். பின்னர், ‘`முனிபுத்ரரே… இது என்ன வேடிக்கை? பெரிதாய் ஆஸ்ரமத்தோடு கூடிய வனம், பல்லாயிரம் பசுக்கள் அல்லது நதி பாயும் கிராமம் அன்றேல் ஒரு நகரம், அதுவும் இல்லையென்றால்... பெரும் வேள்வியின் பொருட்டு தேவைப்படும் நவரத்தினங்கள் மற்றும் வேள்வி தானப் பொருள்கள்... இப்படி, உங்களுக்குப் பயன்பட வேண்டி யதைக் கேட்பீர்கள் என்று பார்த்தால், மூன்றடி நிலம் என்று கேட்டு என்னைச் சிரிக்கவைத்து விட்டீரே… இது என்ன விளையாட்டு! தைரியமாக தேவைப்படுவ தைக் கேளுங்கள்.” - என்று மகாபலி தன் அசுரச் சிரிப்புக்குப் பின்னே சற்று காரியக்காரனாகவும் பேசினான்.

விளையாடவில்லை பலி… இதுவே என் விருப்பம்! பரந்துபட்ட இந்த உலகில், எனக்கென ஓரடி நிலம்கூட இல்லை என்பதால் தான் மூன்றடி நிலம்கேட்டேன்."

“இந்த உலகில் உங்களுக்கென ஓரடி நிலம்கூட இல்லையா! இது என்ன பேதைமை? அதற்காக மூன்றடி நிலம் போதும் என்பது எந்த வகையில் சரி? நான் பேரரசன்… புவனங்கள் அவ்வளவும் என் சொத்து! அப்படிப்பட்ட என்னிடம் நீங்கள் இந்த பூ உலகையே கொடு என்றுகூட கேட்கலாம். அதுவே எனக்கும் பெருமை. மாறாக மூன்றடி கேட்பது என் வரையில் சிறுமையிலும் சிறுமை.”

“அது சரி… நீ முதலில் இந்த மூன்றடி நிலத்தைத் தா. பிறகு உன் விருப்பப்படி நீ சொன்னது போல் இந்த உலகைக் கேட்கிறேன். இது உன் சொந்தமாகத்தான் இருக்கிறது என்றால், இதில் மூன்றடியை நீ முதலில் எனக்குத் தந்தால் போதும்.”



“ “வேடிக்கையான மனிதர் நீங்கள்! சரி, அந்த மூன்றடி இடம் எங்கு வேண்டும், எத்திசையில் வேண்டும்... சொல்லுங்கள். உங்களுக்குத் தரவேண்டியதைத் தந்து விட்டு, நான் அடுத்த காரியத்தைச் செய்கிறேன்.”

“பேச்சு மாற மாட்டாயே?”

“இதென்ன கேள்வி? நான் மாபலி… பேரரசன்.”

“யாராக இருந்தால் என்ன? சொன்னதைச் செய்பவரும், சொன்னபடி நடப்பவருமே எனக்கும் மிக பிடித்தமானவர். சரி... நான் கேட்கும் இடத்தில் காலை வைப்பேன். அந்த அடியை நீ எனக்குச்

சொந்தமாக்கிவிட வேண்டும். சரிதானே?"

"தாராளமாக..."

"இது போதாது... உறுதி தர வேண்டும்."

"உறுதியா... நானா? போயும் போயும் மூன்றடிக்கா?"

"அதற்கேதான்!"



"நீர், தோற்றத்தில் மட்டும் சிறு பிள்ளை இல்லை... பேச்சு, செயல் என்று சகலத்திலும் சிறு பிள்ளைதான். சரி, உறுதி தருகிறேன் போதுமா?"

"சொன்னால் ஆயிற்றா? மணப்பெண்ணைப் பெண்ணின் தந்தை தாரை வார்த்துத் தருகின்ற மாதிரி, புண்ணிய ஜலத்தால் தரவேண்டும்."

"சரி... இன்னமும் ஏதாவது இருக்கிறதா?"

“இல்லையில்லை… அவ்வளவேதான்!”

வாமனர் அமரிக்கையாகச் சொல்ல, ஒரு கமண்டலத்தில் புண்ணிய ஜலம் கொண்டு வரப் பட்டது. அதுவரை அமைதியாக இருந்த சுக்கிராசார்யருக்குள் பெரும் பிரளயமே உருவாகத் தொடங்கிவிட்டது. அவரால் கூட, அந்த மூன்றடி நில சூட்சுமத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை. எனவே ஒரு காரியம் செய்யத் தீர்மானித்தார்.

ஒரு சிறு கரு வண்டாக மாறி, கமண்டலத்தின் துவாரம் வழியே வெளிப்படும் புண்ணிய ஜலம், அதன் வழியே வெளிப்படாதபடி, துவாரத்தை அடைத்துக்கொண்டு விட்டால் செயல் தடைப் படும். செயல் தடைப்பட்டால், அது சகுனத் தடையாக கருதப்பட்டு, இந்த மூன்றடி தானம் இப்போது இல்லை என்றாகும்.

இப்போதைக்கு இதைவிட வேறு எந்தக் காரியத்தையும் செய்ய இயலாது என்பதும் அவருக்குப் புரியவே, அங்கிருந்து மெள்ள நீங்கி, தன் தபோ சக்தியால் தன்னை ஒரு கருவண்டாக ஆக்கிக்கொண்டார். அப்படியே பறந்து திரியத் தொடங்கியவர், மகாபலி கொடுக்க ஆயத்தமான கமண்டலம் மேலேயே பறக்கத் தொடங்கினார்.

மகாபலியும் ‘உம் நான் தயார்’ என்று கூறவும், ‘சற்றுப் பொறு’ என்ற வாமனர் விசுவரூபம் எடுக்கத் தொடங்கினார். அதைக் கண்ட மகாபலி மட்டுமல்ல எல்லோருமே அதிசயித்தனர். விண்ணுக்கும் மண்ணுக்குமாய் தாழங்குடையோடு நின்ற வாமனர், காலை உயர்த்தியபோது அது சுழலும் பூமி உருண்டையின் விட்ட பாகத்தை விடவும் அகலமாக இருந்தது. மகாபலி விதிர்த் தான். அந்த ஓர் அடிக்குள் மொத்த பூ உலகமும் அடங்கிவிட்டது!

அடுத்து, அதே காலை விண்ணை நோக்கி உயர்த்தவும், பாதமே கண்களுக்குப் புலனாகாத அளவு உயர்த்தப்பட்ட கால்களைச் சுற்றிலும் சூர்ய சந்திரர் முதல் நட்சத்திர தேவதாதேவியர்கள் தெரிந்தனர். மகாபலி விதிர்ப்பின் உச்சத்துக்குச் சென்றது மட்டுமல்ல, சுக்ராசாரியர் தடுத்ததன் நோக்கத்தைப் புரிந்துகொண்டு, அவரைத் தேடவும் செய்தான்.



அவரோ கமண்டல துவாரத்தில் வண்டாகப் புகுந்து அடைத்துக்கொண்டிருந்தார். அடுத்த மூன்றாவது அடிக்காக வாமனர் மகாபலியைப் பார்க்கவும், மகாபலி தெளிந்தவனாக “எம்பெருமானே… என் சிரத்தில்தான் துளி இடம் உள்ளது. மற்றபடி உமக்கு நான் தர புவனத்தில் எங்கும் இடமில்லை" என்று கை கூப்பியபடி மண்டியிட்டுப் பணிந்தான்.

ஓங்கி உலகளந்த அந்தக் கால்களின் திருவடியை மகாபலியின் சிரத்தின் மேல் புன்னகையோடு வைத்தார் வாமனரும்! அப்படி அவர் காலடி பட்ட மாத்திரத்தில் அவன் சிரத்தில் ஒரு சிலிர்ப்பு!

அத்துடன், கமண்டல வாயின் வழியே புண்ணிய நீரை வரவழைத்து, தன் உள்ளங்கையில் பற்றி தாரை வார்த்துத் தர மகாபலி விழையவும், நீர் வராது உள்ளிருக்கும் சுக்ராசார்யர் வண்டு வடிவில் தடுத்தபடி இருந்தார். அதைக் கண்டு மகாபலி பதற்றமடைய, வாமனரோ துளியும் பதற்றமின்றி சொன்னார்.

“கலங்காதே மகாபலி! ஏதோ அடைப்பு போல் தெரிகிறது. தர்ப்பையைக் கொண்டு குத்திவிட்டால் போகிறது” என்று தர்ப்பைப் புல்லை வரவழைத்து, கமண்டல துவாரத்தின் உள்ளே விட்டு, அங்கே வழியை அடைத்தபடி இருக்கும் சுக்ராசார்யரை குத்தவும், கச்சிதமாக அவரது ஒரு கண்ணில் தர்ப்பை நுனிபட்டு, அதிலிருந்து ரத்தம் கொட்டத் தொடங்கியது.

இங்கோ, புண்ணிய ஜலம் பாய்ந்து மூன்றடி நிலம் வாமனரின் சொந்தம் ஆனது மட்டுமல்ல, மகாபலி சொன்னபடி நடந்தவன் என்றானான்! அப்படியே சாஷ்டாங்கமாய் வாமனர் காலில் விழுந்து ``எம்பெருமானே! அறிவு, அடக்கம், ஆற்றல் என்று சகலத்திலும் உங்களை விஞ்ச ஓருயிர் இந்த ஈரேழு புவனத்திலும் இல்லை என்பதைத் தெரிந்துகொண்டேன். நான், எனது, என்னுடையது போன்ற சொற்களால் ஆவதும் ஒன்றுமில்லை என்பதையும் புரிந்துகொண்டேன். என்னை மன்னியுங்கள்... என்னை இரட்சியுங்கள்... என்னை ஆட்கொள்ளுங்கள்...'' என்று கதறத் தொடங்கிவிட்டான் மகாபலி!

நீலிவனத்து ரிஷி கிளிச்சோழனிடம் வாமன அவதாரத்தின் பொருள் பொதிந்த செயல்பாட் டைச் சொல்லி முடித்தவராய், ``பாவம் சுக்கிராசார்யர்... தான் எனும் அகம்பாவமும், சுயநலமும் அவரின் ஒரு கண்ணைக் குருடாக்கின என்றால், மகாபலிக்கு பெரும் ஞானத்தை அளித்தன. `எம்பெருமானாம் அந்த இறைவனன்றி அணுவில்லை... அவனே சர்வவியாபி... அவனே சர்வக்ஞன்' என்பதை மகாபலியும் புரிந்துகொண் டான். இப்போது நீயும் புரிந்துகொண்டிருப்பாய்" என்றார்.

“ஆம் மகரிஷி... எம்பெருமானின் திருச்செயல் கள் அவ்வளவும் மனிதக் குலத்துக்கு பெரும் பாடம்! கேட்கக் கேட்க எனக்குத் திகட்டவில்லை. மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனம் என்கிற அவதாரங்கள் எனக்குப் பல நுட்பங்களை உணர்த்தின. ராமாவதாரமும் கிருஷ்ணாவதாரமும் கூட அப்படித்தானா?”

“இடையில் பரசுராமனையும், பலராமனையும் விட்டுவிட்டாயே..?”

“இந்த அவதாரங்களை எல்லாமும் தாங்கள் இதேபோல் விளக்கமாய் எனக்குக் கூறவேண்டும்.”

“ஒன்றை நன்றாய் தெரிந்துகொள். அவன் பெயரைச் சொல்லவே உள்ளது இந்த நாவு. அவனைப் பற்றி சிந்திக்கவே உள்ளது மனம். அவனைக் காண்பதற்கே இக்கண்கள் படைக்கப் பட்டன. ஆனால், நாம் இவ்வுலக மாயையில் மயங்கி இவற்றை எப்போதாவது செய்பவர்களாக

உள்ளோம். நீ மயங்கிவிடாமல் எம்பெருமானை விதவிதமாய்ச் சிந்திக்க, இந்த அவதாரக்கதைகள் உனக்குப் பெரிதும் உதவும். உனக்குச் சொல்லும் சாக்கில், நானும் சிந்தித்து பாக்யவானாவேன்" என்றார் மகரிஷி!

கிளிச்சோழனின் காலத்துக்குப் பிறகு, திருவரங்கம் ராஜமகேந்திர சோழனால் சீர்மை பெறத் தொடங்கியது. குறிப்பாய்... காவிரியில் வெள்ளம் பாயும் தருணங்களில், அரங்கத் தீவில் தெற்கிலும் வடக்கிலும் கிழக்கு மேற்காய் ஓடிடும் காவிரி, தெற்கில் கோயிலின் ராஜகோபுரம் கடந்து உள்புக முற்படுவதும், அதேபோல் வடக்கிலும் கொள்ளிட நீர் ஆலயத்துள் புகமுற்படுதுவதும் அதிகமாயிற்று!

இக்காலங்களில், பக்தர்கள் எம்பெருமானை தரிசிக்க இயலாமல் போனது. இதை அறிந்த ராஜமகேந்திரன் வடக்கிலும் தெற்கிலும் ஆலயத்து மதில் கடந்து உள் புகும் நீரின் ஊற்றுக்கண்களைக் கண்டறிந்து அடைத்ததோடு, இங்கெல்லாம் மண்ணில் நீர் பொங்கியெழ இயலாதபடி தள வரிசையை உருவாக்கி, நீர் ஊற்றுப் பெருகி வருவ தைத் தடுத்து, அந்த நீரும் ஆற்றோடு ஓடும்படி செய்தான். அடுத்தடுத்து நடந்த திருப்பணிகளால், திரு உண்ணாழிச் சுற்று, `ராஜமகேந்திரன் சுற்று' என்று பெயர்பெற்றது.

**- தொடரும்**

01 Jan 2019

# ரங்க ராஜ்ஜியம் - 20



ரங்க ராஜ்ஜியம் - 20

இந்திரா சௌந்தர்ராஜன் - ஓவியம்: ம.செ - படம்: என்.ஜி.மணிகண்டன்

**‘கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான்
திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து
அண்ணாந்திருக்கவே யாங்கவளைக் கைப்பிடித்த
பெண்ணாளன் பேணுமூர் பேரு மரங்கமே!’**

**-நாச்சியார் திருமொழியில் ஆண்டாள்.**

கிளிச்சோழன், ராஜமகேந்திர சோழன் வரிசையில், நந்தசோழன் என்பவன் திருவரங்கத்தில் செய்த கைங்கர்யமும் அலாதியானது! இவன், அரங்கநாதரைத் தன் பெண்ணின் பொருட்டு மாப்பிள்ளையாகவே அடையும் பேறு பெற்றவன்.



இவனாலேயே உறையூர் எனும் தலத்தில் அழகிய மணவாளராய் அரங்கநாதப் பெருமாள் பிரதி உருக்கொண்டார். நமக்கெல்லாமும் உறையூர் அழகிய மணவாளப் பெருமாள் ஆலயமும் கிடைத்தது. இதன் பின்னே நயமான காதல் கதை ஒன்றுண்டு.

நந்தசோழனுக்குப் புத்ர ப்ராப்தி இல்லை. அதனால் அரங்கநாதரிடம் மன்றாடினான். பெருமாளும் நந்தசோழன் புத்திரப்பேற்றுக்கு வேறு விதமாய் ஆளாகும்படிச் செய்தார்!

ஒரு தாமரைத் தடாகத்தில் - அன்றலர்ந்த தாமரைகளுக்கு நடுவில், ஓர் அழகிய பெண் மகவை அயோனியாகக் கிடத்தி அழச்செய்தார். குழந்தையின் அழுகுரல் அந்தப் பக்கமாய் சென்ற நந்தசோழனை இழுத்து வந்து குழந்தையைக் காணச் செய்தது!

குழந்தையா அது? குங்குமப்பூ!

அள்ளி எடுத்தவன், அப்போதே புரிந்து கொண்டான்... இவள் அரங்கன் பரிசென்று!

தாமரை நடுவில் கிடந்தெடுக்கப்பட்டவள் என்பதால், `கமலவல்லி' எனும் திருநாமத்தை அவளுக்குச் சூட்டினான். கமலவல்லியும் தென்றலாய் திரிந்து, திங்களாய் வளர்ந்து, தேயாத நித்ய பௌர்ணமியாய் நிலைகொண்டாள்.

ஒருநாள் கமலவல்லியை உசுப்பவென்றே வந்தார் அரங்கன். வெண்குதிரை மேல் ஏறி வந்தவர், பலாச தீர்த்தப் பகுதியில் திமிலோக மாய்ப் புரவியைச் செலுத்தினார். அதுவரை, தந்தையான நந்தசோழனையின்றி வேறு ஆண் மகன் எவரையும் நேருக்கு நேர் பார்த்திராத கமலவல்லி, வெண் புரவி அரங்கனை மட்டும் தன்னை மறந்து நோக்கினாள். அந்த நொடியே அவரின் மீது காதல்வயப்பட்டாள். அவரைப் பின்தொடர்ந்தாள். அரங்கனும் `வா... வா...' என்பது போல், அவளைப் பார்வையால் அழைத்தபடியே திருவரங்கக் கோபுரம் கடந்து உள் சென்று மாயமாய் மறைந்தார்.

கமலவல்லிக்குப் புலனாகிவிட்டது, வந்தவர் கர்ப்பத்தில் உதித்த மானுடனல்ல, கர்ப்பத்தையே உதிக்கச் செய்த மாமாயன் என்று. அந்த மாமாய னைப் பார்க்காமல் திரும்புவதில்லை எனும் வைராக்கியத்துக்கு ஆட்பட்டாள் கமலவல்லி.

இதன் நடுவே கமலவல்லியின் தோழியர் அவளைக் காணாது தேடி வந்தனர். குதிரையின் குளம்படித் தடயங்களும் கமலவல்லியின் பாத அச்சுகளும் அவர்களுக்கு வழிகாட்டியதில், அரங்கன் ஆலய கோபுரம் முன்னால் உறைந்து போய் நின்றுவிட்டவளைக் கண்டு ஓடி வந்து, ``இளவரசி இங்கா இருக்கிறீர்கள். உங்களை எங்கெல்லாம் தேடுவது?'' என்று ஆலாபித்தனர்.

கமலவல்லியோ தோழியரின் குரலைக் கேட்டாளில்லை. மனம் முழுக்க அந்த புரவி வீரனின் புன்னகை முகமும், அந்த வெண் புரவியின் ஓட்டமுமே வியாபித்திருந்தன. அவள் நிற்கும் இடத்தோடு முடியாமல், அந்த புரவித் தடயங்கள் முன்னோக்கி கோபுரம் கடந்தும் அவள் கண்ணில் பட்டன. அவள் அதைப் பின்பற்றி உள் செல்லத் தொடங்கினாள்.



இதற்குள் செய்தியறிந்து ஆலயம் சார்ந்த அந்தணர்களும் காவலர்களும் கமலவல்லியை வரவேற்க ஓடிவந்தனர். கமலவல்லி எவரையும் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அவள் நயனங்கள் குதிரைக் குளம்படிகள் மேல்தான் இருந்தன. ஆனால் அந்தக் குளம்படித் தடயங்கள் பிறர் பார்வைக்குப் புலனாகவில்லை!

“தேவியார் நிலத்தில் காண்பது எதனை?” என்று பணிவாகக் கேட்டார் ஒரு வேதியர்.

“தங்கள் கண்களுக்கு புலனாகவில்லையா? ஓர் அழகிய மணவாளனுடைய புரவியின் குளம்படித் தடயங்களையே நான் பின்தொடர்ந்தேன்... இதோ இங்கும் தொடர்கிறேன்” என்றாள்.

“புரவியின் குளம்படித் தடயங்களையா? எங்கள் கண்களுக்கு எதுவும் புலனாகவில்லையே! அதிலும், இது பட்டியக் கற்கள் வேயப்பட்ட கல் தரை. இதில் எப்படி தடயம் பதிவாகும்?’’ - அவர் மிகுந்த அசூயையோடு கேட்டார்.

“புலனாகாமலா நான் தொடர்கிறேன்? அதோ! அதோ...!” - கமலவல்லி தன் கண்களுக்குப் புலனான குளம்படித் தடயத்தைப் பார்த்தபடியே வேறு எவரையும் பாராமல் வேகமாய் நடந்தாள். தடயங்கள் அரங்கன் திருச்சந்நிதி நோக்கித் தொடர்ந்திருந்தன.

வேதியர்களும் காவலர்களும் கமலவல்லியைத் தொடர்ந்தனர். மனதுக்குள் ‘தேவிக்கு ஏதும் சித்தப் பிரமையோ?’ என்றும் கேட்டுக்கொண்டனர். திருச்சந்நிதியைக் கமலவல்லி நெருங்கவும் குதிரையின் கனைப்புச் சத்தம் எல்லோருக்கும் கேட்டது. கமலவல்லி நிமிர்ந்தாள். சந்நிதி வாயிலில் முகப்பு மண்டபத் தில் வெண்புரவி ஒன்று... நெற்றி பிடரி, முதுகுப் பிட்டம் வரை மஞ்சள் பூசப்பட்டு, அதன் மேல் குங்குமப்பொட்டு மின்ன, மதர்த்த தன் வாலைக் குழைத்தபடி நின்று கொண்டிருந்தது.

“இதே புரவிதான்... இதே புரவிதான்..." என்றாள் கமலவல்லி.

“இளவரசியாரே, இது ஆலயத்தின் அஸ்வம். கூடுதலாக யானை, பசுவும் உண்டு. இப்போது அஸ்வ பூஜை நிகழ்ந்துள்ளது.''

“எனக்கு அதெல்லாம் தெரியாது. இதன் மேல்தான் அந்த அழகன் வந்தான். என்னை தன் கண்களாலேயே வாவென்றும் அழைத்தான். பலாச தீர்த்தமருகே பந்து விளையாடச் சென்ற நானும் அவனைக் கண்ட மாத்திரத்தில் அங்கிருந்து பின்தொடர்ந்து வந்துள்ளேன்” என்றாள்.

அதைக் கேட்ட அஸ்வக் காப்பாளன் அங்கிருந்த காவலதிகாரி ஒருவர் அருகே சென்று , ‘‘அதிகாரி... சற்றுமுன் இந்த அஸ்வமும் காணாமல் போய்விட்டது. காப்பகத்திலிருந்து இதை அழைத்து வந்து இங்கே நிறுத்திய நான், இதன் மேலான பட்டு வஸ்திரத்தை எடுத்து வரத் தவறியதால், அதை எடுத்து வரச் சென்றேன், திரும்பி வந்து பார்த்தால் அஸ்வத்தைக் காணவில்லை.

நாலாபுறமும் தேடியும் கிடைக்கவில்லை. நான் பதைத்துப் போய் திருச்சந்நிதி முன் நின்று கண்ணீர் மல்க ‘பெருமாளே... இது என்ன சோதனை?’ என்று பிரார்த்தனை புரியவும், ஒரு பேரழகு மாவீரன் என் தோள்பற்றி ‘நீ தேடும் அஸ்வம் அதோ’ என்று காண்பித்தான். நான் அதைக் கண்டு திரும்பும்போது, அவன் திருச்சந்நிதிக்குள் நுழைவதைக் கண்டேன். இந்த நொடி வரை அவன் வெளிவரவில்லை. தேவியார் குறிப்பிடுவதும் அவனாகத்தான் இருக்க வேண்டும். அவன் தோளில் கூட நீலவஸ்திரம் தொங்கிக்கொண்டிருந்தது'' என்றான்.

அடுத்த நொடியே வேதியர் கூட்டம், `அவன் யார்' என்று காண திருச்சந்நிதிக்குள் சென்றது. உள்ளே சந்நிதி வேதியர் மட்டும் இருந்தார். அவரும் தியானத்தில் இருந்தார். எல்லோரும் வரவும் கண் மலர்ந்தார்.

“என்னாயிற்று... ஏன் இத்தனை படபடப்பு?” எனக் கேட்டார்.

“யாரும் உள்ளே வரவில்லையா வேதியரே...”

“இங்கா... இந்தக் கர்ப்பக் கிரகத்துக்குள்ளா...? தீட்சை பெற்ற எங்களையன்றி இங்கே யார் வர முடியும்?” - அந்தப் பதிலோடு கேள்வி கேட்டவர், அரங்கனின் சயனக் கோலத்தைப் பார்த்தார். சயனகோலத் திருமேனியின் மேல் அந்த நீலப் பட்டாடை!

அதைக் கண்ட மாத்திரம் அவர் நெக்குருகினார். "எம்பெருமானே நீயா வந்தது?" என்று கண்களில் நீர் ஏந்தினார். கமலவல்லியும் ஓர் ஓரமாய் நின்று, அந்த நீலப்பட்டாடைக்கு மேல் கண்மூடிய நிலையில் துயில் கொண்ட தோற்றத்தில் கிடந்த அரங்கனைக் கண்டாள். அப்படியே நிலைகுத்தி நின்றுவிட்டன அவளின் நீல நயனங்கள்!

நந்தசோழன் மந்திரிப் பிரதானியர்களோடு ராஜ்ஜிய நிர்வாக ஆலோசனையில் இருந்த தருணம். தலைமைத் தாதி ஒருத்தி ஆலோசனை மண்டப வாயிலில் வந்து மண்டியிட்டுத் தலை குனிந்து அமர்ந்தாள். அப்படி அவள் செய்தால், 'முக்கிய விஷயம். பேச அனுமதி வேண்டும்' என்று பொருள். நந்தசோழனும் அவளைக் கண்டவனாய், தரை உரசும் தன் பால் வண்ணத் தோளாடையை இழுத்து தோளில் போட்டவனாய் அவளை நெருங்கி '`என்ன விஷயம்?'' என்று கேட்டான்.

"அரசே! தோழியரோடு நம் இளவரசியார் பலாச தீர்த்தத்தில் நீராடச் சென்று விளையாடிய வேளையில், அங்கே ஓர் அழகிய யுவ புருஷன் குதிரைமேல் செல்லக் கண்டு அவனைப் பின்தொடர்ந்துள்ளார். அந்த யுவ புருஷனும் திருவரங்கத் திருக்கோயிலுக்குள் புகுந்து, பின் திருச்சந்நிதிக்குள்ளும் புகுந்து மறைந்துவிட்டதைப் பின்னர் அறிந்துள்ளார். அந்த யுவ புருஷரே அரங்க மகாபிரபு என்று இளவரசியார் மட்டுமல்ல, ஆலயம் சார்ந்த எல்லோருமே கருதுகின்றனர்.

இளவரசியார் இப்படியோர் அனுபவத்திற்கு ஆட்பட்டதிலிருந்து ஓர் யோகியைப் போல் சதா அந்த அரங்கப் பிரபுவின் நினைப்பாகவே இருக்கிறார். உண்ணவும் உறங்கவும் மறுத்தவராய் 'அரங்கப்பிரபு எதற்காக என்னை அழைத்தீர். ஏன் என்னைத் தனித்துவிட்டு மறைந்தீர். இனி என்னை ஆட்கொள்ள எப்போது வருவீர்' என்று பிதற்றியபடியே இருக்கிறார்!"

- தாதி சொன்னதைக் கேட்டு, நந்த சோழன் முகம் முதலில் அதிசயித்தது; பின் கலங்கியது. தாதியிடம், தன் திருமகள் அருகில் ஆதரவாக இருக்கும்படி சொல்லிவிட்டு திரும்பி வந்து, மந்திரிப் பிரதானிகளிடம் நடந்ததை விவரித்து, ஆலோசித்தான். "மந்திரிப் பிரதானிகளே! என் மகளின் மனோ லயம் குறித்த தங்கள் கருத்து என்ன?" என்றும் கேட்டான்.

“மன்னா முதலில் நாம் இளவரசியாரைக் காண்போம். அவரிடமும் நேரில் கேட்டறிவோம். பிறகு ஒரு முடிவுக்கு வரலாம்” என்றனர் அவர்கள். அதேவேகத்தில் கிளம்பி அந்தப்புர மண்டபத்துக்கு வந்தபோது, அங்கே இளவரசியார் திருவரங்கனின் சிறிய கற்சிலைக்கு தூபதீபம் காட்டி பூஜித்துக் கொண்டிருந்தாள். அதைக் கண்டு துணுக்குற்றனர். ‘ஓடியாடியும் ஆடிப்பாடியும் பாடிக் கூடியும் கூடித் தேடியும்’ என்று குதூகலத்தில் மனம் மிதக்கும் பருவம்... அப்படித்தான் கமலவல்லியும் இருந்தாள். இன்றோ தலைகீழ் மாற்றம்!

மனித வாழ்வில் மாற்றங்கள் மிக சகஜ மானவையே. அதற்காக இப்படிக் கூடவா ஒரு மாற்றத்துக்கு ஓர் இளம் பெண் ஆளாவாள்?

நந்தசோழன் சற்றே கலங்கித்தான் போனான். மகளிடம் பேச்சு கொடுத்தான்.

**“என்னம்மா இதெல்லாம்?”**
**“வழிபாடப்பா... பார்த்தால் தெரியவில்லையா?”**
**“இப்போது இதற்கென்னம்மா தேவை?”**
**“இதற்குக் காலமெல்லாம் கிடையாதப்பா...”**

கமலவல்லியின் தெளிந்த பதிலால் மந்திரி மார்களும் அதிர்ந்தனர்.

“இளவரசியார் இதன் பொருட்டு பசியும் பட்டினியும் கிடப்பது சரியா? சுவர் இருந்தால் தானே சித்திரம் தீட்ட முடியும்?” - என்று ஒரு மந்திரி இடையீடு செய்தார்.

கமலவல்லி அவரை அழகாய் ஏறிட்டாள். பின் மெல்லிய குரலில் ‘`நான் அமுதனைக் கண்டவள்! அதனாலோ என்னவோ பசியே இல்லை!” என்றாள்.

அவர்கள் சற்றும் எதிர்பாராத பதில்தான் அது!

**- இன்னும் வரும்...**

15 Jan 2019

# ரங்க ராஜ்ஜியம் - 21



ரங்க ராஜ்ஜியம் - 21

**இந்திரா சௌந்தர்ராஜன் - படம்: என்.ஜி.மணிகண்டன்**

ஓவியம்: ம.செ



*மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளும், இவ்*
*வையந் தன்னொடும் கூடுவ தில்லையான்,*
*'ஐயனே அரங்கா' என்றழைக்கின்றேன்*
*மையல் கொண்டொழிந் தேனென்றன் மாலுக்கே!'*

**-பெருமாள் திருமொழி (3-ல்)**
**குலசேகராழ்வார்**

மகள் கமலவல்லியின் மாற்றத்தைக் கண்டு திகைத்துப்போனான் நந்தசோழன். மந்திரிமார்கள் கேட்ட கேள்விகளுக்கு கமலவல்லி அளித்த பதில்களோ, மன்னவனின் திகைப்பை மேலும் அதிகப்படுத்தின.

''வழிபாடுகளின் பொருட்டு பசியும் பட்டினியும் கிடப்பது சரியா'' என்றொருவர் கேட்க, ''அமுதனைக் கண்டவள் என்பதால் என்னவோ பசியே இல்லை'' என்று பதில் அளித்தாள்.

“இயற்கைக்கு மாறாக உள்ளதே தாங்கள் சொல்வது. அது எப்படி?” - என்று கேட்டார் இன்னொரு மந்திரி.

“சரியாகத்தான் கூறியுள்ளீர்! எனக்கு நேரிட்ட அனுபவம் இயற்கைக்கு மாறானதே. எல்லோருக்கும் நிகழக்கூடிய ஒன்றல்ல. ஆனால் இந்த அனுபவம், இதுவரை நான் வாழ்ந்தது வாழ்க்கையில்லை - இனி வாழப் போவதே வாழ்வென்று சொல்கிறது. அதற்கென்ன சொல்கிறீர்?”

அதிகம் பேசாத, நிமிர்ந்தும் பார்க்காத, பார்த்தாலும் தந்தையான நந்தசோழனையன்றி பிறரைப் பார்த்தேயறிந்திராத இளவரசியா இத்தனை தெளிவாக பதில் கூறுகிறாள் என்று அந்த மந்திரி மட்டுமல்ல, அனைவருமே ஆச்சரியப் பட்டனர்.

திருவரங்க ஆலயத்து வேதியரும் அப்போது அங்கு அழைத்துவரப் பட்டிருந்தார். நந்தசோழன் அவரை ஏறிட்டான். அவன் அப்படி ஏறிட்டுப் பார்த்ததே, ‘நடந்ததைக் கூறு’ என்பதுபோல் இருந்தது.

“சோழச் சக்ரவர்த்திக்கு அடியேன் அரங்க தாசனின் அனந்தமான வந்தனங்கள். இளவரசியார் அரங்கநாதப்பெருமானின் யௌவன கோலம் காணும் பேறு பெற்றுள்ளார். அதனால் எனக்கும் எம்பெருமானின் மேலாடை தரிசனம் வாய்த்தது. தேவியார் பெற்ற பேறு அவரின் முன்ஜன்ம வினை! எம்பெருமான் எதையோ உலகுக்கு உணர்த்த விரும்புகிறார் போலும். அதையொட்டியே இந்தச் சம்பவம் நடந்துள்ளதாய் பலரின் உள்ளம் கருதுகிறது” என்று பணிவாய்க் கூறி முடித்தார். நந்தசோழன் பதிலேதும் கூறாமல் எல்லோரையும் ஒரு பார்வை பார்த்தான்.

“சக்ரவர்த்தி இதுகுறித்து சலனப்பட தேவையில்லை. இளவரசியாரை ஆட்கொண்ட அரங்கன், தங்களையும் ஆட்கொள்ளப்போவது திண்ணம். இளவரசியாரை தடாகத்துத் தாமரையாக தங்கள் வசம் சேர்த்தவனும் அவனே. இப்போது, அந்தத் தாமரையைத் தேடி வந்து ஆட்கொண்டிருப் பவனும் அவனே! இதன் பின்புலத்தில் சாமான்யர்கள் நம்மால் அறிய இயலாத தேவ ரகசியங்கள் இருக்கக்கூடும். அவை காலத்தால்

தெரியவும்கூடும்" என்ற வேதியரின் கருத்தே அனைவருக்கும் சரி என்று தோன்றியது.



அதன்பின் நாள்களும் வேகமாய் கழிந்தன. இளவரசி கமலவல்லி, அரங்க ரூபமல்லாது வேறு ஒன்றைக் காணேன் என்பது போல் பூஜை நேரம் போக மற்ற நேரங்களில் கண்களைத் துணியால் கட்டிக்கொண்டாள்.

"என்னம்மா இது விநோதம்?" என நந்தசோழன் கேட்டதற்கு, "விநோதம் இல்லை தந்தையே விரதம்..." என்றாள்.

"விரதமா?"

"ஆம்... விண்ணிலிருந்து மண்ணுக்கு வந்து என் கண்ணில் பட்டவன் வசம் இந்த பெண் சேர வேண்டாமா"

“நீ என்னம்மா சொல்கிறாய்?”

“இது அவன் குறித்த விரதமப்பா. அவனைக் கண்ட கண்கள் வேறு எதையும் காணக்கூடாது எனும் விரதம். ஏன்... தவம் என்றுகூடச் சொல்லலாம். விரதத்துக்கும் தவத்துக்கும் அருள் செய்ய அவன் வந்தாக வேண்டுமே?”

“யார் எதைக் கேட்டாலும், அதற்கு மாணிக்கமாய் ஒரு பதில் கூறி வாயை அடைத்துவிடுகிறாய். உன்னுள் ஞானச்சுடர் பொலிவதை நானும் காண்கிறேன். இப்படியே நீ எத்தனை நாள் இருக்க முடியும் என்றும் தெரியவில்லை. ஒரு மானுடப் பெண் தேவாதிதேவனை அடைய இயலுமா? அவன் தந்தைக்கு தந்தையானவன் என்பது உண்மையென்றால், ஒரு தந்தையாய் நான் படும்பாட்டை புரிந்துகொண்டு, விரைந்து உன் போக்குக்கு ஒரு முடிவை அவன் ஏற்படுத்தவேண்டும்” என்று சற்றே கண்கலங்கி அழுதான் நந்தசோழன்.

அவன் கண்ணீர் வீண்போகவில்லை. அன்றிரவே கனவில் நந்த சோழனுக்கு அரங்கன் சேவை சாதித்தார்.

“நந்தா... கலங்காதே! உன் மகள் திருமகள்! பக்தியால் எனை அடையப்போகிறவள். யோக நெறிக்குப் பல ரிஷிகளும் முனிகளும் உதாரணமாயுள்ளனர். கிரகஸ்தாஸ்ரமம் எனும் குடும்ப நெறிக்கும் உதாரணங்கள் தேவைப்படுகின்றன. புலன்களை அடக்கினாலேயே எனை அடைய முடியும் என்றில்லாமல், இல்வாழ்வு கண்டும் எனை அடைய முடியும் என்பதற்கு ஓர் உதாரணமாகவே உன் மகளை நான் மணந்து வழிகாட்ட இருக்கிறேன். மானுடம், தேவம் என்ற பாகுபாடுகள் எனக்கேது?
என் சக்தியால் தோன்றியவை பக்தியாலேயே எனை திரும்ப அடைய முடியும். அம்மட்டில் உன் மாப்பிள்ளையாகி உனது தலைநகராம் உறையூரிலும் அழகிய மணவாளனாய் கோயில் கண்டு அருள்புரிய விரும்புகிறேன்” என்றார்.

நந்தசோழன் கனவு கலைந்து எழுந்தான். அரங்கன் தனக்கே மாப்பிள்ளையாகப் போவதை எண்ணி நெகிழ்ந்தான். அந்த நொடியே

தன்னை அரங்கனின் மாமனாராகக் கருதியவன், அவன் தந்த செல்வம் அனைத்தையும் அவனுக்கே தர உள்ளம் கொண்டான். தந்தையின் கனவு மூலம் தனக்கொரு பதிலை அரங்கன் சொல்லிவிட்டதை எண்ணி கமலவல்லியும் பூரித்தாள்.

கஜானாத் தங்கம் அவ்வளவும் அரங்கனுக்காக சீர்வரிசைப் பொருளாகத் தொடங்கியது. 360 கலங்களில் பொன்னரிசி இட்டு, அதற்கான பருப்பு வகையையும் பொன்னாலேயே செய்து கொம்பஞ்சு, கொடியஞ்சு, கறியமுதம் என்றும், கொம்பில் காய்ப்பவை, கொடியில் காய்ப்பவை எனக் காய்களை எல்லாவற்றையும் தங்கத்திலேயே செய்து, தட்டுத் தட்டாய் அந்த ஸ்வர்ண காணிக்கை களை... நூறு மங்கலப் பெண்டிரைத் தேர்வு செய்து அவர்கள் வசம் தந்து அணிவகுக்கச் செய்து, தன் திருமகளையும் யானை மேல் உள்ள அம்பாரியில் அமர்த்தி, பன்னிரு புரவிகள் பூட்டிய ரதத்தில் தானும் பின்தொடர்ந்து திருவரங்கம் சேர்ந்தான்.

திருவரங்கச் சந்நிதியும் திறந்திருந்த நிலையில், மாலையோடு சென்ற கமலவல்லி ஒரு ஜ்வாலை போலாகி, அரங்கன் திருமார்பின் மேல் சில நொடிகள் நின்று பிரகாசித்த நிலையில், அப்படியே அவருக்குள் அடங்கி விட, ‘ரங்கா, ரங்கா’ எனும் கோஷம் விண்ணைப்பிளக்கத் தொடங்கியது!

அது ஓர் அற்புதக் காட்சி... ஆனந்தக் காட்சி!

இறப்புக்குப் பின்பு என்றில்லாமல், இருக்கும்போதே உயர்பக்தியால் அரங்கனை ஒருவர் அடைய முடியும் என்பதற்கு, அந்த நிகழ்வு ஒரு பெரும் சான்றாகிவிட்டது.

அதன்பின், நந்தசோழன் தன் அத்தனை செல்வங்களையும் அரங்கனுக்கே என்று செலவு செய்தான். உறையூரில் கோயில் எழுப்பி அழகியமணவாளன் எனும் திருநாமத்துடன் அரங்கனின் உப சந்நிதியை அங்கே உண்டாக்கினான். தன் மகளானாலும் மாலுடன் கலந்து விட்டவள் என்பதால், அவளை மகாலட்சுமியாகக் கருதி, அவளுக்கும் கமலவல்லித் தாயார் எனும் பெயரில் சந்நிதி கண்டான்.



திருவரங்கன் அழகிய மணவாளனாய் கமலவல்லியை தன்னோடு சேர்த்துக்கொண்ட அந்தக் கல்யாண நிகழ்வை, கமலவல்லியைத் தான் கண்டெடுத்த பங்குனி மாத ஆயில்ய நட்சத்திர 6-ம் திருநாள் அன்று கோயிலில் நடைபெறவும் ஏற்பாடு செய்தான்.

மானுட வாழ்வில் இல்லறமே நல்லறம், புலன்களை ஒடுக்கித் தவம் புரிந்து பிறப்பெனும் கர்மத்திடமிருந்து விடுபட முனைவது எல்லோர்க்குமானது அல்ல. அந்தக் கடின வழியைவிட இந்த இல்லற வழியும் அதன்பாலான தர்மங்களும் என்னிடம் மானுட ரைச் சேர்த்துவிடும் என்பதற்குச் சான்றே இந்தத் திருக்கல்யாண வைபவம். இதன் நினைவாகவே ஆலயத்தின் ஒரு சுற்றுக்கு அழகிய மணவாள ராஜமகேந்திரன் திருவீதி என்கிற பெயரும் சூட்டப் பட்டது. திருவரங்க

வரலாற்றின் இந்நிகழ்வு, பக்தி மார்க்கத்துக்குப் பெரிதும் தூண்டுகோலாகியது.

இங்ஙனம், ஒருபுறம் பக்தி மார்க்கம் வளர்ந்த அதேநேரத்தில்... விருட்சங்கள் ஓங்கிடும்போது சருகுகள் உதிர்ந்து குப்பைகள் உருவாவதும் சகஜம் என்பதுபோல், பக்திக்கு எதிரான அறமற்ற செயல்பாடுகளும் நடக்கத் தொடங்கின.

கலியுகத்தின் இயல்பும் அதுவே! காமம், குரோதம், பொறாமை, சுயநலம்போன்ற குணங்கள் எல்லாம் கலி புருஷனுக்கு மந்திரிகளாகி இந்தப் பூ உலகத்தை வழிநடத்தத் தொடங்கினர். நிழலின் அருமையை வெயிலில் உணர்கிறார் போல் இந்த கேடுகெட்ட குணங்களின் சக்தியை அனைவரும் உணர்ந்து வருந்தினர்.

இதனால் பஞ்சபூதங்கள் பாதிப்புக்குள்ளாகி அவ்வப்போது கடற்கோள், ஆறுகளில் வெள்ளப்பெருக்கு என்று உற்பாதங்களும் ஏற்பட்டன. காலம் யாருக்காகவும் நிற்பதில்லை. அது சுழன்று கொண்டே செயல்பட்டதில் திருவரங்கமும் சரி, உறையூர் ஆலயமும் சரி மீண்டும் இயற்கைச் சீற்றங்களுக்கு ஆட்பட்டு பின் வந்த ராஜாக்களால் மிளிரத் தொடங்கின.

குறிப்பாய் ஆலயம் சீரோடும் சிறப்போடும் இருந்தாலே நாடும் மக்களும் நலங்களோடு திகழ முடியும் என்பதை அரசர் பெருமக்கள் உணர்ந்து, அரங்கன் ஆலயத்தை தங்கள் உயிரினும் மேலாகக் கருதிப் பேணி வந்தனர்.

இப்படிப் பேணியவர்களில் சேர நாட்டு மன்னன் திடவிரதன் என்பவனும் ஒருவன். பிள்ளைப்பேறில்லாத ஒரு துன்பம், இவனை ஆலய கைங்கர்யத்தை மிகுந்த ஈடுபாட்டுடன் செய்யவைத்தது.

காரணமில்லாமல் காரியமில்லையே!

**- இன்னும் வரும்...**

# நிறம் மாறிய பூக்கள்!



துளசிதாசர் ராமகாவியம் எழுதினார். தினமும் அதை தன் சீடர்களுக்கும் படித்து விளக்கம் கூறுவார். அப்போது யாருக்கும் தெரியாமல் ஆஞ்சநேயரும் அங்கு வந்து ராமகாவியத்தைக் கேட்டு மகிழ்ந்தார்.

ஒரு நாள் துளசிதாசர், ‘‘அனுமன், சீதையைத் தேடிக்கொண்டு அசோக வனத்துக்குச் சென்றார். அப்போது, அவர் கண்களில் அங்குள்ள வெள்ளை மலர்கள் தென்பட்டன!’’ என்று கூறினார். அப்போது அனுமன், ‘‘தவறு, நான் அசோக வனத்தில் கண்டது, சிவப்பு நிற மலர்கள்’’ என்றார். குரல் கேட்ட திசை நோக்கி துளசிதாசர் திரும்பிப் பார்த்தார். அங்கு அனுமன் நின்று கொண்டிருந்தார். ‘‘நான் அங்கு பார்த்தது சிவப்பு நிறப் பூக்கள். நீங்கள் வெள்ளை நிறப் பூக்கள் என்று சொல்கிறீர்களே, இது தவறு!’’ என்று அனுமன் மீண்டும் கூறவே, துளசிதாசர் இந்த விவகாரத்தை ஸ்ரீராமரிடம் எடுத்துச் சென்றார்.

‘‘அனுமா, துளசிதாசர் சொல்வதும் உண்மை. நீ சொல்வதும் உண்மை. நீ கோபத்தில் இருந்ததால் உன் கண்கள் சிவந்திருந்தன. அதனால் வெள்ளை நிறப் பூக்கள் சிவப்பாகக் காட்சி தந்தன’’ என்று ராமபிரான் விளக்கினார். ‘நாம் எந்த நோக்கில் பார்க்கிறோமோ, அதுவே காட்சியில் நமக்குத் தோன்றும்’ என்பது இதன் கருத்து என்பர்.

**- ராதாபரிமளம், திருச்சி-21**

29 Jan 2019

# ரங்க ராஜ்ஜியம் - 22



ரங்க ராஜ்ஜியம் - 22

**இந்திரா சௌந்தர்ராஜன் - படம்: என்.ஜி.மணிகண்டன்**

*‘தீண்டா வழும்பும் செந்நீரும்*
*சீயும் நரம்பும் செறிதசையும்*
*வேண்டா நாற்றம் மிகும் உடலை*
*வீணே சுமந்து மெலிவேனோ*
*நீண்டாய் தூண்டா விளக்கொளியாய்*
*நின்றாய் ஒன்றாய் அடியாரை*
*ஆண்டாய் காண்டா வனம் எரித்த*
*அரங்கா அடியேற்கு இரங்காயே*

**-திருவரங்கக் கலம்பகத்தில் ‘பிள்ளைப் பெருமாளையங்கார்’**



ஆலயங்கள் சீரோடும் சிறப்போடும் திகழ்ந்தால்தான் நாடும் மக்களும் நலன்களோடு திகழ முடியும் என்பதை அரசர் பெருமக்கள் உணர்ந்து, அரங்கன் ஆலயத்தை தங்கள் உயிரினும் மேலாகக் கருதிப் பேணி வந்தனர்.

அப்படிப் பேணியவர்களில் சேர மன்னன் திடவிரதனும் ஒருவன். பிள்ளைப்பேறு இல்லாத துன்பம், இவனை ஆலய கைங்கர்யத்தை மிகுந்த ஈடுபாட்டுடன் செய்ய வைத்தது.

காரணமில்லாமல் காரியமில்லையே!

திடவிரதனுக்குப் பிள்ளைக்கலி ஏற்படவும் காரணம் இருந்தது - அது முன்வினை; தீரவும் காரணம் இருந்தது - அது, பின் அவன் செய்த ஆலய பரிபாலனம்.

திருவஞ்சைக்களம் எனும் மண்ணை, தான் ஆட்சிபுரியும் இடமாகக் கொண்டு திடவிரதன் நாடாண்டபோதிலும், பாண்டிய சோழ மண்டலங்கள் இவனுக்குக் கட்டுப்பட்டே இருந்தன. எனவே, நாடெங்கும் உள்ள அவ்வளவு ஆலயங்களையுமே இவன் பேணினான். பூஜைகள் குறைவின்றி நடந்திடத் தூண்டினான். இதன் எதிரொலியாக திடவிரதனின் குலத்துக்குச் சேகரமாய் வந்து பிறந்தவனே குலசேகரன்.

அப்பாவுக்குத் தப்பாத பிள்ளை என்றால் அது தவறு. அப்பாவை விஞ்சிய பிள்ளையாகவே விளங்கினான் குலசேகரன். அதனால்தான், ஆழ்வார்கள் பன்னிருவரில் ஒருவனாகவும் ஆனான். அந்தணர்களுக்கு இணையாக வேதம், அதன் ஆறு அங்கங்கள், அரச நீதி, தர்மசாஸ்திரம் என்று சகலமும் கற்றான். வீரத்திலும் இவன் குறைந்தவனில்லை!

‘கொல்லிக்காவலன், கடல் நாயகன், கோழிக் கோன் குலசேகரன்’ என்பதெல்லாம் இவன் பெற்ற பட்டங்கள். இவனுக்கு ஒரு மகனும் மகளும் பிறந்தனர். இதில் மகன் திடவிரதன் தந்தையின் வீரத்தை அப்படியே பிரதிபலித்தான். மகளோ பக்தியைப் பிரதிபலித்தாள். இந்த மகளின் பெயர் இளை. குலசேகரன் வரையில் தென்புலமே கைவசமிருந்த போதிலும், ஒரு சக்ரவர்த்தியாக தான் திகழ்ந்த போதிலும், அவ்வப்போது ஒரு கேள்வி எழும்பியபடியே இருந்தது.

‘இந்த உலகில் எல்லாம் மாறியபடியே உள்ளன. எதுவும் நிலையாக இல்லை. அதேபோல், உடலிலும் மாற்றங்கள் நிகழ்ந்து மனிதன் முதுமை அடைவதும் தடுக்கப்பட முடியாத ஒன்றாகவே இருக்கிறது. ஏன் அப்படி, இறப்பின்றி வாழ முடியாதா, இல்லை வாழக்கூடாதா?’

இப்படி குலசேகரனுக்குள் ஏராளமான கேள்விகள்!

`இவற்றுக்கெல்லாம் உங்களுக்குத் தெளிந்த விடை கிடைக்கவேண்டும் என்றால், நீங்கள் சத்சங்கங்களில் பங்கு கொண்டு நம்முடைய

புராணங்களை அறிந்திடவேண்டும்' என்று உபதேசிக்கப்பட்டது. குலசேகரனும் அறிஞர்களின் சொற்கூடங்கள் மற்றும் ஆன்மிகத்தில் தோய்ந் தவர்களின் உபந்யாசங்களில் கவனம் செலுத் தினான். இங்கேதான் அவன் வாழ்க்கை அப்படியே திசைமாறத் தொடங்கியது.

சத்சங்கங்களில் எம்பெருமானின் அவதார புராணங்களைக் கூறும்போது, ஊன்றிக் கேட்பான் குலசேகரன். ராமாயண உபந்யாசத்தைக் கேட்கும் தருணம், தன்னுள் தான் கரைந்து கண்ணீர் விடலானான். அதை, நடந்து முடிந்த சம்பவமாகவே அவன் கருதவில்லை. அவன் காலத்தில் அவன் கண் எதிரில் நடப்பது போல் கருதத் தொடங்கி விட்டான்!



குறிப்பாக... சீதையின் அணிகலன்களைச் சுக்ரீவன் ராமனிடம் காட்டும் தருணத்தில், அதைக் கண்டு ராமன் கண்ணீர் உகுப்பான். 'இவை என் சீதை அணிந்திருந்த அணிகலன்களே. இவற்றை இந்த காட்டுக்குள் வீசி எறிந்துவிட்டு, அணிகலன்கள் எவையுமின்றி என் சீதை எப்படித் தான் இருப்பாளோ? அவளை நான் எப்போது காண்பேனோ?' என்று ராமன் கண்ணீர் விட்டுக் கலங்கி அழுததை உபந்யாசகர் சொல்லச் சொல்ல, குலசேகரன் கண்களிலும் நீர் திரண்டு வந்து அருவியெனக் கொட்டிற்று.

இதைக் கண்ட உபந்யாசகர், குலசேகரனின் பக்தி உள்ளத்தை எண்ணிப் பூரித்தார். பொதுவாய் ராஜ்ஜிய பிரமுகர்கள் மிக மிக சுகமானவர்கள். கண்ணீர் என்பதை அவர்கள் எக்காலத்திலும் விடவே மாட்டார்கள். ஆனால் குலசேகரன் விதிவிலக்கு போல் நடந்துகொண்டான்.

ராமனும் ராவணனும் போரிட்ட வேளையில், ராவணனின் மகன் இந்திரஜித் தானறிந்த மாய வித்தைகளைப் போர்க்களத்தில் காட்டினான்.அவன், சீதையைப் போல் ஒரு மாயப் பெண்ணை களத்தில் நிறுத்தி அவள் கழுத்தையும் வெட்டிக் கொன்று விட்டு, தான் சீதையையே கொன்று விட்டதாக எக்காள முழக்கமிட்டதைக் கண்டு ராமன் மூர்ச்சையானானோ இல்லையோ... குலசேகரன் மூர்ச்சையடைந்தான்! உபந்யாசகரும் இதைக் கொஞ்சம்கூட எதிர்பார்க்கவில்லை. அவருக்கே குலசேகரனின் தவிப்பும் லயிப்பும் வியப்பளித்தன.

ஒருமுறை, “உபந்யாசகரே... போதும் உபந்யாசத்தை நிறுத்துங்கள். அங்கே, எம்பெருமான் தன்னந்தனியனாகப் போராடிக் கொண்டிருக் கிறான். அவனுக்கு நாம் உதவவேண்டாமா?

நான் என் படை அவ்வளவையும் திரட்டிக் கொண்டு வருகிறேன். நாளையே எதிரிகள் திரும்பி ஓடப்போவதை இந்தக் காலம் நிகழ்த்தத்தான் போகிறது. தர்மத்தின் தலைவனான ராமச்சந்திர பிரபுவுக்கே இப்படி ஒரு சோதனை என்றால் நாமெல்லாம் எம்மாத்திரம்?” என்று யுத்தம் அப்போது நடப்பது போல் கருதிக்கொண்டு குலசேகரன் பேசவும், உபந்யாசகர் நெகிழ்ந்து போனார். பின்னர் `அவையாவும் நடந்து முடிந்த சம்பவம்' என்று குலசேகரனிடம் கூறி ஆற்றுப் படுத்தினார்.

ஆனாலும் குலசேகரன் அதை நம்பாமல், ‘இல்லை. நீங்கள் என்னைச் சமாதானப்படுத்தப் பொய் சொல்கிறீர்கள். ராமபிரானுக்கு நாம் உதவத்தான் வேண்டும். அனுமன் உதவலாம், சுக்ரீவன் உதவலாம், நான் உதவக்கூடாதா. எதற்கு இருக்கிறது என் படை” என்று கேட்டு முரண்டு பிடித்தார்.

அந்த அளவுக்கு எம்பெருமானின் பரமபக்தனா கத் திகழ்ந்தான் குலசேகரன்! இதனால், அவன் நாட்டில் திரும்பிய பக்கமெல்லாம் பன்னிரு திருமண் அணிந்த பரம பக்தர்கள் உலா வந்தனர். அவர்களுக்கு விருந்து அளிப்பதை பாக்கியமாகக் கருதினான் குலசேகரன்!

அதன் எதிரொலியாக அவன் அரண்மனையில் அடியவர் கூட்டம் பெருகி வழியத் தொடங்கியது. இதைக் கண்ட மந்திரிகள் மற்றும் தளபதிகள் தங்களுக்குள் வருந்தத் தொடங்கினர். அரண்மனை கிட்டத்தட்ட பஜனை மடம் போல மாறி வருவதாகவும் கருதினர். அரசாட்சி என்பது வேறு - பக்தி மார்க்கம் என்பது வேறு. குலசேகரன் இரண்டையுமே சரியாகப் பின்பற்றாமல், பக்தி மிகுதியில் குழப்பத்துடன் நடந்துகொள்வதாக ஒரு முடிவுக்கும் வந்தனர்.

இதை இப்படியே விடக்கூடாது - இதற்கொரு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும். அரண்மனைக்குள் ஓர் அடியவர்கூட இருக்கக்கூடாது. அதற்கு என்ன வழி என்று யோசித்து இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தனர். அப்போது ராமநவமி உற்சவத்தை அரண்மனைக்குள்ளேயே கொண்டாட முன் வந்தான் குலசேகரன். எனவே, வழக்கத்தைவிட அடியவர்கள் அதிகம் வந்திருந்து அரண்மனையே ஆலயவெளி போல ஆகிவிட்டிருந்தது.

இவ்வேளையில்தான் மந்திரிகள் தங்கள் திட்டத்தையும் அரங்கேற்றினர். ஸ்ரீராமனின் திருமேனியில் சாற்றப்பட்ட நகைகளில் ஒரு ரத்தின ஆரத்தைக் காணவில்லை என்று அவர்கள் குலசேகரனிடமும் கூறினர்.

“என்னது... ரத்தின ஆரம் காணாமல் போய் விட்டதா?”

“தவறு மன்னா... காணாமல் போகவில்லை - களவு போயுள்ளது.”

“களவா? என் அரண்மனையிலா?”

“ஆம் மன்னா. முன்பு அரண்மனைக்குள் பிற மனிதர்கள் நுழைய ஒரு

கட்டுப்பாடு இருந்தது. நீங்கள்தான் அடியவர்கள் பொருட்டு அதை நீக்கி விட்டீர்களே?”

“அப்படியானால் என் அடியவர்களைக் குற்றம் சாட்டுகிறீர்களா?

“ஏன், அவர்களில் ஒருவர் களவாடியிருக்க கூடாது?”

“இருக்காது... இருக்கவே இருக்காது! மாலடியார் வரையில் தங்கம் வைரமெல்லாம் தூசுக்குச் சமானம். மாலடியார்க்கு அந்த மாலவன் திருவடி நிழலையன்றி இவ்வுலகில் எதுவும் பெரிதில்லை.”

“இது உங்கள் கருத்து. ஆனால் கள்வர்கள் மாலடியார் வேடம் புனைந்தும் வந்திருக்கலாம் அல்லவா?”

“இது உங்கள் கற்பனை..”

“இல்லை... எங்கள் தீர்மானம்.”

“சரி, என்ன செய்யலாம் என்று கூறுங்கள்.”

“அனைவருக்கும் ஓர் உத்தரவிடுவோம். யார் களவாடியிருந்தாலும் சரி அவர்களே முன்வந்து ஆபரணத்தை ஒப்படைத்துவிட வேண்டும். தாங்கள் களவாடவில்லை என்று அவர்கள் கூறினால் நாகக் குடத்துக்குள் கைவிட்டு தங்களை நிரூபிக்கவேண்டும்."

“என்ன... நாகக்குடமா?”

“ஆம்... அது கள்வர்களைக் கண்டறிய நாம் பின்பற்றும் ஒரு வழி முறை. உண்மை அடியார் என்றால் அவரை அரவம் தீண்டாது. பொய்யானவன் என்றால் நிச்சயம் தீண்டும்.”

- மந்திரி சற்று செருக்கோடுதான் சொன்னார். ஆனால் குலசேகரன் மனம் அதைக் கேட்டு கலங்கியது. மாலடியாரைச் சிறுமைப்படுத்தும் ஒரு பெரும் பாவச்செயலாகவும் தோன்றியது. இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தான். அந்த மந்திரிகள் துளியும் யூகித்திராத முடிவு அது!



குலசேகரன், தான் எடுத்த முடிவை தனக்குள் வைத்திருந்து, தன் மந்திரிகள் நாகக் குடுத்தோடு வந்தபோது அதைச் செயல்படுத்தத் தயாரானான். அதற்குள்ளாகவே அரண்மனையை விட்டு அநேக மாலடியார்கள் வெளியேறிவிட்டிருந்தனர்.

அரண்மனையோடும் ஆற்றோடும் விலகி இருப்பதே உத்தமம் என்பதை அவர்கள் புரிந்தும் கொண்டனர். இரண்டிலுமே ஆழம் தெரியாமல் காலை விட்டால் மூழ்கிப் போவது உறுதி என்பதும் புரிந்தது அவர்களுக்கு. இதை எண்ணி பெரிதும் கவலைப்பட்ட குலசேகரன் நாகக் குடத்துடன் எதிரில் வந்த மந்திரிப் பிரதானியைத் தடுத்து நிறுத்தி, அந்தக் குடத்துக்குள் தான் கை விடத் தயாரானான்!

‘`ஐயோ மன்னா...'' என்று பதறினார் அந்த மந்திரி. அவர் மட்டுமல்ல, அங்கிருந்த அனைவரை யும் அந்தச் செயல் திகைப்பில் ஆழ்த்தியது.

“பிரதானிகளே! அனைத்து மாலடியார் சார்பாகவும் நானே குடத்துக்குள் கையை விடுகின்றேன். மாலடியார் தவறு புரிந்திருந்தால், அரவம் என்னைத் தீண்டி அதை நிரூபிக்கட்டும். அல்லாவிடில் அது தீண்டாது ஒழியட்டும். எக்காரணம் கொண்டும் மாலடியார்க்கு இது போல் ஒரு

பெரும் சோதனையை நான் அளிக்கத் தயாராயில்லை" என்று கூறிக்கொண்டே குடத்துக் குள்ளும் கைகளை விட்டுவிட்டான் குலசேகரன்!

ஆனால் அரவம் அவனைத் தீண்டவில்லை. இருப்பினும் மந்திரிப்பிரதானியர் அரவக் கடிக்கு தாங்களே ஆளாகிவிட்டது போல் உணர்ந்தனர். திருதிருவென விழித்து செய்வதறியாது நின்றனர்.

மாலடியார் ஒரு பிழையும் செய்ய வில்லை என்பதும் ருசுவாயிற்று. மந்திரிப் பிரதானியர் குலசேகர மன்னனின் காலடியில் விழுந்து மன்னிப்பு கோரினர். உண்மையில் ரத்தின ஹாரமெல்லாம் காணாமல் போகவில்லை; அது போகவைக்கப் பட்டது!

"மன்னா! மாலடியார்கள் அரண்மனைக்குள் நடமாடுவதை குறைக்கவே நாங்கள் இவ்வாறு செய்தோம்" என்று கதறினர்.

"தாங்கள் ஒரு மன்னர். நாடாளும் பொறுப்பு மிக்கவர். தாங்கள் அதை மறந்து இறைவழி சென்றால் நாடு என்னாவது' - என்றும் கேட்டனர்.

"அப்படியானால் நாடாளும் மன்னனுக்கு இறைவழி கூடாதா?" - குலசேகரன் திகைப்போடு எதிர்க் கேள்வி கேட்டான்.

"நாங்கள் அப்படிச் சொல்ல வில்லை..."

"வேறு எப்படிச் சொல்கிறீர்கள்?"

"தாங்கள் பெரும் வீரம் காட்டி சேர சோழ பாண்டிய மண்டலங் களுக்கே அதிபதியாக உள்ளீர்கள். அதேநேரம், எதிரிகள் நம்மை அழிக்கக் காத்திருக்கின்றனர். அவர்கள் உங்களை மாவீரனாகக் காணும் வரைதான் இந்த நாடு நம் நாடாக இருக்கும். அவர்கள் தங்களைப் பற்றற்ற ஓர் அடியவராகக் கருதத் தொடங்கிவிட்டால் நம் நாடு சூறையாடப் படும் ஆபத்து உள்ளது மன்னா!"

மந்திரியர் கருத்து குலசேகரனை கட்டிப் போட்டது. நெடுநேரம் வரை யோசித்தவன் இறுதியாக ஒரு முடிவுக்கு வந்தான். தன் மகன்

திடவிரதனை அழைத்து, “மகனே நீதான் இனி இந்த நாட்டுக்கு அரசன். நான் அந்த மாலிடம் என்னைத் தொலைத்துவிட்டவன். என்னால் இனி வில்லும் வாளும் எடுத்து போரிடவோ, ஒரு உயிரைப் பறிக்கவோ இயலாது. எத்தனை பெரும் சக்ரவர்த்தியாக இருந்தாலும் இறுதியில் அவனிடமே சென்று சேரவேண்டும். தவறினால் மீண்டும் பிறந்து உழல வேண்டும். போதும் எனக்கு இந்த அரசவாழ்வு! நான் மாலவன் அடியவனாக எஞ்சியிருக்கும் என் வாழ்நாளைக் கழித்து அவனோடு கலந்து விட முடிவு செய்து விட்டேன்.

இனி, நீ இந்த மந்திரிகள் விருப்பப்படி இந்த நாட்டை ஆட்சி செய்வாயாக. ஒரே ஒரு வேண்டுகோள். அடியவர்களை எக்காரணம் கொண்டும் அவமதிக்கவோ, துன்புறுத்தவோ செய்யாதே" - என்ற குலசேகரன் சொன்னது போலவே மணிமுடி யைத் துறந்தான்; மரவுரி தரித்தான்.

“அப்பா! என்னை விட்டுவிட்டு, தாங்கள் மட்டும் இறைவழி செல்ல லாமா... நான் என்ன பாவம் செய்தேன்” என்று கேட்டாள் குலசேகரன் மகளான இளை.

“மகளே... உனக்கு இளவரசியாக வாழ விருப்பமில்லையா?”

“நான் தங்களை ஒட்டியே நடப்பவள். என்னிடம் இப்படி ஒரு கேள்வியா?”

“உனக்கு வாழ வேண்டிய வயதம்மா?”

“ஆம்... அந்த அரங்கனாகிய அழகிய மணவாளனுடன் வாழ வேண்டிய வயது...”

“மகளே என்ன இது... அரங்கனா உன் மணாளன்?”

“ஆம் தந்தையே... நான் அவனுக்கே என்னை அளித்துவிட்டேன்.”

“இது நந்த சோழனின் மகள் கமலவல்லி பேசிய பேச்சு.”

“அவள் வழியே என் வழி...”

“எனக்கு ஆட்சேபமில்லை... எச்சிலும் மலமுமாய் உண்டு உறங்கி வாழ்ந்து, கிழப்பருவம் கண்டு, எப்போது எமன் வருவான் என்று தினம் தினம் காத்திருந்து, பின்னர் பிரக்ஞையின்றி மறிப்பதல்ல வாழ்வு. நல்ல திடகாத்திரமும் திரு உள்ளமும் ஆரோக்கியமாக இருக்கும்போதே அவனை அடைந்துவிட முயல்வதே வாழ்வு.”

“சரியாகச் சொன்னீர்கள். கமலவல்லிக்கு இரக்கம் காட்டியவன் எனக்குக் காட்ட மாட்டானா?”

“நம்புவோமம்மா... இன்றே புறப்படுவோம். இனி, திருவரங்கமே நம் வாழ்விடம். திருவரங்கனே நம் வாழ்க்கை இன்பம்!

- குலசேகரன் மகள் இளையுடன் புறப்பட்டு விட்டான்.

**- தொடரும்...**

**கலியுகத்தில்...**



**ஸ்ரீ**மத் ராமாயணத்தில் உத்தர காண்டத்தில், கலியுகத்தில் என்னென்ன நடக்கும் என்று விளக்கப்பட்டுள்ளது. அவை:

1. மனம் போனபடி நடப்பதே வழி என்பார்கள். ஒவ்வொருவருக்கும் தனித் தனி நியாயம்.

2. நீதி நூல்கள் படிக்கக் கிடைக்காது.அறங்கள், தீயவர்களின் தூண்டுதல் மற்றும் பேராசையில் நடத்தப்படும்.

3. சுய விளம்பரம் செய்பவன் அறிவாளி ஆவான். போலிகள் புகழும் பெருமையும் பெறுவார்கள்.

4. ஊரார் பொருளைக் கொள்ளையடிக்கும் நபர்கள் கெட்டிக்காரர்கள் ஆவர்.

5. நெறிப்படி நடப்பவர் அறிவிலிகள்.

6. துறவிகள் அநியாயமாக செல்வம் சேர்ப்பர்.

7. ஞானம், தவம் ஆகியவை கேலிக்குள்ளாகும். பொய் பேசுபவர்கள் புலவர்கள்.

8. உண்மையாக உழைப்பவர்கள் ஏழையாக இருப்பார்கள்.

9. தற்பெருமைக்காக தானம் வழங்குவர்.

10. ஆயுதங்கள் முக்கியமாகும். விரசமான நூல்கள் பெருகும். மக்கள் உடலை வளர்ப்பார்கள்; உறுதியை மதிக்க மாட்டார்கள்.

**- ஆர்.ராஜலட்சுமி, கரூர்-4.**

12 Feb 2019

# ரங்க ராஜ்ஜியம் - 23



ரங்க ராஜ்ஜியம் - 23

- இந்திரா சௌந்தர்ராஜன் படம்: என்.ஜி.மணிகண்டன்

ஓவியம்: ம.செ

*‘பாதியாய் அழுகிய கால் கையரேனும்*
*பழிதொழிலும் இழிகுலமும் படைத்தா ரேனும்*
*ஆதியாய் அரவணையாய் என் பாராகில்*
*அவரன்றோ யாம் வணங்கும் அடிகளாவார்*
*சாதியால் ஒழுக்கத்தால் மிக்கா ரேனும்*
*சது மறையால் வேள்வியால் தக்கோ ரேனும்*
*போதினான் முகன் பணியப் பள்ளி கொள்வான்*
*பொன்னரங்கம் போற்றாதார் புலையர் தாமே!’*

**- திருவரங்கக் கலம்பகத்தில்**

**பிள்ளைப் பெருமாளையங்கார்**



அரண்மனையிலிருந்து புறப்பட்ட மன்னன் குலசேகரன், மகள் இளையுடன் திருவரங்கம் அடைந்தான். அரங்கன்மீதான பக்தியில் திளைத்தான். மறந்தும் தானொரு அரசன் என்று எவர் உணரும்படியும் நடக்கவில்லை. தொண்டர்களில் ஒருவனாய் பன்னிரு திருமண் காப்புடன் அரங்கனைத் தினம் ஆராதித்தவன், ஏனைய திவ்ய தேசங்களுக்கும் சென்று வந்தான். அவன் விருப்பப்படியே இளையை அந்த அழகிய மணவாளன் ஆட்கொண்டான். குலசேகரனோ அரங்கன் குடிகொண்ட ஆலயங்களில் சந்நிதி வாசல் படியாய் கிடக்கவே விரும்பினான். அவன் விருப்பங்கள் பாசுரங்களாகின.

*`ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ*
*வானாளும் செல்வமும், மண்ணரசும் யான்வேண்டேன்*
*தேனார் பூஞ்சோலை திருவேங்கடச் சுனையில்*
*மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே...'*

- என்று பாடினான். மலைகளில் சிறந்தது திருமலை. அம்மலையில் உள்ள ஒரு சுனையில் ஒரு மீனாய்ப் பிறந்துவிட்டால், அம்மலையை விட்டு அகலாமல் அங்கேயே கிடக்கலாம். எங்கும் செல்ல விரும்பினாலும் செல்ல இயலாது. இப்படி, தன்னை மாலுடன் இணைத்துக்கொள்ள விரும்பியவன், `சுனை நீர் ஒருக்கால் வற்றிவிட நேர்ந்தால் மீனாய் எப்படி வாழ இயலும்' என்றும் கேட்டுக் கொள்கிறான். பின்னர், வேங்கட மலையில் மரமாகப் பிறக்க எண்ணுகிறான். ஆனால், மரம்கூட வெட்டப்படலாம் அல்லவா?!

இப்படி, `எப்படிப் பிறந்தால் நீடித்து நிலைக்க முடியும்' எனும் சிந்தனைக்கும் அதன் சார்புடைய கேள்விகளுக்கும் ஆளானவன், நிறைவாகப் பாடினான்...

*`செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே*
*நெடியானே வேங்கடவா*
*நின்கோயிலின் வாசல் அடியாரும், வானவரும்*
*அரம்பையரும் கிடந்தியங்கும் படியாய்க் கிடந்துன்*
*பவளவாய் காண்பேனே' என்கிறான்.*

ஆம்! அந்த மாலவன் திருச்சந்நிதி முன்னால், பக்தர்கள் பாதம் ஒவ்வொரு நொடிப்போதும் படும் திருவாசல் படியாகவே பிறக்க விரும்புகிறான்.

## எவ்வளவு உயரிய பக்தி?

அந்தத் திருமாலோடு இரண்டறக் கலந்து மீண்டும் பிறவாமையைக் கூடத் தாராளமாக வேண்டலாம். அதுதானே அடியார் விருப்பமும்? ஆனால் அப்படி ஒரு விருப்பத்தை விடவும், இகபர சுகங்கள் கொண்ட இந்திரபதவி முதலான விஷயங்களைவிடவும் மேலான பெரும் பேற்றினை விரும்பினான் குலசேகரன்.

ஆம்! ஒரு கற்படியாக மாறி மாலவன் திருச்சந்நிதி முன் கிடந்து, அடியவர் பாதங்களைத் தாங்கி நிற்கும் பேற்றினை விரும்பிய குலசேகரன், மாலவனின் மனதையும் நெகிழ்த்துகிறான். தன் செல்வத்தையெல்லாம் நந்தசோழன் போலவே திருவரங்க ஆலயத்துக்கே செலவழித்துச் `சேனை வென்றான் திருமண்டபம்' எனும் மண்டபத்தைக் கட்டி, ஆலயத்துக்கு ஜீர்ணோத்தாரணமும் செய்வித்தான். இவனது இக்கைங்கர்யம் மற்றும் தன்னிகரில்லாத பக்திக்குப் பிரதியாக, திருவரங்க ஆலய மூன்றாம் சுற்றுக்குக் `குலசேகரன் திருச்சுற்று' எனும் பெயருண்டாயிற்று.

இந்தச் சுற்றில்தான் ஆலயக் கிணறு உள்ளது. இது வைகுண்டத்தில் பாய்ந்திடும் விரஜை நதிக்கு ஈடானது. இந்தச் சுற்றில்தான் திருநடை மண்டபம் முதல் மடைப்பள்ளி அன்ன மூர்த்தி, ஒற்றைக் கருடன் மண்டபம், ஊஞ்சல் மண்டபம், நெய்பால் கிணறுகள் மற்றும் பலிபீடம் - கொடிமரம் உள்ளன.

திருவரங்க வரலாற்றில் `ஆலயத்து ஆர்யபட்டாள் வாசல்' எனப்படும் பகுதிக்கு பின்னால், நாம் அறிந்துகொள்ள ஓர் உருக்கமான சம்பவம் உண்டு. மூன்றாம் திருச்சுற்றுக்கும், நான்காம் சுற்றுக்கும் இடைப்பட்ட வாயிலே ஆரிய பட்டாள் வாயில் என்றழைக்கப் படுகிறது. இப்பெயர் வந்திடக் காரணம் ஒரு வங்கதேச அரசன்!

அந்நாளில் `கௌடம்' எனும் பெயரில் வங்கதேசம் விளிக்கப்பட்டது. இத்தேசத்தை ஆண்டு வந்த அரசன், வடநாட்டு அயோத்தியிலிருந்து திருவரங்கனின் பிரணவாகார விமானம் திருவரங்கம் சென்றதை அறிந்தான். அதன் சிறப்பைக் கங்கைக்கரை யோகியர் மூலமும் ஞானியர் மூலமும் கேட்டறிந்தவன், அரங்கனை தரிசிக்க விரும்பினான்.

“நம் தேசத்தின் பிரபு நம்மைவிட்டுப் பிரிந்து தெற்கே சென்று விட்டார். அங்கே, அவர் எப்படிக் கொண்டாடப்படுகிறாரோ? நாம் சென்று அவரைத் தலைமேல் வைத்துக் கொண்டாடுவோம். முடிந்தால் அவரைத் திரும்ப இங்கே கொண்டு வந்துவிடுவோம்” - என்று மானுடர்க்கே உண்டான அகம்பாவத்தோடும், அதே நேரம் பக்தி மேலிடவும் எண்ணியவன், பெரும் சீர்ப்பொருள்களோடு அவற்றைச் சுமந்திடும் ஒட்டகங்கள் சகிதம் திருவரங்க யாத்திரை புறப்பட்டான்.

பாவம் அந்த மன்னன். திருவரங்கத்தில், பெரும் சோதனை காத்திருப்பது அவனுக்குத் தெரியாது!

அவன் எம்பெருமானை அறிந்தவிதத்திலும் புரிந்த விதத்திலும் நிறைய கோளாறுகள் இருந்தன. எம்பெருமானுக்குப் பக்தி உருக்கமும் `தான்' எனும் அகந்தையற்ற அன்பு நெருக்கமுமே கணக்கு. `தான்' எனும் உணர்வு சிறிதளவு இருந்தாலும் சரி... அறிந்தோ, அறியாமலோ அது எவ்விதத்தில் ஏற்பட்டிருந்தாலும், அந்தச் செருக்கு நீங்கும் வரை அவருக்கு அனுக்கிரகிக்கமாட்டார் அரங்கன். அதேநேரம், அவர்களின் செருக்கை நீக்கிட, அவரவர் சூழலுக்கும் தன்மைக்கும் ஏற்ப திருவிளையாடல்கள் நிகழ்த்தி பாடமும் கற்பிப்பார்.

அவ்வகையில், இந்த வங்காள மன்னனைச் சோதிக்க திருவுளம் கொண்டார்.

திருவரங்கம் வந்துசேர்ந்த வங்கதேசத்து அரசன், மரியாதை நிமித்தமாக சோழன் தன்னைச் சந்திக்கவரவில்லையே என்று முதலில் வருந்தினான். பிறகு கோபித்தான். அதேபோல், அரங்கன் ஆலய

முக்கியஸ்தர்கள் அனைவருக்கும் தனது வருகையை அறிவித்து, அவர்கள் தன்னைக் காண வரும்படி செய்தான்.



திருவரங்கத்திலிருந்த அனைத்து சத்திரங்களையும் பொன்னை அள்ளி வீசி தன்வயப்படுத்திக்கொண்டான். மட்டுமின்றி, திருவரங்கனுக்குத் தான் அளிக்க விரும்பிய ஆடையணிகள் தொட்டு முத்துச்சிவிகை, பொற்குடம், வெள்ளிக்குடம், வைர பாதுகை நவமணி ஆரம் என்று சகலத்தையும் காவலர் புடை சூழ ஒரு கண்காட்சி போல் அடுக்கிவைத்து, அனைவரும் காணும்படிச் செய்தான்.

அவனோடு வந்த யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், பசுக்கள் திருவரங்க ஆலய மாடவீதிகளை அடைத்துக்கொண்டு நின்றன. தெருவில் நடமாட இடமில்லாதபடி இவனது கூட்டத்தால் திருவரங்கம் பிதுங்கி வழிந்தது. அதுமட்டுமின்றி, அந்தக் கூட்டத்தார் திருவரங்கத்தில் வாழும் மக்களை இளப்பமாகக் கருதிப் பேசினர்.

“எங்கள் அரசர் மட்டும் இச்சோழ தேசத்து அரசராய் இருக்கும் பட்சத்தில் இந்த ஆலயம் அவ்வளவுமே பொன்னால் வேயப்பட்டிருக்

கும். உங்கள் சோழன் இம்மட்டில் எம்முன் மிகச்சிறியவன். அவன் மக்களாகிய நீங்களும் அவனைப் போலவே இருக்கிறீர்கள். எங்கள் நாட்டுக்கு வந்து பாருங்கள். எங்களின் தரை தவழும் பாலகன்கூடப் புரவியைக் கண்டால் தாவி ஏறிவிடுவான். அத்தனை வீரம் மட்டு மல்ல... அவ்வளவு செல்வச் செழிப்புடைய தேசம் எங்கள் தேசம்...'' என்று கித்தாப்பாய் வாயளந்தனர்.

திருவரங்கத்தாரும் சளைக்கவில்லை.

"ஏ வடவா... எங்களை என்னவென்று நினைத்தாய்? இங்கே பகட்டுக் கெல்லாம் இடமே கிடையாது தெரிந்துகொள். பொன்னாலே நகை செய்து உடம்பெங்கும் பூட்டிக் கொண்டு செல்வது செழிப்பல்ல. பன்னிரு திருமண் காப்புடன் எம்பெருமானை நினைந்து உருகியபடி செல்வதே இங்கே செழிப்பான செயல்பாடு. இங்கிருக்கும் ஆலயக் கதவுகளும்கூடத் திருமண் காப்புக்கே தாழ் திறக்கும். அதன் முன் தங்கம் வைரம் எல்லாம் கூட அற்பங்களே'' - என்று பதில் கூறினர்.

இவர்கள் இப்படியிருக்க, வங்க அரசன் ஆலய ஸ்தானீகர்களை அழைத்து "ஆகமப்படி எல்லாம் நடக்கின்றனவா... அயோத்தியில் இருந்தபோது எம்பெருமான் கொண்டாடப்பட்டது போல், இங்கே தெரியவில்லையே'' என்றான்.

"அப்படியெல்லாம் இல்லை. எங்களிடம் எந்தக் குறையுமில்லை. எங்களை அந்த அரங்கன் குறையோடு வைத்திருக்கவுமில்லை'' என்றனர்.

"போகட்டும்... நான் எம்பெருமானுக்கென ஏராளமான சீர் வரிசையைக் கொண்டு வந்திருக்கிறேன். அவற்றை எம் குழாமோடு எடுத்துவந்து, எம்பெருமானின் பார்வையில் படும்படி அர்த்த மண்டபத்தில் அடுக்க விரும்புகிறேன்'' என்றான். "நல்லது. ஆயினும் அதற்கு அரங்கனே சம்மதம் தரவேண்டும்'' என்றனர் ஸ்தானீகர்கள்.

"இது என்ன விந்தை. அவன் சம்மதிப்பது என்றால் அது எப்படி?'' அந்த வங்காளத்தான் விடைத்தான்.

“நாங்கள், உங்களின் விருப்பத்தைத் தெரிவிப்போம். இப்படிச் சொல்வதுகூடத் தவறுதான். அவனுக்குத் தெரியாமல் எந்த ஒன்றும் நடக்கமுடியுமா என்ன? இதோ இங்கே நீங்கள் பேசுவதை, நாங்கள் சொல்வதைகூட அவன் பார்த்தபடியேதான் இருக்கிறான்; கேட்ட படியேதான் இருக்கிறான்! அவன் சர்வக்ஞன் அல்லவா?

இருப்பினும் இப்படி நாங்கள் அவனிடம் விண்ணப்பிப்பது ஆலய நடைமுறை. அதற்கு அவன் செவிசாய்த்து ஏற்றுக்கொள்ளச் சொன்னால் ஏற்றுக்கொள்வோம். இல்லாவிட்டால்... அவன் விரும்பாத ஒன்றை அவனுக்குத் தர நாம் யார்?”

“எல்லாம் சரி... அவன் தன் முடிவை எப்படித் தெரிவிப்பான்?”

“அது, நாம் பூ கட்டிக் கேட்கும் போதே தெரிந்துவிடும். அவனுக்கு உகந்த துளசி, அவனுக்கு உகந்த தாமரை என்று இரண்டையும் எடுத்து அதைக் கட்டுவோம். அவன் முன் பிரார்த்தனை செய்து போட்டு, சிறு குழந்தையை விட்டு எடுக்கச் சொல்வோம். நாம் எதை விரும்பினோமோ அது வந்துவிட்டால் அவன் சம்மதித்து விட்டான் என்று பொருள்.”

“எளிமையான வழிதான். இருப்பினும் கோடானுகோடி செல்வத்தை ஏற்கவும் இப்படி யொரு வழிமுறை தேவையா?”

“கோடானு கோடிகள் பெரிதாய் தெரிவது நமக்குத்தான்; அவனுக்கு எம்மாத்திரம்? கோடிகளைக் கொட்டிக் குவிக்கும் திருமகளே அவன் மார்பில் இருந்தபடி அருள்பாலித்திடும்போது, கோடிகளைக் கண்டு மனம் மயங்க அவன் என்ன நம்மைப் போல் சாமான்யனா? அவன் வரையில், பொன்னும் பொருளும் பெரிதல்ல - அது ‘உன் முன் எனக்கும் பெரிதல்ல’ என்று கருதி, அதைச் சமர்ப்பிக்கும் பக்தியே பெரிது...”

“நானும் பக்தியைப் பெரிதாய்க் கருதியதால் அல்லவா, என் கௌட (வங்காள) தேசத்திலிருந்து செல்வங்களைச் சுமந்து வந்திருக்கிறேன்.”

'கூடவே `நான்' எனும் செருக்கையும் சேர்த்தல்லவா சுமந்தபடி இருக்கிறீர்கள்?' - என்று ஸ்தானீகர் கேட்க நினைத்து, பின் வேண்டாம் என்று கருதி, ``யாராய் இருந்தாலும் எதுவாய் இருந்தாலும் இங்கே நடைமுறை இதுவே" என்றார். வங்க அரசன் யோசிக்கத் தொடங்கி விட்டான். (இவன் பெயர், இவனது மாட்சி எதுவும் பெரிதாய் பதிவாகவில்லை. காரணம், இவனது செருக்கும் வடக்கு தெற்கு எனும் பேத உணர்வுமே).

"நீங்கள் எவ்வளவு யோசித்தாலும் அரங்கன் விரும்பினாலன்றி உங்கள் பொருள்களை ஆலய நிர்வாகம் ஏற்காது"

- என்று இறுதியாகவும் உறுதியாகவும் கூறப்பட்டது.

பூக்கட்டி கேட்கும் முறைக்குச் சம்மதிக்கலாம் என்றால், அதில் ஒரு இடையூறு தென்பட்டது வங்க அரசனுக்கு. ஒருவேளை எம்பெருமான் மறுத்துவிட்டால், அது பெரும் அவமானமாகிவிடுமே? தன்னிடம் ஏதோ பிழை இருப்பதாய்த் தன்னைச் சார்ந்தவர்களே கருதத் தொடங்கிவிடுவார்களே... என்று அந்த மன்னன் தன்னை மையமாக வைத்தே சிந்தித்தான். அசைக்க முடியாத நம்பிக்கை இருந்திருந்தால், `அரங்கன் சித்தம்' என்று துணிந்திருப்பான். அந்தத் துணிவு அவனுக்கு வரமறுத்தது. தடுமாறினான்; தவித்தான்.

பின்னர் அரை மனதாய் அரங்கன் அனுமதிக்குச் சம்மதித்தான்.

திருச்சந்நிதிக்கு முன் அவன் வந்து நின்ற நிலையில் ஸ்தானீகர்கள், சோழ அரசன் சார்பாய் ஆலயத்தை நிர்வகிக்க நியமிக்கப்பட்ட காப்பாளர்கள், அன்றாடம் அரங்கன் முன் வேதம் ஓதிடும் வைணவ தாசர்கள், அவர்களை நெறிப்படுத்திடும் ஜீயர் என்று அனைவரின் முன்னிலையில், அரங்கனிடம் உத்தரவு கேட்கப்பட்டது.

அரங்கன் தந்த உத்தரவு என்ன தெரியுமா?

**- தொடரும்...**

26 Feb 2019

# ரங்க ராஜ்ஜியம் - 24



ரங்க ராஜ்ஜியம் - 24

- இந்திரா சௌந்தர்ராஜன்                    படம்: என்.ஜி.மணிகண்டன்

வங்க அரசன் தன்னை மையமாக வைத்தே சிந்தித்தான். இறையின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை இருந்திருந்தால், `அரங்கன் சித்தம்' என்று துணிந்திருப்பான். அந்தத் துணிவு அவனுக்கு வரமறுத்தது. தடுமாறினான், தவித்தான் - பின் அரை மனதாய் அரங்கன் அனுமதிக்குச் சம்மதித்தான்.

திருச்சந்நிதியின் முன் அவன் வந்து நின்ற நிலையில் ஸ்தானீகர்கள், சோழ அரசனின் சார்பாய் ஆலயத்தை நிர்வகிக்க நியமிக்கப்பட்ட காப்பாளர்கள், அன்றாடம் அரங்கன் முன் வேதம் ஓதிடும் வைணவ தாசர்கள், அவர்களை நெறிப்படுத்திடும் ஜீயர் என்று எல்லோரின் முன்னமும் உத்தரவும் கேட்கப்பட்டது. தாமரைக்குப் பதில் துளசி வந்து மறுப்பைச் சொன்னது. அரங்கனே `வேண்டாம்' எனும் எதிர்மறை பதிலை அந்த உத்தரவில் கூறிவிடவும் வங்காளத்தான் உடைந்துபோனான்.

பல மாதங்கள் யாத்திரையாய், வழியெங்கும் ஜம்பமாய், அரங்கனுக்கே தான் படியளக்கப் போவது போல் காட்டிக்கொண்டு வந்ததெல்லாம் ஒரு துளசி இலையால் இல்லை என்றானதை எண்ணிக் கலங்கி நின்றான். அடுத்து என்ன செய்வதென்று தெரியவில்லை.

அவன் கலங்கி நின்றதைக் கண்டு சிலர் அவனுக்கு ஆறுதல் கூறினர்.

“அரசர் பிரானே! எம்பெருமான் வேண்டாம் என்று கூறிவிட்டதற்காகக் கலங்கிவிடாதீர்கள். இப்போது வேண்டாம் என்றவன், நாளையே சரி ஏற்றுக்கொள்கிறேன் என்று கூறலாம் அல்லவா?” என்றார் ஒருவர்!

“ஆம் அரசே! தங்கள் பக்தியை பரிசோதிப்பதற் காகக்கூட அரங்கப் பெருமான் மறுத்திருக்கலாம். எனவே பொறுமையோடு இருங்கள். அவனையே எண்ணுங்கள் - உருகுங்கள் - நிச்சயம் நல்வழி பிறந்திடும்” - என்றார் இன்னொருவர்.

வங்காள அரசனும் காத்திருக்கத் தொடங் கினான். `இன்னொரு முறை உத்தரவு கேட்போம்' என்று ஆலய நிர்வாகிகளைத் தொடர்புகொண்ட

போது, அவர்கள் `ஆண்டுக்கு ஒருமுறைதான் இதுபோல் கேட்க இயலும்' என்று கூறி விதியை நினைவூட்டினர்.



இந்த நிலையில் அவன் ஒரு முடிவுக்கு வந்தான். தான் நாடு திரும்பவேண்டிய கட்டாயம் ஏற்பட்டிருப்பதைக் கூறினான். அத்துடன், தான் கொணர்ந்த செல்வம் எதனையும் திரும்ப எடுத்துச் செல்வது தனக்கு அழகில்லை என்பதால், அவற்றை நம்பிக்கைக்கு உரிய தன் வைதீக பட்டார்கள் வசம் ஒப்படைத்து, அவர்களை அரங்கன் அனுமதிக்காக அவர் கோயிலின் வாசலில் இடையறாது காத்து நிற்கப் பணித்தான்.

அவர்களும் திருமண் காப்பு தரித்து அந்த வாசல் அருகே சென்று அரங்கனை வேண்டி நின்றனர். அதேவேளையில், தங்களைக் கோயில்

காவலர்களாய் ஆக்கிக்கொண்டு கோயிலை இரவில் வலம் வந்து சேவையும் செய்யத் தொடங்கினர். அவர்களின் பக்தியையும் சேவையையும் யாராலும் குறை கூறவும் முடிய வில்லை. காலத்தால் மிகக் கனிந்த அவர்கள் துளியும் செருக்கின்றி 'அரங்கா நீ எங்களுக்கு அருளியதை, நாங்கள் உனக்கு அளித்து மகிழ அருள் செய்' என்று விண்ணப்பித்துக்கொண்டனர்.

காலத்தால் அரங்கனும் கருணை செய்ய சித்தமானான். வங்காள அரசனால் ஆலயத்துக் கென அளிக்கப்பட்ட பொருள்கள் ஏற்கப்பட்டன. அதன் பிறகும், அந்தப் பட்டர்கள் வங்கதேசம் திரும்பிட விரும்பவில்லை.

'இங்கேயே இப்படியே அரங்கன் சேவையில் எங்கள் வாழ்வை அமைத்துக்கொள்கிறோம் - எங்கள் வழியில் எங்கள் வம்சாவளிகளும் சேவை புரியட்டும்' என்று அரங்கனிடம் விண்ணப்பித்துக் கொண்டனர். வடக்கே இருந்து வந்ததால் ஆர்யர் என்ற அடைமொழியோடு, `காப்பாளர்' என்பதே பட்டர்கள் என்பதன் பொருளாக கொள்ளப் பட்டதால், இரண்டும் இணைந்து ஆர்யபட்டர்கள் என்றாகி, அவர்களின் பக்தி மற்றும் தியாகத்தைப் போற்றும் விதத்தில், அவர்கள் காத்து நின்ற வாயில் பகுதி 'ஆர்யபட்டாள் வாயில்' என்று அழைக்கப்படலாயிற்று.

பின்னர், எம்பெருமானின் புறப்பாட்டுக் காலங்களில், இவ்வாசலை எம்பெருமான் கடக்கும் தருணங்களில், வங்கதேச மன்னனுக்கு அருளப்பாடு சாதிப்பதும் காலத்தால் வழக்கமாயிற்று.

பின் காலத்தால் எவ்வளவோ மாற்றங்கள்!

ராஜ்ஜியங்களில் ராஜாக்கள் மாறினர். சோழர்கள் கரம் வலுத்திருந்தது ஒரு காலம் - பின் பாண்டியர் கரம் வலுத்தது - சேரனும் சில காலம் தென்னகமே தன்னகம் என்று ஆண்டான். இப்படிப்பட்டக் கால மாற்றங்கள் கோயிலின் நிர்வாகத்திலும் மக்களின் கலாசார மாற்றத்திலும் எதிரொலித்தன.

எது எப்படி இருந்தபோதிலும் அரங்கனுக்கான வழிபாட்டு முறைகளும்

அவர் மீதான பக்தியும் நிலையாய் நின்று உலகையே காத்து ரட்சித்தன.



அரங்கனின் ஆலய வரலாறும் `கோயிலொழுகு' எனும் பெயரில் பதிவு செய்யப்படலாயிற்று. அதனை ஒரு சமூக கடமையாக ஆலய ஸ்தானீகர் களும் செய்தனர். அந்தக் கோயிலொழுகுவில் காணப்படும் குறிப்புகளை வைத்தும், ஏனைய இதர சாறுகளை வைத்துமே அரங்கமாநகரின் வரலாறு உருவானது.

அந்த வகையில் தர்மவர்மாவில் தொடங் கும் வரலாறு கிளிச்சோழனைத் தொட்டு, ராஜமகேந்திரசோழன், நந்தசோழன், குலசேகரப் பெருமாள், ஆர்யபட்டர்கள் என்று நீண்டு `நீலன்' எனப்படும் மறவர் குலத்து திருமங்கை மன்னனிடம் சென்று நிற்கிறது.

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகவும் கருதப்படும் இந்தத் திருமங்கை மன்னன் மற்ற ஆழ்வார்களில் இருந்து முற்றிலும் மாறுபட்டவர். குறிப்பாக மற்ற ஆழ்வார்கள் எம்பெருமான் திருவடிகளைத் தேடித்தேடி பக்தி செலுத்தினர் எனில், எம்பெருமானின் திருவடியே இவரைத் தேடி வந்தது என்பது எத்தனைப் பெரிய செயல்? இவரது பக்தியே

வரச்செய்தததது. இவரால் அரங்க மாநகர் பெரிதும் பொலிந்து அன்றும் இன்றும் என்றும் போற்றப்படுவதாய் உள்ளது!

இந்த மங்கை மன்னன் வரலாற்றை அறிந்து கொள்ளுதல் அவசியம். ஆச்சர்யமும் அதிசயமும் அளிப்பது திருமங்கை மன்னனின் வரலாறு.

இவரொரு மறவர்! முரட்டு மீசையும், பிசைந்து பிடித்தார் போன்ற தோள்களும், புஜபல பராக்ரமும், யானையைக்கூடத் தனித்து நின்று அடக்கும் கேண்மையும் உடைய ஒரு சிற்றரசர் இவர். சோழப் பெரு நாடு அன்று பல சிறுசிறு நாடுகளை தன்னகத்தே கொண்டிருந்தது. அதில் திருவாலி நாடும் ஒன்று. சோழவள நாடனும் சிற்றரசர்களை இங்கு நியமித்து, அவர்களை கப்பம் கட்டச் செய்து, தனது சோழவள நாட்டை நிர்வகித்து வந்தான்.

அப்படியான சிற்றரசர்களில் ஒருவரே நீலன். அதேநேரம் எவருக்கும் கட்டுப்படாத ஆண்மையும் வீரமும் நீலனுக்கு இருந்தன.

அவரைக் கண்டு பேரரசர்களே கூட நடுங்கினர். அதனால் அவருக்குப் பல பட்டங்கள். அவற்றில் ஒன்று பரகாலன். எமனே இவரைக் கண்டு நடுங்கும்படியானவர் என்பது உட்பொருள்.

இந்தப் பரகாலனிடம் ‘ஆடல்மா’ என்றொரு வெண்ணிறப்புரவி இருந்தது. அதன் மேல் ஏறிக் கொண்டு நீலன் வீதிவலம் வந்தால், திருவாலி நாடே குலுங்கிடும். வீதிகளில் புழுதியும் பறந்திடும். எதிரிகள் ஓடி ஒளிவர். நீலனைத் தங்களின் சுந்தர புருஷனாய் எண்ணிடும் சில பெண்களோ, இவன் பார்வை தங்கள் மேற்படாதா என்று வீதி ஓரங்களில் காத்திருப்பர்.

ஆனால் நீலன் அவ்வளவு சுலபத்தில் அவர் களிடம் மயங்கமாட்டார். அவர்களை ஏங்கவிட்டு அலைக்கழிப்பார். அப்படிப்பட்ட நீலன், ஒருநாள் வெள்ளக்குளம் எனும் ஊரின் திருக்குளத்தில் நீராடிக்கொண்டிருந்த குமுதவல்லி என்பவளைக் கண்டு சிலையாகி நின்றுவிட்டார்!

**- தொடரும்...**

## இறைவனே பயந்தார்!

இரண்யகசிபு மற்றும் பிரகலாதனின் விவாத தருணத்தில் இறைவனுக்கே பயம் வந்ததாம்! `தான்' எனும் அகந்தை கொண்டிருக்கும் இரணியன், தன் நெஞ்சைத் தொட்டுக்காட்டி, `என் நெஞ்சில் இறைவன் இருக்கிறானா' என்று கேட்டுவிட்டால் என்ன செய்வது என்று நினைத்து பயந்தாராம். காரணம்... அவன் அப்படிக் கேட்டு, பிரகலாதனும் `ஆம்' என்று சொல்லிவிட்டால் இரண்யகசிபுவின் நெஞ்சில் தான் எழுந்தருளவேண்டும். அப்படி அவர் புகுந்துவிட்டால் இரண்யகசிபு பக்தன் ஆகிவிடுவானே. அவன் செய்த தவறுகளுக்கெல்லாம் தண்டனை அளிக்க முடியாதே என்று எண்ணி பயந்தாராம்.

**- கே. அருள், சென்னை-23**

12 Mar 2019

# ரங்க ராஜ்ஜியம் - 25



ரங்க ராஜ்ஜியம் - 25

-இந்திரா சௌந்தர்ராஜன் படம்: என்.ஜி.மணிகண்டன்

*‘பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்விப்*
*பதங்களும், பதங்களின் பொருளும்*
*பிண்டமாய் விரிந்த பிறங்கொளி யனலும்*
*பெருகிய புனலொடு நிலனும்*
*கொண்டல்மா ருதமும் குரை கடலேழும்*
*ஏழுமா மலைகளும் விசும்பும்*
*அண்டமும் தானாய் நின்றவெம் பெருமான்*
*அரங்கமா நகரமர்ந்தானே!*

- **பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார்.**

திருவெள்ளக்குளத்தில் நீராடிக்கொண்டிருந்த குமுதவல்லி, அந்த நொடியே திருவாலி மன்னன் நீலனின் மனதில் விழுந்து, அவனை ‘இவள் எனக்குரியவள்’ என்று எண்ணும்படிச் செய்து விட்டாள். மன்னனாயிற்றே? குதிரையைவிட்டு இறங்கிச் சென்று அவளோடு பேச அவனுடைய ஸ்தானமும் கம்பீரமும் தடையாகி நின்றன.



அவன் உள்ளக்கிடக்கையை அறிந்த அமைச்சர்தான் அவனது விருப்பத்தை நிறைவேற்ற வேண்டியவரானார். நேராகக்

குமுதவல்லியின் இல்லத்துக்குத் தன் புரவி ரதத்தில் போய் இறங்கினார். வைத்தியர் அமைச்சரைத் துளியும் எதிர்பார்க்கவில்லை. அவரை வரவேற்று உபசரித்தார். வந்த காரணத்தையும் வினவினார்.

"அமைச்சர்பிரான் என் இல்லம் ஏகிய காரணத்தை நான் அறியலாமா?"

"நிச்சயமாக. தங்கள் திருமகளை நம் அரசர் திருக்குளத்தில் நீராடுகையில் கண்டுள்ளார். கண்ட நொடி முதல் தங்கள் புதல்வியை மணமுடிக்க விரும்புகிறார். அதன் பொருட்டுத் தங்கள் அனுமதிக்காகவும் அடுத்தடுத்து நிகழ வேண்டியவற்றுக்காகவுமே நான் வந்துள்ளேன்."

அமைச்சரின் பேச்சு வைத்தியரை அதிர்ச்சிக்கு ஆளாக்கினால், அதைக் கேட்டபடி மாலவனுக்குப் பூக்கட்டிக்கொண்டிருந்த குமுதவல்லியை அது ஸ்தம்பிக்கவே செய்துவிட்டது.

'இப்படிக்கூட நடக்குமா?' - அவளுக்குள் கேள்வி விஸ்வரூபம் கொள்ள, வைத்தியர் அதிர்ந்தார். ஆனாலும் அதிலிருந்து மீண்டுதானே தீரவேண்டும்? மீண்டார்! சற்று தைரியத்தை வரவழைத்துக்கொண்டு ``மன்னனின் விருப்பத்தை அறிந்து மகிழ்கிறேன். உண்மையில் மன்னனை மணந்திட என் மகள் கொடுத்துவைத்திருக்க வேண்டும். ஆனாலும் இந்த விஷயத்தில் குறிப்பிட்ட கொள்கைப்பாடு உண்டு" என்று பீடிகை போட்டார்.

"என்ன?"

"திருமண விஷயத்தில் எந்த ஒரு பெண்ணையும் அவள் விருப்பத்துக்கு மாறாக மணம் முடித்து வைத்துவிடக் கூடாது..."

"நல்ல கொள்கைதானே?"

"அதை நான், இங்கே என் மகள் வரையிலும் பின்பற்றலாம்தானே?"

"தாராளமாய்..."

“எனில், என் மகள் அரசரை மணக்கச் சம்மதித்தால், எனக்கு எந்த ஆட்சேபமும் இல்லை” - என்றார் வைத்தியர்.

ஆனால் குமுதவல்லியோ ‘‘அரசருக்கு நான் இணையானவள் இல்லை. என்னை மறந்து, அவரை மிக விரும்பும் பல பெண்களில் ஒரு பெண்ணை மணக்கச் சொல்லுங்கள்’’ என்றாள்.

அவளது பதிலைக் கேட்ட நீலன்கூட முதலில் அதிர்ந்தான்.

“இந்தப் பெண் என்னை விரும்பவில்லை என்பதை எத்தனை நாசூக்காய்க் கூறிவிட்டாள் பாருங்கள்...” என்றான்.

“ஆம் மன்னா...” என்றார் அமைச்சர்.

“அமைச்சரே... நான் பார்க்கமாட்டேனா என்று தவிக்கும் பெண்களுக்கு நடுவில், இப்படி ஒரு பெண் மகளா?” என்று கேட்டவன், “இந்தத் துணிவுக்காகவும் தெளிவுக்காகவுமே நான் இவளை விடுவதாயில்லை. இவளே இனி என் மனைவி” என்று சூள்கொட்டினான்.

அத்துடன், தனது சூடல்மா என்ற புரவியின் மேலேறிச் சென்று, நேராக குமுதவல்லி முன் போய் நின்றான். அப்படியே அவள் இல்லத்தையும் ஒரு பார்வை பார்த்தான்.

திரும்பிய பக்கமெல்லாம் காவிப்பூச்சும் திருமண் சின்னங்களோடும், குங்கிலியவாசம் மணக்கப் பெருமாளின் ரூபங்கள் காட்சி தந்தன. பத்து அவதாரங்களில் ஒன்று நீங்கலாய் ஒன்பதுக்கும் ஒன்பது சந்நிதிகள் - அந்தச் சந்நிதிகளில் நெய் விளக்குகளின் ஜோதிப்பிரகாசம்!

நீலனுக்குக் கோயிலுக்குள் நுழைந்துவிட்டது போல் ஓர் உணர்வு. வெளியேயிருந்து பார்க்கும் போது, பூசணிக்கொடி பரவிக்கிடக்கும் ஒரு கூரை வீடு, உள்ளே ஸ்ரீவைகுண்டமாகவே காட்சி தந்து கொண்டிருந்தது!

நீலன் கண்களில் வியப்பின் வழிசல்.

வைத்தியரோ நடுங்கிக்கொண்டிருந்தார். எங்கே, தானும் தன் மகளும்

ராஜகோபத்துக்கு ஆளாகிவிடுவோமோ என்று அவரின் இதயம் வேகமாய் துடித்தபடி இருந்தது. ஆனால் குமுதவல்லியிடம் எந்தப் பதற்ற மும் இல்லை, பயமும் இல்லை, மாறாக உபசரிப்பு...

“வரவேண்டும் அரசர்பிரானே!”

“மகிழ்ச்சி! ஆமாம் இது என்ன இல்லமா இல்லை கோயிலா?”

“இல்லக் கோயில்!”

“அருமையான விளக்கம். அற்புதமாக இருக்கிறது.”

“நன்றி அரசே.”

“நான் உன்னிடம் நன்றியை எதிர்பார்த்தெல்லாம் வரவில்லை. என் விருப்பத்தை நீ மறுத்த காரணம் அறியவே வந்தேன்...”



“இதற்காக தாங்கள் இவ்வளவு தூரம் வந்திருக் கத் தேவையில்லை. நான்தான் மிகத் தெளிவாக என் பதிலைக் கூறி அனுப்பியிருந்தேனே?”

“உண்மைதான். அந்த பதிலில் எங்கும் என் மேல் விருப்பமில்லை என்னும் கருத்தில்லை. நான் ஒரு சராசரிப் பெண். அரசருக்கு இணையானவள் இல்லை என்று கூறியதாக அறிந்தேன். ஆனால் எந்த சராசரிப் பெண்ணும் இத்தனை துணிவாய் தன்னிலை விளக்கம் அளிக்கமாட்டாள்.”

“அது உங்கள் கருத்து. ஆனால் நான் கூறியதே நிஜம்! நீங்கள்தான் பார்க்கிறீர்களே..?”

“குமுதவல்லி, நீ பேசப்பேச உன் மேல் எனக்கு மோகம் அதிகரிக்கவே செய்கிறது. நீ என் அருகில் இருந்தால் போதும். இந்த உலகமே என் காலடிக்குக் கீழ் வந்துவிடும் என்று நம்புகிறேன்.”

“இது செருக்கான பேச்சு. இந்த உலகமும் சரி, நீங்களும் சரி, நானும் சரி... எல்லோருமே அந்த மாலவனின் திருவடிக்குக் கீழ் கிடப்பவர்களே!”

‘`அது யார் மாலவன்?”

“என்ன விந்தை! மாலவன் யாரா? உங்களைப் படைத்து உங்களுக்கென்று ஓர் உலகைப் படைத்து, அந்த உலகோர்க்கு உணவு, உறையுள் என சகலமும் படைத்து, ஓர் அலகிலா விளையாட்டை விளையாடிக்கொண்டிருப்பவனையா யாரென்று கேட்கிறீர்கள்?"

குமுதவல்லியிடம் கோபம் வெளிப்பட்டது.

“கோபத்தில் நீ மேலும் அழகாய் ஜொலிக்கிறாய்! அது சரி... இத்தனை பெரிய படைப்பாளன் எங்கே இருக்கிறான் குமுதவல்லி. அவனை நான் காண இயலுமா?”

“உங்களையே படைத்தவன் எனும் வகையில் அவன் உங்களுக்குள்ளும் இருக்கிறான். நீங்கள் உங்களைக் கண்ணாடியில் பார்த்துக்கொள்வது கிடையாதா?”

“விசித்திரமான பதில். உன் பதிலின்படியே வைத்துக்கொண்டாலும் உன்

மாலவன்தான் நான். அப்படியிருக்க என்னை ஏற்க ஏன் மறுக்கிறாய்?”

“என் கருத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளுங்கள். ஒருக்காலும் நீங்கள் அவனாக முடியாது. அவன் பரமாத்மா; நாம் எல்லோருமே ஜீவாத்மாக்கள்.”

“குமுதவல்லி! நான் ஆத்மவிசாரம் புரிய வரவில்லை. என்னை ஏற்க நீ ஏன் மறுக்கிறாய்? சரியான காரணத்தை நீ கூறிவிட்டால், நான் சமாதானம் அடைந்து திரும்பிவிடுவேன். இல்லா விட்டால் உன்னை விடமாட்டேன்.”

“நான் அரங்கன் அடிமை. தாங்களோ என் அழகுக்கு அடிமைப்பட விரும்புகிறீர்கள். அவன் அழிவற்றவன்; என் அழகோ காலத்தால் அழிந்து விடும்.”

“அதனாலென்ன? இருக்கும்வரை இன்பமாய் வாழ்வோமே...”

“நான் நிரந்தரமானதில் அடங்க விரும்புகிறேன். தாங்களோ நிரந்தரமற்றதில் மயங்க விரும்புகிறீர்.”

“குமுதவல்லி, நிரந்தரமானது - நிரந்தரமற்றது என்று ஒரு சந்நியாசி போல் எதற்குப் பேசுகிறாய். என்னை மணப்பதால் உன் பக்தி குறைவுபடும் என்று அஞ்சுகிறாயா?”

“ஆம்..!"

“குறையாது! நான் குறையவும் விடமாட்டேன். இப்போது என்ன சொல்கிறாய்?”

“அரசே! உங்கள் வார்த்தைகளால் ஒரு பயனுமில்லை. ஆசை அறுபது நாள் என்பார்கள். தாங்களும் என்னை மணந்து அறுபது நாள் நீங்கள் சொன்னது போல் வாழக்கூடும்... பிறகு?”

“உன்னோடு நான் 60 நாள்கள் அல்ல... 60 யுகங்கள் வாழ ஆசைப்படுகிறேன்..”

“இது இப்போதிருக்கும் மோகத்தில் பேசும் பேச்சு.”

“நான் என்ன செய்தால், நீ என் உறுதிப்பாட்டை நம்புவாய்?”

“மோகத்தைத் துறந்து, மாலவனின் அடிமையாக வாழ முடியுமா உங்களால்?”

“உனக்கு அடிமையாக விரும்பும் என்னை மாலவன் அடிமையாக்கப் பார்க்கிறாயே...?”

“மாலவன் அடிதொழுபவரே முழுமையான மனிதர். அப்படி ஒருவரையே என்னால் எண்ணிப் பார்க்க இயலும்.”

“உன் காதலை நான் பெற, மாலவன்பாலான பக்திதான் விலையா?”

“ஆம். நீங்கள் மாலவன் அடிமையாகச் சம்மதித்தால் நானும் உங்கள் அடிமையாகச் சம்மதிக்கிறேன்.”

குமுதவல்லியின் பேச்சு அவள் தந்தையான வைத்தியரை மருளச் செய்தது. சோழப் பேரரசனே அச்சப்படும் பரகாலன் எனப்படும் நீலனிடம் இவ்வளவு தூரம் யாரும் பேசியிருக்கமாட்டார்கள். குமுதவல்லியோ பேசியது மட்டுமல்ல - அவனை லட்சியம் செய்யாமல், தான் தொடுத்த மாலையை மாலவனின் அவதார சொரூபங்களுக்குப் போட்டு, விளக்குத்திரியை நிமிண்டிவிட்டு, குங்கிலியத்தைப் புகையை விட்டு நறுமணம் உண்டாக்கித் தன் பக்திபூர்வமான பணியிலேயே கவனமாக இருந்தாள். நீலன் அதைக் கூர்ந்து பார்த்தபடி இருந்தான்.

“சற்று என்னையும் பார்...” என்றான். அவளும் திரும்பினாள். “நீ என்னை மிக மலிவாகக் கருதுவதுபோல் உணர்கிறேன்” என்றான் உணர்வுகள் நசுங்கிட.

“எனக்கு யாரையுமே அப்படிக் கருதத் தெரியாது” என்றாள் அவளும் பதிலுக்கு.

“அப்படியானால் நான் அருகிருக்கப் பூஜை பெரிதாகிவிட்டதா உனக்கு?” அவன் குரலில் ரௌத்திரம் தொனித்தது.

“நீங்கள் அல்ல... சப்தரிஷிகள் உள்பட நாரதரே இங்கு இப்போது இருந்தாலும் எனக்குப் பூஜைதான் பெரிது. பூஜைக்கு உரியவனே பெரியவன்!”

“ஒரு கற்சிலை மேல் இத்தனை பிரியமா?”

“பிரியமல்ல... பக்தி!”

“அப்படியென்ன இதில் இருக்கிறது?”

“நான், நீங்கள், என் தந்தை, நாம், இந்த ஊர், நாடு, பூமி, விண்ணகம், சந்திர சூரியர், நட்சத்திராதியர், வீசும் காற்று, பொழியும் மழை என்று எல்லாமும் இருக்கிறது...”

“நீ சொல்லும் சகலமும் இவனாலா தோன்றின?"

“அதிலென்ன சந்தேகம்?”

“என்னைப் பெற்றவள் என் தாய் - அதற்குக் காரணம் என் தந்தை. நான் அரசனாக இருக்கக் காரணம் என் வீரம். இதில் எங்கே இருக்கிறான் உன் திருமால்?”

“பாலில் நெய் அவன், தீபத்தில் ஒளி அவன். உம்மைப் போல் `எல்லாம் என் கையில்' என்று நினைத்தவர்கள் எல்லாம் `எதுவும் என் கையில் இல்லை' என்று உணர்ந்து அடங்கிப் போனதை இந்த உலகம் பல ஆயிரம் முறை பார்த்துவிட்டது. உங்கள் வரையிலும் அது நிகழும். உங்களுக்கும் எனக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. தயவு செய்து விலகிச்செல்லுங்கள்.”

“குமுதவல்லி! என்னைக் குலையச் செய்கிறாய் நீ...”

“நான் எனும் செருக்கால் வந்த வினைப்பாட்டுக்கு என்னைக் காரணம்

கூறாதீர்கள்.”

“நான் ஆசைப்பட்டு ஒன்றை அடையாமல் போனதேயில்லை.”

“நிச்சயம் உங்கள் ஆசையில் நீங்கள் என்னை அடையவே முடியாது.”

“சரி, உனக்காக நான் திருமால் பக்தனாகிறேன்... போதுமா?”

“எனக்காக ஆக வேண்டாம் - உங்களுக்காக ஆகிடுங்கள். அதுவே எல்லோருக்கும் நல்லது.”

“அதற்கு நான் எதாவது செய்யவேண்டுமா?”

“நிச்சயமாக...”

“என்ன அது?”

குமுதவல்லி சொல்லத் தொடங்கினாள்.

**- தொடரும்**

*‘இந்திரன் பிரம னீசனென் றிவர்கள்*
*எண்ணில் பல்குணங்களே யியற்ற*
*தந்தையும் தாயும் மக்களும் மிக்க*
*சுற்றமும் சுற்றிநின் றகலாய்*
*பந்தமும், பந்த மறுப்பதோர் மருந்தும்*
*பான்மையும் பல்லுயிர்க்கெல்லாம்*
*அந்தமும் வாழ்வு மாயவெம் பெருமான்*
*அரங்க மாநகரமர் ந்தானே!’*
- பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார்.

நீலன் எனும் அந்தக் குறுநில மன்னன், குமுத வல்லி எனும் அந்தப் பெண்ணிடம் ``உனக்காக நான் திருமால் பக்தனாகிறேன்...” என்றபோதும், “எனக்காக ஆகவேண்டாம் - உங்களுக்காக ஆகிடுங்கள். அதுவே எல்லோருக்கும் நல்லது” என்றே பதிலளித்தாள் அவள்.

“அதற்கு நான் ஏதாவது செய்யவேண்டுமா?” என்று மன்னவன் கேட்க, குமுதவல்லி பதில் சொன்னாள்:

“தாங்கள் ஒரு நல்ல ஸ்ரீவைஷ்ணவன் ஆக வேண்டும்”

“அதற்கு என்ன செய்யவேண்டும்?”

“ஆசார்யனிடம் பஞ்ச சமஸ்காரம் எனப்படும் ஐந்துவித செயல்பாடுகளை உபதேசம் பெற்றுக்கொண்டு, அவற்றை உயிருள்ள வரையிலும் பின்பற்ற வேண்டும்.”

“அவை என்ன... ஐந்துவித செயல்பாடுகள்?”

“ஸ்ரீபாஷ்யம் எனப்படும்... எம்பெருமானின் ஆதி முதல் அந்தம் வரை அறிதல், பின் வேதம் கூறுவதைக் கற்றல் - பின் கூறல்!”

“அடுத்து...?”

“சங்கு - சக்கரத்தைச் சின்னங்களாய்ப் புஜங் களில் தரிப்பது...”

“அடுத்து...?”

“பன்னிரு திருமண் காப்பு தரித்தல், மந்திர உபதேசம் பெறுதல், தினமும் திருவாராதனம் புரிதல்.”



“இவ்வளவுதானே. சரி, எங்கிருக்கிறார் அந்த ஆசார்யர்? அவரை இப்போதே அரண்மனைக்கு வரவழைத்து, நீ சொன்னதைச் செய்ய உத்தரவிடுகிறேன்.”

நீலன் இப்படிச் சொன்னதைக் கேட்டுச் சிரித்து விட்டாள் குமுதவல்லி.

“ஏன் சிரிக்கிறாய்?”

“சிரிக்காமல் என்ன செய்வது? ஆசார்யன் எனப்படுபவர் நடமாடும்

இறைவடிவம். அவருக்கு நாம் கட்டளையிட முடியாது; இடவும் கூடாது. ஆனால், அவரோ நம்மை பாழுங்கிணற்றிலும் குதிக்கச் சொல்லலாம். அப்படிச் சொன்னால் அதை மகிழ்வோடு செய்பவனே நல்ல சீடன்.''

குமுதவல்லி சொன்னதைக் கேட்டு, நீலன் ஒரு விநாடி கலங்கிவிட்டான். `கட்டளையிட்டே பழக்கப்பட்டவன், ஓர் ஆண்டியின் கட்டளைகளுக்குக் கட்டுப்படுவதா' என்று கேள்வி எழும்பத்தான் செய்தது. ஆனாலும் குமுதவல்லியின் பேரழகும், அவளின் அயராத பேச்சும், அவள்பாலான காதலும் நீலனைக் கட்டிப்போட்டன!



``அப்படியானால் ஆசார்யனை நான்தான் தேடிச்செல்ல வேண்டுமா'' என்று கேட்டான்.

``ஆம்! ஆனால், உங்களால் தேடிச் செல்ல முடியாது. வாளோடும் வேலோடும் போராடும் கரங்கள் உங்கள் கரங்கள். அவை, தொழும் கரங்களாக மாறாது. பிறரை அடக்கியாள்வது உங்களுக்குச் சுலபம். ஆனால் உங்களால் புலன்களை அடக்கியாள முடியவே முடியாது. நிமிர்ந்த மார்பு உங்களுடையது - அதனால் பணிந்து கும்பிட முடியவே முடியாது...''

குமுதவல்லி `முடியாது...' `முடியாது...' என்று சொல்லச் சொல்ல, நீலன் மனதிலோ `முடியும்...' `முடியும்...' என்றே எதிரொலித்தன அந்த வார்த்தைகள்!

குமுதவல்லியின் எதிரில் தோலை உரித்துவிட்டு வழன்ற உடம்போடு நிற்கும் ஒரு பாம்பு போல், தனது வீரம், அதிகாரம், மமதை ஆகிய சகலத்தையும் உதிர்த்தவனாக... அதேநேரம், `நீ விரும்பும் ஒரு ஶ்ரீவைஷ்ணவனாய் என்னாலும் ஆகமுடியும்; ஆகிக் காட்டுகிறேன்...' என்று சொல்லாமல் சொன்னவன், குமுதவல்லியின் மீது ஓர் ஆழமான பார்வையை வீசியபடி, விடை பெற்றுக்கொண்டான்.

நீலன் அகலவும் மெள்ள நெருங்கி வந்தார் குமுதவல்லியின் வைத்தியத் தந்தை. அவர் உடம்பில் ஒருவகை நடுக்கம்; முகத்திலோ இனம் தெரியாத பீதி. பார்வையில் ஆச்சரியத்தின் குழுமம்.

“என்னப்பா... அப்படிப் பார்க்கிறீர்கள்?”

“அதிகம் பேசிவிட்டாய் குமுதா...”

“அப்படியா?”

“அதுகூடவா தெரியவில்லை. எப்படியம்மா இப்படிப் பேச உன்னால் முடிந்தது?”

“நான் எங்கே அப்பா பேசினேன். என்னுள் இருந்து அவனல்லவா பேசினான்."

“எம்பெருமானையே அறிந்திராத இந்த மன்னனுக்கு, எம்பிரான்தான் உன்னுள் இருந்து பேசினான் என்றெல்லாம் புரியுமா அம்மா?”

“புரியாவிட்டால், அது என் பிழையில்லையே?”

“இப்படிச் சொன்னால் எப்படியம்மா?”

“வேறு எப்படிச் சொல்ல...?”

“எனக்குப் பயமாக இருக்கிறது. இந்த மன்னன் பெயரைக் கேட்டால் சோழச் சக்ரவர்த்திக்கே அச்சம் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்...”

“அதனால்...”

“என்ன அதனால்...? அரண்மனைக்குச் சென்று ஆற அமர யோசித்து, பின் அடாத ஒரு முடிவெடுத்து வந்து, உன்னையும் என்னையும் வீட்டுச்சிறைக்கு ஆட்படுத்திவிட்டால்..?"

“அதுதான் மாலவன் விருப்பம் என்றால் அப்படியே நடக்கட்டுமே...”

“மாலவன் விருப்பமா..? நான் மன்னவனின் விருப்பத்தைச் சொன்னேனம்மா...”

“இனி, மாலவன் விருப்பமே மன்னவன் விருப்பமாக இருக்கும்.”

“எந்த நம்பிக்கையில் இப்படிக் கூறுகிறாய்?”



“அப்படியானால், நீங்கள் நம்பவில்லையா... மாலவன் நமக்குக் கைகொடுப்பான் என்று?"

“குமுதா! நடப்பது கலி காலம். நாம் நலிந்த பிறப்பினர்...”

“அப்பா! தயவுசெய்து இனி இப்படியெல்லாம் பேசாதீர்கள். ஒரு

வைணவனாய் இருந்துகொண்டு அச்சப்படுவது கீழ்மை. அதைவிட கீழ்மை... நம் இறைவன்பால் நம்பிக்கை இழப்பது.”

- குமுதவல்லி தந்தையை இறுக்கக் கட்டிப் போட்டாள். அவர் பயந்தது போல் நடக்கவில்லை. மாறாக நீலன் தன்னை ஸ்ரீவைஷ்ணவனாக்கும் முனைப்புக்கு முற்றாக மாறிவிட்டிருந்தான். தன்னை அந்தத் தகுதிக்கு ஆளாக்கும் ஆசார்ய புருஷர் எங்கிருக்கிறார் என்று தேடினான்.

`திருநறையூர் நம்பி' எனும் ஆசார்ய புருஷர் உப்பிலியப்பன் திருக்கோவிலில் தங்கியிருக்கும் தகவல் கிடைத்தது. அடுத்த நொடியே புறப்பட்டு விட்டான். ஆனால், நீலன் அந்த ஆலயத்தை அடைந்தபோது, அந்த ஆச்சார்ய புருஷர் அங்கிருந்து புறப்பட்டுவிட்டிருந்தார்.

நீலன் முகத்தில் ஏமாற்றம். மன்னன் வரப் போவதாய் சொல்லியும் புறப்பட்டுவிட்டாரோ என்றொரு கேள்வி. பிறகே தெரிந்தது... தகவல் தெரியும் முன்பே அவர் புறப்பட்டுவிட்டார் என்று. இப்போது அவர் இருப்பது திருநறையூரில் என்பதையும் அறிந்தான்.

நீலனோடு வந்த அமைச்சர் உள்ளிட்ட பெருமக்கள் பதற்றமுடன் நீலனைப் பார்த்தனர். இதுபோன்ற ஏமாற்றங்களுக்கு நீலன் ஆட்பட்டதே இல்லை. எவரையும் அவன் தேடியதைல்லை - எவருக்காகவும் அவன் காத்திருந்ததில்லை. அவற்றுக்கெல்லாம் அவசியமே இல்லாத வீர வாழ்வு வாழ்வதாகக் கருதிக்கொண்டிருந்தவனுக்குள், அம்மட்டில் காலம் குமுதவல்லியின் வடிவில் வந்து பரீட்சை வைத்துவிட்டது.

‘உங்களால் முடியாது... உங்கள் பட்டமும் பதவியும் அதற்கு அனுமதிக்காது... அது சாத்தியமே இல்லை’ என்று ஆணி அடித்த மாதிரி குமுதவல்லி பேசிய பேச்சு, அவன் ஆண்மைக்குள் ஒரு தீப்பொறியை ஊதிவிட்டது. பற்றி எரியத் தொடங்கிவிட்டது மனது.

“மன்னா நாம் திரும்பிவிடுவோமா” என்று கேட்ட அமைச்சரைத் தீர்க்கமாய்ப் பார்த்தான். அதற்குள் உப்பிலியப்பன் கோயிலின் பட்டர் பூர்ண கும்பத்தோடு அவன் இருப்பிடத்துக்கே வந்துவிட்டார். அவர் பின்னே வேத முழக்கமிடும் வேதியர்க் கூட்டம். அவர்கள், மன்னனை

வரவேற்றுச் சிறப்பிக்கும் வேத மந்திரங்களைக் கூறத் தொடங்கினர்.

அவர்களது செயல் நீலனை ஆச்சரியத்தோடு சிந்திக்கவைத்தது. அவன் கண் எதிரில் பூர்ண கும்பம். காதுகளில் வேத மந்திர முழக்கம். அவனுக்கு இது முதல் அனுபவம்!

வேட்டைக்குப் போயிருக்கிறான், விருந்துக்கு போயிருக்கிறான், கணிகையர் கோட்டத்துக்கும் போயிருக்கிறான், நகர்வலம் என்று நாலாபுறமும் சுற்றி வந்திருக்கிறான். ஆட்சியாளர்களை சந்தித்து அகமகிழ்ந்து பேசியிருக்கிறான். போர்க்களங்கள் பல கண்டு வாளால் பலரது சிரசைப் பனங்காயைச் சீவுவது போல் சீவியிருக்கிறான். இப்படி, அவன் வாழ்வில் எவ்வளவோ அனுபவங்கள். ஆனால் ஒரு கோயில் வாசலில் நிற்பதும், பூர்ணகும்பம் பார்ப்பதும், வேத மந்திரம் கேட்பதும் இப்போது தான். அந்த மந்திர ஒலி தன் மகத்தான சக்தியைக் காட்ட ஆரம்பித்தது.

“அடேய் நீலா! உலகம் என்பது பெரியதடா. உனது திருவாலி நாடு அதில் ஒரு கைப்பிடி மண் மட்டும்தான். நீ கண்டதும் கேட்டதும்கூட அதே கைப்பிடி அளவுதான். நீ மிகச்சிறியவன். மிகமிகப் பெரியவன் உள்ளே இருக்கிறான். போய்ப் பார் தெரியும்...” என்று யாரோ அவன் அருகில் நின்று கொண்டு சொன்னது போலவும் இருந்தது.

மன்னன் நீலன், மெள்ள தன்னை மறக்க ஆரம்பித்தான். பூர்ண கும்பத்தின் பின்னே கடலை நோக்கிச் செல்லும் நதிபோல நடக்க ஆரம்பித்தான்.

வேத மந்திர முழக்கம் தொடர்ந்தது.

**- தொடரும்.**

09 Apr 2019

# ரங்க ராஜ்ஜியம் - 27

ரங்க ராஜ்ஜியம் - 27




ஓவியம்: அரஸ்

*‘வேத வாய்மொழி யந்தண னொருவன்*
*எந்தை நின் சர ணென்னுடை மனைவி*
*காதல் மக்களைப் பயத்தலும் காணாள்*
*கடியதோர் தெய்வங்கொண்டொளிக்கும்’*
*- என்றழைப்ப*
*ஏதலார் முன்னே யின்னரு ளவர்க்குச்*
*செய்துன் மக்கள் மற்றிவரென்று கொடுத்தாய்*
*ஆதலால் வந்துன் அடியினையடைந்தேன்*

*அணிபொழில் திருவரங்கத்தம் மானே!’*

-பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார்.

பூரணக் கும்பத்தைப் பின்தொடர்ந்த நீலன் வந்தடைந்த இடம், உப்பிலியப்பனின் சந்நிதி. அங்கே, திரையிடப்பட்டிருந்தது. அது தற்காலிகத் திரை. பூ உலகில் அதற்குத் திரை என்று பெயர்- ஞான உலகில் அதற்கு ‘தடை, தகவின்மை, தடுப்பு, தற்காலிகம்’ என்று எவ்வளவோ பெயர்கள்.

பொறுமையுடன் காத்திருப்போர் முன்பு அந்தத் திரை விலகிடத் தவறியதேயில்லை. ஞானமுள்ளோர் அத்திரை முன் காத்திருக்கத் தவறியதுமில்லை.

நீலனைக் காலன் இங்கு அழைத்து வந்து நிறுத்திவிட்டான். பொறுமையையும் மெள்ளப் புகுத்தினான். இனம்புரியாத பரவச உணர்வில் நீலன் திருச்சந்நிதிமுன் நின்ற நிலையில், அவனையும் அறியாமல் அவன் கைகள் இரண்டும் மார்புப்புறம் கூடிப் பிணைந்துகொண்டன. அமைச்சர்கள் ஆச்சர்யமாகப் பார்த்தனர்.

அவன் கை கட்டி நின்றதேயில்லை..! சோழச்சக்கரவர்த்திக்கு வருடாவருடம் வரி செலுத்த நேரிடும் வேளையிலும், பொன்னோடும் நெல்லோடும் ‘எப்படி என் பங்கு... பார்த்தீரா?’ எனும் செருக்கோடுதான் நின்றிருக்கிறான்.



எப்போதும் அவனுள் செருக்குதான் நிரம்பி வழிந்துள்ளது. பணிவை அவன் பிறரிடம் மட்டுமே எதிர்பார்த்திருக்கிறான். தன்னிடம் அவன் உணர்ந்ததேயில்லை.

ஆனால், இங்கோ எல்லாம் தானாய் நிகழ்ந்தபடி இருக்கின்றன. திரையும் விலகியது - மங்கல வாத்தியங்கள் முழங்கத் தொடங்கின. குங்கிலியப் புகை மணக்க மணக்கப் பரவிய நிலையில், கற்பூர தீபச்சுடர் முன்னால் அந்த மாலவனும் உப்பிலியப்பனாய் தேவியர் சகிதம் நீலனுக்கு அருட்காட்சி அளித்தான்.

நீலன், விண்ணிலிருந்து விழுந்த ஒரு மின்னல் வெட்டியது போல் உணர்ந்தான். கட்டிய கைகளைப் பிரித்து கூப்பத் தொடங் கினான். சூழ்ந்து நிற்போர் ‘நாராயணா... நாராயணா’ என்றனர்.

அஷ்டாட்சரம் - உலகின் ஒரே மந்திரம்!

பிறவிப் பூட்டைத் திறக்கும் சாவி!

கர்மப் பதிவை அழிக்கும் ரசாயனம்!

எது வாழ்வு என்பதைச் சொல்லித்தரப் போகும் ஆசான்!

மோச வாழ்வில் இருந்து மோட்ச வாழ்வுக்கான பாலம்!

நீலன் காதுகளில் விழுந்துவிட்டது. 'மறவன் நீலன்' அந்த நொடி முதல் 'மாலவ நீலன்' என்றானான். உப்பிலியப்பன் மேல் வைத்த விழிகளை அவனால் எடுக்க முடியவில்லை.

பார்... நன்றாகப் பார்...

நானே கம்பீரம். நானே கருணை. நானே பிரபஞ்சம். நானே சந்திர சூர்யர். நானே இவ்வையம் - அதன் மக்கள் - அவர் வாழ்வு. நீ என் திருமேனிக் கேசத்தின் லட்சத்தில் ஒரு பங்கு - என்றெல்லாம் அந்த உப்பிலியப்பன் பேசியதுபோல் உணர்ந்த நீலன், கண்ணீர் வடிக்கலானான். அங்கிருப்பவர்க்கெல்லாம் அது ஆச்சர்யக் காட்சி. நீலனின் மந்திரி கமலவிமலர் என்பவர் மட்டும் தயங்கித் தயங்கி ''மன்னா ஏன் அழுகிறீர்... என்னாயிற்று'' என்று கேட்டார்.

''கமலவிமலரே! நான் பாவி... இக்காட்சியை இதுநாள் வரை காணாத வனாகவே இருந்துவிட்டேனே... எத்தனைப் பெரிய பாவி நான். இன்று குமுதவல்லியால் இது சாத்தியமாகியுள்ளது. அவள் இனி என் தேவியில்லை... ஆவி'' என்றான்.



உப்பிலியப்பன் அவன் கண்ணீரை ரசித்தான் - பேச்சை ருசித்தான். காட்சி யால் மட்டுமே இத்தனை மாற்றம். காலத்தாலும் என்று கூறலாம். எதற்கும் ஒரு காலம் உண்டு என்பது எத்தனைப் பெரிய

உண்மை! உப்பிலியப்பனிடம் நேரிட்ட ரசவாத மாற்றங்களோடு திருநறையூர் சென்று ஆச்சார்ய நம்பி முன் நின்றான்.

நம்பி, நீலன் வந்து நிற்கும் கோலம் பார்த்து வியந்தார். அவன், அவரின் காலடியில் விழுந்து பணிந்தான். பின்னர், அவர் முன் தட்டுத்தட்டாய் பொன்னையும் பொருளையும் வைத்தான். அதில் உப்பிலியப்பன் கோயில் துளசி மாலையும் அடக்கம். நம்பி அதை மட்டும் எடுத்து தான் அணிந்துகொண்டார். அவரது ஞானத்துக்கு எல்லாம் புரிந்துவிட்டது.

ஓர் அழுக்குப் பட்டுத்துணியை உப்பிலியப்பன் சலவை செய்து அனுப்பியுள்ளான். அதை இனி தேவ கலிங்கமாய் ஆக்க வேண்டும்.

“மன்னா..!”

“நான் மன்னனில்லை குருவே. உங்கள் சீடன்.”

“மகிழ்ச்சி... எப்படி, இப்படி ஒரு மாற்றம்?”

“உங்கள் பாஷையில் சொல்வதானால் விதி. என் பாஷையில் சொல்வதானால் குமுதவல்லி.”

“எதுவாய் இருப்பினும் இனி உனக்கு நற்கதி. நீ இனிதான் வாழவே போகிறாய்!”

“உண்மை. என் கடந்த காலங்கள், நான் நல்வாழ்வு வாழக் காத்திருந்த காலங்கள் என்றாகி விட்டன.”

“சரியாகச் சொன்னாய்... நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்...”

“நான் சொல்வதா? நீங்கள் சொல்லுங்கள்... நான் இனி என்ன செய்யவேண்டும்?”

ஆசார்ய நம்பி ஆச்சர்ய நம்பியாகிச் சிரித்தார். பின், “நல்லதோர் அரசனாய் நாட்டுமக்களின் காவலனாய், திருமாலின் தொண்டனாய் வாழ்வாயாக” என்றார்.

“இது போதுமா நான் ஸ்ரீவைஷ்ணவனாவதற்கு?” என்று மிகப் பணிவாகக் கேட்டான் நீலன்.

ஆசார்ய நம்பி முகத்தில் ஆனந்த அதிர்வு!

“தவறாக ஏதும் கூறிவிட்டேனா?”

“இல்லை... உன் போல் ஒருவன், இப்படிக் கேட்டதே எனக்குப் புதிய அனுபவம். வைஷ்ணவனாக அந்த குலத்தில் பிறந்தவர்கள் பலருண்டு. பிறவாமல் ஆவதென்பது அவரவர் செயல் திறத்தால் மட்டுமே சாத்தியம்...”

“அந்தச் செயல்பாடுகள் எவை?”

“நான் எனும் செருக்கடக்குதல், நாம் எனும் நினைவாகுதல் இது முதல் செயல்பாடு!”

“மற்றவை?”

“பஞ்ச சம்ஸ்காரம் எனும் விதிமுறைப்பாடுண்டு. அதன்படி நூலளவு பிசகுமின்றி செயல்படுதல்...”

“அவை?”

“தோள்களில் மாலவன் திருச்சின்னம் தரித்தல், பன்னிரு திருமண் காப்புடன் மாலவன் அடியார்க்குச் சேவை செய்தல், அன்றாடம் மாலவனுக்குத் திருவாராதனம் புரிதல், மாலவன் பாசுரங்களை உருக்கமாய் ஒதுதல், அவன் ஆலயத்தில் திருத்தொண்டு புரிதல்...”

“ஆஹா... அற்புதம்! இனிமேல்தான் நான் வாழப்போகிறேன் என்பது எவ்வளவு உண்மை. நீங்கள் கூறியவாறே செயல்படுவேன் குருவே!”

நீலன் துளியும் தயக்கமின்றி முன்வந்தான்.

ஆசார்ய நம்பி பிரமித்து நின்றார். நெடுநேரம் கழித்து, ‘‘ஒன்றை மட்டும் உனக்கு என்னால் தர இயலாது’’ என்றார்.

“என்ன அது?”

“மந்த்ரோபதேசம்...” என்றார் ஒரு சொல்லில்.

ஆச்சார்ய நம்பி சொன்னது நீலனுக்கு முதலில் ஒரு பெரிய விஷயமாகத் தோன்றவில்லை. சொல்லப்போனால் ‘மந்த்ரோபதேசம்’ என்றால் என்னவென்றுகூட அவனுக்குத் தெரிந்திருக்க வில்லை. அது, அவன் குழப்பமும் கேள்வியும் கொண்ட முகத்தில் நன்றாகவே எதிரொலித்தது. ஆச்சார்ய நம்பிக்கும் அது புரிந்தது.

“நீலா... மந்த்ரோபதேசம் என்று நான் கூறியது உனக்கு என்னவென்றே தெரியவில்லை என நினைக்கிறேன்.”

“ஆம் குருவே... அது என்னவென்று நீங்களே விளக்கமாய்க் கூறவேண்டும்.”

“மந்த்ரோபதேசம் என்பது உன் காதுகளுக்குள் பிறர் அறியாவண்ணம் உன் மனதை நிலைநிறுத்தி நான் கூறப்போகும் ஒரு அஷ்டாட்சர சொல்...!”

“அஷ்டாட்சர சொல் என்றால்..?”

“எட்டெழுத்துக்களால் ஆன அந்த மாலவனின் திருப்பெயர்... அதையே அஷ்டாட்சரம் என்போம்.”

“அந்தப் பெயர்?”

“அதைத்தான் உன் வரையில் என்னால் கூறமுடியாது என்றேன்...”

“ஏன் குருவே?”

“எல்லா விஷயத்துக்கும் இந்த உலகில் சில விதிப்பாடுகள் இருக்கின்றனல்லவா?"

“விதிப்பாடா?”

“ஆம்... ஒரு மன்னனாகீய நீ தெருவில் வரும்போது, எல்லோரும் உன்னை வணங்க வேண்டும் என்பது முதல், இந்தக் குற்றத்துக்கு இந்தத் தண்டனை என்பது வரை எவ்வளவோ விதிப்பாடுகள் உள்ளனவே... அவற்றைக்கூடவா அறியாதவன் நீ?”
“குருவே! அந்த விதிப்பாடு இங்கே உங்கள் வரையில் எப்படி தடையாக உள்ளன? அதிலும் ஒரு திருப்பெயரைச் சொல்வதற்குத் தடை என்றால் வியப்பாக உள்ளது...”

“இதில் வியக்க எதுவுமில்லை... நானொரு சந்நியாசி. எனக்கென இப்படித்தான் வாழ வேண்டும் என்று நியமங்கள் உள்ளன. எனக்கான நியமங்கள் உனக்குப் பொருந்தாது. நீயோ அரசன்.

இப்படி எனக்கிருக்கும் நியமப்படி, வேதம் தெளிந்த - அன்றாடம் வேதத் தொடர்புடைய மாந்தருக்கே, அஷ்டாட்சரத்தை நான் உபதேசிக் கலாம். அப்படி நான் உபதேசிப்பதை அவர் எக்காரணம் கொண்டும் பிறருக்கு உபதேசிக்கக் கூடாது. குறிப்பாக அஷ்டாட்சர மந்த்ரோபதேசம் என்பது வேதம் கூறுபவர்க்கே. வேதம் கூறும் பிறப்பாளரான பிராமணரிலும்கூட உபநயனம் தரித்திடாத பிரம்மசாரிகளுக்கு உபதேசிக்க விதி இல்லை.

அக்னி வளர்த்து, உபநயனம் தரித்து, அன்றாடம் காயத்ரி மந்திரம் உபாசித்து, நான் கூறிய பஞ்ச சம்ஸ்காரப்படி வைணவ தர்மங்களைப் பேணி நடக்கும் ஒருவருக்கே என்னால் உபதேசிக்க முடியும். அப்போதுதான் அஷ்டாட்சர மந்திரமும் தன் பூரண சக்தியைக் காட்டி அவருக்கு வைகுண்டத்தில் எம்பெருமானிடத்தில் இடமளிக்கும்...”

“சரி.. எனக்கு உபதேசிக்க விதியில்லை என்று கூறிவிட்டீர்.. எதற்காக இப்படி ஒரு கட்டுப்பாடு? இறைநாமம் என்பது எல்லோருக்கும் ஆனதுதானே? எல்லோரும்தானே அவன் மக்கள்?”

அர்த்தம் பொதிந்த இந்தக் கேள்விக்கு விளக்க மாகப் பதில் சொல்லத் தொடங்கினார் நம்பி.

**- தொடரும்**

## எண்ணெய் ஊறும் சிவலிங்கம்!



மயிலாடுதுறை - கும்பகோணம் சாலையில், ஆடுதுறையிலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவில் இருக்கிறது திருநீலக்குடி. இங்கு அம்பிகையே சிவலிங்கத்துக்கு எண்ணெய்க்காப்பு செய்வதாக நம்பிக்கை. இங்குள்ள சிவலிங்கத்தின் மீது எவ்வளவு நல்லெண்ணெய் விட்டாலும், அது முழுவதும் சிவலிங்கத்துக்குள்ளே ஊறி விடுகிறதாம். இந்தக் கோயிலில் அம்பிகை சந்நிதியில் எண்ணெய் வைத்து வழிபட்ட பின்னரே, சிவலிங்கத்துக்கு அபிஷேகம் செய்கின்றனர்.

23 Apr 2019

# ரங்க ராஜ்ஜியம் - 28



ரங்க ராஜ்ஜியம் - 28

ஓவியம்: அரஸ்

**பிறப்போடு மூப்பொன்றில்லவன்றன்னைப்**
**பேதியா வின்ப வெள்ளத்தை**
**இறப்பெதிர் காலக் கழிவுமா னானை**
**ஏழிசையின் சுவை தன்னை**
**சிறப்புடை மறையோர் நாங்கை நன்னடுவுள்**
**செம்பொன் செய் கோயிலினுள்ளே**
**மறைப் பெரும் பொருளை வானவர் கோனைக்**
**கண்டு நான் வாழ்ந்தொழிந்தேனே!'**

- பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார்.



''இறைநாமம் என்பது எல்லோருக்குமானது தானே? எல்லோரும்தானே அவன் மக்கள்'' என்ற நீலனின் கேள்வியைச் செவிமடுத்த நம்பி, ''நல்ல கேள்வி...'' என்ற முன்னோட்டத்தோடு, விளக்கமாகப் பதில் சொல்லத் தொடங்கினார்.

"அஷ்டாட்சரம் என்பது சொல்வடிவில் உள்ள ஓர் ஆயுதமப்பா. ஆயுதம்

என்பது வீரன் கையில் இருப்பதுதானே அழகு? அதேபோல், வேத சம்பந்தமுடையோர்க்கு அது முற்றான பலனைத் தருவதாய் உள்ளது. அவர்களாலேயே மன ஒருமைப்பாட்டுடன் தியானிக்க இயலும்...”

“அப்படியானால், வேதியர் அல்லாதோர்க்கு வைகுண்டத்தில் இடம் இல்லை என்றாகிறதே...?”

“அப்படியல்ல. இதைச் சரியாக புரிந்துகொள்ள வேண்டும். எல்லோரும் பொதுவாக மனித இனத்தவர் என்றபோதிலும், வர்ணங்களால் நாம் பிரிக்கப்பட்டுள்ளோம். அந்த வர்ணங்களைத் தோற்றுவித்ததும் அவன் செயலே! ‘பிராம்மணன், வைஸ்யன், ஷத்ரியன், சூத்ரன்’ என்று நான்கு வர்ணங்கள் உள்ளன.

எம்பெருமானின் பேச முடிந்த நாவின் அம்சமாய் பிராம்மணனையும் வலிமை மிகுந்த தோளின் அம்சமாய் சத்திரியனையும், உடலுக்கே உணவைப் பெற்று சக்தியளிக்கும் வயிற்றின் அம்சமாய் வைஸ்யனையும், உடம்பையே தாங்கி நிற்கும் கால்களின் அம்சமாய் சூத்ரனையும் அவனே படைத்தான். பின் இந்தப் படைப்புக்கேற்ப நியதிகளை வகுத்து மனுவானவர் சூத்திரம் உருவாக்கினார். அதற்கு மனுநீதி என்று பெயர்.

அதன்படி நாவின் அம்சமாய்ப் பிறந்தவன், வேதம் ஓதுதலை முதல் கடமையாகக் கொண்டு, அதற்கே தன் வாழ்வு என்று வாழவேண்டும். இவன், பிற கர்மங்கள் புரியத் தேவையில்லை. வேதம், யாகம், யோகம் என்று இவன் செய்யும் செயல்களால் நல்ல மழை உண்டாகும்; உயிர் களிடம் பகை உணர்வு நீங்கும்; பயிர்கள் செழிக்கும்.

தோளில் தோன்றிய சத்திரியனுக்குத் திரேக பலம் பிரதானம். நீ கூட இந்த வகையைச் சேர்ந்தவனே! திரேக பலம் இருந்தால்தான் ஒரு நாட்டைக் கட்டிக்காக்க முடியும். நாட்டு மக்களைப் பசி-பட்டினியிலிருந்து பாதுகாத்து அவர்கள் நலமாக வாழ வகை செய்வது, சத்திரியனின் கடமை. அதேபோல் பொய், களவு, சூது இல்லாத நகரை உருவாக்கி, அதர்மத்தைத் தலைதூக்கவிடாமல் செய்து தர்மத்தை நிலைநாட்டுவதும் சத்திரியனின் கடமையே. இக்கடமையைச்

செய்தாலே போதும், இறைவன் தேடி வந்து ஆட்கொள்வான். ஒரு வேதியனைப் போன்று சத்திரியன் செயல்படத் தேவையில்லை.

வைஸ்யன் என்பவன், மக்கள் வாழ்வதற்குத் தேவைப்படும் பொருள் களை வாங்கி விற்பவன். வயிற்றின் அம்சமாய் அவன் பிறக்க காரணமும் அதுவே. இவனாலேயே வர்த்தகம் உருவாகிறது. அந்த வர்த்தகத்தில் அவன் நேர்மையாகச் செயல் பட வேண்டும். அதுவே வைஸ்யனுக்கான தர்மம். அதில் நிலைத்திருந்தாலேபோதும்; இறைவனடியை அவன் தடையின்றி அடைந்துவிடலாம்.

அடுத்து சூத்திரன். நால்வகை பிறப்பாளர்களில் இவனே முதலாமவன் - பிரதானமானவன். சூத்திரனுக்குக் கணிதன் என்றொரு பெயரும் உண்டு. இவன் மண்ணோடு தொடர்புடையவன். மண்ணின் தன்மை அறிந்து அதைப் பாகுபடுத்தி - நன்செய், புன்செய், கலிர், கட்டை எனப் பிரித்து, அதற்கேற்ப திட்டமிட்டு செயல்பட்டு உணவை உருவாக்குபவன். நிலங்களில் கால்களால் நடமாடி உழுதே பணியாற்றுவர். எனவே இவன் எம்பெருமானின் திருவடி அம்சமாய்த் தோன்றியவன். பருவமறிதல், அளவறிதல், மண் தன்மை அறிதல் என்று அனைத்தையும் அறிந்து, அறிந்ததற்கேற்ப திட்டமிட்டு கணக்காய்ச் செயல்பட்டால்தான் பயிர்களைக் காப்பாற்றி களஞ்சியத்திலும் சேர்க்க முடியும். அந்தக் கணக்கைக் கொண்டிருப்பதாலேயே... கணக்கு சூத்திரமுடையது என்பதாலேயே இவன் சூத்திரன் எனப்பட்டான்.

ஒரு வைணவன் வரையில் அவன் பெரிதும் போற்றவேண்டியது திருவடிகளைத்தான். அந்த வகையில், மற்ற வர்ணத்தாரும் போற்றும் சிறப்புக்குரியவன் சூத்திரனே. இவன் இல்லையேல், உணவில்லை; காடு நகரம் எனும் பாகுபாடுமில்லை. இவன் உணவை உற்பத்தி செய்தால்தான் வைஸ்யனுக்கே வேலை. இவர்கள் இருவராலேயே ஒரு மக்கள் கூட்டம் வாழ்கிறது.

அந்த மக்கள் கூட்டத்தைப் பாதுகாப்பவனாய் இருப்பவனே சத்திரியன். இந்த மூன்று வர்ணத் தாரும் நலமாய், வளமாய், பலமாய், வாழ்ந்திட இறையருள் பிரதானம். அதை வற்றாது பாதுகாப்ப வனே அந்தணன்

எனப்படும் பிராம்மணன் அல்லது வேதியன்.

அந்த வேதியன் வழி வந்தவன் நான். எனக்கான ஆன்மிகப் பணியைச் செய்தபடி இருக்கிறேன். நீயும் சத்திரியனுக்குண்டான உன் கடமையைச் செய். இதில் உன் இறைபாதை இன்று முதல் வைணவம். உனக்கான இறைவன் அந்தத் திருமால் எனும் மாலவன். அவனுக்கான நெறிமுறையே பஞ்ச சம்ஸ்காரம். இதில் மந்த்ரோபதேசம் நீங்கலாய் மற்ற எல்லாவற்றையும் நீ மட்டுமல்ல எவரும் பின்பற்றலாம்!”

ஆசார்ய நம்பி நால்வகை வர்ணங்களை விளக்கி, தன் நிலைப்பாட்டையும் தெளிவுபடுத்திக் கொண்டார். நீலனுக்கும் ஒரு தெளிவு ஏற்பட்டது.

“குருவே! உங்கள் மூலமாய் நான் பூரணமான ஒரு சமூக நெறிப்பாட்டை உணர்கிறேன். ஆயினும், இவர்களில் உயர்ந்தவன் - தாழ்ந்தவன் என்கிற ஒரு போக்கும் மனிதர்களிடம் காணப்படுகிறதே... அது எதனால்?” என்று கேட்டான்.

மீண்டும் பதில் சொல்லத் தொடங்கினார் ஆசார்ய நம்பி.

“இது கலியுகம். மாயை மிகுந்தது நம் வாழ்வு. இப்போது நீ என்னோடு பேசியபடி இருக்கிறாய். நான் அறிந்ததை உபதேசித்தபடி இருக்கிறேன். இந்த நொடி நாம் வாழ்வதே வாழ்வு. சிறிது நேரத்தில் என்னுடனான உன் சந்திப்பு, என் பேச்சு என்று எல்லாமே நினைவு என்றாகிவிடும். அவற்றைத் திரும்பப் பெறவே முடியாது.

இப்படித்தான் ஒவ்வொரு நொடியும் உள்ளது. அடுத்து என்ன நடக்கும் என்று எவருக்கும் திண்ணமாய் தெரியாது. ஆயினும், மாயை நாம் காலகாலத்துக்கும் வாழப்போவது போல் ஒரு பிரமையை நமக்குள் உருவாக்கியுள்ளது.

இந்தப் பிரமையே, மனித மனங்களில் தவறான புரிதல்களையும் உருவாக்கிவிடுகிறது. இந்தப் புரிதல்களில்தான் பேதங்கள் உருவாகின்றன. நிறைய பொருள் உடைய ஒருவன் செல்வந்தன்;

இல்லாதவன் ஏழை எனும் பாகு பாடு, நிலத்தில் பாடுபடுபவன் கீழானவன் - அமர்ந்து பாடுபடுபவன் மேலானவன் எனும் பாகுபாடு, வேதம் சொல்லத் தெரிந்தவனே மிக மேலானவர், மற்றையோர் தாழ்ந்தோர் எனும் பாகுபாடு... இவையெல்லாம் வாழ்வின் மாயை காரணமாக உருவான தவறான புரிதல்களால் ஏற்பட்டவையே! அவற்றில் உண்மையில்லை. நல்ல தெளிந்த அறிவுடையவனுக்குத் தெரியும்... இந்த உலகில் பெரிது, சிறிது என்று எதுவும் கிடையாது என்று!

தரையில் புழுதியில் பாதங்கள் பதிந்திருப்பதால் அவை கீழானவை; நறுமணமுள்ள தைலம் பூசப்படுவதோடு தங்கக்கிரீடத்தைத் தரிப்பதால் தலையே மேலானது என்று, ஒரு மனிதன் தன் உடலளவில் உறுப்புகளில் பாகுபாடு காண்பானா? நம் உடம்பைப் போன்றதே நம் சமூகமும். இதில் நம் உடல் உறுப்புகள் போன்றவையே வர்ணப் பிரிவுகள். இதில், மேல் கீழுக்கு ஏது இடம்? உடம்பின் ஒவ்வொரு திசுவும் எப்படி முக்கியமோ அப்படியே எல்லோரும்!"

"அற்புதம் குருவே! என் வாழ்வில் உங்களைச் சந்தித்த இந்த முதல் நாளிலேயே நான் பெரும் தெளிவைப் பெற்றுவிட்டேன். இதுநாள் வரை, உங்களைச் சந்திக்காமல் வாழ்ந்த வாழ்வில் அர்த்தமில்லை என்றும் உணர்கிறேன்.''

"அப்படியெல்லாம் இல்லை. எதற்கும் ஒரு காலம் உண்டு. ஒரு மணிஅரிசியின் பின்புலத்தில் கூட விதைப்பு, வளர்ப்பு, அறுவடை, உமி நீக்கம், வியாபாரம் என்கிற செயல்களுக்கான காலக்கணக்கு உள்ளது.அப்படி இருந்தால்தான் அரிசி உருவாக முடியும். உன் உருவாக்கத்தின் பின்னாலும் இப்படி ஒரு கணக்கு உள்ளது. இனி, நீ எவ்வாறு வாழப் போகிறாய் என்பதில்தான் உன் சிறப்பும் உள்ளது."

"ஒரு நல்ல சத்திரியனாய்... அதேநேரம் வைண வனாய், உங்களுடைய உகந்த சீடனாய் வாழ்வேன். அதில் தங்களுக்குச் சந்தேகமே வேண்டாம்."

"மகிழ்ச்சி! உன்னால் உன் திருவாலி நாடு பெருவாலியாகவும்

திகழட்டும்!”

“ஆனாலும் ஒரு விஷயத்தில் மட்டும் மனம் சமாதானம் அடையாமல் குழம்புகிறது குருவே!”

“எந்த விஷயம்?”

“நீங்கள், எனக்கில்லை என்று கூறிய மந்த்ரோபதேசம்.”

“நான் கூறவில்லை. அது விதிகளின் நிலைப்பாடு.”

“ஒரு பேச்சுக்குக் கேட்கிறேன். அப்படி நீங்கள் என் பொருட்டு உபதேசித்தால் என்னாகிவிடும்? எல்லோர்க்கும் பொதுவென்று அதை ஆக்குவதில் பிழை எவ்வாறு உருவாகும்?”

“மிகச்சிறந்த கேள்வி. இப்படி ஒரு கேள்வியே இப்போதுதானே பிறந்துள்ளது? இதற்கு விடை இப்போது என்னிடமில்லை. ஒருவேளை, எதிர்காலத்தில் இதற்கு விடைகிடைக்கலாம்.”

“அப்படியானால், அப்படியோர் எதிர்காலத்துக் காக நான் காத்திருக்கவேண்டுமா?”

“ஆம்! இக்கேள்வி நீ என்னிடம் கேட்டக்கப் பட்டது மட்டுமல்ல, அந்த மாலவனிடமே கேட்டு விட்டதாகவே பொருள். உன் கேள்வியை நான் அவனுக்கு அர்ப்பணித்துவிடுகிறேன். ஏன் இப்படி ஒரு விதி, இதனால் உருவாகப் போகும் நன்மை எப்படிப்பட்டது, இது எதனால் எப்படி எப்போது மாறும்... இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடை, நீ இன்று முதல் வாழப்போகும் வாழ்வில் நிச்சயம் கிடைக்கும். யார் கண்டது... நியதியை உருவாக்கிய அவனே அதை உடைத்து, உனக்கு அவனேகூட மந்த்ரோபதேசம் செய்ய வரலாம்!"

**- தொடரும்...**



## சிவனும் சிட்டுக்குருவியும்!

காளமேகப் புலவர் சிவனையும் சிட்டுக் குருவியையும் சமமாக்கி சிலேடையாகப் பாடிய போது, `பிறப்பு இறப்பில்' என்னும் பொதுவான வாசகத்தைக் கூறுகிறார்.

``சிவனுக்கும் சிட்டுக்குருவிக்கும் இது எப்படிப் பொருந்தும்?" - எனக் கேட்டனர் சக புலவர்கள்.

“சிவன் என்றைக்கும் நித்தியமானவன். அவனுக்கு ஜனன, மரணமில்லை. எனவே, ‘பிறப்பு, இறப்பு இல்லை’ என்றேன். சிட்டுக்குருவிகள் பெரும்பாலும் வீட்டுத் தாழ்வாரத்தில் கூடு கட்டி குஞ்சு பொரிக்கும். தாழ்வாரத்தை இறப்பு என்று கூறுவர். எனவே, சிட்டுக்குருவியின் பிறப்பு இறப்பில் என்றேன்” எனக் கூறினார் காளமேகம்.

``நியதியை உருவாக்கிய பகவானே அதை உடைத்து, உனக்கு அவனே கூட மந்த்ரோபதேசம் செய்ய வரலாம்? உன் போன்றோர்க்காக, தானோ அல்லது தன் வடிவாய் என் போன்ற ஒரு ஆசார்யனையோ உலகுக்கு அனுப்பித் தரலாம்" என்ற ஆசார்ய நம்பியின் பதிலால் நீலனின் கண்கள் பனித்தன.

அதனைத் தொடர்ந்து புனித நீராடி, வெண்பட்டு உடுத்திக் கொண்டான். பிறகு பன்னிரு திருமண் காப்பும் தரித்துப் பணிவினும் பணிவானவனாய் நம்பியிடம் பஞ்ச சமஸ்காரங்களையும் பெற்றவன், இருதோள்களிலும் சங்கு சக்கரப் பிரதிஷ்டையுடன் புதியதொரு வடிவோடு, அந்த ஆச்சார்ய நம்பியின் மடாலயத்தை விட்டு வெளியே வந்தபோது, மந்திரிகள் மட்டுமல்ல, அவனது `ஆடல்மா' எனும் புரவியும் மிக ஆச்சர்யமாகப் பார்த்தது!

எப்போதும் அந்தப் புரவியின் மீது ஒரே தாவில் தாவி ஏறுபவன், அன்று முதலில் தயங்கி நின்றான்; பின்னரே ஏற முற்பட்டான். ஆனால் அக்குதிரையும் அவனை வேறு யாரோ என்று எண்ணி, அவனை ஏறவிடாமல் செய்யப் பார்த்தது. ராஜபுரவிகள் புரவிக் காப்பாளனைக்கூட தன் முதுகின் மேல் ஏற்காது. அவை, தன் அரசனின் உடல் வாசத்துக்கும், மொழிக்கும் தங்களை ஆட்படுத்திக் கொண்டிருக்கும். குறிப்பாக எதிரிகள் அதன் மேல் ஏறி அவற்றை இயக்கவே முடியாது.

இதெல்லாம் நீலனுக்கும் தெரியும். ஆகவே, அந்தப் புரவியின் கழுத்தை வருடி 'நான் உன் நீலன்தான்' என்பதை அதற்கு உணர்த்தினான். பிறகு என்ன நினைத்தானோ, அருகில் நின்றிருந்த ரதத்தில் ஏறிக்கொண்டான். ஆடல்மா அந்த ரதத்தைப் பின்தொடர்ந்தது.

அதன் பிறகு அந்த ரதம் வெள்ளக்குளத்து வைத்தியர் வீட்டு முன்தான் நின்றது. அவனைத் திருமண் காப்போடு பார்த்த குமுதவல்லி அப்படியே கன்னத்தில் கை வைத்து வியப்பில் மூழ்கினாள். அவள் தந்தையோ `காதல் இப்படியெல்லாம்கூட ரசவாதம் புரியுமா' எனும் கேள்விக்குள் மூழ்கினார்.

"என்ன குமுதவல்லி அப்படிப் பார்க்கிறாய்?"

“தாங்கள்தானா என்று பார்க்கிறேன்.”

“நானேதான். வீரதீரசூர பராக்கிரம திருவாலி நீலனேதான்!”

“எங்கே உங்கள் வெண் புரவி?”

“அதுவா... இனி எனக்குத் தேவையில்லை என்று கருதுகிறேன்.”

“ஏன் அப்படி?”

“மாறனாய் இருந்தவரை எனக்குப் புரவிதான் அழகு. மாலனாகி விட்டேனே... இனி பக்தியே எனக்கழகு.”

“நீங்களா பேசுகிறீர்கள்?”

“ஒரு புரிதலுக்காக `நான்’தான் எனலாம். ஆனால் நடப்பவை எதுவும் நம் வசமில்லை; எல்லாம் அவன் செயல். அதன்படிப் பார்த்தால், என்னுள் இருந்து பேசுவதுகூட அவன்தான்!”

நீலன் வார்த்தைக்கு வார்த்தை வியப்பளித்தான்.

“குமுதா! நான் என் வாழ்நாளில் பெரும் பகுதியை வீணாகக் கழித்துவிட்டேன். கேளிக்கை யும் வேடிக்கையுமாகவே பொழுதுகள் சென்று விட்டன. எம்பெருமானை தரிசித்த பின்னரோ, எனக்குள் பெரும் மாற்றம். தவறு தவறு... உன்னை எப்போது சந்தித்தேனோ, அப்போதிருந்துதான் நான் அர்த்தத்தோடு வாழத் தலைப்பட்டேன்.அந்த வகையில் பார்த்தால், நீதான் என் வரையில் தலையானவள்..!”

“ஐயோ என்ன இது... இப்படியெல்லாம் பேசுகிறீர்கள். நானெங்கே - அவனெங்கே?”

“என் வரையில் அவன் வேறு நீ வேறு அல்ல. நீ என் கண்களைத் திறந்தவள்; காமத்தைத் தடுத்தவள்; அஞ்சாமை கொண்டவள். ஆசார்ய நம்பி என் குரு என்றால், நீ குருவுக்கும் குரு...”



“போதும்... என்னைப் புகழ்வதாகக் கருதி, உங்களையுமறியாமல் நீங்கள் உங்களைத் தாழ்த்திக்கொள்வதோடு, பிறரையும் தாழ்த்தி ஓர் உயரத்தை எனக்கு அளிக்காதீர்கள்.”

“என் நன்றிக்குரியவள் நீ. இப்போதுகூட நீ என்னைச் சீர்ப்படுத்தவே செய்கிறாய். சொல்... நான் இனி அடுத்து என்ன செய்யவேண்டும்?”

“என்ன செய்வதா? அதை நான் சொல்வதா?”

“வேறு யார் சொல்வார்கள்... நீதான் கூறவேண்டும்.”

“அப்படியானால், ஆசார்ய நம்பி கூறியதுபோல் நல்லதொரு ஸ்ரீவைஷ்ணவனாய் எல்லா உயிர்களுக்கும் நன்மைபயக்கும் ஒரு வாழ்க்கை வாழுங்கள்!”

“அதுதான் இனி என் வாழ்வு. அதில் உனக்குச் சந்தேகமே வேண்டாம். மேற்கொண்டு நான் என்ன செய்யவேண்டும். அதைச் சொல்.”

நீலன் அப்படி கேட்கவும் அவன் மறைமுகமாய்த் தன்னை மணப்பது குறித்துதான் அப்படிக் கேட்கிறானோ என்று கருதியவள், "ஒரு காரியம் மட்டும் பாக்கி உள்ளது. அதை நீங்கள் செய்து விட்டால், நாம் இணைந்து விடலாம்" என்றாள் தழைந்த குரலில்.

"குமுதா! அந்தப் பாக்கி என்ன? அதை மட்டும் கூறு! இணைவது என்பது என் வரையில் எப்போதோ நடந்துவிட்டது. முதலில் உன்னை நான் காமத்தோடு பார்த்தேன். இப்போதோ அது பக்தியாகிவிட்டது. எனவே இந்த இணைப்பு - பிணைப்பு என்று மலிவானச் சொற்கள் எதற்கு? நீ விஷயத்துக்கு வா!"

நீலன் அவளை அதிரச் செய்தான். நெடுநேரம் அவனையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

`'பார்த்தது போதும்... அடுத்து என்ன செய்ய வேண்டும். சொல்..."

"அடுத்து... அடுத்து..."

"உம்... சொல்!"

"தினந்தோறும் ஆயிரம்பேருக்கு அன்னம் அளிக்கவேண்டும்."

"அன்னதானத்தைச் சொல்கிறாயா?"

"ஆம். மனிதனோடு ஒட்டிப்பிறந்த ஒரு தேவை. உயிர்கள் வாழ்வதே பல தருணங்களில் அதனால் மட்டும்தான்..."

"உண்மை... பெரும் உண்மை. பசியைப் பிணி என்றே கூறுவர் மேன் மக்கள். அது ஓர் அகலாப்பிணி. பிணிபோக்குதல் ஒரு மேலான பணிதான்..."

"அப்பணியை மட்டும் தாங்கள் செய்தால் போதும். இந்த நாட்டில் களவிருக்காது; நோயிருக்காது; எவரிடமும் சோர்வும் இருக்காது..."

"உண்மைதான்! யாருக்கும் எதிரி வெளியே இல்லவே இல்லை. நம்

வயிறுதான் முதல் எதிரி. ஒரு வேளை சோறிடாவிட்டாலும் உருட்டி மிரட்டத் தொடங்கிவிடுகிறதே?"

"அதனால்தான் சொன்னேன்... மட்டுமல்ல, தானங்களில் பூரண நிறைவைத் தரும் ஒரே தானம், அன்னதானம் மட்டும்தான்."

"இதுவும் பேருண்மை. பொன் பொருள் என்றும் மாடு மனை என்றும் எதைத் தந்தாலும், `போதும்' என்று மனதார ஒருவர்கூட சொல்ல மாட்டார். ஆனால், அன்னம் உண்டவர் வயிறு நிரம்பிவிட்டால், நம் கையைப் பிடித்துத் தடுப்பார்!"

"ஆஹா... நீங்கள் அழகாய்ப் புரிந்துவைத்திருக் கிறீர்கள். உலகின் பல பெரும் பாவங்களுக்குப் பின்னால், பசிதான் பெரும் காரணமாக இருந்திருக்கிறது. அதனால்தான் பசி வந்திடப் பத்தும் பறந்து போகும் என்றனர். அப்படியான பசிக்கு இனி திருவாலி நாட்டில் இடமில்லை என்று செய்யுங்கள்."

"அற்புதம் அவ்வாறே செய்கிறேன்."

"ஒரு முக்கியமான விஷயம்"

"என்ன?"

"இது ஏதோ ஒரு நாள் கூத்தாக முடிந்து விடக்கூடாது. அன்னம் பொருட்டு மூட்டப் படும் அடுப்பு, உங்கள் தலைமுறையைக் கடந்தும் அணையாது எரியவேண்டும்."

"நல்ல எச்சரிக்கை. இந்த நீலன் எந்த ஒரு காரியத்திலும் அவ்வளவு சுலபத்தில் இறங்க மாட்டான். இறங்கிவிட்டாலோ, உயிரே போனாலும் சரி... மாறமாட்டான். வருகிறேன்."

நீலன் கம்பீரமாகப் பேசிவிட்டு செல்லவும், குமுதவல்லி அடுத்துப் போய் நின்றது, எம்பெருமானின் திருவுருவச் சிற்பம் முன்தான்!

"எம்பெருமானே! உன் கருணையை என்னென்பேன். பரந்த இந்த

உலகில் ஒரு தூசினும் சிறிய தூசு நான். ஆனால், என்னைத் தேர்வு செய்து என்னுள் புகுந்து ஒரு மன்னவனையே உன் திருவடிச் சேவகனாய் மாற்றிவிட்டாயே!

உலகைப் படைத்து, அதில் உயிர்களைப் படைத்து, அந்த உயிர்களுக்கென ஒரு கால கதியை விதித்து, அலகிலா விளையாட்டை அற்புதமாய் ஆடும் உன் முன், இந்த நீலன் ஒரு சாதாரண மானவனே. அவனுள் நீ புகப்போய், அவன் இனி அசாதாரணமானவன் ஆகப்போகிறான். இதை நான் என்னென்பேன்... எப்படிச் சொல்வேன். உப்புக் கல்லையும் வைரமாக்கி விடும் உன் பார்வை என்பது எத்தனைப் பெரிய உண்மை...”

குமுதவல்லி கசிந்தாள். அப்பா அருகில் வந்தார். ‘அம்மா’ என்றார்.

“அப்பா...”

“அப்பாவேதான்... நான் ஒன்று சொன்னால் தப்பாகக் கருதமாட்டாயே?”

“எதற்கப்பா இந்தப் பீடிகை. தப்பாகவெல்லாம் உங்களுக்குப் பேசவே வராதப்பா...”

“நானொரு சாமான்யனம்மா...”

“அப்படியானால், நான்கூட சாமான்யை தானே?”

“தவறு... நீ இப்போது நான் வணங்கும் அந்த லட்சுமிதேவியாகவே காட்சி தருகிறாய். உன்னால் தான் எனக்கும் பெயர்.”

“நீங்கள் சொல்ல வந்ததைச் சொல்லுங்கள்.”

“ஆயிரம்பேருக்கு அன்னமளிக்கவேண்டும் என்று கூறிவிட்டாயே... அதுவும் நாள்தோறும்..”

“அதனால் என்னப்பா... தினமும்தானே பசிக்கிறது?”

“அதுசரி... ஆனால் தினமுமா நெல்மணி விளைகிறது?”

“நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்?”

“ஒரு தேசத்தில் எல்லோருக்கும் சோறிடுதல் அரசனின் கடமைதான். ஆனால் அதை இலவசமாகத் தருவது, மக்களைச் சோம்பேறி களாக்கி விடாதா? அதோடு வருடம் மூன்று போகம் மட்டும்தான் விளைச்சல். அதில் ஒரு போகம் புன்செய்! அப்படியிருக்க ஆயிரம் பேருக்கு அன்னம் என்றால், திருவாலி முழுக்க விளைந்தாலும் போதாதே...”

“அப்பா! எப்போதும் உங்களுக்குள் மனித எத்தனத்துக்கு உட்பட்ட நம்பிக்கைகளே உள்ளன. அந்த மாலவன் படியளப்பான் என்பதை மறந்துவிடுகிறீர்கள்...”

“இப்படி நீ சொல்லிவிட்ட பிறகு, நான் இனி பேச ஏதுமில்லை. ஆனாலும் ஒன்றை மட்டும் சொல்லிக்கொள்கிறேன். அறிவை அவன் அளித்திருப்பது எச்சரிக்கையுடன் செயல்படத்தான். முள்ளுக்குச் செருப்பும், வெயிலுக்குப் பாகையும், மழைக்குக் குடையும் போன்றது வருமுன் காத்திடும் செயல்திட்டம். அது அறிவோடு இருக்கவேண்டும். இல்லாவிட்டால், எது வேண்டுமானால் நடக்கலாம்...”

வைத்தியர் எச்சரித்தது போலவேதான் நடந்தது. அன்னக் கொட்டாரம் நிரம்பி வழிந்தது. நெற்களஞ்சியங்கள் காலியாகத் தொடங்கின. உழைத்தால்தான் உணவு என்று வாழ்ந்த பலர், உறங்கி வாழத் தலைப்பட்டனர். பக்தியின் மிகுதி மறுபக்கத்தை மறைத்துவிட்டது. வருடம் ஒரு முறை சோழப் பேரரசனுக்கு ஆயிரம் கலம் நெல்லுடன் பத்தாயிரம் பொன்னைக் கப்பமாகக் கட்டவேண்டும். அதற்கு நெல்லும் இல்லை - பொன்னும் இல்லை! முதல் வருடம் பொறுத்தான் சோழன். இரண்டாம் வருடமும் மூன்றாம் வருடமும் முத்ராதிகாரிகளை அனுப்பி ஓலை போக்கினான்.

நீலனோ “எங்களுக்கே போதவில்லை என்று சொல்” என்றான்.

‘`நீலா நீயா பேசுகிறாய்..” என்றார் முத்ராதிகாரி.

“என்னுள் இருந்து மாலன் பேசுகிறான்”

“உளறாதே... நீலா! பரகாலன், பராந்தகன், வீரகேசரி என்றெல்லாம் புகழப்பட்டவன் நீ. இப்போதோ பரமபண்டிதனாய் நாமம், துளசி மாலை என்று பொலிவிழந்து காட்சி தருகிறாய். ஒரு பெண் உன்னை முட்டாளாக்கிக் கட்டிப் போட்டுவிட்டாள். வெட்கமாயில்லை உனக்கு?”

“முத்ராதிகாரியே! நாவை அடக்கிப் பேசு. குமுதவல்லி இந்தத் திருவாலியின் அரசி. அவளால்தான் நான் முழு மனிதனாகி, அதற்கும் மேலான மாலின் தொண்டனாகியுள்ளேன்.”

“தொண்டன் அரசாண்டால் நாடே அழியும். நீ அதை காணப் போகிறாய். விரைவில் போர் முரசு ஒலிக்கப் போகிறது. நீயும் கொல்லப்படுவாய்'' என்று கூறிவிட்டு சென்ற முத்ராதிகாரி, நடந்ததை அப்படியே சோழனிடம் கூறவும் சோழன் ஸ்தம்பித்தான். இறுதியாக நீலனைக் கைது செய்ய உத்தரவிட்டான்.

**- தொடரும்...**

21 May 2019

# ரங்க ராஜ்ஜியம் - 30



ரங்க ராஜ்ஜியம் - 30

ஓவியம்: அரஸ்

*‘தாராளன் தண்ணரங்க வாளன் பூமேல்*
*தனியாளன் முனியாள ரேத்த நின்ற*
*பேராளன், ஆயிரம் பேருடைய வாளன்*
*பின்னைக்கு மணவாளன் பெருமை கேட்பீர்*
*பாராள ரவரிவரென் றழுந்தை யேற்ற*
*படை மன்னருடல் துணியப் பரிமா வுய்த்த*
*தேராளன், கோச்சோழன் சேர்ந்த கோயில்*
*திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே’*
- பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார்...

நீலனை வீரர்களால் கைது செய்ய முடியாது. எனவே, தந்திரமாகத்தான் செயல்பட வேண்டும். அதன் பொருட்டு, ஒரு பெருமாள் கோயிலுக்கு வழிபாட்டுக்காக நீலன் வந்த தருணத்தில், ஒளிந்திருந்த வீரர்கள் வேல் கம்புகளோடு அவனைச் சுற்றி வளைத்தார்கள். ஒரு மத யானையைப் போல், சங்கிலிகளால் பூட்டப்பட்டான் நீலன்.

எதிரில் முத்ராதிகாரியோடு சோழ மந்திரியும் வந்து நின்றார்.

‘‘நீலா... நீ இனி சிறைக்கைதி’’ என்றார்.

‘‘உன் திருவாலிக்குச் சோழப் பேரரசர் வேறு ஒருவரை அரசனாக்கப்போகிறார்’’ என்றார்.

அதிர்ந்த நீலன் கண்ணீரோடு, அந்தச் சந்நிதியில் அருளும் பெருமாளைப் பார்த்தான்.

“எம்பெருமானே! இதென்ன கொடுமை. உன் பக்தன் அழலாமா, எனக்கு இப்படியொரு சோதனை வரலாமா’’ என்று பிரார்த்தித்துக் கொண்டபோது மந்திரி சிரித்தார்.

“பைத்தியக்காரா! எந்தக் காலத்தில் சிலை பேசியுள்ளது. முட்டாளே...’’ என்றார். அடுத்த நொடி சந்நிதியிலிருந்து ஓர் அசரீரிக் குரல்!



“நீலா! கவலை வேண்டாம். சோழனோடு நீ காஞ்சியில் உள்ள என் திருச்சந்நிதிக்கு வா. மற்றவை தானாக நடக்கும்...” என்ற அந்தக் குரல், நீலனுக்கு மட்டும்தான் கேட்டது; மந்திரிக்கல்ல!

“எம்பெருமான் காஞ்சிக்கு வரச்சொல்கிறான். வாருங்கள்...’’ என்றான் நீலன்.

“வருகிறோம். எங்களுக்குத் தேவை கப்பம். அங்கு வந்தும் கப்பம் செலுத்தாமல் நீ எங்களை அலைக்கழிக்க முயன்றால், உன் சிரத்தையே நீ இழந்துவிடுவாய். எச்சரிக்கை...”

“என்னைப் படைத்தவன் அவன்.ஆளாக்கிய வனும் அவனே. நீங்கள் பேசாமல் வாருங்கள். உங்களுக்கு இனி நான் பதில் சொல்லமாட்டேன். அவன் சொல்வான்” என்றான் நீலன்.

காஞ்சி ஸ்ரீவரதராஜர் திருச்சந்நிதி!

அங்கு வந்து நின்ற மந்திரி மற்றும் நீலன் முன், ஒரு குரல் ஒலிக்கத்

தொடங்கியது. அந்தக் குரல் நீலனுக்கு முகமன் கூறியது.

“திருவாலி மன்னா வருக... திருவருள் செல்வா வருக... திருமாலின் தொண்டரே வருக... திருமங்கை நேசா வருக!”

- முகமன் போல் ஒலித்த கட்டியக்குரல், சோழநாட்டு மந்திரி முதல் உடன் வந்திருந்த சகலரையும் ஆச்சர்யப்படுத்தியது. நீலனே, அதைக் கேட்டு ஆச்சர்யப்பட்டதோடு `என்னை இங்கே வரவேற்பது யார்' என்கிற கேள்வியோடு நாலாபுறமும் பார்த்தான்.

உள்ளிருந்து சந்நிதி அந்தணர் சிலர், குரலோடு மட்டுமன்றி, பூரணக் கும்பத்துடனும் வெளிப்பட்டனர்.

“தங்கள் வருகையை எம்பெருமான் எங்கள் கனவில் உணர்த்தினான். தங்களால் அவன் கட்டளைக் குரலைக் கேட்கும் பேறு பெற்றோம்” என்றனர் அவர்கள்.

“அப்படியா! எம்பெருமானே, உன் கருணையை என்னென்பேன்...” என்று கைகூப்பி கண்கள் பனிக்க நின்றான் நீலன். எதிரில் வேண்டுவோர்க்கு வேண்டும் வரம் தரும் ராஜனாய் அந்த வரதராஜன்!

சோழ மந்திரியோ அடுத்து நடக்கப்போவதில் ஆவலாய் இருக்க, நீலன் கண்கள் பனிக்க வரதராஜன் முன் இறைஞ்சத் தொடங்கினான்.

“எம்பெருமானே! அன்னமிடும் கடமை யால் கன்னமிட்டவன் போல் கைது செய்யப் பட்டுள்ளேன். பழைய நீலனாய் இருந்திருந்தால் சங்கிலிகளை அறுத்து எறிந்து, என்னைக் கட்ட நினைத்தவர்களையும் வெட்டிக் கொன்றிருப்பேன். நான் இப்போது உன்னைச் சரண் புகுந்துவிட்டவன். நான் எதைச் செய்தாலும் அது நீ செய்ததாகவும் ஆகிவிடும். இப்போது இங்கே என்னை வரச் செய்த நீ, எவ்வாறு என் குறை தீர்க்கப் போகிறாய்?”

மனதுக்குள் நீலன் மன்றாடிய நொடி, “கவலை வேண்டாம் நீலா. வேகவதி ஆற்றின் வடக்குக் கரைக்கு வா. பொன்னும் நெல்லும்

பொருதக் கொள்ளலாம்...” என்றோர் அசரீரி ஒலித்தது. அது எல்லோர்க்கும் கேட்டது.

அது மட்டுமா, அருள்மிகு வரதராஜனின் திருச்சந்நிதிக்குள்ளிருந்து வெளிப்பட்ட கருடப் பட்சி ஒன்று வெளிப்பட்டு, அவர்கள் நடுவே பறந்துசென்று வழிகாட்டலாயிற்று!

சோழ மந்திரிக்கு அப்போதே நீலன் யார் என்பது தெரிந்துவிட்டது. மீதம், வேகவதி ஆற்றின் கரைக்கு வரவும் தெரிந்தது.

கருடன், ஒரு மண் மேட்டின் மேல் அமர்ந் திருந்தது. நெருங்கிச் சென்றதும்தான், அது மண்மேடல்ல பொன் மேடு எனத் தெரிந்தது! அதைத் தொடர்ந்து கண்ணில் பட்ட ஆற்று மணல் அவ்வளவும் நெல்மணிகளாகிக் காட்சி தந்தது.

“சோழனின் கடனைத் தீர்த்து ஆவன செய்” என்று அங்கோர் அசரீரி ஒலித்து அடங்கியது. நீலன் மந்திரியை அருகில் அழைத்தான்.

“எந்தக் காலத்தில் சிலை பேசியுள்ளது என்று கேட்டீரே... இங்கே சிலை மட்டுமல்ல காற்றும் பேசுகிறது. காதில் விழுந்ததா? அள்ளிக் கொள்ளுங்கள்...” என்றான்.

மந்திரியோ நீலனின் காலில் சரேலென்று விழுந்தார்.

“நீலா... இல்லையில்லை திருவாலி மன்னா...

இனி நீ எங்கள் நாட்டுக் குறுநில மன்னனில்லை. உன் பொருட்டு, இறைவனே எங்களுக்குக் கப்பம் கட்ட விழைந்திருப்பது, உலகம் இதுவரை கண்டிராத அதிசயம். இங்கே நடந்ததை நான் மன்னரிடம் கூறி, இனி நீ எக்காலமும் கப்பம் கட்டத் தேவையில்லை எனும் நிலையை உருவாக் குவேன். உன்னால் உன்னதமான இறையனுபவம் எனக்கும் ஏற்பட்டது. இதற்கு நான் எப்படிக் கைம்மாறு செய்வேனோ தெரியவில்லை” என்று கண்கள் கசிந்தான்.

நீலனும் வேகவதி ஆற்றின் அந்தப் பொன் மணல் மேலேயே விழுந்து

வணங்கி, மீண்டும் வரதராஜன் சந்நிதிக்கு வந்து, பெருமாளின் திவ்யத் திருமேனியைக் கண்கள் பனிக்கப் பனிக்க தரிசித்தான்.

வரதராஜன் படியளந்த நிகழ்வு, அரண் மனையிலிருந்த குமுதவல்லிக்குக் கூறப்படவும், அப்படியே மெய்சிலிர்த்துப் போனாள். திருவாழி இனித் தனிநாடாக வரி செலுத்த தேவையின்றி திகழப்போவதையும் அறிந்தாள்.

நீலனும் வரப்பிரசாதத்துடன் குமுதவல்லியைச் சந்தித்தான். அவள், அவன் காலில் விழுந்து வணங்கி ஆனந்தக் கண்ணீர் சிந்தினாள்.

“இனி திருவாழியில் பசிப் பட்டினிக்கே இடமில்லாதபடி செய்துவிட்டீர்கள். பொன்மணியையும் நெல்மணியையும் உங்களுக்கு அவனே அளித்துவிட்டதை நான் என்னென்பேன்” என்றாள்.

அதிர்ந்தான் நீலன்!

“குமுதா நீ என்ன சொல்கிறாய்?”

“பொன்னுக்கும் பொருளுக்கும் இனி பஞ்சமில்லை என்றேன்.”

“எதை வைத்து அப்படிச் சொல்கிறாய்?”

“வரதன்தான் அருளிவிட்டானே?”

“வரதன் கடனுக்கு அருளினான். காலத்துக்கும் அருளி விட்டதாய்க் கருதிவிட்டாயா?”

“அப்படியானால்...?”

“என் ராஜ நிர்வாகமே எப்போதும் போல் பசிப்பிணி போக்கும்.”

“என்றால், அங்கிருந்து நீங்கள் ஒரு கைப்பிடி பொன்னைக் கூட கொண்டுவரவில்லையா?”

“அவனிடம் பெற்று அவனுக்கே தருவதா உற்றச் செயல்?”

“அதானே... அதில் நம் பிரயாசைக்கே துளியும் இடமில்லாமல் அல்லவா போய்விடுகிறது?”

“சரியாகச் சொன்னாய். மாறாத பக்தியும், சீரான உடல் நலமும், தாழாத கொடையும் அவனருளால் நீங்காதிருந்தாலே போதும். உழைப்போம் பிழைப்போம் என்ன சொல்கிறாய்?”

“சொல்ல என்ன இருக்கிறது - ஆயிரத்தில் ஒரு வார்த்தை!”

- பதிலோடு கண்கள் பனித்தாள் குமுதவல்லி.

ஆயிரம் ஆயிரம் மூட்டைகளில் அந்த ஆற்றுப் பொன்னை அள்ளி வந்திருக்கலாம். ஆனால் அது பெரிதேயில்லை. அதைக் கண்ணில் காட்டிய மாலவன் கருணையே பெரிது என்று எண்ணி அதன்படி நடந்த நீலன், அவள் கண்முன்னே இந்த உலக மாயையை வென்றுவிட்ட பெரும் சூரனாகத்தான் தெரிந்தான்.

நாட்கள் கடந்தன! நீலனைச் சோழன் உணர்ந்ததுபோல், உலகம் உணரவேண்டும் என்று அந்த மாலவன் எண்ணினான். சுடச்சுடத்தானே பொன்னே ஒளிர்கிறது. சுட ஆரம்பித்தான்.

முதலில் வானம் பொய்த்தது. வயல்கள் வெடித்தன. பஞ்சம் தஞ்சம்கொண்டது.

**- தொடரும்...**

04 Jun 2019

# ரங்க ராஜ்ஜியம் - 31



ரங்க ராஜ்ஜியம் - 31

ஓவியம்: அரஸ்

நீலனின் மகத்துவத்தைச் சோழன் உணர்ந்துகொண்டதுபோல் இந்த உலகமும் உணரவேண்டும் என்று திருவுளம் கொண்டார் பகவான். அதன்பொருட்டு வானம் பொய்த்து பஞ்சம் தலைவிரித்தாடியது தரணியில். இதில் தானமாவது கீனமாவது. சத்திரத்தை இழுத்து மூட வேண்டிய கட்டமும் வந்துவிட்டது!

"எம்பெருமானே இது என்ன சோதனை" என்று சற்று கலங்கித்தான் போனான் நீலன்.

"பட்ட கடனுக்கே பொன்னைத் தந்தாயே... பாடாய்ப்படுத்தும் பசிப்பிணியின் பொருட்டு என்ன தரப்போகிறாய்"-என்றும் கேட்டான். மாலவன் மௌனம் காத்தார்.

நீலனோ மனம் கலங்கினான் என்றாலும் நிலை மாறவில்லை. மிகச் சரியாக கேட்டான், திருச்சந்நிதி முன்னால் சென்று நின்று... "எதற்கிந்த சோதனை" என்று.

சந்நிதியில் பதிலில்லை.

"பேசமாட்டாயா...?"

இதற்கும் பதிலில்லை.

"நான் அப்படி என்ன தவறு செய்துவிட்டேன்.

எதற்கிந்த சோதனை?" - மீண்டும் கேட்டான்.

அப்போது, பழுத்த வேதியரின் வடிவில் சந்நிதிக்குள் நுழைந்து நீலனோடு பேச விழைந்தார் பகவான்.

"திருவாலி மன்னா! அவன் பொன்னையும் நெல்லையும் அள்ளிக் குவித்தபோது, நீ அதை உன் சேவைக்காக மட்டுமன்றி, உனக்காகவும் எடுத்துக்கொண்டிருக்க வேண்டாமா. அப்படிச் செய்திருந்தால், இப்போது நீ வருந்தும் நிலை வந்திருக்காதுதானே?"

“அந்தணரே... இது என்ன கேள்வி! அவனிடம் பொருள் பெற்றா அவன் அடியார்க்கு செலவிடுவது. என் பங்கு என்று அதில் எதுவும் இருக்க வாய்ப்பில்லையே?"

வேதியர் தொடர்ந்து கேட்டார்.



“சோழனுக்குக் கப்பம் கட்ட மட்டும் அவன் உதவி வேண்டுமா?”

“அப்படி ஒரு சூழல் உருவாகிவிட்டது அந்தணரே! சொல்லப்போனால், அந்த கப்பப் பொருள்களையும் நான் எம்பெருமானுக்கு திருப்பித் தரவேண்டும்.”

“இப்போதைய போக்குக்கே வழியில்லை. இதில், கப்பத்தையும்

கடனாகக் கருதி, அதையும் திருப்பிச் செலுத்தப் போகிறாயா நீ?”

“ஏன் அந்தணரே... என்னால் முடியாதென்பது உங்கள் முடிவா?”

“சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்!”



“இப்போது இல்லை என்பதற்காக எப்போதும் இல்லை என்றாகிவிடுமா?”

“எதற்கு வீண் பேச்சு... இன்றைக்கு மணி அரிசி இல்லை. பெருமாளுக்கே இன்றைக்கு நைவேத்தியம் வெந்நீர்தான். இதற்கு என்ன சொல்கிறாய் நீ?”

வேதியரின் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் நீலன் தடுமாறினான்.

“பதில் சொல்ல முடியவில்லை பார்த்தாயா? நீ பழைய நீலனாக பரகாலனாக இருந்திருந்தால், உனக்கு இல்லாமல் போகும்போது களவாடவாவது செய்வாய். இப்போதோ, நீ வைணவ நெறிக்கு மாறிவிட்ட வைஷ்ணவன். ஒரு வைஷ்ணவன் களவைப் பற்றி நினைப்பதுகூட பாவம்...”

“அந்தணரே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?”

“நீ வைணவனாகிவிட்டதால், கை கட்டி நின்று கண்ணீர் விடும் நிலை வந்ததுதான் மிச்சம் என்கிறேன்.”

“அப்படிச் சொல்லாதீர்கள். அதையும் இந்தச் சந்நிதி வாசலில் நின்றுகொண்டு சொல்லாதீர்கள். ஒரு நல்ல வைஷ்ணவனை எம்பெருமான் எப்போதும் கைவிட மாட்டான்.”

“உண்மைதான்... அந்த வகையில் நீ முழுமையான ஸ்ரீவைஷ்ணவனும் இல்லை. உனக்கு இன்னும் மந்த்ரோபதேசமே ஆகவில்லையே! இதில், நான் செய்வேன், நான் சாதிப்பேன்... என்ற பேச்சு வேறு...”

“அவனுக்குத் தொண்டு செய்யத்தானே நான் பேசுகிறேன்...”

“இந்த `நான்'தானப்பா மனிதக் கூட்டத்துக்கே பெரிய பிரச்னை...”

“புரியும்படிச் சொல்லுங்கள்...”

“நான் யார் தெரியுமா... நானொரு அரசன்... நானொரு மாவீரன் அல்லது நானொரு பரம வைஷ்ணவன்... இதெல்லாம் உன்னைக் கட்டிப் போடும் ஒரு கயிறாகி விட்டது. இந்த `நான்' என்பதிலிருந்து நீ விடுபட்டால், உனக்கு ஏதாவது வழி பிறக்கலாம்.

எனக்குத் தெரிந்து, இந்தத் திருவாலி நாடுதான் மழையில்லாமல் தவிக்கிறது. மற்ற இடங்களில் ஒரு குறைவுமில்லை. இந்நிலையில், நீ திருடுவதைத் தவிர உனக்கு வேறு வழியில்லை. திருட்டு ஒன்றும் உனக்குப் புதிதல்ல. இல்லாதவர் பொருட்டு இருப்பவரிடம் எடுக்கும் களவு உனக்குக் கை வந்த கலை.

ஆனால் நீ வைணவனாகிவிட்ட படியால், அதை நீ செய்ய இயலாது. செய்தாலோ வைணவனாக இருக்க முடியாது. இப்போது அடியவனாகப் பார்க்கப்படும் நீ கொடியவனாகப் பார்க்கப்படுவாய். பாவம் நீ... உனக்கு எப்படி உதவுவது என்றே எனக்கும் தெரியவில்லை.”

வேதியர் வடிவில் வந்த மாலவன் மூட்டிய வெப்பம் நீலனுக்குள் முதலில் குழப்பத்தை விளைவித்தாலும், இறுதியில் ஒரு தெளிவை ஏற்படுத்தியது.

தன் மேனியில் துலங்கிய பன்னிரு திருமண் காப்பை அவர் எதிரில் அழித்துக்கொள்ளத் தொடங்கினான். வெண்ணிற ஆடையைக் களைந்து வேறு ஆடையை ஏற்று, இடைக்கச்சையும் அணிந்துகொண்டான். கட்டாரி முதலானவற்றைத் தரித்துக்கொண்டு, ஆயுதபாணியாக புரவியின் மேல் ஏறி அமர்ந்தான்.

“மன்னா... என்ன இது மாற்றம்?”

“மாற்றம்தான்... நான், இனி மனத்தால் மட்டுமே வைணவன்; புறத்தால் கள்ளன்!”

“அப்படியானால் திருடப்போகிறாயா?”

“ஆம்! என் நாட்டில் நல்ல மழை பொழிவு உண்டாகி, பழைய வளம் ஏற்படும்வரை திருடத்தான் போகிறேன்.”

“திருடியாவது திருப்பணி செய்யத்தான் வேண்டுமா?”

“நிச்சயமாக! இல்லாதவரிடம் திருடினால்தான் குற்றம். இருப்பவரிடம் திருடுவது தவறில்லை.”

“திருட்டுக்கு இப்படி ஒரு நியாயமா?”

“என்ன செய்ய... எனக்கு இப்போது வேறு வழி இல்லையே...?”

“நான் உன்னிடம் விவாதம் செய்தது தவறாகி விட்டது. மன்னா...

நன்றாகக் கேட்டுக்கொள்.ஒரு கள்ளன் திருந்தி பக்திநெறியில் சிறந்த வைஷ்ணவனாகலாம். ஆனால் ஒரு வைஷ்ணவன் ஒருக்காலும் கள்வனாகவே கூடாது."

"எனக்கு வேறு வழியில்லை என்கிறேனே..."

"நீ தொடர்ந்து தொண்டு செய்ய நினைப்ப தால்தானே களவாட எண்ணுகிறாய். சிறிது காலம் தொண்டு செய்வதை நிறுத்திவிடு."

"என் உயிருள்ள வரை தொண்டு செய்வேன் என்று சங்கல்பம் செய்திருக்கிறேனே..."

"இப்படிச் சங்கல்பம், தொண்டு என்று நீ சிந்தித்தால், வைணவனாகவே இருக்க முடியாது. பெரும்பாவியாகத்தான் ஆவாய்..."

"உண்மைதான்... களவாடினால் வைஷ்ணவனாக முடியாது. பாவியாகத்தான் முடியும். ஆனாலும் பரவாயில்லை. வைஷ்ணவனாக வாழா விட்டா லும், வைஷ்ணவத்துக்காக வாழ்ந்துவிட்டு போகிறேன்..."

"என்ன... வைஷ்ணவத்துக்காக வாழப் போகிறாயா?"

"ஆம்! எனக்கு என்னவானாலும் கவலையில்லை. என் வைஷ்ணவ நெறிக்கு எந்தத் தடையும் தீங்கும் இந்த மண்ணில் நேரிடக்கூடாது.என் உடலில் உயிருள்ள வரை அதற்கு நான் இடம் தர மாட்டேன்..."

நீலனின் பதில் வேதியரை சிலிர்க்கவைத்தது.வீரத்தில் தீரம் காட்டிய நீலன், பக்தியிலும் புது இலக்கணம் படைத்து தீரம் காட்டி நின்றான்!

**- தொடரும்..**

18 Jun 2019

# ரங்க ராஜ்ஜியம் - 32



ரங்க ராஜ்ஜியம் - 32

ஓவியம்: அரஸ்

*`பொய் வண்ணம் மனத்தகற்றிப்*
*புலனைந்தும் செலவைத்து*
*மெய் வண்ணம் நினைந்தவர்க்கு*
*மெய்ந்நின்ற வித்தகனை*
*மை வண்ணம் கருமுகில்போல்*
*திகழ்வண்ண மரகதத்தின்*
*அவ்வண்ண வண்ணனையான்*
*கண்டது தென்னரங்கத்தே'*

- பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார்

நீலன் மாறிவிட்டான்! பழைய பரகாலனின் தோற்றத்துக்கே மீண்டும் மாறிவிட்டான். அவனது ‘ஆடல்மா' எனும் வெண்புரவியின்மீது ஒரே தாவில் ஏறி, அதைக் காற்றாய்ச் செலுத்தினான்.

அரண்மனையை அடைந்து தன் சகாக்களை அழைத்து, “நாம் இனி கள்ளர்கள். மிதமிஞ்சிய செல்வம் கொண்டிருப்போர் அனைவரும் இனி நம் பகைவரே! களவுச் செல்வத்தால் நம் நாட்டில் முதலில் பசியைப் போக்குவோம். அடுத்து, ஆலயங்களில் நிகழ்ந்திடும் ஆறு கால பூஜைகள்... அவற்றுக்கும் ஒரு குந்தகமும் வந்து விடக்கூடாது” என்றான்.

அவன் சகாக்கள் தயங்கி நின்றனர்.

“சகாக்களே! என் மாற்றத்தில் எனக்கே பிரியம் இல்லைதான். என்ன செய்வது. இது சோதனைக் காலம்... இதில் நான் என்னைப் பாவியாக்கிக் கொண்டாவது ஊரை வாழவைக்க விரும்புகிறேன். உங்களுக்கு விருப்பமில்லை எனில் பரவாயில்லை... என்னோடு வராதீர்கள். நான், தனி ஒருவனாகக் களவுக்குச் செல்வேன். நான், முன் வைத்த காலை என்றும் பின் வைத்ததில்லை என்பதைத்தான் நீங்கள் அறிவீர்களே...” - நீலன் முத்தாய்ப்பாகப் பேச, அவர்கள் சம்மதித்தனர்.

நம் கள்ளநெறியைப் பிறர் அறியத் தேவையில்லை. குறிப்பாகக் குமுதவல்லிக்குத் தெரியவேகூடாது. நம் குறிக்கோள், மக்கள் பசியின்றி

வாழ வேண்டும் என்பதே. அதேபோல், மாலவனின் ஆலயத்தில் ஒரு பொழுது பூஜைக்குக்கூட குறைவு வந்துவிடக்கூடாது'' என்று எல்லோருக்கும் வாய்ப்பூட்டுப் போட்டவன், முகமூடிக் கவசத்தை அணிந்துகொண்டான்.



தொடங்கியது கள்வ நெறி!

பாவம் குமுதவல்லி! களவாடிய பொன் பொருள் எல்லாம் பொற்காசுகளாகி, பின் அரிசியும் பருப்புமாய் மாறியதை, அவளால் முதலில் அறிய முடியவில்லை.

அன்ன சாலைகள் தொடர்ந்து இயங்குவதைக் கண்டவள் 'எப்படிச் சாத்தியமாயிற்று' என்று நீலனிடம் கேட்டபோது, "செல்வந்தர்களிடம் கடன் பெற்றுச் செய்கிறேன்'' என்றான். அவளும் நம்பிவிட்டாள்.

அப்படியே ``உங்களைக் கடன்காரனாக்கிக் கொண்டாவது

செயல்படவேண்டுமா” என்றும் கேட்டாள்.

“கைநிறைய பொருளிருக்க, அதை அள்ளித் தருவதில் என்ன பெருமை விளைந்துவிடும் தேவி. இல்லாத நிலையிலும் தொடர்வதில்தானே கொள்கையைச் சுமப்பது தெரியும்” என்று கூறி, அவள் வாயை அடைத்துவிட்டான்.

இருந்தும் ஒரு நாள், “கட்டளையிட்ட நான் சொல்கிறேன்... அன்னதானத்தை நிறுத்திவிடுங்கள். பட்டினி கிடப்போம். அந்தப் பரந்தாமன் பரிதாபப்பட்டு முன்போல வாழ்விக்கச் செய்தால் வாழ்வோம். இல்லையெனில், உயிரை விடுவோம்” என்றாள்.

“நாம் விடலாம்... நம் மக்கள்?”

“இந்தக் கேள்விக்கான பதிலை அந்த மாலவனல்லவா சொல்லவேண்டும்?”

“அவன்தான் சொல்லவில்லையே... `எப்படிச் சமாளிக்கிறாய் என்று பார்க்கிறேன்' என்பது போலல்லவா உள்ளது அவன் போக்கு?”

“சோழ மன்னனுக்கு நீங்கள் கடன்பட்டபோது ஓடிவந்தவன், இப்போது ஏன் இப்படி வாட்டுகிறான் என்று தெரியவில்லையே...”

கண்ணீர் பெருக்கினாள் குமுதவல்லி.

“அழுவதைவிட ஆவதைச் செய்வது சிறந்தது. அதைத்தான் நான் செய்கிறேன். இப்போது என்ன கெட்டுவிட்டது?”

“என்ன கெட்டுவிட்டதா... எப்படி இருந்த நீங்கள் இப்படி ஆகிவிட்டீர்களே! இதைவிடவா ஒரு கேடு வேண்டும்?”

“உருவம்தான் மாறியுள்ளது. உள்ளம் முன்பைவிட அவனை அதிகம் எண்ணியபடி உள்ளது. நீ கலங்காதிரு. நானா, அவனா என்று பார்த்து விடுகிறேன்...”

“ஐயோ! இது என்ன செருக்கான பேச்சு. அவனெங்கே நாமெங்கே?”

“உண்மைதான்! அவனெங்கே... நானெங்கே... நானொரு கள்ளன் - சாமான்யன் - வாளால் பல்லுயிர்களைக் கொன்றவன். எல்லா போகங்களையும் திகட்டத் திகட்ட அனுபவித்தவன். காட்டுக்குப் போனேனா... தவம் செய்தேனா... புலன்களைத்தான் அடக்கினேனா! எதைச் செய்தேன் என்னை அவன் ரட்சிக்க; எங்கிருக்கிறது எனக்குத் தகுதி...”

“என்ன இது தாழ்வான பேச்சு... அதெல்லாம் பழங்கதை! நீங்கள்தான் உங்களையே அவன் வசம் ஒப்படைத்துவிட்டீர்களே.”

“அது நடிப்பா இல்லை உண்மையா என்று அவன் சோதிக்கலாமல்லவா?”

“அப்படித்தான் இருக்கவேண்டும். ஆனால் நீங்கள் பொறுமையின்றி மாறிவிட்டீர்களே...”

“இல்லை தேவி. திட்டமிட்டே மாறினேன்.”

“நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை.”

“தேவி... பேசியது போதும். நீ போய் எப்போதும் போல் இரு. போகப் போக எல்லாம் சரியாகிவிடும்.”

தற்காலிகமாய்க் குமுதவல்லியைச் சமாளித்தான். ஆனால், அன்று இரவே நீலன் முகமூடி அணிந்து களவுக்குப் புறப்பட்டதை அவள் தற்செயலாக அறியவும், அப்படியே நொறுங்கிப்போனாள். நேராகத் திருச்சந்நிதிக்குச் சென்றாள்.

“எம்பெருமானே! இதென்ன கொடுமை? செம்பு தங்கமானது என்று கருதியிருந்தேன். ஆனால் அது துருப்பிடித்த இரும்பாகிவிட்டதே... இதற்காகவா நான் பாடுபட்டேன். இதுவா நல்ல நெறி.

கடன்பட்டுக் கலங்கி நின்றபோது கை கொடுத்த கோவிந்தனே...

இப்போது கள்வனாகிவிட்டவனை என்ன செய்யப்போகிறாய். என் கேள்விக்கொரு நல்ல பதிலை நீ சொல்லாவிட்டால், உன் சந்நிதியிலேயே வாளால் என்னை நான் மாய்த்துக் கொள்வேன். இது உன்மேல் ஆணை" என்று உணர்ச்சிப்பெருக்கோடு சத்தியம் செய்தாள் குமுதவல்லி.

களவுப் பணத்தில் எரிந்த தீபச்சுடர் தந்த ஒளியில் அந்த இறைவனும் கள்ளச்சிரிப்பு சிரித்தான். பின், குமுதவல்லிக்காக மட்டுமின்றி நீலனுக்காகவும் புறப்பட்டுவிட்டான்!

பாற்கடல்!

லட்சுமிதேவி ஒரு மணப்பெண்ணைப் போல் கழுத்துகொள்ளாத நகையோடு காட்சி தந்திட, எம்பெருமானும் மாப்பிள்ளைக் கோலத்தில் ஒரு செல்வச்சீமானின் பிள்ளைபோல தோற்றமளித்தார்.

எம்பெருமான் கைசொடுக்கிய மாத்திரத்தில் வைகுண்டவாசிகளில் பலரும் கல்யாண வீட்டுக்கு வந்த உற்றார் உறவினர் ஆகினர்.

"இப்படி ஒரு நாடகம் அவசியம்தானா" என்று கேட்டாள் லட்சுமி.

"போடவைக்கிறானே அந்த நீலன்..."

"மழையைப் பொழியச் செய்தால் வறுமை நீங்கி விடும். அவனும் மாறிவிடுவானே..."

"தேவி! நீலன் என் அடியவனானது பெரிதேயில்லை. என் அடியவன் திரும்ப நீலன் ஆனான் பார்... அதை நான் வியக்கிறேன்!"

"கெட்டவன் நல்லவனாகிப் பின் மிகக் கெட்டவனானதை வியக்கிறீர்களா?"

"நீலன் எப்போதுமே கெட்டவனில்லை.பிறப்பால் அவன் தங்கம். குமுதவல்லி அவனை ஒரு நல்ல நகையாக்கினாள், என் பொருட்டு. நான் அவனைக் கிரீடமாக்கப்போகிறேன்."

“கிரீடமாகவா?”

“ஆம் தேவி! நீலன் என் பக்தர்களில் கிரீடம் போன்றவன். எனக்காக ஒரு பக்தன் பூக்கள் தூவி பூஜிக்கிறான்... ஒருவன் பட்டினி கிடந்து பூஜிக்கிறான்... ஒருவன் தவம் செய்து தவிக்கிறான்...

இப்படி, தங்களை மையமாக வைத்து பக்தி புரிவோர் நடுவில், தன்னையே பணயம் வைத்து, தன் பக்தியையும் பணயம் வைத்த நீலனைப் போல் ஒருவனை நீ கண்டிருக்கிறாயா?”

“உண்மைதான்... தன் பொருட்டு திருடியவர்கள் உண்டு. ஆனால், இவன் உங்கள் பொருட்டல்லவா திருடனாகியுள்ளான்...”

“ஆனது மட்டுமா... வைணவனாகத்‘தான்’ வாழ முடியவில்லை; வைணவமாவது வாழட்டும் என்றானே, கேட்டாயா?”

“உங்கள் மார்போடு இருக்கும் எனக்கு எப்படிக் கேட்காமல் போகும்... ஆனாலும் களவு களவுதானே. அது எப்படிச் சரியாகும்?"

“ரண சிகிச்சையை நீ கொலையாகக் காண்பாயா?”

“என்றால், நீலன் புரிவது ரண சிகிச்சையைப் போல் ஒரு மருத்துவமா?”

“இல்லையா பின்னே. நான் தந்ததைப் பெற்று நோகாமல் நோன்பு கொண்டாடியிருக்கலாமே... ஆனால், அவன் அவ்வாறு செய்யவில்லையே!”

“யாசகம் பெறவே மறுத்தவன், கள்ளனாக மாறுவதை நினைத்தும் பார்க்கக்கூடாது அல்லவா?”

“அவன், தன்னைப் பெரிதாகக் கருதியிருந்தால், அவனிடம் `நான்' எனும் அகந்தை இருந்திருந்தால், நீ சொல்வதுபோல் நடந்துகொண்டிருப்பான்.

அவன், தன்னை ஒரு கருவியாக மட்டுமே கருதுகிறான். கள்ளன் ஆனபோதிலும் அதில் பிறர் கண்ணீருக்கு அவன் இடம் தரவில்லை

என்பதையும் எண்ணிப் பார்.

மிகுதியாக வைத்திருக்கும் சுயநலம் கொண்டோரிடமிருந்தே களவு புரிந்துவருகிறான். ஒரு கோணத்தில் இது களவல்ல... களவெனும் பெயரில் தர்மபரிபாலனம்!”

“அப்படியானால் அந்த தர்மபிரபுவை ரட்சிக்கப்போகிறோமா?”

“இதற்கு மேலும் தாமதித்தால், குமுதவல்லியைக் கொன்ற பாவம் என்னை வந்து சேர்ந்துவிடாதா?”

“ஆட்டுவிப்பதும் நீங்கள். ஆடுவதும் நீங்கள். இதில் இப்படி ஒரு மானுட பாவமா?”

“மானுடரட்சணைக்கு மானுட பாவம்தான் உகந்தது. நாம் புறப்படுவோமா?”

வைகுண்டத்தில் இப்படிக் கேட்ட மாலவன், பிராட்டியோடு கல்யாணக்கோலத்தில், ஒரு கூட்டமாய் வண்டி கட்டிக்கொண்டு நீலன் ஒளிந்திருக்கும் மரங்கள் சூழ்ந்த வழித்தடத்தில் வரலானான்.

நீலனும் கூட்டத்தாரோடு வளைத்துப் பிடிக்கலானான்.

தொடங்கியது நாடகத்தின் இறுதிக்காட்சி!

**- தொடரும்.**

02 Jul 2019

# ரங்க ராஜ்ஜியம் - 33



ரங்க ராஜ்ஜியம் - 33

ஓவியம்: அரஸ்

*`கஞ்சன் நெஞ்சும் கடுமல்லரும் சங்கடமும் காலினால்*
*துஞ்ச வென்ற சுடராழியும் வாழுமிட மென்பரால்*
*மஞ்சுசேர் மாளிகை நீடகில் புகையும் மாமறையோர்*
*செஞ்சொல் வேள்விப் புகையும் கமழும் தென்னரங்கமே'*
**- திருமங்கையாழ்வார்**

அழகிய மணவாளக் கோலத்தில் எம்பெருமான், மணவாட்டியாய் மகாலட்சுமி... உடல் கொள்ளாச் செம்பொன்! நீலன் இருவரையும் முகமூடியோடு சுற்றி வந்து கூர்ந்து பார்த்தான்.

நேருக்கு நேரான முதல் பார்வை. அதன் தாக்கம் நீலனைச் சற்று கூசச் செய்தது; தடுமாறவும் வைத்தது. இருந்தும் சமாளித்தான்.

"மணமக்களே! நீங்கள் அச்சப்படத் தேவையில்லை. எங்களைப் பார்த்தாலே தெரிந்திருக்கும்... நாங்கள் யாரென்று. எங்களுக்கு உங்களைத் துன்புறுத்தும் நோக்கமெல்லாம் கிடையாது. எங்களுக்குத் தேவை உங்கள் பொன் நகைகள் மட்டுமே. அவற்றைக் கழற்றிக் கொடுத்துவிட்டு, போய்க்கொண்டே இருங்கள்" என்றான்.

அவன் பேச்சுக்கு எம்பிராட்டி பதில் கூற விழைந்தாள்.

"கள்வனே, இது என்ன கொடுமை! மணமாகி தாய் வீட்டுச் சீதனங்களுடன் செல்லும் எங்களிடமா நீ களவாடுவது. உனக்கொரு பெண் இருந்து அவளுக்கு இப்படி நேர்ந்தால், நீ என்ன செய்வாய்" என்ற அவளின் கேள்வி, நீலனை அதிரச்செய்யவில்லை. மாறாகச் சிரித்தான்.

"ஏன் சிரிக்கிறாய்?"

`‘நீ இப்படிக் கேட்பாய் என்றுதான் எனக்குப் பிள்ளை களே இல்லை போலும். எனவேதான் சிரித்தேன்!"

"அதனால் என்ன... என்னை உன் மகளாகக் கருதி விட்டுவிடு."

"ஆஹா! எத்தனை பெரிய மனதம்மா உனக்கு. என்னை உன் தந்தை ஸ்தானத்துக்குக் கொண்டுசென்றுவிட்டாயே. மிக்க மகிழ்ச்சி. ஆனாலும்

உங்கள் வசம் உள்ள பொன் எனக்குக் கட்டாயம் வேண்டும். நான் களவாட இடமின்றி, நீயே உன் தந்தைக்குத் தருவதுபோல் தந்துவிடு.”



தான் சொன்னதை வைத்தே தன்னை மடக்கிய நீலனை எண்ணி வியந்த லட்சுமிதேவி எம்பிரான் பக்கம் திரும்பி, `இனி உங்கள் பாடு...' என்பது போல பார்த்தாள். எம்பிரானும் தொடங்கினார்.

“இப்படிப் பிறர் பொருளைக் களவாடி வாழ்கிறாயே, இதுவும் ஒரு பிழைப்பா... உனக்கு வெட்கமாக இல்லை?”

“வெட்கமா... எனக்கா... அது எதற்கு?”

“அதுசரி, மறத்துப்போய்விட்டது என்று சொல்.”

“எதற்கு வீண் பேச்சு. நகைகளைக் கழற்று...”

“கழற்றாவிட்டால்...”

“நாங்களே கழற்றுவோம்.”

“இப்படி மிரட்டி அபகரிக்க எண்ணுகிறாயே, உனக்கு நரகம்தான் கிட்டும் தெரியுமா!”

“நான் இப்போது சொர்க்கத்தில் இருப்பதாக நினைப்பா உனக்கு!”

“பிறகு?”

“எப்போது என் மேனிமேல் போட்டிருந்த வைணவச் சின்னங்களை அழித்தேனோ, எப்போது வைணவனான நான் மீண்டும் கள்வனாக மாறினேனோ, எப்போது என் நாட்டில் மட்டும் மழையற்றுப் போனதோ, அப்போதே நான் மட்டுமல்ல... என் நாடும் நரகத்தில்தான் உள்ளது.”

நீலனின் பதில் எம்பெருமானுக்கே வியப்பளித்தது.

“எப்படிப் பேசினாலும் உன் காரியத்திலேயே குறியாக இருக்கிறாயே... நான் கழற்றித் தராவிட்டால் என்ன செய்வாய். என்னைக் கொன்றுவிடுவாயா?”

“அதற்கு எதற்கு உன்னைக் கொல்லவேண்டும். நகைகளைக் கழற்ற எனக்குத் தெரியாதா என்ன!”

“அப்படியானால் கழற்றிக்கொள்!”

எந்தப் பதற்றமும் இல்லாமல், எந்தப் பயமும் இல்லாமல் எம்பெருமான் கூறவும் நீலனுக்கு அது சற்று ஆச்சர்யமாகவே இருந்தது. எப்போதும் கத்தியைக் காட்டி சுற்றி வளைக்கும்போது எல்லோரும் நடுங்கித்தான் நிற்பார்கள். இப்படி விவாதிக்க மாட்டார்கள்; அதுவும், துளியும் பயமோ பதற்றமோ இல்லாமல்!

அதுகுறித்த சிந்தனையோடு பெருமான் மேனிமேல் கிடந்த நகைகளைக் கழற்றத் தொடங்கினான் நீலன்.அந்தச் சாக்கில் பெருமானின் மேனியின்மீதும் அவன் கரங்கள் பட்டன.

நீலனுக்குள் பலவித ரசமாற்றங்கள்!

அவற்றை உள்ளுக்குள் அனுபவித்தபடியே எல்லா நகைகளையும் கழற்றியவன், பிராட்டியின் பக்கம் திரும்பினான். அவள், நகைகளைக் கழற்றி தயாராக வைத்திருந்தாள். அவற்றைத் தந்தாள். ஆக, ஒரு நகை மூட்டையே தயாராகிவிட்டது.

‘இதைக்கொண்டு ஒரு வார காலத்துக்கு ஊருக்குச் சோறிடலாம்' என்று எண்ணிய நீலன், யதார்த்தமாய் எம்பெருமானின் கால் விரல்களைப் பார்த்தான். அதில் ஒரு விரலில் திகழ்ந்த மெட்டி கண்ணில் பட்டது.

பெண்கள்தானே மெட்டி அணிவர். இது என்ன ஆண்மகன் காலில்... என்று எண்ணியவன், ‘அது என்ன' என்று கேட்டான்.

“தெரியவில்லையா, மெட்டி என்பார்கள். நீ கேள்விப்பட்டதில்லையோ?”

“மெட்டியை அறிவேன். அதை ஆண்மகன் அணிந்திருப்பதுதான் விந்தை!”

“நான் ஆணுக்கு ஆண், பெண்ணுக்குப் பெண். எனக்கு இனபேதம் கிடையாதப்பா...”

“இப்படி, இந்த உலகில் ஒருவன்தான் கூறலாம். நீ அல்லன்” என்றான் நீலன்.

“யாரப்பா அவன்?”

“விண்ணுளன் அவன். மண்ணிலும் உளன். என் மனதில், உன் மனதில் என்று எங்கும் இருப்பவன் அவன்!”

“அவன் பெயர்?”

“வைகுந்தன், கோவிந்தன், நாராயணன், கேசவன், பத்மநாபன், அச்சுதன், அனந்தன், மாதவன்... இப்படிப் பல பெயர்கள் அவனுக்கு!”

“பெயரைக் கேட்டால் அர்ச்சனை செய்கிறாயே?”

“சந்தோஷப்படு. அவன் நாமங்கள் இப்போது உன் காதில் புகுந்துள்ளன. இனி, உனக்குத் துன்பம் இல்லை.”

“அதை, ஒரு துன்பத்தில் இருக்கும்போது கூறுகிறாயா?”

“போதும் பேச்சு. என் வாழ்வில் உன்னைப்போல ஒருவனைச் சந்தித்ததே இல்லை. உன்னிடம் துளியும் பயமில்லை.”

“நான் அபயமளிப்பவன். என்னிடம் எப்படி பயமிருக்க முடியும்?”

“அபயமளிக்கக்கூட அவனால் மட்டுமே முடியும். நீ பெருமைபட்டுக்கொள்ளாதே. கழற்று மெட்டியை.”

“நீதானே நகைகளைக் கழற்றினாய். இதை மட்டும் என்னைக் கழற்றச்சொல்கிறாயே?”

“இந்தச் சாக்கில் உன் காலைப் பிடிக்க சொல்கிறாயா?”

“நான் அப்படிச் சொல்லவில்லை. விருப்பம் இல்லாவிட்டால் விட்டுவிடு.”

“அது மட்டும் முடியாது. எதைச் செய்தாலும் நூறு சதம் சரியாகச் செய்யவேண்டும்.”

“அப்படியானால், நீயே என் காலிலிருந்து கழற்றிக்கொள்.”

இப்படிச் சொன்னதுடன், காலை முன்னால் காட்டி, ‘உம்... பிடித்துக்கொள்’ என்பதுபோல பார்த்தார் பரந்தாமன்.

அந்தத் திருப்பாதங்களை ஞானியரும் ரிஷிகளும் ஒருபுறம் தேடோதேடென்று தேடிக் கொண்டிருக்க, அந்தப் பாதங்கள் நீலனின் முன் `பிடித்துக்கொள்' என்று தாமாக வந்ததென்றால், நீலன் எத்தனை பெரும்பேற்றினைப் பெற்றிருக்க வேண்டும்!

நீலன் முதலில் சிந்தித்தான். பின் அந்தக் காலை தன் மடிமீது

வைத்துப் பற்றினான். அந்த நொடியே அவனுள் பல மாற்றங்கள்; இனம் புரியாத உணர்வின் ஓட்டங்கள்!

பாற்கடலில் விழுந்து ஒரு பந்துபோல மிதக்கிற உணர்வும், அதுவரை நுகர்ந்திராத அருமையான வாசனையை நுகர்கின்ற உணர்வும், பிடித்த காலை விட்டுவிடாமல் அப்படியே இருந்தாலென்ன என்கிற உணர்வும் எழ, அவனுள் பல பல மாற்றங்கள்!

சிறிதுநேரம் அவனிடம் செயல்பாடே இல்லை. எம்பெருமான்தான் அவனை மீட்க முனைந்தார்.

“என்னப்பா... மெட்டியைக் கழற்றத் தோன்றவில்லையா.”

அவர் அப்படிக் கேட்கவும்தான் நீலனின் மனம் கலைந்தது.

**- தொடரும்...**

## சதுர தாண்டவம்!



திருவண்ணாமலை மாவட்டம், ஆரணியிலிருந்து படவேடு செல்லும் சாலையில், சுமார் 6 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது காமக்கூர் திருத்தலம். ஸ்ரீமுருகப்பெருமான், சந்திரன், அர்ஜுனன் மற்றும் ரதிதேவி சிவபெருமானை வழிபட்ட தலம் இது. ஆதிசங்கரர் ஸ்ரீசக்ர பிரதிஷ்டை செய்த தலங்களுள் இதுவும் ஒன்றாம். சிவனார் தாண்டவமாடிய தலங்களில் ஒன்று என்பதால், இந்தத் தலத்தை உப விடங்கத் தலம் என்கிறார்கள்.

பரமன், இங்கே சதுர தாண்டவம் ஆடியதாக விவரிக்கிறது காமாத்தூர் புராணம். கால்கள் இரண்டையும் மடக்கி, முன்னும் பின்னுமாக சதுர வடிவில் வைத்தபடி ஆடும் அரிய கோலத்தில் காட்சி தரும் சதுர தாண்டவ நடராஜரை தரிசித்து வணங்குவதால், பெரும் வல்லமையும் பேராற்றலும் கிடைக்கும்; கலைகளில் ஆர்வமும் திறனும் ஏற்படும் என்கிறார்கள்.

**- எம். கணேஷ், சென்னை-4**

16 Jul 2019

# ரங்க ராஜ்ஜியம் - 34



ரங்க ராஜ்ஜியம்

மாப்பிள்ளையாய் வந்த நாராயணனின் கால்விரல் மெட்டியைக் கழற்றுவதற்காக முயன்ற நீலன், அதன்பொருட்டு அவரின் பாதங்களைப் பற்றியதும், அவனுக்குள் பலவிதமான ரசவாதங்கள்; இனம்புரியாத பரவசத்தை உணர்ந்தான்!

***செங்கமலத்து அயனனைய மறையோர்காழிச்***

***சீராம விண்ணகர் என் செங்கண் மாலை***

***அங்கமலத் தடவயல் சூழ் ஆலிநாடன்***

***அருள்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்***

*கொங்குமலர்க் குழலியர் வேள் மங்கைவேந்தன்*

*கொற்றவேல் பரகாலன், கலியன் சொன்ன*

*சங்கமுகத் தமிழ் மாலை பத்தும் வல்லார்*

*தடங்கடல் சூழ் உலகுக்கு தலைவர் தாமே!*

- பெரிய திருமொழி

**மா**ப்பிள்ளையாய் வந்த நாராயணனின் கால்விரல் மெட்டியைக் கழற்றுவதற்காக முயன்ற நீலன், அதன்பொருட்டு அவரின் பாதங்களைப் பற்றியதும், அவனுக்குள் பலவிதமான ரசவாதங்கள்; இனம்புரியாத பரவசத்தை உணர்ந்தான்!

``என்னவாயிற்று நீலா'' - மாலவன் கேட்டார்.

"என்னவோ தெரியவில்லை. என்னுள் இனம்புரியாத பரவசம்."

"அப்படியானால் மெட்டி வேண்டாமா?"

"வேண்டும் ... வேண்டும்..."

"அப்படியானால் கழற்றிக்கொள்."

அதற்கு மேலும் தாமதிக்காமல், கழற்றத் தொடங்கினான். அது வரவில்லை. வழுக்கிற்று, சறுக்கிற்று, உறுத்திற்று... சாதாரண மெட்டி!

நிமிர்ந்து எம்பெருமானைப் பார்த்தான். பெருமான் முகத்தில் குறுநகை. 'இன்னுமா கழற்றுகிறாய்' என்று கேலியான கேள்வி, அவர் பார்வையில்!

கைவிரல்கள் தோற்ற நிலையில், வேறொரு உத்தி. வாயால் பற்றி இழுக்க முனைந்தான். பார்த்துக்கொண்டிருந்த பிராட்டிக்கே சிலிர்த்தது. எம்பெருமானுக்கோ அவன் எச்சில் பாதங்களில் அமுதமாய் இனித்தது. மெட்டியும் கழன்றது.

`கால் மெட்டியைக் கழற்றவே இந்தப் பாடு என்றால், நீயெல்லாம் எப்படி இந்த நிலத்தை ஆள்கிறாயோ' என்பதைப்போல் எம்பிரான் பார்க்க, மெட்டியையும் சேர்த்து மூட்டைக்கட்டிக் கொண்டு தூக்க முயன்றான் நீலன். இங்கே ஆரம்பமானது நாடகத்தின் அடுத்த கட்டம்.



மூட்டையைத் தூக்கவே முடியவில்லை. மலை போல் கனத்தது. முக்கி... முனகி... எப்பாடுபட்டும் தூக்கமுடியவில்லை. நீலனுக்குள் இப்போது ஒரு கேள்வி. இவன் வழக்கமான மானுடன் அல்லன்; சாமான்யனும் அல்லன். எனில், மாயாவியோ! கேள்வியோடு நிமிர்ந்த நீலன் உற்றுப்பார்த்தான்.

“என்னப்பா, அப்படிப் பார்க்கிறாய்?”

“யார் நீ?”

“நான் யாரா... பார்த்தால் தெரியவில்லை. மாப்பிள்ளையப்பா...”

“இல்லை நீ மாயாவி!”

“அப்படியும் சிலர் சொல்வார்கள்.”

“விளையாடாதே!”

“யார்... நானா விளையாடுகிறேன்.”

“ஆம்! மாய விளையாட்டு... என்ன மந்திரம் போட்டாய்?”

“மந்திரமா..?”

“இந்த மூட்டையை என்னால் தூக்கமுடிய வில்லை. ஆனால், போர்க்களத்தில் நான் யானை யையே தூக்கி வீசியவன்”

“ஒருவேளை, இப்போது வலிமை குன்றி விட்டதோ என்னவோ?”

“விளையாடாதே... வந்த நொடி முதலே உன்னை உணர்கிறேன். நீ சாமான்யனல்லன்!”

“என்னை என்னதான் செய்யச் சொல்கிறாய்?”

“இந்த மந்திரக்கட்டு நீங்க வழி சொல்.”

“அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. மந்திரமா வது மாங்காயாவது.”

“இல்லை. நீ ஏதோ மந்திரம் போட்டிருக்கிறாய்.”

“விடமாட்டாய் போலிருக்கிறதே... சரி, காதைக் கொடு. உனக்கு ஒரு மந்திரத்தை உபதேசிக்கிறேன். அது இந்த மூட்டையை மட்டுமல்ல, உன் பிறவி எனும் மூட்டையைக்கூட தூக்கிவீசச் செய்து விடும்.”

“அப்படி ஒரு மந்திர உபதேசத்துக்காகவே நான் காத்திருக்கிறேன். எனக்கு எல்லாம் கிட்டியது. ஆனால் அது மட்டும் கிட்டவில்லை.”

“உலகிலேயே மேலான எல்லாவற்றையும் ஒரு சொல்லில் தருவது அஷ்டாட்சரம்தான். அதை நான் அறிவேன்.”

“அப்படியா... அதற்காகத்தான் நானும் காத்திருக்கிறேன். எனக்கு அது கிடைக்குமா!”

“காதைக் கொடு என்று நான் கூறிவிட்டேனே!”

நீலன் காதைக் கொடுத்தான். எம்பெருமானும் தன் பெயரை தன் வாயால் தன் பக்தனுக்காகத் தன்னையே குருவாக மாற்றிக்கொண்டு உபதேசித்தார்.

“ஓம் நமோ நாராயணாய!”

அந்த நொடி நீலனுக்குள் பரவசம். கண்களில் ஆனந்த பாஷ்யம். எம்பெருமான் சொன்னதை மெய்யுருகச் சொன்னபடி, மூட்டையைத் தூக்கினான். பஞ்சு மூட்டைபோல இருந்தது!

நன்றி கூறுவதற்காக அவன் நிமிர்ந்தபோது, எம்பெருமானும் மகாலட்சுமியும் கருடன்மீது அமர்ந்தபடி திருக்காட்சி அளித்தார்கள்.

“எம்பெருமானே! நீயா மாப்பிள்ளையாக வந்தாய். உன் பாதுகைகளையா நான் பற்றினேன். எத்தனை பெரிய பாக்கியசாலி நான்...” நீலன் உருகினான்.

“உண்மை நீலா. தன் பொருட்டு பக்தி புரிவோர் மத்தியில், தன்னையே பணயம் வைத்து நீ புரிந்த பக்தி போற்றத்தக்கது. நீ என் ஆழமான பக்தனாகியிருக்கிறாய். உனக்கு என்ன வேண்டும்?”

சிலவிநாடிகள் தடுமாறிய நீலன், “எம்பெருமானே! என் திருவாலி நாட்டு மக்கள் பசியின்றி இருக்கவேண்டும். அவர்கள் பொருட்டு மழை வேண்டும். களவுக்கு இடமின்றி நான் வாழ நின் அருள் வேண்டும்.”

நீலன் அப்போதுகூட முக்தி வேண்டும், மோட்சம் வேண்டும் என்று கேட்கவில்லை. தன்னை அவன் நினைக்கவே இல்லை. தன்னைத்

துளியும் எண்ணாது நாடு, மக்கள் என்றே வரம் கேட்ட நீலனைப் பெருமிதத்துடன் பார்த்தான் எம்பெருமான். பெருமாட்டியோ "நீலா, உனக்கென நீ எதையும் கேட்கவில்லையே…" என்று எடுத்துத் தந்தாள்.

"அம்மா! எனக்கிருப்பதெல்லாம் ஓராசைதான்! அது என் தாயும் தந்தையுமான நீங்கள் கோயில் கொண்டிருக்கும் தலங்களுக்கெல்லாம் சென்று, அங்கே சேவிதம் புரியவேண்டும். அப்போது, என்னுள் பொங்கிடும் பக்தி உணர்வை என் மொழியாம் செழுந்தமிழாலே பாடி மகிழவேண்டும்!"

"எனில், எங்களோடு வைகுண்டம் வர உனக்கு விருப்பமில்லையா?"

"ஆஹா... எத்தனை பெரிய பாக்கியசாலி நான். எனக்கு வைகுண்டத்தில் இடமா?"

"உனக்கங்கு இடமில்லை என்றால், அது வைகுண்டமாகாது நீலா. வைகுண்டம் என்பது பரமபாகவதர்களின் வாசஸ்தலம்."

"என்ன ஒரு தித்திப்பான வார்த்தை! அம்மா... இவ்வுலகில் பிறந்த உயிர்களின் இலக்கே வைகுண்ட வாசம்தான். ஆயினும், அங்கே நான் திருப்பணிகள் செய்ய வாய்ப்பு இருக்குமா?"

"திருப்பணியால் தேடி அடையும் இடத்தில், திருப்பணிக்கு ஏது இடம்? அங்கே பசியில்லை, தாகமில்லை, வியர்வையில்லை, அழுக்கில்லை. இவையெல்லாம் உடலுக்கு என்றால் உள்ளத் துக்கோ சலனமில்லை, துக்கமோ துயரமோ எதுவுமில்லை…"

"அப்படியென்றால், உம்மை நினைக்கத் தேவையே இல்லை என்றாகிவிடாதா?"

"பரமானந்தமே நான்தான்! அதுவாகவே ஆகிவிட்ட பிறகு, எதற்குத் தனியாக ஒரு நினைப்பு?"

"எம்பெருமானே, அந்தப் பரமானந்தத்தை நான் இங்கே உமக்குச் செய்யும் சேவையிலும் அடைய முடியும்தானே?"

“இதுவரை அதைத்தான் செய்தாய். இந்தக் களவேகூட எனக்கான ஒரு மாறுபட்ட சேவைதானே?”

“அதை நான் தொடரவே விரும்புகிறேன். பாவம் இவ்வையகத்து மாந்தர். பசியாலும் பிணியாலும் வருந்துவோர் எவ்வளவு பேர் தெரியுமா. அதுமட்டுமா, எது நல்வழி என்று தெரியாமல் எத்தனை பேர்! நான்கூட அவர்களில் ஒருவனாக இருந்தவன்தானே. எனக்கொரு குமுதவல்லி கிடைத்தாள்; என்னை மடைமாற்றம் செய்வித்தாள். அதுபோல் எல்லோருக்கும் கிடைப்பார்கள் என்று கூற முடியுமா...”

“அதனால்?”

“இம்மண்மிசை வைணவத் தொண்டனாய் நான் தொண்டூழியம் புரிந்து, பிறகு தங்கள் திருவடிகளில் அடக்கமாவதையே விரும்புகிறேன். இப்போது நான் திருந்தியிருக்கலாம். ஆனால், நான் குமுதவல்லியைக் காணும் முன் வாழ்ந்த வாழ்வு துளியும் பொருள் இல்லாத வாழ்வு. அதிகார மமதையோடு மது, மாது என்று வாழ்ந்தவனே நான்! எத்தனை பேரை நான் என் வாளால் கொன்றிருப்பேன் தெரியுமா. எம்பெருமானே... அதையெல்லாம் நினைக்க நினைக்க நெஞ்சம் நடுங்குகிறது. உயிர் என்பது எத்தனை மேலானது. அதைத் தலைமயிரெனக் கருதி வெட்டி வெட்டிக் கொன்ற பாவங்களை நான் அனுபவித்துத் தீர்க்க வேண்டாமா?”

“நீலா, உன் சுயதரிசனம் போற்றுதலுக்குரியது. எப்போது எம் தரிசனம் உனக்கு வாய்த்ததோ, அப்போதே உன் பாவங்கள் தீயினில் தூசாகி விட்டன...”

“அது உன் பெருங்கருணை பெருமானே! ஆயினும் நான் எனும் நீ... நீ எனும் நான்... இம்மண்ணில் தொண்டாற்றவே விரும்புகிறேன். இம்மட்டில் நான் உன் தொண்டனான அனுமன் வழியில் செல்ல விரும்புகிறேன். ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியாக அனுமனை நீ வைகுண்டத்துக்கு அழைத்தபோது, ‘அங்கே யாதொரு பணிக்கும் இடமில்லையென்பதால், பூ உலகமே எனக்கு ஏற்றது’ என்ற அனுமன்வழியே என்வழி.”

“நல்லது… வாழ்க உன் தொண்டுள்ளம், வளரட்டும் உன்னாலே நன்னெறிகள்!”

நீலன் பெருமானை வணங்கிட, எம்பிராட்டி “நீலா… இனி நீ கள்வன் நீலனில்லை. ஒரு மங்கையால் மாணிக்கமான ‘திருமங்கை’ எனும் நாட்டின் மன்னன். அதன்பொருட்டு உன்னை மங்கை மன்னனாக நான் காண்கிறேன்” என்றாள்.

பெருமானோ ஒருபடி மேலேபோய், “தேவி! இந்த மங்கை மன்னனோடு நீயும் சேர்ந்து இரு. அப்படிச் சேர்ந்தால் திருமங்கை மன்னன் என்றாவான். நீலா, இனி நீ திருமங்கை மன்னனாகி நீ விரும்பும் தொண்டினைச் செய். வைகுண்டக் கதவுகள் உன் பொருட்டு எப்போதும் திறந்தே இருக்கும். என் உள்ளம்கவர் கள்வனே உனக்கு என் பூரண நல்லாசிகள்…” என்று அருளினார்.

திருமங்கை மன்னன் பூரித்துப்போனான். அரண்மனை திரும்பியதும் அவனை ஆரத்தழுவி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து பாதம் விழுந்து பணிந்தாள் குமுதவல்லி. ஆனால் அப்போதும் “குமுதா, நான் ஒரு தவறிழைத்துவிட்டேன்” என்று சலனப்பட்டான் திருமங்கை மன்னன்!

**- தொடரும்…**

30 Jul 2019 5 AMUpdated:30 Jul 2019 5 AM

# ரங்க ராஜ்ஜியம் - 35

இந்திரா சௌந்தர்ராஜன்



ரங்க ராஜ்ஜியம்

திருமாலின் திருவருளைப் பெற்றுத் திரும்பிய நீலனை ஆரத்தழுவி, ஆனந்தக்கண்ணீர் சொரிந்து பாதம் விழுந்து பணிந்தாள் குமுத வல்லி. ஆனால் அப்போதும் “குமுதா! நான் ஒரு தவறிழைத்துவிட்டேன்” என்று சற்று சலனப் பட்டான் திருமங்கை மன்னன்.

“இப்போதுமா” என்று விடைத்தாள் குமுதவல்லி.

“ஆம்! எனக்கு வாய்த்த எம்பெருமான் தரிசனத்தை உனக்கு வாய்க்கச்செய்யத் தவறி விட்டேனே... என்னை மன்னிப்பாயா குமுதா?”

“எதற்கு இத்தனை பெரிய வார்த்தைகள் எல்லாம். நீங்கள் வேறு, நான் வேறா? உங்களுக்கு வாய்த்தால் எனக்கும் வாய்த்தார்போல்தானே? அத்துடன், அத்தனை பாக்கியம் நான் செய்திருக்க வில்லை. `போதும் இந்தத் தொண்டு' என்று நிதி வற்றியபோது உங்களைத் தடுத்தவள் நான்! களவு புரிந்தாவது சேவகம் புரிய வேண்டுமா என்று கேட்டவள் நான். `இப்படிக் கள்ளனாக இவர் மாறவா இவருக்கு நான் உன் வழியைக் காட்டினேன்' என்று அந்த மாலவனின் சந்நிதியில் புலம்பி அழுதவள் நான்.

ஆனால் ஒட்டுமொத்த உலகமும் தாண்டத் திகைக்கும் அப்பள்ளங்களை நீங்கள் தாண்டினீர். எவ்வளவுதான் பக்தி இருந்தபோதிலும் என்னைப் பணயம் வைக்கும் துணிவு எனக்கு இல்லை. ஆனால், நீங்கள் அதைச் சாதாரணமாகச் செய்தீர்.

எனக்குள் என்னையுமறியாத ஒரு ‘நான்’ எனும் உணர்வு மீதம் இருந்து என்னைத் தடுத்தது.நீங்களோ உங்களையே வெற்றிகொண்டு, எல்லாம் அவன்செயல் என்பதற்கு இலக்கணம் வகுத்தீர்கள். அப்படியிருக்க எனக்கு எப்படி தரிசனம் வாய்க்கும்?”

குமுதவல்லி வெகுநேர்த்தியாக விளக்கமளித்து, திருமங்கை மன்னனின் புருவத்தை வளையச் செய்தாள். “குமுதா... நீ என்னுள் விசுவரூபம் எடுத்துக்கொண்டே செல்கிறாய்...” என்று திரும்ப அவளை ஆரத்தழுவி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். அதன்பின் ஆரம்பமாயிற்று அவன் தொண்டூழியம். அணையாத அடுப்பு அடியவர்க்குச் சோறிட்டது. எம்பெருமானின் ஆலய விளக்குகள் இரவு பகல் பாராது எரிய ஆரம்பித்தன. எங்கெல்லாம் அவர் கோயில் கொண்டிருந்தாரோ, அங்கெல்லாம் சென்றான். தீந்தமிழாலே பாசுரங்களைப் பாடி மங்களாசாசனம் செய்வித்தான்.

47 அடிகளில் திருவெழுக்கூற்றிருக்கை எனும் பாடல், 155 அடிகளில் சிறிய திருமடல், 297 அடிகளில் பெரியதிருமடல், திருநெடுந்தாண்டகம் என்று 30 பாடல்கள், திருக்குறுந்தாண்டகம் என்று 20 பாடல்கள், பெரிய திருமொழி என்று 1084 பாடல்கள்... இப்படி மொத்தம் 1351 பாடல்கள்!

இப்படி வகைதொகையாகப் பாடி தமிழ்க் கவிகளில் ஒருவனுமானான். இவனை வியந்த பல அறிஞர்கள், திருமங்கை மன்னனுக்கு ‘நாலுகவிப் பெருமாள்’ எனும் பட்டத்தையும் வழங்கினர். இதனை, இவர் சீடர்களின் குரலிலான பாடல் ஒன்றால் அறியலாம்.

“நாலுகவிப் பெருமாள் வந்தார், நம் கலியன் வந்தார், ஆலிநாடர் வந்தார், அருள்மாரி வந்தார், கொங்கு மலர்க் குழலியர் வேள் வந்தார், மங்கை வேந்தர் வந்தார், பரகாலர் வந்தார்”- எனும் அப்பாடல் திருமங்கை மன்னன் சீடர்களிடம் மிகப்பிரசித்தி!

இப்புகழ்ச்சியும் கட்டியமும் மிகையானது என்று அப்போதிருந்த சைவம் சார்ந்த சிலர் நிந்தித்ததாகவும் ஒரு கதை உண்டு.

திருமங்கையாரின் திருப்பணிகளும் குறிப்பிடத்தக்கவை. குறிப்பாக திருவரங்கப் பெரியகோயிலில் விமானம், மண்டபம், திருத்தளிகை திருமதில், கோபுரம் என்று ஆற்றிய பணிகள் முக்கியமானவை. இதற்காக நாகப்பட்டினத்தில், தான் சேமித்து வைத்திருந்த பொன்னைக் கொண்டுவந்து அதனால் வந்த பொருளில் இவற்றைச் சாதித்தார்.

குமுதவல்லியார், இவ்வேளையில் பெருந்துணையாக இருந்து உற்ற துணையாகவும் விளங்கினார். குமுதவல்லியாரை ஒட்டி ஒரு வரலாறும் உண்டு. குமுதவல்லியார் ஒரு அயோனிஜர்! பூர்வத்தில் ‘சுமங்கலை’ எனும் தேவ கன்னிகையாக விளங்கியவர். இமயமலைச் சாரலில் நடமாடித் திரிகையில் கபில முனிவரையும் அவரின் சீடர்களையும் ஒரு சோலையில் காண்கிறார்.

அந்தச் சீடர்களில் ஒருவர் விகார வடிவில் இருந்தார். அவரைக் காணவும் சுமங்கலை ஏளனம் செய்தாள். அதைக் கண்ட கபிலர் ‘உருவு கண்டு எள்ளாமை வேண்டும் – தேவ கன்னி என்கிற மமதையா’ எனக் கேட்டு, `பூமியில் சென்று ஒரு மானிடப் பெண்ணாகப் பிறந்து ஒரு மனிதனுக்கு மனைவியாகப் பாடுகள்படக் கடவது’ எனச் சபித்து விடுகிறார். சுமங்கலை தன் தவற்றை உணர்ந்து மன்னிக்கவேண்டினாள். பின் கபிலரும் ‘பரகாலன் என்பவனின் மனைவியாகி, அவனைத் திருமாலடியவனாக்கி, அவனோடு வாழ்ந்து

அவன் சேவைகளால் உன் குறையும் தீர்ந்து நீ விண்ணகம் அடைவாயாக...” என்றார்.





அதன்பின் சுமங்கலை, திருவாலி நாட்டின் வெள்ளக்குளப் பொய்கையில் பூத்த குமுத மலர்கள் நடுவில்... அவற்றைத் தாயாக்கித் தன்னைச் சேயாக்கிக்கொண்டு கிடந்தாள். அப்பக்கம் வந்த மருத்துவர் ஒருவர் குழந்தை கிடக்கக் கண்டு அள்ளி எடுத்துச்சென்று, குமுத மலர்களிடையே கிடைத்தவள் என்பதால் ‘குமுதவல்லி’ என்ற திருநாமம் சூட்டி வளர்த்து ஆளாக்கினார் என்பர்.

திருமங்கை மன்னன் திருச்சேவைகளில் ‘திருவரங்கத் திருச்சேவை’ பெரிது; கவனத்துக்குரியது. இவர் சேவை புரிந்த காலத்தில்தான்

தொண்டரடிப் பொடியாழ்வாரும் திருவரங்கப் பெருமானின் திருச்சேவையில் தன்னை நிலைநிறுத்தியிருந்தார்.

பன்னிரு ஆழ்வார் பெருமக்களில் தொண்டரடிப் பொடியாழ்வாரும் ஒருவர். ஆழ்வார்களில் 'தொண்டரடிப் பொடி' எனும் விநோதப் பெயருக்கு உரிய இந்த ஆழ்வாரின் வரலாறு உலக மாயை எப்படிப்பட்டது, அதிலும் பெண் மாயை என்னவெல்லாம் செய்யும் என்பதற்கு எடுத்துக்காட்டாகும்.



சோழவள நாட்டின் திருமண்டங்குடிதான் இவரின் அவதார ஸ்தலம். பிரபவ வருடத்தில், மார்கழி மாத கேட்டை நட்சத்திரத்தில் அவதரித்தவர். ஆழ்வார் பெருமக்களில் பத்தாமவராகக் கருதப்படும் இவரின் இயற்பெயர் 'விப்ர நாராயணன்'. இந்த விப்ரநாராயணன் திருவரங்கத்துக்கு வந்து அங்கே ஒரு நந்தவனம் அமைத்து, அதில் அன்றாடம் மலரும் பூக்களைப் பறித்து மாலை கட்டி, அதை எடுத்துச் சென்று அரங்கனுக்குச் சாற்றித் தொண்டு செய்துவந்தார். மாலைகளை விதம்விதமாய் கட்டுவதில் இவர் வித்தகராய் விளங்கினார்.

'கண்ணி, கண்டம் தோள்விரி, தொங்கடம், செண்டு, கங்கணம் கொலுவணி, கிரீடம், கிரிநாகம்' என்று மாலைகளில் பலவகைகளை உருவாக்கி, தினம் ஒன்று என்று கட்டி அரங்கனுக்குச் சேவை செய்து வந்த இவரின் பக்தியைச் சோதிக்க விழைந்தார் அரங்கன்.

‘தேவதேவி’ என்னும் தாசிக்குலப் பெண்ணொருத்தியை இவர் கண்ணில்படும் படிச் செய்ததோடு, இவரின் பக்திக்குரிய நெஞ்சில் மண்ணுயிர்களுக்கு உரித்தான காமத்தைச் சற்று கிளறியும்விட்டார். விப்ரநாரயணரும் தேவதேவியின் வீடே கதி என்றாகிவிட்டார். தாசிகள் தாசர்களை வெறுமனே தாங்குவரா என்ன? பொன்னையும் பொருளையும் இழந்தே தேவதேவியிடம் மூழ்கிக்கிடந்தார்.

ஒருநாள் கொடுக்க எதுவுமில்லை. பூக்கட்டும் சேவையையும் விட்டுவிட்ட நிலை! அரங்கச் சந்நிதி ஊழியர்கள் ‘விப்ரநாராயணன் இப்படி ஒரு தாசிப்பித்தனாவான் என்று நாங்கள் யாரும் எதிர்பார்க்க வில்லை’ என்று புலம்பத் தொடங்கினர். ‘அரங்கன் எப்படிக் கைவிட்டான்’ என்று சிலர் கேட்டனர். ‘அரங்கன் என்ன செய்வான்’ என்றும் சிலர் கேட்டனர்.

ஒருநாள் பொருள் ஏதும் இல்லாமல் வந்த விப்ரநாராயணரை தேவதேவியின் தாய் வெளியேயே நிறுத்திக் கதவைத் தாழிட்டுவிட்டாள். மனம் வருந்தித் திரும்பினார் விப்ரநாராயணர். திரும்பியவர் கண்முன் அவரது நந்தவனமும் அவரைப் போலவே பொலிவிழந்து காட்சி தந்தது. மனமோ அந்த நந்தவனம் அப்படி ஆனதற்காக அழவில்லை. ‘தேவதேவி வெளியேதள்ளி கதவைத் தாழிட்டுவிட்டாளே’ என்றே மருகி அழுதது.

அப்போது அவர் மனைவாசலில் தேவதேவி வீட்டுப் பல்லக்கு ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து சேடி ஒருத்தி வெளிப்பட்டு “தங்களைப் பல்லக்கில் அமர்த்தி அழைத்து வரப் பணித்துள்ளார் தேவதேவியார்” என்றாள்.

“என்னையா?”

“ஆம் தங்களையேதான்.”

“அப்படியானால், நான் வந்தபோது ஏன் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக் கதவை மூடினார்கள்..?”

“அப்போது தாங்கள் பொருள் கொண்டுவரவில்லை. ஆனால் இப்போதுதான் அப்படி இல்லையே?”

“அப்படி இல்லை என்றால் எப்படி?”

“எனக்குத் தெரியாது. வந்து நீங்களே கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள்.”

சேடியிடம் அதற்குமேல் விப்ரநாராயணரால் பேசமுடியவில்லை. பல்லக்கில் ஏறிக்கொண்டு தாசிவீட்டுக்கு அவர் செல்வதைத் திருவரங்கமே பார்த்து வாயடைத்துப்போனது! தேவதேவியும் அன்பாக வரவேற்றாள். விப்ரநாராயணருக்கு அவளது வரவேற்பு அதீதமாகப்பட்டது.

“தேவி... இன்று நீ என்பால் காட்டும் அன்பு, என்னை வெகுவாய் மகிழ்விப்பதோடு, சிந்திக்கவும் வைக்கிறது” என்றார்.

“இத்தனை நாட்கள் பொற்காசுகளால் படியளந்தீர்! இப்போதோ பொன்வட்டிலாலேயே அளக்கின்றீர். அளப்புக்கு ஏற்ப அன்பும் அரவணைப்பும் கூடினால்தானே அடுத்து இதைவிட பெரியதாய் ஒன்றைக் கொண்டு வருவீர்!”

“என்ன சொல்கிறாய் தேவி... நான் பொன் வட்டில் தந்தேனா?”

“நீங்கள் தந்தாலென்ன... உங்கள் சீடர் தந்தால் என்ன?”

“எனக்குச் சீடனா?”

“ஆம், அவர் அப்படித்தான் கூறினார். நீங்கள் மாலை கட்டும் அழகில் பெரிதும் மயங்கியவராமே..?”

“பெயர் என்ன என்று சொன்னாரா?”

தேவதேவி உடனே யோசிக்கலானாள்...

**- தொடரும்...**

**கட்டுண்ட கண்ணன்!**

**வ**சிஷ்ட முனிவர், பகவான் கண்ணனிடம் மிகுந்த பக்தி கொண்டு தினமும் வெண்ணெய் நைவேத்தியம் படைத்து வழிபடுவது வழக்கம்.

வசிஷ்டரைச் சோதிக்க நினைத்த கண்ணன், ஒரு நாள் சிறுவனாக வடிவம் எடுத்து வந்து அன்றைய நைவேத்தியத்துக்காக வசிஷ்டர் வைத்திருந்த வெண்ணெய் முழுவதையும் தின்று தீர்த்து விட்டார். இதைத் தற்செயலாகக் கவனித்துவிட்ட வசிஷ்டர், ''ஏய், யாரது?'' என்று உரக்கக் குரல் கொடுத்தபடி சிறுவனைப் பிடிக்க முயற்சித்தார்.



கண்ணன் குடுகுடுவென ஓட, வசிஷ்டர் துரத்தினார். அப்போது அந்தப் பகுதியில் தவம் செய்து கொண்டிருந்த ரிஷிகள் சிலர், ஓடுவது இறைவனே என அறிந்து தங்களது தவ வலிமையால் கண்ணனைப் பாசக் கயிற்றால் கட்டிப் போட, கண்ணனும் அவர்களின் பக்திக்குக் கட்டுப்பட்டு அதே இடத்தில் நின்றார். பின்னால் ஓடி வந்த வசிஷ்டரும், உண்மையை உணர்ந்து, கிருஷ்ணனின் பாதங்களைப் பக்தியுடன் பற்றிக் கொண்டார்.

வசிஷ்டர் மற்றும் அங்கிருந்த முனிவர்களின் வேண்டுகோளை ஏற்று கண்ணன் அங்கேயே கோயில் கொண்டான். பக்திக்குக் கட்டுண்ட கண்ணன், நின்ற அந்தத் திருவிடம் 'திருக்கண்ணங்குடி' ஆயிற்று. திருவாரூரில் இருந்து சுமார் 14 கி.மீ. தொலைவில் உள்ளது இந்தத் திருத்தலம்.

**- கவிதா, மதுரை-2**

13 Aug 2019

# ரங்க ராஜ்ஜியம் - 36



ரங்க ராஜ்ஜியம்

சற்றே யோசித்த தேவதேவி `அவர் பெயர் அழகிய மணவாள தாசன்' என்று எடுத்துரைத்தாள். அதைக் கேட்ட விப்ரநாராயணரும் தாடையை வருடியபடியே யோசிக்கலானார்.

*'பச்சை மாமலைபோல் மேனி*

*பவளவாய்க் கமலச் செங்கண்*

*அச்சுதா அமர ரேறே*

*ஆயர் தம் கொழுந்தே என்னும்*

*இச்சுவை தவிர யான் போய்*

*இந்திரலோக மாளும்*

*அச்சுவை பெறினும் வேண்டேன்*

*அரங்கமா நகருளானே...'*

**- தொண்டரடிப் பொடியாழ்வார்**

**ச**ற்றே யோசித்த தேவதேவி `அவர் பெயர் அழகிய மணவாள தாசன்' என்று எடுத்துரைத்தாள். அதைக் கேட்ட விப்ரநாராயணரும் தாடையை வருடியபடியே யோசிக்கலானார்.

``என்ன யோசனை..?''

``இப்படி ஒரு தொண்டனா... அதுவும் எனக்கா என்றே யோசிக்கிறேன்...''

``உங்கள் மலர் வனத்தில்தான் பலர் பணிபுரி கிறார்களே?''

``பலரும் வந்து எனக்கு உதவுவது வழக்கம். ஆயினும் அழகிய மணவாள தாசன் என்கிற ஒருவரை நான் அறியேன்.''

விப்ரநாராயணர் இப்படிச் சொன்ன தருணத்தில், சமையல்கட்டில் பாத்திரம் ஒன்று உருண்டு விழும் சத்தம் கேட்டது. அதனால், விப்ரநாராயணர் முனகியது தேவதேவியின் காதில் விழவில்லை. தொடர்ந்து அவர் யோசிக்கவும் அவள் விடவில்லை.

``யோசனை போதும்... உங்களை இந்த இல்லத்தவர் அவமதித்துவிட்டனர். பொருளோடு வருபவருக்கே இங்கு மதிப்பு என்பதை நானும் விரும்பவில்லை. என்ன செய்வது? நான் மட்டுமா இங்கே இருக்கிறேன். என்னைச் சார்ந்து பலர்... எல்லோருக்கும் முதுமையை எண்ணி அச்சம். அதன் பொருட்டே இப்போதே பொருள் சம்பாதிக்கத் துடிக்கின்றனர்...' என்று யதார்த்தமாகப் பேசியபடியே விப்ரநாராயணரின் கரம் பற்றினாள். அடுத்தநொடி காமன் பண்டிகை ஆரம்பமாயிற்று!



இங்கே இப்படி என்றால் திருவரங்கன் திருச் சந்நிதியில் ஒரே களேபரம். எம்பெருமானுக்குச் சோழ மன்னன் வழங்கியிருந்த பொன் வட்டிலைக் காணவில்லை என்பதால் ஏற்பட்ட களேபரம். ‘யார் திருடியது’ எனும் கேள்வியும் உடனேயே எழும்பிவிட்டது. ‘நானில்லை... நீயில்லை...’ என்று ஆளுக்கு ஆள் பதறினர். விஷயம் அரசன் காதுக்குச் சென்று அமைச்சர் வந்து விசாரிக்கலானார். அரங்கனின் திருச்சந்நிதி பட்டர்கள் கண்ணீர் பெருக்கி நின்றனர். `எப்படிக் காணாமல் போயிற்று என்றே தெரியவில்லை’ என்றனர்.

``இந்தப் பதிலை ஏற்க முடியாது. சந்நிதிக்குப் பொறுப்பாளர்களான நீங்களே பொன் வட்டிலுக் கும் பொறுப்பு'' என்று கூறி அனைவரையும் சிறையிலடைக்க ஆணையிட்டார் அமைச்சர்.

சிறைக்குள் பட்டர்கள் புலம்பி அழுதனர். சிறைக்காவலன் அதைக் கண்டு வருந்தினான். காவல் பணி முடிந்து வீடு திரும்பியவன், தன்

மனைவியிடம் பட்டர்களின் புலம்பலைச் சொல்லி வருந்தினான். அவன் மனைவி தேவதேவி வீட்டில் பணிபுரிபவள். காவலன் கூறவும் தேவதேவி வீட்டில் பார்த்த தங்க வட்டில் ஞாபகம் அவள் நினைவுக்கு வந்தது.

``நீ சொல்லும் அடையாளங்களோடு கூடிய தங்க வட்டில் தேவதேவி வீட்டில் இருக்கக் கண்டேன். அதைக் கொடுத்த பிறகே, விப்ரநாராயணருக்கு அந்த வீட்டில் உபசாரம் நிகழ்ந்தது'' என்றாள். காவலன் இந்தச் செய்தியை அமைச்சரிடம் சொல்ல, அமைச்சர் அரசனிடம் சொல்ல, அரசனும் ``உண்மை தெரிந்தாக வேண்டும். தேவதேவியின் இல்லத்துக்குச் சென்று பாருங்கள்'' என்றான்.

பார்த்தனர்... அரசன் தந்த பொன்வட்டிலேதான்!

தேவதேவி விப்ரநாராயணரைக் கை காட்டி னாள். விப்ரநாராயணரோ ``எனக்கு எதுவும் தெரியாது. எல்லாம் அந்த அழகிய மணவாளதாசன் செயல்" என்றார்.

``யார் அந்த அழகிய மணவாள தாசன். அவன் நேரில் வந்து நடந்ததைச் சொல்லவேண்டும். வட்டில் என்ன விலங்கா, பறவையா... காலும் சிறகும் முளைத்து சந்நிதியைவிட்டுப் பறந்து செல்ல...'' என்று அமைச்சர் விசாரணையைத் தொடங்க, விளைவு சிறைக்குள் விப்ரநாராயணர்.

அழகாய்த் திருப்பணி செய்து வாழ்ந்து வந்த வரையிலும் ஒரு குறையுமில்லை. ஆனால் இப்போதோ காமம் சிறைக்குள் தள்ளிவிட்டது. மதிப்பும் மரியாதையும் காற்றில் பறந்துபோயே போய்விட்டன. விப்ரநாராயணர், சிறையின் இருட்டறையில் தனக்குத் தானே பேசிக்கொள்ளத் தொடங்கினார்.

`புத்தி என்பதே பட்டால்தான் ஒளிருமா. தீயை உணர அதைத் தீண்டிப் பார்த்ததுபோல் ஆகிவிட்டதே! என்ன வாழ்வு இது. ஒரு நாள் இன்பம்; ஒரு நாள் துன்பம். நேற்று இதே நேரம் தேவதேவியின் வீட்டில் பஞ்சணை வாசம். இப்போதோ சிறையில் கல்தரை வாசம்!'

நினைத்துப் பார்த்த விப்ரநாராயணருக்குத் தான் படும் துன்பத்தை எல்லாம்விடப் பெரும் துன்பமாகத் தோன்றியது ஒன்றுதான்... யார் அந்த அழகிய மணவாளதாசன் என்பவன். எதற்காகத் தான் களவாடி என்னைக் களவாணி ஆக்கினான். அவனுக்கு நான் என்ன தீங்கிழைத்தேன்...தேவ தேவிக்காக நான் ஏங்கித் தவித்தது அவனுக்கு எப்படித் தெரியும்...

இப்படிக் கேள்விகள்... கேள்விகள்.. கேள்விகள்!

விப்ரநாராயணரின் கேள்விக்கு, அந்த அரங்கன் அரசன் கனவில் போய் பதில் கூறினான்.

``அரசனே! நானே அழகிய மணவாள தாசனாய் தேவ தேவியின் இல்லம் சென்று நீ எனக்கென தந்துவிட்ட என் பொன்வட்டிலைத் தந்தேன். இதில் விப்ரநாராயணனுக்கு எந்தப் பங்கும் இல்லை. நாள்தோறும் மாலை கட்டி என்னை மகிழ்ச்சிப் படுத்திய விப்ரனின் வருத்தம் என் வருத்தமல்லவா. அதைப் போக்கவே அவ்வாறு நடந்தேன். அவனை விடுவித்துவிடு'' என்றான்.

அரசன் கனவு கலைந்து மெய்சிலிர்த்துப்போனான். விடுவிக்கப்பட்ட விப்ரநாராயண ரிடமும் பெரும் சிலிர்ப்பு. தேவதேவிகூட விக்கித்துப் போனாள். விப்ரநாராயணரின் பொருட்டு, அரங்கனே அழகிய மணவாளதாசன் வடிவில் தன் இல்லம் ஏகியதை எண்ணியவள், அந்த நொடியே தன் இழிந்த உடல் சார்ந்த வாழ்க்கைக்கு ஒரு முழுக்கு போட்டாள். தன்னை ‘அரங்கனின் அடிமை’ என்று அறிவித்தாள்.

விப்ரநாராயணர் இம்மட்டில் சகலரையும் விஞ்சினார். `பாவியான எனக்கே இத்தனை கருணையை அந்த அரங்கன் புரிந்திருக்கிறானே... சில காலம் மலர்களை மாலைகளாய்க் கட்டிப் புரிந்த சேவைக்கே இந்த அரவணைப்பு என்றால், சதா அவன் நினைப்பாகவே இருந்தால் அவனோடு இரண்டறக் கலப்பதும் எளிதன்றோ. என் மூலம் இதை உலகம் உணர வேண்டும் என்பதற்காகத்தான் நானும் காம வயப்பட்டேனோ... தவறிழைத்தேனோ...’ என்று கதறிய விப்ரநாராயணர்,

உடம்பால் தான் செய்த தவற்றுக்குப் பரிகாரமாய் அந்த உடம்பையே நற்செயலுக்கு ஈடுபடுத்தத் தீர்மானித்தார்.

அந்தப் பரிகாரச் செயல்தான், நாரணன் அடியவர் பாதங்களைக் கழுவி அந்த நீரைத் தன் தலையில் தெளித்துக்கொள்வது என்பது. நாரணனின் அடியவர் பாதங்களே வணக்கத்திற் குரியவை என்றால், நாரணன் பாதங்கள்?!

அந்த நொடியே விப்ர நாராயணர் தொண்டர் அடி தொழும் சீலராகி... சீலன் என்பதில்கூட ஒரு கர்வம் தொனிப்பதுபோல் கருதி, ‘தொண்டர் அடிதொழும் தொண்டன்’ என்பதும்கூட சொல்லிடர் தருவது போல் உணர்ந்து, ‘தொண்டன் அடியின் தூசு நான்’ - அதாவது அடிப்பொடி - ‘தொண்டரடிப்பொடி’ என்று அறிவித்தார்.

இவரால் மூன்று விஷயங்கள் தெளிவும் திடமும் பெற்றன. பெருங்காமம் துயர் தரும், அதை பக்தியாக்கிட ஞானம் தரும், அந்த ஞானம் என்பது ‘இறைவன் அடியவரே பெரியவர்’ என்பதுதான்!

தொண்டரடிப் பொடியாக மாறிய பின் இவர் பாடிய பாசுரங்களே திருமாலை - திருப்பள்ளியெழுச்சி போன்ற பிரபந்தங்கள். திருமாலையில் 45 பாசுரங்கள் உள்ளன. திருப்பள்ளி யெழுச்சியில் 10. ஆக மொத்தம் 55. அளவில் குறைந்திருந்தாலும் பக்தி உருக்கத்தைக் காட்டுவதிலும், சிறப்பைக் காட்டுவதிலும் பாமரனையும் இவர் பாடல்கள் கவர்ந்து இழுத்தன எனலாம்.

திருவரங்கத்தை எண்ணும்போது, இவரோடு இவர் வடிவமைத்த நந்தவனத்தையும் எண்ணிட வேண்டும்.

திருமங்கை மன்னன், ராஜமகேந்திரன் திருச் சுற்றில் வடகிழக்கில் திருமாமணி மண்டபம் மற்றும் நூற்றுக்கால் மண்டபத்தினைக் கட்டி, பின் குலசேகரன் திருவீதியைச் சூழ்ந்த திருமதில் மற்றும் கோபுரங்கள் கண்டான். அத்துடன், திருவீதியின் தென் மேற்கில் - கன்னி மூலையில் திருமண்டபம் மற்றும் திருநடைமாளிகை ஆகியவற்றை அமைத்தான். மேலும், தென்கிழக்கான அக்னி பாகத்தில் மடைப்பள்ளி அமைத்துப்

பல்வேறு திருப்பணி செய்த தருணத்தில், கிழக்கில் சந்திர புஷ்கரணிக் குளக்கரையில் தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருமாலைப் பலகை இருந்தது. அதன்மேல் அமர்ந்தே தொண்டரடிப் பொடியாழ்வார் மாலைகள் கட்டியருளினார். இதையறிந்த திருமங்கை மன்னன் அந்தத் தடயத்துக்குப் பங்கம் வரக்கூடாது என்று கருதியும், அதைப் போற்றும்விதமாகவும், அந்த இடத்தை விட்டு மதிலை வளைத்துக் கட்டி அங்கே விழுந்து வணங்கவும் செய்தார்.

அதனால் நெகிழ்ந்த தொண்டரடிப் பொடியாழ்வார், பதில் மரியாதையும் அன்பும் காட்டும் வகையில், தன் நந்தவனத்தைத் திருத்தும் மண்கெல்லிக் கருவிக்கு மங்கை மன்னனின் செல்லப்பெயர்களில் ஒன்றான `அருள் மாரி' என்கிற பெயரைச் சாற்றியருளினார்.

இப்படிச் சமகாலத்தில் திருவரங்கத்தில் இரு ஆழ்வார் பெருமக்களும் இருந்த சந்தர்ப்பத்தில், திருமங்கை ஆழ்வார் குறித்த பல சுவையான சம்பவங்களும் நிகழ்ந்தன.

ஒரு நாள், திருச்சந்நிதியில் திருவரங்கனுக்கும் திருவிளக்குப் பிச்சன் என்பானுக்கும் பரஸ்பர உரையாடல் நிகழ்ந்தது. (இத்திருவிளக்குப் பிச்சன், எம்பெருமானோடு சகஜமாய் உரையாடும் உரிமையும் வாத்சல்யமும் கொண்டிருந்ததைத் திருவரங்கக் கோவிலொழுகு நூல் வாயிலாகக் காண முடிகிறது). இதுவும் எம்பெருமானின் ஒரு திருவிளையாடற் செயலே. இதில் வேடிக்கையும் விஜயமும் மிகுந்திருந்தன.

``என்ன பிச்சா... எப்படி இருக்கிறாய்? இந்தத் திருவரங்கத்தில் உனக்குக் குறைகள் ஏதும் இல்லைதானே'' என்று மானுட பாவனையோடு எம்பெருமான் திருவிளக்குப் பிச்சனிடம் கேட்டான். பிச்சனும் உற்சாகமாக மறுமொழி கூறத் தொடங்கினான்.

``எம்பெருமானே! குறைக்கு ஒரு குறைவுமில்லாத ஊரல்லவா உனது இந்தத் திருவரங்கப்பட்டணம்!'

``பட்டணமா?''

``இல்லையா பின்னே! தினமும் எட்டுத்திக்கி லிருந்தும் மூட்டை கட்டிக்கொண்டு வரும் ஜனங்களால் நிரம்பி வழியும் அருள் நகரம் என்றும் கூறலாம்தான்...``

``ஜனங்கள் எல்லோரும் மகிழ்வுடன் உள்ளனர் தானே?''

``அப்படிச் சொல்ல முடியாது!''

``என்றால்... வருத்தப்படுபவர்களும் எனது இந்த கோயில் நகரில் உள்ளனரா?''

``நிறையவே...''

``பிச்சா! நீ என்ன கூறுகிறாய். என் ரங்க ராஜ்ஜியத்தில் வருத்தமா?''

``ஆமாம்.''

``ஆமோதித்தால் போதாது. எதனால் அந்த வருத்தம் என்று கூறு...''

``ஒரே வருத்தம்தான். திருச்சந்நிதிக்குள் கிடக்கும் உன் பள்ளிகொண்ட கோலத்தை விரும்புமளவு தரிசிக்க முடியவில்லையே எனும் வருத்தமே அது''

``பிச்சா! ஒரு விநாடி நீ என்னையே உலுக்கி விட்டாய்.''

பெருமாள் இப்படிச் சொன்னதும் ``இப்படிச் சொல்லி நீதான் என்னைப் பரவசத்தில் உலுக்குகிறாய்." என்ற பிச்சன் தொடர்ந்து எதையோ சொல்ல முனைந்தான். ஆனாலும் தயங்கினான்.

``பிச்சா! எதையோ சொல்ல வந்தாய். தயங்காமல் சொல்" என்றார் பெருமாள்.

``ஒரு விஷயம் என்னைக் கொஞ்சம் உறுத்தவே செய்கிறது. எப்படிச் சொல்வது என்றுதான் யோசிக்கிறேன்...''

``எதுவாக இருந்தாலும் சொல்...''

``அப்படியானால் சரி... உமது அடியவன் தானே இந்த திருமங்கை மன்னன்...''

``அவன் அடியவனுக்கெல்லாம் அடியவனப்பா...''

``என்றால் தற்பெருமை கூடாதல்லவா?''

``அப்படியா.. திருமங்கையானா தற்பெருமை கொண்டுள்ளான்?''

``ஆமாம்... பெரிய திருமொழி எனும் உருக்கமான பாசுரங்களில்தான் நான் அதைக் கண்டேன். உம்மைத் துதிசெய்யும் சாக்கில் தன்னையும் சேர்த்துக்கொள்கிறார்!''

- திருவிளக்குப் பிச்சன் எம்பெருமானிடம் சொன்ன விதத்தில் இளக்காரம் தொனித்தது!

**- தொடரும்...**

## இடக் கையில் சக்கரம்!

**கா**ஞ்சிபுரம் மணிமங்கலத்தில் ராஜகோபால சுவாமி, செங்கமலவல்லித் தாயாருடன் கோயில் கொண்டுள்ளார். இங்கே, பெருமாள் இடது கையில் சக்கரமும் வலது கையில் சங்கும் ஏந்தியிருப்பது, அபூர்வ திருக்கோலமாகும்.

சென்னை ஆதம்பாக்கம், சாந்தி நகரில் உள்ள பாண்டுரங்கன் ஆலயம், பண்டரிபுரத்தில் உள்ள கோபுர அமைப்போடு திகழ்கிறது.



மன்னார்குடி ராஜகோபாலசுவாமி, ஒரு காதில் குண்டலமும் மறு காதில் தோடும் அணிந்து காட்சியளிப்பது விசேஷ அம்சமாகும்.

அம்பாசமுத்திரம் கோயிலில் உள்ள வேணுகோபாலன் சிலை, நேபாளம் கண்டகி நதியில் கிடைக்கும் சாளக்ராமக் கல்லினால் ஆனது. கிருஷ்ண ஜயந்தியன்று இங்குப் பெருமாளுக்குத் கண்திறப்பு, சங்கில் பால் புகட்டும் வைபவங்கள் நடைபெறுகின்றன.

**- க. ரேணுகா, கும்பகோணம்**

27 Aug 2019

# ரங்க ராஜ்ஜியம் - 37



ரங்க ராஜ்ஜியம்

திருவிளக்குப் பிச்சன் திருமங்கையாழ்வார் குறித்துக் கோள்மூட்டவும் எம்பெருமானின் வதனத்தில் அதுவரை நிலவிவந்த மென் புன்னகை நீங்கிச் சற்றே கோபம் தெரிய தொடங்கியது.

*“செங்கமலத்து அயனனைய மறையோர் காழிச்*

*சீராம விண்ணகர் என் செங்கண்மாலை*

*அங்கமலத் தடவயல்சூழ் ஆலிநாடன்*

*அருள்மாரி அரட்டமுக்கி அடையார் சீயம்*

*கொங்கு மலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன்*

*கொற்ற வேல் பரகாலன் கலியன் சொன்ன*

*சங்க முகத் தமிழ் மாலை பத்தும் வல்லார்*

*தடங்கடல் சூழ் உலகுக்குத் தலைவர் தாமே"*

**- பெரிய திருமொழி**

**தி**ருவிளக்குப் பிச்சன் திருமங்கையாழ்வார் குறித்துக் கோள்மூட்டவும் எம்பெருமானின் வதனத்தில் அதுவரை நிலவிவந்த மென் புன்னகை நீங்கிச் சற்றே கோபம் தெரிய தொடங்கியது.

பாவம் திருவிளக்குப் பிச்சன்!

தான் சொன்னதன் நிமித்தம் திருமங்கையாழ்வார் குறித்துதான் அந்தக் கோபம் என்று திருவிளக்குப் பிச்சன் நினைத்திட, எம்பெருமானோ பிச்சனைக் கண்டிக்கலானார்!

"பிச்சா... பக்குவப்படாத மனிதர் களைப்போல நீ பேசுகிறாய். திருமங்கையானை நீ சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. அவன் என் சேவை நிமித்தம் தன்னையே கள்வனாக்கிக் கொண்டவன். கள்வனாகிய போதும் களவாடிய பொருளால் சிறிதும் சுகம் காணாதவன். உச்சபட்சமாய் நான் வைகுண்டவாசியாக்க விழைந்தபோது அதைவிடப் பெரிது மண்ணில் செய்யும் நாராயணசேவை என்று கூறி, இந்த மண்ணில் திரிபவன். அவனைக் குறை சொல்ல உன்னால் எப்படி முடிந்தது?" என்று கேட்டார். இதைக் கேட்டுப் பிச்சன் இன்ப அதிர்வுக்குள்ளானான்.

"என்னைக்கூடக் குறை சொல்... இனி என் அடியார்களை மட்டும் குறைசொல்லிவிடாதே... பின் திருவிளக்குப் பிச்சனான நீ விலக்கப்பட்ட பிச்சனாகிவிடுவாய்" என்று எச்சரிக்கவும் செய்தார், எம்பெருமான்.

திருவிளக்குப் பிச்சன் எம்பெருமானிடம் திருமங்கையாழ்வார் தன் பெருமையைச் சொல்லிக்கொள்வதாக பாடிய பாட்டு பெரிய திருமொழியில் 3-4-10 பாசுர உரை கொண்டுள்ளது. இந்தப் பாடலைச்

சொல்லியே திருவிளக்குப் பிச்சனும் வருந்தினான். எம்பெருமானே வக்காலத்து வாங்கவும், வருத்தம் நீங்கி திருத்தமும் செய்துகொண்டான்.

பின் எம்பெருமானின் பாராட்டையும் அனுக்கிரகத்தையும், கோயில் பட்டர்கள் தொட்டு எல்லோரிடமும் பிச்சன் கூறவும் மங்கை மன்னன் புகழ் பெரிதும் பரவியது. அப்படியே திருச்சந்நிதியில் தமிழ்மணம் கமழ்ந்திடும் பாசுரங் களுக்கு ஒரு தனியிடமும் வரவேற்பும் கிடைக்கத் தொடங்கின.

‘தேவமொழி’ என்று சம்ஸ்கிருதம் ஆலயப்பணி நிமித்தம் பிரதான இடத்தில் இருந்த நிலையில், தமிழ்ப் பாசுரங்கள் சம்ஸ்கிருத மந்திரங்களை ஒட்டி அருகில்வந்து நின்றுகொண்டன. குறிப்பாக, மங்கைமன்னனே இதன் பொருட்டு ஒரு பெரிய எத்தனம் புரிந்தான்.



ஒரு திருக்கார்த்திகை அன்று திருவரங்க ஆலயத்திலே எம்பெருமானும், பெருமானுடன் ரங்கநாயகி தாயார் மற்றும் ஆண்டாள் உள்ளிட்ட நாச்சியார்களும் திருமஞ்சனம் கண்டனர். அபிஷேகத்தின் வைணவப்பதமே திருமஞ்சனம்! மிக விசேஷமான இந்த நாளில், எம்பெருமானும் பெருமாட்டிகளோடு பல்லக்கில் எழுந்தருளி திருவீதி உலாக்காண விழைந்த தருணம், அந்த தரிசனத்தை அத்திருநாளில் கண்டிருந்த திருமங்கையாழ்வார் எம்பெருமானின் எழில்கோலத்தில் மயங்கி 'திருநெடுந்தாண்டகம்' எனப்படும் பிரபந்தப் பாசுரத்தை பாடிட, எம்பெருமானின் செவிப்புலன்களும் குளிர்ந்தன. இதன் எதிரொலியாக திருமங்கை யாரிடம் எம்பெருமானும் மகிழ்வை வெளிப்படுத்தினார்.

"மங்கைமன்னா... இசையின்பத்தோடு நீ பாடிய நெடுந்தாண்டகம் என்னைக் குளிரச் செய்தது. வளமான கற்பனை அற்புதமானச் சொற்கள், அதிலும் என் உருவம் குறித்த உன் பாடலில் நான் என்னையே மறந்தேன்" என்றார்.

*`பாருருவில் நீர் ஏரி கால் விசும்பும் ஆகி*

*பல்வேறு சமயமுமாய் பரந்து நின்ற*

*ஏருருவில் மூவருமே யென்ன நின்ற*

*இமையவர்தம் திருவுருவேறெண்ணும் போது*

*ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ*

*ஒன்று மாகடலுருவம் ஒத்து நின்ற*

*மூவரும் கண்டபோது ஒன்றாம் சோதி*

*முகிலுருவம் எம்மடிகள் உருவம்தானே!"*

- எனும் இப்பாடலே எம்பெருமான் கேட்டு நெகிழ்ந்த பாடல்.

‘நீர், நிலம், காற்று, ஆகாயம், நெருப்பு என்று பஞ்சபூதமாயும் இருப்பவனை, பரந்தும் விரிந்தும் கிடப்பவனை, பிரமன், சிவன், விஷ்ணு ஆகிய மூவரும் கலந்த ஓர் உருவாய் இருப்பவனை, இமையவர்கள் நோக்கில் பொன்னிறமாயும், சிவந்த நெருப்புருவாகவும், நீலக்கடல் உருவாகவும் இம்மூன்றும் கலந்த ஒரு ஜோதி போலவும், கறுத்த மேகத்தைப்போலவும் உள்ளது எங்கள் நாரணன் உருவம்’ என்பது பாடலுக்கான எளிய பொருளாகும். இந்தப் பாடல் நெடுந்தாண்டக இலக்கணப்படி எட்டு சீர்கள் கொண்டு விளங்குகிறது.

ஒரு குறுநில மன்னனாய், வாள் கொண்டு பலரைக் கொன்றவனாய், மொழி, இலக்கியம் என்று கல்வி சார்ந்த தொடர்புகளே பெரிதும் இல்லாதவனாய் இருந்த திருமங்கைமன்னன், திருமங்கையாழ்வாராகி ஒரு பெரும் புலவனாக மாறி இலக்கணப் பிழையின்றி எழுதத் தொடங்கியது எம்பெருமான் தரிசனத்தாலும், அருட்கருணையாலுமே!

அப்படி எழுதிய நெடுந்தாண்டகத்தில் ஆறு பிரபந்தங்களை ஒரு திருக்கார்த்திகை நாளில் திருமங்கையார் பாடிட சொக்கிப் போனார் எம்பெருமான். ‘இதே போல் அநேகப் பாசுரங்களை நீ பாடுவாயாக’ என்று அருளவும் செய்தார். எம்பெருமான் இவ்வாறு அருளவும் திருமங்கை ஆழ்வாரிடம் பளிச்சென்று ஓர் எண்ணம்.

“எம்பெருமானே நானொரு விருப்பத்தைப் பகிரலாமா?” என்று கேட்டான்.

“தாராளமாகக் கேள்” என்றார் எம்பெருமானும்.

“என் தமிழ்ப் பாசுரமே தங்களை இவ்வளவு மயக்கினால் ‘சடகோபன்’ எனப்படும் திருக்குருகூர் ஆழ்வாரின் பாடல்கள் உங்களைப் பேரின்பத்தில் ஆழ்த்திவிடும். மாமதுரையில் சங்கப் புலவர்கள் முன்னிலையில், அப்பாசுர ஏடுகளைச் சங்கப்பலகையில் வைத்தபோது அது ஏற்றுக்கொண்டுவிட்ட வரலாற்றை உடையவர். அப்படிப்பட்ட உங்கள் அணுக்கத் தொண்டனின் பாசுரங்களையும் நீங்கள் கேட்டு இன்புறவேண்டும். இன்று மட்டுமல்ல, இனிவரும் நாள்களில் உங்கள் சந்நிதியில் தமிழ்மணம் பெரிதும் கமழவேண்டும். அது

காலகாலத்துக்கும் தொடரவேண்டும்" என்றும் பிரார்த்தித்தான் திருமங்கையான்.



எம்பெருமானும் புன்னகைத்தபடியே ``சடகோபன் உன்னைப் போலவே என் மனம்கவர்ந்த ஒருவனாவான். வைணவம் தழைக்கவென்றே பிறப்பிக்கப்பட்டவன். அப்படிப்பட்ட அவனுடைய பாசுரங்கள் ஊனைக் கிளறி உயிரில் பரவசமளித்திடும். அந்தப் பாசுரங்களைத் தாராளமாய் என் சந்நிதியில் பாடலாம். அப்படிப் பாடப்படுவதே எனக்கும் பெருமை" என்றார்.

அதைக்கேட்டுப் பெரிதும் மகிழ்ந்த திருமங்கையான், "எம்பெருமானே! வரும் மார்கழி மாதத்தில் சுக்ல பட்சத்தில் வரும் ஏகாதசித் திருநாளில் இருந்து சடகோபரின் திருவாய்மொழிப் பாசுரங்கள் பாடிட அருள்புரிய வேண்டும்" என்று கேட்கப் பெருமாள் அதற்கும் அருளியதோடு...

“என் திருச்சந்நிதியில் வேத மந்திர ஒலிக்கு நடுவில் பாடப்படும் இந்தத் தமிழ்ப் பாசுரங்கள் எந்தவிதத்திலும் வேத மந்திரங்களுக்குக் குறைவில்லாதவை” என்றும் அருளினார். இதன் மூலம் தன் தாய்மொழியான தமிழ்மொழிக்குத் திருமங்கையாழ்வார் தெய்விகச் சாந்நித்யம் கிடைக்கச் செய்தார் எனலாம்.

இவ்வாறு அழகிய மணவாளன் கருணையினால் அங்கீகாரம் கிடைத்த தருணத்தில், இன்னொரு அதிசயமும் நிகழ்ந்தது. திருமங்கையாழ்வாரின் பாசுரங்களைக் கேட்டுவியந்த திருச்சந்நிதி பட்டர் ஒருவர் எம்பெருமானுக்குத் திருச்சேவை செய்கையில், எம்பெருமானின் அசரீரிக் குரலுக்கு ஆட்பட்டார்.

“பட்டனே... இன்று யாம் மிக உவப்பாயுள் ளோம். காரணம், உனது பூஜைக்குரிய தொண்டு மட்டுமல்ல... திருமங்கையானின் பாசுர சேவிதம் என்னைக் கிறங்கச் செய்துவிட்டது. திருமங்கையானும் தன்னை மறந்து நல்ல இசை கலந்து உச்சஸ்தாயியில் பாசுரங்களைப் பாடி என் செவிகுளிரச் செய்தான். அதனால் அவனது மிடறு (தொண்டை) நொந்ததைக் கண்டேன்.

எனவே, அதற்கு மருந்தாக என் திருமேனி மேல் சாத்தியிருந்த தைலக்காப்பை எடுத்து திருமங்கையான் மிடறுமேல் நான் சொன்னதாகச் சொல்லி தடவிவிடுங்கள். அவனது நாவால் இன்னும் பல நூறு பாசுரங்களைப் பாட, அப்பாசுரங்களும் காலகாலத்திற்குமான ஒரு சிரஞ்ஜீவித்துவத்தை அடைய இருக்கின்றன” என்றார்.

அசரீரி கேட்ட பட்டர் ஆனந்தக் கண்ணீர் வடித்தார். பெருமானின் விருப்பப்படியே திருமேனிமேல் சாத்தியிருந்த மருந்து கலந்த தைலக்காப்பை ஒரு சிறுபொன் வட்டிலில் எடுத்துக்கொண்டு திருமங்கையாழ்வாரைத் தேடிச்சென்றார். திருமங்கையாழ்வாரும் பட்டர் தேடிவந்தவேளை ஏடுகளில் பாசுரங்களை எழுதிக் கொண்டிருந்தார். பட்டர் எம்பெருமான் கட்டளை என்று கூறி தைலக்காப்பை ஆழ்வாரின் தொண்டையில் பூசிவிடவும் உள்ளம் பூரித்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். அநேகமாய் இத்தருணத்தில் பிறந்த பாசுரமே...

*‘குலம் தரும் செல்வம் தந்திடும்*

*அடியார் படுதுயர் ஆயின எல்லாம்*

*நிலம் தரம் செய்யும் நீள் விசும் பருளும்*

*அருளோடு பெருநிலம் அளிக்கும்*

*வலம் தரும் மற்றும் தந்திடும்*

*பெற்றதாயினும் ஆயின செய்யும்*

*நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன்*

*நாராயணா என்னும் நாமம்.’*

என்னும் இப்பாசுரமாகும். திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இப்பாசுரம் மிக ஆழமானது, நுட்பமானது. இந்த உலகில் பிறந்துவிட்ட மனிதனுக்கு எதெல்லாம் தேவை என்பதை மிக அழகாய் பட்டியல் போடும் இந்தப் பாடல் ஒரு பெரும் சிந்தனையை ஏற்படுத்தும். அத்துடன், திருமங்கையாழ்வாரின் ஒரு நுட்பக் கருத்தும் ஒளிந்துள்ள பாசுரம் இது. அவனை வழிபட்டால் நாம் நல்ல குலத்தில் பிறப்போம்... குலத்தில் பிறப்பது அத்தனை பெரிய விஷயமா என்றால் ‘ஆம்’ என்கிற பதிலில்தான் நுட்பம் உள்ளது. நம் பிறப்பு நம் கர்மத்தின் பயன்களில் ஒன்று!

கொலை, கொள்ளை, மது, மாது என்று பேராசையுடன் வாழ்ந்த முன்னோர்களின் வம்சாவழியில் நாம் பிறக்க நேரிடும்போது, அவர்களின் பாவங்களெல்லாமும் நம் மேலும் இருக்கக் காணலாம். இந்த நிலையில் நல்ல இறையருளுக்குப் பாத்திரமாகி, கடைத்தேறுதல் மிகக் கடினம். அதுவே தானம், தவம், நற்கல்வி, பக்தி முதலான தன்மைகொண்ட குடிப்பிறப்பில் பிறக்க நேரிடும்போது, ஒருவரது வளர்ப்பே நெறிமிகுந்ததாக இருக்கும். இதனாலேயே நல்ல குலத்தில் பிறப்பது அவசியமாகிறது.

அதனால்தான் எடுத்த எடுப்பில் 'குலம் தரும்' என்று தொடங்கினார் திருமங்கையாழ்வார். தொடர்ந்து அவனருள் 'செல்வம் தரும்', துன்பங்கள் எந்த வடிவில் வந்தாலும் அதை போக்கும், 'நீள்விசும்பு' எனும் 'புகழ் தரும்', போதாததற்கு அருளோடு பெருநிலம் அளிக்கும். இதுபோக, வேண்டுவன எல்லாம் தரும் என்பவர் 'பெற்ற தாயினும் ஆயின செய்யும்' என்னும் வரிகளில் உலக உயிர்களுக்கெல்லாம் தாயன்பே பெரியது, கருணை மிகுந்தது. ஆனால், நாரணன் முன் அது சிறியது. அவன் அன்பும் கருணையும் தாயின் பாசத்தை விட பெரியது என்கிறார்.

இதற்கடுத்த வரியே நுட்பத்திற்கான வரி. 'நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன், அது நாராயணா என்னும் நாமம்' என்னும் இவ்வரிகளைக் கூர்ந்து நோக்கவேண்டும். 'நலம் தரும் - நான் கண்டுகொண்டேன் அவனே நாரணன் என்பவன்' என்று எழுதியிருக்கலாம். அப்படி எழுதியிருந்தால் அது பக்தர்களுக்குச் சற்று கடினமானது.

ஏன் என்றால் எல்லோரும் திருமங்கையார்போல் ஆகி அவன் அருளைப் பெற முடியாதே! அவன் அருள் எளிதாகக் கிடைக்கவேண்டும்; கிடைக்கவும் செய்யும். நீங்கள் சிரமமே பட வேண்டாம். அவன் யாரென்றுகூட உங்களுக்குத் தெரியத் தேவையில்லை. அவன் பெயரான 'நாராயணா' என்கிற பெயரைச் சொல்லுங்கள் போதும். ஆம்... உருக்கமாய் அவன் பெயரைச் சொன்னாலே போதும்... அவன் ஓடி வந்து நம்மை ஆட்கொள்வான் என்கிறார்.

தானேயோர் ஆழ்வாராக இருப்பினும் இவர் தொண்டரடிப் பொடியாழ்வாரை ஏந்திப் பிடித்ததுபோல், 'சடகோபன்' என்கிற நம்மாழ்வாரையும் பெரிதாக ஏந்திப் பிடித்தார். அதனால்தான் பெருமாளிடம் நம்மாழ்வாரின் திருவாய்மொழியை ஏகாதசி நாளில் திருச்சந்நிதியில் பாடிடும் வாய்ப்பைக் கேட்டுப் பெற்றார். இதுவே பின்னாளில் திருக்கார்த்திகையன்று நம்மாழ்வாருக்குத் திருமுகப்பட்டயம் அனுப்பும் ஒரு நிகழ்வாக வடிவம் பெற்றது.

இந்த நிகழ்வில் திருக்கார்த்திகையன்று அரையர் கானம் முடியவும், கோயில் ஸ்தானீகர் எம்பெருமானை நோக்கி வாசற்படி அருகே நின்றுகொண்டு, எம்பெருமான் காதில் விழும்படியாக "நாயிந்தே... ரகுநாதா..." என்று பெருமாளை விவரித்து அவர் என்ன சொல்ல வருகிறார் என்று கேட்கப் போக, சந்நிதி அர்ச்சகர், 'ஏதத்த்ரைலோக்ய நிர்மாண தாரண சம்ஹாரகாரணம், ஸ்ரீமத் ரங்கநாதஸ்ய சாசனம் சாஸ்வதம்யரம்...' என்று கூறுவார்.

அதாவது 'மூவுலகைப் படைப்பதற்கும் காப்பதற்கும் அழிப்பதற்கும் காரணமான ஸ்ரீரங்கநாதனின் நிலையான சிறந்ததோர் கட்டளை இது' என்பது இதன் பொருளாகும்.

இதைத் தொடர்ந்து எம்பெருமானின் மேனிமேல் சாத்திய சந்தனம், மலர்மாலை, இத்துடன் ஆடையும் சேர்த்து அரங்கப் பிரசாதமாய் நம்மாழ்வாருக்கு அளிக்கப்படும். இந்தப் பிரசாதம் திருவரங்கத்திலிருந்து, அப்போது ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்துவந்த 'நம்மாழ்வாருக்கு தழையிடுவோர்' எனும் திருப்பணி புரிபவர்களால் கொண்டு செல்லப்பட்டது.

இவை அவ்வளவையும் கணக்குப்பிள்ளை என்பவர் அன்றை நாள் கிழமை, நட்சத்திரமறிந்து எழுதி முடிப்பார். இதுவே 'திருமுகப்பட்டயம்!' இப்பட்டயத்தை வாதூல தேசிகர் என்பவர் பெற்றுக்கொண்டு ஆழ்வார் திருநகரியில் இருக்கும் நம்மாழ்வாராகிய சடகோபனுக்கு அளிக்க வேண்டி எடுத்துச்செல்வார்.

இடையில் பெருந்தூரம்!

ஆயினும் இந்நிகழ்வால் மானுடர்கள் நம்மாழ்வாரைப் பெரிதும் சிந்திக்கும் நிலை உருவாயிற்று. சடகோபனாகிய நம்மாழ்வாரும் எம்பெருமான் கருணையை எண்ணி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து நின்றார். இவ்வேளையில் நம்மாழ்வாரையும் நாம் திருமங்கையாழ்வார் மனக்கண்வழி அறிந்துகொள்வது அவசியம்!

**- தொடரும்...**

**பொய் சொல்லாப் பிள்ளையார்**

**த**ஞ்சாவூர் மாவட்டம், பூந்தோட்டத்துக்கு மேற்கே குடந்தை செல்லும் சாலையில் இருக்கிறது களஞ்சியூர். இங்கு அருள்புரியும் பிள்ளையாருக்கு `பொய் சொல்லாப் பிள்ளையார்' என்று பெயர்.



முற்காலத்தில், ஒரு வியாபாரி தன் மனைவியைக் கொன்றதாக வழக்கு ஒன்று மன்னனிடம் வந்தது. வழக்கை விசாரித்த மன்னன், அந்த வியாபாரிக்குத் தண்டனை விதித்தான். அன்று மன்னன் கனவில் தோன்றிய விநாயகர், `கொலை செய்தது வியாபாரி இல்லை' எனக் கூறி வியாபாரிக்குக் கிடைக்கவிருந்த தண்டனையைத் தடுத்து நிறுத்தினாராம். அதற்கு நன்றிக்கடனாக அந்த வியாபாரி விநாயகருக்கு ஆலயம் எழுப்பி 'பொய் சொல்லாப் பிள்ளையார்' என்று பெயர் வைத்து வழிபட்டார். வீண் பழி மற்றும் பொய்வழக்குகளால் பாதிக்கப்பட்டவர்கள் இங்கு வந்து பொய்சொல்லாப் பிள்ளையாரை வழிபட்டுச் செல்வதன் மூலம் விரைவில் தங்களின் துன்பங்களில் இருந்து விடுபடுவார்கள் என்பது நம்பிக்கை.

**தொகுப்பு: சி.வெற்றிவேல்**

10 Sep 2019

# ரங்க ராஜ்ஜியம் - 38



ரங்க ராஜ்ஜியம்

நம்மாழ்வார்! எவர் இப்பெயரைச் சொல்லினும் இந்த ஆழ்வார், அவரின் ஆழ்வாராகவும் ஆகிவிடக் காணலாம். இப்பெயரை எம்பெருமானே உவந்து இவருக்குச் சூட்டினார் என்பர்.

***என்திரு மகள்சேர் மார்பனே என்னும்***

***என்னுடையாவியே என்னும்***

***நின்திரு எயிற்றால் இடந்துநீ கொண்ட***

***நிலமகள் கேள்வனே என்னும்***

*அன்றுரு ஏழும் தழுவி நீ கொண்ட*

*ஆய்மகள் அன்பனே என்னும்*

*தென் திருவரங்கம் கோயில்கொண் டானே*

*தெளிகிலேன் முடிவிவள் தனக்கே...*

**ந**ம்மாழ்வார்! எவர் இப்பெயரைச் சொல்லினும் இந்த ஆழ்வார், அவரின் ஆழ்வாராகவும் ஆகிவிடக் காணலாம். இப்பெயரை எம்பெருமானே உவந்து இவருக்குச் சூட்டினார் என்பர்.

பன்னிரு ஆழ்வார் பெருமக்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் சிறப்பு. இவர் சிறப்பு, இவர் பிறந்த சில நாள்களிலேயே தெரிந்துவிட்டதுதான் ஆச்சர்யம். சுருக்கமாகவும் அதேநேரம் சற்று விரிவாகவும் பார்த்துவிடுவோமா...

ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி. பாண்டிய நாட்டுக்குட்பட்ட நெல்லைச் சீமையில் உள்ள திருக்குருகூர்தான் இவரின் ஜன்ம ஸ்தலம். இப்பகுதியைப் பாண்டிய நாட்டுக்குக் கட்டுப்பட்டு குறுநில மன்னனாய் இருந்து, ஆண்டு வந்தான் பொன்காரி என்பவன். இவனுக்கும் இவன் மங்கை உடைய நங்கைக்கும் திருவருள் பிரசாதம்போலப் பிறந்தவர்தான் நம்மாழ்வார்!

வேளாளர் குடி - வீரம் செறிந்த மரபு. ஆயினும் திருமாலை வழிபடும் வைணவ நெறியில் வந்தவனாகத் திகழ்ந்தான் பொன்காரி.

நெடுநாள்களுக்குப் பிள்ளைப் பேறில்லை. பிள்ளை பெற என்ன வழி என்று தவித்தவர்களுக்கு ஒரு வைணவப் பெரியார் வழிகாட்டினார். ``மாதம் தவறாது ஏகாதசி விரதமும், பசுவுக்கு அகத்திக்கீரையும் தந்து, பெருமாள் தீர்த்தத்தை முதல் உணவாய்க்கொண்டு பக்தி செய்தால் அவன் கருணை செய்வான்'' என்றார்.

அவனும் கருணை செய்தான்!

கருவுற்றாள் உடைய நங்கை... முன்னதாய் எம் பெருமான் உடைய நங்கையின் கனவில் தோன்றி, ‘நான் உன் வயிற்றில் வந்து பிறப்பேன்’ என்று தன் திருவடிகளை மட்டும் காட்டியிருந்தான். சிலிர்த்தாள் உடைய நங்கை. பின்னர் கருவுற்று ஒரு வைகாசி விசாகத்தன்று அழகிய ஆண்மகவை ஈன்றாள். அன்று பூரணமான பௌர்ணமி நாள்.



வைகாசி விசாகம் பெரும் சிறப்புகளையுடையது. அருளாளர் பலருக்குப் பிறப்பும் ஞானமும் இந்த நாளில்தான் ஏற்பட்டது. இவ்வளவு சிறப்பு வாய்ந்த நாளில்தான் நம்மாழ்வாரும் பிறந்தார். ‘இறைவனையே பெற்றெடுத்துவிட்டோம்’ என்று பாகவதத்து தேவகியின் மனநிலையில் இருந்தாள் உடைய நங்கை. தேவகிக்கு கிருஷ்ணன் பிறந்தான். இவளுக்கோ நம் ஆழ்வார் பிறந்தார்.

பிறந்தது ஆழ்வார் மட்டுமில்லை. பெரும் சோதனையும்தான். பிறந்த பிள்ளையிடம் அசைவேயில்லை. ஆனால், உற்றுப் பார்த்தது - உடம்பில் உயிரும் இருந்தது. குழந்தை என்றால், முதலில் அழுதாக வேண்டும். இல்லையேல் கைகால்களை அசைத்து உதைத்துக்கொள்ள வேண்டும். ஆனால், இந்தக் குழந்தை, கட்டைபோல் கிடந்தது. பசி எடுத்து அழவேண்டுமல்லவா?

ஊஹூம்!

குழந்தை தவழ்ந்து சந்நிதிக்குள் சென்று எம்பெருமானின் திருவுருவத் திருவடிகளை விரலால் தொட்டது. அந்த நொடி எம்பெருமான் மேல்

கிடந்த ஒரு மாலை அவிழ்ந்து கீழே இருந்த குழந்தையின் கழுத்தில் விழுந்தது!

உடைய நங்கை உடைந்த நங்கையானாள். யாருக்கும் காரணம் தெரியவில்லை. ஆனால், குழந்தை பளிச்சென்று பார்த்தது. முகத்தில் எழில் துலங்கியது. ஒரு பெரியவர் மட்டும் இது உடம்பின் தசா வாயுக்களில் ஒன்றான சடவாயுக் குறைபாட்டின் விளைவு. அந்த வாயுதான் குழந்தைகளை அழவைப்பது அசைய வைப்பது எல்லாம் என்றார். இதையொட்டியே 'சடகோபன்' என்றொரு பெயரும் இவருக்கு அமைந்தது.

உடைய நங்கை, எம்பெருமான் ஆலயத்துக்குச் சென்று கதறிக் கண்ணீர் வடித்தாள். `விரதம் இருந்து பெற்ற பிள்ளை. 'நானே வருவேன்' என்று கனவில் வந்து சொல்லித் தந்த பரிசு. அது இப்படியா இருக்க வேண்டும். இது தகுமா. இந்தப் பிள்ளை உணவின்றி இவ்வுலகில் தங்குமா...' என்று பலவாறு கேட்டாள். அப்போது குழந்தை சந்நிதி வாசலில் கிடத்தப்பட்டிருந்தான்.

என்ன ஓர் ஆச்சர்யம். உடைய நங்கையின் கண்ணீரைத் துடைப்பதைப்போல் அப்பிள்ளையிடம் உடனேயே ஓர் அசைவு.

13 நாள்கள்தான் ஆகிறது பிறந்து. ஆனால், புரண்டு விழுந்து தவழவும் செய்தது. உடைய நங்கையும் பொன்காரியும் பிரமித்தனர். குழந்தை தவழ்ந்து சந்நிதிக்குள் சென்று எம்பெருமானின் திருவுருவத் திருவடிகளை விரலால் தொட்டது. அந்த நொடி எம்பெருமான் மேல் கிடந்த ஒரு மாலை அவிழ்ந்து கீழே இருந்த குழந்தையின் கழுத்தில் விழுந்தது.

தற்செயலாய் நிகழ்ந்த ஒரு பொற்செயல்!

கோயில்பட்டர் அருகில் சென்று குழந்தையைத் தூக்க முயன்றார். மின்னல் வெட்டியது போல் உணர்ந்து திரும்பினார். ஆனால், குழந்தையோ கழுத்தில் கிடந்த மாலையோடு தவழ்ந்து கோயிலுக்கு வெளியே நெடுங்காலமாயிருக்கும் புளிய மரத்தின் பொந்தினை நோக்கி

வந்தது. தரையோடு உள்ள அப்பொந்துக்குள் போய் தன்னை அடக்கிக்கொண்டது!

அந்த மரத்தின் பின்புலத்தில் புராணச் சம்பவம் ஒன்று உண்டு. வனவாசம் முடிந்து ராமர் அயோத்தி திரும்பி, நாடாண்ட வேளை. ஒருநாள் தனிமையில் ஏகாந்தத்தில் இருக்க விரும்பி, லட்சுமணனைக் காவலுக்கு நிறுத்திவிட்டுச் சென்று படுத்துக்கொண்டார் ராமர்.

‘யார் வந்தாலும் இப்போது சந்திக்க இயலாதென்று கூறு’ என்று தன் காவலருக்குக் கட்டளையும் இட்டிருந்தார். இப்படிச் சொன்னாலே வில்லங்கம்தான்.



துர்வாசமுனி என்னும் கோபக்கார முனிவர் அப்போது பார்த்து ராமரைப் பார்க்க வந்திருந்தார். காவலில் இருந்த லட்சுமணன் அவரை உள்ளே விடமறுத்து, பின் அவர் பெரும் கோபக்காரர் என்று தெரிந்துகொண்டு விட்டுவிட்டான். துர்வாசரும் ராமரைச் சந்தித்துவிட்டுச் சென்ற பிறகு ராமர், லட்சுமணனை அழைத்து ‘நான் என்ன சொன்னேன் - நீ என்ன செய்தாய்?’ என்றும் கேட்டார். லட்சுமணன், `அவரின் பெரும் கோபத்துக்கு பயந்தே நான் அவரை உள்ளே விட்டேன்' என்றான்.

ராமரோ வருந்தியதோடு, “என்னால் ஆழ்ந்த யோக நித்திரையே கொள்ள முடியவில்லை. எனக்கும் சற்று ஆத்மசக்தி தேவைப்படுகிறது.

இப்பிறப்பில் அது சாத்தியப்படாத ஒரு வாழ்வாக என் வாழ்வு அமைந்துவிட்டது. வரும் பிறவியிலா வது அது சாத்தியப்படட்டும். நான் ஒரு யோகியாக திகழ, நீ அப்போது எனக்குக் குறிப்பாய்... என் யோக நித்திரைக்குத் துணை செய்யும் புளிய மரமாய் பிறப்பெடுப்பாய்" என்று கூறினாராம்.

அதன்படி ராமர் திருவடி அம்சமாக நம்மாழ்வாராய் பிறப்பெடுக்கும் முன்பே லட்சுமணனின் அம்சம் புளியமரமாய் வந்து முளைத்துவிட்டது என்பர். இந்தப் புளிய மரமும் வழக்கமான புளிய மரமில்லை. பூக்காத, காய்க்காத ஓர் அதிசய மரம். பொதுவாக புளிப்புச் சுவை பற்றையும் பொறாமையையும் வளர்ப்பது. புளியமரக் காற்றும் நோய் தருவது. இரவில் புளிய மரத்தடியில் எவரும் தங்கமாட்டார்கள். வாழ்வு அலுக்கும்போது, 'எல்லாமே புளித்துவிட்டது' என்போம். புளியும் புளிப்பும் மனித உணர்வோடு பெரும் தொடர்புடையவை.

அப்படிப்பட்ட அந்தப் புளியமரத்தை நோக்கிச் சென்று அதன் பொந்தில் நுழைந்து சுருண்டு படுத்துவிட்டது, பொன்காரி பெற்றெடுத்த சடகோபன் என்கிற வரசித்தியுள்ள விசித்திரக் குழந்தை!

அந்த இடத்தைவிட்டுப் பதினாறு வருடங்கள் நகரவில்லை. தினம்தோறும் எம்பெருமானின் பூஜையொலி கேட்பதும், தியானமூர்த்தியாக அமர்ந்திருப்பதுமாகவே காலங்கள் சென்றன.

தொடக்கத்தில் உடைய நங்கை, 'என்னடா இது' என்று குழம்பி மனத்துயருற்றபோதிலும், 'இது பெருமானின் விருப்பம்' என்று பின் தேற்றிக்கொண்டாள். எல்லாப் பிள்ளைகளையும் போல ஓடி விளையாடி இனிப்பும் புளிப்பும் தேடி உண்டு, குறும்புகள் பல புரியும் குறும்பனாய் இல்லாமல் ஒரு பாலயோகிபோல் விளங்கிய சடகோபன் , 'ஒரு மகத்தான ஞானி' என்பதை உணர்த்திடும் ஒரு சம்பவமும் நடந்தது.

அதற்குமுன் நம்மாழ்வாரோடு பெரிதும் தொடர்புடைய, அவரின் சீடரும் ஆழ்வார் பெருமக்களில் ஒருவருமான மதுரகவி என்பவரைப் பற்றியும் இங்கே சிந்தித்தாக வேண்டும்.

இவர் வடக்கில் அயோத்தியைச் சேர்ந்தவராகச் சில குறிப்புகள் சொல்கின்றன. எல்லோரையும் போல் திருமணம், பின் குழந்தை என்று இல்வாழ்வு வாழ்ந்திடப் பிடிக்காமல், ஆன்மிக வாழ்வில் நாட்டம்கொண்டு தகுந்த ஒரு குருவைத் தேடி அலைந்தபடியிருந்தார் மதுரகவி.

குரு என்பவர் விஷயத்தில் ஓர் அசைக்கமுடியாத கருத்து ஒன்று உண்டு. ‘ஒருவன் நல்ல குருவுக்காகத் தனக்குள் தவித்தால் குருவே அவனைத் தேடி வருவார்’ என்பதுதான் அது. மதுரகவியும் அப்படித் தவித்தவரே - தென்புலத்தில் திருக்குருகூரை ஒட்டிய திருக்கோளூரில் அவதரித்தவர்; ராம தரிசனம் மற்றும் கங்கை ஸ்நானம் புரிய வடக்கே சென்றவர். அங்கே தினமும் சரயு நதியில் நீராடி ராமரை தரிசித்தவரை, அந்த ராமரும் கைவிடவில்லை. ‘நானே சடகோபனாய் திருக்குருகூரில் அவதரித்து யோக பாவனையில் உள்ளேன்' என்று ஒளிவடிவில் காட்டியருளினார்.

மதுரகவியும் திருக்குருகூர் நோக்கிவரத் தொடங்கினார். வானில் ஒளிப்புனல் வழிகாட்டிக் கொண்டே வந்து புளிய மரத்தில் முடிந்து நின்றது. மதுரகவியாரும் பாலயோகியான சடகோபனைக் கண்டு பல நிமிடங்கள் பேசுவதறியாது நின்றார்.

அவர் மனத்தில் ஒரு பேரமைதி.

‘இவரே நான் தேடிய குரு’ என்றும் ஓர் உள்குரல்

எந்த ஒரு நடமாட்டமுமின்றி, பெரிதாய் உணவின்றி பஞ்சபூதங்களை வெற்றிகொண்டு காற்றை மட்டும் உட்கொண்டு ஒரு பிள்ளை எப்படி வாழ முடியும். அது இறையம்சம் கொண்டிருந்தாலே சாத்தியம் அல்லவா!

மதுரகவி பெரிதும் நெகிழ்ந்து இவ்வுண்மையை உணர்ந்தார். தன் கைவசம் பட்டர் அளித்திருந்த திருத்துழாய் இருந்தது. அதை பாலயோகியான சடகோபன்மேல் தூவி கவனத்தை ஈர்க்க முனைந்தார். சடகோபனும் கண் திறந்து அவரை உற்று நோக்கினார்.

‘வந்துவிட்டாயா - உனக்காகத் தான் இதுநாள் வரைக் காத்திருந்தேன்’ என்பதுபோல் பார்த்தார்.

மதுரகவி பேச்சைத் தொடங்கினார்.

“அடியேன் திருக்கோளூர்காரன்... அயோத்தி வரை பயணித்து அலையோ அலை என்று குருவின் பொருட்டு அலைந்தவன். அந்த ராமரோ எனக்குக் குருவாய் உங்களைக் கை காட்டிவிட்டான். வந்துவிட்டேன். இனம்புரியாத இன்பமும் அமைதியும் வாய்த்ததுபோல் உணர்கிறேன். என்னைச் சீடனாய் ஏற்று அருள வேண்டும்” என்றார். எல்லோருக்கும் வியப்பு.

‘அசையாத, பேசாத, எதையும் செய்திராத, புரியாத ஒரு புதிர்தான் சடகோபன். இவன் குருவா?’

எல்லோருக்குள்ளும் இதுவே கேள்வி. ஆனால் மதுரகவியார் இப்படியான கேள்விகளில் சிக்கவில்லை. அவருக்குப் பலப்பல கேள்விகள்.

‘எதற்கு இந்த மானுடப் பிறப்பு. ஆணாய், பெண்ணாய், இல்லை ஏனைய உயிராய்ப் பிறக்க எது காரணம். பிறந்ததிலிருந்தே நான் இருப்பது தெரிகிறது. அதற்கு முன்பு நான் எங்கிருந்தேன்.ஏன் மனமானது அலைபாய்கிறது. இந்த உடம்பில் உயிர் என்கிற ஒன்று எங்கு உள்ளது. உயிர் உடம்பைவிட்டுப் பிரிவதைப் பார்க்க முடிகிறது. உடல் பிணமாகிறது - உயிர் என்னாகிறது...

இப்படி விசாரமாய் ஆயிரமாயிரம் கேள்விகள்... அனைத்தையும் தனக்குள் ஒரு மூலையில் வைத்துக் கொண்டு ஒரு கேள்வியை மட்டும் நம்மாழ்வாரைப் பார்த்து அதாவது சடகோபனைப் பார்த்துக் கேட்கலானார் மதுரகவி.

**- தொடரும்...**

**அழகன் என் தலைவன்!**

**நா**கப்பட்டினம் சௌந்தர்ராஜப் பெருமாளும் அழகு, அவர் குடியிருக்கும் கோயிலும் அழகு.

ஜகுலு நாயகர் எனும் பக்தரால் இங்கே அமைக்கப்பட்ட ராஜகோபுரம் கலங்கரை விளக்கமாகவும் திகழ்ந்ததாம். துருவன், ஆதிசேஷன், பூமிப்பிராட்டி, மார்க்கண்டேய மகரிஷி முதலானோர் வழிபட்ட தலம். திருமங்கையாழ்வார், இங்கே அருளும் பெருமாளைத் தலைவனாகவும், தம்மைக் காதலியாகவும், தன் மனைவி குமுத வல்லியைத் தோழியாகவும் உருவகப்படுத்திப் பாசுரங்கள் பாடியுள்ளார்.



*பொன் இவர் மேனி மரகதத்தின்*

*பொங்கு இளஞ்சோதி அகலத்து ஆரம்*

*மின் இவர் வாயில் நல்வேதம் ஓதும்*

*வேதியர் வானவர் ஆவர் தோழீ*

*என்னையும் நோக்கி எனல்சூலும் நோக்கி*

*எந்து இளங் கொங்கையும் நோக்குகின்றார்*

*அன்னை என் நோக்கும் என்று அஞ்சுகின்றேன்*

*அச்சோ ஒருவர் அழகியவா!*

கருத்து: என் ஆருயிர்த் தோழியே, இந்தத் திருநாகையில் எழுந்தருளியுள்ள என் தலைவனின் திருமேனி தங்கமயமாக அல்லவா ஜொலிக்கிறது. அவரது மார்பைப் பார். மரகத மணி மாதிரி திகழ்கிறது. மார்பில் திகழும் ஆரம், மின்னல் போல் கண்கூசச் செய்கிறது. கண்களை இமைத்துப் பார்க்கிறேன்... யார் இவர்? காம வேதியரா, தேவரா, இவரை ஆலிங்கனம் செய்து வணங்க வேண்டும் போல் உள்ளது. இவரோ ஏகபத்தினி விரதன். எனவே, அருகிலிருக்கும் ஜகன் மாதா என்னைக் கோபிப்பாளோ என அஞ்சுகிறேன். இப்படியோர் அழகனா!

**- வி.வேணு, கும்பகோணம்**

24 Sep 2019

# ரங்க ராஜ்ஜியம் - 39



ரங்க ராஜ்ஜியம்

ஆயிரம் கேள்விகள் மனத்தில் எழுந்தாலும் அவை அனைத்தையும் தனக்குள் ஒரு மூலையில் வைத்துக்கொண்டு, ஒரு கேள்வியை மட்டும் நம்மாழ்வாரிடம் கேட்டார் மதுரகவி.

‘*கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்*

*பண்ணிய பெருமாயன், என்னப்பனில்*

*நண்ணித் தென் குருகூர் நம்பி யென்றக்கால்*

*அண்ணிக்கும் அமுதூறுமென் நாவுக்கே!*’

- மதுரகவியாழ்வார்.

**ஆ**யிரம் கேள்விகள் மனத்தில் எழுந்தாலும் அவை அனைத்தையும் தனக்குள் ஒரு மூலையில் வைத்துக்கொண்டு, ஒரு கேள்வியை மட்டும் நம்மாழ்வாரிடம் கேட்டார் மதுரகவி.

“ஒளி வடிவானவரே! ஒரே ஒரு கேள்விதான். அதற்கு எனக்கு விடை தெரிந்தால் போதும்.

கங்கைக்கரையில் பல ஞானியர் களிடமும், புலவர்களிடமும், சாஸ்திர வல்லுநர்களிடமும் கேட்டேன். எவரும் நிறைவாகப் பதில் கூறவில்லை. தாங்கள் கூறி என்னைத் தெளிவடையச் செய்ய வேண்டும்” என்றவர் அந்தக் கேள்வியைக் கேட்டார்...

“செத்ததன் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?”

துளியும் தாமதமின்றி தயக்கமின்றி பதில் வந்தது, யோகி சடகோபனிடமிருந்து...

“அத்தைத் தின்று அங்கே கிடக்கும்

அத்தைத் தின்று அங்கே கிடக்கும்

அத்தைத் தின்று அங்கே கிடக்கும்”

- என்று பிரமாணத்துக்காக உள்ள மூன்று முறையைக்கொண்டு மூன்று முறை கூறினார்.

மதுரகவியாருக்குப் பொறி தட்டிற்று. சிலிர்த்துப் போனது உடல். எவ்வளவு எளிய... அதேநேரம் சரியான விடை. அப்படியே கண்ணீர் பெருக, ‘குருவே...’ என்றபடி சாஷ்டாங்கமாக விழுந்தார்.

சடகோபன் பேசிவிட்ட விஷயம், ஊர் எங்கும் பரவிற்று. பொன்காரியும் உடையநங்கையும் ஓடிவந்தனர்.

“பிள்ளாய் பேசிவிட்டாயா? இந்த நாளுக்கே நாங்கள் காத்திருந்தோம். எங்களைத் தெரிகிறதா...

நான் உன் தாய்; இவர் உன் தந்தை” என்றாள் உடையநங்கை. சிரித்த சடகோபன் எழுந்து நின்று, திருச்சந்நிதியை நோக்கிக் கை காட்டி ‘நம் அனைவருக்கும் தாயும் தந்தையும் அவன் மட்டுமே...’ என்றார்.

இந்தப் பதிலிலேயே நம்மாழ்வார் பிறந்து விட்டார். அவருக்கான யோக வாழ்வும் ஒரு முடிவுக்கு வந்து, திருக்குறுகூரை விடுத்து திருமாலின் திருத்தலங்களுக்குச் சென்று பக்தியோடு பாடத் தொடங்கிவிட்டார். அனைத்தும் சாகாவரம் பெற்ற பாடல்கள்!

இந்தப் பாடல்களைப் படி எடுப்பதுதான் மதுரகவியாழ்வாரின் வேலை.

அப்படி அவர் படி எடுத்த பாடல்களின் எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா? 1,296.

இதில் திருவிருத்தம் என்னும் கட்டமைப்பில் பாடியது 100 பாடல்கள்; திருவாசிரியம் என்னும் கட்டமைப்பில் பாடியது 7; பெரிய திருவந்தாதி - 87; திருவாய்மொழி - 1,102. ஆக மொத்தம் 1,296.

அந்த நாளில் சங்க புலவர்களின் ஆளுமை மற்றும் உயர்ந்த நெறிபாடுகள் காரணமாக மொழியறிவும் சரி, அதன் புலமையும் சரி மிகவும் உயரத்தில் இருந்தன. பாடல்களைத் தாங்கி நிற்கும் பனை ஏடுகளையும் அதைத் தரும் பனை மரத்தையும் ஒரு புலவன் தெய்வமாகவே கருதினான். அதன் நிழலைக் காலால் மிதிப்பது கூட பாவம் என்னுமளவுக்கு பனையின்மீது புலவர்களுக்குப் பக்தியும் ஈடுபாடும் இருந்தன.

ஏடுகளும் எழுத்தாணிகளும் கண்களில் ஒற்றிக்கொள்ளப்பட்ட பிறகே பயன்படுத்தப் பட்டன. அப்படி, அவற்றைப் பயன்படுத்தி எழுதுகின்ற எழுத்தையெல்லாம் சான்றோர்கள் ஏற்றுக்கொண்டுவிடவில்லை.



எழுதப்படும் பாடல்களில் இலக்கணமும் பொருளும் இயைந்து காணப்பட்டால்தான் அதை ஏற்றனர். அந்த வரிசையில், மாறன் சடகோபன் என்னும் நம்மாழ்வாரின் நெஞ்சில் உதித்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கும் நான்கு வேதங்களாகவே கருதப்பட்டன.

வேத வடிவான நாரணன், மாறன் சடகோபனாய் மானுட அவதாரம் எடுத்து வந்து வேதம் நான்கை யும் தமிழ்ப்படுத்த விரும்பினாற்போல், இந்த நால்வகைக் கட்டமைப்பில் பாடல்களைப் பாடியதாக வைணவச் சான்றோர்கள் கூறுவார்கள். அதை மறுப்பதற்கில்லை.

அதனாலேயே பின்னாளில் இந்தப் பாடல் களைத் திராவிட வேதம் என்றும் பரிந்துரைத்தனர். குறிப்பாக, திருவாய்மொழி எனும் கட்டமைப்பில் பாடப்பட்ட 1,102 பாடல்களில் ஒன்று, பானை சோற்றுப் பதம் போல் வியக்கவைக்கிறது.

நம்மை வியக்கவைத்தால் போதுமா?! சில பொய்கள்கூட மெய்போல் தோன்றி நமக்கு வியப்பேற்படுத்தும் ஆபத்து கவிதைகளில் உண்டு. அதனாலேயே கவிதைக்குப் பொய்யை அழகுடை யதாக ஆக்கி, கவிதைக்குப் பொய்யழகு என்ற தகுதிப்பாட்டையே அதற்கு அளித்திருந்தனர்.

ஆக, அந்த நாளில் ஒரு பாடலின் சத்ய ஒளியை தெய்வத்தன்மையோடு பரிசோதிக்கும் வழக்கம் இருந்தது. அதில் ஒரு விதம்தான், சங்கம் வளர்த்த மாமதுரையில் - பொற்றாமரைக் குளத்துச் சங்கப் பலகையில் எழுதியதை வைப்பது என்பது.

சங்கப்பலகை ஒரு பாடலை ஏற்றுக்கொண்டு விட்டால், அது இறையனார் ஒப்புதல் பெற்றது என்பது பொருள். அதற்கு மேல் ஒரு விமர்சனமோ சிபாரிசோ தேவையில்லை. அந்த வகையில் மாறன் சடகோபனின் திருவாய்மொழிப் பாடல்களில் ஒரு பாசுரத்தை மட்டும் பலகையில் வைத்திட, அப்பாடலைச் சங்கப்பலகை ஏற்றது.

*`கண்ணன் கழலினை நண்ணும் மனமுடையீர்*

*எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே!'*

- என்பதே அப்பாசுரம்! அதாவது, நாமங்களில் நாராயண நாமமே உயர்ந்தது. சாலச்சிறந்தது, அழிவற்றது, சாசுவதமானது, முக்தி தரவல்லது என்று அதற்கு எல்லா பொருளையும் கூறலாம்.

இதைச் சங்கப்பலகையும் அப்படியே ஏற்றது. நம்மாழ்வாரின் புகழும் பெருமையும் திக்கெட் டும் பரவியது. அவரை குருவாககொண்ட மதுரகவி, தன் பங்குக்கென்று பெரிதாய் பாசுரங் களைப் பாடவில்லை. தன் பாடல்கள் குருவின் பாடல்களோடு ஒப்புநோக்கப்பட்டு, யாராவது ஒருவர் தன் பாடலை புகழ்ந்தாலும், அது தன் குரு பக்திக்கு இழுக்கு என்று மதுரகவியார் கருதியதே காரணம். ஆயினும், 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' எனத் தொடங்கும் பாசுரங்களோடு 11 பாசுரங்களை அவர் பாடியருளியுள்ளார். அவற்றில் தன் குருவான நம்மாழ்வாரைப் பெரிதும் போற்றி வியக்கிறார்.



நம்மாழ்வாரும் இவரும் திருவரங்கம் வந்த சான்று கோயிலொழுகுவில் காணக்கிடைக்கிறது. ஒரு மார்கழி மாதத்து சுக்லபட்ச தசமியில், மாறன் சடகோபனும் மதுரகவியாழ்வாரும் ஸ்ரீரங்கம் வந்தனர்.
அவ்விருவரையும் திருமங்கையாழ்வார் எதிர்கொண்டு ஆழ்வாரையும் சேவித்து, பின் திருச்சந்நிதிக்கு அவர்களோடு சேர்ந்து சென்று...
ஒன்றுக்கு மூன்று ஆழ்வார்கள் இந்தத் தசமி நாளில் திருவரங்கனை தரிசித்து மெய்சிலிர்த்தனர்.

அந்தத் தருணத்தில்தான் பெரியபெருமாளும் மாறன் சடகோபனைப் பற்றி ‘நம்மாழ்வார்’ என்கிற திருநாமம் சாற்றியதாகக் கோயிலொழுகுவில் காணப்படுகிறது.

அதன்பின், திருக்குறளப்பன் சந்நிதியில் நம்மாழ்வாரைத் தங்கச்செய்து, மறுநாள் காலை அத்யயன உற்சவம் ஆரம்பித்து, இரவு `அழகிய மணவாளன்' மண்டபத்தில் மதுரகவிகளுடன் நம்மாழ்வாரும் அர்ச்சை வடிவில் எழுந்தருளியிருக்கும் நிலையில், பெரிய பெருமாள் 'அருளப்பாடு திருவாய் மொழி விண்ணப்பம் செய்வார்' என்று திருவாய் மலர்ந்தார்.

அதன்பின் மதுரகவியாழ்வார் திருவாய் மொழியைத் தொடங்கி தேவகானத்துடன் அபிநயத்துடன் சேவித்து, பின்னர் பத்தாம் திருநாளில் வேதங்கள் சொல்லி முடித்தார். இதுவே மார்கழி மாதங்களில் நம்மாழ்வார் காலத்துக்குப் பிறகும் தொடர்ந்தது. நம்மாழ்வாரின் இடத்தில் அவரின் விக்கிரகம் இருத்தப்பட்டு, வழக்கமான நடைமுறைகள் அரங்கேறின. ஒவ்வொரு வருடமும் நம்மாழ்வார் விக்கிரகம், ஆழ்வார் திருநகரியிலிருந்து திருவரங்கத்துக்கு எழுந்தருளும். பிறகே ராப்பத்து உற்சவம் தொடங்கும்.

பிற்காலத்தில், இயற்கை உத்பாதம், கள்வர் வழிப்பறி, மிலேச்சர் ஆதிக்கம் போன்றவற்றால் இந்த நடைமுறை நின்றுபோனது. அதனால், எம்பெருமானார் கருட மண்டபத்தில் தென்மேற்குப் பகுதியில் நம்மாழ்வாருடைய அர்ச்சா ரூபத்தைப் பிரதிஷ்டை செய்து உற்சவம் தொடர்ந்தது.

**அ**ரங்கனின் ராஜ்ஜியத்தில் பிற்காலச் சோழர் பரம்பரை கி.பி 1070-ல் தொடங்குகிறது. முதலாம் குலோத்துங்கச் சோழன், அவனைத் தொடர்ந்து விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் ராஜராஜன், இரண்டாம் ராஜாதி ராஜன், மூன்றாம் குலோத்துங்கன் என்று கி.பி 1218 வரை தொடர்ந்தது சோழர் பரம்பரை.

இதில் இரண்டாம் குலோத்துங்கன் காலம் வைணவத்துக்கே சோதனையான காலம். தில்லை திருச்சித்திரக்கூடத்தில் எழுந்தருளியிருந்த கோவிந்தராஜப்பெருமாள் கடலில் எறியப்பட்டார். பின், இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் திருச்சித்திரக்கூடத்து

கோவிந்தராஜர் திருக்கோயில் மதில்கள் இடிக்கப்பட்டு, சிதம்பர ஆலயம் விரிவுபடுத்தப்பட்டது.

இரண்டாம் குலோத்துங்கன் தன் சைவப் பற்றைப் பறைசாற்ற, வைணவத்தை இழிவு செய்வது என்பதை ஒருவழியாக வைத்திருந்தான். எம்பெருமானும் போற்றுதலுக்கும் தூற்றுதலுக்கும் நடுவில் நிர்குணனாக விளங்கி, குலோத்துங்கனின் அறியாமையை சரித்தான்.

காலங்கள் உருண்டன. கி.பி 1146 முதல் 1173 வரை ஆட்சி செய்த இரண்டாம் ராஜராஜன், குலோத்துங்கன்போல் மூர்க்கனாக இல்லை. அவன், திருவரங்கத்தில் வாழ்ந்த ஸ்ரீபராசர பட்டருடைய காலத்தில், திருவரங்க ஆலயத்துக்கு யானை ஒன்றை பெரிய பெருமாள் கைங்கர்யத்துக்காக தானமாக அளித்தான்.

பின்னர் ஹொய்சளர்களில் பலர் திருவரங் கத்தைத் தேடிவந்து பக்தி செலுத்தினர். இவர்களில் ஒருவன்தான் பிரதாப சக்கரவர்த்தி. இவன் திருவரங்கம் வந்து எம்பெருமானை தரிசித்து இரவு தங்கியபோது, கடும் வயிற்றுவலிக்கு ஆட்பட்டான். வைத்தியர்கள் எவ்வளவோ முயன்றும் உபாதை தீரவில்லை. பிரதாப சக்கரவர்த்திக்கு, காவிரி ஆற்றில் குதித்து உயிரை விட்டுவிடத் தோன்றியது. முன்னதாக அரங்க தரிசனம் செய்யச் சென்றவன் சந்நிதியில் கண்ணீர் சிந்தினான். அப்போது அசரீரியாக ஒலித்த ஒரு குரல், தன்வந்தரி சந்நிதிக்குச் சென்று துளசி தீர்த்தம் சாப்பிடச் சொன்னது.

திருவரங்கத்து உபசந்நிதிகளில் ஒன்று தன்வந்தரி சந்நிதி. பாற்கடல் கடையப்பட்ட நிகழ்வில், மகாலட்சுமியோடுகூடி, அமிர்த பாத்திரத்துடன் வெளிப்பட்ட விஷ்ணு அம்சமே தன்வந்தரியாவார். நோய்நொடிகளுக்கு மந்திர பூர்வமாகவும், தாவர மூலிகைகள் மூலமாகவும் மருந்தை அருளும் ஒருவராக தன்வந்தரி திகழ்ந்தார்.

அப்படிப்பட்டவரின் சந்நிதியை அடைந்தான் பிரதாப சக்கரவர்த்தி. அங்கே, பச்சைக் கற்பூரம், ஏலம், துளசி ஆகியவற்றோடு சிறிது மஞ்சளும் சேர்த்த தீர்த்தம் மருந்தாகவும் விநியோகிக்கப்பட்டது. அதை

அருந்திய நிலையில், பிரதாப சக்கரவர்த்திக்கு பூரண குணம் ஏற்பட்டது. தான் பெற்ற இன்பத்தை எல்லோரும் பெற விரும்பிய இம்மன்னன் அங்கேயே ஒரு மருத்துவச்சாலையை நிர்மாணித்து, அதன் நிர்வாகத்தை உத்தம நம்பி என்பார் வசம் ஒப்படைத்தான். இவர் வம்சத்தில் வந்தவரே கருடவாகன பண்டிதர்!

இவரே `திவ்யசூரி சரிதம்' எனும் பெயரில், ஆழ்வார்கள் ஆச்சார்யர்கள் வைபவத்தினை எடுத்துரைத்தவர். இவர் வேறு; கருட வாகன பண்டிதர் வேறு என்கிற ஒரு கருத்தும் உள்ளது. இதற்கான கல்வெட்டினைச் சந்திர புஷ்கரிணி பகுதியிலிருந்து ஐந்து குழி மூன்று வாசலுக்குச் செல்லும் நடைபாதையில் இன்றும் காணலாம்.

இந்த `ஐந்து குழி மூன்று வாசல்' திருவரங்கம் ஆலயத்தின் பிரதான அடையாளங்களில் ஒன்று. நடைபாதையில் கற்பூக்கோலம் ஒன்றின் நடுவில் காணப்படும் இந்த ஐந்து குழிகளில்... அதை தரிசிப்பவர், தங்கள் விரல்களை வைத்துப் பார்த்து இன்புறுவது என்பது அன்றாட நிகழ்வாகும்.

இப்படியான அனுபவங்கள், ஆலய தரிசனத் தையும் மனத்தில் அழியாதபடி நிலைநிறுத்தி விடுகிறது. எத்தனை ஆண்டுகளும் ஆனாலும் இந்த ஐந்து குழி மூன்று வாசலை ஒருவர் மனம் மறந்துவிடாது.

எதற்காக இந்த ஐந்து குழிகள்?

இது பற்றி பலவித கருத்துகள் கூறப்படுகின்றன.சுருக்கமாகக் கூறுவதானால், இது மோட்சத்தை அடைவதற்கான தத்துவத்தை உடைய ஒன்று என்பர். மூன்று வாசல்கள் சித், அசித், ஈஸ்வரன் அல்லது பரம்பொருள் என்னும் தத்துவங்களைக் குறிப்பதாம். ஐந்து குழிகள் அர்த்த பஞ்சக ஞானத்தைக் குறிப்பதாம்.

இந்தக் குழிகளை ஒட்டியுள்ள பாதக் கல்வெட்டு மேல் நின்று குனிந்து, வலக்கையின் ஐந்து விரல்களைக் குழிக்குள் பதித்து, அப்படியே கோபுரத்தின் வழியாக எட்டிப்பார்த்தால், பரமபத வாசல் தெரியும். இப்படிச் செய்கையில் முழங்கால் மடங்கக் கூடாது என்பது முக்கியம்.

இவ்வாறு பார்ப்பவர்களுக்கு மோட்சம் எளிதில் ஸித்தியாகும் என்பர்!-
**வளரும்...**

**வெற்றியின் ரகசியம்...**

**ஆ**ஞ்சநேயரின் பரம பக்தர் ஒருவருக்கு ஆஞ்சநேயரோடு சொக்கட்டான் விளையாட ஆசை! எனவே, மனமுருகி ஆஞ்சநேயரைப் பிரார்த்தித்தார். அவர் முன் தோன்றிய ஆஞ்ச நேயரும் பக்தரது விருப்பத்தை பூர்த்தி செய்ய ஒப்புக் கொண்டார். ஆனாலும் ஒரு நிபந்தனை விதித்தார். "நான் விளையாட்டில் விட்டுக் கொடுக்க மாட்டேன். எனவே, தோற்றால் நீ வருத்தப்படக் கூடாது!" என்றார். பக்தரும் சம்மதித்தார்.



இருவரும் விளையாட ஆரம்பித்தனர். பக்தர், ஒவ்வொரு முறையும் 'ஜெய் அனுமான்' என்றபடியே காய்களை உருட்டினார். ஆஞ்ச நேயர், 'ஜெய்ராம்' என்றபடி காய்களை உருட்டினார்.

ஒவ்வொரு முறையும் பக்தனே வெற்றி பெற்றான். 'இதனால் மனம் வருந்திய ஆஞ்ச நேயர், 'ஸ்வாமி, தங்கள் நாமத்தை உச்சரித்தும் எனக்கு தோல்வியா?!' என்று ராமரிடம் பிரார்த்தித்தார். அவர் முன் தோன்றிய ராமன், 'ஆஞ்சநேயா... நீ, என் பக்தன் ஆதலால், உன்னிடம் என் சக்தி இணைந்துள்ளது. அவனோ உனது பக்தன். ஆதலால், அவனது சக்தியுடன் நம் இருவரது சக்தியும் இணைந்து விடுகிறது. இதுவே அவனது வெற்றிக்கு காரணம்!" என்றார்.

(கர்ண பரம்பரைக் கதை) **- காயத்ரி பிரசன்னா, சென்னை - 5**

08 Oct 2019

# ரங்க ராஜ்ஜியம் - 40




ரங்க ராஜ்ஜியம்

தாயே என் நாவில் எப்போதும் நிற்பவள் நீதான்... நீயே இந்த இக்கட்டில் இருந்து என்னைக் காக்கவேண்டும்

***‘தண்ணந் துழாய்வளை கொள்வது யாமிழப்போம் - நடுவே***

***வண்ணம் துழாவியோர் வாடையுலாவும் வள் - வாயலகால்***

***புண்ணந் துழாமே பொருநீர்த் திருவரங்கா - அருளாய்***

***எண்ணந் துழாவுமிடத்து உளவோ பண்டும் - இன்னன்னவே?’***

-திருவிருத்தத்தில் நம்மாழ்வார்.

**தி**ருவரங்கம் ஆலயத்தின் பிரதான அடையாளங் களில் ஒன்று `ஐந்து குழி மூன்று வாசல்’. சித், அசித், பரம்பொருள் எனும் தத்துவங்களைக் குறிப்பது மூன்று வாசல். அர்த்தபஞ்சக ஞானத்தைக் குறிப்பன - ஐந்து குழிகள். அர்த்த பஞ்சக ஞானம் என்றால் என்ன?

இதற்கு, `அர்த்த பஞ்சக வியாக்கியானம்’ எனும் மணவாள மாமுனியின் நூல் பொருள் கூறுகிறது. மேலும் பிள்ளை லோகாச்சாரியார் என்பாரும் வியாக்யானம் செய்துள்ளார். ‘அர்த்த பஞ்சகம்’ என்றால் பொருள் உணர்ந்துகொள்ள வேண்டிய ஐந்து கருத்துகள் என்பதே பொருள். அவை: உலகின் நிலை, இறைவன் நிலை, வினை நிலை, இறைவனை அடைய வேண்டிய நிலை, மோட்சமடைய தடையில்லாத நிலை. இவைபோக, எம்பெருமானின் ஐந்து நிலைகளையும் இக்குழிகள் ஞாபகப்படுத்துகின்றனவாம். அவை: பரத்வம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அர்ச்சை.

பரத்வம் என்றால் வைகுண்டத்திலுள்ள மிக உயர்ந்த நிலை; வியூகம் என்றால் பாற்கடலில் உள்ள சம்ஹாராதிகள் செய்யும் நிலை; விபவம் என்றால் அவதார நிலை; அந்தர்யாமித்வம் என்றால் அவனே உள்ளுறையும் பரமனாக எல்லோருடைய ஆத்மாவுக்குள்ளும் இருப்பதென்பதாம்; அர்ச்சை என்பது கோயில்களில் அவனுக்கான நம்முடைய வழிபாடு நிலை!

இப்படி, அந்த ஐந்து குழி மூன்று வாசல், நமக்குள் பற்பல சிந்தனைகளை உருவாக்கித் தருகிறது!

பிரம்மனின் சத்யலோகத்தில் இருந்து பூவுலகில் முதலில் அயோத்திக்கும் பின், திருவரங்கத்துக்கும் வந்த அரங்கப் பெருமான் ஆலயமிசை ‘ஐந்து குழி மூன்று வாசல்’ போல் சிந்திக்கவைக்கும் அம்சங்கள் மட்டுமல்ல... ஆலயத்தின் ஒவ்வொரு கல் தூணும், நாம் நடக்கையில் கால்படும் பட்டியக்கற்களும், இன்னும் பல சிற்பங்களும்கூட தனக்குள் பல வரலாற்று நிகழ்வுகளை சுமந்து நிற்பவையாகும்.இந்த மண்ணையாண்ட சேர சோழ பாண்டியர் எனும் மூவராலும் போஷிக்கப்பட்ட ஓர் ஆலயமாக அரங்கன் ஆலயம்

இருப்பது அதன் மாட்சிமைக்கொரு பெரும் சாட்சி. இம்மூவரைக் கடந்து கன்னடர், தெலுங்கர், மலையாள தேசத்தவர் என்று தென்னாடு சார்ந்தோரும் அரங்கனுக்குப் பெரும் தொண்டாற்றி அவனருளுக்கு பாத்திரமாயுள்ளனர். இவர்களில் கன்னடத்து ஹொய்சாளர்களின் தொண்டும், அவர் தம் பதிவும் ஆலயத்தில் இன்றும் இருக்க காணலாம்.

இன்று சமயபுரம் என்றழைக்கப்படும் மாரியம்மன் திருக்கோயில் கொண்ட தலம், அந்த நாளில் கண்ணனூர் என்ற பெயரில் விளங்கியது. அந்தக் கண்ணனூரைத் தனக்கான தலைநகரமாகக்கொண்டு விக்கிரமபுரம் என்று அதற்கொரு புதிய பெயரையும் அளித்து, இங்கே அதிகாரம் செலுத்தியவன் 'கர்நாடக தேசத்து சந்திரன்' என்ற பட்டத்தைப் பெற்றிருந்த இரண்டாம் நரசிம்மன் மகனான வீரசோமேஸ்வரன்.

கி.பி 1253-ல் இவன் சோழனுக்கு உதவி செய்து சோழ ஆட்சியை நிலை பெறச்செய்து அப்படியே தன் அதிகார மையத்தையும் சமயபுரத்தில் அதாவது கண்ணனூர் எனப்படுகிற விக்கிரமபுரத்தில் நிலைபெறச் செய்தான்.

ஹொய்சாள மன்னனான இவன் பெரும் பிணிக்கு ஆளாகியிருந்தான். பெரும் ரோகத்தில் சாகக் கிடந்தவன், அரங்கனைப் பிரார்த்தித்துக் கொள்ளவும் தன்வந்த்ரி சகாயத்தால் குணம் பெற்று எழுந்தான். அப்போது ஜோதிடர்கள் அவனை வழிநடத்தினர். அதன்படி ஒரு சூரியகிரகண நாளில், அவன் சமயபுரத்தில் பலவிதமான தானங்களை அளித்தான்.

குறிப்பாக வேதியருக்குச் சில கிராமங்கள், வேளாளருக்குப் பசு மாடுகளும் உழவு மாடுகளும், சமயபுரம் மாரியம்மன் ஆலயத்துக்கு நிவந்தங்கள், அரங்கன் ஆலயத்துக்கு நித்யப்படி விளக்கு மற்றும் பந்தங்கள் எரிக்க தேவைப்பட்ட மூவண்டா எண்ணெய்... அதாவது, மூன்று பெரிய அண்டாக்களில் ஒன்றில் எள்ளெண்ணெயும், ஒன்றில் வேப்பெண்ணையும், ஒன்றில் நெய் என்றும் பலவாறு தானங்கள் அளித்துள்ளான். அதற்கான குறிப்புகளும் உள்ளன. இவன்தான்

கண்ணனூரில் அதாவது சமயபுரத்தில் அந்த நாளில் போசலேசுவரர் திருக்கோயிலையும் கட்டியவன். அக்கோயிலை ஹொய்சலா மரபு மற்றும் கலாசாரம் சார்ந்து வடிவமைத்து, திருவரங்க வரலாற்றில் தன்னை இணைத்துக்கொண்டான். கி.பி.1022-ல் இருந்து 1342 வரை இவர்கள் காலமே. வினையாதித்தன் என்பவனில் தொடங்கி, வீர சோமேசுவரனைத் தொட்டு நான்காம் வல்லாள தேவனுடன் முடிவடைகிறது ஹொய்சாளர் காலம்.

திருவரங்கன் ஆலயத்தின் ஐந்தாம் திருவீதி விக்கிரம சோழனான அகளங்கன் என்பவனால் நிர்மாணிக்கப்பட்டதாகும். இச்சுற்றில்தான் ஸ்ரீமத் நாதமுனிகள் சந்நிதி, உள் ஆண்டாள் சந்நிதி, வேணுகோபாலன் சந்நிதி, அமிர்தக்கலச கருடன் சந்நிதி, சக்கரத்தாழ்வார் சந்நிதி, தாயார் சந்நிதி, தேசிகர் சந்நிதி, மேட்டு அழகிய சிங்கர் சந்நிதி, வாசுதேவப் பெருமாள் சந்நிதி, பெரிய வாச்சான் பிள்ளை சந்நிதி, கோதண்டராமர் சந்நிதி, பிள்ளை லோகாச்சார்யார் சந்நிதி, பார்த்தசாரதி சந்நிதி, உடையவர் சந்நிதி, திருப்பாணாழ்வார் சந்நிதி, விட்டலகிருஷ்ணன் சந்நிதி, தொண்டரடிப் பொடி ஆழ்வார் சந்நிதி என்று பல சந்நிதிகள் உள்ளன.

இந்த ஐந்தாம் பிராகாரத்தை `அகளங்கன் திருச் சுற்று' என்றழைப்பர். இவன் காலத்தில் பலவிதமான நிகழ்ச்சிகள் நடைபெற்றுள்ளன. மலையாள தேசத்தில் வாழும் அந்தணர் மற்றும் வைணவர்கள், பங்குனி மாத பிரம்மோத்சவத்தின்போது அரங்கன் ஆலயத்துக்கு வந்து திருவரங்கத்தில் தங்கி, காவிரியில் நீராடி, அரங்கதரிசனம் புரிந்து பிரசாதமாக ஆலயத்துத் திருவமுதினை உண்டு சென்றுள்ளனர்.

இவன் காலத்தில்தான் திருவரங்கத்தில் பெரும் தொண்டாற்றிய குலசேகர அரையன், புண்டரீக நம்பி, திருவாய்ப்பாடி தாசர், திருவரங்க மாளி நம்பி, இராயூர் திருநாடுடைய நம்பி, திருவேங்கடப்பிச்சன், நாலூர் ஸ்ரீஜடாயுதாசர், கந்தாடை இலங்கை சென்ற நம்பி, கந்தாடை திருமங்கையாழ்வான், குண்டூர் பள்ளிகொண்ட நம்பி, ஸ்ரீபண்டாரவாரியம் ஆரிதந் ஆராவமுது. விஜயாலய விழுப்பரையர், அம்பலக்கூத்த நாத திருவரங்கப்பிரியன், பாரதாய கருட வாஹனன், பாரதாய

திருவேங்கடவச்சிங்கம் என்று பல்லோர் பெரும் தொண்டாற்றியுள்ளனர்.

அகளங்கன் நன்றியோடு இவர்கள் பெயர்களை கல்வெட்டில் பொரித்தும் வைத்துள்ளான். இந்த அகளங்கன் சுற்று என்னும் ஐந்தாம் சுற்றில்தான் கம்ப நாட்டாழ்வார் தன் ராமாயணத்தையும் அரங்கேற்றம் செய்தார்.

கம்பரின் ராமாயண அரங்கேற்றம் அத்தனை சுலபத்தில் நடந்து விடவில்லை. அதன் பின்னே பலப்பல ரசமான சங்கதிகள் உண்டு!

முதலாம் குலோத்துங்கச் சோழனின் காலம். கி.பி 1070 முதல் 1122 வரை; 52 வருட காலம். பின் இரண்டாம் குலோத்துங்கன் விக்கிரமசோழனைத் தொடர்ந்து மூன்றாம் தலைமுறையாக ஆட்சி செய்கிறான். அதன்பின் இரண்டாம் ராஜராஜன் பின் இரண்டாம் ராஜாதிராஜன், இறுதியாக மூன்றாம் குலோத்துங்கன் கி.பி 1178-ல் இருந்து 1218 வரை ஆட்சி செய்தான்.

இது வரலாறு தரும் குறிப்பு. இதில் மூன்றாம் குலோத்துங்கனின் காலத்தில்தான் கம்பர் வாழ்ந்ததாக ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர். அதன்படிப் பார்த்தால் கி.பி 1200-ல் இச்சம்பவங்கள் நடந்திருக்க வாய்ப்பு அதிகம்.

மூன்றாம் குலோத்துங்க சோழனைச் சந்திக்கும் சடையப்ப முதலியார் எனப்படும் வள்ளல் பெருமகனார், கம்பரை ராமாயணம் எழுதத் தூண்டும்படி கூறுகிறார்.

‘‘அரசே!

கம்பன் ஒரு மகாகவி... கலைமகளோடு நிதம் பேசுபவன். அவன் கவிதையாற்றல் வேளாளர் களைப் பாடுவதிலும் உங்களைப் போன்ற அரசர் பெருமக்களைப் பாடுவதிலும் மட்டும் இருந்து விடக் கூடாது. வால்மீகி இயற்றிய ராமாயணம் வடமொழிக் காவியமாக மட்டும் உள்ளது. அது நம் சுந்தரத் தமிழில் கம்பனால் பாடப்பட வேண்டும்"

என்னும் அவர் கருத்து, குலோத்துங்க சோழனை பல கேள்விகளைக் கேட்கச் செய்தது.

‘`சடையப்பரே... எதற்காக கம்பர் இன்னொருவர் எழுதியதைப் பாடவேண்டும். சுயமாக அவர் ஒன்றை எழுதக் கூடாதா?”

“ராமாயணம் ஓர் அழியாக் காவியம். அதோடு அது நம் தமிழகத் தொடர்புகொண்ட ஓர் இதிகாசம். அனுமன் இலங்கை செல்லும் முன் ஒன்று கூடியது, பாண்டிய நாட்டின் கடலோர மலையாள மகேந்திரகிரி பர்வதத்திலிருந்துதான்! சேது பாலம் எழுப்பி இலங்கைத் தொடர் கொண்டதும் நம் ராமேஸ்வரத்தில் இருந்துதான்.

ராமன் வடக்கில் இருக்கும் அயோத்திக்கு அரசனாக இருந்திருக்கலாம். ஆனால், அவன் வாழ்வின் சோகம் முடிவுக்கு வந்தது நம் மண்ணில் தான். அப்படிப்பட்ட அவதார புருஷனின் சரிதம், தமிழில் சொல்லப்பட வேண்டியது அவசியமல்லவா?”

“நல்ல கருத்துதான். ஆனால், இதை கம்பர் ஏற்கவேண்டுமே?”

“அதற்கும் ஒரு வழி உண்டு..”

“என்ன அது?”

“கம்பரிடம் சொல்லும் முன் ஒட்டக்கூத்தரிடமும் இந்த விருப்பத்தைச் சொல்லுங்கள்...”

“கம்பரே ஒப்புக்கொள்வாரா என்கிற சந்தேகம் இருக்கும்போது ஒட்டக்கூத்தரிடமும் சொல்லச் சொல்கிறீர்களே. இந்த இருவருமே கவிச்சிங்கங்கள்! மிக மிக சுயமானவர்கள். இவர்களை எவரும் ஏதும் செய்ய இயலாது என்பதைத் தாங்கள் அறியாதவரா?”

“நன்றாக அறிவேன்.. ஆனால், நீங்கள்தான் நான் கூறியதை சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. கம்பரிடம் இந்த விருப்பத்தைக்கூறிடும்போது, ஒட்டக்கூத்தர் எழுதச் சம்மதித்துவிட்டதாகக் கூற வேண்டும்.

அப்படியே ஒட்டக்கூத்தரிடம் கூறும் போது கம்பர் சம்மதித்தாகக் கூற வேண்டும்.”

“என்றால் இருவருமல்லவா எழுதுவர்?”

“எழுதட்டுமே... கம்பரின் ராமாயணம் கம்ப ராமாயணமாகவும், ஒட்டக்கூத்தரின் ராமாயணம் அவர் பெயராலும் வழங்கப்பட்டு இருவர் புகழையும் கவித்திறமையையும் காலகாலத்துக்கும் சொல்லிக்கொண்டிருக்கட்டுமே... அதோடு அரசனாக நீங்களும், எல்லோரையும் தூண்டி விட்ட கணக்கில் நானும் சிந்திக்கப்படுவேனல்லவா?”

“அருமையான யோசனை” என்ற குலோத்துங்க சோழன் சடையப்பரின் கருத்துப்படியே இருவரையும் எழுத வைத்தான். இதில் ஒட்டக்கூத்தர் முந்தினார். கம்பரோ, `எழுதுகிறேன் எழுதுகிறேன்' என்று நாளைக் கடத்தினார். குலோத்துங்கன் இருவரையும் அழைத்து, `எதுவரை எழுதியுள்ளீர்' எனக் கேட்க, ஒட்டக் கூத்தர், ‘கடல் காண் படல பரியந்தம்’ தான் எழுதிவிட்டதாகக் கூறினார்.

அதைக் கேட்ட கம்பர் எங்கே தன்னை ஒட்டக் கூத்தரைவிட தாழ்வாக எல்லோரும் கருதிவிடுவரோ எனும் அச்சத்தில், தான் அப்படலத்தைக் கடந்து விட்டதாகக் கூறினார்.

``அப்படியானால் தாங்கள் எழுதியதில் ஒரே ஒரு பாடலை மாதிரிக்கு பாடிக் காட்டுக" என்றான் குலோத்துங்கன். கம்பர் வரகவியல்லவா... எனவே, அசராமல் அப்போதே ஒரு பாடலை யோசித்து பாடத் தொடங்கினார்.

***‘குமுதனிட்ட குலவரை கூத்தரின்***

***திமிதமிட்டுத் திரையுந் திரைக்கடல்***

***துமித மூர்புக வானவர் துள்ளினார்***

*அமுத மின்னு மெழுமெனுமாசையால்*...' - என்று பாடி பொருளும் கூறினார்.

``அனுமனின் வானரப் படையில் குமுதன் என்னும் படைத்தலைவன் பூமியினின்று வேரோடு பிடுங்கிய மலையை வீசியெறிந்ததில், அது கடலில் விழுந்து அதனால் தெரித்த நீர்த் துளிகள் விண்ணில் உள்ள சொர்க்கம் வரை பட்டுத் தெரித்ததாம்" என்று பொருள் கூறினார்.



ரங்க ராஜ்ஜியம்

இதில் நீர்த்துளியைப் பற்றி சொல்லும்போது அதை `துமி' என்னும் சொல்லால் கம்பர் சந்தச் சிறப்போடு சொல்லியிருந்தார். அது ஒரு புதிய சொல்லாக, தமிழ்மொழியில் அதுவரை எவரும் சொல்லாத ஒன்றாக இருக்கவே ஒட்டக்கூத்தர் அதை ஆட்சேபித்தார்.

``துளியை, துமி என நீங்கள் உங்கள் விருப்பத் துக்குக் கூறுவதா? இப்படி ஒரு சொல் வழக்கில் எங்காவது உண்டா? இலக்கண நூல் எதில் ஒன்றில் இருந்தாலும் கூடக் காட்டலாம்'' என்றார்.

கம்பர் இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

``சரி நான் இதை நிரூபிக்கிறேன்'' என்று அப்போதைக்கு சொன்ன கம்பர், நிஜத்தில் கலங்கித்தான் போனார். அப்படி அவர் கலங்கும் போதெல்லாம் கலைமகளிடம்தான் போய் நிற்பார். அப்போதும் போய் நின்றார்.

``தாயே என் நாவில் எப்போதும் நிற்பவள் நீதான்... நீயே இந்த இக்கட்டில் இருந்து என்னைக் காக்கவேண்டும்'' என்கிற அவரின் பிரார்த்தனைக் குக் கலைமகளும் செவி சாய்த்தாள்.

கம்பருக்கு ஓர் உபாயம் சொன்னாள்!

**- உலா தொடரும்...**

**புற்று முருகன்!**

**தூ**த்துக்குடி மாவட்டம் ஒட்டப்பிடாரத்தில் இருந்து சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ளது சாலிகுளம். இங்குதான் புற்று வடிவாக இருந்து பக்தர்களின் நோயைத் தீர்த்தருள்கிறான் முருகப்பெருமான்!



புற்று முருகன்

சுமார் 300 வருடங்களுக்கு முன்பு, இங்கே வசித்து வந்த முத்துசாமி என்பவர் தீராத வயிற்று வலியால் அவதிப்பட்டாராம்! அப்போது முருகப்பெருமான் வயோதிகராக வந்து, புற்று மண்ணையும் பச்சிலையையும் கொடுத்து சாப்பிடச் சொல்ல... வயிற்று வலி பறந்தே போனதாம்! பிறகு ருத்திராட்ச மாலையை முத்துசாமியிடம் கொடுத்து, முருகப் பெருமான் மறைய... அந்த இடத்தில் புற்று உருவானதாகச் சொல்கின்றனர். முருகப்பெருமானே புற்று வடிவில் அருள்பாலித்து வருகிறார் என்பது ஐதீகம்!

இதையடுத்து புற்று முருகன் என ஊர்மக்கள் வழிபடத் துவங்கினர். அருகில் முருகப்பெருமானின் திருவுருவ விக்கிரகமும் உள்ளது. தீராத நோயையெல்லாம் தீர்த்து வைப்பானாம் புற்று முருகன்!

ஸ்தல விருட்சம் - வேலமரம்! நாகதோஷத்தால் திருமணம் ஆகாமல் இருப்பவர்கள், மஞ்சள் பொடியால் அர்ச்சித்து வழிபட.... விரைவில் திருமணம் கைகூடும் என்பது பக்தர்களின் நம்பிக்கை!

**- கிருஷ்ணராஜ், பங்களாப்புதூர்**

22 Oct 2019

# ரங்க ராஜ்ஜியம் - 41



ரங்க ராஜ்ஜியம்

கம்பரின் உதாரணங்களைக் கேட்ட கூட்டத்தார் சற்றுநேரம் மௌனித்தனர். பின்னர், வயதில் முதிர்ந்த வேதியர் ஒருவர், கம்பருக்கு இறுதியான கருத்தினைக் கூறலானார்.

***உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்***

***நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா***

***அலகு இலா விளையாட்டு உடையார் அவர்***

***தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே!'*** - கம்பர்

ஒட்டக்கூத்தரின் ஆட்சேபனையால் உள்ளுக்குள் கலங்கிய கம்பர், அன்னை கலைவாணியைச் சரணடைந்தார்.அவரின் பிரார்த்தனைக்கு, கலைமகளும் செவிசாய்த்தாள்.

“கம்பா கலங்காதே. இன்று மாலையில் மன்னனையும் ஒட்டக்கூத்தரையும் இடையர் தெருவுக்கு அழைத்துச் சென்று,

மாறுவேடத்தில் உலா வருவாயாக. அப்போது உன் குறை நீங்கும்" என்றாள். அதேபோல் குலோத்துங்கனையும் ஒட்டக்கூத்தரையும் அழைத்துக்கொண்டு தானும் மாறுவேடம் அணிந்து இடையர் தெருவுக்கு வந்தார் கம்பர்.

அந்தத் தெருவில் பெண்ணொருத்தி தயிர் கடைந்துகொண்டிருந்தாள். பிள்ளைகள் அவளைச் சுற்றி விளையாடிபடி இருந்தனர். சிலர், பானை மேல் வந்து விழப் பார்த்தனர். அந்தப் பெண், தன் பிள்ளைகளைக் கடிந்துகொண்டாள்.

"பிள்ளைகளே எட்டிச் செல்லுங்கள். நான் தயிர் கடையும்போது மோர்த்துமி தெறிக்கப்போகிறது" என்றாள். `மோர்த்துமி' என்று அவள் சொன்ன வார்த்தையை அரசனும் ஒட்டக்கூத்தனும் கேட்டனர். அந்த நொடியே அரசன், "கம்பர் பாடியதில் பிழையில்லை. தயிர் கடையும் இந்தப் பெண்ணுக்குப் பரிச்சயமான ஒரு சொல் உமக்குத் தெரியாமல்போனதுதான் விந்தை" என்று பரிகாசமும் செய்தார்.



ஒட்டக்கூத்தர் மிரண்டார். சிறிதுநேரம் கழித்து அதே வழியில் அவர் திரும்ப வந்தபோது, அந்த வீடு பாழடைந்த வீடாக எவருமின்றி காட்சியளித்தது. அப்போதே ஒட்டக்கூத்தருக்கு 'எல்லாம் சரஸ்வதி யின் லீலை' என்று தெரிந்துவிட்டது. கூடவே கம்பர்மீது மதிப்பும் ஏற்பட்டது.

‘கம்பருக்காக சரஸ்வதியே இடையர்குலப் பெண்ணாக வந்து அருளாடல் செய்கிறாள் எனில், கம்பர் எவ்வளவு மேலானவர்? அவர் பாடப்போகும் ராமாயணமும் மிக மேலான தாகவே இருக்கும்...’ என்று தனக்குள் எண்ணிக் கொண்டவர், தான் அதுவரை எழுதியதைக்கூட அரசனிடம் ஒப்படைக்க விரும்பவில்லை.

அதே நேரம், கம்பர் மிக வேகமாய் ராமா யணத்தை எழுதி பட்டாபிஷேகம் வரை வந்து விட்டார். ஒட்டக்கூத்தர் நிச்சயம் எழுதி முடித்திருப்பார் என்று கருதி அவரைக் காண வந்தபோது, ஒட்டக்கூத்தர் தான் எழுதிய ஓலைகளைத் தீயிட்டுக்கொண்டிருந்தார். அதைக் கண்டு பதைத்த கம்பர் எரித்ததுபோக மீதமிருந்த ஏடுகளைப் பார்த்தார். அது உத்தரகாண்டத் தொடக்கமாக இருந்து ராமனின் முடிவு வரை சென்று முடிந்திருந்தது.

‘‘ஒட்டக்கூத்தரே! உமது எழுத்தும் மதிப்புமிக்கதே! நீங்கள் என்னை எண்ணி உங்களைத் தாழ்த்திக்கொண்டது தவறு. மேற்கொண்டு ராமாயணத்தை நான் எழுதப்போவது இல்லை. உங்களின் இந்த உத்தரகாண்டம் தொடங்கி முடிவு வரை உள்ளதை நான் பாடிய பாடல்களுடன் இணைப்பேன். நம் இருவர் பெயராலும் இது வழங்கப்படட்டும்" என்றார்.

ஆனால், ஒட்டக்கூத்தர் மறுத்து ‘`கம்பரே... நீரே வரகவி. உமக்கு இணை எவரும் இல்லை. உமது பெயராலேயே இது வழங்கப்படட்டும்’’ என்று கூறிட, கம்பராமாயணம் பிறந்தது. அப்படிப் பிறந்ததை உலகறியச் செய்ய வேண்டும் அல்லவா?

‘அதற்கு என்ன செய்யலாம்’ என்று யோசிக்கையில் சோழன் அவையிலிருந்தோர் மட்டுமன்றி, கம்பரைச் சார்ந்தவர்களும் முதலில் சிந்தித்தது அரங்கநாதனை. பின்னர் சிந்தித்தது திருவரங்கத்தை!

கம்பரின் காவிய நாயகனான ஸ்ரீராமன் ஆராதித்து வணங்கிய பெருமானல்லவா அரங்கத்துப் பெருமான்! அப்படிப்பட்ட அவன் ஆலயத்தைவிடப் பொருத்தமான ஓர் இடம் இருக்கமுடியுமா என்ன?



கம்பரும் புறப்பட்டார் திருவரங்கம் நோக்கி!

**தி**ருவரங்கத்தில் கம்பரின் காலடிகள்பட்ட வேளை மழை பெய்யத் தொடங்கிவிட்டது. கம்பரோடு அவருக்குத் துணையாகக் குலோத்துங்க சோழன் சில காப்பாளர்களை அனுப்பியிருந்தான். அவர்கள் புரவியின் மேல் அமர்ந்து முன்னும் பின்னுமாக வந்த நிலையில், கம்பரை இரட்டைப் புரவிகள் பூட்டிய ரதம் ஒன்று திருவரங்கத்துக்கு அழைத்து வந்திருந்தது. அந்த ரதத்தில்தான் அவர் எழுதிய ராமாயணப் பாடல்கள் பனையோலை ஏட்டுக் கட்டுகளாய் மரப்பேழை ஒன்றில் இருந்தன.

பெருமழையில் கம்பர் நனைந்தார். அவர்கள் ஒதுங்குவதற்கு ஏற்ப மண்டபம் ஒன்றும் தென்பட்டது. ஆனால், கம்பர் மழையில் நனை வதை விரும்பினார்.

காப்பாளர்கள் “இது என்ன வேடிக்கை...” என்றனர்.

“வேடிக்கையல்ல. இது வருண பாசம்! பஞ்சபூதங்களில் ஒருவனான வருணன் என்னைக் குளிர்விக்கிறான். அதனால் பயணக் களைப்பு தீர்வதோடு, அரங்கப் பெருமானை தரிசிக்க இப்படியே செல்லலாம். காவிரிக்குச் சென்று நீராடத் தேவை இல்லையே...” என்றார் கம்பர்.

“இதனால் உடல் நலம் கெடலாமல்லவா?”

“வான் மழையும் தேன் மழையும் ஒன்று. இதனால் ஒரு கேடும் நிச்சயமாக வராது. நான், இம்மண்ணின் அரங்கநாதப் பெருமானை பூஜித்த ராமனின் வாழ்க்கையைப் பாடியவன். இது எனக்கான வரவேற்பு” என்றார் கம்பர்.

அப்படியே நனைந்த வண்ணமே ஆலயத்துக்குள் நுழைந்த கம்பர், அதன் எழிலை வியக்கத் தொடங்கினார். அகண்ட பிராகாரங்கள், அழகான கற்தூண்கள், தரைப் பரப்பெங்கும் சமமான பட்டியக் கற்கள், சுற்றிலும் திருமண் காப்பணிந்த வைணவ பக்தர்கள், அவர்கள் பக்தியோடு பாடிடும் பாசுரங்கள்.

கம்பர், வரும் நாள்களில் தன் ராமாயணப் பாடல்களையும் இதுபோல் எல்லோரும் பாடியபடி செல்வதாகக் கற்பனை செய்துகொண்டார். அப்போது, ஆலய நிர்வாகிகளுக்குக் கம்பரின் வருகை தெரியவரவும் அவர்கள் பூரண கும்பத்துடன் எதிரில் வந்தனர். கம்பரும் பூரித்தார்.

“வாருங்கள் கவிச்சக்கரவர்த்தி. தங்கள் வரவால் அரங்கன் மகிழ்கிறான். அவன் மகிழ்ந்தால் அவனியே மகிழ்ந்திடும். வாருங்கள்... வாருங்கள்...” என்றார் வேதவிற்பன்னர் ஒருவர்.

“தங்கள் விளிப்பும் களிப்பும் எனக்கு மகிழ் வோடு பரவசமும் தருகின்றன. ஒரு புலவனைப் போற்றிடும் இந்தப் பண்பாடு ஓங்குக உயர்க!” என்று பதில்மொழி கூறினார் கம்பர்.

அதன்பின், அரங்கப் பெருமானின் தரிசனமும் பரிவட்டத் திருக்காப்புடன் திவ்யமாக நடந்து முடிந்தது. பச்சைக் கற்பூரமும் ஏலமும் கிராம்பும் கலந்த தீர்த்தமுடன் இருந்த பச்சைவண்ணத் திருத் துழாய், அவர் நாவில் ஒரு பிரத்யேகச் சிலிர்ப்பை ஏற்படுத்தியது.

அப்படியே பிரதட்சணம் வந்து கிளி மண்டபத் தில் அவர் அமர்ந்து உரையாடும் நிமித்தம் மனைப்பலகைகள் போடப்பட்டிருந்தன. பிரதானப் பலகையில் கம்பர் அமர்ந்திட, ஆலயக் காப்பாளர் முதல் வேதியர் தொட்டு, திருவரங்கம் வாழ் அரங்கனடிமைகள் பல்லோரும் அவர் எதிரில் அமர்ந்தனர்.

“வாழிய சோழ மணித்திருநாடு! வாழ்க மாமன்னர் குலோத்துங்கர்! வாழ்க கவிச்சக்கர வர்த்தி கம்பர் பிரான்! வாழ்க சோழ மக்கள்!” என்று ஒருவர் கட்டியக் குரல் கொடுத்து முடித்தார்.

கம்பருடன் உரையாடல் தொடங்கியது.

“கவிச் சக்கரவர்த்தியே, தங்கள் வருகைக்குப் பின்னால் ஒரு பெரும் காரணம் இருப்பதாகக் கேள்வியுற்றோம். அதை நாங்கள் அறியலாமா?”

“இது என்ன கேள்வி.. தாங்கள் அறிய வேண்டியே நான் இங்கு வந்துள்ளேன். சோழ மன்னனின் விருப்பம் காரணமாகவும், என்மீது பெரும் பற்று கொண்ட சடையப்ப வள்ளலின் பெருவிருப்பம் காரணமாகவும் வடமொழியில் வால்மீகி இயற்றிய ராமகாதையை யாம் அருந்தமிழில் ராமாயணமாக எழுதியுள்ளோம்.”



“நாங்களும் அதை எல்லாம் கேள்வியுற்றோம்..”

“என்னோடு பெரும் புலவரான ஒட்டக்கூத்தரும் இணைந்து எழுதியுள்ளார். அரிய இதிகாசமான ராமகாதையை ராமாயணமாக்கிய யாம் அதை இத்திருவரங்கத் திருத்தலத்தில் உங்கள் எல்லோர் முன்னிலையிலும் அரங்கேற்றி மகிழ விரும்புகிறோம்.”

“மிகச் சிறந்த முயற்சி. இக்காதையை தாங்கள் எவ்வாறு எழுதியுள்ளீர் என அறியலாமா?”

“தாராளமாக... இலக்கண நெருடல்களின்றி தெய்வத்தமிழ் மொழியில் பாடல்களாகவும் அப்பாடல்களைக் காண்டங்களாகப் பிரித்தும், அக்காண்டங்கள் என்னளவில் ஆறாகவும் கூத்தரின் உத்தரகாண்டம் ஏழாகவும் உள்ள இந்த ராமாயணம் என்பது 12,000 பாடல்களை உடைய பெரும் தமிழ்க் காப்பியமாகும்.”

“அற்புதம்... ஆனந்தம்... அதி விசேஷம்... ஆயினும்...” - ஒரு வைணவர் பாராட்டில் உச்சம் சென்று அப்படியே சரிந்து கீழ் இறங்கினார். கம்பர் முகத்திலும் ஒரு நொடி திகைப்பு பரவத் தொடங்கியது.

“கம்பர் பிரான் எங்களைத் தவறாகக் கருதிவிடக் கூடாது. இந்தப் பாடலில், தாங்கள் தங்களை ஆதரித்த சடையப்ப வள்ளலையும் பாராட்டியுள்ளீரோ?”

“ஆம். நான் இதைப் படைக்க அவரல்லவா மூல காரணம்?”

“நல்லது. அவருக்கான நன்றிகளை முகவுரை யோடு நிறுத்திக்கொண்டுள்ளீரா... இல்லை காவியமெங்கும் அது தொடர்கிறதா?”

“இப்போது எதற்கு இந்தக் கேள்வி?”

“காரணமாகத்தான்... ராமாயணம் என்பது அவதார புருஷனின் மாண்பைச் சொல்வது. அந்த அவதார புருஷனும் நம்மை எல்லாம் படைத்து, நாம் வாழ வழிகாட்டி அருளிய எம்பெருமானேயாவான்... அல்லவா?”

‘`அதிலென்ன சந்தேகம்?”

“சந்தேகமில்லை... அப்படிப்பட்ட இணை காட்ட முடியாத பரம புருஷனான எம்பெருமான் குறித்த இக்காப்பியத்தில், இடையில் வந்து இடையிலேயே மறைந்துவிடும் நம் போன்ற சாமான்யர்களில் ஒருவரான சடையப்பரையும் துதி செய்திருப்பது சரியா?”

“சடையப்பர் சாமான்யரா... இல்லவே இல்லை! அவர் மனித உருவில் நடமாடும் தெய்வம். தனக்கென வாழாத வள்ளல்...”

“உங்களுக்கு உதவிகள் செய்ததால், உங்கள் வரையில் அவர் தெய்வமாகத் திகழலாம். ஆனால் உலகுக்கு அவர் எப்படி தெய்வமாக முடியும்?”

“நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்?”

“இறை ஸ்துதிக்குள் நர ஸ்துதி சரியல்ல என்பது எங்கள் கருத்து.”

``தவறான கருத்து. `நரன்' என தாங்கள் கூறிடும் நம்மைப் படைத்ததும் அவனே. அவன் படைப்பில் உயர்வு தாழ்வுக்கு இடமே கிடையாது. பேதங்கள், உயர்வு தாழ்வுகள் வாழ்வியலில் நம்மால் உருவாக்கப்பட்டவையே! இவை யாவும் இறைவனுக்குக் கிடையாது.

அதனால்தான் இதே ராமாயணத்தில், குகனை தன் சகோதரனாகவே ஏற்றுக்கொண்டான். சபரியின் ஆசிரமத்தில் அவளின் எச்சில்பட்ட பழங்களையும் ருசித்தான். அனுமனையும், ஜாம்பவானையும் அணைத்து மகிழ்ந்தான்."

- கம்பரின் உதாரணங்களைக் கேட்ட கூட்டத்தார் சற்றுநேரம் மௌனித்தனர். பின்னர், வயதில் முதிர்ந்த வேதியர் ஒருவர், கம்பருக்கு இறுதியான கருத்தினைக் கூறலானார்.

**- உலா தொடரும்...**

05 Nov 2019

# ரங்க ராஜ்ஜியம் - 42



ரங்க ராஜ்ஜியம்

கம்பர் மிக நைச்சியமான குரலில் சொன்ன தைக் கேட்ட வைணவர் ஒருவரின் கண்கள் கலங்கின.

**தி**ருவரங்கம் - ரங்கநாதரின் ஆலயத்தில் கிளி மண்டபத்தில் பலரும் அமர்ந்து உரையாடும் நிமித்தம் மனைப்பலகைகள் போடப்பட்டிருந்தன. பிரதான பலகையில் கம்பர் அமர்ந்துகொண்டார். ஆலயக் காப்பாளர், வேதியர் மற்றும் திருவரங்கம்வாழ் அரங்கனடிமைகள் பலரும் அவர் எதிரில் அமர்ந்தனர். அவர்களுக்கு இடையேயான விவாதம் தொடர்ந்தது.

“கவிச்சக்கரவர்த்தி அவர்களே, தங்கள் கருத்தை அறிந்தோம். தங்கள் நன்றியுணர்வைப் பாராட்டவும் விரும்புகிறோம். அதேநேரம், இதுகாறும்

ஒரு பெரும் தமிழ்க் காப்பியத்தை நாங்கள் வாசித்ததில்லை. புராணங்களும் இதிகாசங்களும் வடமொழியிலேயே உள்ளன. இப்போதுதான் இனிய தமிழின் பாசுரங்கள் இங்கு பாடப்பட்டு வருகின்றன. அதற்குத் திருமங்கையாழ்வார் என்பவரே பிரதான காரணம். அவருக்கு எம்பெருமானே அனுமதியளித்துவிட்டான். ஆனால், உங்களுக்கு எப்படி அனுமதி தருவது... அவனைவிட நாங்கள் உயர்ந்தவர்கள் இல்லையே என்றே யோசிக்கிறோம்."

"எம்பெருமான் மங்கை மன்னனுக்கு அனுமதியளித்த நிலையில், எனக்குத்தானா இல்லையென்பான்..."

"இப்போது முன்போன்ற நிலையில்லை. இன்று தங்களைப் போல் பலரும் பாடல்களுடன் வந்து திருச்சந்நிதியில் வைத்து உத்தரவு கேட்க விரும்புகின்றனர். காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு என்பதுபோல் அவர்களுக்கு அவர் களின் பாடல்கள் பெரிதாக இருக்கலாம். ஆனால், தமிழ்ச் சமூகம் அதை ஏற்க வேண்டியது முக்கியமல்லவா..."

"சரி... இறுதியாக உங்கள் முடிவுதான் என்ன?" - கம்பர் கேட்டார்.

"உங்கள் விளக்கங்களைக் கேட்ட அளவில் எங்களுக்கு எந்த ஆட்சேபமும் இல்லை. அதேநேரம், நாங்கள் மட்டுமே தமிழ்ச் சமூகம் இல்லை. தமிழாய்ந்த வல்லுநர்கள் சேர, பாண்டிய நாட்டிலும் உள்ளனர். அவர்கள் எல்லோருடைய அனுமதியிருந்தால் இன்னமும் நன்றாக இருக்கும் என்று கருதுகிறோம்."

"திருவரங்கத்துத் திருமக்களே! இதற்காக நான் நாடு நாடாகச் சென்று, உங்களைச் சந்தித்தது போல் அவர்களை எல்லாமும் சந்தித்து, என் பாடல்களைப் பாடி அவர்கள் அனுமதியைப் பெறுவது என்பது நடைமுறை சாத்தியமா... யோசியுங்கள். இந்த ராமாயணத்தில் என்னைப் பற்றியேகூட நான் எங்கும் குறிப்புகள் வைக்கவில்லை. அந்த ராமன் புகழைத்தான் ஏந்திப்பிடித்திருக்கிறேன். வேண்டுமானால் நான் பாடுகிறேன். கேட்டுவிட்டு இறுதி முடிவுக்கு வாருங்கள்."

கம்பர் மிக நைச்சியமான குரலில் சொன்ன தைக் கேட்ட வைணவர் ஒருவரின் கண்கள் கலங்கின.

“எதற்காக இந்தக் கண்ணீர்?”

“கம்பர்பிரானே... உங்களின் பணிவான முயற்சியும் விளக்கங்களும் எம்பெருமான்பால் உங்களுக்கிருக்கும் பக்தியும் என்னை நெகிழ்த்தி விட்டன; என்னை மட்டுமல்ல எல்லோரையும் தான். எங்களுக்கெல்லாம் ஒரே ஒரு நெருடல், தங்கள் பாடல்களில் பொருள் குற்றம் இருந்தால் அதைக் கண்டறிந்து கூற எங்களால் இயலும். சொற்குற்றமோ... இல்லை, இலக்கணப் பிழைகளோ இருந்தால், அவற்றைக் கண்டறிய வல்ல தமிழாய்ந்த வல்லுநர் இப்போது எம்மிடையே இல்லை.



பாண்டிய நாட்டில் இதற்கென்றே இருந்தன பொற்றாமரைக்குளமும், சங்கப்பலகையும். இப்போது அங்கும் பெரும் மாற்றங்கள். கால

மாற்றத்தால் சங்கப்பலகையின் சாந்நித்யமும் போய்விட்டது. செய்யுளில் குற்றம் காண்போர் மட்டுமே மிகுந்ததால் வந்த வினையோ... இல்லை, சங்கப்பலகை ஏற்கும்வண்ணம் ஒருவரும் எழுதவில்லை என்பது காரணமோ... தெரியவில்லை. எனவே, நீங்கள் ஒரு தமிழாய்ந்த கூட்டத்திடம் உங்கள் ராமாயணத்தைப் பாடிக் காண்பித்து ஒப்புதல் பெற்று வந்தாலே போதும். அரங்கத்து ஆலயம் தங்களை வாரியணைத்து வரவேற்கத் தயாராக உள்ளது.''

அந்த வைணவர் கருத்தை அனைவரும் ஆமோதித்தனர். கம்பருக்கு அப்போதுதான் புரிந்தது, ஒரு காவியத்தைப் படைப்பதைவிட, அதை ஏற்கச் செய்யும் முயற்சியே பெரியது என்பது.

அதே கூட்டத்தில் ஒரு குரல், ''கம்பர்பிரானே... இம்மட்டில் இன்னொரு சிக்கலும் உள்ளது'' என்று தொடங்கியது. கம்பர் அவரை ஏறிட்டார். `பார்வையாலேயே இன்னும் என்ன சிக்கலோ...' என்கிற வினா வையும் எழுப்பினார். அவரும் தொடர்ந்தார்.

''கம்பர் பெருமானே! தாங்கள் ராமாயண காவியத்தை எழுதி எடுத்துக் கொண்டு நேராக இங்கே வந்துவிட்டீர். ஆனால், அந்த ராமனும் அவனது ராமாயணமும் வைணவர்களுக்கு மட்டுமே உரியதன்று... அல்லவா?''

''அதிலென்ன ஐயம்... இந்த ராமனும் ராமாயணமும் மனித குலத்துக்கே பொதுவானது அல்லவா. ஒரு மனிதர் எப்படி வாழவேண்டும் என்று உணர்த்தத்தானே அவன் ஏகபத்தினி விரதனாக தர்மத்தின் தலைவனாக வாழ்ந்து காட்டினான்.''

''அப்படியானால் வைணவரல்லாத சைவர், சமணர், பௌத்தர் என்பாரும் வாழும் இந்தத் தமிழ் மண்ணில் அவர்களும் ஏற்க வேண்டுமல்லவா?''

''சமணர், பௌத்தர் சித்தாந்தமே வேறு. அவர்கள் வேத மறுப்பாளர்கள். வேள்விகளை வெறுப்பவர்கள். ஆனால், சைவர் அவ்வாறல்லர்; அவர்கள் ஏற்பது அவசியம்.''

“அப்படியானால், நம் தமிழின் அருமை அறிந்த சைவர்களின் தலங்களில் பிரதானமானதும் சைவ வைணவ ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக உள்ளதுமான சிதம்பரத்துக்குச் சென்று அங்கு வாழ்ந்துவரும் தீட்சிதர்களின் ஒப்புதல் பெற்றால்கூட போதுமே...”

- கூட்டத்தில் பண்டிதர் போன்ற ஒருவர் சொன்னதை அனைவரும் ஆமோதித்தனர். கம்பர் திகைத்தார்.

‘இதற்காக நான் சிதம்பரம் சென்று தீட்சிதர்களின் ஒப்பம் பெற வேண்டுமா. அவர்கள் மூவாயிரவர் ஆயிற்றே. அதில் ஒருவர் ஏற்க மறுத்தாலும் புதிதாய் ஒரு சிக்கல் உருவாகிவிடுமே’ என்று அவர் மனத்துக்குள் ஒரு சோர்வு கலந்த குரல் ஒலித்தது.



``தாங்கள் யோசிப்பது புரிகிறது. எங்கள் வரையில் தீட்சிதர்கள் ஏற்றால் அது அந்தச் சங்கப்பலகையே ஏற்றதற்குச் சமம். அடுத்து, ஆன்மிக நெறியில் கொள்கைகள் பலவற்றில் நாங்கள் வேறுபாடும் மாறுபாடும் கொண்டிருந்தாலும், செழுந்தமிழில் இந்தத் திருவரங்கம் ஆழ்வார்களின் பாசுரங்களை ஏற்றார்போல், அந்தத் தில்லையில் அடியார் களின்

பதிகங்கள், தேவாரம் என்னும் பெயரில் போற்றப்பட்டும் பாடப்பட்டும் வருகின்றன.

எனவே, அனைவருக்கும் பொதுவான ராமாயணத்தை நாங்கள் ஏற்றுப் போற்றுமுன், தில்லை வாழ் தீட்சிதர்கள் ஏற்பதும் மிக முக்கியம்" என்று முடித்தார் ஒருவர்.

அப்போது ஆலயமணி ஒலிக்கவும் அரங்கனே உத்தரவிட்டுவிட்டதாகவும், அக்கருத்தை ஆமோதித்துவிட்டதாகவும் அனைவரும் ஒரு மனதாகக் கருதினர்.

கம்பர்பிரானும் திருவரங்கம் வந்தது போலவே திருச்சிற்றம்பலம் நோக்கிப் பயணமானார்!

- **தொடரும்**

## தென்முகக் கடவுளின் அற்புத தரிசனம்!

**ஆ**ந்திரா, அனந்தப்பூர் மாவட்டம்-ஹேமாவதி என்ற திருத்தலத்தில் உள்ள சிவாலயத்தில், சுவாமி ஐயப்பன் போல் ஆசன நிலையில் யோக மூர்த்தியாக அருள்புரிகிறார் தட்சிணாமூர்த்தி.



தட்சிணாமூர்த்தி

சுருட்டப்பள்ளி, உத்திரமாயூரம், திருவாய்மூர், திருக்கைச்சின்னம் ஆகிய தலங்களில், நந்தியின் மேல் அமர்ந்து அருள்புரியும் மேதா தட்சிணாமூர்த்தியை தரிசிக்கலாம்.

கஞ்சனூர் சிவாலயத்தில் அருள்பாலிக்கும் தட்சிணாமூர்த்தியின் பாதத்துக்கு அருகே நான்கு முனிவர்கள் இல்லை. ஹரதத்தர் உருவம் மட்டும் கைகுவித்த நிலையில் உள்ளது.

திருவிடைமருதூரில் உமையம்மையுடன் கூடிய ‘சாம்ய தட்சிணாமூர்த்தி’ அருள் புரிகிறார்.

காஞ்சிபுரத்துக்கு தெற்கேயுள்ள திருப்புலி வலம் தலத்தில், சிம்மத்தின்மீது திருவடியை ஊன்றியிருக்கும் தட்சிணா மூர்த்தியை தரிசிக்கலாம்.

**- பரிமளம், திருச்சி-2**

19 Nov 2019

# ரங்க ராஜ்ஜியம் - 43



ரங்க ராஜ்ஜியம்

விதியின் ஒரு கணக்கு உயிரைத் தந்தது; இன்னொரு கணக்கு கம்பருக்கு உதவத் தொடங்கியது!

*வில்லாளரானார்க் கெல்லாமேலவன் வினிதலோருஞ்*

*செல்லாதிலங்கை வேந்தர்க் கரசெனக் களித்ததேவர்*

*எல்லாருந் தூசு நீக்கி எழுந்தவரார்த்த போது*

*கொல்லாத விரதத்தார் தங்கடவுள் கூட்ட மொத்தார்.*

- கம்பர்

**திருச்சிற்றம்பலம்!**

**ஒ**ன்பது நுழைவாயில்களோடும் நான்கு பெரும் கோபுரங்களோடும் திகழ்ந்த திருச்சிற்றம்பலம் என்னும் சிதம்பரம், கம்பரை வரவேற்றது. எங்கும் இல்லாதபடி, ஈசன் இங்கே லிங்க வடிவமாய்க் காட்சி தராமல் ஆடல்வல்லோனாய் நாட்டிய கோலத்தில் காட்சி தருவதன் பின்னே பல சிறப்புகள் உண்டு. கம்பர் அந்தச் சிறப்புகளையெல்லாம் எண்ணிக் களித்தவராக, தில்லை நடராசரையும் கோவிந்தராஜப் பெருமாளையும் வணங்கியவராய், தீட்சிதர்களின் தலையாய குருவைப் போன்ற ஒரு முதிய தீட்சிதரைச் சந்தித்து வணங்கினார். அவர், கம்பர் பெருமானை விபூதியிட்டு வாழ்த்தியவராய் வந்த நோக்கை வினவினார்.

“நான் தமிழில் ராமாயணத்தைக் காப்பியமாய் எழுதியதை தாங்கள் அறிந்திருப்பீர்கள் என்று கருதுகிறேன்.”

“ஆம்! நன்முயற்சி. உங்களுக்கு என்னுடைய பாராட்டுகளும் ஆசீர்வாதங்களும் உரித்தாகட்டும்.”

“ஆஹா... என் உள்ளம் பெரிதும் மகிழ்கிறது. தங்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.”

“உங்களுக்குத்தான் சமயம் சார்ந்தோர் நன்றி கூற வேண்டும்; நீங்கள் கூறத் தேவையில்லை.”

“இது, உங்களின் பரந்த மனத்தைக் காட்டுகிறது. நான் வந்த நோக்கமும் இலகுவாய் ஈடேறிவிடும் என நம்புகிறேன்.”

“அந்த நோக்கம் யாது?”

“நான் எழுதியுள்ள ராமாயணத்தைத் தில்லை வாழ் அந்தணர்கள் மூவாயிரவரும் கேட்டு, அதில் பிணக்குக்கும் சுணக்குக்கும் யாதோர் இடமுமில்லை - அது செம்மை மிகுந்தது என சான்றளித்திட வேண்டும்.”

“கம்பன் தமிழுக்கு அந்தணர் சான்றா?”

“கொம்பன் தமிழேயானாலும் சான்றோர் ஏற்று சிறப்பித்தால் அல்லவா உலகோர் அதை ஏற்று வழிமொழிவார்கள்.”

“உண்மைதான். தாங்கள் இங்கு வந்திருப்பதும் ஒருவிதத்தில் போற்றுதலுக்குரியதே. தமிழின் சிறப்பைப் போற்றும் விதம், எம்பெருமானே வந்து மணிவாசகரின் (மாணிக்கவாசகர்) பொருட்டு அவரின் திருவாசகத்தைப் படி எடுத்துக்கொடுத்த மண்ணல்லவா இது. ‘இப்படிக்கு திருச்சிற்றம்பலம்’ என்று அந்த உலக நாயகன் தமிழில் கையொப்பம் இட்டுச் சிறப்பித்ததும் வேறெங்கும் நடந்திராத அதிசயமல்லவா!”

“தாங்கள் கூறுவதைக் கேட்கும்போது உள்ளம் பூரிக்கிறது. மொழிதான் அறிவின் விழி. அந்த விழி, வழி காண்பதும் கற்பதும் காலகாலத்துக்கும் ஆனதல்லவா?”

“உண்மை. முக்காலத்துக்குமான உண்மை. இப்போது நான் செய்யவேண்டியது என்ன என்று சொல்லுங்கள்...”

“இறைவன் பொருட்டு விண்டிசையிலிருந்து மண்டிசை வந்த மூவாயிரவர் எனப்படுவோர், நான் இயற்றிய ராமாயண காவியத்தைக் கேட்டு ஒருமனதாய்ச் சான்றளிக்க வேண்டும். அதற்குத் தாங்கள் எனக்கு உதவிட வேண்டும்.”

“மூவாயிரவரை ஒரு புள்ளியில் திரட்டுவதா... அது அத்தனை சுலபமில்லையே. சிலர் யாத்திரை யில் இருப்பர். சிலர் அனுஷ்டானங்களில் ஆழ்ந்திருப்பர். ஆகவே, மூவாயிரவரையும் தவறாது பங்கேற்கவைப்பது சாத்தியமில்லையே...”

“தலைமைப் பொறுப்பிலிருக்கும் தங்களால் கூடவா அனைவரையும் கூட்ட இயலாது.”

“இயலும்... ஆனால், அதற்கு ஒரு நிர்பந்தம் மிக முக்கியம். `ராமாயணம் கேட்க வாருங்கள்' என்றால், `சொல்பவர் யார்' என்பது முக்கியம்.

தாங்களோ இம்மண்ணுக்குப் புதியவர். நீங்கள் இதில் வித்தகர் என்பது இனிதான் தெரியும். இந்த நொடி அது உமக்கு மட்டும்தானே தெரியும்.''



''என்றால்... இதற்கு என்னதான் தீர்வு?''

''முயற்சி செய்யலாம். ஆனால், மூவாயிரவரும் தவறாது வருவர் என்று கூற இயலாது. வந்த வரையிலும் போதுமென்றால், நான் இப்போதே தண்டோரா போடச் சொல்கிறேன்.''

''இல்லை. என் காவியம் எப்படி பரிபூரணமானதோ, அதுபோல் இது சார்ந்த செயல்பாடுகளும் பரிபூரணமாகவே இருத்தல் வேண்டும்.''

''அப்படியாயின் அந்த ராமன்தான் உங்களுக்குத் துணை நிற்க வேண்டும். என் சக்தி ஓர் எல்லைக்குட்பட்டதே...''

அம்முதியவரின் கருத்தைக் கேட்டு வெகுநேரம் சிந்தித்த கம்பர், நேராக திருச்சிற்றம்பல ஆலயத்துக்குச் சென்று கோவிந்தராஜப் பெருமா ளின் திருமுன் நின்று மனதார வேண்டலானார்.

''எம்பெருமானே... உன் கருணையை நாடி வந்துள்ளேன். உன்னை என்னுள் வியந்தவன் நான். வியக்கவைத்தவன் நீ! அதிலிருந்தே 'உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும், நிலை பெறுத்தலும் நீக்கலும், நீங்கலா அலகு இலா விளையாட்டு உடையவன் நீ' என்று உன்னைப் பாடினேன்.

அப்படிப்பட்ட அளவிட முடியாத உன் விளையாட்டுகளில் ஒன்றாகவே, நான் உமது அவதாரத்தைக் காப்பியமாக்கியதையும் அதை அரங்கேற்ற அலையும் இந்த நிகழ்வையும் கருதுகிறேன். சடையப்ப வள்ளலைக் கொண்டு என்னைத் தூண்டிவிட்ட நீ, யாரைக் கொண்டு அரங்கேற்றம் செய்துகொள்ளப் போகிறாய். வைணவரோ, சைவரோ என்னைப் போற்றுவதில் குறையேயில்லை. ஆயினும் அரங்கேறத் தேவைப் படும் சான்றோரின் பார்வை இக்காப்பியம் மேல் விழுவதில் காலம் கடந்துகொண்டே இருக்கிறதே. அரங்கம், அம்பலம் என்று நானும் அலைந்து கொண்டே இருக்கிறேனே...

பேசாமல், இவர்கள் யார் என்னை அங்கீகரிக்க... தவறு தவறு... உன்னை அங்கீகரிக்க என்று கேட்டு விட்டுவிடவா. உனது அங்கீகாரம் போதாதா எனக்கு. அழிவே இல்லாத உன்னிடம் வராமல், அழியப்போகும் - ஒரு நூற்றாண்டுகூட முழுமையாக வாழ இயலாத இவர்களிடம் நான் வந்து நிற்பதுதான் பிழையோ?

என்னை இப்படி கேள்விகளிலேயே வைத்திருப்பது உனக்கு அழகா... என்னுடைய எல்லா கேள்விகளையும் உனது திருமுன் வைத்து விட்டேன். விழித்திருப்போரே தங்களுக்குள் விழிப்பின்றி உறங்கித் திரியும் இவ்வுலகில், உறங்குவதுபோல் எப்போதும் விழித்திருக்கும் நீ அறியாத ஒன்றும் உள்ளதா என்ன?

இனி இந்த ராமாயணம் உன் பாடு. நீ வனத்தில் பட்டதைவிட, இந்த தினத்தில் இது படும்பாடு பெரும்பாடு. இது அரங்கேறி உலகம் உள்ளளவும் சான்றோர்களால் சிந்திக்கப்பட வேண்டும் என்று நீ விரும்பினால், இந்தத் தில்லை வாழ் அந்தணர்களைக் கேட்கச் செய். இல்லாவிட்டால் மணிவாசகனை ஆதரித்த மகாதேவன் போல், எனக்கு நீயே வந்து சான்றளிப்பாயாக!

இது... என் தமிழ், தெய்வத்தமிழ் என்றாயின், முதுமொழி, முதல்மொழி என்பது நிஜமாயின், அதன் மேல் நின்று உன்மேல் நான் செய்யும் சத்தியம்!"

கம்பர் சத்தியம் செய்த கையோடு அப்படியே ஓர் ஓரமாக அமர்ந்துவிட்டார். விரைவில் அவரை உறக்கம் தழுவிக்கொண்டது; உறங்கச் செய்தவன் அந்த கோவிந்தராஜன். அப்படி உறங்கவைத்தவன் அவரின் உறக்கத்துக்குள் கனவிலும் புகத் தொடங்கினான்!

‘‘கம்ப நாடனே! கவலைகொள்ளாதே.அலைவதும் திரிவதும் அனுபவம். உனது அனுபவம் உலகோர்க்கு ஒரு பாடம். உன் போன்ற கவிமணிகளைக் கொண்டல்லவா நல்ல பாடத்தை நானும் நடத்தமுடியும். நானே நரனாகி நடந்ததும் நடத்தியதும் அதனால்தானே. அறிந்திடு இந்த ரகசியத்தை...



விழித்தெழு! மூவாயிரவரில் ஒருவரின் பிள்ளையை அரவொன்று தீண்டி அவனாயுள் அவியப்போகிறது. செத்துப் பிழைக்கும் சித்த ஜாதகம் அவனுடையது. பிழைப்பிக்கப் போகிறவன் நீதான். அதனால்தான் திருவரங்க வைணவன் `திருச்சிற்றம்பலம் போ' என்றான். அம்பலத்து தீட்சிதனும் என் எல்லை சிறியதென்றான்.

செத்துக்கிடக்கும் அவனைக் காண மூவாயிரவரும் முனைப்போடு வருவர். வாழும் போது கூடாவிடினும் உடல் வீழும்போது கூடுவது உலகோர் வழக்கு. இல்லாவிட்டால், பித்ருசாபம் பெரும் நோயாகும் அல்லவா... எனவே, நீ அங்கே சென்று என் பொருட்டு நீ எழுதிய பாடலில் நாகபாச படலத்தில் வரும் `பல்லாயிரத்தின்' எனத் தொடங்கும் பாடலைப் பாடிடு.

ராமாயண வாழ்வு, ஒரு சத்திய வாழ்வு. ஆதலால் ராமாயணச் சிந்தனை, சத்திய சிந்தனை. ஆதலால் ராமாயண நாகபாசப் படலமும் சத்தியப் படலம். அந்தச் சத்தியப் படலத்துச் சொற்களெல்லாமும் மந்திரம்... மந்திரம்..!

அம்மந்திரம் அங்கோர் அற்புதம் நிகழ்த்தும். அதனால் துக்க வீடும் உனக்குத் தக்க வீடாகும். உன் பாடல்கள், வீடு பொருள் தருவன என்று எல்லோரையும் உணரச்செய்து, நீ கேட்ட சான்றை, நீ கேளாமலேயே தந்திடும்.

அதன் மூலம் கம்பனின் ராமாயணம் கம்பம் பிளந்து வந்த சிம்மனின் அம்சமென்பது உலகப் பொதுவாகும். வாணியின் மைந்தனே, உறங்கியது போதும் எழுந்திடு. இனி, உனக்கே காலம் புறப்படு!”

கம்பர் விழித்துக்கொண்டார். விழியில் நீர் மல்க, கோவிந்தராஜனை வணங்கிப்போற்றினார். அப்படியே அம்பலத்தானையும் சேவித்தார் ஒருபுறம் தூக்கமாய் தூங்குபவன், மறுபுறம் ஆட்டமாய் ஆடுபவன் - நடுவில் எனக்கொரு வழிப்போக்கு. என்னே இவர்களின் கருணை..!

விழிநீரைத் துடைத்தபடி வெளியே வந்தார். கண்ணீர் சிந்தியபடி ஓடும் அந்தணர்கள் மூலம், அரவம் தீண்டிய பாலகனின் வீடு எதுவெனத் தெரிந்தது. அங்கே சென்று நின்றபோது, மூவாயிரவரும் அங்கு கூடியிருந்தனர். மௌனமும் கண்ணீரும் மிகுந்திருந்த அந்த இடத்தில், அவர்கள் கம்பரைக் கண்டும் அவரை உணராத நிலையில் இருந்தனர்.

கம்பர், பிள்ளையின் உடலருகே சென்றார். அரவத்துளியால் அந்தப் பாலன் நீலன் ஆகியிருந்தான். வாழவேண்டிய வயது - சிலருக்கோ அது வாழ முடியாததாகி விடுகிறது!

எல்லாமே வினைப்பயன்! இல்லையெனில், முதுமைக்குப் பிறகே மரணம் என்று இளமை காட்டாறாக அல்லவா திரியும்!

கம்பர் அந்தப் பாலனின் தாய் தந்தையரைத் தேற்றி, "கண்ணீர் வேண்டாம். நல்லதே நடக்கும்" என்றார்.

பின்னர், "எம்பெருமான் சொல்லித்தான் இங்கே வந்துள்ளேன். அவனுடைய புகழைப் பாடும் ராமாயணப் பாடல்களில், நாகபாசப் படலம் என்றொரு கட்டம் உண்டு. ராவணனின் புதல்வன் இந்திரஜித் பிரயோகித்த நாகபாசம் எனும் அஸ்திரம், லட்சுமணனையும் சகல வானரர்களையும் வீழ்த்திய கட்டத்தைப் பொருளாய் கொண்டு பாடப்பட்டது.

ராமாயணத்தில் இந்தத் தருணத்தில் கருடன் அமிர்தத்துடன் வந்திட, அனைவரும் பிழைத்தெழுந்தனர். அன்று அங்கு நடந்தது உண்மையெனில், இங்கு இந்தப் பாலகனும் பிழைத்தெழுவான் கவலை வேண்டாம்" என்று கூறிவிட்டு, நாகபாசப் பாடலை பாடத் தொடங்கினார்.

*`பல்லாயிரத்தின் முடியா தபக்க*

*மவைவீச வந்த படர்கால்*

*செல்லா நிலத்தினருளோடு சொல்ல*

*வுடனின்ற வாளி சிதறுற்*

*றெல்லாமவித்து முணர்வோடுமெண்ணி...'*

கம்பர் உருக்கமாய்க் கரம் குவித்துப் பாடிய அப்பாடல், அங்கோர் அதிசயத்தை நிகழ்த்தத் தொடங்கியது.

எந்த அரவம் அந்தப் பாலகனைத் தீண்டியதோ, அது மூவாயிரவர் கூட்டம் நடுவே சரசரவென ஊர்ந்து வந்தது.

கூட்டத்தார் அஞ்சியும் துஞ்சியும் நிற்க, அது பாலகன் முன் வந்து படம் விரித்து நின்றது. பின்னர், பாலகனை முன்பு தான் தீண்டிய இடத்திலேயே தன் குறுவாயைப் பதித்து, தான் உமிழ்ந்த விஷத்தைத் தானே உறிஞ்சத் தலைப்பட்டது.

அந்தக் காட்சியைக் கண்டு அங்கு கூடியிருந்த அனைவரும் மெய்சிலிர்த்து நிற்க, பாலகன் பிழைத்தெழுந்தன். விஷத்தை உறிஞ்சிய அரவமோ சிறிது தூரம் சென்றபிறகு, அந்தப் பாலனின் பொருட்டு தன்னுயிரை விட்டது.

விதியின் ஒரு கணக்கு உயிரைத் தந்தது; இன்னொரு கணக்கு கம்பருக்கு உதவத் தொடங்கியது!

**-தொடரும்...**

## சூரியனின் வழிபாடு

**கா**ஞ்சிபுரத்துக்கு தெற்கே 26 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது வானவன் மாதேவிச்சுரம் வானசுந்தரேஸ்வரர் திருக்கோயில். தைப்பூச நாளன்று சூரியன் தனது ஒளிக்கதிர்களால் வானசுந்தரேஸ்வரரை தொட்டுத் தழுவி, பூஜிப்பது கண்கொள்ளாக் காட்சியாகும்!

**- எஸ். லதாசம்பத், திருச்சி-21**

## குழந்தை வரம் தரும் சந்தான ஸ்தம்பம்!

`**கா**ஞ்சியில் உள்ளோர் முனிவர்கள். அதன் கற்களெல்லாம் லிங்கங்கள். நீரெல்லாம் கங்கையே. அங்கு சொற்களெல்லாம் மந்திரங்களே. தொழில்களெல்லாம் இறைப் பணியே. ஆகையால் காஞ்சி, எமன் நுழைவதற்கு உரித்தன்று' என்கிறது பழைய பாடல் ஒன்று.



காஞ்சி காமாட்சி

காஞ்சி காமாட்சி, தேவர்களது பிரார்த் தனைக்கு இணங்க, பண்டாசுரனை அழிக்க பிலத் துவாரத்தில் இருந்து தோன்றினாள் என்கிறது தல புராணம்.

அன்னையின் ஆலயத்தில் உள்ள அஞ்சன காமாட்சி, சௌந்தர்ய லட்சுமி ஆகியோரின் சந்நிதிகள் சிறப்பானவை. பக்தர்கள், அம்பாளின் சந்நிதியில் பெறும் குங்குமத்தை அஞ்சன காமாட்சியின் சந்நிதியில் சமர்ப்பித்துவிட்டு, பின்னர் அங்கிருந்து குங்குமம் எடுத்து இட்டுக்கொள்வார்கள். தொடர்ந்து, சௌந்தர்ய லட்சுமியையும் தரிசித்து வழிபடுவார்கள்.

அதேபோல், காமாட்சியம்மனின் கருவறை முன் மண்டபத்தின் தென்புறம் வராஹி அம்மன் எழுந்தருளியிருக்க, அவள் எதிரே சந்தான ஸ்தம்பம் உள்ளது. இதை வலம் வந்து வழிபாடு செய்யும் தம்பதிக்கு, வம்ச விருத்தி ஏற்படும் என்பது நம்பிக்கை.

**- கீர்த்தனா ராமநாதன், சென்னை-4**

03 Dec 2019

# ரங்க ராஜ்ஜியம் - 44



ரங்க ராஜ்ஜியம்

எம்பெருமாளே வந்து உங்களுக்கு உதவிசெய்து ஒப்புதலும் பெற்றுத் தந்துவிட்டார். நாங்கள்கூட இது அவ்வளவு சுலபத்தில் நடவாத ஒரு காரியம் என்று எண்ணியிருந்தோம்.

*நாடிய பொருள் கை கூடும், ஞானமும் புகழுமுண்டாம்*

*வீடியல் வழிய தாக்கும், வேரியங் கமலை நோக்கும்*

*நீடிய வரக்கர் சேனை, நீலு பட்டழிய வாகை*

*சூடிய சிலையி ராமன், தோள்வலி கூறுவோர்க்கே!*

- **கம்பர்**

அந்தணச் சிறுவன் பிழைத்தெழுந்த அந்தச் சூழலில் அதுவரை நிலவிவந்த துக்கமெல்லாம் பறந்துவிட, தீட்சிதர் பெருமக்கள் அனைவரும் ஆனந்தத்தில் திளைத்தனர். அதேநேரம், அச்சிறுவன் பொருட்டு தன்னுயிரை விட்டுவிட்ட பாம்பின் உடலை, சிறுவனை எரிக்கவென உருவாக்கியிருந்த எரிமேடை விறகில் கிடத்தி, அதற்குத் தீயிட்டு, பிறகு அதன் சாம்பலை முறைப்படி ஆற்றில் கரைத்துத் திரும்பி வந்தனர்.

கம்பர் காத்திருந்தார்! வயது முதிர்ந்த தீட்சிதர் அவர் வந்த காரணத்தைக் கூறி, ``கம்பன் கவிக்கு நாம் சான்றளிக்கவேண்டும்'' என்று முடித்தார்.

``சான்றா... நாமா...'' எனக் கேட்டு விதிர்த்தவர் களும், ``கம்பரின் பாடல் சத்தியமான பாடல் என்பதற்குப் பிழைத்தெழுந்த நம் பாலகனே சாட்சி... அப்படியிருக்க இனி என்ன தயக்கம்?'' என்று கேட்டு மூவாயிரவரும் கையொப்பக் கீறலிடத் தயாராயினர். ஆயினும் அதில் ஒருவர், ``பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பதுபோல், நாம் நம் பொருட்டு ஒரு பாடலையாவது கேட்டு அதன் பொருளையறிந்தபிறகு கையெழுத்திடுவதே சாலச் சிறந்த செயலாகும்'' என்றார்.

கம்பரும் அதன் பொருட்டுத் தயாராகிக் காண்டம் காண்டமாய்த் தாம் படைத்த ஏட்டுக் கட்டுகளை அவர்கள் முன் வரிசையாய் அடுக்கி வைத்து, ``இவற்றில் எதிலிருந்து எந்தப் பாடல் குறித்துக் கேட்டாலும் நான் விளக்கமளிக்கத் தயாராக இருக்கிறேன்'' என்றார்.

உடனேயே அக்கூட்டத்தில் ஆழ்புலமை மிக்க ஓர் அந்தணர் ஒரு பாடலை உற்று நோக்கி அதைக் கம்பரிடம் காட்டி, ``இதைப் பாடி, பின் பொருள் கூறுக'' என்று சொல்ல, கம்பரும் அந்தப் பாடலைப் பாடலானார்.

*`நாடிய பொருள் கை கூடும்; ஞானமும் புகழுமுண்டாம்;*

*வீடியல் வழியதாக்கும்; வேரியங் கமலை நோக்கும்;*

*நீடிய அரக்கர்சேனை நீறுபட்டழிய வாகை*

*சூடிய சிலைராமன் தோள்வலி கூறுவார்க்கே'*

என்று பாடலைப் பாடிய கம்பர், பின் வரி வரியாகச் சொல்லிப் பொருள் கூறலானார்.

``நாம் நாடுகிற பொருள் விரும்பியபடி கைகூடும். நல்ல ஞானமும் புகழும் உண்டாகும். மோட்சமும் லட்சுமிநோக்கும் கிட்டும்... பெரும் அரக்கக் கூட்டமானது சாம்பல் ஆகிபின் நீரில் கரைந்து போகும் வண்ணம் வெற்றியைச் சூடிய ராமனின் தோள்வலிமை கூறுவோர்க்கு இவை எல்லாம் சாத்தியமாகும் என்பதே பொருள்'' என்று கூற, கூட்டத்தார் முகத்தில் வியப்பும் புன்முறுவலும் பூத்தபோதிலும் சிலருக்குள் சில கேள்விகளும் கிளைத்தன.



அதில் ஒருவர், ``கம்பர் பிரானே... ஸ்ரீராமன் பரமபுருஷன்! அவன் திருவடிகளைப் போற்றாமல் தோள்வலிமை கூறுவோருக்கு இவையெல்லாம் சாத்தியமாகும் என்கிறீரே... அவன் திருவடிகளை விடவா தோள்வலி பெரிது?" என்று கேட்டார்.

``தாடகை வதத்தில் தொடங்கி, சுபாகு வதம் புரிந்து, விஸ்வாமித்திர முனியின் வேள்வியைக் காத்து, பின் மிதிலையில் சிவ தனுசுவை ஒடித்து,

சீதையைத் திருமணம் முடித்து, அயோத்தி வரும் தருணம் பரசுராம னையும் வென்று, அதன் பின் வனவாசம் புரிந்த நிலையில் விராதன் என்பானை வென்று, தூஷணாதியரைக்கொன்று, மாய மானையும் கொன்று, கபந்த வதம் புரிந்து, ஏழு ஆச்சா மரங்களை ஒரு பாணத்தால் துளைத்து, வாலியை வதம் செய்து சுக்ரீவனுக்கு அரசப் பதவியளித்து, மகாராட்சசனை மடியச்செய்து, ராவணாதி இரட்டையர்களையும் வேட்டையாடி முடித்து, விபீஷணனுக்கு முடிசூட்டி என்று சகலத்தையும் சாதித்தது ராமனின் தோள்வலிதானே... அந்த வலிமையைச் சொல்வதுதானே ராமாயணம். எனவேதான் திருவடியைவிட தோள்வலியைக் குறிப்பிட்டேன். திருவடி சரணாகதிக்கே உரியது. தோள்வலிமை சாதனைகளுக்கும் சிலிர்ப்புக்கும் சிந்தனைக்கும் உரியதல்லவா..." என்று கேள்வி கேட்டவரிடமே திரும்பக் கேட்டார் கம்பர்.

அதற்கு மேல் கேள்வி கேட்க அங்கு யாருக்கும் தெம்பும் இல்லை, திராணியும் இல்லை. ஆயினும் ஒருவர் மிக வேகமாக முன் வந்து, ``உம் பாடலில் `நீடிய அரக்கர்சேனை நீறுபட்டழிய' என்ற வரிக்கு நீங்கள் கூறிய பொருளை நான் ஏற்கப் போவதில்லை. எம்பெருமானின் திருநீற்று மகிமையை நீங்கள் குறிப்பிட்டதாகவே நான் கருதுகிறேன். ராவணன் சிவபக்தன். நீறணியும் சிவபக்தரே ஆனாலும் பாவச்செயல் புரிந்தால், நீறின் மகிமையே அவர்களைப் பஸ்மமாக்கிவிடும் என்று தாங்கள் மறைமுகமாக உணர்த்துவதாகவே நாங்கள் பொருள்கொள்கிறோம்; அதைக் கருதி பாராட்டுகிறோம்" என்று ஒரு புதுவியாக்யானம் செய்ததோடு முதல் கையெழுத்தாகத் தன்

கையெழுத்தை இட்டு, கம்பரின் கையில் தந்து `வாழ்க உம் கவித்தொண்டு' என்று வாழ்த்தவும் செய்தார். அதன்பின் அவ்வளவு பேரும் கையொப்பமிட்டு ஏடுகளை ஒரு கட்டாகக் கட்டி கம்பரிடம் தந்திட, கம்பரும் தான்வந்த காரியம் வெற்றிகரமாக முடிந்த திருப்தியோடு திருவரங்கத் துக்குப் புறப்பட்டார்.

**தி**ருவரங்கம்! தில்லை வாழ் அந்தணர்களின் கையொப்பக் கீறல்கொண்ட ஏட்டுக்கட்டைக் கண்டு திருவரங்கம் வாழ் அந்தணர் தொட்டு அனைத்து வர்ணத்தாரும் பூரித்தனர்.

``கம்பர் பெருமானே... இது ஒரு காலால் இமயம் ஏறியது போன்ற சாதனை... எப்படிச் சாதித்தீர்?'' என்று கேட்க, கோவிந்தராஜப் பெருமாள் பெருங்கருணை புரிந்ததை கம்பர் கூற எல்லோரிடமும் சிலிர்ப்பு!

``எம்பெருமாளே வந்து உங்களுக்கு உதவிசெய்து ஒப்புதலும் பெற்றுத் தந்துவிட்டார். நாங்கள்கூட இது அவ்வளவு சுலபத்தில் நடவாத ஒரு காரியம் என்று எண்ணியிருந்தோம். எம்பெருமான் கிருபையால் இனிது முடிந்தது. இவ்வேளை இன்னொரு கருத்தும் இதன் பொருட்டு தோன்றுகிறது அதை நான் கூறலாமா?'' என்று கேட்டார் ஒருவர்.

``தாராளமாகக் கூறுங்கள்'' என்றார் இன்னொருவர்.

``முதல் மொழியாம் நம் தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட சிலர், காலத்தால் ஜைனர்க ளாகி நம் வழிமுறைகளிலிருந்தும் விலகிச்சென்று விட்டனர். அவர்கள் இப்போது திருநறுங்கொண்டை எனும் ஊரில் ஒன்றாகக்கூடி வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் இந்த ராமாயணத்தைக் கேட்கும்பட்சத்தில் இதில் குறை கூற முற்படுவர். ஆனால், இதில் குறையென்று கூற ஏதுமில்லாததால் ஒப்புக்கொண்டே ஆகும் ஒரு நிலைக்கும் ஆளாவர். எனவே, அவர்களும் இதைக்கேட்டு குறை காண முடியாது தோற்று, கையெழுத்திடட்டுமே... அது இந்த நூலின் பெருமைக்கு மகுடம் போல் விளங்குமல்லவா?'' என்றார்.

``இது எனக்கு அத்தனை சரியாகப்படவில்லை. விட்டால் இந்த உலகில் வாழும் சகலசமயத்தவரும் இனத்தவரும் கேட்டுக் கையொப்பமிட வேண்டும் என்றும் கூறுவீரோ?'' என்று கோபித்தார் ஒருவர்.

``அப்படியல்ல... இது காலத்தால் நிற்கப்போகும் காவியம். இதன் தொடக்கம் ஒரு வரலாறு - எனவேதான் கூறினேன்'' என்றார் அவர்.

கம்பர் சளைக்கவில்லை.

``உங்களுக்குள் தர்க்கம் வேண்டாம். நான் ஜைனர்களிடமும் கையொப்பக்கீறலைப் பெற்று வருகிறேன்'' என்று திருநறுங்கொண்டை சென்று சேர்ந்தார்.

**ஜை**னர்கள் பேரன்போடு வரவேற்றனர். தில்லையில் நடந்த அதிசயமறிந்து, ``அதைவிடவா எங்கள் சான்று பெரிது'' என்றனர்.

``இது உங்கள் தமிழ் இலக்கணப் பொருளறி வுக்கான வாய்ப்பு'' என்றார் கம்பர்.

``அங்கனமாயின் ஒரு பாடல் எங்களுக்குப் போதுமானது'' என்றவர்கள் ஒரு பாடலை எடுத்துப் பாடினர்.

*`உலகம் யாவையும் தாமுளவாக்கலும்*

*நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா*

*அலகிலா விளையாட்டுடையார் அவர் தலைவர்!*

*அன்னவர்க்கே சரண் நாங்களே*

இந்தப் பாடலை வைத்தே கேள்வி கேட்டனர்.

``இந்த உலகம், இதில் கோடானு கோடி உயிர்கள், பஞ்ச பூதங்கள், விண்ணில் சூரியன், நிலவு, நட்சத்திரங்கள்... மேலும் பல கோள்கள் என்று நம்மால் எண்ணிப் பார்க்கவே இயலாத சர்வத்தையும் படைத்த

இறைவனின் செயலைப் பொறுப்புள்ள செயலாகக் கருதாமல் விளையாட்டு என்று கூறக் காரணமென்ன?" என்று கேட்டனர்.

``அப்படி அவர் விளையாட்டாய்ச் செய்வாராயின் அவரைச் சிறுபிள்ளையாக அல்லவா கருத வேண்டியிருக்கும்?" என்றார் இன்னொருவர். மேலும் ஒருவர் முன்வந்து ``கீர்த்தி, சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம் என்று ஐவகை வினைப்பாடுகளை வேதம் சொல்கிறது. ஆனால் நீங்களோ படைத்தல், காத்தல், அழித்தல் எனும் மூன்றை மட்டும் குறிப்பிடுகிறீர். எல்லாம் ஒரு பரம்பொருளின் செயல்தானே... அதாவது ஒன்றுதானே?" என்று கேட்டு முடித்தார்.

கம்பரும் விளக்கமளிக்கத் தொடங்கினார்.





``அண்ட சராசரங்களைப் படைத்தும் காத்தும் பின் அழிப்பது அல்லது மாற்றங்கள் விளைவிப்பது மான அனைத்தும் பரம்பொருளின் செயலே. ஆயினும், அதை அப்பரம்பொருள் எனும் எம்பெருமான் பாரமாகக் கருதாமல், விளையாட்டாகவே வினைபுரிகிறான். இவ்வாறு விளையாட்டாகப் புரியும் வினையே இத்தனை பெரியதெனில் அவன் தீர்க்கமாய்ப் புரியும் வினைப்பாடு எத்தனை வியப்புக்குரியதாயிருக்கும் என்று எண்ணவைப்பதே என் வரிகளின் நோக்கம்" என்று கூறி, மற்ற கேள்விக்கும் பதில் கூற முனைந்தார். ஜைனர்கள் தடுத்து, ``இனியும் உம்மைச் சோதிப்பது தமிழுக்கு இழுக்கு சேர்ப்பதாம்" என்று கூறி, அனைவரும் கையொப்பமிட்டு ஏடுகளைக் கம்பரிடம் தந்து வணங்கினர்.

கம்பர் பெரிதும் மகிழ்ந்து திரும்பும் வழியில் மாமண்டூர் எனும் ஊரில் ஓர் இரும்புக்கொல்லைக் கருமானின் தமிழ்ப்புலமையைப் பற்றி அறிந்து, அவரிடம் சென்று தன் பாடல் வரிகளில் கருமார்களின் செயல்திறனை உவமை காட்டும் விதத்தில் எழுதப்பட்ட ஒரு பாடலைப் பாடிக் காண்பித்தார்.

*இருப்புக் கம்மியற்கு இழை நுழை ஊசி என்று இயற்றி*

*விருப்பின் கோடியால் விலைக்கெனும் பதடியின் விட்டான்*

*கருப்புக் கார்மழை வண்ணவைக் கடுந் திசைக் களிற்றின்*

*மருப்புக் கல்லிய தோளவன் மீளருமாயை'*

கருமானும் பெரிதும் மகிழ்ந்து தன் கையொப்பத் தையும் இட்டுத் தந்தார்!

இவ்வாறு கம்பர் ஊர் ஊராகச் சென்று ராமாயண அரங்கேற்றம் பொருட்டுப் பலரையும் சந்தித்து வருவதையும் எல்லோரும் அவருக்குக் கையொப்பமிட்டுத் தருவதையும் அறிந்த தஞ்சையைச் சேர்ந்த அஞ்சனாட்சி என்கிற தாசி, கம்பரைத் தானும் காண விரும்பினாள்.

அதன்பொருட்டு, `எல்லோரிடமும் கம்பர் கையொப்பம் பெற்றுவிடலாம் - எனக்குப் பொருள் சொல்லி என்னை வெல்ல அவரால் இயலாது' என்று அவர் காதுக்குச் செல்லுமாறு பேசினாள். கம்பர் கலங்காது அவள் மனை வாசலுக்கே வந்து நின்றுவிட்டார்!

அஞ்சனாட்சி அதிர்ந்தாள். அவள் இதைத் துளியும் எதிர்பார்க்கவில்லை. கம்பரோ, `பொருள் சொல்ல வந்தேன்' என்றார். அவரைப் பணிந்து வரவேற்று ஆசனமளித்து அவர் திருமுன் மண்டியிட்டு அமர்ந்தாள் அஞ்சனாட்சி.

பின், ``நீங்கள் இங்கு வருவீர் என நான் துளியும் எண்ணவில்லை!'' என்றாள்.

``நான் எங்கே வந்தேன்... என் தமிழ் வந்துள்ளது. என் ராமன் வந்துள்ளான். அவன் கால்பட்ட கல்லே பெண்ணானது. கவிபட்டு நீயும் தூய பெண்ணானால் அதுதானே நல்விளைவு'' என்றார் கம்பர். அதைக்கேட்டுக் கண்கலங்கிய அஞ்சனாட்சி

*`அம்பரா வணி சடையரனயன் முதல்*

*உம்பரால் முனிவரால் யோகராலுயர்*

*இம்பராற் பிணிக்கரு மிரம வேழஞ்சேர்*

*கம்பராம் புலவரைக் கருத் திருத்துவோம்'*

என்று தானறிந்த தமிழில் பாட்டாகவே பாடி, அதை அவர் கையில் கொடுத்ததோடு காலில் விழுந்து வணங்கி, ``நான் இனி தாசியல்ல சந்நியாசி'' என்றாள்!

**- தொடரும்**

17 Dec 2019

# ரங்க ராஜ்ஜியம் - 45



ரங்க ராஜ்ஜியம்

திருநறுங்கொண்டை ஊரில் ஜைனர்களின் கையொப்ப ஏடுகளைப் பெற்றுத் திரும்பும் வழியில், மாமண்டூர் இரும்புக்கொல்லை கருமானின் கையொப்பத்தையும்

*“எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழன் மேற் - சடையன் வாழ்வு*

*நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே - கம்பநாடன்*

*பண்ணிய விராம காதை பங்குனி யத்த - நாளில்*

*கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் - கேற்றினானே!''*

திருநறுங்கொண்டை ஊரில் ஜைனர்களின் கையொப்ப ஏடுகளைப் பெற்றுத் திரும்பும் வழியில், மாமண்டூர் இரும்புக்கொல்லை கருமானின் கையொப்பத்தையும் பெற்றார் கம்பர். தஞ்சையைச் சேர்ந்த அஞ்சனாட்சி, பாடலாகவே சமர்ப்பித்தாள். நிறைவாக, கம்பரின் மகன் அம்பிகாபதி,

*``கம்ப நாடனுமை செவி சாற்று பூங்*

*கொம்ப நாடன் கொழுநனி ராமப்பேர்*

*பம்ப நாடழைக்குங் கதை பாச்செய்த*

கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம்'' என்று ஒரு பாடலை எழுதிக்கொடுத்தான். அவை அனைத்தையும் கண்ட திருவரங்கத்தார், ``கம்பரே! நீர்வந்த வேளை பொன் வேளை. எங்கள் பரமாசார்யராகிய ஸ்ரீமன் நாதமுனிகள் ஆலயத்தில் எழுந்தருளியுள்ளார்'' என்றனர்.

அத்துடன், அவரை அழைத்துச்சென்று நாத முனிகளிடம் அறிமுகம் செய்துவைத்தார்கள். ஸ்ரீமன் நாதமுனிகளும் கம்பரை ஆசீர்வதித்து, ராமாயண ஏட்டுக்கட்டுகளைப் பெற்று வாசித்து மகிழ்ந்தார். ``நல்லதொரு முகூர்த்த நாளில், முகூர்த்த வேளையில் இக்காவியம் அரங்கேற்றப்பட நாம் எல்லோரும் உதவ வேண்டும்'' என்றும் கட்டளையிட்டார்.

கம்பர் மிகவும் மகிழ்ந்து கண்ணீர்மல்க அரங்கனின் திருச்சந்நிதிக்குச் சென்று நெஞ்சம்நெகிழ வணங்கி நின்ற வேளையில், அங்குள்ள பட்டர் ஒருவருக்குள் அரங்கன் ஆவிர்பவித்தான்.

``கம்பநாடனே! உன் ராமாயணப் பெரு முயற்சிக்கு என் வாழ்த்தும் பாராட்டும். எனினும் நீ, நம் சடகோபனைப் பாடினால்தான் யாம் பரிபூரணமாகப் பூரிப்போம்'' என்றான்.

சடகோபர்தான் நம்மாழ்வாராய் அறியப் பெற்றவர். முன்பு, மங்கை மன்னன் வேண்டியதன் பொருட்டு, `ஆழ்வானின் பிரபந்தம் முன்னும் வேதம் பின்னுமாய் முழங்கட்டும்' என்று கட்டளையிட்ட அரங்கன், இன்று நம்மாழ்வாரா கிய சடகோபனின் புகழைப் பாடும்படி கம்பரைப் பணித்தார். கம்பர் உள்ளம் நெகிழ்ந்தார்.



*``நஞ்சடகோபனைப் பாடினையோவென நம்பெருமாள்*

*விஞ்சிய வாதரத்தாற் கேட்பக் கம்பர் விரைந்துரைத்த*

*செஞ்சொலந் தாதிக் கலித்துறை நூறுந் தெரியும் வண்ணம்*

*நெஞ்சடி யேற்கருள் வேதந் தமிழ் செய்த நின்மலனே!''* என்ற பாடலால் இக்கருத்து தெரியவருகிறது. கம்பரும் அதன்பின் கட்டளைக்

கலித்துறையில் `வேதத்தின் முன் செல்க' என்று தொடங்கி `ஆழ்வாரந்தாதி' என்னும் சடகோபரந்தாதியைப் பாடினார்.

தொடர்ந்து ராமாயண அரங்கேற்ற வைபவம் தொடங்கியது. இந்த நிகழ்ச்சிக்குத் திருவரங்கம் வாழ் அந்தணர்கள், செல்வந்தர்கள், சேவையர் ஸ்மார்த்தர், மாத்வர் என்று சகலரும் திரண்டு வந்துவிட்டனர். விழாக்கோலம் பூண்டது திருவரங்கம்.

கம்பரை ஒரு ரதத்தில் ஏற்றி ஊரை வலம் வரச் செய்து, பின்னர் யானையின்மீது அமரச் செய்து, ஆலயத்துக்கு அழைத்து வந்தார்கள். கோயிலில் ஆயிரங்கால் மண்டபம் நிரம்பி வழிந்தது. பின்னர், ஸ்ரீமன் நாதமுனிகள் கம்பரின் ராமாயணத்தை ஆசீர்வதித்து அரங்கேற்றிட, கம்பரும் பாடல்களைப் பாடி பொருள் கூறலானார். இடையிடையே பலரும் குறுக்கிட்டு, பொருள் விளக்கம் கேட்டார்கள். அவர்களுக்கு விளக்கம் அளித்தவராகத் தொடர்ந்து தன் பாடல்களைப் பாடினார் கம்பர்.

இரணியன் வதைப்படலம் பாடும்போது அதன் பொருள் விளக்கத்தைக் கேட்டு, ஆலய வெளியிலுள்ள மேட்டழகிய சிங்கர் என்று அழைக்கப்படும் நரசிம்மப்பெருமானின் சிலை வடிவம் அசைந்து திருக்கரங்களை நீட்டித் தன் திருமுடியை விலக்கியபடி, வாயைத் திறந்து சிரித்து ஆர்ப்பரித்தது!

சிரிப்பொலியைக் கேட்டவர்களும் சிலையின் அசைவைக் கண்டவர்களும் சிலிர்த்தனர்; கம்பரால் கிடைத்த பாக்கியம் என்று மகிழ்ந்தனர்.

ஸ்ரீமன் நாதமுனிகள் கண்களில் நீர் பெருக, தனக்கும் மக்களுக்கும் கிடைத்த பாக்கியத்தின் பொருட்டு கம்பருக்கு நன்றி கூறியதுடன், ``இந்த ராமாயணத்தில் சிறு திருத்தம் செய்திட வேண்டுகிறேன்'' என்றார்.



அங்கிருந்த அனைவரும் ஸ்ரீமன் நாதமுனி களைத் திகைப்போடு நோக்கினர். `திருத்தம் செய்யுமளவுக்கு அப்படி என்ன பிழை உள்ளது' என்று சிலருக்குள் கேள்வி எழுந்தது. கம்பரிடம் லேசான நடுக்கம். ஏனெனில், `படாதபாடுபட்டு அரங்கேற்றம் ஆகியிருக்கிறது. இந்த நிலையில் ஸ்ரீமன் நாதமுனிகள் திருத்தம் வேண்டும் என்கிறாரே... அது எதுகுறித்தோ...' என்று உள்ளுக்குள் கலங்கினார்.

அப்போது, ‘‘அச்சம் வேண்டாம் கம்ப நாட்டாழ்வாரே..." என்ற ஸ்ரீமன் நாதமுனிகள் தொடர்ந்து, ‘‘ஆழ்வாரின் பாடல்கள் அனைத்தும் அற்புதம்... அமிர்தம். ஆனால்..." என்று இழுத்தார்.

முதலில் கம்பநாட்டாழ்வார் என்றும், பின்னர் ஆழ்வார் என்றும் ஸ்ரீமன் நாதமுனிகள் தன்னை அழைத்ததால் கம்பருக்குள் பூரிப்பு எழுந்தது. அதேநேரம் `ஆனால்...' என்று ஸ்ரீமன் நாத முனிகள் இழுத்ததும், தன்

உயிரையே அவர் நாண் கம்பியை இழுப்பதுபோல் இழுப்பதாக உணர்ந்து பதைபதைத்தார்.

“ஆழ்வாரே! இந்த நூல் ராமனின் புகழ் பாடும் திவ்ய சரிதம். அந்த ராமனும் அவதாரப் புருஷன். நாமெல்லாம் தர்மப்படி நடக்க வேண்டும் என்று சொன்னதோடு, அது எப்படி என்று வாழ்ந்துகாட்டிவிட்டும் சென்றவன். மனிதப் பிறப்பெடுத்தபோதிலும் அவர் மனிதன் இல்லை; தெய்வம். அப்படிப்பட்ட தெய்வத்தைப் போற்றிடும் நூலில், நீங்கள் உங்களை ஆதரித்த சடையப்ப வள்ளலை நூறு பாட்டுக்கு ஒரு பாட்டு எனும் வகையில் போற்றியுள்ளீர்களே... இது சரியா?” என்று கேட்டார்.

கம்பர் சற்றுத் தடுமாறினார். மௌனத்தையே பதிலாகத் தந்தார்.

“பதில் சொல்லுங்கள்... ஆழ்வாரே...''

“ஆழ்வாரா... நானா..?”

“ஆம்... ராமனைத் தமிழால் ஆண்ட நீர் ஆழ்வார் இல்லை என்றால், வேறு யார் ஆழ்வார்?”

“ஆஹா... பெரும் பாக்கியம்...”

“அந்த பாக்யாதிபதியைத்தான் கேட்கிறேன்... பதில் கூறுங்கள்...”

“உங்கள் கேள்வி என்னைப் பலவாறு எண்ணவைக்கிறது. தவறு என்கிறீர்களா, சரி என்கிறீர்களா என்பதே புரியவில்லை.”

“தவறு என்கிறேன்! இறைவனுக்கான துதி நூலில் மனிதத் துதி தவறு. ஆயினும், அது ஓர் அழகிய தவறு. நானொரு வழி சொல்கிறேன். நூறு பாடல்களுக்கு ஒருமுறை நன்றியின் நிமித்தம் வள்ளலைப் புகழ்ந்த நீங்கள், அவரை ஆயிரத்தில் ஒருவன் ஆக்குங்கள். அதாவது, ஆயிரம் பாட்டுக்கு ஒருமுறை பதிவு செய்யுங்கள்" என்றார்.

கம்பருக்கும் கூட்டத்தாருக்கும் புரிந்தது. ஒன்றைத் திருத்துவதன் மூலம் அதை மேலான இடத்துக்குக் கொண்டுசெல்வது என்பது இதுதான். கம்பர் அவ்வாறே செய்வதாகக் கூறினார். கூட்டம் ஆர்ப்பரித்தது!

அத்துடன் அனைவரும் சேர்ந்து காட்டழகிய சிங்கரின் சந்நிதிக்குச் சென்று, சிலிர்ப்போடு வணங்கி மகிழ்ந்தனர். திருவரங்க வரலாற்றில் அந்நாள் ஒரு பொன்னாள்!

**தி**ருவரங்க வரலாற்றுப் பாதையில் விக்ரமச் சோழனான அகளங்கனைத் தொடர்ந்து ஆலயத்தைப் பெரிதும் போஷித்தவன் சுந்தர பாண்டியத் தேவன். அவனுடைய காலம் 1230 முதல் 1284 வரை. அதாவது 34 வருடங்கள்.

இவனுக்குப் பெரிதும் சோதனையைத் தந்தவன் ஹொய்சாள மன்னன் வீரசோமேஸ்வரன். இந்த மன்னனும் திருவரங்கக் கோயிலைத் தன் கண்ணாகக் கருதிப் போற்றியவர்களில் ஒருவன்.

திருவரங்கம் ஆலயத்தில் இன்று காணப்படும் ஹொய்சாள மரபுச் சிற்பங்கள், இவன் பிடியில் கோயில் இருந்த தருணத்தில்தான் உண்டாக்கப்பட்டன.

ஒருமுறை, வீரசோமேஸ்வரனும் அவன் மனைவி உத்தம வல்லபியும் அரங்கனை தரிசிக்க வந்தனர். நடந்து சென்றால்தான் கோயிலின் எழிலை ரசிக்க முடியும் என்று எண்ணிய உத்தம வல்லபி நடக்க ஆரம்பித்தாள்.

கற்கள் பாவிய தரைப்பரப்பில் கால் கொலுசுகள் குலுங்க அவள் நடந்து செல்லவும் வீரசோமேஸ்வரனும் உடன் நடந்தான். விஸ்தாரமான கோயிலும் மண்டபங்களும், அவற்றின் சிற்பங்களும் மனத்தை வசீகரித்தன. அதுவரையிலும் நடைபெற்ற திருப்பணிகள், அதைச் செய்தவர்கள் பற்றி ஸ்ரீகாரியத்திடம் கேட்டுக்கொண்டே வந்தாள். அப்போது ராணிக்கு ஓர் எண்ணம் தோன்றியது.

தானும் தன் கணவனும் தங்களின் பெயர் விளங்கும்படியாக இந்தக் கோயிலுக்கு ஏதாவதொன்றை செய்ய வேண்டும் என்று தீர்மானித்தவள், அதுபற்றி அரசனிடமும் தெரிவித்தாள்.

"அரசர் பெருமானே! நம் ஹொய்சாள வம்சத்தின் பெருமை விளங்கும் வண்ணம் நாமும் அரங்கனுக்கு எதாவது பெரிதாகச் செய்திட வேண்டும்" என்றாள்.

"தேவி! ராமேஸ்வரம் முதல் தஞ்சை வரை பல கோயில்களுக்கு நிவந்தங்களையும் அந்தணர் களுக்குப் பல ஊர்களைத் தானமாகவும் அளித்தவன் நான். இங்கே நான் என்ன செய்ய வேண்டும் என்பதை நீயே சொல்" என்றான் வீரசோமேஸ்வரன்.

"அப்படியானால், அரங்கன் பள்ளி கொண்டிருப்பது போலும், அவரின் காலடியில் நாம் இருவரும் நின்று வணங்குவது போலும் சிற்பங்களை வடித்து நிறுவ வேண்டும்" என்றாள்.

அவள் கூறியதைச் செவிமடுத்த கோயில் ஸ்தானீகர்களும் ஸ்ரீகாரியமும் சற்றே சலனப்பட்டனர். அவர்களின் முகம் கோணுவதைக்கண்ட வீர சோமேஸ்வரன், காரணத்தைக் கேட்டான்.

ஸ்தானீகர்களில் பண்டிதர் ஒருவர் இருந்தார். அவர், "அரசர் பெருமான், நான் இப்போது சொல்லப் போவதைக்கேட்டு என்மேல் கோபம் கொள்ளக் கூடாது" என்று பீடிகையோடு தொடங்கினார்.

"எதுவாயினும் சொல்லுங்கள்" என்று தூண்டிவிட்டான் வீரசோமேஸ்வரன்.

``இந்த ஆலயம் அரங்கப் பெருமானாலேயே உண்டானது. இதை எவ்வளவு வேண்டுமானாலும் விஸ்தரிக்கலாம், மண்டபங்கள் அமைக்கலாம், கற்தூண்கள் எழுப்பலாம், சுற்றுப் பிராகாரம் கூட அமைக்கலாம். ஆனால், அரங்கனைப் போல் பிரிதொரு சொரூபம் இங்கே எங்குமே கூடாது" என்றார்.

“ஏன் அப்படி?”

“அவன் ஒருவனே பரபுருஷன் - அவனே பரமாத்மா. அவன் சயனக்கோலமும் ஒன்றே... அதுவும்கூட பிரம்மனால் உருவாக்கப்பட்டது. இங்கே மானுடர் கைகொண்டு உருவாக்கிய பல சிலா ரூபங்கள் உபசந்நிதிகளாய் உள்ளன. ஆயினும், பிரதானம் அரங்கநாதப் பெருமான் மட்டுமே. அவன் உருவை அப்படியே வார்க்க முற்படுவது, இந்த ஆலயத்தில் கூடாது. நான் என் விருப்பமாக இதைக் கூறவில்லை. சாஸ்திரம் சொல்வதையே சொல்கிறேன்” என்றார்.

வீரசோமேஸ்வரனுக்கும் அது ஏற்புடைய தாகவே இருந்தது. ஆனால், அவன் பத்தினி மறுத்தாள். “நீங்கள் சொல்வதை ஏற்க முடியாது. அவனே பரமாத்மா என்பதில் மாற்றில்லை. ஆனால், அவனது சிலா ரூபம் ஒன்றுதான் இருக்க வேண்டும் என்பது எனக்குச் சரியாகப்படவில்லை" என்றாள்.

அதனால் அங்கொரு சர்ச்சை உருவாகி விட்டது. வீரசோமேஸ்வரனுக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. இறுதியில் ராணியின் விருப்பப்படி சிலா ரூபம் செய்ய முடிவாகி சிற்பி ஒருவரிடம் பொறுப்பும் ஒப்படைக்கப்பட்டது. அவரும் கோயிலுக்குள் தான் உருவாக்கப்போகும் பெருமாளின் சந்நிதி அமையப்போகும் இடத்தை ஆலயத்துக்குள் தேடலானார்.

அப்போது கிளி மண்டபம் பக்கமாய் வந்தவர் ஏராளமான கிளிகள் படபடப்பதையும் பார்த்தார். அப்போது இரண்டு கிளிகள் பேசிக்கொள்ள ஆரம்பித்தன. அதில் ஒரு கிளியின் பெயர், மந்தாகினி. இன்னொரு கிளியின் பெயர், சுபாஷினி.

சுபாஷினி கிளி, மந்தாகினியிடம் கூறத் தொடங்கியது. “மந்தாகினி யாக்கா... நான் சொல்வதை நன்றாகக் கேட்டுக்கொள். இவன் ஒரு சிற்பி. நம் அரங்கநாதரைப் போலவே ஒரு சிற்பம் செய்து இங்கே வைக்க நினைக்கிறான்" என்றது.

“பாவம்... உளிபட்டு இவன் கைதான் காயப்படப்போகிறது” என்றது மந்தாகினி.

‘`காயம்படப்போகிறதா... காரணம்?”

“எம்பெருமான் சிலை வடிக்க எம்பெருமா னிடம் அனுமதி கேட்க வேண்டாமா?”

“ஏன் இவன் கேட்கவில்லையா?”

``எங்கே கேட்டான்? அரசன் சொல்லவும் இடம்பார்க்க வந்து விட்டான். அது மட்டுமல்ல... சிலையில் தன் உருவத்தையும் இவன் பதிவு செய்ய திட்டமிட்டுள்ளான். தினமும் ஆயிரமாயிரம் பேர் வந்துசெல்லும் இந்த ஆலயத்தை இவனும் சரி, அந்த அரசியும் சரி... தங்கள் பெயர் விளங்கப் பயன்படுத்தப் பார்க்கின்றனர்.”

“அதிலென்ன தவறு... இவர்களைப் பார்த்துவிட்டு இன்னும் பலரும் இதுபோல் முன் வருவதோடு இதனால் வரலாறும் உருவாகு மல்லவா?”

“வரலாறு மட்டுமா உருவாகும்... சிலையாகி விட்டால் வழிபடப்படுவார்கள். அப்படி நடந்தால் இவர்களும் பெருமாளுக்கு இணையா கிடுவர். இணையாவதா பெரிது... இவர்களால் எம்பெருமான்போல் அருள முடியுமா?”

- அந்தக் கிளிகளின் பேச்சைக் கேட்ட சிற்பிக்கு மனம் சலனமடைந்தது. அவை சாதாரண கிளிகள் அல்ல. தேவ புருஷர்களோ, இல்லை... ரிஷிகளோ, முனிகளோ சாபத்தால் இப்படி ஆகியிருக்க வேண்டும் என்றும் தோன்றியது.

**- தொடரும்**

31 Dec 2019

# ரங்க ராஜ்ஜியம் - 46



ரங்க ராஜ்ஜியம்

மந்தாகினி! நீ சொல்வதைப் பார்த்தால், அருளவல்லவருக்குத் தான் சிலாரூபம் உகந்ததா?”

***கொண்டல் வண்ணனைக் கோவல னாய்வெண்ணெய்***

***உண்ட வாயன்என் னுள்ளம் கவர்ந்தானை***

***அண்டர் கோனணி யரங்கன்என் னமுதினைக்***

***கண்ட கண்கள்மற் றொன்றினைக் காணாவே***

- **திருப்பாணாழ்வார்**

**கி**ளி மண்டபத்தில் கிளிகளுக்கு இடையே சம்பாஷணை தொடர்ந்தது. சுபாஷினி என்னும் கிளி மந்தாகினி என்னும் கிளியிடம் கேட்டது: “மந்தாகினி! நீ சொல்வதைப் பார்த்தால், அருளவல்லவருக்குத் தான் சிலாரூபம் உகந்ததா?”

“ஆமாம். உன்னை வணங்குவோருக்கு நீ ஏதேனும் செய்ய வேண்டாமா?”

“அப்படியானால், இன்னாருக்குத்தான் சிலை வடிக்கவேண்டும் என்று சாஸ்திரம் ஏதாவது உண்டா?”

``ஏன் இல்லாமல்... `சிற்ப சிந்தாமணி' என்று விஸ்வகர்மா அருளி செய்த சிற்ப சாஸ்திர நூல் உரிய இலக்கணம் வகுத்துள்ளது. ஒரு சிற்பியைப் பொறுத்தவரையில், உருப்பெறாத கல்கூட தெய்வம். அவன் கல்லை மிதிக்க நேரும்போது... ஆற்றில் இறங்குவோர் முதலில் தங்கள் கரங்களால் ஆற்றைத் தீண்டிவிட்டுப் பின் ஆற்றுக்குள் கால் வைப்பது போல, கல்லைக் கைகொண்டு தொட்டு வணங்கிய பிறகே கால் வைக்கவேண்டும்.

அடுத்து உயிரோடிருப்போருக்குச் சிலை வடித்தல் கூடாது. படி, பீடம், தூண், விதானம், தளம், சுவர், கதவு, ஜன்னல் என்று எதை வடிக்கும் போதும் குரு வந்தனமும் உளி வந்தனம் எனும் கருவி வந்தனமும் புரியவேண்டும். உயிரற்றவர்களில் குருவாய் வாழ்ந்தவருக்கே சிலா ரூபம் எழுப்பலாம்.

வணங்கத்தகா ரூபங்கள் எனும் வகையில், கலா ரூபமாய் எதையும் வடிக்கலாம். எதை வடித்தாலும் உருவேற்றலும் கண் திறத்தலுமே சிலா ரூபத்துக்கு உயிரைத் தரும். இதில் 32 லட்சணங்களோடு வடிக்கப்படும் உயிர் ஜீவன்களின் சிலைக்கு மந்திரத்தால் உயிர் கொடுத்து எழுப்ப முடியும். 32 லட்சணம் பொருந்திய ஒரு நந்தி சிலைக்கு சித்தன் ஒருவன் அதன் மூக்கில் ஜீவ வாயுவை ஊதி, மந்திரம் ஜபிக்கவும் நந்தி உயிர்த்தெழுந்து நடமாடியது. நீ இதை எல்லாம் கேள்விப்பட்டதில்லையா?”



“அடேயப்பா... சிற்ப சிந்தாமணியை வாசித் தவள் போலவே பேசுகிறாயே, முடிவாகச் சொல்...

இந்தச் சிற்பி, ராணியின் விருப்பத்தை ஈடேற்றி னால் என்னவாகும்?”

“இவனால் ஈடேற்ற முடியாது. அஷ்டதிக் பாலகர்கள் இவனை ஈடேற்ற விடமாட்டார்கள். அழியும் தன்மை கொண்டோருக்கு, அழியாத் தன்மைகொண்ட சிற்பங்கள் எதிரானவை.”

“நம் பேச்சை அந்தச் சிற்பி கேட்கிறான்போல் தெரிகிறதே?”

“அதனால்தான் நானும் பேசுகிறேன். இந்த உலகில் எம்பெருமானுக்கு நிகராய் எதுவும் இல்லை. எனவே, விண்ணிலிருந்து மண்ணுலகம் வந்த அவனைக்கொண்டு ஒரு தனி ஆலயம் எழுப்பலாம். ஆனால், எக்காரணம் கொண்டும் ஒரே ஆலயத்தில் இரு சந்நிதிகளோ, நரஸ்துதியோ கூடவே கூடாது.”

கிளிகள் பேசி முடித்ததோடு பறந்து செல்லத் தொடங்கின. சிற்பிக்கு அவற்றின் பேச்சைக் கேட்டு தெளிவு பிறந்தது. அவன் கைவசம் இருந்த கருவிப் பெட்டகத்தில் மட்டக் கருவிகள், கோலாடி கோள், வட்டத்

திகிரி, குழிக்காய்ச்சி, சிற்றுளி, பேருளி, சிகையுளி என சகலமும் இருந்தன.அந்தப் பெட்டகத்தைச் சுமந்தபடி பெருமானின் சந்நிதிக்குச் சென்றான்.

“ஐயனே.. என்னைக் கிளிகளின் வடிவில் வந்து தடுத்தாட்கொண்டாய். பெரும் பிழைபுரிய இருந்தேன். நல்லவேளை காப்பாற்றிவிட்டாய்” என்று வேண்டி கொண்டு புறப்பட்டான்.

சிற்பி சொல்லாமல் கொள்ளாமல் ஒருபுறம் செல்ல... வீர சோமேஸ்வரன் கனவில் அவனுடைய குருவின் பிரவேசம் நிகழ்ந்தது. மன்னர் தம்மை முன்னிறுத்திக்கொள்ளும் செயலை கைவிடச் சொன்னார். நீ வடிக்கும் கலைச் சிற்பங்களே உன்னை நினைக்கவைக்கும் என்று கூறிட, அதன்பின் உத்தமவல்லி அடம்பிடிக்கவில்லை.

அரங்கன் ஆலய அனுபவங்கள் பலவற்றில், சிற்பம் தொட்டு இப்படியோர் அனுபவம். பிற்காலத்தில் வீர சோமேஸ்வரனை முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் வெற்றிகொண்டு கர்நாடகம் நோக்கி ஓடும்படிச் செய்தான்.

கி.பி 1252 முதல் சுந்தரபாண்டியன் வசம் சோழ நாடு மட்டுமல்ல; தொண்டை நாட்டுத் தலைநகரான காஞ்சிபுரமும் வயப்பட்டது. அதனால் இவனுக்கு ‘எம்மண்டலமும் கொண்ட பெருமாள்’ என்கிற பெயரும் ஏற்பட்டது. இவன் தமிழகம் கடந்து நெல்லூர் வரை தன் ஆளுமையில் நாட்டை வைத்திருந்தான்.

இவனுக்குத் திருவரங்கப் பெருமான் மேல் அளவுகடந்த பக்தி இருந்தது. இவனே திருவரங்கப் பெருமான் கோயில் கோபுரத்தைப் பொன்னால் முதன்முதலில் வேய்ந்தவன். அதன் நிமித்தம் தனது எடைக்கு எடை துலாபாரம் அளித்தான். இவனை மையமாக வைத்து, ‘சுந்தரபாண்டியம் பிடித்தேல்’ என்றோர் `அருளப்பாடு' உருவானது. இதன் பின்புலத்தில் ரசமான சம்பவம் ஒன்றும் நடந்தது.

ஒரு திருநாளில் எம்பெருமான் திருவீதி உலா வந்து மண்டபங்களில் எழுந்தருளி பக்தர்களுக்கு அருளும்போது, திருவாராதனை புரிவது வழக்கம். அப்போது அலங்கார ஆசனத்தில் திருக் கண்ணாடி காட்டுதல் என்றொரு சடங்கும் உண்டு. அன்று பெரும்பாலும் தூய வெள்ளித் தட்டுகள் கண்ணாடிகளாக முகத்தைப் பிரதிபலித்தன.

குறிப்பிட்ட வைபவ வேளையில் அர்க்ய, பாத்ய ஆசமனீயங்கள் சமர்ப்பிக்கப்பட்டு, பின் அந்தத் தீர்த்தங்கள் ஒட்டுமொத்தமாய் `திருப்படிக்கம்' என்னும் வெள்ளிப் பாத்திரத்தில் சேர்க்கப்படும்.

அவ்வாறு அர்க்ய பாத்ய ஆசமனீயங்கள் சமர்ப்பிக்கப்படும் ஒருநாள், திருப்படிக்கம் பாத்திரத்தைக் காணவில்லை. ஆராதனை புரியும் அர்ச்சகர் எங்கு தேடியும் கிடைக்காமல் தவித்து நின்றார். அப்போது அருகில் நின்று சிந்தித்தபடி இருந்த சுந்தரபாண்டியன் தன் ராஜ கிரீடத்தைக் கழற்றி, அதைத் தலைகீழாகப் பிடித்து அதில் அந்த ஆசமனீய தீர்த்தத்தை ஏந்திப் பிடிக்க முன்வந்தானாம்.

அரசர்களுக்கு ராஜகிரீடம் என்பது உயிரைப் போன்றது. அதை ஒருபோதும் எவருக்காகவும் இழக்கமாட்டார்கள். ஒரு பெண்ணின் திருமாங்கல்யம் போன்றது சிரசில் அமைந்திடும் ராஜ கிரீடம்.

அப்படிப்பட்ட கிரீடத்தை எம்பெருமான் பொருட்டு ஏந்திப்பிடித்து எம்பெருமான் முன் தன்னை ஒரு திவ்ய தொண்டனாக சுந்தர பாண்டியன் ஆக்கிக்கொண்டான். அதனால், அன்று முதல் எப்போது திருவாராதனம் நடந்து ஆசமனீய தீர்த்தம் பிடிக்கப்பட்டாலும் அந்தப் பாத்திரத்துக்கு ‘சுந்தர பாண்டியம் பிடித்தேல்’ என்கிற ஓர்அருளப்பாடு உருவாக்கப் பட்டு அழைக்கப்பட்டது.

திருவரங்கத் திருவாராதனத்தில் வேறு எந்த அரசனுக்கும் இந்த கௌரவம் கிடையாது. இத்துடன் சுந்தர பாண்டியன் அன்று அணிந்திருந்த கிரீடம் எனப்படும் கொண்டைவடிவ அணிகலனைத் தான் எம்பெருமானும் அணியலானான்.

மன்னனின் இந்த அரிய செயல்பாடுகளும் அரங்கன் மேலான பக்தியும் திருப்பூந்துருத்திக் கல்வெட்டில் காணப்படுகின்றன. இவனது புகழைப் பாடும் தமிழ் மெய்க்கீர்த்தி 'பூமலர் வளர் திகழ' என்று தொடங்குகிறது. இதுவே க்ரந்த மொழியில் 'சம்ஸ்த ஜகத் ஆதார' என்று தொடங்குகிறது.

இவன் பெரும் வீரனாகவும் வெற்றியாளனாகவும் திகழ்கிறான். நரசமண்டலக் கல்வெட்டு ஒன்று இவனை, 'எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தர பாண்டியன்' என்கிறது. கி.பி 1256-ம் ஆண்டு, திருப்பூந்திருத்தியில் இவனால் உருவாக்கப்பட்ட கல்வெட்டு பல அரிய செய்திகளைக் கூறுகிறது.



இவன் வரையில் ஒரு ரசமான இன்னொரு சம்பவமும் உண்டு. இவன் தனக்குக் கட்டுப்படாதவர் களை இரக்கமின்றி தண்டிப்பவனாகவும் இருந்தான். பல சைவர்கள் இவன் வைணவத்தை ஆராதிப்பதை விரும்பவில்லை. அவர்கள் இவனை சில காலம் தங்கள் கைகளில் வைத்துக்கொள்ள முயன்று தோற்றுப்போய் இவனை இகழ்ந்தனர். ஆயினும் இவன் அயர்ந்துவிடாமல் தன்னை எதிர்ப்போரைத் தண்டித்தான். தண்டித்தவிதம் அசாத்தியமானது. அவர்களுடைய பொருள்களை அரசாங்கச் சொத்தாக்கி, அவர்களில் பலரை நாடு கடத்தினான்.

அப்படி அபகரித்த சொத்துகளை எல்லாம் ‘திருவரங்கப் பெருமானுக்கே சேரட்டும்’ என்று மூட்டை மூட்டையாகக் கட்டி எடுத்துவந்து திருச்சந்நிதி முன் குவித்தான். அவை ‘எம்பெருமானுக்கே சொந்தம்’ என்றவன், அதன் நிமித்தம் ஓலை எழுதி அதை உரியோர் கொண்டு சாசனப்படுத்தினான்.

பொற்காசு, பொன்படி, பொன் மாலை, தங்க வைர கிரீடங்கள், காசு மாலை, அட்டிகை, கங்கணம், கடகம், ஒட்டியாணம், ரவிச்சுடர் மாலை, பவளச்சங்கிலி சிலம்பு, கொலுசு, மெட்டி, பட்டயம், பதாகை, மோதிரம், நகமேவி, தொப்புளாக்கி, அரைஞாண் தங்கப்பூண், செவிமாட்டி, தோடு, தொங்கட்டான், புல்லாக்கு, ரத்னச் சுட்டி, கவச கண்டி என்று வகை தொகையின்றி அவை இருந்தன. ஒருவர், எம்பெருமானுக்குக் காணிக்கையாகத் தருவதை, பல சான்றோர் முன்னிலையில் காட்சிப்படுத்தி, கோயில் பட்டயக்காரரைக் கொண்டு ஆவணப்படுத்திய பிறகே அதை ஏற்பது அன்றைய வழக்கம்.

பட்டயக்காரரால் கோயிலுக்கு வந்து தங்கத்தை எடையிட்டுக் கணக்கிட இயலாதபடி அவரது உடல்நலம் பாதிக்கப்பட்டால், அந்த மூட்டைகள் திருச்சந்நிதி முன்னால் உள்ள மண்டபத்தில் கேட்பாரற்ற பொருள் போல் பல மாதங்கள் கிடக்கும் நிலை ஏற்பட்டது. இதை நல்ல சகுனமாய் கருதாமல் அரங்கனிடமே உத்தரவு பெற்றிட ஆலய ஸ்தானீகம் முடிவு செய்தது.

பூக்கட்டிவைத்துக் கேட்பது என்றொருமுறை. ஓர் ஆல இலையில் தாமரை இதழை வைத்துக் கட்டுவர். இன்னொன்றில் துளசியை வைத்துக் கட்டுவர். இரண்டில் ஒன்றை ஆலயத்துக்கு வரும் மூன்று வயதுக்கு மிகாத சிறுமியை அழைத்து அவளுக்குத் திருமண் காப்பிட்டு, அரங்கன் மேல் கிடந்த வஸ்திரத்தை எடுத்துச் சாத்தி, பாகை அணிவித்து அவளை ரங்கநாயகியாக பாவித்து எடுக்கச் சொல்வர்.

அவள் தாமரை இதழை எடுத்துத் தந்தால் ‘அதை ஏற்கலாம்.’ துளசி வந்தால் ‘அப்போது விருப்பமில்லை’ என்று பொருள்.

சுந்தரபாண்டியன் வரையில் துளசியே வந்தது. அந்தத் தங்கம் அவ்வளவும் மண்டபத்திலேயே பல காலம் கிடந்தன.

கிட்டத்தட்ட இரண்டாண்டுகள்...

இதனால் மனம் தளர்ந்த சுந்தரபாண்டியன், இறுதியாக ஒரு முடிவுக்கு வந்து அரங்கன் நிமித்தம் தன்னை வருந்திக்கொண்டு ஏகாதசி விரதம் இருந்து, காவிரியில் நீராடி தினமும் அங்கப்பிரதட்சணமும் புரிந்தான். அதன் விளைவாக அந்த ஆபரணங்களை ஒருநாள் அரங்கன் ஏற்றுக்கொண்டு அருளினான்.

பொன்னும் பொருளும் பக்தியைவிடப் பெரியதில்லை என்பதை உணர்த்துகிறார்போல் நடைபெற்ற இச்சம்பவம் திருவரங்க வரலாற்றில் இடம்பெற்றுவிட்ட ஒன்று. இவனே பத்து பேர் கொண்ட ஒரு வாரியத்தையும் அமைத்தான். இவர்கள் கோயில் நிர்வாகத்தைக் குறைவின்றி நடத்தினர். ஒரு கட்டத்தில் தன் சிம்மாசனத்தையே அவன் அரங்கனுக்கு வழங்கி, தான் அருகில் ஒரு தொண்டனாய் நின்றான். பன்னிரு காப்போடு அவன் நின்ற விதம் கண்டு அவ்வளவு பேரும் வியந்தனர். ராஜ மகேந்திரன் திருவீதியில் தெற்குத் திருவாசல் தொட்டு, சுற்றுத் திருநடை மாளிகைகள் உட்பட பல மண்டபங்கள் இவனால் உண்டாக்கப்பட்டவையே!

தொண்டில் இவன் செலுத்திய கஜ துலாபாரம் விசித்திரமானது!

**- தொடரும்...**

28 Jan 2020

# ரங்க ராஜ்ஜியம் - 47



ரங்க ராஜ்ஜியம்

இதற்கான சான்று சிதம்பரத்தில் உள்ள சுப்ரமணிய பிள்ளையார் கோயில் வடக்கு சுவர்க் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

**சு**ந்தரபாண்டியனின் கஜ துலாபாரம் விசித்திரமானது. அசாத்தியமானது. பொன்னால் ஒரு படகு செய்து அதில் தன் பட்டத்து யானையை நிறுத்தி, அதில் அவன் அமர்ந்த நிலையில் - அருகில் மற்றொரு படகை நிறுத்தி - தன் படகு நீரில் அமிழ்ந்த அளவுக்கு அந்தப் படகில் தங்கக் கட்டிகளை வைத்து கஜ துலாபாரம் செலுத்தினான். 19 அடி உயரமுள்ள யானை மேல் அமர்ந்து (ஏழு தச்சு முழ அளவு) அவன் கஜ துலாபாரம் அளித்ததை அப்போதைய ஸ்தானீகர்கள் 'கோவிலொழுகு' எனப்படும் கோயிலுக்கான பதிவில் குறித்தும்வைத்தனர்.

இத்தங்கத்தைக்கொண்டே அரங்கப் பெருமானின் பிரணவாகார விமானத்துக் குப் பொற்கூரையும் வேயப்பட்டது. இதனால் இவனை சாஸ்திர பண்டிதர்கள் 'ஹேமச்சந்தன ராஜா' என்று அழைத்தனர். இவனுக்கும் தன்னுடைய உருவத்தைப் பொன்னாலேயே செய்து அதை கோயிலில் வைத்து பிறர் தன்னை புகழ வேண்டும் என்கிற வேட்கை உண்டானது. ஆனால், வீரசோமேஸ்வரனுக்கு ஏற்பட்ட அனுபவத்தைக் கூறி ஸ்தானீகர்களும் மந்திரிப் பிரதானிகளும் தடுத்து விட்டனர்.

ஆகவே, அந்த விருப்பத்தைச் சற்று மாற்றி 'ஹேமச்சந்தன ராஜஹரி' என்கிற விஷ்ணு விக்கிரகத்தைத் தங்கத்தால் செய்து திருக்கோயிலில் எழுந்தருளச் செய்தான். இவன் செய்த காரியங்களில் மகத்தானது ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்திடச் செய்த முயற்சிதான். பழைய செல்லரித்த சுவடிகளில் உள்ளவற்றைப் புதியதில் படியெடுத்தான். அதற்கெனப் பல பண்டிதர்களை நியமித்தான். இவர்கள் விக்கிரமச் சோழன் திருக்கை ஒட்டி என்னுமிடத்தில் அமர்ந்து இத்திருக்காரியங்களைச் செய்தனர். அத்துடன் வரலாற்றை அறிய வருபவருக்கு வாசித்துக் காட்டுதல், அவர்களுக்கு ஓலையில் எழுதி வழங்குதல் போன்ற பணிகளைச் செய்தனர். இதனால் ஓலைப்பண்டிதர்கள் என்றொரு கூட்டமே வாழ்வு பெற்றது. இவர்கள் வசிக்க வீடும், நிவந்தமாக நிலங்களையும் வழங்கி அவர்களைப் போஷித்தான்.

இதற்கான சான்று சிதம்பரத்தில் உள்ள சுப்ரமணிய பிள்ளையார் கோயில் வடக்கு சுவர்க் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

திருவரங்கச் சிறப்புகளுள் பிரதானமான சிறப்போடு பல ஆச்சர்யங் களையும் தன்னகத்தே கொண்டதுதான் ஆயிரங்கால் மண்டபம். பெயர்தான் ஆயிரங்கால் மண்டபம். ஆனால், எண்ணினால் 979 தூண்களே இருக்கும். மீதமுள்ள 21 தூண்களுக்குப் பதிலாக தென்னை மரத்தண்டுகள் தூண்களாக நிறுவப்பட்டு உற்சவம் இங்கு நடைபெறுகிறது. விண்ணில் பரமபதத்தில் 1000 கால்களுடன் திருமாமணி மண்டபம் இருப்பதால், மண்ணில் கூடாது என்பதாலோ என்னவோ 21 மரத் துண்டுகள் கொண்டு 1000 ஆக்கப்படுகிறது.



இதன் பின்புலத்தில் வேறுசில சங்கதிகளும் உண்டு.

பொதுவாக ‘ஆயிரங்கால் மண்டபம்’ என்பதைச் சிற்ப சாஸ்திரம் அறிந்த வல்லோர், ‘ஆயிரம் கால மண்டபம்' என்றும் கருதுவர். அதாவது அது ஆயிரம் ஆண்டுக் காலத்துக்கு உறுதி குன்றாது திகழ்ந்திடும் என்பது நுட்பப் பொருள்.

இப்படி ஒரு மண்டபத்தைக் கட்டுவதைவிட, கட்டியதைத் தூய்மையுடன் உற்சவங்கள் நிகழ்த்திப் பேணுவது மிக முக்கியம்.இல்லாவிட்டால் துஷ்ட சக்திகள் இதனுள் நுழைந்துவிடும். அவ்வாறு நுழைந்துவிட்டால்

அவற்றை விரட்டுவது மிகக் கடினம். அவை மண்டபத்தின் இருண்ட மூலைகளை விடாது ஆக்கிரமிக்கும். இதனால் மண்டபத்துக்குள் வவ்வால்கள் அடைந்து கழிவு நாற்றம் மிகும். வவ்வாலை விழுங்கிட அரவங்கள் உள் நுழையும். பெரும்பாலும் மலைப் பாம்புகளே இதுபோன்ற இருண்ட கதகதப்பான பகுதிகளைத் தேடி வரும்.இதனால் ஆயிரங்கால் மண்டபம் உள்ள ஊரே தீய சக்தி மிகுந்ததாகி ஒருகட்டத்தில் மனிதர்கள் வாழவே முடியாத ஓர் ஊராகிப் பாழடைந்து போகும்.

இதே மண்டபத்தில் தினமும் உற்சவங்கள் நடந்து, மேளதாள சப்தங்கள் பரவி, கந்தப் புகைவாசம் வீச, பலரும் வந்து நிம்மதிப் பெருமூச்சுவிடும் நிலையில் அந்த மூச்சின் வெப்பமும் பரவி, அதன் காரணமாய் நல்ல மழைப் பொழிவு உண்டானால் அந்த ஊர் சுபிட்சமாக இருக்கும். இதனால்தான் நிறைந்த விழாக்கள் தொடர்புடைய கோயிலில் இம்மாதிரி மண்டபங்கள் கட்டப்பட்டன. இப்படிப்பட்ட மண்டபங்கள் பெருமழைக் கால வெள்ளத்தின்போது மக்களைக் காப்பாற்றும் இடங்களாகவும் திகழ்ந்தன. திருவரங்கத்தில் இம்மண்டபம் வருடம் முழுக்க ஜகஜ்ஜோதியாய் திகழ்ந்தது. அதேவேளை, ஆட்சி மாற்றம், கால மாற்றம் நேரும் தருணங்களில் சற்று தேக்கம் ஏற்பட்டதும் உண்டு. அப்படியான நிலை ஏற்படும்போது கெடுதல் ஏதும் ஏற்பட்டுவிடக்கூடாது என்று எண்ணிய சாஸ்திரம் அறிந்த மனிதர்கள் சிலர், மண்டபத் தின் கால்களில் 21 தூண்களை எவரும் அறியாதபடி நீக்கி, சிறு ஊனம் செய்து, இந்த ஊனம் ஒன்று போதும்; பெரிய ஊனம் வந்திடக் கூடாது என்று செயற்பட்டனர் என்பதாகவும் தகவல் உண்டு.

இவை எல்லாம் ஆதாரங்களற்ற செவிவழிச் செய்திகளே. இயல்பாய் கலவைச் சாந்து உதிர்ந்து, சில தூண்கள் வலுவிழந்து விழுந்திருக்கவும் வாய்ப்பும் உண்டு. ஆனால் ஒன்று... திருவரங்கம், அரசர் பெருமக்களால் கொண்டாடப்பட்ட ஒரு பெருந்தலமாகவே விளங்கியது; விளங்கிக்கொண்டிருக்கிறது. இனியும் விளங்கிடும். ஏனெனில், உள் இருப்பவன் அப்படிப்பட்டவன்; அவன் ஆதியந்தம் கடந்த சர்வ வியாபி!



அரசர் பெருமக்களில் ஆழமாய் முத்திரை பதித்தவர்களில் சுந்தர பாண்டியனும் ஒருவன். இவனே சித்திரை மாதத்தில் தேர்த் திருவிழாவை ஏற்படுத்தியவன். ஒரு வைணவப் பெரியவர் அதற்குக் காரணமானவர் என்பர். இவர் தேர்த்திருவிழாவின் சிறப்பை மன்னனுக்கு முதலில் எடுத்துச் சொன்னார்.

“பாண்டிய மன்னா! விழாவென்னும் சொல்லை முதலில் நீ அறிவாயாக. விழுந்துவிடாமல் நிமிர்ந்தே இருப்பதையே ‘விழா’ என்னும் சொல் பொருளாய் உரைக்கிறது. இதன் காரணமாகவே விழாக்கள் உருவாக்கப்பட்டன. விழா என்பது கொண்டாட்டத்தின் ஒரு

பகுதியும்கூட. கொண்டாட்டங்கள் ஒரு நாட்டுக்கு மிக அவசியம். அதிலும் தேர்த் திருவிழாக் கொண்டாட்டம் என்பது மிக மகத்தானது.

திருவிழாவின்போதுதான் ஓர் ஊரே கோயிலாகிறது. மற்ற நாள்களில் ஊருக்குள் கோயில் என்றால் இந்த நாளில் கோயிலுக்குள் ஊர் இருக்கிறது. நடமாட இயலாதவர்களைக் காண இறைவன் தேரேறி வீதியில் வருகிறான். அவனை ஒரு பக்தன் தன் வீட்டு வாசலிலேயே கண்டு வணங்கும் பாக்கியம் பெறுகிறான். இது எவ்வளவு பெரிய செயல்.

எல்லாவற்றுக்கும் மேலாக ஊர் கூடினால்தானே தேர் இழுக்க முடியும். தேர் அவ்வளவு வலியது. இது, மறைமுகமாக `வலிதான ஒன்றை தனிமனிதன் தனித்து அடைவது கடினம்; கூட்டு முயற்சி செய்தால் அதுவே பெரும் சுலபம்' என்கிற நற்செய்தியையும் உணர்த்தும். மட்டுமன்றி, இறைவன் ஒரு தனிமனிதனுக்கு மட்டும் உரியவனல்லன்.அவன் அனைவருக்கும் பொதுவானவன் என்பதையும் உணர்த்தும்.

தேர்வடத்தைத் தொட்டு ஊரார் இழுக்கும்போது, ஒட்டுமொத்த ஊரின் சக்தி அந்த வடத்தில் பயணித்துத் தேரை அசைத்து, அடையக் கடினமான இறைவனை அனைவருக்கும் அருகில் அழைத்து வந்துவிடுகிறது. இப்படித் தேர்த்திருவிழா ஊர் ஒன்றுபடவும், அருள்நெறி பரவவும், ஊரைக் கோயிலாக்கவும் பயன்படுகிறது. தேரோடும் ஊரே சீரோடும் சிறப்போடும் இருக்கும் என்பது ஆன்றோர் வாக்கு" என்று சொல்லி சுந்தரபாண்டியத் தேவனை தெளிவிக்கவும், அவனும் தேர்த் திருவிழாவைச் சிறப்போடு நடத்தினான்.

சித்திரையில் வெப்பம் மிகுந்திருக்கும். இந்த வெப்பம் விலகி நல்ல கோடை மழை பெய்தால் பயிர்கள் மட்டுமின்றி உயிர்களும் தழைத்திடும். இதன் பொருட்டு நிகழ்த்தப்படுவதே தெப்போற்சவம். இதற்காக, வறண்டு கிடந்த காவிரியில் குளம்போல் ஒரு நீர்நிலையை உருவாக்கி அதில் தெப்ப உற்சவத்தையும் இவன் நிகழ்த்தினான்.இவன் நிமித்தமே ஆலயம் சொர்ண மயமாகியது. தங்கக் கொடிமரம்,

தங்கத்தால் ஆன கருடன் சிலை, தங்க விமானம், தங்கத் திருவடிகள், பெருமாளுக்கான தங்கப் பாத்திரங் கள், கிரீடங்கள், தங்கப் பல்லக்கு என்று எம்பெருமானைத் தங்கமயமாக்கிப் பார்ப்பதில் பெரிதும் மகிழ்ந்தான். இவன் பொருட்டு எம்பெருமானும் பெரிதும் மகிழ்ந்தார்.

நித்ய ஆராதனை நிமித்தம் கொடி அஞ்சு, செடி அஞ்சு என்று மொத்தம் பத்து வகை காய்களால் நிவேதன உணவு தயாரிக்கப் பட்டது. அதாவது கொடிக் காய்கள் எனப்படும் புடலை, பூசணி, பாகற்காய், அவரை, வெள்ளரி போன்றவையும் செடிகளில் (மரங்களிலும்) காய்களாகவும் கிழங்குகளாகவும் கிடைக்கும் வாழை, கொத்தவரை, கருணை, சேனை, சர்க்கரைவள்ளி போன்றவற்றைக் கொண்டும் பத்து வகை காய்கறிகள் சமைக்கப்பட்டன.

நித்தியப்படி திருவாராதனம் எனும் பெயரில் மூன்று காலம் திருவாராதனமும் ஆறு காலம் அமுதபடிகளும் சமர்ப்பிக்கப்பட்டன. முதல் திருவாராதனத்தின்போது பொங்கலும் மதிய திருவாராதனத்தின்போது தளிகை எனப்படும் பெரிய அவசரமும் இரவு திருவாராதனத் தின்போது சம்பா அரிசி கொண்டு உப்புமா போன்ற உணவும் சமர்ப்பிக்கப்பட்டன.

அதேபோல், கீழ்க்காணும் விவரப்படி ஆறு கால அமுத படிகள் சமர்ப்பிக்கப்பட்டன.

**முதல் காலம்:** பால், ரொட்டி, வெண்ணெய், சர்க்கரை, பருப்புக் கும்மாயம் (குழைந்தது), பச்சைப்பால்.

**இரண்டாம் காலம்:** பொங்கல், தோசை, வடிசல், சுக்குவெல்லம், நெய், கூட்டுக்கறியமுதுடன் ஊறுகாய்.

**மூன்றாம் காலம்:** வடிசல், கூட்டுக்கறியமுது, சாற்றமுது, திருக்கண்ணமுது, அதிரசம்.

**நான்காம் காலம்:** சீரான்னம், கறியமுது, திருமாலை வடை, அப்பம், தேன்குழல், சம்பா தோசை.

**ஐந்தாம் காலம்**: சம்பா தளிகை, பருப்பு, வடிசல், சாதம்.

**ஆறாம் காலம்**: சர்க்கரைப்பொங்கல், பால் அன்னம், கறியமுது.

சுந்தர பாண்டியத் தேவனைப் போலவே குலோத்துங்கச் சோழனது கைங்கர்யமும் திருவரங்க வரலாற்றில் சிறப்பானது.

**- தொடரும்.**

## காசியை விட உயர்ந்ததா?



உத்தரப்பிரதேச மாநிலத்தில், பிரதாப்கர் எனும் ஊரில் அவதரித்தவர் மகான் கபீர்தாஸ். ராமபக்தியில் திளைத்தவர். எளிய கவிதைகளால் நல்லறங்களை விதைத்தவர்.

இவர், தன் வாழ்நாளில் பெரும் பகுதியைப் புனித நகரமான காசியில் கழித்தார். இருப்பினும் தன் வாழ்வின் இறுதிக் காலத்தில் காசியில் மரணமடைய விரும்பாமல், பஸ்தி மாவட்டத்தில் கோரக்பூருக்கு அருகிலுள்ள மக்ஹர் என்ற கிராமத்துக்குச் செல்ல விரும்பினார்.

உடனிருந்தவர்கள் அனைவருக்கும் கபீர் தாஸின் செய்கை வியப்பை அளித்தது. பொதுவாக இந்துக்கள் எங்கு வாழ்ந்தாலும் தங்கள் வாழ்நாளின் இறுதியில் காசிக்கு வந்து உடலைவிட்டு முக்தியடைய விரும்புவர். ஆனால், கபீர் ஏன் இவ்வாறு மக்ஹர் கிராமத்துக்குச் செல்ல விரும்புகிறார் என்று கபீரிடமே கேட்டனர்.

அதற்கு கபீர், "காசியில் இறந்தால் உடனே முக்தி அடைந்து சொர்க்கத்துக்குச் சென்றுவிடுவோம். திரும்பவும் இந்தப் புண்ணிய பூமியில் பிறந்து பகவானின் நாம சங்கீர்த்தனத்தைப் பாடி ஆனந்தமடைய முடியாது.

ஆனால், மக்ஹரில் இறந்தால் கழுதைப் பிறவி கிடைக்கும். எனவே நான் கழுதையாகப் பிறந்தேனும் பகவானை நினைக்க வேண்டும் என்று கருதியே காசியைவிட்டுச் செல்கிறேன்" என்றார்.

**- தேனி.பொன் கணேஷ்**

11 Feb 2020

# ரங்க ராஜ்ஜியம் - 48



ரங்க ராஜ்ஜியம்

குலோத்துங்கச் சோழன் எனும்போதே முதலாம் குலோத்துங்கன் நினைவுதான் மிகுந்து வரும்.

*வெள்ளநீர் பரந்து பாயும் விரிபொழி லரங்கர் தன்னுள்*

*கள்வனார் கிடந்த வாறும் கமல நன்முகமும் கண்டு*

*உள்ளமே! வலியை போலும் ஒருவனென் றுணர மாட்டாய்.*

*கள்ளமே காதல் செய்துன் கள்ளத்தே கழிக்கின்றாயே!*

- **தொண்டரடிப்பொடியாழ்வார்**

சுந்தரபாண்டிய தேவனைப் போலவே குலோத்துங்கச் சோழனது கைங்கர்யமும் திருவரங்க வரலாற்றில் மிகச் சிறந்த ஒன்றாகும். குலோத்துங்கச் சோழன் எனும்போதே முதலாம் குலோத்துங்கன் நினைவுதான் மிகுந்து வரும். இவன்தான் திருவரங்க ஆலயத்துக்குப் பல நிவந்தங்கள் அளித்தவன். இவன் சார்பிலான கல்வெட்டுச் செய்திகள் மட்டுமே 83 என்கிற எண்ணிக்கையில் உள்ளன.

இவன் காலத்தில்தான் சந்நிதியில் `திருப்பள்ளியெழுச்சி திருவாய்மொழி' ஓதப்படும் அன்றாட நிகழ்வுக்கு நிவந்தம் வழங்கப்பட்டது. அதாவது ஐம்பது கழஞ்சு பொன்கொண்டு வாங்கப்படும் நிலத்தின் வருமானமே இந்நிகழ்வுக்கான நிவந்தம்!

இதன் நிமித்தம் அரையர்கள் ஆலயம் சார்ந்து வாழ்ந்து இறைத் தொண்டாற்ற வழிவகை செய்யப்பட்டது. அந்த வகையில் வங்கிபுரத்து திருவரங்கத்து நம்பி, அவன் மகன் திருவரங்க நம்பி, வெண்ணெய் கூத்தனான திருக்கண்ணபுரத்து அரையர், திருவிண்ணகர் நம்பி, திருநாட்டு நம்பி ஆகியோர் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன.



மேலும், திருச்சுற்றின் வடக்குப் பகுதியில் முதலாம் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டு பல அரிய தகவல்களைத் தருகிறது. ஆலய கைங்கர்யபரர்களான வடமதுரைப் பிறந்தான் நம்பி, செம்பியன் மாதேவி, அழகியமணவாள நம்பி, பெரும்புலியூர் நாராயண நம்பி, திருநாடுடைய நம்பி, ஸ்ரீபண்டாரவாரியம், ஆரிதந்திருவாய்க் குலமுடையான், ஸ்ரீராகவன், ஆரிதந் ஆராவமுது புண்டரீகன், ஆரிதந்கேசவன், தனி இளஞ்சிங்கம், காங்யபன் சிங்கம், திருவரங்க நாராயணன் ஸ்ரீவைஷ்ணவக் கணக்குத் திருவேங்கடவன் ஆகியோர். திருவாய்க்குலமுடையானான அதிகாரி வீரவிச்சாதிர மூவேந்திர வேளாளருக்குக் கேரள நாட்டில் பாழ்பட்டுகிடந்த ஒரு நிலத்தை தானமாகத்தந்து, அதை இவரும் திருத்திப் பயிர்செய்து இதன் மூலம் வந்த வருவாய், திருவரங்க ஆலயத்து இராப்பத்து நாளில் செலவிடப்பட்டது.

எப்படித் தெரியுமா? நூறு அப்பத்துக்கான அரிசி, பருப்பு, நெய், விறகு, வெல்லம் ஆகியவற்றுக்கு...

இதேபோல் ஐப்பசி மற்றும் பங்குனி தேர்த்திருநாளின் தீர்த்தவாரியன்று அரையர்கள் இசையுடன் பாடுவர். அவ்வேளை இவர்களுக்கு அப்பம், அரிசி, பருப்பு, நெய் அளிக்கப்பட்டன. இவர்கள் பொருட்டு காளிங்கராயன் எனும் சிற்றரசன் ஆறேகால் காசு தங்கத்தை நிவந்தமாகத் தந்தான். இதன் மூலம் வந்த வருவாய் இதற்குப் பயன்பட்டது.

இவையெல்லாமே முதலாம் குலோத்துங்கன் கால நிகழ்வு. குலோத்துங்கச் சோழனைத் தொடர்ந்து நாயக்கர் காலம் தொடங்குகிறது. நாயக்கர்களில் கம்பயதண்ட நாயக்கர் கைங்கர்யம் பதிவில் உள்ளது. ஆயிரங்கால் மண்டபத்துப் படிகளும், யானைகள், குதிரைகள் நிற்கும் இடத்து நீண்ட தாழ்வாரமும், சக்கரத்தாழ்வார் சந்நிதிக்கு எதிரில் உள்ள நாலு கால் மண்டபமும் கம்பயதண்ட நாயக்கர் கைங்கர்யங்களாகும்.

இவர்களைத் தொடர்ந்து கரியமாணிக்கத்தண்ட நாயக்கர், மலைப்பெருமாள் எனப்படும் மலையாளதேசத்து அரசன் மற்றும் வீர நரசிங்கத் தேவர். ஆகுளூர் வரநாதராயர், தேவப் பெருமாள்,

திருவிக்கிரமச் சோழன், பள்ளிகொண்ட சோழன் என்று கைங்கர்யம் செய்தவர்களைத் திருவரங்க ஆலயம் மறக்கவில்லை. மறவாமல் தன்னுள் பதிவுசெய்து வைத்துள்ளது.



இவர்களில் கலியுகராமன் என்னும் கடையவர்மன் வீரபாண்டியன் கி.பி 1297-ல் முடிசூடிக் கொண்டு ஆலய நிமித்தம் செய்த கைங்கர்யங்கள் மிக ஆழமானவை மட்டுமல்ல; அர்த்த பூர்வமானவையும்கூட! திருவரங்கம் அருகில் கலியுகராமன் சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரையே இவன் உருவாக்கினான். இதில் வேதம் பயின்ற வைணவர்களை மட்டும் குடியேற்றினான். இவர்களுக்குச் சில நிபந்தனைகளையும் விதித்தான்.

தினமும் வேதபாராயணம் புரிய வேண்டும். தங்கள் வழியில் தங்கள் வாரிசுகளையும் அழைத்துச் செல்ல வேண்டும். எக்காரணம் கொண்டும் நிலத்தை விற்றுவிட்டு வேறு எங்கும் சென்றுவிடக் கூடாது. மீறி விற்பதாயிருந்தால் இவர்கள் தங்களுக்குள் கொடுக்கல் வாங்கல் புரியலாம். ஆனால், பிறருடன் விற்பது கூடாது என்பதே இவன் கட்டளை. இதன் மூலம் வேத முழக்கம் இடையறாது ஒலிக்கத் தொடங்கியது.

வேத முழக்கம் மட்டுமா ஒலித்தது...இவன் காலத்தில்தான் மிலேச்ச முழக்கமும் ஒலிக்கத் தொடங்கியது. மொகலாயர் வசம் அகண்ட பாரதம் அகப்பட்டுக் கொண்டுவிட்ட நிலையில் மாலிக்காபூரின் படையெடுப்பும் நிகழ்ந்தது.

கி.பி 1311... பாரதத்தின் தென்பகுதியில் மாலிக்காபூரின் படையெடுப்பு நிகழ்ந்ததைத் திருவரங்கக் கோயிலொழுகு பதிவு செய்துள்ளது. இவ்வேளையில் மதுரையை வீரபாண்டியன் ஆட்சி செய்துகொண்டிருந்தான். மாலிக்காபூரின் படையெடுப்பு நிகழவும் யுத்தம் மூண்டதில் வீரபாண்டியன் தோற்று ஓடும் நிலை ஏற்பட்டது. வீரபாண்டியன் தோற்க சில உள்நாட்டுக் குழப்பங்களும் காரணம். இந்த நிலையில் டெல்லி சுல்தானின் மேற்பார்வைக்கு ஆட்பட்டு மதுரை நகரை சுல்தானின் தூதர்கள் ஆட்சி செய்தனர். தப்பி ஓடிய வீரபாண்டியன் மனம் புழுங்கியதோடு, மீண்டும் தன் ஆட்சி மலர்ந்திட ரகசிய ஏற்பாடுகளில் இறங்கினான்.

அழகர்மலையில் ஒளிந்துகொண்டு நாலாபுறமும் தனக்கு ஆதரவாக வீரர்களைத் திரட்டினான். இவ்வேளையில் கேரளத்தைச் சேர்ந்த ரவிவர்மா என்கிற குலசேகரன் தமிழகத்தின் ஒரு பகுதியை, குறிப்பாக நெல்லை, சங்கரன்கோவில், தூத்துக்குடி உள்ளிட்ட பகுதிகளைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தான்.

சுல்தானைவிட இந்த ரவிவர்மாவை ஆபத்துக்குரியவனாகக் கருதிய வீரபாண்டியன், தன் தம்பி சுந்தரபாண்டியனோடு சேர்ந்து காகத்தியர்களைச் சந்தித்து அவர்கள் துணையைப் பெற்று ரவிவர்மாவைத் தமிழக எல்லைப்புறத்தை விட்டு விரட்டியதோடு அங்கெல்லாம் பாண்டிய வீரர்களை மீண்டும் நிலைப்படுத்தி, தன்னை பலப்படுத்திக்கொண்டதோடு டெல்லி சுல்தானுடன் ஒருபுறம் சமாதானப் பேச்சு நடத்திக்கொண்டே மதுரையில் மீண்டும் தன் ஆட்சியை நிலைப்படுத்தினான்.

இவனுக்குக் `கலியுகராமன்' என்கிற பெயரும் இருந்தது. இந்தப் பெயர் கொண்டே இவன் பல அறச்செயல்களைப் புரிந்தான். குறிப்பாக மீண்டும்

பாண்டியன் ஆட்சி மதுரையில் மலர்ந்திட அரங்கநாதப் பெருமாளிடம் பிரார்த்தனைகள் செய்துகொண்டான். வெற்றிக்குப் பின் இவன் திருவரங்கத்தில் சித்திரை வீதியை உருவாக்கி, அந்த வீதியில் மாடமாளிகைகளை எழுப்பி நாற்புறமும் பெரும் செல்வச் செழிப்போடு, திருவரங்க மக்கள் வாழ்ந்திட வழிசெய்தான்.

இதற்கான சான்றுகள் சித்திரை வீதியின் கிழக்கு கோபுரத்தில் இன்றும் காணக் கிடைக்கின்றன. அக்கோபுரத்தில் `கண்டபேரண்ட பட்சி' என்கிற ஒரு பட்சியின் உருவம் பொறிக்கப்பட்டு, அந்த உருவத்தின் கீழ் கலியுகராமன் என்கிற பெயர் கிரந்த மொழியில் எழுதப்பட்டுள்ளது. கண்டபேரண்ட பட்சியென்பது மனித உருவமும் இருபுறம் பார்த்தபடி இருபறவைத் தலைகளும் கொண்ட வடிவமாகும். இது ஹொய்சாளர்களின் அரசுச்சின்னமும்கூட. தற்போது கர்நாடக அரசின் சின்னமாக இது விளங்குகிறது. இந்தக் கோபுரத்தில் பாண்டியர்களின் சின்னமான இரட்டை மீன்களும் காணப்படுகின்றன. இந்த இரண்டு மீன்களில் ஒன்று ஆண் மீன், மற்றொன்று பெண் மீன். நீளமானது ஆண் மீனாகவும் நீளம் குறைவாயும் பருத்த வயிறும் கொண்டது பெண் மீனாகவும் கருதப்படுகிறது.

இதேபோல திருவானைக்காவலில் உள்ள ஜம்புலிங்கேஸ்வரர் கோயிலின் கோபுரத்திலும் இச்சின்னங்கள் காணப்படுகின்றன. இவை ஹொய்சாளர் தொடங்கியதைப் பாண்டியர்கள் நிறைவு செய்தனர் என்ற கருத்தைத் தோற்றுவிப்பதாக உள்ளன. வீரபாண்டியனும் சுந்தரபாண்டியனும் மீண்டும் தங்கள் ஆட்சி மலர, திருவரங்கத்தில் பெரும் கைங்கர்யங்களைச் செய்தனர். மாலிக்காபூரும் இவ்வேளை மற்ற இடங்களில் இருந்தபடியால் ஒரு பெரும் யுத்தம் ஏற்படவில்லை.

திருவரங்க ஆலயத்தின் உபசந்நிதிகளில் தெற்கு ராஜ கோபுரத்தை ஒட்டிய திருக்குறளப்பன் சந்நிதி மிகவும் பிரசித்தியும் பல வரலாற்று நிகழ்வுகளுக்குப் பின்புலமாகவும் இருந்துள்ளது. எம்பெருமான் வாமன அவதாரம் எடுத்துவந்த காலத்தில் வாமனனுக்கு உபநயன கர்மா நடந்த இடம் இந்த திருக்குறளப்பன் சந்நிதியாகும்.

இன்னொரு ரசமான சங்கதியும் உண்டு. முன்பு காவிரி இந்தத் தெற்குக் கோபுரத்தை ஒட்டியே ஓடிக்கொண்டிருந்தது. இதனால் வெள்ளக் காலத்தில் திருக்குறளப்பன் சந்நிதி மூழ்கிப்போகும். இதை மாற்றிட எண்ணி, திருவரங்கத் தென்பகுதியை அகலப்படுத்திக் கொஞ்சம் தொலைவில் ஓடச் செய்துள்ளனர் என்பர். இதற்குப் பெரிதும் காரணமாக இருந்தவர் கூர்நாராயண ஜீயராவார்.

அதன்பின் திருக்குறளப்பன் சந்நிதியானது அரங்கனை தரிசிக்க வருவோர், முன்வழிபாடாக திருக்குறளப்பனை வழிபடுவதை வழக்கமாகக் கொண்டனர்.ஆண்டாள் பிராட்டி திருவரங்கம் வந்த வேளை, இக்கோயிலுக்கு வந்து மங்களாசாசனமும் செய்துள்ளாள்.

'*பொல்லாக் குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்று*

*எல்லாவுலகும் அளந்து கொண்ட எம் பெருமான்*

*நல்லார்கள் வாழும் நளிர ரங்க நாகனையான்,*

*இல்லாதோம் கைப் பொருளும் எய்துவானொத்துளனே.*'

என்று தன் நாச்சியார் திருமொழியில் திருவரங்கத் திருப்பதிகத்தில் பாடியுள்ளாள்.

ஆண்டாள் பிராட்டிபோலவே திருமங்கை யாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளார். இச்சந்நிதியில்தான் நம்மாழ்வாரும் அர்ச்சா ரூபமாக எழுந்தருளியுள்ளார்.

இத்திருக்குறளப்பன் சந்நிதி குறித்துச் சிந்திக்கையில் எட்டாம் நூற்றாண்டுக்கும் ஒன்பதாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த ஆண்டாள் பிராட்டி பாவை நோன்பு நோற்று அதன் பயனாக அரங்கனையே மணாளனாய் அடைந்த சம்பவமும், அவ்வேளை பாண்டிய மன்னனாக இருந்த வல்லபதேவன் புரிந்த கைங்கர்யங்களும் கட்டாயமாய் திருவரங்க வரலாற்றில் சிந்திக்கப்பட வேண்டியவையாகும்.

பாண்டிய மண்ணில் அரசாட்சி புரிந்தவர்களில் வல்லபதேவப் பாண்டியன் மற்ற பாண்டிய மன்னர்களினின்றும் பெரிதும் வேறுபட்டவன். பாண்டியன் பரம்பரையே சைவத்தின் வழிச்சென்ற பரம்பரைதான். இதில் மலயத்துவஜப் பாண்டியன் மகளாகப் பிறந்தவளே அங்கயற் கண்ணியான மீனாட்சி. சிவபெருமானையே மணாளனாய் அடைந்து மதுரைக்கே அரசியாக விளங்கிப் பெரும் வாகை சூடினாள். இவள் தொட்டு உருவான பரம்பரையில் விதிவிலக்காக வைணவத்தைப் பெரிதும் ஆராதிப்பவனாக வல்லபதேவப் பாண்டியன் விளங்கினான்.

வைணவத்தை இவன் புறச் சமயமாகக் கருதவில்லை. `என் தாயான மீனாட்சியின் சகோதரன்தானே அந்தத் திருமால்... அப்படி இருக்க வைணவம் எப்படிப் புறச் சமயமாகும்... என் தாய்வழிச் சமயம் வைணவம் - தந்தைவழிச் சமயம் சைவம்' என்று கருதி இரண்டையுமே பேணி வளர்த்தான். இருப்பினும் இவன் பெரியாழ்வார் நிமித்தம் பெரும் வைணவப் பற்றாளனாக மாறி ஆண்டாள் பிராட்டி அரங்கப்பெருமானை கைத்தலம் பற்ற விழைந்தபோது இவனே சீர் பொருள்களை எல்லாம் அளித்தான்.

பெரியாழ்வார் இவன் பொருட்டு நிகழ்த்திய ஓர் அற்புத சம்பவமே ஸ்ரீகூடலழகப் பெருமான் திருக்கோயிலில் நிகழ்ந்த `எதுவோ பரம்பொருள்?' என்னும் கேள்விக்கான நிகழ்வாகும். சுவாரஸ்யமான அந்த சம்பவம் திருவிளையாடல் புராணத்தின் சாயலில் திருவிளையாட்டாக முடிவுற்றது. அது...!

**தொடரும்...**

25 Feb 2020

# ரங்க ராஜ்ஜியம் - 49



ரங்க ராஜ்ஜியம்

திருமாலே முற்றான பரம்பொருள்

‘**யா**ரோ பரம்பொருள் எதுவோ பரம்பொருள்?’ எனும் கேள்வி வல்லப பாண்டியனுக்குள் எழும்பியது. தன் கேள்விக்குச் சரியான பதிலளிப்போர்க்குப் பொற்கிழி பரிசளிப்பதாக நாடெங்கும் அறிவிக்கச் செய்தான். இந்த அறிவிப்பு திருவில்லிபுத்தூரில் மாலை கட்டி சேவை புரிந்துவந்த பெரியாழ்வாரின் காதிலும் விழுந்தது.

‘அந்தத் திருமாலே முற்றான பரம்பொருள், இதில் பாண்டியனுக்குச் சந்தேகம் வந்ததுதான் ஆச்சர்யம்’ என்ற கருத்துடன் உறங்கச்சென்ற பெரியாழ்வாரின் கனவில் திருமால் தோன்றினார்; மதுரைக்குச் சென்று

பொற்கிழிக்கான போட்டியில் பங்குகொண்டு தன் கருத்தை நிறுவச் சொன்னார்.



ரங்க ராஜ்ஜியம்

பெரியாழ்வார், மாலவனின் கட்டளையை ஏற்று மதுரையை அடைந்து போட்டியில் பங்கேற்றார். ஆணித்தரமாய், ‘திருமாலே பரம்பொருள் - அவரே ஆதிமூலம். அவராலேயே புவனங்கள், சூரிய - சந்திர - நட்சத்திராதியர், ஏனைய கோள்கள் மற்றும் உயிரினங்கள் தோற்றுவிக்கப்பட்டன. அவரே அனைத்துள்ளும் ஜீவாத்மாவாய் விளங்கி ஆட்டுவிக்கிறார். அவர் ஆட்டுவிக்க நாம் ஆடுபவர்களாக

உள்ளோம். அவரருள் இருந்தால்தான் இப்பிறப்பில் நாம் ஜீவன் முக்தி அடைய முடியும். பரமாத்மாவான அவரிடம் ஜீவாத்மாக்களான நாம் சரண் புகுந்தால் நமக்கு முக்தி கிட்டும். அவரே சதாசிவனாக, சக்தியாக, பிரம்மமாக, எல்லாமுமாகத் தோற்றம் கொண்டு படைத்தல், காத்தல், அழித்தல் என்கிற முவ்வினைப்பாடுகளுக்கும் காரணமாக உள்ளார்' என்று நிறுவினார்.

பல பௌரானியர், ஞானியர், வேதியர் பங்கேற்று தங்கள் கருத்தைக் கூறியும் வளையாத பொற்கிழிக்கோல், பெரியாழ்வார் தன் கருத்தை நயம்படவைத்த நொடியில் வளைந்து, தான் பற்றிப் பிடித்திருந்த பொற்கிழியையும் பெரியாழ்வார் வசம் விட்டது.

பெரியாழ்வாரும் பரிசினைப் பெற்றவராய்ப் பெரும் மகிழ்வுடனும் நன்றி உணர்வுடனும் திருமாலைத் துதித்து 'பல்லாண்டு பல்லாண்டு' எனும் பாசுரத்தைப் பாடியருளினார்.

'பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம் மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்சேவடி செவ்வித் திருக் காப்பு...' என்று பெரியாழ்வார் பாடவும் கூடலழகர் ஆலய கோபுரத்துக்கு நேர் மேலே விண்ணில் - மகாலட்சுமி சமேதராய்க் கருட வாகனத்தில் எழுந்தருளி எல்லோர்க்கும் காட்சியளித்தார் பெருமாள்.

இச்சம்பவம் வல்லபதேவனைச் சிலிர்க்கச் செய்துவிட்டது. பெரியாழ்வாரும் பொற்கிழிப் பரிசுடன் திருவில்லிபுத்தூர் திரும்பித் தன் நந்தவனத்தை மேலும் பெரிதாக்கிச் சீர்செய்து தன் மலர்த் தொண்டினைத் தொடர்ந்தார். பின்னர் ஆண்டாள் பிராட்டி அருட்பரிசாய் துளசி மாடத்திடையே அயோனியாகத் (கருவில் பிறக்காத குழந்தையாய்) தோன்றி அவரின் திருமகளானாள்.

நிலம் கோதக் கிடைத்தவள் என்பதால் அவளுக்குக் கோதை என்று பெயரிட்டு வளர்த்த பெரியாழ்வார், தானறிந்த சகல சாத்திரங்களையும் புராணங்களையும் நெறி முறைகளையும் அவளுக்கு உபதேசித்தார். மடந்தைப் பிராயத்திலேயே அவளை ஞானியர் அளவுக்குக்கொண்டு சென்றுவிட்டார்.

கோதையும் தான் அறிந்தவற்றால் `முற்றும் முதலுமானவர் அந்த திருமாலே' என்றுணர்ந்து, அவர் அவதாரங்களில் ஒன்றான கிருஷ்ணாவதாரத்தில் பெரிதும் மனத்தைப் பறிகொடுத்தாள். அவர் பொருட்டு மாலையைச் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியானாள்.

நோன்பின் பெரும்பயனாக அரங்கன் கோதையைத் தான் மணந்துகொள்வதாகப் பெரியாழ்வார் கனவில் கூறியதோடு, அவளை மணப்பெண்ணாய் அலங்கரித்து திருவரங்கம் அழைத்துவரப் பணித்தார். அப்படியே வல்லப பாண்டியனின் கனவிலும் தோன்றி கோதை திருவரங்கம் வருவதற்கு உதவச் சொன்னார்.



மனம்சிலிர்த்த வல்லபதேவ பாண்டியன், திருவில்லிபுத்தூருக்கும் திருவரங்கத்துக்கும் இடையே வழிநெடுக வாழைமரம் கட்டி, தோரணங்களைப் பூட்டி, காவலர்களை நியமித்து, கட்டியக் குரலோடு வரவேற்று அழைத்துச்சென்றான்.

அப்போது காவிரி, தெற்குக் கோபுரத்தை ஒட்டி ஓடிக்கொண்டிருந்தது. தெற்குக் கோபுரப் பகுதி, காவிரிக்கு வடகரையா கத் திகழ்ந்தது. ஆக, காவிரி வரையிலும் திருப் பல்லக்கில் எழுந்தருளச் செய்து அழைத்துவந்த வல்லபன், பின் படகில் ஏற்றி வடகரையில் கோதையை இறக்கினான்.

அங்குள்ள தெற்குக் கோபுரத்தை ஒட்டிய திருக்குறளப்பன் சந்நிதியில் பிரார்த்தனை புரிந்து, பின் மண்டபம் ஒன்றில் தங்கவைத்து ஏராள சீர்வரிசைகளுடன் அரங்கநாதப் பெருமான் சந்நிதிக்குக் கோதைப் பிராட்டியை அனுப்பினான். பெருமாளும் அவளைத் தன்னுள் ஏற்று அனைவருக்கும் அருள்புரிந்தார்.

இப்போது கோதை, ஆண்டாள் என்ற திருநாமத்துக்கு உரியவளாகி அரங்கப் பெருமானுக்குள் ஆவிர்பவித்துவிட, அவள் தங்கியிருந்த மண்டபம் தற்போது வெளி ஆண்டாள் சந்நிதியாக எல்லோராலும் வணங்கப்பட்டு வருகிறது.

ஸ்ரீஆண்டாள் அரங்கனை தன் பூத உடலோடு அடைந்துவிட்ட நிலையில், அவளின் திருவுருவம் சிலை வடிவில், வெளி ஆண்டாள் சந்நிதியிலும் வைத்து வணங்கப்பட்டது. ஆண்டாளின் இந்தச் சிலாரூபம், சுல்தானியர் படையெடுப்பின்போது எந்தச் சேதத்துக்கும் ஆளாகிவிடக் கூடாது என்கிற முனைப்பில் பூமிக்குள் குழிதோண்டிப் புதைக்கப்பட்டது.

இச்சம்பவம் ஆண்டாள்மீது பக்தி கொண்ட சகலருக்கும் ஒரு பெரும் பரிசோதனையாகவும் அமைந்ததுதான் விந்தை!

நம் புராதன சமயத்துக்கு கி.பி 1311-ம் ஆண்டு மிகச் சோதனையானது எனலாம்.

பூமியில் ஆறறிவுகொண்ட ஒரே உயிரி மனிதன் மட்டுமே. மனிதனின் இந்த மேலான அறிவுதான் கடைத்தேறவும் வழி செய்கிறது; தடுக்கி விழவும் வைக்கிறது. இந்த அறிவு, ஒளி சார்ந்தது. ஒளி எனும்போதே அதில் கூடுதல், குறைச்சல் வந்து விடுகின்றன.

அகல் விளக்கு, கற்பூரம், தீப்பந்தம், வேள்வித்தீ எல்லாமே நெருப்புதான். ஆனபோதும் அதன் சுடரின் தன்மையைப் பொறுத்து அதன் சூழலில் வெளிச்சம் பரவுவதைப்போல், மனிதர்களின் அறிவொளியும் அவரவர் கல்வி, சார்பு நிலை, முன்வினை போன்றவற்றால் ஓர் அளவுக்கு உரியதாகிறது. அந்த அளவைப் பொறுத்தே அவரவர் மனம் தெளிவுள்ளதாக அமைகிறது. இதிலிருந்து ஓர் உண்மை தெளிவாகிறது.

ஆறறிவு கொண்டவர்களாய் மனிதர்கள் விளங்கிவிடுவதால் மட்டும் எல்லோரின் அறிவுத்திறனும் ஒன்றாகிவிட முடியாது. அவரவர் சூழல், கல்வி, முன்வினை இவற்றைப் பொருத்தே ஒருவரின் அறிவுத்தெளிவு இருக்கும்.

ஒரு தாய் வயிற்றில் பிறந்த பிள்ளைகளிடமே நிறைய பேத அபேதங்களை நாம் பார்க்கிறோம். சுருக்கமாகக் கூறுவதானால் இதுதான் சிருஷ்டி. இந்த சிருஷ்டி என்பது பல மாறுபாடுகளை உடையதே!

கோடானுகோடி பேர் இருக்கிறபோதிலும் ஒருவர் போல் ஒருவர் இருப்பது இல்லை - ஒருவர் குரல்போல் இன்னொருவருக்கு இல்லை. இது ஒரு பிரமிப்பான விஷயம்.இந்த வேற்றுமை உடல் மட்டும் சார்ந்ததல்ல... மனம் சார்ந்ததும்கூட. ஒருவருக்குப் பிடித்தது இன்னொருவருக்குப் பிடிக்காதுபோகலாம், ஒருவருக்குக் கைவரும் கலை இன்னொருவருக்கு வராமல் போகலாம். இதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

இதிலிருந்தே எல்லாவற்றுக்கும் ஒரு மாற்று இருப்பது புலனாகும். இன்பமென்றால் துன்பம், இனிப்பென்றால் கசப்பு, கறுப்பென்றால் வெளுப்பு, முள் என்றால் மலர்... இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம்.

இந்த வரிசையில்தான் நாம் நம்பும் ஒன்றும் நம்பாத ஒன்றும் வருகிறது; நாம் உண்டு என்று சொல்வதை இல்லை என்று மறுக்கின்றவர்களும் வருகிறார்கள். இதெல்லாம் சாமானியருக்கும் புரிய வேண்டும் என்றே நம் சமய சித்தாந்தத்தில் 'தேவர் - அசுரர்' என்ற இரு தரப்பை அமைத்தனர். எப்போதும் இவர்கள் ஒருவருக்கொருவர் ஆகாதவர். ஒருவரை ஒருவர் அடிமைப்படுத்தவும் ஆளவும் முனைந்தனர். இதில் வல்லமைமிக்கோர் வெற்றி பெற்றனர்.

இப்பிரபஞ்சம் உள்ளிட்ட சகலத்தையும் படைத்த பிரம்மத்துக்கும் மேலான பரம் பொருளை வைணவம் மகாவிஷ்ணு என்கிறது. அந்த விஷ்ணுவேகூட அசுரர்களை எதிர்த்து யுத்தம் புரிந்த சம்பவங்கள் நம் புராணங்களில் ஏராளம். அவை உணர்த்துவது ஒன்றைதான்.

எதிரிடையாக ஒன்று இருந்தாலே ஒன்றன் அருமை பெருமை விளங்கப்பெறும்.

நான் சர்வசக்தி படைத்தவன் என்றால் அதை எதைக்கொண்டு நிரூபிப்பது... இன்னொரு சக்தி படைத்தவன் இருந்து அவனோடு மோதும் போதுதான் வல்லமை தெரியவரும். இதை எம்பெருமானாகிய மகாவிஷ்ணுவிடம் கருடன் ஒரு கேள்வியாகவே கேட்கிறான்.

"எம்பெருமானே! நீதானே எல்லோரையும் சிருஷ்டித்தாய். அப்படி சிருஷ்டிக்கையில் எதற்காக அசுரர்களையும் படைத்தாய். அவர்கள் இல்லாவிட்டால் யாருக்கும் ஒரு துன்பமும் இருக்காதல்லவா?" என்று கருடன் கேட்டான்.

எம்பெருமான் அதற்கு உடனடி பதிலாக "இன்பமும் இல்லாது போகும்… பரவாயில் லையா?" என்று கேட்டாராம்.

கருடன் அதிர்ச்சியுடன் "அது எப்படி?" என்று கேட்கவும் கருடனை அருகில் அழைத்து செல்லமாய்க் கிள்ளினார் விஷ்ணு. 'ஆ' என்று கருடன் கத்தவும் 'இதுவரை வலியின்றி இன்பமாக இருந்தது; இப்போது வலிக்கவும் செய்கிறதல்லவா...' என்று கேட்டாராம் எம்பெருமான். சில

உயர்ந்த சித்தாந்த ரகசியங்களை இப்படி எளிமையாகப் புரியவைப்பது சான்றோர் வழக்கம்.

இத்தனை பீடிகைகள் எதற்கு என்றால்...

1311-ம் வருடவாக்கில் மிலேச்சர்களின் படையெடுப்பால் நமக்கு சோதனை வந்தபோது, நாம் அதை எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்பதன் பொருட்டு அன்று தர்க்கரீதியாகச் சிந்திக்கப்பட்ட விஷயங்களே இவையெல்லாம்!

மிலேச்சர்களுக்கு நமக்கு எதிரான கொள்கை. நாம் உருவ வழிபாடு புரிபவர்கள் ; அவர்கள் இதற்கு நேர் எதிர். எனவே உருவ வழிப்பாட்டை மறுப்பது, சிதைப்பது மற்றும் தம் சித்தாந்தத்தை நிலைநிறுத்துவது என்பது அவர்களின் நோக்கமாகிப்போனது. கூடவே மண்ணாசையும் சேர்ந்துகொண்டது.

இதில் வலிமைமிக்கோர் வெற்றியடைவர் - அல்லாதோர் அடிபணிந்து செல்வர். இது போன்ற காலங்களில் மண் அடிமையாகலாம்; கலாசாரம் - பண்பாடு போன்றவை அடிமை

ஆகலாமா... கூடாது அல்லவா! அவற்றை எப்பாடுபட்டாவது காப்பாற்றுவதுதானே நல்ல மாந்தர்களது கடமை!

1311-ல் பிரசித்தி பெற்ற தலங்களில் எல்லாம் மாலிக்காபூரின் படையெடுப்பால் ஒருவித பயமும் பதற்றமும் ஏற்பட்டுவிட்டன.

அரசர்கள் பலர் போரிட்டுத் தோற்றும், பலர் போரிடாமல் ஓடி ஒளிந்தும், சிலர் சமரசம் செய்து கொண்டும் பலவாறு தங்களைத் தற்காத்துக் கொண்டனர்.

அப்போது, திருவரங்கத்தின் ஒருபுறம் சோழ நாடாகவும், மறுபுறம் பாண்டிய நாடாகவும் இருந்தது.

- ***தொடரும்...***



## ஆனையும் பூனையும் தின்பேன்!

புலவர் ஒருவர் தன் நண்பரிடம், ‘‘நான் சுத்த சைவம். ஆனால், ஆனையும் பூனையும் தின்பேன்!’’ என்றார்.

‘‘ஆனையையும் பூனையையும் தின்னும் நீங்கள், எப்படி சைவமாக இருக்க முடியும்?’’ என்று குழப்பத்துடன் கேட்டார் நண்பர். அதற்குப் புலவர், ‘‘உமக்குப் புரியும் என்று நினைத்தேன். சரி, விளக்கமாகவே சொல்கிறேன்!’’ என்றவர் தொடர்ந்தார்: ‘‘ஆனை = ஆ + நெய்: பசுவின் நெய்; பூனை = பூ + நெய்: தேன். இப்போது புரிந்ததா?’’ என்றார் புலவர். விளக்கம் கேட்ட நண்பர் புலவரின் திறன் அறிந்து வியந்தார்.

- ***மு.ஜெகந்நாதன், சென்னை-64.***

10 Mar 2020

# ரங்க ராஜ்ஜியம் - 50



ரங்க ராஜ்ஜியம்

நம் பக்திக்கான சோதனை

**மா**லிக்காபூரின் படையெடுப்பு நடந்த காலத்தில், திருவரங்கத் தின் ஒருபுறம் சோழ நாடாகவும், மறுபுறம் பாண்டிய நாடாகவும் இருந்தது. பாண்டிய நாட்டைச் சுந்தரபாண்டியன் ஆண்டு வந்தான். சோழ நாட்டுத் திருவரங்கமும் இவன் கட்டுப்பாட்டில்தான் இருந்தது. இந்தச் சுந்தரபாண்டியனுக்குத் தற்காலிகமாக ஓடி ஒளியும் நிலை ஏற்பட்டது. காரணம், மிலேச்சப் படையின் ஆதிக்கமும் சக்தியும்தான்!

குதிரைப்படை, வில்லம்புப்படை, யானைப்படை, வாட்படை என்று காபூரின் படைக்குள் பலப்பல பிரிவுகள். 'இவற்றோடு போரிட்டு, தன் படைவீரர்களை இழப்பதற்கு ஓடிஒளிவதுமேல்' என்று கருதிய

சுந்தரபாண்டியன் தலைமறைவானான். ‘இல்லையில்லை… அவன் போரிடத்தான் விரும்பினான்… அப்படிப் போரிட் டால் உயிரிழக்க நேரிடலாம் என்பதால் அவனுடைய நலம் விரும்பிகள் அவனைத் தங்கள் பாதுகாப்புக்குக் கொண்டுசென்றுவிட்டனர்’ என்றும் ஒரு கருத்து உண்டு.



எது எப்படி இருப்பினும் பெரும் புனிதத் தலமான திருவரங்கத்துக்கு எந்த அளவுக்கு அரசாங்க தயவும் ஆதரவும் இருந்தனவோ… அவை அப்படியே இல்லாமல்போய் ஆலய ஸ்தானீ கர்களும் அரங்கன் அபிமானிகளும் மட்டுமே மீதமிருந்தனர். எனினும் அவர்களிடம் ஒரு பெரும் தெளிவிருந்தது.

இது நம் பக்திக்கான சோதனை. இச்சோதனையில் ஓடி ஒளிகிறோமா இல்லை உயிரை விடுகிறோமா அல்லது நம் பக்திக்குரியதைப் பாதுகாக்கப் போகிறோமா என்கிற மூன்று கேள்விகளுக்கு அவர்கள் ஆட்பட்டனர். இப்படியான கேள்விகளைக் கேட்கச் செய்து அவற்றின்

விடைதேடி அவர்களை நடக்கச் செய்த ஒரு பெருமகனும் திருவரங்கத்தில் இருந்தார்.

அவர் பெயர் பிள்ளைலோகாசார்யர்; அவரைக் காஞ்சி வரதரின் அம்சம் என்பர். அந்த வரதனே பிள்ளை லோகாசார் யராகப் பிறந்து வந்திருப்பதாகக் கருதினர். இதற்குப் பிரமாணமான சம்பவங்களும் உண்டு. பிள்ளைலோகாசார்யர், திருவரங்கத்தில் ஆசார்யனாகத் திகழ்ந்த வடக்குத் திருவீதிப்பிள்ளை என்பாரின் புதல்வனாவார். அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இவரின் உடன்பிறந்தவராவார். இதனால் இவர்களைக் காண்போர் ராம லட்சுமணர் என்று சிறப்பிப்பர்.

பிள்ளைலோகாசார்யர் பெரும் ஞானியாகத் திகழ்ந்தவர். மேலெழுப்பிய பல கேள்விகளுக்குரிய பதிலைத் தன் சீடர்களுக்குப் பளிச்சென்று எடுத்துக் கூறியவர். தன்னைச் சார்ந்தோரை ஆற்றுப்படுத்தி வழிநடத்தியதில் மட்டுமன்றி, தானும் திடமாய்த் திகழ்ந்து, எவன் வைணவன் என்னும் கேள்விக்கும் எது வைணவம், எது பக்தி, எது முக்தி போன்ற பல கேள்விகளுக்கும் பதிலளித்தவர்.

இவருக்குப் பல சீடர்கள். அவர்களில் கூரகுலோத்தமதாசர், திருவாய் மொழிப் பிள்ளை மணப்பாக்கத்து நம்பி கோட்டூர் அண்ணர், திருப்புட்குழி ஜீயர், திருக்கண்ணங் குடிப்பிள்ளை, கொல்லிக்காவல தாசர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

பிள்ளைலோகாசார்யர் பல நூல்களையும் அருளியுள்ளார். 'யாத்ருச்சிகப்படி, ஸ்ரியப்பதிப்படி, முமூஷீப்படி, பரந்தபடி, தனிப்ரணவம், தனித்வயம், தனிசரமம், அர்த்தபஞ்சகம், தத்வத்ரயம், தத்வசேகரம், சாரசங்க்ரஹம், அர்ச்சிராதி, ப்ரமேயசேகரம், சம்சார சாம்ராஜ்யம், ப்ரபன்ன பரித்ராணம், நவரத்னமாலை, நவவித சம்பந்தம், ஸ்ரீவசன பூஷணம்' ஆகிய இவருடைய நூல்கள் எது வைணவம் என்கிற கேள்விக்கு மட்டுமல்ல எது வாழ்க்கை, எது பக்தி, எது ஞானம், எது மோட்சம் என்னும் பல கேள்விகளுக்கும் பதில் தருபவை.



திருவரங்கத்தில் காட்டழகிய சிங்கர் அருளும் ஒரு கோயில் உண்டு. இது, திருவரங்கன் ஆலயத் துக்கு வெளியே கிழக்குப்பக்கத்தில் கிழக்கு அடையவளைஞ்சானுக்கு அருகில் இருக்கும் தனிச் சந்நிதியாகும். இந்தக் கோயிலையும் இதன் மண்டபங்களையும் தன் இருப்பிடமாகக் கொண்டு பிள்ளைலோகாசார்யர் தினமும் சீடர்களைச் சந்திப்பார். இங்கேதான் இவருடைய போதனைகளும் வழி நடத்தல் களும் சீடர்களுக்குக் கிடைத்தன.

இந்தக் காட்டழகிய சிங்கர் திருக்கோயில் பற்றியும் நன்கு அறிதல் வேண்டும். எம்பெருமானின் அவதார சொரூபங்களில் ஒன்றே

நரசிம்மம். நாளை என்பதே நரசிம்மத்துக்குக் கிடையாது. அன்றே, அப்போதே அனுக்கிரகிப்பதுதான் நரசிம்மம். வீரம், கோபம், சாந்தம், கருணை என்கிற முரண்பட்ட உணர்ச்சிகளின் கலவை இந்த நரசிம்மம். இப்படிப்பட்ட நரசிம்மமானது அரங்கன் ஆலயத்துக்குள் வடக்கு நோக்கி மேட்டழகிய சிங்கர் எனும் பெயரில் கோயில் கொண்டிருப்பது போலவே, கோயிலுக்கு வெளியே கிழக்கில் காட்டழகிய சிங்கராகவும் கோயில்கொண்டுள்ளார்.

இக்கோயில் உருவான பின்புலம் சுவாரஸ்ய மான ஒன்று. ஒருகாலத்தில் கோயில் அமைந்த கிழக்குப்பகுதி பெரும் வனத்தை உடையதாயிருந்தது. வனத்தில் யானைகள் அதிகமிருந்தன. வெயில் காலங்களில் தண்ணீர் தேடி காவிரி ஆற்றங்கரைப் பகுதிக்கு வரும்போது, ஆற்றோரமாக வளர்க்கப்பட்டிருந்த வாழைத் தோப்புக்குள் புகுந்து துவம்சம் செய்யும் யானைகள். அவை அப்படியே ஊருக்குள்ளும் வரத் தொடங்கிவிட்டன. இதனால் பல உயிரிழப்புகளும் ஏற்பட்டன. இதற்கு என்ன செய்வது என்று தெரியாமல் எல்லோரும் எம்பெருமானிடம் பிரார்த்தித்தனர். அப்போது, கோயில் ஸ்தானீகர் ஒருவரின் வடிவில் எம்பெருமான் விடை தந்தார்.

‘யானைகள் வந்திடும் கிழக்கின் மிசை நானே அழகிய சிங்கமாய் நரசிம்மனாய் கோயில் கொண்டிருக்கிறேன். கால வெள்ளத்தினாலும், காவிரி வெள்ளத்தினாலும் அந்தச் சந்நிதி மூழ்கிப்போனது. அதை வெளியே எடுத்து ஒரு பெரிய கோயிலைக் கட்டி வழிபாடுகள் நிகழ்த்தி, அவ்வழிபாட்டில் வாண வேடிக்கை யும், வெடி வழிபடும் செய்யுங்கள்’ என்றார்.

உடனேயே எல்லோரும் கிழக்குத் திசையில் மூழ்கிப்போன கோயிலைத் தேடிக் கண்டுபிடித்தனர். திருவரங்கன் சந்நிதியேகூட இதுபோல் மணலால் மூடப்பட்டுப் பின் காலத்தால் வெளியே எடுக்கப்பட்ட வரலாறுதான் நமக்கு முன்பே தெரியுமே!



அவ்வேளையில்தான் இக்கோயிலும் மூழ்கியிருக்க வேண்டும். பின் தோண்டி எடுக்கப்பட்ட நிலையில், 1297-ல் மூன்றாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் இதைப் பெரிதாக்கி நிர்மாணித்தான். அதோடு நில்லாமல் அங்கோர் அந்தணர்கள் குடியிருப்பையும் 'சதுர்வேதி மங்கலம்' எனும் பெயரில் உருவாக்கி நித்யப்படி ஆராதனை களுக்கும் வகை செய்தான்.

பின்னர் உத்தமாம்பி வம்சத்தில் உதித்த சக்ர ராயராலும், நாயக்க மன்னர்களாலும் இங்கே பல விருத்திகள் ஏற்பட்டன. இக்கோயில் உருவான பின் யானைகள் வருவது அடியோடு நின்று அவற்றால் ஏற்பட்ட உத்பாதங்களும் நீங்கின. அன்று முதல் இன்றுவரை காட்டழகிய சிங்காரை வழிப்படுவோருக்கு மலைபோல துன்பம் வந்தாலும் அது நீங்கிவிடும் என்பது தெளியவாயிற்று. அப்படி ஒரு

சந்நிதி மண்டபத்தையே பிள்ளைலோகாசார்யர் தனக்கும் மிக உகந்த பாதுகாப்பான இடமாகக் கருதி வரித்துக்கொண்டதோடு அங்கேயே சீடர்களுக்குப் போதனைகளைச் செய்தார்.

இவர் முன்னிலையில்தான் மாலிக்காபூரின் படையெடுப்பும் விரித்துரைக்கப்பட்டது. இந்தச் செய்தி பிள்ளைலோகாசார்யர் காதுகளில் விழுந்தபோது அவர் வெளி ஆண்டாள் சந்நிதியில்தான் இருந்தார்.

ஆண்டாள் நாச்சியாரை அவர் தன் மானசிக குருவாகவும் வரிந்திருந்தார். பூமியில் அவதரித்து, பாவை நோன்பிருந்து இறைவனையே தன் பூத உடலோடு அடைந்து காட்டியவளல்லா ஆண்டாள்! எனவே, அவளைச் சிக்கெனப் பற்றிக்கொண்டால் அந்த அரங்கன் திருவடிகளில் விரைவில் அடைக்கல மாகி விடலாம் என்பது அவரது திருவுள்ளம்.

அப்படிப்பட்டவருக்கு மிலேச்சப் படையெடுப்பு குறித்த தகவல் வந்து சேர்ந்தது. அதிலும் அந்த மிலேச்சன் மிக சமீபத்தில் வந்துவிட்ட செய்தியும் தெரியவந்தது. எல்லோரும் பரபரப்போடு அடுத்து என்ன செய்வது, எங்கு செல்வது, எப்படித் தப்பிப்பது என்றெல்லாம் தங்களுக்குள் கேட்டுக்கொண்டதோடு பிள்ளைலோகாசார்யரிடமும் அதுபற்றி கேட்டனர்.

"சுவாமி, அடுத்து என்ன செய்வது... அந்த மிலேச்சன் சிலைகளை உடைத்து பொடிப்பொடியாக்குவதோடு நகைகளை அப்படியே களவாடிவிடுகிறான். எந்த ஒரு கோயிலிலும் விளக்கேற்றக்கூட துளி செல்வம் இருக்கக்கூடாது என்பதுதான் அவன் கட்டளையாம். அதனால்தான் ஆண்டாள் நாச்சியாரின் நகைகளை எல்லாம் ஒரு பெட்டியில் போட்டு அதை எவருக்கும் தெரியாதபடி புதைத்துவிட்டோம்."

அவர்கள் அப்படிக் கூறவும் அவர்களை அதிர்ச்சி யோடு ஏறிட்ட பிள்ளைலோகாசார்யர் "நகைகளைப் பத்திரப்படுத்திவிட்டோம் என்கிறீர்களே... அந்த நகைகளுக்குச் சொந்தக்காரியான இவளை விட்டு விட்டீர்களே..." என்று கேட்கவும் விக்கிப்போடு பார்த்தனர்.

“என்ன பார்க்கிறீர்கள்...”

“இப்படிக் கேட்டால் எப்படி சுவாமி... கோயிலில் நிலை கொண்டுவிட்ட உருவத்தை நாம் சந்நிதியைப் பூட்டித்தான் பாதுகாத்திட முடியும்.”

“பூட்டை உடைக்க மிலேச்சனுக்கு எவ்வளவு நேரமாகும்... யோசிக்கவேண்டாமா... சரி, நகைகளைப் புதைத்துவிட்டோம் என்றீர்களே, கூடவே ஏன் இவள் விக்கிரகத்தையும் புதைக்கத் தோன்றவில்லை...”

“சுவாமி...”

“அதெல்லாம் தங்கம், வைரம்... இது கல்தானே... எதுவானாலும் ஆகட்டும் என்கிற எண்ணமா...”

“அப்படியில்லை... வழிபாட்டுக்குரியவளை எப்படி.... அதுகுறித்து எங்களால் கற்பனைகூடச் செய்ய முடியவில்லை.”

“இவ்வளவுதானா இவளைப்பற்றி நீங்கள் அறிந்துவைத்திருப்பது. இவளது மூலமே இந்த மண்தானே... இந்த மண்மேல் துளசி மாடத்தருகில் கிடைத்த மழலையல்லவா இவள்...”

“அதனால்...”

“உடைக்கப்பட்டு நொறுங்கிப்போவதற்கு மாறாக இவள் புதைந்துபோவதில் எந்தத் தவறுமில்லை” - அழுத்தமாய் உறுதிபடச் சொன்னார் பிள்ளைலோகாசார்யர்!

**-தொடரும்...**

## ஆயுள் யோகம் அருளும் ஸ்ரீவாஞ்சியம்

**கு**ம்பகோணத்தில் இருந்து நன்னிலம் வழி யாக நாகப்பட்டினம் செல்லும் பாதையில் வரும் ஊர்- அச்சுதமங்கலம். இங்கிருந்து ஒண்ணரை கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது, ஸ்ரீவாஞ்சிநாதர் கோயில்கொண்டிருக்கும் ஸ்ரீவாஞ்சியம். ஸ்காந்த புராணம், பிரமாண்ட புராணம், சாம்போப புராணம் போன்றவை ஸ்ரீவாஞ்சியத்தின் மகிமை பற்றிச் சொல்கின்றன.



பிரளய காலத்திலும் அழியாத திருத்தலம். பிரளயம் ஏற்பட்டு அடங்கிய பின், பிரம்மனைப் படைத்த சிவபெருமான், உயிர்களைப் படைக்கும் பொறுப்பை பிரம்மனுக்கு அளித்த தலம் இது. ஸ்ரீயை வாஞ்சித்து (மகாலட்சுமியை அடைய விரும்பி) திருமால் தவம் இருந்த திருத்தலம் இது. எனவே, 'ஸ்ரீவாஞ்சியம்' ஆனது. இங்கு எம்பெருமான், சுயம்பு வடிவம். ஒரு காலத்தில் இந்தப் பகுதியில் சந்தன மரங்கள் அடர்ந்து காணப்பட்டதாம். அப்போது இந்தத் தலம், 'கந்தாரண்ய க்ஷேத்திரம்' எனப்பட்டது. எனவே, இறைவன் `கந்தாரண்யேஸ்வரர்' என்றும் வழங்கப்படுகிறார். இன்றைக்கும் ஆலயத்தில் தல விருட்சமாக

இருப்பது சந்தன மரம்தான். சந்தன இலைகளைக் கொண்டு வாஞ்சிநாதரை பூஜிப்பது விசேஷம் எனிறார்கள்.

இந்தத் தலத்தில் ஒரு அமாவாசை தினத்தன்று தர்ப்பணம் செய்தால், பித்ருக்கள் பத்து வருட காலம் திருப்தி அடைகிறார்கள். இரண்டு அமாவாசை தினத்தன்று தர்ப்பணம் செய்தால் நூறு வருடமும், மூன்று அமாவாசை தினத்தன்று தர்ப்பணம் செய்தால் ஒரு யுக காலத்துக்கும் பித்ருக்கள் திருப்தி அடைவதாக புராணங்கள் சொல்கின்றன.

மேலும், கங்கையும் யமதருமனும் சிவனருள் பெற்ற தலம் இது. ஆகவே, காசிப் புண்ணியம் பெறவும், நீண்ட ஆயுள் வேண்டியும் இந்தத் தலத்தில் பிரார்த்திப்பது விசேஷம். ராஜ கோபுரத்தை ஒட்டி தென்திசையில் இருக் கிறது எமதர்மனின் சந்நிதி. உள்ளே, தென் திசை நோக்கி அமர்ந்த கோலத்தில் அருள்பாலிக்கிறார். இங்கு, இவர் அனுக்கிரக மூர்த்தி. இவரை தரிசித்தால் எம பயம் விலகும்; ஆயுள் கூடும் என்பது ஐதிகம். இங்கு மாசிப் பெருவிழா பிரசித்திபெற்றது.

**- கே.காமாக்ஷி, திருவாரூர்**

24 Mar 2020

# ரங்க ராஜ்ஜியம் - 51



ரங்க ராஜ்ஜியம்

புதைக்காத நிலையில் நிற்கும் சிலைக்கு நித்ய பூஜையும் நைவேத்தியமும் அவசியம்.

***உண்ணா துறங்கா தொலிகடலை யூடறுத்து***

***பெண்ணாக்கை யாப்புண்டு தாமுற்ற பேதெல்லாம்***

***திண்ணார் மதிள்சூழ் திருவரங்கச் செல்வனார்***

***எண்ணாதே தம்முடைய நன்மைகளே யெண்ணுவரே...***

- நாச்சியார் திருமொழியில் ஆண்டாள்.

பிள்ளை லோகாசார்யர் ஆண்டாளின் திரு உருவச் சிலையைப் புதைக்கலாம் என்று சொன்னது கேட்டு அங்குள்ள எல்லோர் முகங்களும் இருளடைந்து போயின. புதைப்பைக் கற்பனைசெய்து பார்க்கக்கூட மனம் வராமல் கலக்கமுடன் லோகாசார்யரை அவர்கள் பார்த்தனர். "உங்கள் பார்வையின் பொருள் புரிகிறது. அபிஷேக ஆராதனைகள் செய்து அன்றாடம் வணங்கிய திரு உருவச் சிலையைக் குழி தோண்டிப் புதைப்பதைக் கற்பனை செய்யக்கூட உங்களால் இயலவில்லை. அப்படித்தானே..."

"ஆம். நீங்கள் சொன்னதைக் கேட்டு உடல் நடுங்குகிறது. இது எப்பேர்ப்பட்ட பாதகம்..."

"பாதகமில்லை. இப்போதைக்கு இதுவே பவித்ரம். நாம் எப்போதும் நம்மை மையமாக வைத்தே சிந்திப்போம். நாம் ஜீவாத்மாக்கள். இப்படிச் சிந்திப்பதே நம் வழக்கமும்கூட.ஆனால், பரமாத்மாவுக்குக் கல்லும் ஒன்றுதான் நெல்லும் ஒன்றுதான்; பொன்னும் ஒன்றுதான் மண்ணும் ஒன்றுதான்."

"எங்களுக்கொரு மாற்று யோசனை."

"என்ன?"

"எங்களில் எவர் இல்லத்துக்காவது கொண்டு சென்று வைத்துக்கொள்ளலாமா..."

"தாராளமாக. ஆனால், புதைக்காத நிலையில் நிற்கும் சிலைக்கு நித்ய பூஜையும் நைவேத்தியமும் அவசியம். அம்மட்டில் நாளோ, பொழுதோ தவறக் கூடாது."

"இயன்றவரை செய்கிறோம். இயலாது போகும்போது என்ன செய்ய இயலும்?"

“இது சரியான பதிலில்லை. அதோடு சிலை இருப்பது தெரிந்து மிலேச்சர்களால் அதற்கோர் உத்பாதம் நேரிட்டால் அதைவிட பாதகமும் வேறில்லை. அதற்கு நாம் உயிரை விட்டுவிடுதல் பெருநலம்."

- இப்படி வாதப்பிரதிவாதங்கள் சென்று கொண்டிருந்த நிலையில் ஓர் அதிர்ச்சித் தகவல் வந்து சேர்ந்தது. சுல்தானியப்படை சமயபுரத்தைக் கடந்துவிட்டது என்பதுதான் அந்தச் செய்தி.

“ஐயோ... இப்போது என்ன செய்வது?”



“இனி விவாதிக்கக் காலமெல்லாம் இல்லை. இந்த ஆலயத்தின் ஈசான்ய பாகத்தில் குழியைத் தோண்டுங்கள்... சீக்கிரம்”- பிள்ளை லோகாசார்யர் வேகமெடுத்தார்.

தானும் ஒரு மண்வெட்டியை எடுத்துக்கொண்டு ஈசான்ய பாகத்தில் குழியைத் தோண்டி ஆறடி ஆழத்தில் நெல்லைக் கொட்டி அதன் மேல் ஆண்டாளின் திரு உருவச்சிலையைக் கிடத்தினர்.

பின் அங்கிருந்த அவ்வளவு பூக்களையும் கொட்டி, மேலே பட்டாடையை விரித்து அதற்குமேல் மண்ணைப் போட்டு மூடி, தோண்டிய சுவடு தெரியாதபடி அக்குழிப் பரப்பின் மேல் சிறியதாக ஒரு மாடம் அமைத்து அதனுள் விளக்கையும் ஏற்றிவைத்தனர்.

இதேபோல் அரங்கன் சந்நிதி முதல் சகல சந்நிதிகளுக்கும் சென்று விக்கிரகங்களைக் காப்பாற்றலாம் என்று காலெடுப்பதற்குள் சுல்தானியப்படை காவிரி ஆற்றைக் கடந்து திருவரங்கத்துக்குள் ஆவேசத்துடன் பிரவேசித்தது.

காவிரியில் அப்போது பார்த்துப் பெரிதாய் நீரோட்டமில்லை. எனவே, சுல்தானிய மிலேச்சர்கள் திருவரங்கத்துக்குள் நுழைவது சுலபமாகிவிட்டது.

இவ்வேளையில் பிள்ளை லோகாசார்யர் நேராகத் திருவரங்கப் பெருமான் சந்நிதிக்கு ஐம்பது சீடர்களோடு சென்று தென்திசை மற்றும் வடதிசை நோக்கியிருக்கும் கதவுகளை மூடித் தாழிட்டதோடு, கதவருகிலேயே ஒன்றுக்குப் பத்து பேர் அமர்ந்துகொண்டனர்.. பிள்ளை லோகாசார்யரும், ஸ்தானிகர்களும் அரங்கன் திருச்சந்நிதி முன் கூடி கண்ணீர் மல்கப் பிரார்த்தனை புரியலாயினர்.

திபுதிபுவென சுல்தானியப்படை வருவதை, அதுவும் கொள்ளிடம் வழியே வடபுலமாய் வருவது அறிந்து பஞ்சுகொண்டான் எனும் கோயிலின் பிரதானக் காப்பாளன், அவர்களைத் தடுத்து நிறுத்தும்விதமாக கம்புகள், கட்டாரிகள் மற்றும் வாள்களோடு கொள்ளிடக் கரைக்கே சென்று போரிடலானான்.



அதற்குள் செய்தி ஊருக்குள் பரவியதில் சிலர் கதவையடைத்துக்கொண்டு உள்ளடங்கினர். சிலர் ஆவேசமாய் தங்கள் வசம் உள்ள உலக்கை, கம்பு என்று கிடைத்ததை எடுத்துக்கொண்டு, வடக்குக் கோபுர வாசலில் திரண்டனர். ஆனாலும் மிலேச்சர்களின் படைபலத்துக்கு முன்னால் தாக்குப்பிடிக்க முடியவில்லை.

இதில் பஞ்சுகொண்டானும் அவன் ஆட்களும் கொல்லப்பட்டனர். மிலேச்சப்படை கோபுர வாசல் கடந்து உள் நுழைந்தது. அப்போது மூல விக்கிரகங்களுக்கு பங்கம் நேரக் கூடாது என்று எண்ணி, மூல விக்கிரக சந்நிதிகள் மூடப்பட்டன. கதவுகள் தெரியாதபடி துணியால் மறைக்கப்ப்பட்டு, அதன் முன் உற்சவ விக்கிரகங்கள் வைக்கப்பட்டன..

தற்காலிகமாகத் தோன்றிய இந்த எண்ணம் நன்கு பயனளித்தது என்றே கூற வேண்டும். கூடுதலாக சுல்தானியப் படையின் கவனத்தைச் சிதறடிக்கவேண்டி ஒரு திட்டம் செயல்படுத்தப்பட்டது.

ஸ்ரீபண்டாரம் என்னுமிடத்தில் சேமித்துவைக்கப்பட்டிருந்த நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள், உண்டியல் வருவாய், மேலும் உற்சவ விக்கிரங்கள் உள்ள இடத்தை, பயத்தின் காரணமாக சொல்வதுபோல் ஒருவர் காட்டித் தர, படையினரின் கவனம் அங்கே திரும்பியது.

உள்ளே புகுந்து மொத்தத்தையும் கொள்ளையிட்டனர். அப்படியே சிலைகளையும் அள்ளிப்போட்டுக் கொண்டனர். அரங்கநாதன் திருச்சந்நிதி நோக்கியோ, தாயார் சந்நிதி நோக்கியோ செல்லாமல், செல்லவும் தோன்றாமல் ஒரு பெருங்கொள்ளையைச் செய்து முடித்தனர்.

நெடுநேரம் கழித்து அமைதி திரும்பியது. அரங்கப் பெருமான் சந்நிதிக் கதவுகள் திறக்கப்பட்டன. பெருமானுக்கு எந்த உத்பாதமுமில்லை; தாயாருக்கும் யாதொரு பாதிப்புமில்லை.

ஆனால்... ஆனால்...

அழகியமணவாளப்பெருமாள் மற்றும் சேரகுலவல்லி விக்கிரகங்கள் கொள்ளை போய்விட்டன. இச்செய்தி, பிள்ளை லோகாசார்யர் உள்ளிட்ட ஸ்தானிகர்களை அடையவும், அனைவரும் அப்படியே கலங்கி அமர்ந்துவிட்டனர்.

“எம்பெருமானின் திருமேனியை ஒரு கலைப்பொருள்போல கருதி, தூக்கிச்சென்றுவிட்டார்களே... பாவிகள்” என்று ஒருவர் கதறி அழத் தொடங்கினார்.

“ஏதோ அம்மட்டோடு போயிற்றே... அரங்கப் பெருமானின் உற்சவமூர்த்தம் பத்திரமாகத்தானே உள்ளது...”

“பெருமானின் எழில் ததும்பும் தோற்றமல்லவா அழகிய மணவாள சொரூபம்...”

“அதனினும் அழகானது சேரகுலவல்லியின் சொரூபம்...”

“இப்போது என்ன செய்யலாம்?”

“நாம் முதலில் செய்ய வேண்டியது கோயிலைக் காப்பதன்பொருட்டு உயிரை விட்ட பஞ்சுகொண்டானின் ஈமச்சடங்கைத்தான். அவனுக்கு எம்பெருமானின் திருவடிகளில் மோட்சகதி நிச்சயம்.”

“இப்படிக் கொலையும் கொள்ளையும் புரிந்த இந்தப் பாவிகளுக்குத் தண்டனை ஏதும் கிடையாதா? ஹிரண்யனின் பொருட்டு தூணைப் பிளந்துகொண்டு வந்த எம்பெருமான் இப்போதும் அப்படி வந்திருந்தால் எத்தனை நன்றாயிருந்திருக்கும்...”

“எண்ணிப்பார்க்க நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால், பிரகலாதன்போல் நம்மிடையே ஒருவர்கூட இல்லையே...”

“என்ன சொல்கிறீர்கள் நீங்கள்... நம் பக்தியில் என்ன குறை?”

“அவரவர்க்கும் அவரவர் புரியும் பக்தி மேலானதாகவே தெரியும். ஆயினும் பிரகலாதனோடு ஒப்பிட்டால் நாம் எவ்வளவு தாழ்வானவர்கள் என்பது தெரிய வரும். எம்பெருமான் நிமித்தம், பெற்ற தந்தையையே பகைத்துக்கொண்டவன் பிரகலாதன். நெருப்பில் தூக்கிப்போட்ட போதும், கடலில் தூக்கிப்போட்ட போதும், சீறிவரும் சர்ப்பங்களுக்கு நடுவில் விட்ட போதும் நம்பிக்கை இழக்கவில்லை அவன்.

அவர் வருவாரா மாட்டாரா என்று அவன் சந்தேகம் கொள்ளவில்லை. `வந்தே தீருவார்' என்று உறுதியாகக் கூறினான். அதேபோல் எம்பெருமானும் வந்து காத்து அருளினார்.''

``அப்படியானால் அந்த அளவு நம்பினால் தான் எம்பெருமான் காட்சி தருவாரா... நம்போன்ற சாமான்ய பக்தர்களெல்லாம் இருப்பதும் ஒன்று, இல்லாததும் ஒன்றா...''

"எதையும் சரியாகப் புரிந்து பேசுங்கள். அவதார நிகழ்வுகளையும் கூர்ந்து சிந்தித்து, பின் பேசுங்கள். இது அவனால் உண்டான உலகு. இதில் நாம் மட்டுமல்ல; அந்த மிலேச்சனும்கூட அவன் மக்களே! இது நமக்குள் நாம் போட்டுக் கொள்ளும் சண்டை. சொல்லப்போனால் இது ஒரு கொள்கைப் போராட்டம். கலாசாரப் போர் என்றும் கூறலாம். இதில் எவரின் ஆத்மசக்தி பெரியதோ அதுவே வென்றிடும்... "

"அதுவும் சரிதான்... இம்மட்டில் மிலேச்சனை எதிர்க்கும் ஆற்றலையும், நம் தத்துவங்களையும் கொள்கைகளையும் காப்பாற்றிக்கொள்ளும் ஆற்றலையும் நாம் பெறுவதற்காகப் பிராத்திக்கலாம். இது நமக்கான பரீட்சை. அதன்பொருட்டு உயிரைக்கூடத் துறக்கலாம். மாறாக இறைவன் ஏன் இப்போது வரவில்லை என்று கேட்பதும் எதிர்பார்ப்பதும் சிறுபிள்ளைத்தனமே!"

"அவர் வருவார்... பல ஆசார்ய புருஷர்கள் வடிவில்... அப்படி வந்தவர்தானே ராமானுஜ மகாத்மா. அவர் இந்தத் திருவரங்கத் தலத்தில் செய்த சீர்திருத்தங்களும் நிறுவிச்சென்ற சித்தாந் தங்களும் நமக்குத் துணை நிற்கின்றனவே!"

இதைக் கேட்டதும் அந்தக் கூட்டத்திலிருந்த ஒருவர் சொன்னார்: "ஸ்ரீஸ்ரீராமானுஜர் மாத்திரமா... இதோ நம்மிடையே இருக்கும் பிள்ளை லோகாசார்யர் யாராம்... காஞ்சி வரதனின் அம்சமில்லையா இவர். அதே காஞ்சியம்பதி இன்று நமக்கு அளித்திருக்கும் ஸ்ரீஸ்ரீவேதாந்த தேசிகர் யாராம்... எம்பெருமானின் கண்டாவதாரமில்லையா அவர். இவர்களெல்லாம் இருக்க நம்மிடையே எதற்கு சலனம்..."

“அப்படியானால் இந்த மிலேச்ச உபாதையை நாம் முழுமையாகக் கடந்துவிடுவோமா...”

“கடந்தாக வேண்டும். கடந்தால்தான் நாம் நல்ல மனிதர்கள். நல்ல வைணவர்கள். நல்ல விஷ்ணு பக்தர்களாவோம்.”

- அவர்கள் தங்களுக்குள் ஒருவருக்கொருவர் விவாதம் செய்துகொண்டு ஒரு முடிவை எட்டிய நிலையில், சிங்காரவல்லி என்று ஒரு பெண்மணி ஆலயமிசை அழுதுகொண்டே வந்தாள். தெற்குக் கோபுர நுழைவாயிலிலிருந்து அவள் கண்ட காட்சிகள் கண்களையே பிடுங்கி எரிந்துவிடலாமா என்பது போல அவளை எண்ணச் செய்திருந்தன!

-தொடரும்...

## விருதகிரிக்கு ஐந்தால் பெருமை!

**வி**பச்சித்து, ரோமசர், நாதசர்மா, அநவர்த் தனி, குமாரசர்மா ஆகிய ஐந்து மகான்கள் வழிபட்ட புண்ணிய க்ஷேத்திரம் விருத்தாசலம். ஐந்து எனும் எண்ணிக்கையின் அடிப்படையில் வேறுசில மகிமைகளும் இந்தத் தலத்துக்கு உண்டு.

ஐந்து பிரகாரங்கள்: ஆலயப் பிராகாரம் மூன்று; தேரோடும் வீதி மற்றும் பஞ்சவர்ணப் பிரகாரம்.

ஐந்து கோபுரங்கள்: நான்கு திசைகளிலும் ஒன்று என நான்கு கோபுரங்கள் உண்டு. ஐந்தாவது கண்டராதித்த கோபுரம்

ஐந்து கொடி மரங்கள்: நந்தி மண்டபக் கொடிமரம், வன்னியடிப் பிராகரத்தில் பிரதான கொடிமரம், தெற்கு, மேற்கு மற்றும் வடக்கு சுற்றில் உள்ள மற்ற கொடி மரங்கள்.

ஐந்து தீர்த்தங்கள்: அக்னி, குபேர, சக்கர, நித்யானந்த கூபம் மற்றும் மணிமுத்த நதி.

ஐந்து பிள்ளையார்கள்: ஆழத்துப் பிள்ளையார், வல்லப விநாயகர், மாற்றுரைத்த விநாயகர், தசபுஜ விநாயகர், முப்பிள்ளையார்.

- **தட்சிணாமூர்த்தி, திருவாரூர்**

07 Apr 2020

# ரங்க ராஜ்ஜியம் - 52



ரங்க ராஜ்ஜியம்

எப்போதும் கலகலப்பாகக் காணப்படும் கடைவீதி சுடுகாடு போல காட்சியளித்தது. பொருள்கள் இறைந்து கிடந்தன.

*`எழிலுடைய வம்மனைமீர் என்னரங்கத் தின்னமுதர்*

*குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்*

*எழு கமலப் பூவழக ரெம்மானார், என்னுடைய*

*கழல் வளையைத் தாமும் கழல் வளையே யாக்கினரே!'*

படையெடுப்பு குறித்து திருவரங்கத்து வைணவர்கள் தங்களுக்குள் விவாதம் செய்துகொண்டு ஒரு முடிவை எட்டிய நிலையில், சிங்காரவல்லி என்ற பெண்மணி ஆலயமிசை அழுதுகொண்டே வந்தாள். தெற்குக் கோபுர நுழைவாயிலிலிருந்து அவள் கண்ட

காட்சிகள், கண்களையே பிடுங்கி எரிந்துவிடலாமா என்பது போல அவளை எண்ணச் செய்தன!

ஆங்காங்கே வீட்டு முகப்புப் பந்தல்கள் எரிந்து புகைந்தபடி இருந்தன. பசுக்களும் ரிஷபங்களும் வெட்டப் பட்டு ரத்த ஒழுக்கோடு கிடந்தன. அநேகம்பேர் குற்றுயிரோடு துடித்துக்கொண்டிருக்க, சிலர் அவர்களைக் காப்பாற்றும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர்.

எப்போதும் கலகலப்பாகக் காணப்படும் கடைவீதி சுடுகாடு போல காட்சியளித்தது. பொருள்கள் இறைந்து கிடந்தன. காய்கறிகளும் தானியங்களும் சிதறிக்கிடந்தன. கோயிலுக்குள் புகுந்தபோது இன்னும் அதிக கோரம்! சிற்பங்கள் உடைந்தும், தூண்கள் பல சிதிலப்படுத்தப்பட்டும் திகழ்ந்தன. குதிரைகள் சில செத்துக் கிடந்த நிலையில், காக்கைகள் அவற்றின் ரத்தம் வழியும் பாகத்தைக் கொத்திக்கொண்டிருந்தன.



சிங்காரவல்லி தினமும் அரங்கனை தரிசிப்பதுடன் அழகிய மணவாளப் பெருமாளையும் தரிசிப்பதைத் தன் வாழ்நாள் கடமையாகவே கொண்டிருந்தாள். சேரகுலவல்லி போல தானும் பெருமானோடு சென்று சேர்ந்துவிட வேண்டும் என்பதே அவளது பிரார்த்தனை! ஆனால் அன்றைய காட்சி களும், அழகிய மணவாளப் பெருமாளையும் சேரகுலவல்லிச் சிலையையும், மிலேச்சன் அள்ளிச் சென்று விட்டான்

என்று கிடைத்த செய்தியும் அவளை நிலைகுலைய வைத்துவிட்டன. காலியாகக் காட்சி தந்த சந்நிதியைப் பார்த்து கண்ணீர் சிந்திய சிங்காரவல்லி ஓர் ஆவேசமான தீர்மானத்துக்கு வந்தாள்.

“எம்பெருமானே... அழகிய மணவாளா! உன்னை நான் விடமாட்டேன். அதிலும் அசுரன் ஒருவன் உன்னைக் கொண்டு செல்ல விழைந்துவிட்ட இத்தருணத்தில், அப்படிச் செய்துவிடாமல் அவனைத் தடுத்து நிறுத்துவதோடு எப்பாடுபட்டாவது உன்னை நான் மீட்பேன்! அவ்வாறு மீட்க முடியாது போனால் உயிரை விடுவேன். இது சத்தியம்!" என்று வாய்விட்டே சபதம் செய்தாள்!

அதைக் கண்டு, அவளை அறிந்த சிலர் வருந்தினர். “சிங்காரவல்லி! நீ வருந்துவதால் பயனில்லை. பேரரசர்களே வீழ்ந்து விட்டார் கள். மிலேச்சர்களின் பலம் அப்படி. விரோதிகள், எதிரிகள் இப்படி வருவார்கள் என்று நாம் கனவில்கூட எண்ணிப் பார்க்கவில்லை. நம் திருவரங்கம் போல இந்த உலகம் முழுவதும் அன்பு மயமானது என்று நாம் கருதிவிட்டோம். அது எவ்வளவு பெரிய பிழை தெரியுமா” என்றார் ஒருவர்.

“இனி புலம்புவதால் என்ன பயன். நல்லவேளையாக அரங்கப் பெருமானின் மூல விக்கிரகத்தையும், உற்சவ மூர்த்தியையும் எப்படியோ பாதுகாத்துவிட்டோம். ஸ்ரீபிள்ளைலோகாசார்யர் சரியான தருணத்தில் சரியான முடிவெடுத்து மிலேச்சர் களை திசை மாற்றி, அழகிய மணவாளரை மட்டும் அவர்கள் கொண்டுபோகும்படிச் செய்துவிட்டார். நாம் இப்போது அவரைப் போற்ற வேண்டும்” என்றார் இன்னொருவர்.

“என்ன பேசுகிறீர்... நம் ஆலயத்தையே பாழ் படுத்திவிட்டுப் போயுள்ளனர். எப்பேர்ப்பட்ட திருத்தலம் இது. இன்றைக்கு அவர்களின் தோற்செருப்புக் கால்களால் அசுத்தமாகி, நாம் கட்டிக்காத்த புனிதமெல்லாம் பாழாகிவிட்டதே. எவ்வளவு இடிபாடுகள்... மண்மேடுகள்... போகிற போக்கில் பூஜை மணியை வேறு அறுத்தெரிந்துவிட்டு போயுள்ளனர். இதுவரை ஒரு நாள் ஒருபொழுது

பூஜை நடக்காமல் இருந்ததில்லையே... ஆனால், இனி எப்போது பூஜைகள் நிகழும் என்றே தெரிய வில்லையே...” என்ற அங்கலாய்த்த ஒருவர் அழவே தொடங்கிவிட்டார்.

சகலத்தையும் கண்ணீர் வழிய கேட்டுக் கொண்டிருந்த சிங்காரவல்லி, தீர்க்கமாய் ஒரு முடிவுக்கு வந்தாள்.

“நாம் இப்படி அழுது புலம்புவதால் பயனில்லை. இது நம் பக்திக்கான பரிட்சை. இதைவிட கொடுமையான சோதனைகளைச் சொந்தத் தகப்பனாலேயே அனுபவித்தவன் பிரகலாதன். ஆனால் அவன் கடைசி வரை பக்தியைக் கைவிடவில்லை. எம்பெருமானும் கருணை காட்டத் தவறவில்லை. எனவே, அதுபோன்ற புராணச் சங்கதிகளைப் பௌராணிகர் மூலமாய் அறிந்த நாம் அயர்ந்துவிடக் கூடாது. இப்படியும் சோதனைகள் வரும் என்பதற்காகவே அதுபோன்ற புராணங்கள் நமக்குப் போதிக்கப் பட்டிருக்கின்றன. அற்பமான மனிதர்களின் மூர்க்கத்தால் அழிந்து போகக்கூடியதல்ல இந்தப் பெருங்கோயில். இதை உலகுக்கு உணர்த்தியே தீர வேண்டும்” என்று ஆவேசமாக பேசவும் செய்தாள்.

“உன் ஒருத்தியால் என்ன செய்துவிட முடியும்?” – என்று ஒருவர் ஏளனமாய்க் கேட்டார்.

“அந்நியன் ஒருவனால் எம்பெருமானை இங்கிருந்து கொண்டு செல்ல முடியும் என்றால், என்னால் அவரை அங்கிருந்து இங்கு கொண்டு வர முடியாதா?”

“உளறாதே! அச்சிலையை இந்த நொடி அவர்கள் அழித்திருப்பர்.”

“இருக்காது... இருக்கவே இருக்காது. ஆயிரமாயிரம் பூஜை கண்ட ஐம்பொன் திருமேனி அது. அதற்கென்று பெரும் சக்தி உள்ளது. அதை எவராலும் அழிக்க முடியாது.”

“முட்டாள்தனமாக பேசாதே... சிலை வழிபாட்டுக்கு எதிரிகள் அவர்கள். சிலைகளை அழித்தால்தான் நம்முடைய வழிபாட்டை நிறுத்த முடியும் என்பதே அவர்களின் கொள்கை. எனவேதான் கோயில்களைக்

கொள்ளையடிப்பது, நிர்மூலமாக்குவது என்று செயல்பட்டு வருகின்றனர். எனவே, அச்சிலை நிச்சயம் நிர்மூலமாகியிருக்கும்...”

“இல்லை... இல்லை... இல்லை... என் அழகிய மணவாளன் அழிக்கப்பட முடியாதவர். அவரை அழிக்க முனைவோரே அழிந்து போவார்கள்...” – சிங்காரவல்லி குரலோங்கச் சொன்னாள்.

“அழிந்துபோய் நிலைகுலைந்து கிடப்பது நாம்தான். அவர்களில்லை. இதைப் புரிந்துகொள்.”



“அதற்கு காரணம், நம்முடைய சாந்த குணமும் பயந்த போக்கும்தான். இது ஒரு பாடம். நாம் இனி நம் குணத்தை மாற்றிக்கொள்ள வேண்டும். நம்மைக் கொல்ல வரும் புலியை நாம் வேட்டையாடிக் கொல்வதில்லையா. அதுபோல், நாம் வேட்டைக்கும் தயாராக வேண்டும்.”

“கேட்க நன்றாக இருக்கிறது. நடைமுறைக்கு ஒத்து வருமா?”

“உங்கள் நிலை எப்படியோ தெரியாது... நான் துணிந்துவிட்டேன். இனி, ஆடுகிற மாட்டை ஆடிக் கறப்பேன், பாடுகிற மாட்டை பாடிக் கறப்பேன்.”

“சிங்காரவல்லி! நீ ஒரு சாமான்யப் பெண். உணர்ச்சிப் பெருக்கில் ஏதேதோ பேசுகிறாய். போய் ஆக வேண்டியதைப் பார்.”

“ஆம் உணர்ச்சிப்பெருக்கில்தான் பேசுகிறேன். இது சாதாரண உணர்ச்சிப் பெருக்கல்ல... பக்திச் சிலிர்ப்புப் பெருக்கு! எனக்கு எம்பெருமான் துணையிருப்பார். என் சக்தியில், புத்தியிலிருந்து அவர் வழி நடத்துவார்...” என்ற சிங்காரவல்லி, சொன்னதுபோலவே புத்திசாலித்தனமாக நடந்துகொள்ளத் தொடங்கினாள்.

தன் இல்லம் திரும்பியவள் தன் ஆடைகளைக் களைந்து மிலேச்சப் பெண்கள் அணிவது போன்று ஆடை உடுத்திக்கொண்டாள். மிலேச்ச வீரர்கள் கூடியிருக்கும் பகுதியைத் தெரிந்துகொண்டாள். சோளக் கருதுகளைப் பறித்து வந்து, அவற்றை அனலில் வாட்டிச் சுட்டெடுத்து, ஒரு கூடையில் வைத்துச் சுமந்தபடி அவர்களின் இருப்பிடம் நோக்கிச் சென்றாள்.

அவர்கள், சிங்காரவல்லியை தங்கள் இனப் பெண்ணாக நினைத்து வரவேற்றனர். சோளக் கருதுகளை அள்ளித் தந்தவள், அவர்களின் அன்புக்குப் பாத்திரமானாள். அவர்கள் சொன்ன சிறு சிறு வேலைகளைச் செய்தாள். அப்படியே கொள்ளையடிக்கப்பட்ட பொருள்கள் எங்கு உள்ளன எனும் ரகசியத்தையும் தெரிந்துகொண்டாள். அவை, சிராப்பள்ளி திருக்குளத்தை ஒட்டிய கல்யாண மண்டபத் துக்குள் பாதுகாப் போடு இருப்பதாகவும் நாளை அந்தப் பொருள்களுடன் அறுபதுபேர் கொண்ட கஜானாக் குழு டெல்லிக்குப் புறப்பட இருப்பதாகவும் தெரிந்துகொண்டாள்.

அத்துடன், அந்தக் கஜானாக் குழுவின் தலைவன் இன்னார் என்பதை அறிந்து அவனைக் காணச் சென்றாள். அவனிடம் மிக நெருக்கமாகப் பழகி “உன்னோடு என்னையும் அழைத்துச் செல்லுங்கள். வழியில் உங்களுக்குச் சுவையான உணவு சமைத்துப் போடுகிறேன். என்னை டெல்லி சுல்தான் அரண்மனைப் பணியில் சேர்த்து விடுங்கள். இறைவன் உங்களுக்குக் கருணை செய்வான்” என்று அழுதாள். அவனும் அவளை நம்பினான். அவளின் வேண்டுகோளுக்குச் சம்மதித்தான்.

அதேநேரம் ஒருசிலர் சிங்காரவல்லியைச் சந்தேகப்படவும் செய்தனர். அவர்களை யெல்லாம் மன உறுதியோடு சமாளித்து, கஜானாக்

குழுவோடு அறுபத்து நான்கு நாள் பயணம் செய்து டெல்லியை அடைந்தாள். இடையில் அழகிய மணவளாப் பெருமான் விக்கிரகத்தை அவள் எவ்வளவு தேடியும் கிடைக்கவில்லை. மிகுந்த பொன் நகைகள், அட்டிகைகள், பொற்காசுகள், வெள்ளிப் பாத்திரங்களோடு அழகிய மணவாளப் பெருமான் ஒரு மரப் பெட்டிக்குள் இருந்தார். அப்பெட்டிக்கான பூட்டுச்சாவி தலைவனிடம்தான் இருந்தது. டெல்லியை நெருங்கிவிட்ட நேரம் அவனுக்கு மது குடிக்கத் தந்து சாவியைக் களவாடி, பெட்டியைத் திறந்து பார்த்தவள், பூரித்துப் போனாள்.

உள்ளே பெருமான் துளிகூட சிதைவின்றி பொற்குவியலுக்குள் அவளுக்குக் காட்சி தந்தார்! அந்த நொடியே சிங்காரவல்லி அவன் உருவை வெளியே எடுத்து நிற்கவைத்து, காலில் விழுந்து வணங்கி ஆனந்தக் கண்ணீர் சிந்தினாள். அப்படியே துக்கிச் சென்றுவிடலாமா என்றுகூட நினைத்தாள். ஆனால் அத்தருணத்தில் பலரும் முழித்துக்கொண்டு அங்கு வரவும், சிலையை மீண்டும் உள்ளே வைத்துப் பூட்டி சாவியை மீண்டும் தலைவனின் இடுப்பில் செருகிவிட்டாள்.

நல்ல வேளை எவரும் சந்தேகிக்கவில்லை. அதன்பின் பயணம் தொடர்ந்தது. டெல்லியை அடைந்ததும் அந்தப் பெட்டி அப்படியே சுல்தானின் முன் வைக்கப்பட்டு திறந்து காட்டப்பட்டது. உள்ளே இருந்த நகைகளைப் பார்த்து சுல்தான் வாய்பிளந்தான். ஆனால் அவனுடைய திருமகளான சுரதாணி என்பவளோ, அழகிய மணவாளரின் விக்கிரகத்தைப் பார்த்துச் சொக்கிப்போனாள். தன் ஆசனத்திலிருந்து இறங்கி திரைச்சீலைகளை எல்லாம் விலக்கிக்கொண்டு வந்தவள், சுல்தானிடம்

``இந்தச் சிலை தனக்கு வேண்டும். இது எனக்கு மிகப்பிடித்து விட்டது'' என்று கேட்டாள்.

சுல்தானும் "தாராளமாய் எடுத்துக்கொள். உன் இஷ்டம்போல் இதை ரசித்து மகிழ்ந்திடு" என்றான். அத்துடன், "எல்லோரும் விழுந்து விழுந்து

வணங்கிய இந்த உலோகச் சிலை, இனி என் மகளின் விளையாட்டுப் பொருள்" என்று கூறி, அந்தச் சபையே அதிரும்படி சிரித்தான். கூட்டத்தோடு கூட்டமாக பார்த்தபடி இருந்தாள் சிங்காரவல்லி.

எப்படியோ... எம்பெருமானின் திருமேனியை சிதிலப்படுத்தி விடாமலோ அல்லது நெருப்பிலிட்டு உருக்காமலோ இருந்தார்களே... என்று சமாதானமடைந்தாள். மேலும் சுல்தான் மகளின் அந்தப் புரத்துக்குள் நுழையவும் முடிவு செய்தாள். அதற்கு இலகுவாக தலைவன் மகளுக்கு தலைவாரி பூ அலங்காரம் செய்தாள். கைக்கு மருதாணி இட்டு அவள் செய்த அழகான செயல்கள், மிக இலகுவாக சல்தான் மகள் சுரதாணியை நெருங்கச் செய்துவிட்டன.

இந்த இடைப்பட்ட காலத்தில் சிங்காரவல்லி உருது மொழியையும் பேசக் கற்றுக்கொண்டதுதான் விந்தை. அவளது கலையார்வம், பேசும் திறன், தைரியமான செயல்பாடுகள் சுரதாணி மனத்தில் அவளுக்கோர் இடத்தை அளித்துவிட்டன.

அப்போது சுரதாணியின் மாடத்தில்தான் அழகிய மணவாளரின் சிலையும் இருந்தது. அவளைக் காணும் சாக்கில் சிலைக்கும் பூ சாற்றி ரகசியமாக வணங்கினாள். ஒருநாள் சுரதாணி அதைக் கண்டு "என்ன செய்கிறாய்" என்று கேட்க, "இந்தச் சிலை மிக விசேஷமானது. இது, கேட்பவர்க்குக் கேட்டதைத் தந்திடும்" என்றாள்.

"அப்படியா... இது எனக்கு தெரியாதே?"

"உங்களுக்குத் தெரியாத இன்னும்பல விஷயங்கள் உண்டு சுரதாணி!"

"அப்படியென்ன விஷயங்கள்?"

"இச்சிலை ஏதோ கலைப் பொருளல்ல... இந்த உலகைப் படைத்த அருளாளனின் வடிவம் இது...!"

"உலகைப் படைத்த இறைவனுக்கு வடிவம் கிடையாதே?"

“அது நம் கொள்கை. ஆனால், ஒரு வடிவம் இருந்தால்தான் மனத்தில் பக்தி புரிய முடியும் என்பது தென்னவர்கள் சித்தாந்தம்.”

“உண்மைதான்... நாம்கூட குறிப்பிட்ட திசை மற்றும் இறைவன் உறைக்கின்ற இடத்தை எண்ணித் தானே தொழுகிறோம்.”

“ஆம்! அவர்கள் வரையில் இது இறைத்தோற்றம்”

“என்னவோ தெரியவில்லை... இத்தோற்றம் எனக்கும் மிகவும் பிடித்துவிட்டது. என்ன அழகு... என்ன ஈர்ப்பு!” – சுரதாணி சொல்லிக்கொண்டே, சிலையைத் துக்கி மார்போடு அணைத்துக்கொண்டாள்.

“சுரதாணி, நீங்கள் இப்படி அனுபவிப்பதை அரசர் பார்த்தால் தவறாக எண்ணுவார். இதை எனக்குத் தந்துவிடுங்களேன்...” – சிங்காரவல்லி இதுதான் தருணம் என்று கேட்கவும், சுரதாணியின் முகம் மாறியது.

“இல்லை... இதை நான் தரமாட்டேன். இனி, இதைப் பிரியவும் மாட்டேன். நான் உறங்கும்போதும் இச்சிலை என்னோடு உறங்கட்டும்" என்றவளாய் சொன்னபடியே செய்தாள்.

சிங்காரவல்லிக்கு ஒன்று மட்டும் நன்றாகப் புரிந்தது. அங்குள்ள பாதுகாவலிலிருந்து அச்சிலையைக் கடத்திக்கொண்டு திருவரங்கம் செல்ல, தன் தனியொருத்தியால் முடியாது என்பதே அது. இவ்வளவு துரம் படாத பாடு பட்டு வந்ததெல்லாம் வீணாகிவிட்டதே என்று முதலில் வருந்தியவள், பிறகு அதற்கொரு வழியைக் கண்டாள்.

டில்லி சுல்தான் பாரத தேசம் முழுவதையும் அடிமைப்படுத்தி தனது குடையின்கீழ் ஆட்சி செய்பவனாக இருந்த அதேநேரம், சொன்ன சொல் தவறாதவனாகவும், கலைக்கு மயங்குபவனாகவும், தன்னை துதிப்பவர்க்கு அள்ளி அள்ளித் தருபவனாகவும் இருப்பதை அறிந்தாள். எனவே, அவனுடைய அந்தக் குணங்களைப் பயன்படுத்தி எம்பெருமானின் திருவிக்கிரகத்தைப் பெற முயல்வதே சரி என்று அவளின் உள்ளுணர்வு கூறவும், உடனேயே டெல்லியைவிட்டுப் புறப்பட்டாள்.

**- தொடரும்....**

21 Apr 2020

# ரங்க ராஜ்ஜியம் - 53



ரங்க ராஜ்ஜியம்

சிங்காரவல்லிக்கு உதவ கோயில் ஸ்தானீகர்கள் சிலருடன், அரங்கன்பால் பற்றுகொண்ட இளம் வைணவ பக்தர்களும் முன் வந்தனர்.

*மற்றுமோர் தெய்வமுண்டோ*

*மதியிலா மானிடங்காள்...*

*உற்ற போதன்றி நீங்கள்*

*ஒருவன் என்றுணர மாட்டீர்,*

*அற்றமே லொன்ற றியீர்.,*

***அவனல்லால் தெய்வமில்லை***

***கற்றினம் மேய்த்த வெந்தை***

***கழலிணை பண்டினீரே!***

*- தொண்டரடிப் பொடியாழ்வார்*

**அ**ந்த ஜக்கிணி நாட்டியக்குழுவுடன் சிங்காரவல்லி திரும்பவும் டெல்லிக்குப் புறப்படலானாள். இம்முறை சிங்காரவல்லிக்கு உதவ கோயில் ஸ்தானீகர்கள் சிலருடன், அரங்கன்பால் பற்றுகொண்ட இளம் வைணவ பக்தர்களும் முன் வந்தனர். சிங்காரவல்லி அவர்களுக்குப் பாடமெடுக்கலானாள்...

“அன்பானவர்களே! முதலில் நம் தோற்றத்தில் மாற்றம் வேண்டும். பழுத்த வைணவனாகத் தோள்களில் சங்கு சக்கரச் சின்னம் பொறிக்கப்பட்ட பச்சை முத்திரையுடன் நீங்கள் என்னோடு வருவது சரியாக இராது. அந்த முத்திரையைக் கோலம் போல மாற்றிக்கொள்ளுங்கள். உங்கள் குடுமியையும் நீக்கிவிடுங்கள். விரும்புகிறவர்கள் தாடி வைத்துக்கொள்ளுங்கள். நாம் நம் தோற்றத்தை மாற்றிக்கொள்ளாமல் விரும்பியதைச் சாதிக்க முடியாது” என்ற அவள் கருத்தைக் கேட்டு எல்லாருமே அதிர்ந்தனர். சிலர் அக்கருத்தை எதிர்க்கவும் செய்தனர்.



“சிங்காரவல்லி... விட்டால் நீ அவர்கள் மதத்துக்கே மாறிவிடு என்றுகூடச் சொல்வாய் போல் உள்ளதே...” என்றனர்.

“ஆம்... தற்காலிகமாக நாம் அப்படி நடந்துகொண்டால்தான் நம் காரியம் ஜெயமாகும்.”

“என்னால் முடியாது. இதற்குத் தற்கொலை எவ்வளவோ மேல்...”

“அப்படியானால் தற்கொலை செய்துகொண்டு ஒழிந்து செல்லுங் கள். கோழையாகி தற்கொலை செய்து கொள்வதற்கு, வீரனாகி வேடமிடுவது தவறில்லை என்பவர் மட்டும் என்னோடு வாருங்கள்.”

“உயிரைவிட மேலானவையல்லவா, நம் சின்னமும் வழிமுறைகளும்...”

“இந்தச் சின்னமும் வழிமுறைகளும் அவனிடமிருந்தல்லவா நமக்கே வந்தன. அவனே இன்று அடைபட்டுக்கிடக்கையில் நமக்கெதற்கு இந்த அடையாளங்கள்...”

“ நீ வளைந்து தரச் சொல்கிறாய். அப்படித் தானே...”



“ஆம்... அவனே வளைந்துபோக வேண்டிய இடத்தில் வளைந்து சென்றவன்தானே... பாரதப் போரில் துரோணரை வீழ்த்த அஸ்வத்தாமன் இறந்துவிட்டான் என்று உரத்த குரலில் சொல்லச் சொன்னது என்னவாம்... பீஷ்மாச்சார்யரிடம் ஆசி பெற திரௌபதியை முகத்தை

மூடி அழைத்துச் சென்றது எதற்காம்... கர்ணனிடம் அந்தண வேடமிட்டுச் சென்று தர்ம பயன்களை யாசகம் கேட்டதும் எதற்காம்... எல்லாமே பாரதப் போரில் பாண்டவர் வெற்றிபெற வேண்டும் என்பதற்காகத்தானே...”

“புரிகிறது புரிகிறது... உன் விருப்பப்படியே உருமாறுகிறோம். சரிதானே...”

“உருமாறினால் மட்டும் போதாது... உருப்படியாக நடிக்க வேண்டும். தியாகத்தில் பெரிய தியாகம், நாம் இப்போது செய்ய இருப்பதுதான் அவனை மனத்தால் மட்டுமே வழிபட வேண்டும். நித்ய அனுஷ்டானங்களுக்கு இனி நம்மிடம் இடமில்லை. நாம் நாட்டியக் குழுவினர்... அக்குழுவினர் போலவே நடக்க வேண்டும். நாம் நாடோடிகளைப் போல்... ஆடிப்பாடி மகிழ்விப்பது நம் செயல். அதற்காக நமக்குக் கிடைக்கும் பரிசே நமக்கான சன்மானம். சன்மானமே நம் சம்பளம்” - சிங்காரவல்லி தெளிவாகப் பேசினாள். அதன்பின் அரங்கனின் கோபுரத்தை தரிசனம் செய்தவர்களாக சாரட் வண்டிகளில் புறப்பட்டனர் டெல்லி நோக்கி...

சிங்காரவல்லிக்கு ஒருமுறைக்கு இருமுறை சென்று வந்த அனுபவம் இருந்தால் பயணம் தடையின்றித் தொடர்ந்தது. இடையில் சிலரால் இடையூறு ஏற்பட்டபோது, டெல்லி சுல்தான் பெயரைச் சொல்லி அவர்களை அடக்கினாள் சிங்கார வல்லி. செல்லும் வழியில் தோப்புகளில், நதிக் கரைகளில், மலை அடிவாரங்களில் தங்கி அங்கெல்லாமும் நாட்டியப் பயிற்சி செய்தனர். பயிற்சியைச் சில நேரங்களில் ஊர் மக்கள் நடுவில் செய்து அவர்கள் பாராட் டையும் பெற்றனர். சரியாக 60 நாள்கள்... அதாவது இரு பௌர்ணமி காலம் ஆகின டெல்லியை அடைந்திட.

முதல் காரியமாக சுரதாணியைத்தான் சென்று பார்த்தாள் சிங்காரவல்லி. சுரதாணி அழகிய மணவாளப்பெருமாளுக்கென்றே ஒரு சிறு மண்டபம் கட்டி அதன் நடுவில் பெருமாளை நிறுத்தியிருக்க, ஊதுவத்தி வாசம் கமழ்ந்தபடி இருந்தது. அக்காட்சி சிங்காரவல்லியைச்

சிலிர்க்கவைத்தது. சுரதாணி அறியாமல் ரகசியமாக விழுந்து வணங்கினாள். சிங்காரவல்லிக்கு டெல்லியில் பானு என்கிற பெயர்!



"இவ்வளவு நாள் எங்கே போய்விட்டாய் பானு... நீ இல்லாமல் நான் மிக வருந்தி னேன். நீ நம்புவாயோ மாட்டாயோ இந்தச் சிலையிடம் உனக்காகப் பிரார்த்தனை செய்தேன். `பானு வர வேண்டும்' என்று நேற்றுகூட உருகினேன். நீ வந்து விட்டாய்..."

சுரதாணியின் அன்பும் நம்பிக்கையும் சிங்காரவல்லியைச் சிலிர்க்க வைத்தது.

"இனி உங்களைப் பிரியவே மாட்டே னம்மா..." என்று சமாதானம் செய்த சிங்கார வல்லி, தன் புதிய நாட்டியக்குழு பற்றிக் கூறி அவையில் தான் ஆடிக்காட்ட அனுமதி பெற்றுத்தர வேண்டும்" என்றாள்.

மறுநாளே கிடைத்தது!

டெல்லி சுல்தான் முன்னிலையில் ஜக்கிணி நாட்டியம் அழகுடன் நடத்தப்பட்டது. சுல்தான் மயங்கிப்போனார்.

“அருமை… இப்படி ஒரு நாட்டியத்தை என் வாழ்நாளில் கண்டதேயில்லை… அருமை... அற்புதம்…” என்று மகிழ்வின் உச்சிக்கே சென்றார். இறுதியாக அவர்களுக்குப் பரிசளிக்க முன்வந்து ‘என்ன வேண்டுமோ கேளுங்கள்’ என்று சொன்ன மாத்திரத்தில் சிங்காரவல்லி அழகாகக் காய் நகர்த்தத் தொடங்கினாள். எதையும் கேட்காமல் அமைதியாக நின்றாள். சுல்தானிடம் வியப்பு.

“ என்ன தயக்கம்… கேளுங்கள். பொன்னா... மணியா... இல்லை, தானிய மூட்டைகளா?” என்று திரும்பக் கேட்டார்.

“அதெல்லாம் இல்லை அரசே…”

“வேறு என்ன வேண்டும்?”

“கேட்டுவிட்டுச் சிரிக்கவோ... இல்லை, கோபிக்கவோ கூடாது…”

“அது கேட்பதைப் பொறுத்தது…”

“எங்கள் நாட்டியக்குழுவில் நாங்கள் ஒரு சிலையை வைத்திருந்தோம்” - சிங்காரவல்லி மெள்ளத் தொடங்கினாள்.

“சிலையா...”

“ஆம்… அது ஓர் எழில் சிற்பம்… அதன்முன்தான் ஆடிப் பாடிப் பயிற்சி செய்வோம்…”

“அதற்கென்ன...”

“எங்கள் வசம் உள்ள அந்தச் சிலை ஒருநாள் கீழே கை தவறி விழுந்து உடைந்துவிட்டது.”

“அதனாலென்ன… புதிதாகச் செய்து கொள்ளுங்கள்.”

“அதற்குப் பொருள் செலவாகும்…”

“அதை நான் தந்துவிடட்டுமா...”

“அதற்குப் பதிலாகத் தாங்கள் மனது வைத்தால் சிலையாகவே வழங்க முடியும்.”

“அது எப்படி... என்னைச் செய்து தரச் சொல்கிறீர்களா?”

“இல்லையில்லை… அப்படிச் செய்த ஒன்று உங்களிடமே இருக்கிறது.”

“என்ன இது உளறல்… என்னிடம் ஏது சிலையும் கலையும்...”

“இருக்கிறது… தங்களிடம் என்றால் தங்களிடமில்லை. தங்கள் திருமகளிடம்…”

“என் மகளிடமா...” - சுல்தான் அதிர, சிங்கார வல்லியாகிய பானு திருவரங்கக் கொள்ளைப் பொருள்களில் ஒன்றாக வந்த அதை சுரதாணி வைத்திருப்பது வரை ஞாபகப்படுத்தினாள். சுல்தானும் அதை உணர்ந்து, “போயும் போயும் அதையா கேட்பாய்...” என்று ஏளனமாகத் திரும்பிக்கேட்டார்.

“எங்களுக்கு இப்போது அதுதான் வேண்டும்.”

“வேடிக்கையான விருப்பம்தான். போகட்டும். என் மகள் தந்தால் தாராளமாகப் பெற்றுச் செல்லுங்கள். ஆனால், அவள் மறுத்தால் என்னால் தர இயலாது…”

“எனக்கு நம்பிக்கை உள்ளது… நான் சென்று கேட்டுப் பார்த்து அவர் தந்தால் எடுத்து வரவா...”

“தாராளமாக…”

சுல்தான் சம்மதித்திட சுரதாணி அறைக்குச் சென்ற சிங்காரவல்லி, அவையில் நடந்த எதையும் கூறவில்லை. மாறாக உபசரித்தாள். பால் பழம் தந்து சாப்பிடச் செய்தாள். அந்தப் பாலில் மயக்க மருந்தையும்

கலந்து விட்டாள். சுரதாணி மயங்கவும் சிலையை எடுத்துக் கொண்டு அவைக்கு வந்த சிங்காரவல்லி, "சுரதாணி இதை எனக்கு வழங்கி விட்டார்" என்றாள்.

"ஆச்சர்யமாக உள்ளதே... உறக்கத்திலும் இது அவள் உடன் இருக்க விரும்பினாளே" என்றார் சுல்தான்.

"நான் வேறு ஒரு சிலையை எடுத்து வந்து தருவதாகக் கூறவும் சரி எனச் சொல்லி விட்டார்."

"அப்படியானால் தாராளமாகக் கொண்டு செல்லுங்கள்" – சுல்தான் அனுமதியளித்த அடுத்த நிமிடமே அழகிய மணவாளப் பெருமாளின் சிலையுடன், முன்பே திட்ட மிட்டு எடுத்து வைத்திருந்த சேர குலவல்லி சிலையையும் எடுத்துக்கொண்டு டெல்லியை விட்டு வேகமாகப் புறப்பட்டனர்.

மாளிகையில் மயக்கம் விழித்த சுரதாணியோ அழகிய மணவாளப்பெருமாள் சிலையைக் காணாது அதிர்ச்சியடைந்து தன் தாதிகளிடம் கேட்டிட, அவர்கள் பானு எடுத்துச் சென்று விட்டதைக் கூற, சுரதாணி வேகமாக சுல்தான் முன் சென்று நின்றாள். கண்ணீர் விட்டாள்.

பிறகே சுல்தானுக்குத் தான் ஏமாற்றப்பட்டது புரிந்தது. பானுதான் சிங்காரவல்லி என்பது முதல் அந்த சிலைக்காகவே அவள் ஜக்கிணி நாட்டியக்குழுவை அழைத்து வந்தாள் என்பது வரை சகலமும் புரிந்தது. சுல்தான் அதிர்ச்சியின் உச்சத்துக்கு மட்டுமல்ல பிரமிப்பின் உச்சத்துக்கே சென்றார்.

"ஒரு செப்புச் சிலைக்கு இத்தனை நாடகமா?"

"அவர்கள் வரையில் அது சிலையில்லை. அதுவே இறைவனின் தோற்றம்."

"அதுவே இறை தோற்றமென்றால் நான் ஏன் அதை உணரவில்லை..."

“இறைவன் நம்வரையில் வடிமற்றவன் அல்லவா...”

“வடிவமற்ற அவன் அவர்களுக்கு மட்டும் எப்படி வடிவமாகக் காட்சி தருகிறான்?”

“அது அவர்களாக வடிவமைத்துக் கொண்டது அரசே...”

“எனக்கு அதெல்லாம் தெரியாது. என்னையும் என் மகளையும் ஏமாற்றி எடுத்துச் சென்றுவிட்டனர். இதை இப்படியே விடக் கூடாது. அவர்கள் இந்த டெல்லியை நிச்சயம் கடத்திருக்க மாட்டார்கள். அவர்களைக் கைது செய்து சிலையோடு என் முன்னால் கொண்டுவந்து நிறுத்துங்கள்”

- சுல்தானின் உத்தரவைக் கேட்ட ஒருவர் சிங்காரவல்லிக்குச் செய்தி அனுப்பினார். இதுவும் அவள் ஏற்பாடே!

செய்தி சிங்காரவல்லியை அடைந்தபோது டெல்லியை விட்டு வெளியேறியிருந்தது அவள் சாரட்.

- *தொடரும்..*

## எந்த நாள்களில் முடி வெட்டலாம்?

**மு**டி, நகம் முதலான நம் உடற்பகுதிகளை எந்தெந்த நாள்களில் இழக்கலாம் என்பதற்கு சாஸ்திரத்தில் விஸ்தாரமான விளக்கங்கள் இருக்கின்றன. நாள், கிழமை, நட்சத்திரம் போன்றவை எல்லாம்கூட அதில் இருக்கும்.

காலப்போக்கில் கிழமையை மட்டும் பார்த்தால் போதும் என்றாகி விட்டது. எனவே, இன்னின்ன கிழமைகளில் முடி வெட்டக் கூடாது என்பதைப் பின்பற்றுகிறோம். 'குஜதின மதிஷ்டமிதி' என்று ஜோதிட சாஸ்திரம் இதைக் குறிப்பிடும்.

செவ்வாய், சனி ஆகியவை குஜ தினங்கள். நல்ல காரியம் செய்வதைத் தவிர்க்க வேண்டிய தினங்கள். வெள்ளிக் கிழமை அன்று நல்ல நாள். ஆனாலும் ஒரு நல்ல நாளிலா இதைச் செய்வது என்கிற சிந்தனையில் வெள்ளியும் அதில் சேர்ந்து கொண்டது.

வெள்ளிக்கிழமை முடி வெட்டக் கூடாது என்பது எல்லோருக்கும் பொருந்தாது. தகப்பனார் இல்லாதவர்கள், வெள்ளிக் கிழமை முடி எடுக்கலாம். அவர்களும் செவ்வாய், சனிக் கிழமைகளில் முடிவெட்டிக் கொள்வது கூடாது.

- ***சேஷு மாமா***

05 May 2020

# ரங்க ராஜ்ஜியம் - 54



ரங்க ராஜ்ஜியம்

திருமலை வசதியானது என்று அவர்கள் முடிவெடுக்க சில காரணங்கள் இருந்தன.

*‘மறம் சுவர் மதிலெடுத்து மறுமைக்கே வெறுமை பூண்டு,*

*புறம்சுவ ரோட்டை மாடம் புரளும் போதறிய மாட்டீர்*

*அறம் சுவராகி நின்ற அரங்கனார்க் காட் செய்யாதே,*

*புறம் சுவர் கோலஞ் செய்து புள் கவ்வக் கிடக்கின்றீரே’*

*- தொண்டரடிப் பொடியாழ்வார்.*

**சி**ங்காரவல்லி குழுவினரைப் பிடித்துக்கொண்டுவரும்படி சுல்தான் உத்தரவிட்ட செய்தி, சிங்காரவல்லியை அடைந்த போது டெல்லியை விட்டு வெளியேறியிருந்தது அவள் சாரட்.

அதேநேரம், சுல்தானிய வீரர்கள் புரவிகளில் வந்தால், எளிதில் தங்களைப் பிடித்துவிடக்கூடும் என்று கருதினாள் சிங்காரவல்லி. ஆகவே, தன் குழுவை மூன்றாகப் பிரித்தாள். வேடத்தையும் மாற்றிப் போடவைத்தாள். அழகிய மணவாளப் பெருமாளுடன் நேராக திருவரங்கத்துக்குச் செல்வது இப்போது சரியில்லை என்றும் சிந்தித்தாள்.

தற்போதைக்கு, திருமலை திருப்பதியே பாதுகாப்பானது என்று முடிவு செய்தவள், ஓர் ஆண்மகன் போன்று வேடம் தரித்துக்கொண்டு, அழகிய மணவாளப் பெருமாள் விக்கிரகத்துடன் தான் மட்டும் திருமலை திருப்பதியை நோக்கிப் பயணப்பட ஆயத்தமானாள். மற்றவர்கள் திருவரங்கம் நோக்கிப் பயணித்தனர்.

சிங்காரவல்லியைத் தனியே அனுப்ப மனமின்றி, கொடவர்களில் மூன்று பேர் (பெரிய பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்பவர்கள்), அவளோடு சேர்ந்துகொண்டார்கள். ஆக மொத்தம் நான்கு பேர்.

திருமலை வசதியானது என்று அவர்கள் முடிவெடுக்க சில காரணங்கள் இருந்தன. அந்த மலைக்குமேல் மிலேச்சப் படை ஏறிச் செல்வது என்பது சிரமமான காரியமாக இருந்தது. மலை வழியில் மிருக உபாதைகள் அதிகம். ஒரு சிலர் ஏற முற்பட்டபோது, அவர்கள் யானைகளால் மிதிக்கப்பட்டும் சிறுத்தைகளால் தாக்கப்பட்டும் மடிந்தார்கள்.

திருமலை யாத்திரை புரிய வேண்டுமென்றால், பகல் பொழுதில் சந்திரிகிரி பக்கமாய்க் குறிப்பிட்ட பாதையில் செல்ல வேண்டும். அதுவும் கூட்டமாய்க் கோஷமிட்டுக் கொண்டும் மணிகளால் சத்தம் எழுப்பிக் கொண்டும்தான் செல்ல வேண்டும். அப்போது தான் இடையூறின்றிப் போய்ச் சேர முடியும். எனவே திருமலைக்கு மிலேச்ச ஆபத்து அவ்வளவாக இல்லை. இவற்றையெல்லாம் தெரிந்துகொண்டே

சிங்காரவல்லியும் கொடவர்களும் திருமலையைத் தேர்வு செய்து திருமலையை நோக்கிச் சென்றனர்.



**டெ**ல்லி அரண்மனையிலோ சுல்தானின் மகளான சுரதாணி, மயக்கம் நீங்கி விழித்தாலும், திக்பிரமை பிடித்தவள் போலாகி விட்டாள். விஷயம் சுல்தான் காதுகளுக்குச் சென்றது. சுல்தான் வந்து பார்த்தபோது, சுரதாணியின் கண்களில் நீர் வழிந்து கொண்டிருந்தது.

"மகளே ஏன் அழுகிறாய்?"

அவள் பதிலேதும் கூறவில்லை.

"உன்னைத்தான் மகளே... ஏன் அழுகிறாய்?"

“உங்களுக்குச் சொன்னால் புரியாதப்பா என் வேதனை!”

“அப்படி என்ன வேதனை... ஒரு சிலைக்காகவா இவ்வளவு வருத்தம்... இப்போதே அதுபோல ஆயிரம் சிலைகளை வடிக்கச் செய்து, உன் அறையில் நீ திரும்பும் பக்கமெல்லாம் அவற்றை வைத்துவிடுகிறேன். போதுமா...’’

“எந்த ஒரு சிலையும் அந்தச் சிலையாகாது அப்பா…”

“அப்படியென்ன இருக்கிறது அந்தச் சிலையில். எனக்கு எந்த விசேஷமும் புலப்படவில்லை அந்தச் சிலையில்...’’

“அதன் தோற்றத்தை விடவும் அதன் சாந்நித்தியம் பெரியது அப்பா!’’

“சாந்நித்தியமா… அப்படியென்றால்?”

“அது ஒரு வகை சிலிப்பு உணர்வு. உங்களுக்கு ஏற்படவில்லை என்றால், நான் அதற்குப் பொறுப்பல்ல…”

“இது என்ன பேச்சு… உன்னுள் சைத்தான் புகுந்துவிட்டதா?”

“தவறு தந்தையே… அழகிய மணவாளன் முன் சைத்தான்கூட அடங்கி ஒடுங்கிவிடும்.”

“இல்லை… உன் புத்தி பிசகி விட்டது. அந்த தாதி உனக்கு மயக்க மருந்து தரும்போதே, புத்தி கலங்கும் விதமாய்ச் சில மருந்துகளையும் தந்துவிட்டதாகக் கருதுகிறேன்.”

“அவளைத் திட்டாதீர்கள். அவள் எனக்கு முன்னோடி. எவ்வளவு பக்தியும் பிரேமையும் இருந்தால், அவள் இப்படியெல்லாம் நடந்து கொண்டிருப்பாள் என்று எண்ணிப்பாருங்கள்”

“தண்டிக்கப்பட வேண்டியவளைப் போற்றுகின்றாயா... நான் அந்தச் சிலையை அரண்மனைக்குள்ளேயே விட்டிருக்கக் கூடாது. கலைப்பொருள் என்று கருதியது தப்பாகி விட்டது. உன் புத்தி



பிசகிவிட்டது. எல்லாவிதங்களிலும் நம் வழிமுறைகளுக்கு எதிரானது உன் சிந்தனை. உன்னை எச்சரிக்கிறேன். அந்தச் சிலைக்காக அழுவதை நிறுத்து. எங்கே வைத்தியர்கள்...”

சுல்தான், தன் மகளைக் கிட்டத்தட்ட பைத்தியமாகவே எண்ணி வைத்தியம் பார்க்க ஏற்பாடு செய்துவிட்டார். வைத்தியர்கள் வந்து பார்த்தனர். சுரதாணி அவர்களிடம் தனக்கு எதுவுமில்லை, தான்

நலமுடன்தான் உள்ளேன் என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஆனால், அவர்கள் கேட்பதாக இல்லை.

அவளுக்கு முதலில் நல்ல துக்க மருந்து கொடுத்தனர். நன்கு துங்கி எழுந்த பிறகும் 'ரங்கா... ரங்கா...' என்று அவள் மருகவும் அதிர்ச்சியடைந்தனர். இவ்வேளை சுரதாணியும் தந்திரமாக ஒரு காரியம் செய்தாள்.

அருகிலுள்ள மலை வாசஸ்தலத்துக்குச் சென்று சில காலம் ஓய்வெடுக்க விரும்புவதாக, தாதி ஒருத்தியின் மூலம் அரசரின் காதுக்குக் கொண்டு சென்றாள். அரசரும் அனுமதித்தார். ஆனால், சுரதாணியோ பாதி வழியில் தென்னகம் நோக்கித் திரும்பலானாள். உடன் வந்தவர்கள் தடுத்தும் கேட்கவில்லை. கிட்டத்தட்ட 40 நாள்கள் பயணம் செய்து திருவரங்கத்தை அடைந்தாள்.

திருப்பதியை அடைந்த அழகியமணவாளர் அங்கே எவரும் அறியாதபடி பூஜிக்கப்பட்டுக்கொண்டிருந்தார்.

இந்த விஷயம் சுல்தானுக்குத் தெரிவிக்கப்பட்டது. சுல்தான், திருவரங்கத்துப் பொறுப்பில் இருந்த ஹவில்தார் ஒருவருக்கு, தன் மகளைப் பத்திரமாகப் பாதுகாத்து, அந்தச் சிலையையும் அவளிடம் ஒப்படைக்கச் சொல்லி செய்தி அனுப்பினார்.

ஹவில்தார் சுரதாணியை அழைத்துக்கொண்டு ஆலய வெளிக்குள் நுழையலானான். சுரதாணி தன்னையும் அறியாது மண்டியிட்டு தொழுதாள். அப்படியே "இது புனிதமான இடம். இதை மற்ற இடம் போல கருதி நடமாடவோ, சத்தமிடவோ, அசுத்தம் செய்யவோ கூடாது" என்றும் உத்தரவிட்டாள்.

சுரதாணி இப்படி திருவரங்க ஆலயக் கோட்டத்துக்குள் புகுந்த வேளை, அது மனித நடமாட்டமின்றி காணப்பட்டது. சுரதாணிக்குள், ஏற்கெனவே அங்கே தான் ஓடியாடித் திரிந்தது போல் ஓர் உணர்வு. அதை, தன்னோடு வந்த ஒருவரிடம் சொன்னதுடன், ஓரிடத்தில் நின்றுகொண்டு குறிப்பிட்ட திசையைச் சுட்டிக்காட்டி, ``அங்கே திரும்பினால் யானை

சிலை ஒன்று இருக்கும். நான் அதன்மீது அமர்ந்து விளையாடியிருக்கிறேன்'' என்றாள்.

அவள் குறிப்பிட்டபடியே அவள் சுட்டிக்காட்டிய இடத்தில் யானை சிலை இருப்பதைக் கண்டு, ஹவில்தார் உட்பட அவளோடு வந்த அனைவரும் திகைத்தனர். பல இடங்கள் பாழ்ப்பட்டுப் போயிருந்தன. சுரதாணி கண்ணீர் வடித்தாள். மூலவர் திருச்சந்நிதிக்குச் சென்றபோது, சுவரெழுப்பி மறைக்கப்பட்டிருந்தது.

சுரதாணியிடம் "எல்லாம் இடிக்கப்பட்டு விட்டன..." என்று சொல்லவும் சுரதாணி நெஞ்சு துடித்தது. கண்களில் நீர் பெருகிட சுருண்டு விழுந்தாள். சில நொடிகளில் உயிரும் பிரிந்துவிட்டது! எல்லாமே விட்ட குறை... தொட்டகுறை!

அதைக்கண்டு ஹவில்தார் உள்பட சுல்தானின் படையே அதிர்ந்துபோனது. கோயிலைச் சார்ந்தவர்களோ 'எம்பெருமான், தன்னை அழிக்க நினைத்த சுல்தானுக்கு அவனுடைய மகள் மூலமாகவே தன்னையும் தன் இன்னருளை யும் உணர்த்திவிட்டான்' என்று எண்ணி உருகினர்.

மகள் உயிர்விட்ட செய்தி கிடைத்ததும் சுல்தானின் உள்ளம் துடித்தது. மற்ற மதத்தவரின் நம்பிக்கைகளை நாம் பின்பற்றாவிட்டாலும், அவற்றைக் குறை கூறியதோடு அழிக்கவும் நினைத்தது, தனக்கு ஒரு பெரிய இழப்பை ஏற்படுத்திவிட்டது என்று உணர்ந்தான். தவற்றுக்குப் பரிகாரமாக, திருவரங்கம் ஆலயம் பழையபடி பூஜைகளோடு திகழவும் வழிபாடுகள் நிகழவும் ஜாகீர் எனப்படும் நில மானியத்தை வழங்கி, தன் மகளின் ஆத்ம சாந்திக்கு அடிகோலினான்.

**தி**ருவரங்கம் இப்படி திருப்பம் கண்டு நின்ற நிலையில், திருப்பதியை அடைந்த அழகியமணவாளர் அங்கே எவரும் அறியாதபடி பூஜிக்கப்பட்டுக்கொண்டிருந்தார். அங்கே அதற்கான ஏற்பாடுகளைச் செய்த சிங்காரவல்லி, மாறுவேடத்தில் திருவரங்கம் திரும்பியபோது, சுரதாணி உயிர் விட்டுவிட்ட சம்பவம் நிகழ்ந்து முடிந்திருந்தது.

அது அவளை உருக்கிவிட்டது. இடையில் உற்சவங்கள் நடைபெற வேண்டி மறைக்கப்பட்ட சுவர் இடிக்கப்பட்டு மூலவர் வெளியே கொணரப்பட்டார். அதேபோல், வில்வ மரத்தடியில் ரங்கநாயகி தாயார் விக்கிரகம் புதைக்கப்பட்ட இடத்தை அறியாததால், புதிதாக ஒரு விக்கிரகம் செய்து அதைப் பிரதிஷ்டை செய்து உற்சவங்கள் நிகழத் தொடங்கின.

சிங்காரவல்லிக்கோ தான் பாதிக்கிணறு தாண்டியதுபோல்தான் தோன்றியது. திருமலையில் கொடவர் பொறுப்பில் ஒப்படைக் கப்பட்ட பெருமாளைத் திருவரங்கத்துக்குக் கொண்டுவர இனி தடையேதும் இல்லை என்று கருதினாள். அதன்பொருட்டு திருப்பதிக்குப் பயணப்பட்டவள், திருமலையை அடைந்ததும் நோய்ப்பட்டு இறந்து போனாள்!

எம்பெருமானுக்கு உரிய ஏகாதசி நாளில் திருமலையில் அவள் உயிர் பிரிந்ததும் அங்கேயே மலையில் அவளது உடல் தகனம் செய்யப்பட்டு, பாபநாச தீர்த்தத்திலும் கரைக்கப் பட்டது. சிங்காரவல்லியும் பெருமாள் திருவடிகளில் சென்று சேர்ந்தாள்.

கொடவர்களால் பூஜிக்கப்பட்டு வந்த பெருமாள் திருமலையில் ஒரு குகைக்குள் வழிபாடுகளைக் கண்டுகொண்டிருந்தார்.

ஆண்டுகள் பல கடந்தன.

இருளர் இனத்தைச் சார்ந்த இருவர் வேட்டைக்கு வந்த தருணத்தில், மணிச் சத்தம் ஒலிக்கக் கேட்டு, அருகிலுள்ள குகைக்குள் புகுந்து பார்த்தனர். அங்கே ஒரு முதியவர் எம்பெருமானை வணங்கிக் கொண்டிருந்தார்!

**தொடரும்...**

**கஜலக்ஷ்மி வழிபாடு!**

**அ**ஷ்டலக்ஷ்மிகளுள் விசேஷமானவள் கஜலக்ஷ்மி. இவளே நடுநாயகமாக இருந்து, ஏனைய லக்ஷ்மி வடிவங்களை தன்னுள் கொண்டவள். இவள் நிலைப்படிமேல் அமர்ந்துள்ளதால், திருநிலை நாயகி எனப் புகழப்படுகின்றாள்.

விஷ்ணு புராணத்தில் இவள் கடலிலிருந்து வெளிப்பட்டதும், திசை யானைகள் எட்டும் பொற்குடங்களால் புனித நீரை ஏந்தி வந்து நீராட்டின என்று கூறுகிறது. யானைகள் நீராட்ட நடுவில் வீற்றிருப்பதால் இவளை கஜலக்ஷ்மி என்று அழைக்கின்றனர். காமாட்சி விளக்கில் இவளே வீற்றிருந்து சகல மங்கலங்களையும் அளித்தருள்கிறாள்.

- ***பா.சரவணன்***, ஸ்ரீ***ரங்கம்***

19 May 2020

# ரங்க ராஜ்ஜியம் - 55



ரங்க ராஜ்ஜியம்

காட்டுப்பூக்களால் அர்ச்சனை... காட்டுக் கனிகளே நைவேத்திய பிரசாதம்.

*‘அமரவோ ரங்க மாறும்*

*வேதமோர் நான்கு மோதி*

*தமரர்களில் தலைவராய*

*சாதியந் தணர்களேலும்*

*நுமர்களைப் பழிப்பராகில்*

*நொடிப்பதோ ரளவில், ஆங்கே*

*அவர்கள் தாம் புலையர் போலும்*

*அரங்கமா நகருளானே!'*

*- தொண்டரடி பொடியாழ்வார்.*

**அ**ரங்கன் திருமலையில் ஒரு குகைக்குள் வழிபாடுகளைக் கண்டுகொண்டிருந்தார். ஆண்டுகள் பல கடந்துவிட்ட நிலையில் இருளர் இனத்தைச் சார்ந்த இருவர் யதார்த்தமாக வேட்டைக்கு வந்தபோது, மணிச்சத்தம் ஒலிக்கக் கேட்டு அருகிலுள்ள குகைக்குள் புகுந்து பார்த்தனர்.

அங்கே ஒரு முதியவர் எம்பெருமானை வணங்கிக் கொண்டிருந்தார். காட்டுப்பூக்களால் அர்ச்சனை... காட்டுக் கனிகளே நைவேத்திய பிரசாதம். அங்கேயே இருந்துகொண்டு அவர் செலுத்திய பக்தியும் பாவமும் இருளர்களைப் பிரமிக்கச் செய்தன. அந்த இருளர்கள் எம்பெருமான் குறித்து, திருமலையைத் தன் ஆட்சிக்குட்பட்ட நிலமாகக்கொண்டிருந்த சந்திரகிரி மன்னனிடம் கூறினார்கள்.

அந்த மன்னன் வேத பண்டிதர்கள் பலரை அந்த இருளர்களோடு அனுப்பி, குகைக்குள் வழிபாடு கண்டபடி இருந்த அழகிய மணவாளரை வெளியே கொண்டு வந்தான். தொடர்ந்து, பெருமானின் வரலாற்றை அறிந்த நிலையில் தன்னைப் பெரிதும் பாக்கியசாலியாக உணர்ந்தவன், விக்கிரகத்தைத் திருவரங்கம் கொண்டு செல்லப் பணிந்தான். எம்பெருமானும் திருமலையைவிட்டுத் திருவரங்கம் நோக்கிச் செல்லலானார்!

திருவரங்கம் ஆலயம் மிலேச்ச பாதிப்புகளில் இருந்து மீண்டு, திரும்பவும் அங்கே புத்துயிர்ப்போடு பூஜைகள், உற்சவங்கள் என்று களை கட்டியிருந்தன. இந்த நிலையில், 60 ஆண்டுகளுக்கு முன் டெல்லிக்கு எடுத்துச் செல்லப்பட்ட அழகிய மணவாளப் பெருமான், திருமலையில் அது நாள் வரை பூஜை கண்டு திரும்பி

வந்துகொண்டிருப்பதைக் கோயில் ஸ்தானீகர்கள் அறிந்தனர். ஒருபுறம் மகிழ்ச்சி; மறுபுறம் தற்போது வழிபாட்டிலுள்ள மூர்த்தியை என்ன செய்வது என்கிற கேள்வியும் குழப்பமும்!



கூடுதலாக, உண்மையில் களவுபோன சிலை அதுதானா என்கிற சந்தேகமும் பலருக்கு ஏற்பட்டு விட்டது. இப்படிப்பட்ட நிலையில்தான் சிலையும் திருவரங்கம் வந்து சேர்ந்தது. வந்த சிலையை மங்கை மன்னன் மண்டபத்தில் எழுந்தருளச் செய்த ஸ்தானீகர்கள், தங்கள் ஐயப்பாட்டை எதை வைத்து எப்படி நீக்கிக்கொள்வது என்று யோசித்தனர். சிலர் மூலச் சந்நிதி நாடிச் சென்று கண்ணீர்விட்டு அழுதனர்.

“எம்பெருமானே! உன் பொருட்டு எத்தனை தேடல்… எத்தனை தியாகங்கள்... மாற்றார் மனத்தையே கொள்ளைகொண்டு, அழிவை ஏற்படுத்தியவர்களாலேயே நிவந்தம் பெற்றவன் நீ! நீ அறியாத ஒன்றும் இங்கு இருக்கலாகுமா... அன்று நீ மட்டுமா கடத்தப்பட்டாய்… உன்னோடு சேர்ந்து பொன், பொருள் என்று சகலமும் கடத்தப்பட்டன. 60 ஆண்டுக் கால ஓட்டத்தில் அன்றிருந்த பலர் இன்று இல்லாது போய்விட்ட நிலையில், அந்த சிலைக்குரிய தெய்வம் நீதான் என்பதை எதை நம்பி ஏற்பது... ரங்கநாயகி தாயாரும் அல்லவா காணாது போனாள்... ஆக, ரங்கநாயகி தாயார் சிலைக்கு எங்கே செல்வது?” என்று மனம் குமுறினர்.

அவர்கள் குமுறல் வீண் போகவில்லை. பலத்த காற்றுடனும் இடியுடனும் பெருமழை பொழியத் தொடங்கியது. அவ்வேளை, ஆலயப் புறவெளியில் நாச்சியார் கோயிலின் வில்வ மரத்தடியில், ஒரு பேரிடி விழுந்து பெரும் பள்ளம் ஒன்று உருவானது. அப்பள்ளத்துக்குள் 60 ஆண்டுகளுக்கு முன் புதைக்கப்பட்ட ரங்கநாயகி தாயாரின் விக்கிரகம் வெளியே தெரிய தொடங்கியது. மழை நிற்கவும் அதைக் கண்டவர்கள் மெய்சிலிர்த்தனர்.

அரங்கன் சந்நிதியில் இப்படி அற்புதங்கள் நிகழத் தொடங்கிய காலத்தைத் திருவரங்கக் கோயிலொழுகு, சான்றுகள் சிலவுடன் அதாவது சில கல்வெட்டுச் செய்திகள் மூலம் எடுத்துரைக்கிறது. அதன்படி பார்த்தால் 1311-ல் களவாடப்பட்ட அழகிய மணவாளப் பெருமான் திரு உருவம் திரும்பத் திருவரங்கத்தை அடைந்திட 60 ஆண்டுகள் ஆயின!

இதை ராஜ மகேந்திரன் திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் அமைந்துள்ள கம்பண்ணர் காலத்துக் கல்வெட்டு 1371 ஜூன் மாதம் (பரிதாபி வைகாசி 17) என்று அறுதியிட்டுக் கூறுகிறது. இம்மட்டில் சில குழப்பமான சங்கதிகளும் காணக் கிடைக்கின்றன. திருவரங்க ஆலயம் 1311-ல் ஒருமுறை,1323-ல் ஒரு முறை என்று இரு முறை மிலேச்ச படையெடுப்புக்கு ஆளாகியுள்ளது. 1311-ல் மாலிக்காபூராலும், 1323-ல் முகமது பின் துக்ளக்கினாலும் படையெடுப்புகள் நிகழ்ந்து, ஆலயம்

மிலேச்சர்கள் வசம் சிக்கி, பல காலம் பூஜைகள் புரியப்படாமல் பாழ்பட்டுக் கிடந்தது. அதன்பின் 1377-ல் ஒரு புத்துயிர்ப்பு ஏற்பட்டது. அதற்குக் காரணம் விஜயநகரப் பேரரசும் அதன் ஆட்சியாளர்களுமே. இவ்வேளை ஹரிஹரரும், அவரின் உறவினரான விருப்பண்ண உடையாரும் திருவரங்க ஆலயம் சீர் பெறப் பல உதவிகளைச் செய்துள்ளதை கோயிலொழுகு எடுத்துக்காட்டுகிறது.

குழப்பமான சங்கதி எதுவெனில் 1311-ல் மாலிக்காபூர் படையெடுப்பின்போது களவாடப்பட்ட அழகிய மணவாள விக்கிரகமும் 60 ஆண்டுக்கால இடைவெளிக்கு பிறகே திருவரங்கம் திரும்புகிறது. அதேபோல் 1323-ல் துக்ளக்கின் படையெடுப்பின்போது பிள்ளைலோச்சார்யார் என்பவரால் எடுத்துச் செல்லப்பட்டு மதுரை கொடிக்குளத்தில் வைத்துப் பேணப்பட்ட அழகிய மணவாள விக்கிரகமும் 60 ஆண்டுகள் கழித்தே திருவரங்கம் திரும்புகிறது.

இரண்டும் ஒன்றுதானா... இல்லை வெவ்வேறா என்பதே குழப்பத்துக்குக் காரணம். அம்மட்டில் 1311-ல் களவாடப்பட்டு பின் 1371-ல் திருவரங்கம் திரும்பிய அழகிய மணவாளப் பெருமான் குறித்து நாம் அறிந்து கொள்ளவேண்டிய ரசமான சங்கதிகள் பல உள்ளன.

உண்மையில் களவுபோன சிலை அதுதானா என்கிற சந்தேகமும் பலருக்கு ஏற்பட்டு விட்டது.

நாச்சியார் கோயில் வில்வ மரத்தடியில் புதைத்து வைக்கப்பட்டிருந்த ரங்கநாயகி தாயார் விக்கிரகம் பெருமழையில் வெளிப்பட, அந்த அதிசயத்தைக் கண்டு ஊரே வியந்தது.

‘பெருமான் வரவும் பெருமாட்டியும் வந்து விட்டாள்’ என்று ஊரே மகிழ்ந்தாலும், சில ஆகம சாஸ்திர வல்லுநர்களும் ஆலய ஸ்தானீகர்களும் அழகிய மணவாளப் பெருமான் திருச்சிலையை சந்தேகித்தனர். இது, அதேபோன்ற வேறு ஒரு சிலை என்றனர் சிலர். இன்னும் சிலரோ ‘இப்பெருமாள் நம் அழகிய மணவாளரே எனில், இப்போது திரும்பி வந்தது ஏன்... முன்னமே வந்திருக்கலாமே’ என்றனர்.

அத்துடன் `இவ்வளவு நாள்களாக பூஜை கண்டாரோ இல்லையோ... இடையறாது தொடர்ந்து நடத்திடும் பூஜைகளாலும் உற்சவங்களாலும் அல்லவா பெருமாளுக்கு சாந்நித்யம் மிகுதியாகிறது. அவ்வாறு இல்லாத பட்சத்தில், அதுவொரு கலைப்பொருளாக மட்டுமே அல்லவா கருதப்படும்' என்றும் சிலர் கூறினர்.

'இதற்கு என்னதான் தீர்வு...' என்று அனைவரும் முனைந்தபோது, தீர்வு கண்டு சொல்ல முன்வந்தார் சலவைத் தொழிலாளி ஒருவர். அவர், திருவரங்கம் பெருமானின் நித்தியப்படி ஆடைகளைத் துவைத்து ஆலயப் பண்டாரத்திடம் ஒப்புவிக்கும் பணியைச் செய்துவந்தவர்.

எம்பெருமான் களவு போன தருணத்தில் 30 வயது அவருக்கு. இப்போது 90 வயதாகிறது. பார்வை போய் விட்டிருந்தது. எம்பெருமான் திரும்பக் கிடைத்து திருமங்கை மன்னன் திருமண்டபம் நாடி வந்ததை அறிந்து அங்கு வந்தார்; பெருங்கண்ணீர் வடித்தார்.

"ஐயனே! உமக்குத் தொண்டு செய்தவன் நான். இன்று உம்மைக் காண இயலாத அந்தகனாகிவிட்டேன். என்னை நீர் இப்படிச் சோதிக்கலாமா?" என்று வாய்விட்டு அவர் புலம்பிட, அதைக் கவனித்த ஸ்தானீகர் ஒருவர் அவரிடம் வினவலானார்.

"அப்பனே நீர்தானே அன்று ஆடை தோய்த்தவர்?"

"ஆம் ஐயா..."

"அன்று நீர் செய்த பணிகளெல்லாம் இன்னும் ஞாபகம் உள்ளதா?"

"என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள்... நேற்று நடந்ததுபோல் நினைவில் இருக்கிறது. எம்பெருமானின் திவ்யரூபம் மட்டுமல்ல, அவன் வாசமும் எனக்கு மிகப் பரிச்சயம்"

"வாசமா... என்ன சொல்கிறீர் நீர்?"

"ஆம்... வாசம்தான்! அவன் ஆடையைத் தோய்த்துத் தரும் திருப்பணிக்கு வெகுமதியாக எனக்குத் தீர்த்தம் தருவர். அப்போது

எம்பெருமான் பரிவட்டதையும் சாத்துவர். அந்தப் பரிவட்டத்தில் அவன் மேனி வாசம் ஒட்டியிருக்கும். வேறு எங்கும் நான் அப்படி ஒரு வாசத்தை உணர்ந்ததில்லை.”

“அப்படியா! அப்படியானால், இப்போதும் அவ்வாறு உமக்கு மரியாதை செய்யும்பட்சத்தில் கண்டறிந்து விடுவீரா?”

“ஆஹா... அது என் பாக்கியமல்லவா?”

“மகிழ்ச்சி. நாங்கள் உம் மூலமாய் உண்மையை அறியப் போகிறோம். இப்போது நாங்கள் பல பரிவட்டங்களைச் சாத்தித் தீர்த்தம் தருவோம். அதில் ஒன்றே எம்பெருமானுடையது. அதை நீர் சரியாகக் கூறிவிட்டால் போதும்” என்றார் ஸ்தானீகர்

“உத்தரவு ஐயனே” - என்றபடி பரவசத்தோடு தயாரானார் சலவைத் தொழிலாளி!

- *தொடரும்...*

## கடந்த மூன்று அத்தியாயங்களிலிருந்து...

**மிலேச்ச படையெடுப்பினால் திருவரங்கம் பெரும் பாதிப்பைச் சந்தித்தது. பெரும் உயிர்ச்சேதம் நிகழ்ந்தது. கோயில் கொள்ளையடிக்கப்பட்டதோடு, ஆபரணப் பொக்கிஷங்களுடன் அழகிய மணவாளப் பெருமானின் திருமேனியும் மிலேச்ச படைகளால் தூக்கிச் செல்லப் பட்டது.**

**இதையறிந்து துடித்துப்போனாள் அரங்கனின் பக்தனையான சிங்காரவல்லி என்பவள். உயிரைக் கொடுத் தாவது அழகிய மணவாளப் பெருமானின் விக்கிரகத்தை மீட்டுவருவது என சங்கல்பித்தாள். மிலேச்சப் பெண் போன்று வேடமணிந்து, பொக்கிஷத்தைக் கொண்டு செல்லும் மிலேச்ச வீரர்களுடன் இணைந்து அவர்களின் அன்பைப் பெற்றாள். அவர்களின்**

பொக்கிஷப் பேழையில் அழகிய மணவாளப் பெருமான் இருப்பதை அறிந்து நிம்மதி அடைந்தாள்.

தலைநகர் டெல்லிக்குக் கொண்டுசெல்லப்பட்ட பொக்கிஷங்களோடு பெருமானின் திருமேனியும் சுல்தானிடம் ஒப்படைக்கப்பட்டது. அந்தத் திருமேனியைக் கண்டு பரவசம் அடைந்த சுல்தானின் மகள் சுரதாணி, தந்தையிடமிருந்து அதை வாங்கிச் சென்று பக்தி செலுத்த ஆரம்பித்தாள். அவளின் அன்புப் பிடியிலிருந்தும் அரண்மனையின் கட்டுக்காவலையும் மீறி, தனியொருத்தியாக பெருமானை மீட்டுச் செல்வது முடியாத காரியம் என்பதை உணர்ந்த சிங்காரவல்லி, வேறொரு திட்டம் தீட்டினாள்.

கலா ரசிகனான சுல்தான், ஆடல் கலையில் மயங்கி அதற்காக எதைக் கேட்டாலும் பரிசளிப்பான் என்பதைத் தெரிந்துக்கொண்டாள். மீண்டும் திருவரங்கம் வந்தவள் அங்கிருந்த அரங்கன் பக்தர்களிடமும் ஸ்தானீகர்களிடமும் தன் திட்டத்தை விளக்கினாள். அவர்களில் சிலர் அவளுக்கு உதவ முன்வந்தனர்.

அவளின் திட்டப்படி நடனக்குழுவாக மீண்டும் டெல்லிக்குப் புறப்பட்டனர். அங்கே சுல்தானின் அவையில் ஜக்கிணி எனும் நாட்டியத்தை ஆடினாள் சிங்காரவல்லி. சுல்தான் மகிழ்ந்தான். அவனிடம் சுரதாணி வைத்திருக்கும் அழகிய மணவாளனின் திருமேனியைப் பரிசாகக் கேட்டாள் சிங்காரவல்லி.

சுல்தானோ `மகள் அனுமதித்தால் வாங்கிக்கொள்' என்று கூறி விட்டான். சுரதாணி இதற்கு ஒப்புக்கொள்ள மாட்டாள் என்பதை அறிந்த சிங்காரவல்லி பாலில் மயக்க மருந்து கொடுத்து, சுரதாணியை மயக்கி, திருமேனியைக் கைப்பற்றினாள். அத்துடன், முன்பே திட்ட மிட்டு எடுத்துவைத்திருந்த சேரகுலவல்லி சிலையையும் எடுத்துக்கொண்டு டெல்லியை விட்டுப் புறப்பட்டனர்.

நடந்தது அனைத்தையும் அறிந்த சுல்தான், அவர்களைப் பிடித்து வர வீரர்களை ஏவினான். அவர்களிடம் அகப்பட்டுவிடக் கூடாது என்பதற்காக சிங்காரவல்லியின் குழு இரண்டாகப் பிரிந்து ஒன்று

திருவரங்கம் திரும்ப, சிங்காரவல்லி அழகிய மணவாளப் பெருமானின் விக்கிரகத்துடன் திருமலைக்குப் பயணமானாள்.







இந்நிலையில் பெருமானைப் பிரிந்த துக்கத்தால் வாடிய சுரதாணி அவரைத் தேடி திருவரங்கத்துக்கே வந்தாள்; பக்தியின் உச்சத்தில் அங்கே தன் இன்னுயிரையும் நீத்தாள். செய்தியை அறிந்த சுல்தான் துடித்துப்போனான். அதேநேரம், திருவரங்கத்தின் மகிமையை உளமார உணர்ந்து அங்கே ஆலயம் பழையபடி பூஜைகளோடு திகழவும் வழிபாடுகள் நிகழவும் ஜாகீர் எனப்படும் நில மானியத்தை வழங்கி, தன் மகளின் ஆத்ம சாந்திக்கு அடிகோலினான்.

திருவரங்கம் இப்படி திருப்பம் கண்டு நின்ற நிலையில், திருப்பதியை அடைந்த அழகிய மணவாளர் அங்கே எவரும் அறியாதபடி பூஜிக்கப்பட்டுக்கொண்டிருந்தார். அங்கே அதற்கான ஏற்பாடுகளைச் செய்த சிங்காரவல்லி, மாறுவேடத்தில் திருவரங்கம் திரும்பியபோது, சுரதாணி உயிர் விட்டுவிட்ட சம்பவம் நிகழ்ந்து முடிந்திருந்தது. அது அவளை உருக்கிவிட்டது.

இடையில் உற்சவங்கள் நடைபெற வேண்டி மறைக்கப்பட்ட சுவர் இடிக்கப்பட்டு மூலவர் வெளியே கொணரப்பட்டார். அதேபோல், வில்வ மரத்தடியில் ரங்கநாயகி தாயார் விக்கிரகம் புதைக்கப்பட்ட இடத்தை அறியாததால், புதிதாக ஒரு விக்கிரகம் செய்து அதைப் பிரதிஷ்டை செய்து உற்சவங்கள் நிகழத் தொடங்கின.

சிங்காரவல்லிக்கோ தான் பாதிக் கிணறு தாண்டியதுபோல்தான் தோன்றியது. திருமலையில் கொடவர் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்ட பெருமானைத் திருவரங்கத்துக்குக் கொண்டுவர இனி தடையேதும் இல்லை என்று கருதினாள். அதன்பொருட்டு திருப்பதிக்குப் பயணப்பட்டவள், திருமலையை அடைந்ததும் நோய்ப்பட்டு இறந்து போனாள்!

எம்பெருமானுக்கு உரிய ஏகாதசி நாளில் திருமலையில் அவள் உயிர் பிரிந்ததும் அங்கேயே மலையில் அவளது உடல் தகனம் செய்யப்பட்டு, பாபநாச தீர்த்தத்திலும் கரைக்கப்பட்டது. சிங்கார வல்லியும் பெருமாள் திருவடிகளில் சென்று சேர்ந்தாள்.

கொடவர்களால் பூஜிக்கப்பட்டு வந்த பெருமான் திருமலையில் ஒரு குகைக்குள் வழிபாடுகளைக் கண்டுகொண்டிருந்தார்.

02 Jun 2020

# ரங்க ராஜ்ஜியம் - 56

இந்திரா சௌந்தர்ராஜன் என்.ஜி.மணிகண்டன் அரஸ்



ரங்க ராஜ்ஜியம்

கோயில் ஸ்தானீகர்கள் முதலில் அவருக்குச் சக்கரத்தாழ்வார் சந்நிதிப் பரிவட்டம் சூட்டித் தீர்த்தமளித்தனர்.

திருவரங்கம் பெருமானின் நித்தியப்படி ஆடைகளைத் துவைத்து ஆலயப் பண்டாரத்திடம் ஒப்புவிக்கும் பணியைச் செய்துவந்த சலவைத் தொழிலாளி ஒருவர்,

எம்பெருமான் திரும்பக் கிடைத்து திருமங்கை மன்னன் திருமண்டபத்துக்கு நாடி வந்ததை அறிந்து அங்கு வந்தார்; கண்ணீர் வடித்தார். அழகிய மணவாளர் விக்கிரகத்தின் சாந்நித்தியம் குறித்து ஏற்பட்ட குழப்பத்துக்கு, அந்தச் சலவைத் தொழிலாளி மூலம் தீர்வு காண விளைந்தனர் கோயில் ஸ்தானீகர்கள். அவரும் பரவசத்தோடு அதற்குத் தயாரானார்.

கோயில் ஸ்தானீகர்கள் முதலில் அவருக்குச் சக்கரத்தாழ்வார் சந்நிதிப் பரிவட்டம் சூட்டித் தீர்த்தமளித்தனர். பின் ராமர் சந்நிதிப் பரிவட்டம் சூட்டித் தீர்த்தமளித்தனர். மூன்றாவதாக அழகிய மணவாளப் பெருமான் விக்கிரகப் பரிவட்டத்தை எடுத்து அந்த சலவைத் தொழிலாளிக்கு சாத்தித் தீர்த்தம் அளித்தனர்.

அடுத்த சில நொடிகளில் "இவரே நம்பெருமாள் இவரே நம்மை விட்டுச் சென்ற பெருமாள்..." என்று மிகுந்த பரவசத்தோடு சலவைத் தொழிலாளி சொல்லவும் எல்லோரும் மகிழ்ந்தனர்.

அதுவரை பலவித கருத்துகளைச் சொல்லி எப்படி ஏற்பது என்று தயங்கியவர்கள்கூட அதன்பின் எதுவும் பேசவில்லை.



சலவைத் தொழிலாளி அழைத்தபடி அந்த நொடி முதல் அந்த அழகிய மணவாளப் பெருமாள் 'நம்பெருமாள்' என்றானார். இந்த நிலையில் இந்த நம்பெருமாளையும் வில்வமரத்தடியில் கிட்டிய ரங்கநாயகி தாயாரையும் முன்போல் பிரதிஷ்டை செய்தனர்.

மேலும், ராஜமகேந்திரன் திருச்சுற்றின் வடகிழக்கு மூலையில் ஒரு பகுதியை மண்டபமாக ஏற்படுத்தி, அங்கே மறவாமல் டெல்லி சுல்தான் மகளான சுரதாணியின் உருவத்தைச் சித்திரமாக எழுதிவைத்து, அதற்கு துலுக்க நாச்சியார் என்கிற திருநாமத்தையும் சூட்டினர். அப்படியே சுரதாணியின் விருப்ப உணவான கோதுமை ரொட்டி, வெண்ணெய், கிச்சடிப் பொங்கல் போன்றவற்றை நம்பெருமாளுக்கு அமுதுபடியாக சமர்ப்பித்தனர்.

இவ்வேளையில் தஞ்சையை ராஜேந்திர சோழன் ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. இவன் ராஜராஜ சோழன் மகன் ராஜேந்திரன் அல்ல. இவ்வேளையில் சோழநாடு, ஹொய்சாளர் மற்றும் பாண்டியர் பிடியில் அடிமைப்பட்டிருந்தது. இந்த ராஜேந்திர சோழன் துலுக்க நாச்சியார் நிமித்தம் இரண்டு கிராமங்களை நிவந்தமாகத் தந்ததாகக் கோயிலொழுகுக் குறிப்புகள் சுட்டிக்காட்டுகின்றன.

சலவைத் தொழிலாளிக்கு இவ்வேளை பிரத்யேகமாய் ‘ஈரங்கொல்லி’ என்கிற திருநாமம் சூட்டப்பட்டது. எம்பெருமானைத் திருமலையில் பூஜித்து பின் அங்கிருந்துகொண்டு வந்திருந்த கொடவருக்கு திருத்தாழ்வரைதாசர் என்கிற நாமம் சூட்டப்பட்டது.



இவை எல்லாம் 1371-ம் ஆண்டில் வைகாசி மாதத்தில் நடந்தேறின. இவற்றையெல்லாம் கல்வெட்டில் பொறித்துவைத்தவர் கம்பண்ண உடையார். கம்பண்ண உடையாரின் கல்வெட்டுபடி மீண்டும் திருவரங்கம் ஏகிய நம்பெருமாள், பிள்ளைலோகாசார்யரால் திருவரங்கத்திலிருந்து எடுத்துச் செல்லப்பட்ட பெருமாள் என்ற கருத்தும் சந்தேகமும் நிலவுகின்றன.

பிள்ளைலோகாசார்யர் என்பவர் யார்... அவர் எதற்காக எம்பெருமாளைத் தன் வசப்படுத்தி, திருவரங்கம்விட்டு மதுரை ஆனை மலையருகில் உள்ள ஜ்யோதிஷக்குடி என்னும் கொடிக்குளம் வரை கொண்டு செல்ல வேண்டும் என்று இவ்வேளையில் பல கேள்விகள் எழுகின்றன. பிள்ளைலோகாசார்யருக்கு வேதாந்த தேசிகரும் பேருதவி செய்ததாகக் குறிப்புகள் கூறுகின்றன.

ஆக மொத்தம், நாம் இவ்விரு மகான்களையும் சற்றேனும் அறிதல் என்பது, திருவரங்க வரலாற்றை அறிவதற்குப் பேருதவியாக இருக்கும்.

இருவருமே இம்மண்ணில் பரிபூரணமாக நூறாண்டு வாழ்வைக் கடந்தவர்கள். இதில் வேதாந்த தேசிகன் 1268-ல் தோன்றி 1369-ல் பரமபதம் அடைந்தவர். பிள்ளைலோகாசார்யர் 1203-ல் அவதரித்து 1323-ல் தன் 120-வது வயதில் பரமபதித்தவர்.

பிள்ளைலோகாசார்யர், திருவரங்கத்து வடக்குத் திருவீதிப் பிள்ளை என்பாருக்குத் தவமிருந்து பெற்ற பிள்ளையாய் பிறந்தவராவார். இவருக்கு அழகிய மணவாளதாசன் என்றொரு தம்பியும் பின் பிறந்தார். இவ்விருவரைப் பற்றிச் சொல்லும்போது ராம லட்சுமணர்போல் என்பர்.

இவர் தன்னைப் பெற்றெடுத்த தந்தையையே ஆசார்யனாகக் கொண்டவர். ஐப்பசி மாத திருவோண நட்சத்திரத்தில் அவதரித்தவர். கூரகுலோத்தமதாசர் விளாஞ்சோலைப் பிள்ளை, திருவாய்மொழிப் பிள்ளை மணப்பாக்கத்து நம்பி, கோட்டூர் அண்ணர், திருக்கண்ணங்குடிப் பிள்ளை, திருப்புட்குழி ஜீயர், கொல்லிக்காவல் தாசர் ஆகியோர் இவரின் சீடர்களாவர்.

இவர்கள் இவரின் சீடர்கள் என்பதோடு, வைணவம் குறித்து சிந்திக்கையில் நாம் எல்லோரும் அவர்களை மறவாமல் சிந்திக்க வேண்டியதும் அவசியம்.



பிள்ளைலோகாசார்யர் இவர்களின் குரு என்பதோடு, ஒரு நைஷ்டிக பிரம்மச்சாரி என்பதையும் நாம் அறிய வேண்டும். மனத்தாலும் பெண்களை நினையாதவர்களை நைஷ்டிக பிரம்மச்சாரிகள் என்போம்.

பிள்ளைலோகாசார்யரை காஞ்சி வரதனின் அம்சம் என்றும் கூறுவர். காஞ்சி வரதனே பிள்ளைலோகாசார்யராக அவதாரம் எடுத்து வந்திருக்கிறான் என்று அன்று பலர் கருதினர். இதற்குச் சான்றாக ஒரு சம்பவமும் உண்டு. மணப்பாக்கத்து நம்பி எனும் அன்பர் காஞ்சி வரதன் ஆலயத்தில் அவன் திருமுன் வைணவ ஆசாரங்களையும் தாத்பர்யங்களையும் கற்று வந்தார். ஒரு நாள் காஞ்சி வரதனின் அசரீரிக் குரல், மணப்பாக்கத்து நம்பியைத் திருவரங்கம் சென்று அங்கு நம் சம்பிரதாயங்களை போதிக்கும் பிள்ளைலோகாசார்யனிடம் சேர்த்து மீதமுள்ள அனைத்தையும் கற்கச் சொன்னது.

மணப்பாக்கத்து நம்பியும் மகிழ்வுடன் புறப்பட்டுத் திருவரங்கம் அடைந்தார். அப்போது பிள்ளை லோகாச்சார்யர் காட்டழகிய சிங்கர் ஆலயத்து வெளியில் தன் சீடர்களுக்கு உபதேசித்தபடி இருந்தார்.

மணப்பாக்கத்து நம்பி ஒரு தூண் பின்னால் மறைவாக நின்றுகொண்டு, பிள்ளைலோசார்யர் சொல்வதைக் கேட்கலானார். அப்போதுதான் அவருக்கு ஒரு பேருண்மை புலப்பட்டது.

காஞ்சிபுரம் வரதராஜ பெருமான் சந்நிதியில் செவியுற்ற அசரீரிக் குரலும், பிள்ளைலோகாசார்யர் குரலும் ஒன்றாக இருந்தன. அத்துடன், அதுவரை அங்கே எதை எல்லாம் தனக்குக் கற்பித்தாரோ அதையே இங்கே தன் மாணவர்களுக்கும் மாற்றமின்றிச் சொல்லியபடி இருந்ததைக் கண்டார், மணப்பாக்கத்து நம்பி.

`இவரே நம்பெருமாள்... இவரே நம்மை விட்டுச்சென்ற பெருமாள்...” என்று சலவைத் தொழிலாளி பரவசத்தோடு கூற, அனைவருக்கும் மெய்சிலிர்த்தது!

அந்த நொடியே பெருமான் வேறு பிள்ளைலோகாசார்யர் வேறில்லை என்பதை உணர்ந்து அந்த மறைவிலிருந்தும் விலகி, பிள்ளை முன்சென்று அவர் காலில் விழுந்து வணங்கி எழுந்து, “அறிந்தேன் அறிந்தேன் அவரோ நீர்...” என்று காஞ்சி அருளாளனை மனத்தில் எண்ணியபடி கேட்டார். “ஆமாம்... இப்போது அதற்கென்ன...” என்று பிள்ளையும் திரும்பிக் கேட்டார். அந்த பதிலே அவர் யார் என்பதை உணர்த்திவிட்டது.

காஞ்சி அருளாளன் அம்சமாகத் திகழ்ந்த போதிலும், ராமாயணத்து ராமன் மானுட பஞ்சபூத நெறிகளுக்கு உட்பட்டே காரியங்கள் சாதித்ததுபோல், இவரும் நடந்து கொண்டார் என்பது முக்கியம்.

இவர் தன் வாழ்நாளில் 18 கிரந்தங்களை அருளிச் செய்துள்ளார். அவற்றில் அர்த்த பஞ்சகம் தத்வத்ரயம், தத்வசேகரம், சம்சார சாம்ராஜ்யம், நவரத்ன மாலை நவவித சம்பந்தம், வசன பூஷணம் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

இவரைத் தொடர்ந்து நாம் வேதாந்த தேசிகனையும் அறிய முற்படுவோம். அவர்கள் இருவரை அறியுமுன்பே ஸ்ரீராமாநுஜ மகாத்மாவை நாம் அறிய வேண்டியவர் களாவோம். (இத்தொடரில் இது காறும் ராமாநுஜ சம்பந்தம் ஏற்படவில்லை. திருவரங்க ஆலய தொடக்கம் முதல், அதன் சப்தப்ரக்ரங்களில் புகுந்து அங்கு கோயில் கொண்டிருக்கும் சந்நிதிகள் தொட்டு, அவை சார்ந்த சம்பவங்கள் தொட்டு வரிசையாக வந்து கொண்டிருப்பதால் ஸ்ரீராமாநுஜரை சிந்திக்கும் வேளை வரவில்லை.)

ஸ்ரீராமாநுஜர் - பிள்ளைலோகாசார்யர், வேதாந்த தேசிகன் போன்றோருக்கெல்லாம் 250 ஆண்டுகள் முந்தையவர். வைணவ சித்தாந்தத்தை மிகுந்த பிரயாசையுடனும் எவராலும் அசைக்க முடியாதபடி நிலை நிறுத்திக்காட்டியவர். இவர் வாழ்வு ஸ்ரீபெரும்புத்தூர், திருவரங்கம், மேல்கோட்டை என்கிற மூன்று ஊர்களோடு காஞ்சிபுரம், திருக்கோவிலூர் போன்ற பல க்ஷேத்திரங்களையும் சார்ந்த ஒன்றாகும்.

120 ஆண்டுக்காலம் இம்மண்ணில் வாழ்ந்த ஸ்ரீராமாநுஜரையும் நாம் தெளிவுற அறிந்தாலே, திருவரங்க வரலாற்றை நாம் அறிகையில் ஒரு பூரணத்துவம் கிட்டும். அவ்வகையில் பிள்ளைலோகாசார்யரை அறிந்த நாம் ஸ்ரீராமாநுஜரை முதலிலும், வேதாந்த தேசிகரை அதைத் தொடர்ந்தும் அறிவோமாக....

ஸ்ரீராமாநுஜர்...

யதிராஜா, உடையவர், எம்பெருமானார், லக்ஷ்மணமுனி, கோயிலண்ணன், பாஷ்யகாரர் என்று இவருக்குத்தான் எத்தனை பெயர்... அடேயப்பா!

- *இன்னும் வரும்...*

**பசுவும் பாவமும்!**

**ம**கரிஷி ஒருவர் தன் குடிலுக்கு முன்னே மரத்தடியில் ஜபம் பண்ணிக் கொண்டிருந்தார். அவருக்கு எதிரே ‘அம்மா’ என்று அலறியபடி ஓடிவந்த

பசு ஒன்று, அவரது குடிலுக்குள் புகுந்து விட்டது. ஒருவன் கையில் கத்தியோடு பசுவைத் துரத்திக்கொண்டு வந்தான்.



நிலைமையை மகரிஷி புரிந்து கொண்டார். வந்தவன் மகரிஷியிடம் ‘‘இந்தப் பக்கம் பசு வந்ததா?’’ என்று கேட்டான். மகரிஷி உண்மயைச் சொன்னால், அவன் ஆசிரமத்துக்குள் சென்று பசுவைக் கொல்வான். மகரிஷி உண்மையைச் சொல்லிப் பாவத்தைச் சுமக்க விரும்பவில்லை. அதேநேரம், பொய் சொல்லவும் விரும்பவில்லை. அதனால் சாமர்த்தியமாக ‘‘கண் பார்க்கும், ஆனால் பேசாது. வாய் பேசும். ஆனால் பார்க்காது’’ என்று பதில் சொன்னார்.

வந்தவன் பார்த்தான். ‘இது ஏதோ உளறுகிறது’ என்று கத்தியுடன் புறப்பட்டுப் போய்விட்டான். பசு வதை செய்யும் மகா பாவியான அவனுக்கு அந்த மகரிஷி சொன்னதைப் புரிந்து கொள்ளும் ஞானம் இல்லை.

சரி... மகரிஷி சொன்னதற்கு என்ன பொருள்? ‘கண் பார்க்கும், ஆனால் பேசாது. வாய் பேசும், ஆனால் பார்க்காது’ என்றால் ‘கண்ணால் பார்த்தேன். ஆனால் பேச முடியாத நிலையில் இருக்கிறேன்’ என்ற பொருளில் மகரிஷி சொல்லி இருக்கிறார். அதைப் புரிந்துகொள்ள அவனுக்குச் சக்தி இல்லை. அதனால் திரும்பப் போய் விட்டான். கோமாதா காப்பாற்றப்பட்டு விட்டது.

- ***ஆர்.ஆர். பூபதி, கன்னிவாடி***

16 Jun 2020

# ரங்க ராஜ்ஜியம் - 57



ரங்க ராஜ்ஜியம்

தந்தையே இவருக்கு முதல் குருவாய் இருந்து வேதம் முதல் சாத்திர நெறிமுறைகளையெல்லாம் கற்பித்தார்.

*‘அத்திகிரியருளாள ரடி பணிந்தோன் வாழியே*

*அருட்கச்சி நம்பியுரையாறு பெற்றோன் வாழியே*

*பக்தியோடு பாடியத்தைப் பகர்ந்திட்டான் வாழியே*

*பதின்மர் கலையுட்பொருளைப் பரிந்து கற்றான் வாழியே*

*சுத்தமகிழ் மாறனடி தொழுதுய்ந்தோன் வாழியே*

*தொல் பெரிய நம்பி சரண் தோன்றினான் வாழியே*

*சித்திரையிலாதிரை நாள் சிறக்க வந்தோன் வாழியே*

*சீர் பெரும்பூதுார் முனிவன் திருவடிகள் வாழியே’*

*- வாழி திருநாமம்...*

**தி**ருவரங்கம் பற்றிச் சிந்திக்கையில், தவறாது சிந்திக்க வேண்டிய நாமங்களில் தலை யானது ஸ்ரீராமாநுஜர் என்னும் நாமம். தொண்டை மண்டலத்து ஸ்ரீபெரும்புதூரில் 1017-ம் ஆண்டில் பிங்களத்துச் சித்திரைத் திங்களின் வளர்பிறையில், பஞ்சமியும் வியா ழக்கிழமையும் கூடிய திருவாதிரை நட்சத்திர நாளில் பிறந்தவர் இவர்!ஆசூரி கேசவப் பெருமாள் எனும் தந்தைக்கும், பூமிப்பிராட்டி எனும் தாய்க்கும் பிறந்த இவரின் பிறப்பு குறித்து குருபரம்பரை நூலில் ஒரு நற்கருத்து காணக் கிடைக்கிறது.

‘கலியிருள் நீங்கிப் பேரின்ப வெள்ளம் பொங்கும் படி பிறந்தவன் இவன்’ என்கிறது இக்கருத்து.

பெற்றோர் முதலில் இவருக்கு இட்ட திருநாமம் இளையாழ்வான் என்பதாகும். தந்தையே இவருக்கு முதல் குருவாய் இருந்து வேதம் முதல் சாத்திர நெறிமுறைகளையெல்லாம் கற்பித்தார்.

11-வது வயதில் தஞ்சமாம்பாள் என்னும் பெண்ணை மணந்துகொண்டார். சில நாள்களிலேயே தந்தையான ஆசூரி கேசவப் பெருமாள் இறந்துவிடவும் ஸ்ரீபெரும் புதூரைவிட்டு மனைவி மற்றும் தாயுடன் காஞ்சிபுரம் ஏகினார். காஞ்சி வாசத்தோடு வேதாந்தம் கற்க விரும்பி திருப்புட்குழி என்னும் ஊரில் வசித்த யாதவப்பிரகாசரிடம் சென்று சேர்ந்தார்.

யாதவப்பிரகாசர் ஒரு அத்வைதி.அவர் வயதில் முதிர்ந்தவராகத் திகழ்ந்த அளவுக்கு வேதாந்தத்தில் முதிர்ச்சி பெற்றிருக்கவில்லை. போகப் போக ராமாநுஜரைக் கண்டு அஞ்சும் ஒரு நிலை அவருக்கு ஏற்பட்டது. ஸ்ரீராமாநுஜரோ குருவை விஞ்சிய சீடனாக இருந்தார்.

உபநிடதம் ஒன்றில் ‘தஸ்ய யதா கப்யாஸம்’ என்கிற சொற்களுக்குப் பொருள் கூறும்போதுதான் யாதவப்பிரகாசரின் ஆழமில்லாத தவறான கருத்தும் தெரியவந்தது.



இறைவனின் கண்கள் சிவந்திருந்தன. அந்தச் சிவப்பு நிறத்துக்கு யாதவப்பிரகாசர் எதை உதாரணம் காட்டினார் தெரியுமா... குரங்கின் பின்புற ஆசனபாகத்தை. அதைக் கேட்டு ஸ்ரீராமானுஜர் மனம் வெதும்பினார்.

எந்த ஒரு கவியும் இப்படி ஒரு மோசமான பொருள்கொள்ளும் உதாரணத்தை மனத்தில் வைத்து எழுதியிருக்க மாட்டார்; உவமானத்தைக் கூறவும் மாட்டார். ‘கப்யாசம்’ எனில் குரங்கின் பின்புறம் அல்ல; அது கதிரவனால் மலரப் பெறும் செந்தாமரைப் பூவைப் போன்றது என்பதே சரியான அரும்பொருள்!

அதை ஸ்ரீராமானுஜர் எடுத்துரைக்கவும் அந்த நொடியே யாதவப்பிரகாசர்வரையில் ஸ்ரீராமானுஜர் ஓர் அதிகப் பிரசங்கியாகிவிட்டார். சற்றே கூடுதலாக... தான் பின்பற்றும் அத்வைதத் துக்கேகூட ஸ்ரீராமானுஜர் எதிரியாகிவிடக் கூடும் என்று கணித்து ஸ்ரீராமானுஜரைக் கொல்வதுவரை அவர் மனம் துணிந்துவிட்டது.

ஸ்ரீராமானுஜர் போன்ற சான்றோர்களின் வாழ்வில் நடக்கும் அவர்களுக்கு எதிரான அடாத செயல்களும் அற்புதங்களாக மாறி விடுவது உண்டு. அப்படி ஓர் அதிசயம் ஸ்ரீராமானுஜர் வாழ்விலும் நடைபெற்றது. அவர் யாதவப்பிரகாசருடன் காசி யாத்திரை மேற்கொண்ட நேரம், அவரை கங்கை நதியில் நீராடும்போது அமுக்கிக் கொன்று விடுவது என்பது யாதவப்பிரகாசரின் திட்டம். இதை ஸ்ரீராமானுஜரின் ஒன்றுவிட்ட சகோதரனான கோவிந்தன் என்பவர் அறிய நேர்ந்தது. அவர் காசியில் கங்கைக்கு நீராடச் சென்ற ஸ்ரீராமானுஜரைத் தடுத்து ‘எங்காவது சென்று உயிர் பிழைத்துக்கொள்’ என்று கூறினார்.

ஸ்ரீராமானுஜர் மனத் துயரத்துடன் அங்கிருந்து விலகி எம்பெருமானிடம் பிரார்த்தனை புரிந்தார். யாதவப்பிரகாசருக்கோ ஸ்ரீராமானுஜர் கங்கையில் அடித்துச்செல்லப்பட்டதுபோல் செய்தி சொல்லப்பட்டது.



ஸ்ரீராமானுஜரை எப்பெருமான் கைவிட வில்லை. ஸ்ரீராமானுஜர் ஒரு காட்டுவழியே திக்குதிசை தெரியாது நடந்தபோது, வேடுவன் வேடுவச்சி வடிவில் எம்பெருமானும் பெருமாட்டியும் வந்து சரியான வழியைக் காட்டி, காஞ்சி மண்ணில் அவரைக் கொண்டு வந்து சேர்த்தனர். காஞ்சியை அடைந்த பிறகே, தனக்கு வழிகாட்டியதோடு வழித்

துணையாகவும் வந்தது எம்பெருமானும் பிராட்டியுமே என்பது ஸ்ரீராமாநுஜருக்குத் தெரிந்தது.

அதன்பின் திருக்கச்சிநம்பி என்னும் ஆசார்யனைச் சந்தித்து அவரிடம் தன்னைச் சீடனாக்கிக்கொண்டு, காஞ்சிப் பேரருளாளனுக்குத் திருமஞ்சன நீர் கொண்டு வந்து தரும் கைங்கர்யத்தைச் செய்ய தொடங்கினார்.மூன்று மாதங்கள் கடந்த நிலையில் காஞ்சி திரும்பிய யாதவப்பிரகாசருக்கு ஸ்ரீராமாநுஜர் உயிரோடிருப்பது பெரும் ஆச்சர்யத்தை மட்டுமல்ல; அதிர்ச்சியையும் அளித்தது. இருந்தும் அவர் அதைக் காட்டிக்கொள்ளாமல், ஸ்ரீராமாநுஜர் எப்போதும்போல் தன்னிடம் வேதம் கற்க வரலாம் என்றார். ஸ்ரீராமாநுஜரும் குருவின்மீது கோபமோ வருத்தமோ கொள்ளாது அவரிடம் பாடம் கற்கத் வந்தார். அவரின் இச்செயல், குரு என்பவர் எப்படிப்பட்டவராக இருப்பினும் அவரிடம் குற்றம் காணுதல் கூடாது என்பதற்கான ஒரு செய்தியாகும்.

இப்படிப்பட்ட ஒரு நாளில்தான் திருவரங்கத்திலிருந்து ஆளவந்தார் என்ற ஆசார்ய புருஷர் திருக்கச்சிக்கு வந்தார். வந்த இடத்தில் வரதராஜப் பெருமானின் ஆலயமிசை ஸ்ரீராமாநுஜர் செய்த தொண்டுடன் அவருடைய தேஜஸையும் கண்டவர், ‘இவனோ இளையாழ்வான்...” என்று கேட்டதோடு அந்த நொடியே மனத்துக்குள் ‘இவன் பெயரிலேயே இளையாழ்வான். ஆயினும் எம்பெருமானுக்கு இவனே முதலாமவன்’ என்று கருதினார்.

ஸ்ரீராமாநுஜரைக் கண்ட நிலையில், வரதராஜ தரிசனம் முடிந்து திருவரங்கம் திரும்பிய ஆளவந்தார் காலத்தால் நோய்வாய்ப்பட்டார். தனக்குப் பின் வைணவம் தழைக்க அரும்பாடுபடக் கூடியவர் எவர் உள்ளார் என்று ஒரு தேடுதல் நிகழ்த்தினார். ஒரு குருவின் கோணம் என்பது சராசரி மனிதனின் கோணத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது. வைணவச் சின்னங்களோடும், ஸ்ரீவிஷ்ணுபக்தியோடும் இருப்பதால் மட்டும் ஒருவன் வைணவனாகிட முடியாது.

வைணவ லட்சணங்கள் என்று சில உள்ளன. அதில் முதலாவது, நான் எனும் அகந்தையின்றியும் தன்னை மேலாக கருதாதும் இருத்தல்.

இரண்டாம் லட்சணம் என்பது பெரும் ஆசார்ய பக்தியும் நித்ய வழிபாடுகளும் ஆகும். மூன்றாம் லட்சணம் பாகவதர்களுக்கு உதவுவது. நான்காம் லட்சணம் ஆலயத் திருப்பணி செய்தல். ஐந்தாவதாக ஒன்றுள்ளது... இந்த நான்கின்படி துளியும் பிசகின்றி நடப்பது. அதோடு தன்னலம் துளியுமின்றித் தன்னைச் சுற்றியுள்ளோர் நலம் பேணுவது என்பதும் அதில் ஒன்றாகும்.

ஆளவந்தாரின் தேடலில் இந்த ஐந்தும் கொண்ட ஒருவர் அகப்படவேயில்லை. ஏதாவது ஒன்று குறைவாக இருப்போரே அவரைச் சுற்றியிருந்தனர். மனம் நொந்து அவர் சலித்திருந்த ஒரு நாளில்தான், காஞ்சியில் ஸ்ரீராமாநுஜரைச் சந்திக்க நேர்ந்ததும் அவர் முகத்தில் தென்பட்ட பொலிவும் நினைவுக்கு வந்தது. தன் பிரதான சீடனை அழைத்துத் தன் உயிர்பிரிவதற்குள் காஞ்சிக்குச் சென்று ஸ்ரீராமாநுஜரை அழைத்து வரப் பணித்தார். சீடரும் புறப்பட்டார்.

காஞ்சியிலோ யாதவப்பிரகாசருடன் ஸ்ரீராமாநுஜருக் குத் திரும்பவும் பிணக்கு ஏற்பட்டதில், யாதவப்பிரகாசர் ஸ்ரீராமாநுஜரிடம் வேறு ஆசார்யனைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டார்.

ஸ்ரீராமாநுஜர் மனம் வருந்தினாலும் காஞ்சி வரதனுக்குத் திருமஞ்சன நிமித்தம் தண்ணீர் சுமக்கும் கைங்கர்யத்தை விட்டுவிடவில்லை. அந்தக் கைங்கர்யமும் அவரை விடவில்லை. அப்படி ஒரு நாள் நீர் சுமந்து வருகையில், ஸ்ரீராமாநுஜர் செவியில் எம்பெருமானின் புகழ்பாடும் ஸ்தோத்திர ரத்னம் என்கிற துதி விழுந்தது.

ஸ்தோத்திர ரத்னப் பொருள், ஸ்ரீராமாநுஜரை தன் வயப்படுத்திக் கொண்டுவிட்டது. ஆழ்ந்த பொருள், நயந்த சொற்கட்டு, உச்சரித்துச் சொன்ன விதத்திலும் ஒரு கம்பீரம். இம் மூன்றும் ஸ்ரீராமாநுஜரைக் கட்டிப்போட்டு அவரின் திருமஞ்சனக் கடமையையே மறக்கச் செய்தன. தோளில் சுமந்து நின்ற குடத்துடன் அதை இறக்கிவைக்கக்கூடத் தோன்றாமல் அந்த ரத்தினத்தைச் செவிமடுத்தார். ஸ்தோத்திரம் முடியவும் “திரும்பப் பாடுங்களேன்” என்றார். பாடியவரோ ``தாங்கள் யார்?" என்று கேட்டார்.

``நான் ராமாநுஜன்'' என்றார். அப்போது ஸ்ரீராமாநுஜருக்குத் தெரியாது, இப்படித் தன்னை அறிமுகம் செய்துகொள்ளும் ஒரு போக்கு தன்னை நடையாக நடக்கவிடப் போகிறது என்பது."அடடே தாங்கள்தானா அது... தங்களைக் காணவே நான் திருவரங்கத்திலிருந்து வந்துள் ளேன். என்னை அனுப்பியவர் ஸ்ரீஆளவந்தார். நான் அவரின் சீடர்களில் ஒருவன். இப்போது நீங்கள் செவிமடுத்தது அவர் ஸ்மரித்த ஸ்தோத்திர ரத்தினத் தையே'' என்றார் அச்சீடர்.

"ஆஹா அற்புதம்... தங்கள் பெயர்?"

"பெரிய நம்பி."

"மிகவும் மகிழ்ச்சி. என்னைக் காணவே வந்துள்ளதாகச் சொன்னீர்களே... நான் என்ன அத்தனை பெரியவனா?"

"வைணவத்தில் பெரிது சிறிது எனும் பாகுபாடுகள் ஏது... தங்களைக் காண வேண்டும் என்பது என் ஆசார்யரின் விருப்பம்..."

"என்னது... ஸ்ரீஆளவந்தாருக்கு என்னைக் காண விருப்பமா... நான் அவ்வளவு பாக்கியசாலியா..."

"ஏன் இருக்கக் கூடாது... தங்களுக்கு என்னோடு வந்திட விருப்பம்தானே..."

"பாக்கியம் என்று கூறியவன் வராது போவேனா... இதோ போய் கைங்கர்யம் முடித்து, உடன் வருகிறேன். இங்கே வரத கைங்கர்யத்துக்கும் மாற்று ஏற்பாடும் செய்தாக வேண்டும். செய்துவிட்டு ஓடி வருகிறேன்'' என்று புறப்பட்டார்.

பெரிய நம்பியும் காத்திருந்தார். ஸ்ரீராமாநுஜரும் சொன்னது போலவே ஒரு கோலும் கோலின் நுனியில் தனக்கான ஆடைகள் கொண்ட ஒரு துணி முட்டையுமாக ஒரு யாத்ரிகன் போலவே வந்து சேர்ந்தார்.

பெரிய நம்பியிடம் பூரிப்பு. ஸ்ரீராமாநுஜர் காஞ்சியைப் பிரியமனமின்றி பிரிவது, அவரின் உடல் மொழியில் நன்கு தெரிந்தது. ஹஸ்தகிரி உள்ள

திசை நோக்கி சாஷ்டாங்க நமஸ்காரம் புரிந்தவர், கண்களில் துளிர்த்த கண்ணீரைத் துடைத்துவிட்டுக் கொண்டார்.

“உற்றார் உறவினரைப் பிரிவதைவிட இந்த ஊரைப் பிரிவதில் உங்களுக்கு இவ்வளவு வருத்தமா?”

பெரிய நம்பியின் கேள்விக்குப் பதில் சொல்வதைவிட மௌன மாகப் பார்ப்பது சிறந்ததாகத் தோன்றியது ஸ்ரீராமாநுஜருக்கு.அதன்பின் பெரிய நம்பியிடம் ஆளவந்தார் பெருமை வெளிப்படத் தொடங்கியது, அதைக் கேட்பது பேரின்பமாக விளங்கியது ஸ்ரீராமாநுஜருக்கு. தான் வேதம் அனைத்தையும் முழுவதுமாய்க் கற்றிட எம்பெருமான் கருணை புரிந்து விட்டதாகத் தோன்றியது. நடையிலும் நல்ல வேகம்.

வாணிகர்கள் வண்டி கட்டிக்கொண்டு செல்வர். சத்திரியர் குதிரைகளில் ஆரோகணிப்பர். ஏனையோர்க்குக் கால்களே சக்கரங்கள். அந்தச் சக்கரக் கால்களோடு திருவரங்கத்தை அடைந்தவர்களுக்கு... குறிப்பாக வட காவிரியை அடைந்தவர்களுக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

ஸ்ரீஆளவந்தார் திருநாடு அலங்கரித்திருந்தார். பெரிய நம்பிக்கு மூர்ச்சையாகி விட்டது. ஸ்ரீராமாநுஜரோ கண்ணீர் பெருக்கலானார்.

‘தனக்கும் உற்ற குருவுக்கும் பிராப்தமே இல்லையோ... தன்னால் வேதத்தைக் கசடறக் கற்க முடியாதோ... தனது இப்பிறப்பு தொண்டூழியம் பார்க்க மட்டுமா...’ - இப்படி ஸ்ரீராமாநுஜருக்குள் எண்ணற்ற கேள்விகள்!

- *தரிசிப்போம்...*

## பஞ்ச கோபுரங்கள்!

**கோ**புரங்கள் இறைவனின் பேரண்டத் திருமேனி என்கின்றன ஞான நூல்கள். அண்டத்தில் திகழும் பறவைகள், திக் பாலகர், அஷ்ட சக்திகள், முனிவர்கள் உள்பட சகல உயிர்களும் சுதைச் சிற்பங்களாக கோபுரத்தில் திகழும்.மய மதம் எனும் நூல், 15 வகை ராஜ கோபுரங்களை விவரிக்கிறது.



**அவை**: 1. ஸ்ரீகரகம், 2. ரதிகாந்தம் 3.காந்த விஜயம், 4. விஜய விசாலம், 5. விசாலாலயம், 6. விப்ரதீகாந்தம், 7. ஸ்ரீகாந்தம், 8. ஸ்ரீகேசம், 9. கேசவிசாலகம், 10. சுவஸ்திகம், 11. திசா சுவஸ்திகம், 12. மர்தசம், 13.மாத்ர காண்டகம், 14. ஸ்ரீவிசாலம், 15.சதுர் முகம்.

ஆலயங்களில் திசைக்கு ஒன்றாக முறையே பூர்வகோபுரம், பச்சிம கோபுரம், உத்தர கோபுரம், தக்ஷிண கோபுரம் ஆகிய நான்கும் மத்திம கோபுரம் ஒன்றும் திகழும். இவற்றைப் பஞ்ச கோபுரம் என்பர்.

***ஓவியம்: கார்த்திகா***

30 Jun 2020

# ரங்க ராஜ்ஜியம் - 58



ரங்க ராஜ்ஜியம்

மூன்று மடங்கிய விரல்களும் மூன்று செய்தியைச் சொல்கின்றன. முதல் செய்தி சாதி வேற்றுமையில்லாத சமத்துவமான சமுதாயம்.

*பூமன்னுமாது பொருந்தியமார்பன், புகழ்மலிந்த*

*பாமன்னுமாறன் அடிபணிந்துய்ந்தவன், பல்கலையோர்*

*தாம்மன்னவந்த இராமானுசன் சரணாரவிந்தம்*

*நாம்மன்னிவாழ, நெஞ்சே! சொல்லுவோம்அவன்நாமங்களே!*

**- இராமானுச நூற்றந்தாதி**

திருவரங்கத்தை அடைந்த ஸ்ரீராமாநுஜருக்கும் பெரிய நம்பிக்கும் அதிர்ச்சி காத்திருந்தது. ஸ்ரீஆளவந்தார் திருநாடு அலங்கரித்திருந்தார். செய்தியறிந்து பெரிய நம்பி மூர்ச்சையடைந்தார். ஸ்ரீராமாநுஜர் கண்ணீர் பெருக்கலானார்.

`தனக்கும் உற்ற குருவுக்கும் பிராப்தமே இல்லையோ, தன்னால் வேதத்தைக் கசடறக் கற்க இயலாதோ...' என்றெல்லாம் மனம் எழுப்பிய கேள்விகளோடு, அவர் ஸ்ரீஆளவந்தாரின் திருமேனியின் முன்வந்து நின்றபோது, ஸ்ரீஆளவந்தாரின் ஆசிகூறும் கரத்தில் மூன்று விரல்கள் மடங்கியிருக்க மீதமுள்ள இரண்டு விரல்கள் நீண்டிருந்தன. அது ஏதோவொரு செய்தியைச் சொல்லாமல் சொல்வதாக இருந்தது.

ஸ்ரீராமாநுஜர் மடங்கியிருந்த அந்த விரல்களையே பார்த்தவண்ணம் இருந்தார். அவருக்குள் பற்பல எண்ணவோட்டங்கள். அதேவேளை, பெரியநம்பி மூர்ச்சை தெளிவிக்கப்பெற்று எழுந்து நின்றார். அவரால் கண்ணீரை அடக்க முடியவில்லை. வாய்விட்டு அழ முற்பட்டவர், “ஆசார்யனே... இப்படி என்னைத் தனியே தவிக்கவிட்டுச் செல்லலாமா? இனி நாங்கள் நடைபிணங்களே... எங்களைக் கடைத்தேற்ற எவரோ உள்ளார்?” என்று புலம்பி அழுதார்.

அந்த அழுகை ஸ்ரீராமாநுஜரை நெகிழ்த்தியது. அருகே சென்று அவரின் கரங்களை இதமாகப் பற்றி “ஆளவந்தாரின் அத்யந்த சீடரே... எனக்கும் குருவின் ஸ்தானத்தில் இருப்பவரே... நான் இப்போது சொல்லப்போவதைக் கேட்டு என்னைத் தவறாகக் கருதிவிடக் கூடாது. என் மனத்தில் இவ்வேளை இங்கே பட்டதையே நான் கூறப்போகிறேன்.

ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்கு மரணம் என்கிற ஒன்று உண்டா என்ன... காஞ்சியிலிருந்து நான் திருவரங்கம் வந்திருப்பதுபோல, ஆளவந்தார் என்கிற நம் ஆசார்யனும் திருவரங்கம்விட்டு ஸ்ரீவைகுண்டம் சென்றிருக்கிறார். எம்பெருமான், தன்பொருட்டு அவரை அங்கே அழைத்திருக்கிறான்.



இது மரணமல்ல... மாற்றம். ஒரு ஸ்ரீவைஷ்ணவன் வரையிலும் அவன் இறப்பதேயில்லை. பூத உடலையே துறக்கிறான். மற்றபடி அவனுக்கு முதல்தான் ஏது... முடிவுதான் ஏது...”

என்று ஆறுதல் கூறினார்.

அதைக்கேட்டு, சுற்றியிருந்த சீடர்களில் பலரின் முகத்தில் ஓர் ஆச்சர்ய அதிர்வு. அதில் ஒருவர் வேகமாக முன்வந்து “சுவாமி, தாங்கள் யார் என அறியலாமா...” என்று மிகப் பணிவாய்க் கேட்டார்.

“நானா… இன்னமும் என்னை முழுமையாகத் தெரிந்திராத நிலையில் என்னைப் பற்றிக் கூற பெரிதாய் ஏதுமில்லை. ஆயினும், ராமாநுஜன் என்பது என் நாமம்…” என்றார் ஸ்ரீராமாநுஜர்.

“தாங்களா… தாங்கள்தானா ராமாநுஜர்… தங்கள் வருகையை எதிர்நோக்கிய வண்ணமே இருந்தார் எம் ஆசார்யர். ஓர் ஆச்சர்யம் பாருங்கள்... தன் இறுதி சுவாசம் அடங்குமுன் எம் ஆசார்யன் உதிர்த்ததும் நீர் சொன்ன அதே கருத்தைத் தான்!”

“அப்படியா? அப்படியென்ன பெரிய கருத்தை நான் கூறிவிட்டேன்?”

“ஒரு ஸ்ரீவைஷ்ணவன் இறப்பதில்லை… அவனுக்கு முடிவு தான் ஏது... முதல்தான் ஏது என்றீர்கள் அல்லவா...”

“ஏதோ மனத்தில் பட்டதைக் கூறினேன்…”

“அதுதான் எங்கள் வியப்புக்குக் காரணம். எம் ஆசார்யன் கூறிய அதே சொற்கள்... அதே கருத்து!”

“அது என் பாக்கியம். அதற்காக நான் அவராகிவிட மாட்டேன். அவரெங்கே… நானெங்கே...”

“இப்படிப் பேசுவது உங்கள் அடக்கத்தைக் காட்டுகிறது. ஆனால், ஆசார்யன் அவரின் வாரிசாக உங்களை அடையாளப்படுத்திவிட்டுப் போயிருப்பதாகவே நாங்கள் உணர்கிறோம்.”

“நான் அறிய வேண்டியவையே ஏராளமாக இருக்கின்றனவே...’’

ஸ்ரீராமாநுஜர் பேச முற்பட, அந்தச் சீடரோ இடைமறித்துப் பேசினார்.

“இதையும் அறிந்துகொள்ளும்... ஆசார்யனின் மடங்கிய மூன்று கை விரல்களைக் காண்கிறீர்கள்தானே...”

“காண்பது மட்டுமா? அவை தன்னுள் ஒரு பெரும் செய்தியைக் கொண்டிருப்பதாகவே என் ஆழ் மனது கருதுகிறது.”

``அருமை... அற்புதம்! அவை எதன் பொருட்டு அப்படியுள்ளன என்று அவர் அருகிலிருந்து அறிந்த நிலையில் நாங்கள் கூறுகின்றோம்”- என்றபடி ஒரு சீடர், ஆளவந்தாரின் பூத உடல் முன் வேகமாக வந்து நின்றார்.

தொடர்ந்து, “மூன்று மடங்கிய விரல்களும் மூன்று செய்தியைச் சொல்கின்றன. முதல் செய்தி சாதி வேற்றுமையில்லாத சமத்துவமான சமுதாயம். இரண்டாவது செய்தி ஸ்ரீவைஷ்ணவமே மாந்தர்க்கு எளிதானது - ஏற்றது; விரைந்து நற்கதி தரவல்லது. எனவே ஸ்ரீவைஷ்ணவ தர்மம் உலகு முழுக்கப் பரவ வேண்டும். மூன்றாவது விரல் சொல்லும் செய்தி, வேதப் புதையல்களில் ஒன்றான பிரம்ம சூத்திரத்துக்கு அனைவருக்கும் புரியும் வண்ணம் வியாக்யானம் எழுதுதல் வேண்டும்” என்று கூறி முடித்தார்.

“அடேயப்பா... ஆசார்யனுக்கு எவ்வளவு பெரிய மனது. அவர் விருப்பங்களும் துளியும் சுயநலமற்றதாக உலகுக்கானவையாக உள்ளன. அற்புதம்... அற்புதம்” என்றார் ஸ்ரீராமானுஜர்.

“அற்புதம் என்று சொன்னால் மட்டும் போதாது. தாங்கள் இந்த மூன்று விருப்பங்களை ஈடேற்றிக் காட்டி, ஆசார்யனின் தனிப் பெரும் கருணைக்கும் ஆசிக்கும் பாத்திரமாக வேண்டும் என்று வேண்டுகிறோம்” என்றனர் சீடர்கள்.

“நான் இளையவன், புதியவன். ஆயினும் இப்பிறப்பில் ஏதாவது செய்வதே தீர வேண்டும் என்கிற வேட்கை உடையவன். எம்பெருமானின் கருணையும் அருளும் நம் அனைவருக்குமே நிரம்ப இருப்பதாகக் கருதுகிறேன். ஆசார்யனின் விருப்பமே இனி என்

விருப்பம்… அதை ஈடேற்ற நிச்சயம் பாடுபடுவேன்” என்றார் ஸ்ரீராமாநுஜர்.



ஸ்ரீராமாநுஜர் இப்படி ஆளவந்தார் பூத உடல் முன்னால் சத்திய பிரமாணம் எடுத்துக்கொண்டதுபோல் உணர்ச்சிபூர்வமாகச் சொல்லி, அவரின் உடலுக்கு மீண்டுமொரு வந்தனம் புரிந்த நிலையில், ஆளவந்தாரின் அந்திம காரியங்களும் அதன்பின் ஈடேறி முடிந்தன.

பெரிய நம்பியின் இல்லத்தில் தங்கியிருந்த நிலையில், ஆசார்ய திருநாட்டு வைபவமும் முற்றாய் முடிந்து, அதன்பின்னர் திருவரங்கப் பெருமானின் திருச்சந்நிதிக்குச் சென்று அங்கே நெடுநேரம் நின்று வணங்கிய ஸ்ரீராமாநுஜரின் மனத்தில் காஞ்சியின் நினைவும் குறிப்பாக மனைவி தஞ்சமாம்பாள் குறித்த எண்ணமும் ஒரு சேர எழுந்தன.

தஞ்சமாம்பாள் ஸ்ரீராமாநுஜர் போல் விசாலமானவள் இல்லை. குறுகிய பார்வையும், உயர்வு தாழ்வு மனப்பான்மையும், ஆடை ஆபரணப் பிரேமைகளும் கொண்டவளாக இருந்தாள். கணவன் என்பவன் கை நிறைய சம்பாதிப்பவனாக, சொத்துகள் வாங்கிப் போடுபவனாக, பிள்ளை குட்டி என்று பாசக்காரனாக இருக்க வேண்டும் என்பதெல்லாமும் தஞ்சமாம்பாளின் எண்ணம்.

ஸ்ரீராமாநுஜரோ சதா திருமஞ்சன கைங்கர்யம், பக்தி பூர்வம், தியானம், பாராயணம் என்று திகழ்ந்ததில், அவள் வரையில் ஓர் இடைவெளியும் கோபதாபங்களும் நிறையவே ஏற்பட்டிருந்தன. பெரிய நம்பி திருவரங்கத்துக்கு அழைத்த நிலையில், ஸ்ரீராமாநுஜர் அதற்காகப் புறப்பட்டபோதே அவள் முகம் மாறிவிட்டது.

“இங்கே என்னை தனித்து விட்டுவிட்டுச் செல்லுதல் முறையா...” என்று கேட்டுப் புலம்பியிருந்தாள்.

“ஆட்சேபம் இல்லை, நீயும் என்னுடன் வா. ஆளவந்தார் என்கிற ஆசார்ய தரிசனமும் அனுக்கிரகமும் நமக்கு ஒருசேர வாய்க்கட்டும்” என்று அழைத்தபோதோ, “அதெல்லாம் உங்களோடு போகட்டும். ஆசார்யன், மடம், சத்சங்கத்துக் கெல்லாம் இதுவல்ல வயது” என்று வர மறுத்துவிட்டாள்.

இவை யாவும் ஸ்ரீராமாநுஜருக்கு நினைவுக்கு வந்தன. ஒருபுறம் விதிவசத்தால் கிரகஸ்த வாழ்வும் மறுபுறம் அதே விதிவசத்தால் அதனுள் ஓர் ஆசார்ய வாழ்வும் வாழவேண்டிய போக்கு. என்ன செய்வது, எதைச் செய்வது, அதை எப்படிச் செய்வது... எதுவாயினும் அக்னி சாட்சியாகக் கைப்பற்றியவளைத் தவிக்கவிடுதல் பெரும் பாவம்.

அவள் விருப்பங்களையும் ஈடேற்ற வேண்டும் என்று எண்ணி, அதன் பொருட்டு காஞ்சி திரும்ப முடிவு செய்தார் ஸ்ரீராமாநுஜர்.



பெரிய நம்பியிடமும் இதர சீடர்களிடமும் அதுகுறித்துக் கூறவும், அவர்களிடமும் பெரிய தடை என்று ஏதுமில்லை. அவர்களுக்கும் கிரகஸ்தாஸ்ரம தர்மங்கள் தெரிந்ததிருந்ததே காரணம்.

“ஸ்வாமி! விரைந்து திரும்பி வாருங்கள். வரும்போது தங்களின் பத்தினியாரையும் அழைத்து வந்து விடவும். காஞ்சி மண் தங்களுக்குப் பூத உடலைத் தந்ததாக இருக்கட்டும். இத்திருவரங்கமே தங்களுக்குப்

புகழுடம்பைத் தரப் போகிறது என்பது எங்கள் எண்ணம்" என்று கூறி அவரை அனுப்பி வைத்தனர்.

காஞ்சிக்குத் திரும்பிய ஸ்ரீராமாநுஜரைத் தஞ்சமாம்பாள் ஒன்றும் மகிழ்ச்சியாக வரவேற்கவில்லை.

"அடடே... பரவாயில்லையே! சில வாரங்களிலேயே திரும்பி வந்துவிட்டீர்களே. தாங்கள் திரும்புவதற்கு வருடக் கணக்காகும் என்று கருதியிருந்தேன்" என்று தன் கருத்தை இடக்காகக் கூறினாள்.

"தஞ்சம்... நீ என்னிடம் தஞ்சமென வந்தவள். உன்னைத் தவிக்க விடுவதா என் விருப்பம். சந்தர்ப்பச் சூழல்கள் சில நேரங்களில் என் கைகளில் இல்லாமல் போய்விடுகின்றன. விரைந்து சென்றும் பயனில்லை. ஆசார்யனாகிய ஆளவந்தார், நான் அவரைக் காணுமுன் திருநாடு அலங்கரிக்கச் சென்றுவிட்டார்."

"ஓஹோ... அதனால்தான் திரும்பி விட்டீரோ... ஒருவேளை அவர் உயிரோடு இருந்திருந்தால், வருவதற்கு வருடக்கணக்கு ஆகியிருக்குமோ..." தஞ்சமாம்பாளின் பேச்சு, ஸ்ரீராமாநுஜரை அதற்குமேல் பேசவிட வில்லை. இவளிடம் பேசுவது இனி வீண் என்கிற முடிவுக்கு வந்தவர், கொல்லைப்புரத்துக்குச் சென்று களைப்பு தீரக் குளித்தார். பன்னிரு திருமண் காப்பைப் பளிச்சென்று தரித்துக்கொண்டவர், வரதனை வணங்கப் புறப்பட்டுவிட்டார்.

தஞ்சமாம்பாள் தடுக்கலானாள்.

"எங்கேயோ கிளம்பிவிட்டீர் போல் தெரிகிறதே..."

"ஆம்! காஞ்சி அருளாளனை தரிசித்துப் பல நாள்களாகி விட்டனவே?"

"எப்போதும் கோயில் நினைப்பு தானா..."

"எப்போதும் எங்கே நினைத்தேன். குளிக்கையில்தான் நினைத்தேன். ஆனால், சதாசர்வ காலமும் அவன் நினைப்பாக இருக்கத்தான்

இப்பிறப்பு அருளப்பட்டுள்ளது. ஆனால் நம்மால்தான் அப்படியெல்லாம் தீர்க்க மாக நினைக்க முடிவதில்லையே...”

தஞ்சமாம்பாள் இடக்காகக் கேட்ட கேள்விக்கு, பதில் இடக்கின்றி ஆதங்கமாய்ப் பதில் கூறிய ஸ்ரீராமாநுஜரைத் தஞ்சம்மா சலிப்புடன் பார்த்தாள்.

“என்ன தஞ்சம்மா அப்படிப் பார்க்கிறாய்?”

“நான் ஒரு பொருளில் கூறினால், நீங்கள் ஒரு பொருளில் பதில் கூறுகிறீர்களே...”

“எனக்கு எதிலும் ஒரே பொருள்தான். அதிலும் இப்போது என்னுள் ஆசார்யனின் மூன்று கட்டளைகளே மனத்தைச் சுற்றிச் சுற்றி வலம் வருகின்றன. சாமான்யனான என்னை ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யனாகவே ஒரு கூட்டம் கருதுகிறது. அவர்கள் நம்பிக்கையின்படி செயல்படத் தீர்மானித்து விட்டேன். அதற்கு எனக்கு அதிகம் ஆத்மசக்தி வேண்டும். அதை அந்த வரதன்தான் அனுக்கிரகிக்க வேண்டும்.”

தஞ்சாமாம்பாளால் அதற்கு மேல் ஏதும் பேச முடியவில்லை. எப்படிப் பேசினாலும் அதன் பாதிப்பை ஒரு பொருட்டாகக் கருதாமல், தன் நிலையைச் சொல்லி நிற்பவரிடம் எப்படிப் பேச முடியும்.

ஸ்ரீராமாநுஜர் காஞ்சி அருளாளன் ஆலயம் நோக்கிப் புறப்படலானார். கச்சம் உடுத்தி, மார்பில் அங்கவஸ்திர விரிப்போடு பொலிந்த திருமண் காப்புடன், வீதியில் அவர் இறங்கி நடந்த போது, அந்த நடை ஒரு தனி அழகாகாத்தான் இருந்தது. எதிர் படுவோரில் சில முகங்களில் புன்னகை. பலருக்கும் அவர் திருவரங்கம் சென்றிருந்தது தெரிந்திருந்தது. அவர்களில் ஸ்ரீராமாநுஜர் பெரிதும் மதிக்கும் திருக்கச்சி நம்பியும் ஒருவர். அவர் அந்தணரில்லை. ஆயினும் அந்தணர் போல சத்சங்கம், பாராயணம், பரோபகாரம் எனத் திகழ்வார். அவர் மேனியிலும் பன்னிரு காப்பு. சற்றே கருத்த தேகமானதால், திருமண் காப்பு திவ்யமாகத் தெரிந்தது.

ஸ்ரீராமானுஜரைக் கண்டதும் எதிரில் வந்து "அடடே, ராமானுஜரா..." என்று வியந்த திருக்கச்சி நம்பியின் காலடியைப் பணிந்து, கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டார் . அதைக் கண்டு சற்றே வியந்த திருக்கச்சி நம்பி, "ராமானுஜரே என்ன இது... மதிப்பும் மரியாதையும் மனத்தில் இருந்தால் போதாதா..." என்று கேட்டார்.



அதைக் கேட்டு திடுக்கிட்ட ஸ்ரீராமானுஜர், "குருவே என்ன இது... எனக்கெற்குப் புதிதாக மரியாதை?"

"திருவரங்கத்து ஆளவந்தாராலேயே தேடப் பெற்ற எங்கள் காஞ்சியைச் சேர்ந்த பாக்கிய சாலியை இனியும் நான் ஒருமையில் அழைப்பது அழகல்லவே..."

"நான் பாக்கியசாலி! அதற்காக என்னை உயர வைத்து உங்களைத் தாழ்த்திக் கொள்ளாதீர்கள். தாங்களும்தானே ஆளவந்தவரின் சீடர்!"

"நான் என்றும் சீடனே... ஆனால், நீங்கள் சீலர்."

“என்னவாயிற்று உங்களுக்கு... நான் என்றும் உங்கள் ராமானுஜனே... நீர் என் குருவே..”

``நீர் சொல்வதைக் கேட்கக் காதுகளுக்கு இதமாகவே உள்ளது. ஆனால், நடைமுறை என்று உள்ளதே...”

“என்ன பெரிய நடைமுறை...”

“நான் உங்களின் அகத்தில் வேண்டுமானால் குருவாக ஆகலாம். ஆனால், அந்தணர் என்பதால் நீர்தான் அனைவருக்கும் குருவாக ஆகப் போகிறீர்.”

``ஓஹோ, நீங்கள் சாதியைப் பற்றிச் சிந்தித்து அதன்மேல் நின்று பேசுகின்றீர் போலும். ஆளவந்தாரின் பெரும் விருப்பமே சாதிபேதமற்ற வைணவ சமுதாயம்தான்!”

``அதைச் சாதிக்க முடியும் என்று நம்புகிறீரா...”

“நம்புவதா... என் வரையில் நான் தீர்மானமும் செய்துவிட்டேன். என் முன்னே எம்பெருமான் தாசர்கள் எச்சாதியினராக இருந்தாலும் சரி, அவர்கள் ஸ்ரீவைஷ்ணவன் என்னும் நெறியினரே. ஏன்... செட்டிமகனான நீர், என் வரையில் பரம வைஷ்ணவர் மாத்திரமே!”

“அவசரம் வேண்டாம். இது பல காலத்துப் பாதிப்பு. வழிப்பது கடினம். ஆனால், வழுக்குவது சுலபம்.”

“நான் இதில் வழுக்கி எல்லாம் விழுந்துவிட மாட்டேன் நம்பி அவர்களே. வழிக்கவும் துணிந்து விட்டேன். நாளையே நீர் என் பெருமதிப்பிற்குரிய விருந்தினர். உங்களை உபசரித்துப் பசியாற்றிய பிறகே நானும் என் மனைவியும் உண்போம்.”

“என்ன இது… எங்கோ தொடங்கிய பேச்சு இறுதியில் போஜனத்தில் வந்து முடிந்து விட்டதே…”

“எனக்கு அருள் கூர்ந்து அந்த பாக்கியத்தைத் தாருங்கள்…”

“கரும்பு தின்னக் கூலியா... ஆனால்...”

“புரிகிறது... எவரும் எதுவும் சொல்ல மாட் டார்கள். சொன்னால் அவர்களுக்குச் சொல்ல நம்மிடமும் விஷயம் உள்ளது. நாம் ஸ்ரீவைணவர்கள் மாத்திரமே. நம்மில் மேல்-கீழ் என்பது இல்லை; இடது - வலது இல்லை; பெரியவன் - சிறியவன் என்ற பேதமும் இல்லை. எல்லோரும் சமம். அதற்கான ஆரம்பமாக நீங்கள் இருப்பதே சரி.”

ஸ்ரீராமாநுஜர் ஆழமான பொருளுடன் பேசிய பேச்சு, திருக்கச்சி நம்பிகளைச் சம்மதிக்கச் செய்தது. அதன்பின் காஞ்சி அருளாளனை தரிசித்து முடித்தவராய் வீடு திரும்பிய ஸ்ரீராமாநுஜர், தஞ்சம்மாளிடம் திருக்கச்சி நம்பிகள் அமுதுண்ண வரும் விஷயத்தைக் கூறிய நொடி அவளிடம் பலத்த அதிர்ச்சி!

“என்ன தஞ்சம்மா... எதற்கு இந்த மௌனம்?”

“அவர் நம்மவரா?”

“அதிலென்ன சந்தேகம்... எம்பெருமானை வழிபடும் வைணவர்கள் அவ்வளவு பேருமே நம்மவர்களே!”

“நீங்கள் சொன்னால் ஆயிற்றா... ஊர் உலகம் ஒப்புக்கொள்ளுமா?”

“ஒப்புக்கொள்ள வைப்பதே இனி என் கடமை.”

“வேண்டாத வேலை. பாகை தலையில்தான் இருக்க வேண்டும். செருப்பு வெளியேதான் கிடக்க வேண்டும்.”

“ஜடத்துக்கான விதிகளை உயிர்த் துடிப்புள்ள மனிதர்களுக்குப் பொருத்திப் பார்க்காதே. நான் வாக்களித்து விட்டேன். அவர் நம் வீட்டில் உண்டே தீர வேண்டும்” எனக் கண்டிப்புடன் பேசிய ஸ்ரீராமாநுஜரின் முகத்தில், அதுவரை அவள் கண்டிராத கோபம்!

**-தொடரும்...**

## அமானவன் காத்திருப்பார்!

வைகுண்டத்தில் துவாரபாலகர்களுக்கு சற்று முன்னால் அமானவன் ஒருவர் நின்றிருப்பார். `மானவன்' என்றால் மனிதன். `அமானவன்' என்றால் தேவபுருஷன்.

நற்குணங்கள் நிறைந்தோர், புண்ணியம் செய்தோர் மரணித்ததும், வைகுண்டம் செல்வார்கள். அங்கே, அவர்களைப் பெருமாளிடம் அழைத்துச் செல்வது இவரது பணி! இவருடன் வருவோரை துவார பாலகர்கள் தடுக்கமாட்டார்கள். அதனால் ஸ்வாமி மணவாள மாமுனிகள், 'அமானவன் கரத்தாலே தீண்டல் கடன்' என்கிறார். அதாவது, `அமானவன் என்னைக் கைப்பிடித்துப் பெருமாளிடம் கொண்டு சேர்க்கவேண்டும்' என்கிறார்.

**- ஏ.எஸ்.கோவிந்தராஜன்.**

14 Jul 2020

# ரங்க ராஜ்ஜியம் - 59



ரங்க ராஜ்ஜியம்

ராமானுஜர் முகத்தில் அதுகாறும் கோபத்தையே கண்டிராத தஞ்சமாம்பாள், அப்போது அவர் கோபித்தது கண்டு அதிர்ந்து போனாள்.

*உணர்ந்த மெய் ஞானியர் யோகந் தோறும் திருவாய் மொழியின்*

*மணம் தரும் இன்னிசை மன்னு மிடந்தோறும் மா மலராள்*

*புணர்ந்த பொன் மார்பன் பொருந்தும் பதி தோறும் புக்கு நிற்கும்*

*குணம் திகழ் கொண்டல் இராமானுசன் எம் குல கொழுந்தே*

*- **இராமநுச நூற்றந்தாதி** - 60*

**ரா**மானுஜர் முகத்தில் அதுகாறும் கோபத்தையே கண்டிராத தஞ்சமாம்பாள், அப்போது அவர் கோபித்தது கண்டு அதிர்ந்து போனாள்.

வால் மிதிபட்ட நாகமானது சீற்றத்துடன் படம் விரித்து, தன்னை மிதித்தவனைக் கூர்மையாகப் பார்ப்பது போல் இருந்தது, அவரின் பார்வை. அவள் வரையில் அது ஒரு சிறு விஷயம். அதற்காக இப்படி ஒரு கோபமா' என்பது அவள் கோணம். ஆனால், அதுதான் ஒரு நல்ல வைணவன் வாழ்வில் பெரு விஷயம்.

ரங்க ராஜ்ஜியம்

ஒரு குருவின் நிழல் சொர்க்கம் என்றால், அவரின் எச்சில் அமுதம் அவரின் திருவடிகளே பரமபதம். திருக்கச்சி நம்பிகள், ஸ்ரீராமானுஜர் வரையில் ஆத்ம குரு. அவரின் பக்தியும் ஞானமும் எல்லையில்லாதவை. அவற்றைப் பிறப்பெனும் சாதி கொண்டு பார்த்து அலட்சியம் செய்வது மகா பாவம் என்கிற கருத்தைக் கொண்டிருந்த ஸ்ரீராமானுஜர், அவர் தன் வீட்டில் விருந்துண்ணும் நிலையில், அவர் சாப்பிட்ட இலையில் மீதமிருக் கும் எச்சிலுடன் தனக்கான உணவை உண்டிட விரும்பினார்.

`நான்' என்னும் செருக்கும், பேத உணர்வும், சகிப்பற்ற தன்மையும் உடைய ஒருவனின் ஞானத்தால் எந்தப் பயனும் இல்லை. அந்த ஞானம் அவனுக்குள் அகங்காரத்தை வளர்த்தால், அது ஞானத்துக்கு இழுக்கு. நல்ல ஞானியிடம் இந்தத் தன்மைகள் கூடாது, இவை நீங்க வேண்டும் என்பதாலேயே 'போனகம் செய்த சேடம்' எனும் குருவின் எச்சிலை உண்ணும் வழக்கம் அந்த நாளில் இருந்தது.

இந்த எச்சில் கிடைத்தற்கரியது. ஸ்ரீராமானுஜர் வரையிலும்கூட அப்படித்தான் ஆயிற்று. ஸ்ரீராமானுஜருடன் சேர்ந்து சென்றால், அவர் தன் எச்சில் இலையில் உண்ணக் கூடும். அது உயர்சாதியில் பிறந்த அவருக்கு அழகல்ல என்று கருதிய திருக்கச்சிநம்பிகள் ஒரு காரியம்

செய்தார். ஸ்ரீராமானுஜர் காஞ்சி வரதன் ஆலயத்தில் திருப்பணியில் மூழ்கியிருக்கையில், அவர் இல்லம் சென்று தஞ்சமாம்பாள் முன் நின்றார்.



தஞ்சமாம்பாள் அவர் அமுது செய்ய வந்து இருப்பதை உணர்ந்து, ஸ்ரீராமானுஜரின் இருப்பைப் பற்றி எல்லாம் எண்ணாது, அவருக்குத் தன் வீட்டு முற்றத்தில் இலை இட்டு ஒருவகை விலகலுடன் உணவளித்தாள்.

திருக்கச்சி நம்பி அதைப் பொருட்படுத்தவில்லை. ஸ்ரீராமானுஜரின் விருப்பத்தை ஈடேற்றும் வேண்டும். அதேநேரம், அவர் தன் பொருட்டு சிறுமைக்கு ஆளாகிவிடக்கூடாது என்று எண்ணியவர், தஞ்சமாம்பாளின் விலகலைப் பொருட்படுத்தவில்லை.

சாப்பிட்டு முடித்ததும், தஞ்சமாம்பாளை வாயார வாழ்த்திவிட்டுப் புறப்பட்டு விட்டார். அதன்பின் இல்லம் ஏகிய ஸ்ரீராமாநுஜர் நடந்ததை அறிந்து பெரிதும் அதிர்ந்தார்.

‘‘நான் இல்லாத நிலையில் அவருக்கு நீ எப்படி அமுது செய்யலாம். எனக்காக காத்திருக் கக் கூடாதா. இல்லை, எனக்குத் தகவல் சொன்னால், ஓடோடி வந்திருப்பேனே’’ என்றார்.

தஞ்சமாம்பாள் இம்மட்டில் ஸ்ரீராமாநுஜரைப் பொருட் படுத்தவே இல்லை.

‘‘உங்கள் குருவுக்கே உங்களோடு சாப்பிட பிரியமில்லை. இப்படி ஒருவருக்கு நான் அன்னம் இட்டதே பெரிது’’ என்று அவள் சொல்லவும், ஸ்ரீராமாநுஜரின் மனம் பெரிதும் வருந்தியது. அந்த வருத்தம் திருக்கச்சிநம்பியிடமும் எதிரொலித்தது.

‘‘சுவாமி! இப்படி எதற்கு நான் அறியாவண்ணம் வந்து சென்றீர். உங்கள் எச்சில் எனக்குக் கிடைத்து விடக்கூடாது என்பதுதான் உங்கள் விருப்பமா’’ என்று கேட்கவும் வைத்தது.

‘‘இளையாழ்வாரே அவ்வாறெல்லாம் தாங்கள் எண்ணிடக் கூடாது. நான் அகவையில் பெரியவனாக இருக்கலாம். அறிவினில் என்னிலும் பெரியவர் தாங்களே’’ என்றார்.

‘‘அப்படி எதை நான் கண்டறிந்து விட்டேன் என்று இந்தப் புகழுரை’’ - ஸ்ரீராமாநுஜர் கேட்டார்.

‘‘இந்த இளம் வயதிலேயே பேதங்களை உதிர்த்துவிட்டு அதை ஒரு தடையாகக் காண தெரிந்திருக்கிறது. குருவின் எச்சம் அமுத நிகர் என்பதும் புரிந்துள்ளது. இனிய இல்வாழ்வு வாழவேண்டிய பிராயத்தில் இந்த இன்பமெல்லாம் நிலையற்றது என்பதும் புரிந்துள்ளது.

எது சாசுவதமானது, இப்பிறப்பு எத்தகையது, இது எதற்கானது, இதில் எதைச் செய்ய வேண்டும் என்பதிலும் தெளிவும் திடமும்

இருக்கின்றனவே... இந்த வயதில் இந்தக் காஞ்சியில் இப்படி ஒருவரை நான் கண்டதே இல்லை.''

திருக்கச்சி நம்பிகளின் விளக்கம் ஸ்ரீராமாநுஜரை கட்டிப்போட்டுவிட்டது. மேலும் கேள்விகளை எழுப்பினால், நிச்சயம் அதற்கேற்ற பதில்களை அவர் அளித்துவிடுவார்; ஓர் இடைவெளி உருவாகிவிடும் என்று அஞ்சினார் ஸ்ரீராமாநுஜர்.

``சுவாமி, தங்களிடம் பேசி வெல்ல முடியாது என்பதை நீங்கள் நிரூபித்துவிட்டீர். நீங்கள் என்ன சொன்னாலும், என் மனம் சமாதானம் அடையாது. அம்மட்டில் தாங்கள் ஏதாவது ஒரு வகையில் என்னைச் சாந்தப் படுத்தியே தீர வேண்டும்'' என்றார்.

``நான் என்ன செய்தால் தங்களுக்குச் சாந்தி கிட்டும்?"

``தாங்கள் அறிந்த வைணவ சித்தாந்தத்தை இலகுவாய் எனக்கு உபதேசிப்பீரா?"

``இவ்வளவு நாட்களாகவே அதைத்தானே செய்து கொண் டிருக்கிறேன்.''

``என்னவோ தெரியவில்லை, சாப்பிட்டு எழுந்த நிலையில் திரும்ப பசிப்பது போன்று ஓர் அவஸ்தை... என்னுள்.''

``ஞானாக்னி எரிந்திடும்போது இப்படி நிகழ்வது இயல்பே.''

``பெரிய வார்த்தைகள் எதற்கு? தாங்கள் வரதனோடு ஆத்ம உரையாடல் நிகழ்த்துபவர். எங்களுக்கெல்லாம் உங்களைப் போன்றோர் குரு என்றால், உங்களுக்கு அந்த வரதனே குரு...''

``நாராயண... நாராயண... என் பித்தம் தங்களுக்கு முதிர்ந்த முக்தியாகத் தெரிகிறது போலும்..."

``பித்தமா... நிச்சயமாகச் சொல்கிறேன்... தங்கள் சித்தம் நாராயணன் சித்தம்.''



‘‘அதை என்னால் மறுக்க இயலாது.’’

‘‘அப்படியானால் என் பொருட்டு அந்த வரதனிடம் கேட்டு என்னைத் தெளிவியுங்களேன்.’’

‘‘இப்போது நீங்கள் தெளிவு இல்லாதவர் என்று யார் சொன்னது?’’

‘‘நாராயணனே பூரணன் என்பதில் தெளிவு உண்டுதான். ஆயினும், அவன் திருவடிகளை இலகுவாக அடைந்துவிட என்ன செய்ய வேண்டும். தினமும் நீர் சுமந்து இந்தத் தேகத்தால் கைங்கர்யம் செய்தால் போதுமா?

இதையும் கடந்து பல காரியங்கள் இருப்பது போலவும் அவற்றைச் செய்து ஸ்ரீவைஷ்ணவம் உலகப் பொதுவாக்கிட வேண்டும் என்றும் பரபரக்கிறது மனது.

எல்லோரும் வைணவர் என்று ஆகிவிட்டால், சாதிகளுக்கு இடம் இல்லாது போய் விடும் அல்லவா? பெரியவர்-சின்னவர், மேல்-கீழ், இடது-வலது, கருப்பு - வெளுப்பு என்கிற பேதங்கள் எல்லாம் நீங்கிவிடுமே.’’

‘‘ஒரு பெரும் கனவு உங்களுக்கு இருப்பது புரிகிறது. உங்கள் விருப்பப்படி அந்த வரதனிடம் இன்று பிரார்த்திப்பேன். தங்களின் பொருட்டு அவன் என்னுள் ஏதும் கருத்துகளைத் தோற்றுவித் தால் அதை அப்படியே வந்து சொல்வேன்.சரிதானே..?’’

``அது போதும்.... அது போதும் எனக்கு!''

திருக்கச்சி நம்பியிடம் நிகழ்த்திய விவாதத்தின் பயனாக, அந்த வரதனும் திருக்கச்சி நம்பிகளுக்கு ஸ்ரீவைஷ்ணவத்தின் சாரமாக ஆறுவித கருத்துக்களைத் தோற்றுவித்தான்.

‘நானே பரம்பொருள்.

எனக்கும் என் படைப்பான உயிர்களுக்கும் வேற்றுமை உண்டு.

என்னை அடைய சரணாகதியே வழி.

உயிர் பிரியும் தருணம் என்னை நினைத்திடும் கட்டாயமில்லை. வாழ்நாளின் புண்ணிய காரியங்கள் போதுமானவை.

உடம்பை உதிர்த்தால் கிட்டுவதே மோட்ச வீடு.

ஆச்சார்ய சம்பந்தம் அனைத்தையும் வேகமாய் அருளிடும்' என்பவையே அவை.

அக்கருத்துக்களை திருக்கச்சி நம்பிகள் சற்று மாற்றி, ``திருமாலே பரம்பொருள். நமக்கும் அவனுக்கும் வேற்றுமை உண்டு. அவனை அடைந்து சரணாகதி புரிதல் வேண்டும். உயிர் பிரிகையில், நாமம் சொல்ல தேவையில்லை. உடம்பின் முடிவு வீடு. ஆச்சார்ய தொடர்பு அனுகூலம் அளித்திடும்'' என்று ஸ்ரீராமானுஜரிடம் கூறி முடித்தார் .

ஸ்ரீராமானுஜரும் பூரித்தார். தனக்காக மட்டுமன்றி எல்லோருக்காகவுமே வரதன் அவ்வாறு கூறியதாகக் கருதினார். அரிய கருத்தை அறிந்த நிலையில், ஆறாம் கருத்தான ஆச்சார்ய அனுக்ரஹம் பொருட்டு திருக்கச்சி நம்பிகளையே தன் இஷ்ட குருவாகக் கொண்டார்.

ஆனால் திருக்கச்சிநம்பிகள், ``திருவரங்கத்து ஆளவந்தாரின் சீடரான பெரியநம்பியே உமக்கு உற்றவர். ஒரு குருபீடத்தின் வழிவந்தவரை இறுக்கமாகப் பற்றிக்கொள்வதே, உம் கனவுகளை நிறைவேற்ற வலு

சேர்க்கும். நான் ஒரு தனி மனிதன். எந்த அமைப்பும் இல்லாதவன்'' என்று கூறி மடைமாற்றம் செய்தார்.

அதற்கேற்ப, திருவரங்கத்தில் ஆளவந்தாரை அடுத்து அவர் இருப்பை நிறைவு செய்திட, அவரே பெரிதும் விரும்பிய ஸ்ரீராமாநுஜர், அதாவது இளையாழ்வாரே ஏற்றவர் என்னும் கருத்து பெரிய அளவில் உருவாகிவிட்டது.

அங்குள்ளோர் பெரிய நம்பியிடம், காஞ்சி சென்று முறையாக இளையாழ்வாரை அழைத்து வரப் பணித்தனர். அதன் நிமித்தம் பெரிய நம்பியும் புறப்பட்டார். தான் இருக்கும்போதே ஸ்ரீராமாநுஜர் எதற்கு என்று அவர் எண்ணவில்லை.

தன்னிடம் இல்லாத பல சிறப்புகள் ஸ்ரீராமாநுஜரிடம் இருந்ததை உணரப் போய்தான் ஆளவந்தார் அவரிடம் குரூபீடத்தை அளிக்கச் சித்தமானார் என்பதைப் புரிந்துகொண்டு, பெரியநம்பியானவர் பெயருக்கேற்ப பெரிதாகவே நடந்துகொள்ளத் தொடங்கினார்.

தன் மனைவியுடன் பெரியநம்பி காஞ்சிக்குப் புறப்பட்ட அதேவேளையில், ஸ்ரீராமாநுஜரும் பெரிய நம்பியை ஆசார்யனாக அடையும் நோக்கில் திருவரங்கம் நோக்கிப் புறப்பட்டார்.

ஒரே நேரத்தில் இரு திசைகளிலிருந்தும் பயணப்பாடு. இடையில் மதுராந்தகம்... இங்கே பெரிய நம்பியும் ஸ்ரீராமாநுஜரும் சந்தித்துக்கொண்டு அகமகிழ்ந்தனர்.

பெரிய நம்பி ஸ்ரீராமாநுஜரை ஆளவந்தாரின் இருப்பை நிறைவு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

``அதற்கு முன்பாக நான் தங்கள் சீடனாகி இதோபதேசம் பெற விரும்புகிறேன்" என்றார் ஸ்ரீராமாநுஜர் என்கிற இளையாழ்வார்.

அதைக் கேட்ட பெரியநம்பி சிலிர்த்தார்!

***-தொடரும்...***

28 Jul 2020

# ரங்க ராஜ்ஜியம் - 60



ரங்க ராஜ்ஜியம்

அவரது விருப்பப்படியே எல்லாம் இனிதே நடந்தபோதிலும், சிறிது கசப்பும் கொண்டதே வாழ்க்கை என்பது போல் ஸ்ரீராமாநுஜரின் பத்தினியான தஞ்சமாம்பாள் மூலம் சலனங்கள் ஏற்படத் தொடங்கின.

*`பூ மன்னு மாது பொருந்திய மார்பன் புகழ் மலிந்த*

*பா மன்னு மாறன் அடிபணிந்து உய்ந்தவன் பல்கலையோர்*

*தாம் மன்ன வந்த இராமாநுசன் சரணாரவிந்தம்*

*நாம் மன்னி வாழ நெஞ்சே சொல்லுவோம் அவன் நாமங்களே!'*

*-இராமானுச நூற்றந்தாதி-1*

எவ்வளவு தன்னடக்கம்... எவ்வளவு தேடல் கள், துளியும் விகல்பமின்றி எல்லோரையும் சம பார்வை பார்க்க முடிவது என்பது ஒரு பெரும்

பக்குவம். அதை ஸ்ரீராமானுஜரிடம் அன்று கண்ட பெரிய நம்பி, ஸ்ரீராமானுஜரை அங்குள்ள ஆலயத்தின் மகிழ மரத்தடிக்கு அழைத்துச் சென்று, தனக்கு வலது புறமாக அமரவைத்தார்.

அதன்பின், தன் வலக் கரத்தை அவர் சென்னி மேலும், இடக் கரத்ததை அவர் நெஞ்சின் மேலும் வைத்து ஸ்பரிச தீட்சை அளிப்பவர் போல் தயாராகி, மனத்துக்குள் குருவும் ஆச்சார்யருமான ஆளவந்தாரின் திருவடிகளை தியானித்துக்கொண்டு, ஸ்ரீராமானுஜருக்கு 'ஸ்ரீமன் நாராயண சரணம்... சரணம் பிரபத்யே ஸ்ரீமதே நாராயணாய நம' என்ற மந்திரத்தை உபதேசித்து, பின் பஞ்ச சம்ஸ்காரம் எனப்படும்... தோள் இரண்டில் சங்கு சக்கர முத்திரைகளைப் பொறித்து, பின் பன்னிருத் திருமண் சாற்றி, புதிதாய் ஒரு தாஸ்ய நாமம் சூட்டும் சாக்கில், ஸ்ரீராமானுஜர் என்கிற பெயரைச் சூட்டி திருமந்திர உபதேசம் செய்து, திருவாராதனம் செய்யும் முறைகளையும் உபதேசித்து முடித்தார்.

ஆக மொத்தத்தில், ஸ்ரீபெரும்புதூரில் இளையாழ்வானாக அவதரித்தவர், மதுராந் தகத்தில் குரு மூலமாக தாஸ்ய நாமமாய் ஸ்ரீராமானுஜன் என்றாகிட, இந்த உலகம் ஸ்ரீராமானுஜரை அடையப் பெற்றது இங்குதான்.

இத்தனையும் செய்து வைத்த பெரியநம்பி, தான் ஆளவந்தாரின் விருப்பத்தை நிறைவேற்றும் ஒரு கருவியே. உண்மையில் ஆளவந்தாரே உங்களின் 'பராபர குரு' என்றும் கூறி பணிவில் உயர்ந்தார்.

பெரியநம்பியின் உயர்ந்த உள்ளத்தையும் தனக்குக் குருவாக இருந்து உபதேசித்ததையும் உத்தேசித்து, பெரிய நம்பியையும் அவரின் பத்தினியையும் காஞ்சியில் உள்ள தன் அகத்துக்கு அழைத்து, தம் இல்லத்திலேயே எழுந்தருளச் செய்து பலவிதமான பிரபந்தங்களையும் ஆளவந்தாரின் பிரத்தியேக சமயக் கருத்துகளையும் அறிந்து கொள்ள முற்பட்டார் ஸ்ரீராமானுஜர்.

அவரது விருப்பப்படியே எல்லாம் இனிதே நடந்தபோதிலும், சிறிது கசப்பும் கொண்டதே வாழ்க்கை என்பது போல் ஸ்ரீராமானுஜரின் பத்தினியான தஞ்சமாம்பாள் மூலம் சலனங்கள் ஏற்படத் தொடங்கின.

ஓர் அதிதி பிச்சை கேட்டு வந்து வாசலில் நின்ற நிலையில், ‘தம் அகத்தில் தற்போது மணி அரிசிகூட இல்லை நீ வேறு இடம் பார்’ என்று தஞ்சமாம்பாள் கூறியது, ஸ்ரீராமாநுஜரின் காதுகளிலும் விழுந்தது. பதைத்துப் போய் உள்ளே அரிசிப் பானையைப் பார்த்தபோது அது நிரம்பி இருந்தது.



‘`தஞ்சமாம்பாள்! பானை நிறைய அரிசி இருக்க, எதற்காக மணி அரிசிகூட இல்லை என்றாய். இது பொய் மட்டுமல்ல, கருணையற்ற செயலும் கூட’’ என்று கடிந்துகொண்டார்.

ஆனால், தஞ்சமாம்பாள் அதை சட்டையே செய்யவில்லை. இன்னொரு சந்தர்ப்பத்தில் கிணற்றடியில் பெரியநம்பியின் பத்தினிக்கும் தஞ்சமாம்பாளுக்கு இடையில் உரசல் ஏற்பட்டுவிட்டது. பெரியநம்பியின் பத்தினி நீரைக் குடத்தில் நிரப்பி, தன் பிரத்யேக தேவையின் பொருட்டு எடுத்துச் செல்கையில், அதன் ஒரு திவலை தழும்பி, தஞ்சமாம்பாள் குடத்து நீருடன் கலந்துவிட்டது. உடனேயே அவ்வளவு நீரையும் கீழே கொட்டி விட்டு, தஞ்சமாம்பாள் ஜாடையாக பெரியநம்பியின் பத்தினியை மனம் வருந்தும்விதமாய் திட்டி விட்டாள்.

அதன் எதிரொலியாக பெரியநம்பி மனைவியுடன் அந்த நொடியே காஞ்சியை விட்டுப் புறப்பட்டு விட்டார். இதை அறிந்த ஸ்ரீராமாநுஜர் பெரிதும் வருந்தினார். அந்த வருத்தத்தின் முடிவு, `போதும், இல்வாழ்வு

இனி வேண்டாம். முழுமையான இறை வாழ்வே...' என்று எண்ணியவராக துறவு கொள்ள முடிவு செய்தார்.

அந்த முடிவினை தஞ்சமாம்பாளிடம் தெரிவித் தார். ``இனி, உனக்கும் எனக்கும் யாதொரு பந்தமும் இல்லை. நீ உன் பிறந்தகம் சென்று உன் எண்ணப்படி வாழ்வாயாக'' என்று தன் வசம் உள்ள பொருள்களை எல்லாம் அவளுக்கே அளித்துவிட்டு, நேரே காஞ்சி பேரருளாளன் சந்நிதிக்குச் சென்று அவன் முன் நின்றார்.

கண்களில் நீர் பெருக்கெடுத்த நிலையில், ``பேரருளாளா, என்னால் இனி கிரகஸ்தனாகத் திகழ்ந்திட முடியாது. அதற்கான விதிப்பாடும் எனக்கில்லை என்பதை உணர்ந்துகொண்டேன். இனி, நான் முற்றும் துறந்து உன்னை அடைய பார்க்கும் ஒரு துறவி. என்னை ஆசீர்வதிப்பீராக'' என்று வேண்டியவர், நேராக காஞ்சி ஆலய திருக் குளமான 'அனந்தசரஸ்' வந்து மூழ்கி எழுந்தார்.

பின் காவி தரித்து, திரிதண்டமும் பிடித்து துறவியானார். அவ்வேளை அவரைக் கண்ட ஆலய ஸ்தானிகர்கள், ``ராமாநுஜரே... ராமாநுஜ முனி என்றாகிவிட்டீரே..." என்று அவருக்குப் புதிய நாமம் சாற்றினர். அப்போது, `முனி மட்டுமன்று; இவர் இனி முனிகளுக்கெல்லாம் முனி... அதாவது, யதிராசர்' என்றொரு குரல் உள்ளிருந்து அசரீரியாக ஒலித்து அடங்கியது. ஸ்ரீராமாநுஜர், ராமாநுஜ முனியான இந்தத் தருணம், வரலாற்றின்படி கி.பி. 1049-ம் ஆண்டு ஆகும். அப்போது வயது 32.

அந்த வயதில் துறவியாகிய ஸ்ரீராமாநுஜரை, திருக்கச்சிநம்பி உள்ளிட்ட பெருமக்கள் பல்லக்கில் ஏற்றி, காஞ்சி மாநகர மடத்துக்கு அழைத்துச் சென்றனர். திருக்கச்சி நம்பிகள் இந்தத் தருணத்தில், ``இவ்வளவு சீக்கிரம் நீங்கள் துறவு மேற்கொள்வீர்கள் என்று நான் நினைக்கவே இல்லை'' என்றபோது, ``எல்லாம் அவன் செயல்'' என்ற ஸ்ரீராமாநுஜர் ``இனி, என் வாழ்நாளில் ஒவ்வொரு நாளும் ஸ்ரீவைஷ்ணவம் வாழ்ந்திட நான் வாழப்போகும் நாள்கள் ஆகும்'' என்றார்.

ஸ்ரீராமாநுஜரின் துறவுச் செய்தி காஞ்சியில் வேகமாய்ப் பரவியதோடு. அது பலரை ஆனந்த அதிர்வுக்கும் உள்ளாக்கியது.

இவ்வேளையில் காஞ்சிப் பேரருளாளன் ஸ்ரீராமாநுஜர் வரையில் ஒரு பெரும் காரியம் செய்தான். கூரேசன் என்கிற தன் பக்தனின் மனத்தில் ஸ்ரீராமாநுஜரை ஆச்சார்யனாகக் கொள்ள பணித்தான். `ஒரு சீடன் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு நீ இலக்கணம் வகுப்பாயாக' என்று அவர் கனவில் உரைத்தவன், கூரேசனை ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி ஓடச் செய்தான்.

அங்கே, ஸ்ரீராமாநுஜரின் சகோதரியின் பிள்ளையான `தாசரி' என்கிற முதலியாண்டான், கையில் விசிறியோடு ஸ்ரீராமாநுஜரின் முன் நிற்கக் கண்ட கூரேசன், ஸ்ரீராமாநுஜரின் காலடி பணிந்து, ``நான் இனி தங்களைப் பிரியாது திருத்தொண்டு ஆற்றிட அருள வேண்டும்" என்று வேண்டி நின்றார். அப்போது அவருக்கும் சரி, முதலியாண்டானுக்கும் சரி... பின்னாளில் அவர்கள் இருவரையுமே ஸ்ரீராமாநுஜரின் தண்டும் பவித்திரமும் என்று காலம் அழைக்கப் போவது தெரியாது.

இக் காலகட்டத்தில், சில நெருடல் களையும் ஸ்ரீராமாநுஜர் சந்திக்க நேர்ந்தது. பல்லவ சாம்ராஜ்ஜியத்தில் அதன் தலைநகரான காஞ்சியில், ஸ்ரீவைஷ்ணவம் போலவே சைவ சமயமும், பிற சமயங்களும் காலூன்ற பார்த்தன. அவற்றில் சைவம் வைஷ்ணவத்தோடு ஒரு பெரும் போட்டி போடும் போலத் தோன்றியது.

ஸ்ரீ ராமாநுஜரின் சிற்றன்னையின் மகனான கோவிந்தன் சைவ சார்பு கொண்டு அத்துவைத சித்தாந்தியாகத் திகழ்ந்தார். ஸ்ரீராமாநுஜர் அம்மட்டில் கோவிந்தனை ஸ்ரீவைஷ்ணவனாக் கும் ஒரு கடப்பாடு இருப்பதை உணர்ந்தார்.

அம்மட்டில் `விசிஷ்டாத்வைத சித்தாந்தம் பற்றி கோவிந்தன் கசடற அறிந்திடின் மாற்றம் தானாக வரும்' என்று நம்பினார். சிலர் இம்மட்டில் கோவிந்தனை இகழவும், ஸ்ரீராமாநுஜர் அவர்களைத் திருத்தலானார்.

``ஆறறிவுள்ள ஒரு மானிடன், தன் பகுத்தறிவினால் தான் யாரென்று அறிவதோடு, இப்பிறப் பினின்று விடுபடும் வழி யாது எனவும் சிந்தித்து அவ்வழியில் நடத்தல் வேண்டும். அதற்கே ஆறாம் அறிவு

அருளப்பட்டது. இந்த அறிவோடு தன்னிலும் மேலான இறையை மறுத்து நாத்திகனாகத் திகழ்வதே ஆபத்தாகும்.



அவ்வாறன்றி, ஏதேனும் ஓர் இறைவழி செல்வதில் குறையோ பிழையோ இல்லை. அவற்றில் மேலினும் மேலானதை உணர்வதும் அதன்படி நடப்பதும்கூட அவன் செயலே.

கோவிந்தன் நம் கொள்கைகளை அறிந்தும் புரிந்தும் வந்தால், ஏற்று வழி நடத்துவோம். இல்லையாயின், அதுவும் அவன் சித்தமே என்று நாம் நம் கடமையைச் செய்திடுவோம்" என்றார்.

பின்னாளில் அந்தக் கோவிந்தன் ஸ்ரீ ராமாநுஜரின் தாய்மாமனான திருமலைநம்பி மூலமாய் ஸ்ரீராமாநுஜரிடம் அழைத்து வரப்பட்டு உபதேசிக்கப் பெற்று, கோவிந்த பட்டர் என்கிற மதிப்பிற்குரிய ஸ்தானத்தையும் அடைந்தான்.

கூரேசர், முதலியாண்டான், கோவிந்த பட்டர் என்று ஸ்ரீராமாநுஜரின் தொண்டர் கூட்டம் விரிவடைந்துகொண்டே போயிற்று. இதில் உச்சபட்சம்- தொடக்கத்தில், ஸ்ரீராமாநுஜரை வெறுத்து, கொல்லவும் முயன்ற யாதவப்பிரகாசரே மனம் மாறி, விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை ஏற்றதுதான்.

ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தப்படி குரு உபதேசத்தின்போது யாதவப் பிரகாசரின் பழைய நாமம் விளக்கப் பட்டு, கோவிந்த ஜீயர் என்கிற புதிய பெயரும் வழங்கப்படலாயிற்று.

யாதவப்பிரகாசரே மாறிவிட்டது பல்லவ மண்டலத்தையே உலுக்கியது. பேரருளா ளன் ஆலயத்தில் பக்தர்களின் கூட்டம் பொங்கி வழியலாயிற்று. ஸ்ரீராமாநுஜரின் திருச்செயல் களும், வழிநடத்துதலும் திருவரங்கத்தையும் எட்டிற்று. ஸ்ரீராமாநுஜரை அழைத்து வரச் சென்ற பெரிய நம்பி, ஸ்ரீராமாநுஜரை ஒரு சந்நியாசியாக்கி விட்டு தனியே திரும்பி விட்டமையால், இம்முறை திருவரங்கப் பெருமாளரையர் என்னும் உயர்ந்த இசை அறிஞரை காஞ்சிக்கு அனுப்பினர்.

எப்பாடுபட்டாவது ஸ்ரீராமாநுஜரை காஞ்சியிலிருந்து திருவரங்கத்துக்கு அழைத்து வந்துவிட வேண்டுமென்று அவருக்கு அன்புக் கட்டளையிட்டிருந்தனர். அதனைத் திருவரங்கப் பெருமாளரையர் காஞ்சிப் பேரருளாளன் துணையோடு சாதித்தார் .

பேரருளாளன் சந்நிதியிலேயே ஸ்ரீராமாநுஜர் திருவரங்கம் சென்றிட அசரீரி ஒலித்தது. காஞ்சியும் ஸ்ரீராமாநுஜருக்குப் பிரியாவிடை

கொடுத்தது. திருவரங்கம் வந்த ஸ்ரீ ராமாநுஜரைத் திருவரங்கம் திரண்டு நின்று வரவேற்றது. அந்த நாள் திருவரங்க வரலாற்றில் ஒரு பொன்னாள்!

திருவரங்கமே, இளையாழ்வாராய் பிறந்து ஸ்ரீராமாநுஜர் என்றானவரை `உடையவர்' என்று மாற்றியது. அரங்கனின் அருளுக்கும் ஐஸ்வர்யத்துக்கும் உடையவர் என்றும் ஆக்கியது. தன்னை உடையவராய் ஆக்கிய அரங்கனின் ஆலயமிசை ஸ்ரீராமாநுஜர் அநேக சீர்திருத்தங்களை மேற்கொள்ளலானார்.

அவை அசாதாரணமானவை!

பெரியவர், சிறியவர் என்கிற பாகுபாடுகள் இல்லாது, ஆலயப் பணி எதுவாயினும் அது உயர் பணியே என்று கருதும் விதமாய்ப் பணிக்கு உரியவர்களை நியமித்தார்.

துளசி பறிப்பதாயினும், தூப தீபம் காட்டுவ தாயினும், பல்லக்குச் சுமப்பதாயினும் பக்தியும் ஈடுபாடும் பிரதானம். ஒருபுறம் சீர்திருத்தச் செயல்கள், மறுபுறத்தில் ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தை ஏந்திப் பிடித்தல். நடுவே தன்னை ஒரு மாணவனாகக் கருதிக்கொண்டு கற்க வேண்டியவற்றைக் கற்கவும் செய்தார்.

இம்மட்டில் பெரியநம்பி முதல் திருக்கோட்டி யூர் நம்பி, திருமலையாண்டான், பெரிய திருமலை நம்பி, திருவரங்கப் பெருமாளரையர் ஆகிய ஆளவந்தாரின் சீடர்கள், ஆளவந்தாரிடம் தாங்கள் கற்றறிந்தவற்றை, அப்படியே ஸ்ரீராமாநுஜருக்குக் கடத்தினர்.

பெரிய நம்பி ஆழ்வார்களின் அருளிச் செயல்களை அளித்தார். திருமலையாண்டான் `திருவாய்மொழி' வியாக்கியானம் அளித்தார். திருவரங்கப் பெருமாளரையர் சரமோபாயத்தை உபதேசித்தார். திருமலைநம்பி ஸ்ரீராமாயணத்தை அருளிச் செய்தார்.

இவர்களில் திருக்கோட்டியூர் நம்பியின் மூலம் பெறப்பட்ட ரகஸ்யார்த்த உபதேசமும், அதனையொட்டி நிகழ்ந்த சம்பவங்களும் ஸ்ரீராமாநுஜர் வாழ்வில் ஒரு தனி வரலாறாகவே ஆகிவிட்டன எனலாம்.

திருக்கோட்டியூர் பாண்டிய மண்டலத்துக்கும் சேர நாட்டுக்கும் இடையில் இருக்கின்ற திருத்தலமாகும். இங்கே எம்பெருமான் சௌமிய நாராயணனாகச் சேவை சாதிக்கின்றார். ஹிரண்ய கசிபுவை அழிக்கும் பொருட்டு நரசிம்ம அவதாரம் எடுக்குமுன், எம்பெருமான் தேவர்களுடன் கூடி ஆலோசித்த இடம் இது.

தேவர்களின் துன்பங்களை நீக்கிட நரசிம்மாவதாரம் எடுத்ததோடு அவர்களின் துன்பங்களைப் போக்கியதால், இத்திருத்தலம் திருக்கோட்டியூர் என்று அழைக்கப்பட்டது.

இங்குதான் இந்திரன் பூஜித்த சௌமிய நாராயணர் விக்கிரகம் உற்சவ மூர்த்தியாகவும் உள்ளது. மேலும் இங்கே நின்ற, நடந்த, இருந்த, கிடந்த கோலமாகவும் எம்பெருமான் காட்சி தருகிறார். நம்பி அவர்கள், இத்தலத்தில் இருந்தபடி ஆசார்யனாகத் தொண்டாற்றி வந்தார்.

ஆச்சார்யன் இருக்குமிடம் தேடிச் சென்று உபதேசம் பெறுவதே நல்ல சீடனுக்கு அழகு. ஸ்ரீராமாநுஜர் தானொரு ஆச்சார்யனாகிவிட்ட போதிலும், தன்னை ஒரு மாணாக்கனாகவே கருதியதாலும், `கற்றது கையளவு, கல்லாதது உலகளவு' என்று உணர்ந்திருந்ததாலும் திருக்கோட்டியூருக்கு நடந்தே சென்று உபதேசம் பெற விரும்பினார்.

அப்படி அவர் செல்கையில் கூரேசரும் முதலியாண்டனும் குருவுக்குத் துணையாகவும் உதவியாகவும் உடன் வந்தனர்.

ஆச்சார்ய நம்பிகள் இல்லத்தை அடைந்து காத்திருந்து பின் நம்பியைக் காண முற்பட்டார் ஸ்ரீராமாநுஜர். நம்பியும், `வந்திருப்பது யார்?' என்று அறிய விரும்பிக் கேட்டார்.

ஸ்ரீராமாநுஜரும் ``நான் ராமாநுஜன் திருவரங்கத்தினின்றும் உபதேசம் பெற்றிட வந்துள்ளேன்'' என்றார்.

அடுத்த சில நொடிகளிலேயே ``அப்புறம் பார்க்கலாம்'' என்று கூறிவிட்டார் ஆச்சார்ய நம்பி. இப்படி ஒரு முறை அல்ல, பல முறை சொன்னார். இதை ஒரு பேரளவுக்கு உட்படுத்த விரும்பி 18 முறை என்று குறிப்பிடுவது ஒரு காவிய அழகு!

`18' எனும் எண், எண்களின் முதல் `பெருகிய வடிவம்'. ஒன்று முதல் ஒன்பது வரையிலான எண்களின் முதல் பெரிய வடிவம் இது. இடையில் பூஜ்ஜியம் இருந்து, எண்களின் பெருக்கத்துக்கு ஒரு வழியும் உருவானது.

இந்தப் பூஜ்ஜியம் மதிப்பற்றது போல் தெரியும். இதன் அருகில் ஒரு எண் வந்து சேர்ந்திட, அந்த எண் அதன் பதின்மத்துக்கு உயர்ந்திடும். இந்தப் பூஜ்ஜியத்தின் எப்பக்கம் அது நிற்கிறது என்பதைப் பொறுத்து அது பெருகும்; அதேபோல பன்மடங்கு குறுகவும் செய்யும். எனவே அது பதினெட்டை ஒரு முழுமுதல் குறியீட்டு எண்ணாகச் சான்றோர் கருதினர்.

18 புராணம், 18 நாள் பாரதப்போர் போன்றவை ஒரு பூரணத்துக்கானவையாகவும் விளங்கின. எனவேதான் ஸ்ரீராமானுஜர் உபதேசம் பெற செய்த முயற்சியும் அதன் மேலான விளைவும் 18 முறை என்கிற ஓர் அளவுக்கு ஆட்பட்டன. இதில் ஸ்ரீராமானுஜர் பதினெட்டாவது முறை வந்தபோது ஆச்சார்ய நம்பியிடம் உபதேசம் பெற்றார்.

இந்த முறை ``யார் வந்திருப்பது?'' எனும் நம்பியின் கேள்விக்கு, `நான் ராமானுஜன் வந்திருக்கிறேன்' என்று கூறாமல், `அடியேன் ராமானுஜன் வந்திருக்கிறேன்' என்று ஸ்ரீராமானுஜர் கூறவும் உபதேசமும் கிட்டியது.

ஒரு மனிதனுக்குத் தன் வரையில், 'நான் யார்?' என்பதே பிரதான கேள்வி. அதற்கான தேடலே வாழ்க்கை! இந்த `நான்' பெரிதும் அகந்தைக்குரிய தொனிப்பையே கொண்டிருக் கிறது. அகந்தை உள்ளவரை ஞானம் ஸித்திப்பது சாத்தியமில்லை.

இம்மட்டில், அன்றாட வாழ்க்கைப் பாடுகளுக்குள் ஒருவர் `நான்' என்கிற சொல்லை பயன்படுத்துவதற்கும் ஒரு ஞானாசிரியன் பயன்படுத்துவதற்கும் வேற்றுமை உள்ளது. எவராயினும் இந்த `நான்' என்கிற பதம் ஆபத்தானது என்பதை உலகம் உணரவேண்டும் என்று ஆச்சார்ய நம்பி கருதினார்.

அதற்குக் கருவியாக ஸ்ரீராமாநுஜரும் பயன்பட்டார். இருவர் மூலமாகவும் ஒரு அழியாப் பாடத்தை உலகம் கற்றது. இப்பாடங்களுக்கெல்லாம் பாடம் ஒன்று இருந்தது. அப்பாடமும் திருக்கோட்டி யூரில்தான் கற்பிக்கப்பட்டது.

ரகஸ்யார்த்த உபதேசத்தைச் செய்த திருக் கோட்டியூர் ஆச்சார்ய நம்பி, ``இதை... குறிப்பாக, மூலமந்திரமான `ஓம் நமோ நாராயணாய' என்கிற அஷ்டாட்சரத்தை, நீ பிறருக்கு உபதேசிக் கக் கூடாது'' என்று அதன் விதியைக் கூறினார்.

அதைக் கேட்டு, அதிர்ந்தார் ஸ்ரீ ராமாநுஜர்!

``ஏன் ஸ்வாமி அப்படி?''

``அது அப்படித்தான். உயர்வான ரகஸ்யார்த்த உபதேசம் என்பது பெரும் முயற்சி உடையோருக் கும் பக்தி உடையோருக்கும் குரு மூலமாகவே உபதேசிக்கப்பட வேண்டும். அது, பிரசாதம் போல அனைவருக்கும் பொதுவானதல்ல...'' என்றார் ஆசார்ய நம்பி. ஸ்ரீராமாநுஜரின் கேள்விகள் தொடர்ந்தன!

*-தொடரும்...*

**`கந்தன் காலடியைவணங்கினால்...'**

**த**லையெழுத்தை மாற்றிட எவராலும் முடியாது என்பார்கள். ஆனால், யாராலும் செய்ய முடியாத இந்தச் செயலை ஒருவரால் செய்ய முடியுமாம். அதுவும் எப்படி? தன் திருப்பாதங்களை வைப்பதன் மூலமே அதை எளிதாகச் செய்து விடுவாராம் அவர். யார் அவர்?



திருச்செந்தூர் ஆண்டவர்தான். பிரம்மனின் எழுத்தை மாற்றிடும், அழிக்கும் வல்லமை மிக்கவர் முருகப் பெருமான் என்கிறார் அருணகிரிநாதர். முருகன் என்றாலே அழகு, அந்த அழகை மேலும் போற்றும் விதமாக அவர் அருளிய கந்தர் அலங்காரப் பாடல் ஒன்றில்தான், 'கந்தனின் கால்பட்டு அழிந்தது என் தலைமேல் அயன் கையெழுத்தே?' என்று பாடியுள்ளார்! நாமும் செந்தூர் கந்தனின் காலடியைப் போற்றித் தொழுவோம்.

- ***ஜெயலெட்சுமி கோபாலன், சென்னை-64***

11 Aug 2020

# ரங்க ராஜ்ஜியம் - 61



ஸ்ரீராமானுஜர்

ரகஸ்யார்த்த உபதேசத்தைச் செய்த திருக்கோட்டியூர் ஆசார்ய நம்பி, ``மூலமந்திரமான 'ஓம் நமோ நாராயணாய' என்கிற அஷ்டாட்சரத்தை நீ பிறருக்கு உபதேசிக்கக் கூடாது'' என்று கூறி, அதன் விதியை விளக்கினார்.

***`காரேய் கருணை இராமாநுச! இக்கடலிடத்தில்***

***ஆரேயறிபவர் நின்னருளின் தன்மை? அல்லலுக்கு***

***நேரே உறைவிடம் நான் வந்து நீ என்னையுய்த்த பின் -உன்***

***சீரே உயிர்க்குயிராய் அடியேற்கு இன்று தித்திக்குமே'***

- இராமநுச நூற்றந்தாதி

ரகஸ்யார்த்த உபதேசத்தைச் செய்த திருக்கோட்டியூர் ஆசார்ய நம்பி, ``மூலமந்திரமான 'ஓம் நமோ நாராயணாய' என்கிற அஷ்டாட்சரத்தை நீ பிறருக்கு உபதேசிக்கக் கூடாது'' என்று கூறி, அதன் விதியை விளக்கினார்.

அதைக் கேட்டு அதிர்ந்தார் ஸ்ரீராமாநுஜர்.

``ஏன் ஸ்வாமி அப்படி?''

``அது அப்படித்தான். உயர்வான ரகஸ்யார்த்தத்தை உபதேசம் என்பது, பெரும் முயற்சியுடையோருக்கும் பக்தி உடையோருக்கும் குரு மூலமாகவே உபதேசிக்கப்பட வேண்டும். அது பிரசாதம் போன்று அனைவருக்கும் பொதுவானதல்ல.''

``அப்படியாயின் சாமான்யருக்கும் சம்சாரத்தில் அகப்பட்டுக் கிடப் போருக்கும் எம்பெருமான் கிட்டாதவன் என்றாகிவிடுமே?''

``பொதுவென்றால்... மதிப்பை அறிவது எங்ஙனம்?''

இப்படி ஸ்ரீராமாநுஜருக்கும் ஆசார்ய நம்பிக்கும் இடையே சிறிது தர்க்கமும்நிகழ்ந்தது.

ஸ்ரீராமாநுஜரின் உள்ளமோ தன்னுடன் வந்திருந்த கூரேசருக்கும் முதலியாண்டானுக்கும் சேர்த்தே சிந்தித்தது.

`தனக்கே இந்தப் பாடு எனில், இவர்கள் உபதேசம் பெறுவது எக்காலம்... இவர்களைப் போல பல்லாயிரவர் உள்ளனரே... அவர்கள் உபதேசம் பெறுவது எக்காலம்...'

- இந்தக் கேள்வியில் அகப்பட்ட ஸ்ரீராமாநுஜர்,

தான்... தனது... தன்னுடையது... என்பவற்றை மறந்தவராக, துறந்தவராக ஆசார்ய நம்பியிடம், ``ஒருவேளை, எல்லோருக்கும் ஒருவர் உபதேசித் தால் என்னவாகும்?'' என்று கேட்டார்.

அப்படியொரு கேள்வியை நம்பி எதிர்பார்க்க வில்லை.

``அது குரு துரோகம். அதன் காரணமாக உபதேசித்தவருக்கு நரகம் சம்பவிக்கும்....'' என்றார். உள்ளபடியே இந்தப் பதில் ஸ்ரீராமாநுஜருக்கு அதிர்வைத் தரவில்லை. அதற்குக் காரணமும் இருந்தது.



ஸ்ரீராமாநுஜர்

அடுத்தச் சில மணி நேரத்தில் கூரேசர், முதலியாண்டான் ஆகியோருடன், 'வாரும்

ஜகத்தீரே' என்று திருக்கோட்டியூர் வாழ்

வைணவர்கள் அனைவரையும் அழைத்த தோடு, மற்றுமுள்ள மார்க்கத்தவருக்கும் சேர்த்தே தனக்கு ஆசார்ய நம்பி உபதேசித்த ரகஸ்யார்த்தத்தை உபதேசித்தார் ஸ்ரீராமாநுஜர்.

அத்துடன், அஷ்டாட்சர மந்திரமான 'ஓம் நமோ நாராயணாய' என்ற 'மோட்சக் கதவின் சாவி' போன்ற மந்திரத்தையும் திருக்கோட்டியூர்

கோயிலின் அஷ்டாங்க விமானத்தின் ஒரு பகுதியில் நின்றபடி உபதேசித்து முடித்தார்.

அந்த நொடி ரகஸ்யார்த்தப் பூட்டு உடைக்கப் பட்டு, அது பொதுவானது. அஷ்டாட்சரம் உலகப் பொதுவாகி எல்லோருக்கும் என்றானது. ஸ்ரீராமாநுஜரை மானசீக ஆசார்யராக வரித்துக்கொண்டு ஒருவர் 'ஓம் நமோ நாராயணாய' என்றாலே போதும்; எம்பெருமானின் திருவடியில் ஓர் இடம் நிச்சயம்!

ஸ்ரீராமாநுஜர் தன்னையே பணயம் வைத்துச் செய்த அந்த அற்புதச் செயல், அழிக்க இயலாத வரலாறு. எப்போதுமே அரசனின் வீரம், இல்லாவிட்டால் படையெடுப்பு என்று ஆசாபாசம் உள்ள விஷயங்களே வரலாறாகும். ஆனால் முதன்முதலாய், பற்றறுத்த சந்நியாசி ஒருவரின் விதி மீறல் அன்று வரலாறாகியது.

கூரேசரும் முதலியாண்டானும் ஒருபுறம் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர். மறுபுறத்திலோ, தங்களின் குரு தன்னையே பணயம் வைத்து செய்த செயலின் பொருட்டு நரகம் ஸித்திக்குமே... என்று அகக்கண்ணீரை துக்கக் கண்ணீராகவும் ஆக்கினர்.

ஸ்ரீராமாநுஜரின் இந்தச் செயல், அன்று திருக்கோட்டியூரே விவாதிக்கும் விவாதப் பொருள் ஆனது. குறிப்பாக, ஆச்சார்ய நம்பி இதனால் வெகுண்டுபோயிருந்தார். அவர் துளிகூட எதிர்பார்த்திராத செயல் இது. தன் வசம் பேழை ரத்தினம் போல் இருந்ததை, இப்படியா ஒரு கோபுரத்தின் மேல் நின்று போட்டுடைப்பது என்ற சிந்தனை மேலோங்க, அவர் மனம் நிலை கொள்ளவில்லை.

அருகிலிருந்த சீடர்கள் சிலரோ இதுதான் தருணம் என்பது போல, ``இவருக்கு நீங்கள் மனம் இரங்கியது தவறு. உங்கள் வார்த்தையைத் துளியும் மதிக்காது காலில் போட்டு மிதித்துவிட்டாரே...'' என்று பலவாறு சொல்லி தூபமிட, ஆச்சார்ய நம்பியின் முகம் சிவந்தது.

அப்போது அங்கே எவரும் சற்றும் எதிர்பாராத விதமாக வந்து சேர்ந்தார் ஸ்ரீராமாநுஜர். அவருடன் கூரேசரும் முதலியாண்டானும் வந்தனர்.

``என்ன தைரியம்... குரு துரோகம் செய்துவிட்டுத் துளியும் அச்சமின்றி குருவையே காண வருவதா?'' என்பது போல் சிலர் எண்ணம்கொள்ள, ஆச்சர்ய நம்பி கோபத்தில் முகத்தைத் திருப்பிக்கொண்டார்.

ஸ்ரீராமாநுஜர் அந்தக் கோபத்தை எதிர்பார்த்தே வந்திருந்தார். ஆகவே, கனிந்த குரலில் பேசத் தொடங்கினார்.

``ஸ்வாமி! முதலில், தாங்கள் இந்தப் பாவியை மன்னிக்க வேண்டும்...'' என்று கூறவும் ஆச்சார்ய நம்பி, ஸ்ரீராமாநுஜரை வெறித்துப் பார்த்தார்.

``தங்கள் மனம் இப்போது என்ன நினைக்கிறது என்பது எனக்கு நன்கு புரிகிறது. தங்களின் கட்டளையை மீறியவனாகி விட்டேன். நான் நரகம் செல்வது உறுதி.

எவ்வளவு புண்ணியங்களை ஒருவர் செய்திருந்தாலும், குருவின் கோபத்துக்கும் சாபத்துக்கும் ஆளாகிவிட்டால், அவருக்கு விமோசனமே இல்லை என்பதை நன்கு அறிவேன். இப்போது நான் மன்னிக்க வேண்டுவதுகூட, தங்களை வருத்தப்பட செய்துவிட்டதற்கே அன்றி, நரகம் செல்லாதிருக்க அல்ல...''

ஸ்ரீராமாநுஜரின் இந்த விளக்கம் ஆச்சார்ய நம்பியை பெரிதும் வியப்பில் ஆழ்த்தியது.

``ராமாநுஜா! என்ன சொல்கிறாய் நீ? நரகம் போகப் போவது உறுதி என்று தெரிந்தும் எப்படிச் செய்தாய் இப்படி ஒரு காரியத்தை...'' என்று பதில் கேள்வி கேட்டார்.

``ஸ்வாமி! நான் ஒருவன் நரகம் சென்றபோதிலும், பல்லாயிரவர் எம்பெருமான் திருவடி நிழலில் இளைப்பாறுவரே... அதைச் சிந்தித்தேன்... அதிலும் `நான்' எனும் சுயநலம் மிக்க சொல்லுக்குத்

தங்களிடம் பாடம் கற்ற நிலையில், இதுநாள்வரை `நான்... நான்...' என்று சிந்தித்துப் பழகிவிட்டமைக்குப் பரிகாரம் தேடவும் எண்ணினேன். எல்லாம் சேர்ந்தே என்னைக் கோபுரத்தில் ஏறச்செய்து உபதேசிக்கவும் செய்தன.

இனி, எம்பெருமானை ஒரு சாமான்யனும் அடைய இயலும். வைராக்கியம் மிக்கவர்களை அவர்களின் அந்த வைராக்கியமே காப்பாற்றிக் கரைசேர்த்துவிடும். ஆனால் சாமானியர்களுக்கு யார் இருக்கிறார்கள்?''

ஸ்ரீராமாநுஜர் இப்படிக் கேட்டதும் ஆச்சார்ய நம்பியின் திருமுகம் பெரும் திகைப்புக்கும் சிந்தனைக்கும் ஆட்பட்டது. நெடுநேரம் பேச்சே வரவில்லை; ஸ்ரீராமாநுஜரையே பார்த்த வண்ணம் இருந்தார்.

``ஸ்வாமி! தங்களின் கோபம் இன்னும் தீரவில்லையா. என்னைச் செதுக்கிய பெரும் சிற்பியாகிய தாங்கள், என்னை மன்னித்தே தீர வேண்டும்.''

ஸ்ரீராமாநுஜரின் குரல் தழுதழுத்தது. ஆச்சார்ய நம்பியும் கலங்கத் தொடங்கியிருந்தார். மெள்ள ஸ்ரீராமாநுஜரை நெருங்கி அவரின் கரங்களைத் தேடிப் பற்றி, தன்னுடைய கண்களில் ஒற்றிக் கொண்டார்.

ஸ்ரீராமாநுஜர் பதைபதைத்துப் போனார். ``ஸ்வாமி என்ன இது. நான் தங்களையே கலங்கவைத்துவிட்டேனே... எம்பெருமானே! என்ன இது சோதனை...” என்று அவர் பதறவும், ஆச்சார்ய நம்பி ஸ்ரீராமாநுஜரை இழுத்து அணைத்துக்கொண்டார்.

அத்துடன், ``ஸ்ரீராமாநுஜா... நீ என் அகக் கண்களைத் திறந்துவிட்டாய். உன்னுள் இருந்த அகந்தை நீங்கவும், உன் முகமாக அகந்தை குறித்த ஒரு பாடத்தை இந்த உலகுக்குக் கற்பிக்கவும் விரும்பிய என்னுள்ளும் அந்த ‘நான்’ என்கிற அகந்தையோ, சுயநலமோ ஒரு ஓரமாய் இருந்திருக்கின்றன.அதனால்தான் நான் நரகம் செல்வதற்கு அஞ்சி, ரகஸ்யார்த்தத்தை ரகசியமாகவே வைத்துக் கொண்டுவிட்டேன்.

ஆனால், நான் எனும் அகந்தை மற்றும் சுயநலத்தின் தன்மையை உணர்ந்த மறுநிமிடமே நீ அவற்றைப் பூரணமாய் அடக்கி வெற்றி கொண்டு விட்டாய்.

`அடக்கி' என்று சொல்வதுகூட பிழையே. அறவே அகற்றிவிட்டாய் என்றே கூற வேண்டும். ஆகவேதான், நரகம் புகுவது என்பதும் உனக்கு அச்சத்தைத் தரவில்லை.

நான் இப்போது சொல்கிறேன்... 'நீ நரகு செல்வாய்' என்று கூறிய உன் ஆச்சார்யன் சொல்கிறேன்... நரகம் என்பதே உனக்கில்லை... உன்னைச் சார்ந்தவர்க்கும் இல்லை!

உனக்கு நான் குருவாக இருக்கலாம். ஆனால், நீ எனக்கும் சேர்த்து இந்த ஜகத்துக்கே குருவாகிவிட்டாய். ஜகத் குருவே... உன்னை மனதார வாழ்த்துகிறேன், வணங்குகிறேன்...'' என்று உணர்ச்சிப் பூர்வமாகப் பேசிய ஆச்சார்ய நம்பி, ஸ்ரீராமானுஜரை வணங்கவும் முற்பட, அவர் கரங்களைப் பிடித்துத் தடுத்துத் தன் கண்களில் ஒற்றிக்கொண்டார் ஸ்ரீராமானுஜர்.

``ஸ்வாமி! தங்களின் பேருள்ளம் இவ்வாறு கூறுகிறது. ஆனால், நான் என்றும் தங்களின் அத்யந்த சீடனே. தங்களின் கோபம் நீங்கி, தாங்கள் என்னைப் புரிந்துகொண்டதோடு, என்னை வாழ்த்தியமைக்கும் நான் காலா

காலத்துக்கும் கடமைப்பட்டுள்ளேன்...'' என்று கூறி ஆனந்தக் கண்ணீர் சிந்தலானார்.

``ஸ்ரீராமானுஜரே! இப்போது நீர் என் கண்களுக்கு அர்ஜுனனுக்கு உபதேசித்த கண்ணனாகக் காட்சி தருகிறீர். ஆம்! உம்மை இவ்வேளையில் கிருஷ்ணனாகவும் எம்பெருமானாகவும் பார்க்கிறேன்.

எனக்கு இங்கே இப்போது கிடைத்திருப்பது எம்பெருமானார் தரிசனம். இந்த நாள் இந்த உலகம் மறக்கக் கூடாத நாள். எம்பெருமானாரின்

தரிசனம் கிடைத்த நாள். உலகுக்கு ஸ்ரீராமாநுஜர் எனும் பெருமானார் கிடைத்த நாளும்கூட...'' என்று நெகிழ்ச்சியுடன் கூறினார் ஆசார்ய நம்பி.

அக்கணமே, கூரத்தாழ் வாரும் முதலியாண்டானும் ‘‘எம்பெருமானார் ஸ்ரீராமாநுஜர் ...'' என்று உரத்தக்

குரல் கொடுக்க... சூழ்ந்திருந்தோர் ``வாழ்க... வாழ்க...'' என வாழ்த்துக் கோஷம் எழுப்பினார்கள்.

ஸ்ரீராமாநுஜரோ அதைக் கண்டு மகிழ்ந்தாரில்லை. தான் இன்னும் அறியவேண்டியதும் புரிய வேண்டியதும் நிரம்ப இருப்பதாகவே கருதினார்.

திருவாய்மொழியைத் திருமலையாண்டானிடம் கற்ற தருணத்தில் சில சலனங்கள் ஏற்பட்டன.

திருமலையாண்டான் கூறிய சில பொருளுக்கு, ஸ்ரீராமாநுஜர் மறுபொருள் விளக்கம் கூறி, ‘இப்படியும் பொருள் கொள்ளலாம்தானே’ என்று கேட்டார்.

அது திருமலையாண்டானின் மனத்தைக் கீறியது. ஸ்ரீராமாநுஜர், தனக்கே பொருள் கூறுவது அதிகப்பிரசங்கமாக அவருக்குப் பட்டது. எனவே, ஒருகட்டத்தில் பொருள் கூறுவதை நிறுத்திவிட்டார்.

இதையறிந்த திருக்கோட்டியூர் ஆச்சார்ய நம்பி, ``அது என்ன பொருள்?'' என்று ஸ்ரீராமாநுஜரைக் கேட்டு, அதன் சாரத்தையும் நன்கு உணர்ந்தார்.

``இக்கருத்தை ஸ்ரீஆளவந்தாரும் கூறி நான் கேட்டுள்ளேன். எனவே, இவர் கூறியதில் பிழையில்லை''என்று திருமலையாண்டானிடம் எடுத்துக்கூறினார். அத்துடன், ‘‘பாடம் கேட்பதால் ஸ்ரீராமாநுஜரைச் சீடன் என்று மட்டும் எண்ணிவிடாதீர். அவர் சீடன் வடிவில் நடமாடும் எம்பெருமான். இதை நன்கு உணர்ந்தே அவருக்கு நான் ‘எம்பெருமான்’ என்ற பெயரைச் சூட்டினேன்'' என்று எடுத்துரைத்தார்.

திருமலையாண்டனும் ஸ்ரீராமாநுஜரைப் புரிந்துகொண்டு அவருக்கு முற்றாக திருவாய் மொழியைக் கற்பித்தார்.

தன் ஆச்சார்யர்கள் அனைவரும் தன் பொருட்டு பெரிதும் கனிவோடு நடந்துகொள்வது கண்டு நெகிழ்ந்தார் ஸ்ரீராமாநுஜர். தான் ஓர் ஆசார்ய பட்டத்தில் இருப்பினும், தன் ஆச்சார்ய புருஷர்கள் வரையில் தானொரு மாணவன் என்கிற எண்ணத்தில், ஒரு சீடனைப் போல நடந்து கொள்ளவே அவர் விரும்பினார்.



குறிப்பாக, திருவரங்கப் பெருமாளரையரிடம் 'அர்த்த விசேஷம்' கற்ற நாளில், பசுவின் பாலை தன் கைப்பட கறந்து, தானே காய்ச்சிக் கல்கண்டு சேர்த்து, குரு சமர்ப்பணம் என்று வழங்கிவந்தார்.

அத்யயன காலங்களில், மஞ்சள் காப்பினை தன் கைப்பட அரைத்துக் கொடுத்தும் தானொரு பணிவான உற்றச் சீடன் என்பதை நிரூபித்தார்.

ஸ்ரீவைஷ்ணவ நெறிப்பாட்டில் ஆச்சார்யனே எல்லாம். அவரே வணங்கத் தக்க தெய்வம். அவருக்குச் செய்யும் தொண்டே திருத்தொண்டு.

சுருக்கமாகக் கூறுவதானால், ஒருவர் அடைய வேண்டிய நல்ல மதி, விதி, கதி, நிதி ஆகிய நான்கும் ஆச்சார்யனே... அவரின் திருவடிகளே!

- **தொடரும்...**

*கணபதியே போற்றி!*

உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும் விநாயகர் வியாபித்து நிற்பதை உணர்த்தும் வகையில், அரிசி மாவுக்குள் தேங்காயும் வெல்லமும் கலந்த பூரணத்தை வைத்து விநாயகருக்குப் படைத்து அவர் அருள் பெற்றாள் வசிஷ்டரின் மனைவி அருந்ததி.

தனது தத்துவத்தை எடுத்துக் காட்டிய மோதகத்தின் மீது விநாயகருக்கு அதிகப் பிரியம் ஏற்பட்டது. விநாயகரின் கையில் மோதகம் இருப்பதை ஆதிசங்கரர், 'முதாகராத்த மோதகம்' என்கிறார்.



வரும் விநாயகர் சதுர்த்தி தினத்தில் பிள்ளையாருக்கு மோதகம் படைப்பதுடன், கீழ்க்காணும் போற்றிகளையும் கூறி வழிபடுங்கள்; பூரணமான நல்வாழ்வு வரமாகக் கிடைக்கும்.

ஓம் சுமுகாய நம:

ஓம் ஏகதந்தாய நம:

ஓம் கபிலாய நம:

ஓம் கஜகர்ணாய நம:

ஓம் லம்போதராய நம:

ஓம் விகடாய நம:

ஓம் விக்ன ராஜாய நம:

ஓம் கணாதிபதயே நம:

ஓம் தூமகேதவே நம:

ஓம் கணாயத்க்ஷாய நம:

ஓம் பாலச்சந்த்ராய நம:

ஓம் கஜாநநாய நம:

ஓம் வக்ரதுண்டாய நம:

ஓம் சூர்ப்பகர்ணாய நம:

ஓம் ஹேரம்பாய நம:

ஓம் ஸ்கந்தபூர்வஜாய நம:

- ***கே.ராமு, சென்னை-44***

*ஸகஸ்ர மோதக கணபதி!*

வன்னி மரம் தெய்விகச் சக்தி வாய்ந்தது. வன்னி மரத்தடி விநாயகர், சக்தி வாய்ந்தவர். வன்னி இலை களால் விநாயகரை பூஜை செய்வது மிகுந்த பலன் தரும்.

ஹிரண்யகசிபுவை ஜெயிப்பதற்கு மகா விஷ்ணுவும், மகாபலியை அடக்குவதற்கு வாமனரும், தனது யாகம் இடையூறு இல்லாமல் முடிய

பிரம்மாவும் வன்னி மரத்தடி விநாயகரை, வன்னி இலைகளால் பூஜை செய்ததாகப் புராணங்கள் கூறுகின்றன.



அறுகம்புல் போன்று வெப்பத்தைக் கிரகித்துக் குளிர்ச்சியைக் கொடுக்கும் தன்மை உடையது வன்னி இலை. வன்னி மரம், தன்னை வலம் வருவோரின் பாவங்களைத் தன்னுள் அடக்கி அவர்களுக்கு நல்ல பலனைத் தருவது. இப்படிப்பட்ட வன்னி மரத்தடியில் கண்கண்ட கடவுளாக அருள் பாலிக்கும் விநாயகர் கோயில், திருச்சி ஜங்ஷனிலிருந்து 4 கி.மீ. தூரத்தில் எல்.ஐ.சி காலனி அருகில் உள்ள ஆனந்த நகரில் அமைந்துள்ளது.

இங்கு அடிக்கடி 1,008 மோதகங்கள் நைவேத்தியம் செய்யப்படுவதால் இவருக்கு, 'ஸஹஸ்ர மோதக விநாயகர்' என்ற பெயரும் உண்டு!

- ***கே.பூர்ணா, திருச்சி-3***

**இந்திரா சௌந்தர்ராஜன்** ஓவியம்: **அரஸ்**

# ரங்க ராஜ்ஜியம் 62

**மன்னிய பேரிருள் மாண்டபின்**
**கோவலுள் மாமலராள்**
**தன்னொடு மாயனைக் கண்டமை**
**காட்டும் தமிழ்த் தலைவன்**
**பொன்னடி போற்றும் இராமாநுசர்க்கு**
**அன்பு பூண்டவர் தாள்,**
**சென்னியிற் சூடும்**
**திருவுடையார் என்றும் சீரியரே**

*- ஸ்ரீராமாநுஜ நூற்றந்தாதி*

வைஷ்ணவ நெறிப்பாட்டில் ஆச்சார்யனே எல்லாம். அவரே வணங்கத் தக்க தெய்வம். அவருக்குச் செய்யும் தொண்டே திருத்தொண்டு. சுருக்கமாகக் கூறுவதானால், ஒருவர் அடையவேண்டிய நல்ல மதி, விதி, கதி, நிதி ஆகிய நான்கும் ஆச்சார்யனே... அவரின் திருவடிகளே.

அவ்வகையில், ஸ்ரீராமாநுஜர் தானே ஒரு முன்னுதாரணமாய் வாழ்ந்து காட்ட, திருவரங்கப் பெருமாளரையர் தன் பங்குக்கு ஸ்ரீராமாநுஜருக்கு 'லக்ஷ்மண முனி' என்ற திருநாமத்தை அருளிச் செய்தார்.

இளையாழ்வானாய்ப் பிறந்து சந்நியாசத்தின்போது ஸ்ரீராமாநுஜன் என்றாகி, பின் திருவரங்கத்தில் உடையவர் என்றாகி, திருக்கோட்டியூரில் எம்பெருமானாகி, திருவரங்கம் பெருமாளரையரால் 'லக்ஷ்மண முனி' என்றும் ஆகிட, ஸ்ரீராமாநுஜரின் புகழ் தேசம் எங்கும் பரவியது.

ஸ்ரீராமாநுஜரும் ஓரிடத்தில் நின்றுவிடாது, பெரும் தேடலோடு யாத்திரை புரிவதில் விருப்பமுள்ளவராக இருந்தார். அவ்வகையில் 'திருமலை யாத்திரை' புரிந்து திருவேங்கடவனைத் தினமும் தரிசித்ததுடன், தன் தாய்மாமனான பெரிய திருமலை நம்பி வாயிலாக ராமாயணம் முழுவதை யும் கசடின்றிக் கேட்டறிந்தார். இதனால் அவரது ஞானம் பெரிதும் வளர்ந்து சூரியனுக்கு நிகராய் ஒளி வீசிற்று. சோதனைகளும் வரவே செய்தன. சோதனை வந்தால்தானே சாதனை நிகழ முடியும்.

யக்ஞமூர்த்தி என்றொருவர் வடவர்; அத்வைத சித்தாந்தி. இவருக்கும் ஸ்ரீராமாநுஜருக்கும் வாதப் போர் நிகழ்ந்தது. ஒரு நாளல்ல... இரண்டு நாளல்ல... பல நாள்கள்! அதில் யக்ஞமூர்த்தி ஸ்ரீராமாநுஜரிடம் சரண் புகுந்தார். அவருக்கு அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்கிற

நாமத்தைச் சூட்டி ஸ்ரீவைஷ்ணவ நெறியில் நடக்கப் பணித்தார். இக்காலகட்டத்தில் உறங்காவில்லி, பொன்னாச்சி போன்ற பிராமணரல்லாதவரும் சீடர்களாயினர். எப்படி?

**ஸ்ரீ**ராமாநுஜர் என்று சொல்லும்போதே, 'சீர்திருத்தம்' என்கிற ஒரு சொல் நம் மனக் கண்களில் தோன்றி மறையும். செம்மாந்த சந்நியாசி, குருவே போற்றிய குரு, அரங்கனே 'உடையவர்' என்றழைத்த பெருமைக்கு உரியவர் ஆகிய சிறப்புகளை எல்லாம் கடந்து, ஸ்ரீராமாநுஜர் என்றதும் நம் மனத்தில் பிரகாசிப்பது அவரின் சீரிய செயல்பாடுகளே!

அதிலும் ஸ்ரீவைஷ்ணவன் என்பவன் பிராமணப் பிறப்பாளனாகத்தான் இருக்க வேண்டும் என்கிற ஒரு வட்டத்தை உடைத்து, விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைப் பின்பற்றுவோர் சகலரும் ஸ்ரீவைஷ்ணவர்கள் என்பதை, தாம் வாழ்ந்த காலத்திலேயே நிலைநிறுத்தியவர் ஸ்ரீராமாநுஜர்.

அப்படி அவரால் அரங்கனைச் சரணாகதி புகுந்தவர்கள் ஏராளம். அவர்களில், வரலாற்றில் அழுத்தமாய்ப் பதிவானவர்களில் இருவர்தான், தனுர்தாசன் எனும் பிள்ளை உறங்காவில்லி தாசரும் அவரின் மனைவி ஹேமாம்பாள் என்னும் பொன்னாச்சியும். இவர்கள் இருவரைக் கொண்டே அன்று திருவரங்கம் இருந்த இருப்பை மட்டுமல்ல, மேலும் பல ரசமான சங்கதிகளை நாம் அறியலாம்!

திருவரங்கம் சோழதேசத்தின் ஒரு திருத்தலம். சோழ தேசத்தில் வைஷ்ணவம் சார்ந்த திருவரங்கம் மட்டுமல்ல, சைவம் சார்ந்த திருவானைக்கா, தஞ்சை, திருவாரூர் என்று பல தலங்கள் இருந்தன. அதனால், சைவ வைணவ பேதமும் போட்டிப் பொறாமைகளும்கூட மலிந்து கிடந்தன. சமணமும் பௌத்தமும் கூட பரவியிருந்தன. சுருங்கச் சொல்வதானால், ஒன்றுக்கு பல வழிகள்!

ஆயினும், இவற்றில் சரணாகதி புரியவும் சார்ந்து தெளியவும் வைஷ்ணவமே சிறந்தது என்பதைத் தன் தவத்தால், திறத்தால், அருளால், செயலால் நிரூபித்தார் ஸ்ரீராமாநுஜர். அப்படி நிரூபித்து, பரம அத்வைதியும் தன் முதல் குருவுமான யாதவப்பிரகாசரையே 'கோவிந்த ஜீயர்' என்கிற வைணவ மடாதிபதியாக்கினார்.

ஒரு குருவையே மாற்றியவருக்குச் சாமானியர்களை மாற்றுவதா பெரிது? ஆயினும், எவராக இருப்பினும் உணர்ந்து தெளிதல் வேண்டும் என்று எண்ணினார். அவர் மீது கொண்ட மதிப்பு மற்றும் அன்பின் நிமித்தம் எவரும் தன்னை மாற்றிக்கொள்ளக் கூடாது. எம்பெருமானை உணர்ந்தும், அவன்மீது பக்தி கொண்டும், அவனே நமக்கு விமோசனம் அளிக்க வல்லவன் என்பதை உணர்ந்தும்தான் ஒருவர் மாறிட வேண்டும் என்பதில் பெரிதும் கவனமாக இருந்தார்.



அப்படியே உணர்ந்து தெளிந்து தங்களை அரங்கனிடமும் ஸ்ரீராமாநுஜரிடமும் ஒப்படைத்தவர்களே தனுர் தாசரும் ஹேமாம்பாளும். மறவர் குடிப்பிறப்பில் பிறந்து, சோழ அரசன் அவையில் அரசனுக்குப் பெரும் காப்பாளனாயும், செருக் களத்தில் பெரும் மல்லனாகவும் திகழ்ந்தவனே தனுர்தாசன். வாட்டசாட்டமான உடலுடன் மீசையை முறுக்கிக்கொண்டு அவன் தெருவில் நடந்தால், உறையூரே அதிரும். அவன் மனைவியான ஹேமாம்பாள் நடந்தாலோ வைத்த கண் வாங்காது!



கணவனும் மனைவியும் ரதமேறி தெருவில் செல்கையில் எல்லோர் கண்ணும் படும் என்பதால், இவர்கள் இருவரும் இல்லம் ஏகிடும் நேரம், திருஷ்டி சுற்றி வரவேற்பர். அதற்கென்றே பணியாளர்களும் இருந்தனர்.

தனுர்தாசனின் முன்னோர்கள் சைவ மரபு வழி வந்தவர்கள். எனவே, தனுர்தாசன்

## துர்காதேவி சரணம்!

சுருட்டப்பள்ளி ஈஸ்வரன் திருக்கோயிலில் அருள் புரியும் துர்கை, பிடாரியின் மீது நின்று காட்சி தருகிறாள். இது ஓர் அபூர்வ திருக்கோலம் என்பர். கும்பகோணம் அருகில் உள்ள பட்டீஸ்வரம் திருத்தலத்தில் மூன்று கண்களுடனும் எட்டுத் திருக்கரங்களுடனும் காட்சி தரும் துர்கை, பக்தர்களைக் காக்க உடனே புறப்படும் தயார் நிலையில் உள்ளாள். இவரது எட்டுக் கரங்களில் ஒன்றில் கிளியை வைத்திருப்பது சிறப்பு.

காஞ்சிபுரம் கருக்கினில் அமர்ந்தாள் கோயிலில் உள்ள மேற்புற தேவ கோஷ்டத்தில், மகிஷன் மீது நின்ற கோலத்தில் நான்கு கரங்களுடன் காட்சி தருகிறாள், துர்கை. காஞ்சியில் ஐராவதேஸ்வரர் கோயிலில் வடக்கு கோஷ்டத்தில் காட்சி தரும் துர்கை, மேல்புறம் மானும் கீழே சிங்கத்துடனும் காட்சி தருகிறாள்.

செங்கல்பட்டு மாவட்டம் வல்லம் என்ற ஊரில் குடவரைக் கோயிலில் உள்ள துர்கை முன்னிரு கரங்களில், வலக்கை காக்கும் குறிப்பிலும், இடக்கை இடுப்பிலும் இருக்க, பின்னிரு கரங்களில் சங்கு– சக்கரத்துடன் காட்சி தருகிறாள்.

– டி.ஆர்.பரிமளம், திருச்சி-21



நெற்றியில் விபூதியே முதலில் இருந்தது. ஆயினும், பெரிதாக பேதம் பாராட்டாமல் உறையூர் அழகிய மணவாள பெருமாளையும் சேவிப்பவனாக இருந்தான், தனுர்தாசன்.

இப்படிப்பட்டவனின் வாழ்வில்தான் ஸ்ரீராமானுஜரால் பெரிதும் மாற்றம் ஏற்பட்டது. மிகச்சிறந்த ஆசார்யனாய் அனைவர் பாலும் அன்பு கொண்டு அனைவருக்கும் ஆசி வழங்கிய ஸ்ரீராமானுஜர் மேல் தனுர்தாசனுக்கு பெரும் மதிப்பு ஏற்பட்டது.

ஒருமுறை உறையூர் அழகிய மணவாளப் பெருமாளை தரிசிக்க ஸ்ரீராமானுஜர் வந்த நேரத்தில், தனுர்தாசனும் வந்தான். அவனது ரதம் செல்ல வழிவிட்டு, தன்னோடு தன் சீடர்களை ஒதுக்கிக் கொண்டு நின்ற ஸ்ரீராமானுஜரின் பெருந்தன்மையான செயல் தனுர்தாசனைப் பெரிதும் சிந்திக்க வைத்தது.

இதன்பின் உச்சபட்சமாய் ஒரு சம்பவமும் நிகழ்ந்தது. ஸ்ரீராமானுஜர் ஒரு இல்லத்தின் திண்ணையில் தங்கி, இளைப்பாறிக் கொண்டிருந்தார். அப்போது, வீதியில் வந்த தனுர்தாசனின் ரதம், ஓர் ஓரமாய் நின்றது. அதிலிருந்து அவனும் அவன் மனைவியும் இறங்கினர். அப்போது கடும் வெயில். வெயிலின் வெம்மை மனைவியைத் தாக்கி, அவளுக்கு வியர்த்துவிடக் கூடாது என்று கருதிய தனுர்தாசன், ஒரு பட்டுக் குடையை ரதத்திலிருந்து எடுத்து, மனைவி மீது சூரியக்கதிர் விழாதபடி பிடித்ததோடு, "ஹேமாம்பாள்... பார்த்து நட... கால்கள் கொப்பளித்தால் சொல்... என் தலைப்பாகையை விரித்துப் போடுகிறேன். அதன் மேல் நீ நடந்து வரலாம்" என்றபடியே தன் தலைப்பாகையைக் கழற்றிவிட்டான்.

அவனது செயல் பார்ப்போரை வியப்பில் ஆழ்த்தியதுடன், 'இப்படியும் ஒரு பெண்டாட்டி தாசனா?' என்றும் எண்ணச் செய்தது. இதை ஸ்ரீராமானுஜரும் கண்டார். அவர் பார்ப்பதை தனுர்தாசனும் கண்டான். ஹேமாம்பாளும் கண்டவளாய், அவர் இருந்த திண்ணைப்புறம் வந்து வணங்கினர்.

ஸ்ரீராமானுஜர் புன்னகைத்தார்; அதில் ஆயிரம் அர்த்தங்கள். அது அவனுக்கும் புரிந்தது.

"என்ன தனுர்தாசா... உன் மனைவி உடல் என்ன பொன்னா? வெயில் பட்டால் உருகி விடுமா, என்ன? மாவீரனான நீ இப்படியா பெண்டாட்டிக்குக் குடை பிடிப்பாய்..." என்று அங்கு இருந்தவர்களில் ஒருவர் பேச்சைத் தொடங்கினார்.

அப்பேச்சு தனுர்தாசனைக் கோபப்படுத்த வில்லை. மாறாக, "இப்படி ஒருபொன்னழகிக்காக

என் உயிரையும் காணிக்கை யாகத் தருவேன். நீங்களே சொல்லுங்கள். என் மனைவிக்கு நிகரான அழகுடையவர் எவரேனும் இந்த ஊரில் உள்ளனரா?

இவள் கண்கள் இரண்டும் மட்டும் போதுமே... சேல்விழி, வேல்விழி, கயல்விழி என்று எப்படி வேண்டுமானாலும், அழைக்கலாமே?" என்றான்,

அவனைச் சீண்டியவருக்கு அவனிடம் சிக்கிக் கொண்டது போல் ஆயிற்று. அவனோ ஸ்ரீராமாநுஜரைப் பார்த்து "ஸ்வாமி! தாங்கள் எல்லாம் அறிந்த மகா ஞானி. தங்களைப் பற்றி நிறைய கேள்விப் பட்டுள்ளேன்.



இன்று எங்கள் திருமண நாள். உங்களிடம் ஆசிபெற வந்துள்ளோம். நீங்களே சொல்லுங்கள்...என் மனைவி மேல் நான் காதலுடனும் பாசத்துடனும் இருப்பது தவறா? இப்படி ஒரு பேரழகிக்குப் பணிவிடை செய்வது ஒரு ஆண்மகனின் கடமை அல்லவா?" என்று கேட்டான்.

அதுவரை மௌனமாக மென்னகையுடன் இருந்த ஸ்ரீராமாநுஜர் "அப்பா, உன் பெயர் என்ன?" என்று கேட்டார்.

"தனுர்தாசன். சோழ மன்னனின் மெய்க் காப்பாளன். மறவர் குலத்தைச் சார்ந்த மல்லனும் கூட. இவள் என் மனைவி ஹேமாம்பாள். செல்வச் செழிப்புடைய குடும்பத்தில் பிறந்து என்னை வந்து சேர்ந்தவள். தாய் வீட்டில் அனுபவித்த இன்பங்களைவிட கூடுதலாக புகுந்த வீட்டில் அனுபவிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்... தவறில்லையே...?"

"இதில் தப்பு சரிக்கு ஏது இடம்? மனையாளை நீ எவ்வளவு போற்றுகிறாய் என்பது உன் பேச்சிலிருந்து புலனாகிறது. உன் மனையாள் கொடுத்து வைத்தவள்... ஆயினும்..."

என்ற ஸ்ரீராமாநுஜர், சற்றே இடைவெளி விட, தனுர்தாசன் கேட்டான்.

"ஆயினும் என்று ஏன் நிறுத்திவிட்டீர்கள்... எதுவாயினும் கூறுங்கள் ஸ்வாமி..."

''இந்த உடலின் அழகு, கண்ணழகு மற்றும் உள்ள செல்வம் என்று எதுவும் நிலையானது இல்லை. எதுவும் உடன் வரப் போவதுமில்லை. இதை நீ அறிவாயா?"

''தாங்கள் என்ன கூற வருகிறீர்கள்?"

"எதையும் இம்மட்டில் வார்த்தைகளில் கூறுவதால் பயனில்லை. உன்னை அனுபவிக்கச் செய்வதே சிறப்பாகும்.

மேலினும் மேலானதைக் காணாததாலும் அறியாத தாலும் அழிந்துபடுவதில் மனம் நிலை கொண்டுவிடுகிறது. ஒரு பேரழகனையும் அழகுக்கே அழகான அவன் விழிகளையும் உனக்கு நான் காட்டுகிறேன். அந்த விழிகளைப் பார்த்தபிறகு சொல்... இப்போது என்னுடன் வருவாயா?"

என்று கேட்டபடியே எழுந்து நின்றார்.

"தாராளமாக வருகிறேன். தங்களின் பேச்சு என்னை என்னவோ செய்கிறது.'' என்ற தனுர்தாசன், ஸ்ரீராமாநுஜருடனும் அவரின் சீடர்களுடனும் எம்பெருமானின் திருச் சந்நிதிக்குச் சென்றான்.

ஸ்ரீராமாநுஜரின் விருப்பத்திற்கிணங்க திருச்சந்நிதியின் கைங்கர்யபரர், கற்பூர ஆரத்தியை எம்பெருமானின் திருக்கோலம் முன் காட்டியதோடு, முகமருகே நன்கு வெளிச் சம் படும்படி பிடித்து நின்றார்.

அவ்வேளையில் புலப்பட்ட, காதளவோடிய எம்பெருமானின் நயனங்களிரண்டும் தனுர் தாசனை வியக்கவைத்தன. சிலா ரூபமாய் இருப்பினும், எம்பெருமான் கண்களைத்திறந்து பார்த்தது போல் ஒரு பிரமை தட்டியது, தனுர் தாசனுக்கு.

எப்பிறப்பின் புண்ணியமோ, முன்னோர் நலமோ... இப்பிறப்பில் நிகரில்லா ஆச்சாரியன் கண்ணில்பட்டு, அதனால் எம்பெருமானின் கண்களிலும் பட்டு, நேத்திர தீட்சையே கிட்டி விட்டது போன்ற பெருங்கருணைக்கு ஆளான தனுர்தாசன், அந்த நொடி தன்னை மறந்தான்.

- தொடரும்...

எப்பிறப்பின் புண்ணியமோ, முன்னோர் தவமோ... இப்பிறப்பில் நிகரில்லா ஆசார்யனின் கண்ணில் பட்டு, அதனால் எம்பெருமானின் கண்களிலும் பட்டு, நேத்திர தீட்சையே கிட்டிவிட்டதுபோன்ற பெருங்கருணைக்கு ஆளானான் தனுர்தாசன்.

ஸ்ரீராமாநுஜரின் விருப்பத்துக்கு இணங்க, திருச்சந்நிதியின் கைங்கரியபரர் கற்பூர ஆரத்தியை எம்பெருமானின் திருக்கோலம் முன் காட்டியதோடு, முகமருகே நன்கு வெளிச்சம் படும்படி பிடித்து நின்றார். அவ்வேளையில் எம்பெருமானின் நயனங்கள் இரண்டும் தனுர்தாசனை வியக்கவைத்தன.

சிலாரூபமாய் இருப்பினும் உயிர்ப்பெற்று கண்களைத் திறந்து பார்த்ததுபோல் ஒரு பிரமை தட்டியது தனுர்தாசனுக்கு. அந்த நொடி தன்னை மறந்தான்.

அவன் மனைவியும் 'தான் ஒரு பேரழகி' எனும் மெல்லிய செருக்கிலிருந்து விடுபட்டவளாகக் கரங்களைக் கூப்பிக் கண்ணீர் சிந்தலானாள். அப்போதே

அங்கேயே தம்பதி இருவரும் ஸ்ரீராமாநுஜரின் திருவடிகளில் விழுந்தனர்.

"ஸ்வாமி! தாங்கள் முதலில் என்னை மன்னிக்கவேண்டும். பின் சீடனாய் ஆட்கொண்டு அருள வேண்டும்" என்றான் தனுர்தாசன். ஹேமாம்பாளும் அதையே உரைத்தாள்.

கூடுதலாய், "இன்று எங்கள் மணநாள். நாங்கள் ஒன்றுசேர்ந்த நாள் மட்டுமன்று, உங்களோடு ஒன்றாக சேர்ந்த நாளும்கூட. இனி, உங்கள் வழியே எங்கள் வழி; உங்கள் கொள்கையே எங்கள் கொள்கை. எங்கள் இறைவன் இந்தத் திருவரங்கன்" என்று நெகிழ்ந்தாள்.

இவ்வாறு சொன்னதுடன்,"ஸ்ரீராமாநுஜரின் சீடர் என்றால், அதற்கேறப வாழ்ந்திட வேண்டும்.இனிரதமேறிச் செல்லும் போக வாழ்வு தேவையில்லை. மல்லாடி மகிழும் வீர வாழ்வும் தேவை இல்லை. நித்ய சுகத்தையும் மோட்சத்தையும் தரும் இறை வாழ்வே என் வாழ்வு..." என்று சொல்லி, அதற்கேற்ப தனது அரசுப் பணியை விடுத்து, ஆடையிலும் பெரும் மாற்றம் கண்டு, மேனியில் திருமண் பூசி, அடியவர்களைப் போல எளிய தோற்றத்தில் ஸ்ரீராமாநுஜரைச் சரண்புகுந்தனர் இருவரும்.

> 'வேதம் கற்றல், ஓதுதல், தியானம், தவம் ஆகியவற்றாலேயே இறைபதம் அடைய முடியும். மற்ற தொண்டுகளால் புண்ணியம் கிட்டும்'

ஸ்ரீராமாநுஜருக்கும் அவரின் மடத்துக்குமான ஊழியங்களை இழுத்துப் போட்டுக்கொண்டு செய்யத் தொடங்கினர். பேரழகியான ஹேமாம்பாள் மடத்துப் பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவியதோடு, சாணம் தெளித்தல், கோலமிடுதல், பூத்தொடுத்தல், காய் நறுக்குதல் என்று எல்லா பணிகளையும் செய்யலானாள். தனுர் தாசனோ ராமானுஜர் இடும் பணிகளை எல்லாம் செய்தான்.

அவர்களுடைய இந்த மாற்றம் பலருக்கு வியப்பையும் சிலருக்கு வெறுப்பையும் அளித்தது. அதற்குக் காரணம் அவர்களின் சாதியும் குலமும்!

'உயர உயரப் பறந்தாலும் குருவி குருவிதான் அது பருந்தாக முடியாது' என்றும்,'எவ்வளவு தொண்டாற்றினாலும் பரகதிக்கான ஞானம் உன் போன்றவர்களுக்கு ஸித்திக்காது. அது பிராமணர்களுக்கு... அவர்கள் வேதம் ஓதுவதால், அவர்களுக்கே வாய்க்கப் பெற்ற ஒன்றாகும்' என்றும் கூறினார்கள்.

சுருக்கமாய்ச் சொல்வதானால் 'வேதம் கற்றல், ஓதுதல், தியானம், தவம் ஆகியவற்றாலேயே இறைபதம் அடைய முடியும். மற்ற தொண்டுகளால் புண்ணியம் கிட்டும்; அதன் மூலம் இகபர வாழ்வில் இன்பமாய் வாழலாம் அவ்வளவே' என்றனர்.

இக்கருத்துக்கள் தனுர்தாசனைச் சலனப்படுத்தியபோதிலும் ஸ்ரீராமாநுஜரிடம் அதைவெளிக்காட்டிக்கொள்ளாமல்தொண்டு செய்து வரலானான் தனுர்தாசன்.

ஸ்ரீராமாநுஜர் இதை அறியாமலில்லை. நேத்திரங்களைக் காட்டி அவன் கோத்திரத்தையே மாற்றியவர், அவனின் தளராத மன உறுதியை எண்ணி மகிழ்ந்தார். அதற்கேற்ப மனையாளும் திகழ்ந்தது பெரும் மகிழ்வை அவருக்கு அளித்திருந்தது.

ஒருநாள் காவிரியில் குளித்துக் கரையேறி நடக்கும்போது, சீடர் குழாமில் விலகி நின்றபடி இருந்த தனுர்தாசனை அருகில் அழைத்து, அவன் தோளைப் பற்றியபடி மணல்வெளியில் நடக்கலானார். இதைக் கண்ட சீடர்களில் சிலருக்கு மனத்தில் சஞ்சலம் மூண்டது. சிலருக்குப் பெரும் கோபம் உண்டாயிற்று.

இவன் தங்கள் குருவுக்கும் தங்களுக்கும் இடையே ஒரு பெரிய இடைவெளியை ஏற்படுத்திவிடுவான் என்று கருதியதோடு, இதற்கு ஒரு முற்றுப்புள்ளியை வைத்துவிடும் முடிவுக்கும் வந்தனர். சீடர்களின் இந்தப் போக்கை ஸ்ரீராமாநுஜர் அறிந்தார். தனுர்தாசனின் பண்பட்ட குருபக்தியை, அவனே உத்தமமான ஸ்ரீ வைஷ்ணவன்



என்பதை, அனைவரும் உணர்ந்திட ஒரு காரியம் செய்யலானார்.

**அ**ன்று இரவு தன் இல்லம் சென்றுவிட்ட தனுர்தாசனை, தான் அழைப்பதாகக் கூறி அழைத்து வரும்படி சீடன் ஒருவனை அனுப்பி வைத்தார்.

அவன் புறப்பட்டதும், சில சீடர்களைத் தன் அருகில் அழைத்தவர், "இப்போது நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டு நடந்திடுங்கள்..." என்று கூறினார். உறங்கச் செல்ல வேண்டிய இந்தத் தருணத்தில், அப்படி என்ன செய்ய வேண்டும் என்ற வினாவோடு அவர்கள் ஸ்ரீராமானுஜரைப் பார்த்தனர்.

"நீங்கள் நால்வரும் நேராக தனுர்தாசனின் மாளிகைக்குச் செல்லுங்கள். அங்கே ஹேமாம்பாள் உறக்கத்தில் இருப்பாள். அதைப் பயன்படுத்தி, அவள் அறியாவண்ணம் அவளுடைய அணிகலன்களைத் திருடிக்கொண்டு வந்து விடுங்கள்.



அதேநேரம், அவளுக்கு எந்தத் துன்பமும் நேரக்கூடாது. உங்கள் திருட்டுக்கு தோதாக தனுர்தாசனை நான் இங்கே வர பணித்துவிட்டேன். எனவே ஜாக்கிரதை!" என்றார் ஸ்ரீராமானுஜர்.

அவர்கள் நால்வரும் விக்கிப்போடு ராமானுஜரை பார்த்தனர். ஸ்ரீராமானுஜரா தங்களைத் திருடச் சொல்வது என்ற வியப்பு ஒருபுறம்; எதற்காக திருடவேண்டும்... கேட்டாலே கொடுத்து விடுவானே தனுர்தாசன் என்ற எண்ணம் ஒருபுறம் அவர்களைத் தயக்கம் கொள்ளச் செய்தன.

"தாங்களா இப்படிச் சொல்வது என்ற திகைப்பில் இருக்கிறோம்."

"ஆம்... நான்தான் சொல்கிறேன். இது, தனுர்தாசனுக்கும் ஹேமாம் பாளுக்கும் நான் வைக்கும் ஒரு பரீட்சை!"

"பரீட்சையா?"

"ஆம்! நகைகள் களவு போகும் நிலையில், தனுர்தாசன் ஒரு மறவனாய் அரண்மனை அதிகாரியாய்க் கோபம் கொண்டு, கள்வர்களைக் கண்டறிந்து தண்டிக்கும் முடிவை எடுப்பானா அல்லது என்ன செய்வான் என்று கண்டறியவே இந்தச் சோதனை."

"அதிலென்ன சந்தேகம்... நிச்சயம் கள்வர்களைத் தண்டிக்கும் முடிவையே எடுப்பான். இதனால், எங்களுக்கு அவப்பெயரும் தண்டனையும் கிட்டுவது உறுதி"

"அப்படி அவன் நடக்கும்பட்சத்தில், உங்களைக் காப்பாற்றி அந்தத் தண்டனையை நான் ஏற்றுக் கொள்கிறேன். நீங்கள் அஞ்சத் தேவையில்லை."

"ஸ்வாமி! தங்களைப் பணயம் வைத்து இப்படி ஒரு பரிட்சை தேவைதானா?"

"சோதனைகள் செய்தாலே சாதனைகளை அடைய முடியும். இனியும் விவாதங்கள் இன்றி சொன்னதைச் செய்யுங்கள்."

அந்தச் சீடர்கள் நான்கு பேரும் புறப்பட்டுச் சென்றனர். செல்லும்போதே எதிரில் தனுர்தாசனும் வந்துவிட்டான். அவனைப் பார்த்தபடியே சென்றனர்.

**த**னுர் தாசன் மாளிகை.

கதவுகள் தாளிடப்படாது திறந்தே இருந்தன. சீடர்கள் ஆச்சரியம் அடைந்தனர்.

வீட்டின் முகப்பில் பெரிய திருமண் காப்பு, சங்கு சக்கரத்துடன் வரவேற்றது. அக்காட்சி அவர்களைத் தேக்கியது.

ஹேமாம்பாள் ஒரு பலகையைத் தலைக்குக் கொடுத்தவளாய், கூடத்தின் மையத்தில் - கோரைப்பாய் ஒன்றின்மேல் பக்கவாட்டில் ஒருக்களித்துப் படுத்திருந்தாள்.

தங்கள் முகங்களை முகமூடியால் மறைத்திருந்த சீடர்கள் நால்வரும், அவளை நெருங்கிச் சூழ்ந்து நின்றனர்!

- தொடரும்...

**இந்திரா சௌந்தர்ராஜன்**

ஓவியம்: **அரஸ்**

*'அற்புதன் செம்மை இராமாநுசன் எனையாள வந்த*
*கற்பகம் கற்றவர் காமுறு சீலன் கருதரிய*
*பற் பல்லுயிர்களும் பல்லுலகு யாவும் பரனதென்னும்*
*நற்பொருள் தன்னை இந்நானிலத்தே வந்து நாட்டினனே'*
*(இராமாநுச நூற்றந்தாதி - 53)*

ஸ்ரீராமாநுஜரின் சீடர்கள் ஹேமாம்பாளைச் சுற்றி நின்று கொண்டு, நாலாபுறமும் பார்த்து விட்டு, மெள்ள அவளருகே அமர்ந்து அவள் உறக்கம் கலைந்திடாதவண்ணம் அவள் அணிந்திருந்த நகைகளைக் கழற்றத் தொடங்கினர்.

சில விநாடிகளில் தூக்கம் கலைந்து ஹேமாம்பாள் பாதி விழிப்போடு சற்று புரளவும் அவர்கள் வேகமாய் விலகிச் சென்றனர். புரண்டு படுத்தவள், அப்படிப் படுக்கும்போதே அந்த நான்கு பேரும் ஒளிவதைப் பார்த்துவிட்டாள். பார்த்த நொடி அவளுக்குள் திகைப்பு. உடலில் திருமண் காப்பு தரித்திருக்கும் நிலையில் அவர்கள் களவு புரிகிறார்கள் என்றால், அவர்களுக்குப் பெரிதாக ஏதோ தேவை.

அதனால்தான் திருமங்கைமன்னன் வழியில் களவினில் அவர்கள் இறங்கிவிட்டதாய்க் கருதிய ஹேமாம்பாள், தொடர்ந்து ஆழ்ந்து உறங்குவதுபோல் நடிக்கலானாள். அவர்கள் மேலும் தன் வசம் உள்ள நகைகளை எடுத்துச் செல்லத் தோதாகப் படுத்தாள். ஆனாலும், சீடர்கள் களவாடிய வரையிலும் போதும் என்று கருதி, மெள்ள அங்கிருந்து நழுவி ஸ்ரீராமாநுஜரிடம் வந்து நின்றனர்.

அவர்கள் வரவும், தனுர்தாசனை 'நீ வீட்டுக்குப் போய் தங்கிவிட்டுக் காலையில் வா' என்று அனுப்பினார். பின் சீடர்களைப் பார்த்தார். அவர்களும் நடந்ததைக் கூறினர்.

"நீங்கள் இப்போதே மீண்டும் தனுர்தாசன் இல்லம் சென்று, அவன் என்ன சொல்கிறான் என்பதை மறைந்திருந்து பார்த்துவிட்டு என்னிடம் வந்து சொல்லுங்கள்" என்றார்.

அவர்களும் சென்று பார்த்தனர். உள்ளே தனுர்தாசன் ஹேமாம்பாவை வைதபடி இருந்தான். "ஹேமா! களவாட வந்தவர்கள் எம்பெருமானின் அடியவர்கள் என்கிறாய். அந்நேரம் புரண்டு படுத்து அவர்கள் விலகிச் செல்லும்படியும் செய்துவிட்டாய். பாவம், அவர்களுக்கு என்ன தேவையோ காலம் அவர் களைக் கள்வர்களாக்கிவிட்டது.

நீ அவர்களை அழைத்து, உன் நகைகள் அவ்வளவையும் அவர்கள் களவாடத் தேவையின்றிக் கழற்றிக் கொடுத்து

இருக்கலாம். அருமையான சந்தர்ப்பத்தை விட்டுவிட்டாய். பாவம் அடியவர்கள்'' என்றான், தனுர்தாசன்.

அவன் அப்படிச் சொன்னதைக் கேட்டதும் ஒளிந்திருந்த அடியவர்கள் அப்படியே விக்கித்துப் போய்விட்டனர்.

"நான் என்ன செய்வேன் சுவாமி. அவர்கள், மேலும் என் நகைகளை எடுத்துச் செல்லட்டும் என்று எண்ணியே புரண்டு படுத்தேன். ஆனால், அதுவே தடையாகும் என்று நான் எண்ணவில்லை" என்றாள் ஹேமாம்பாள்.

தொடர்ந்து, "ஹேமா! நமக்கு நல்ல வாய்ப்பை அந்த நாராயணன் அளித்தான். ஆனால் அது பறிபோய்விட்டது. அடியவருக்குப் பயன்படாத இந்த நகைகளை இனி நீ அணியக்கூடாது, கழற்றிவிடு" என்ற தனுர்தாசனின் கட்டளை இட, ஹேமாம்பாளும் மீதம் உள்ள நகைகளைக் கழற்றி வைத்தாள். அதைக் கண்ட அடியவர்கள் வெட்கித் தலை குனிந்தபடியே திரும்பி வந்து, ஸ்ரீராமானுஜரிடம் நடந்ததைக் கூறினர்.

ஸ்ரீராமானுஜர் அவ்வேளையில் அங்கு உள்ளோருக்கு ஒரு சிறு சோதனையும் வைத்திருந்தார். அவர்களின் காவித் துணியை கத்தரிக்கோலால் துண்டு துண்டாக வெட்டி விட்டிருந்தார். அதைக் கண்டவர்கள் கோபம் கொண்டு, "யார் இப்படிச் செய்தது. இனி எப்படி இந்த ஆடையை அணிய முடியும். இப்படிச் செய்தவன் நரகுக்குத்தான் செல்வான். அவன் ஒரு படுபாவி. அவன் கையில் கிடைத் தால் அடித்துத் துவைத்துவிடுவேன்" என்று ஆளுக்கு ஆள் புலம்பினர்.

"அப்படியானால் நீங்கள் என்னைத்தான் அடித்துத் துவைக்கவேண்டும்" என்றபடி ஸ்ரீராமானுஜர் அவர்கள் முன் சென்று நின்றார். அவர்கள் விக்கித்தனர். எதற்கு இப்படி நடந்து கொண்டார் என்று சிந்திக்கவும் செய்தனர்.

ஸ்ரீராமானுஜர் அவர்களிடம் பேசலானார்,

"அருமைச் சீடர்களே! நீங்கள் சந்நியாச தர்மத்திற்கு உகந்தவர்களே இல்லை என்பதைக் காட்டிவிட்டீர்கள். ஒரு காவித்துணிமீது கூட உங்களுக்குப் பெரும் பற்று இருப்பதோடு, கோபதாபங்கள் உங்களை விட்டுப் போகவே இல்லை. ஆனால், தனுர்தாசனும் அவன் மனைவியும் பொன் நகைகளை இழந்தும் துளியும் துக்கப்படாமல்... நகைகளை முழுமை யாக எடுக்காமல் அடியவர்கள் சென்று விட்டனரே என்று வருந்தியதைக் கண்டீர்கள்.

அப்படிப்பட்ட தனுர்தாசனின் தோளில் கை போட்டு நடந்ததைப் பெரும் ஆசாரக் குறைவாகப் பேசினீர்கள். இப்போது சொல்லுங் கள் தனுர்தாசன் உயர்ந்தவனா... நீங்களா..?

பிராமணக்குலத்தில் பிறந்தும் ஆசாபாசங்கள் உங்களை விடவில்லை. மறவர் குலமாய் இருப்பினும் தனுர்தாசன் வைராக்கியத்தோடு திகழ்ந்து, நல்லதொரு ஸ்ரீவைஷ்ணவன் ஆகி விட்டான். பிறப்பு ஒரு வழிதான், செயல்தான் எதையும் தீர்மானம் செய்கிறது. அப்படிப் பார்த்தால் தனுர்தாசன் எங்கே, நீங்கள் எங்கே" என்று கேட்டு அனைவரையும் சிந்திக்க வைத்தார் ஸ்ரீராமானுஜர்.



இந்த நிகழ்வுக்குப் பின் தனுர்தாசனை அழைத்துத் திருவரங்க ஆலயக் காப்பாளன் பணியை அவனுக்கு அளித்தார். அதன்படி ஆலயத்தை இரவு பகலாகக் கண் துஞ்சாது அதாவது உறங்காது காத்ததாலும் ஸ்ரீவைஷ்ணவ ஆசாரத்தைக் குரு மூலம் உபதேசிக்கப் பெற்ற தாலும் தனுர்தாசனுக்கு ஒரு தாஸ்ய நாமத்தை யும் வைணவ சித்தாந்தப்படி சூட்டினார். அந்த நாமமே 'பிள்ளை உறங்காவில்லி'. அவன் மனைவியான ஹேமாவு க்கு 'பொன்னாச்சி' என்ற பெயரைச் சூட்டினார். பொன் நகைகளை இழக்க துணிந்தவள் ஆயிற்றே!

இரண்டு பெயர்களும் அவர் களின் செயல்பாட்டை ஞாபகப் படுத்துவதாக இருப்பதை உணர லாம். பின்னர், இவர்களின்

மருமக்களான வண்டவில்லியும் செண்டவில்லியும் ஸ்ரீராமாநுஜ சீடர்கள் ஆயினர். இவர்களையும் ஸ்ரீவைஷ்ணவ மரபின்படி வண்ட அலங்கார தாசர் என்றும் செண்டலங்கார தாசர் என்றும் பெயர் சூட்டி ஏற்றுக்கொண்டார்.

இவர்களின் குலத்தலைவனான அகளங்கனும் ஸ்ரீராமாநுஜரின் சீடனாகி அகளங்க நாட்டாழ்வான் என்ற பரிபூர்ண திருநாமத்தைப் பெற்றான். இதனால் ஸ்ரீவைஷ்ணவம் எல்லா பக்கங்களிலும் எல்லா மனிதர்களிடத்திலும் வேகமாக வளர்ச்சி கண்டது.

விசிஷ்டாத்வைத சித்தாந்தம் மற்ற சித்தாந்தங்களை விலக்கிப் பரிபூரண சித்தாந்தமாக விண்பரிதிபோல ஜொலித்தது. நாராயண



முழக்கம் எட்டு திக்கும் கேட்டது.

எப்போதும் ஒரு நல்ல கனி மரமோ இல்லை பூச்செடியோ பூத்துக் குலுங்கும்போது கண்படும். கண்பட்டாலே பொறாமை உருவாகும். பொறாமை தற்செயலாய்ச் சில விளைவுகளை ஏற்படுத்தும். இது உலக யதார்த்தம்.

உடையவராம் ஸ்ரீராமாநுஜரின் விருத்தியும் திருவரங்க ஆலயத்தை அவர் செய்த நேர்த்தியும் குறிப்பாக நாலாயிரத்தை அவர் திருச்சந்நிதியில் பாடப் பணித்ததைக் கேட்கச் செய்த விதமும், சாதி வேற்றுமை பாராமல் 'ரங்கா' என்று உருக்கமுடன் ஓடி வருவோருக்கெல்லாம் குருவாய் அடைக்கலம் அளித்து, உபதேசம் செய்த செயலும் பலரையும் பொறாமை கொள்ள வைத்தன.

இவர் இருக்கும்வரை நம்மால் தலையெடுக்க முடியாது என்றும் கருதச் செய்தன. அதனால் சிலர், ஸ்ரீராமாநுஜருக்கு விஷம் வைத்துக் கொல்லத் திட்டமிட்டனர்.

அதை மிகச் சுலபமான ஒன்றாகக் கருதினர். அதற்கேற்ப, அவர் தினமும் பிக்ஷை கேட்டு வரும் ஒரு பிராமணர் வீட்டை அடையாளம் கண்டு, அந்த பிக்ஷை உணவில் விஷத்தைக் கலந்துவிட்டனர்.

அந்த உணவை அவருக்குப் பிச்சை இடுகையில், அதை அளித்த பிராமணரின் மனைவி குற்ற உணர்ச்சி தாளாது, முகக்குறிப்புகளால் அவருக்கு விஷம் இருப்பதை உணர்த்திக் காலில் விழுந்து அழ தொடங்கினாள்.

"ஓர் உயிரின் இழப்பின் போதுதான் இப்படியான துக்கம் ஏற்படும். எதை உத்தேசித்து யாரோ இறந்துவிட்டதுபோல் அழுகிறாய். பிக்ஷையின்போது அழலாமா? கண்ணீருடன் இடும் பிக்ஷையை ஏற்பதும் அழகல்லவே எனக்கு" என்றார் ஸ்ரீராமாநுஜர்.

"சுவாமி, நான் இறந்து விட்டதற்காக அழவில்லை. என் கையால் ஒருவர் இறந்து விடப் போகிறாரே என்று நினைத்து பதைபதைத்தே அழுகிறேன்" என்று அவளும் மறைமுகமாக கூறவும், ஸ்ரீராமாநுஜருக்குப் புரிந்தது.

அப்படியே நேராகக் காவிரி ஆற்றை நோக்கி நடந்தவர், உணவை ஆற்றில் கொட்டிவிட்டு, பாத்திரங்களையும் கழுவி கவிழ்த்து வைத்துவிட்டு, தான் வாழக்கூடாது என்று எண்ணியவர்களை உத்தேசித்து அவர்களுக்கு நல்ல புத்தியும் நற்கதியும் ஏற்பட வேண்டி தியானத்தில் அமர்ந்துவிட்டார்.

ஸ்ரீராமாநுஜரின் இந்தச் செயல் சீடர்களுடன் திருவரங்கத்தையே அவரருகே திரட்டி அழைத்து வந்து விட்டது. அவர்களில் திருக்கோஷ்டியூர் நம்பியும் ஒருவர்.

"ராமாநுஜரே நடந்ததை அறிந்தோம். வருந்துகிறோம். ஒரு சந்நியாசி - யோகியைப் பொறுத்தவரையில் இதுவும் ஓர் அனுபவம். இந்த அனுபவம் அந்த யோகியைச் செயல் இழக்கச் செய்தாலோ, பெரிதும் வருந்த வைத்தாலோ அவர் முதிர்ச்சி பெறவில்லை என்று பொருள்.

தாங்களோ மிக முதிர்ந்தவர்! இப்படியே எத்தனை நாள் இருப்பீர். உங்களின் திருப்பணி இதனால் முன்பைவிட வேகம் அடைய

## ‘காலம் வரும்... காத்திருப்போம்!’



ஒருமுறை, புத்தருக்காக குளத்தில் நீர் எடுக்கச் சென்றார் சீடர். அப்போதுதான் யானை ஒன்று நீர் பருகிச் சென்றிருந்ததால், குளத்து நீர் கலங்கிப் போயிருந்தது. ஆகவே, அருகிலுள்ள ஓடையில் தெளிந்த நீரை எடுத்து வரலாம் என்று புறப்பட்டார் சீடர்.

ஆனால், அதற்குள் புத்தர் அழைக்கவே தண்ணீர் எடுக்காமல் திரும்பினார். “தண்ணீர் எங்கே?” என்று புத்தர் கேட்டதும், சீடர் விஷயத்தை விவரித்தார். “ஓடையிலிருந்து நீர் கொண்டு வருகிறேன்” என்றார். ஆனால், புத்தரோ, “குளத்து நீரையே பருகலாமே!” என்றார். சீடர் மீண்டும் குளத்துக்குச் சென்றார். இப்போது, நீர் தெளிந்துவிட்டது. பாத்திரத்தில் நிரப்பிக் கொண்டு வந்தார்.

புத்தர் சொன்னார்: “கலங்கிய குளம் தெளிந்து விட்டது பார்த்தாயா... ஆகவே, எது குறித்தும் அவசர முடிவு எடுக்கக் கூடாது. பிரச்னைகளைச் சந்திக்க நேரும்போது, அவை அமைதியாகும் தருணத்துக்காகக் காத்திருக்க வேண்டும்.”

**– எஸ். மாரியப்பன்,** தேனி

வேண்டுமேயன்றி சுணங்கலாமா” என்று கேட்டார்.

ஸ்ரீராமானுஜர் பதில் சொன்னார்...



“நான் சுணங்கிவிடவில்லை, மேலும் திறம்பட இயங்குவதற்கு ஆத்ம சக்தி வேண்டியே நதிக்கரையில் அமர்ந்தேன். அப்படியே, என்னை அழிக்க நினைப்பவர்களின் செயல்பாடுகள் மாற வேண்டி எம்பெருமானிடம் விண்ணப்பித்தேன்.

பிரம்மனைப் படைத்த அவனே அல்லவா அசுரப் பகைவரையும் படைத்தான். பின் அவனே அல்லவா அவர்களை அழித்தான். அவன் லீலைகளில் இதையும் ஒன்றாகவே கருதுகிறேன். எனக்கு உணவளித்த பெண்மணியின் கண்ணீர் வடிவில், அவன் என் வாழ்வை நீட்டித்த கருணையை நான் என்னவென்பேன்...”

இந்தப் பதிலால் திருக்கோஷ்டியூர் நம்பியை மட்டுமல்லாது, வந்திருந்த அனைவரையும் ஸ்ரீராமானுஜர் திக்குமுக்காடச் செய்தார்.

அதன்பிறகு, ஸ்ரீராமானுஜருக்கான உணவை கிடாம்பி ஆச்சான் என்பவர் சமைத்து வழங்கியதோடு, அவரின் பசியை ஆற்றிடும் பெருந்தொண்டனாகவும் ஆனார்.

மொத்தத்தில் ஸ்ரீராமானுஜரைக் கொல்ல முயன்ற செயல், அவருக்கு உகந்த உணவைச் சமைத்து தரும் ஒரு நல்ல சீடனை தந்தது. இறுதிவரையிலும் தன்னைக் கொல்ல முயன்றவர்களைப் பற்றி அவர் எதுவும் கூறாமல் விட்ட செயல், எதிரிகளிடமும் ஓர் இணக்கத்தை உருவாக்கத் தொடங்கியது.

அவர்கள், ‘இனி ஸ்ரீராமானுஜரோடு மோதுவதில் பயனில்லை. அவருடைய கொள்கையான விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தோடு மோதுவதே சரி’ என்று மாற்று வழிகளை எண்ணத் தொடங்கினார்.

சைவர், சமணர், பௌத்தர் என்கிற சகலரும் இம்மட்டில் ஸ்ரீராமானுஜரை வீழ்த்த சபதம் செய்தனர். அதன் உச்சமாக ஒரு வாதப்போர் பாரத தேசத்தின் பனித்தலைப் பாகமான காஷ்மீரில் நடந்ததுதான் விசித்திரம்.

தன் அத்யந்த சீடனான கூரேசருடன் காஷ்மீரம் சென்ற ஸ்ரீராமானுஜர், அங்குள்ள சமயவாதிகளைத் தன் வாதத் திறமையாலும் சத்தியத்தாலும் வென்றார்.

அதுமட்டுமா?

கல்விக்கு அதிதேவதையான ஸ்ரீசரஸ்வதி தேவியே நேரில் தோன்றி தன் பங்குக்கு ராமானுஜரை ‘ஸ்ரீபாஷ்யகாரர்’ என்றாள்!

– தொடரும்



# பத்மநாப ஸ்வாமிக்குக் கோதுமை அதிரசம்!

புரட்டாசி மாதத்தின் வளர்பிறை சதுர்த்தசி அன்று கடைப்பிடிக்க வேண்டிய விரதம் அனந்த விரதம். இந்த வருடம் 30.9.20 புதன்கிழமை அன்று அனந்த விரதம் அனுஷ்டிக்கவேண்டும்.

அன்று அதிகாலையில் நீராடி, தூய்மையான ஆடை அணிந்து, பூஜைக்குரிய இடத்தைப் பசுஞ்சாணத்தால் மெழுகவேண்டும்.

ஐந்து விதமான வண்ணங்களில் கோலம் போட்டு தீர்த்தக் கலசம் வைத்து, அனந்த பத்மநாபனை தியானித்து பூஜை செய்ய வேண்டும்.

ஐந்து படி கோதுமை மாவில் வெல்லம் சேர்த்து, 28 அதிரசங்கள் செய்யவேண்டும். இவற்றில் பதினான்கை, வேதியர்களுக்குத் தந்து தாம்பூலம் மற்றும் தட்சிணை அளிக்க வேண்டும். மீதியை நாம் உண்ண வேண்டும்.

பூஜைக்குரிய பொருள்கள் அனைத்தும் பதினான்கு என்ற எண்ணிக்கையில் இருக்க வேண்டும். பக்தியுடன் இந்த விரதத்தைச் செய்தால், தீராத வினைகளெல்லாம் தீரும். அளவிட முடியாத ஐஸ்வரியங்கள் வந்து சேரும். நாம் நினைத்த காரியங்கள் தடை ஏதுமின்றி நினைத்தபடி நிறைவேறும்.

– *கே.சுபா, திருநெல்வேலி-3*

**இ**றைவனைக் காணும் இதயத்து இருள்கெட ஞானம் என்னும்
நிறை விளக்கு ஏற்றிய பூதத் திருவடி தாள்கள் நெஞ்சத்து
உறைய வைத்து ஆளும் இராமானுசன் புகழோதும் நல்லோர்
மறையினைக் காத்து இந்த மண்ணகத்தே மன்ன வைப்பவரே

- இராமாநுச நூற்றந்தாதி...

**க**லைமகளாலேயே 'ஸ்ரீபாஷ்யக்காரர்' என்று அருளப் பெற்ற ஸ்ரீராமாநுஜரின் புகழ், பரந்த பாரத தேசமெங்கும் வேகமாய்ப் பரவிற்று. அவரின் செயல்வேகமும் இதனால் கூடிற்று. தன் ஆத்ம குருவான ஆளவந்தாரின் பெரு விருப்பங்களில் ஒன்றான பிரம்மசூத்திரத்துக்கு அவர் செய்த விரிவுரை பெரும் பதிவாயிற்று. தொடர்ந்து அவர் பல நூல்களை எழுதினார்.

கூடவே, வைணவ நெறி உலகம் எல்லாம் பரவும் விதம்... தன்னைப் பின்தொடர்வோரில் சிறப்புகள் பல உடையோரைத் தேர்வு செய்து, அவர்களைத் தன் பிரதான சீடர்களாகத் தனித்தனியே அடியொற்றி இயங்கும்படிச் செய்தார். அவ்வகையில், 72 பேரை தேர்வு செய்து அவர்களை எல்லா பக்கங்களிலும் அனுப்பி, மானுட வாழ்வின் கசடுகள் நீங்கிட போதிக்கச் செய்தார்.



ஒலி எனில் அதற்கு ஒரு எதிரொலி இருப்பதுபோல் ஸ்ரீராமாநுஜரின் இந்த வேகமான செயல்பாடுகளுக்கு எதிர்வினைகளும் ஏற்படலாயின. குறிப்பாக சைவர், சமணர், ஸ்ரீராமாநுஜரைத் தங்களின் எதிரியாகக் கருதியதோடு, அவர் அழிக்கப்பட்டால்தான் தங்களின் கருத்துக்கள் செல்லுபடியாகும் என்று கருதினர்.

எதிர்த்தவர்களில் முக்கியமானவன் தஞ்சையை ஆண்ட சோழர்களில் ஒருவன். இவனை 'கிருமி கண்ட சோழன்' என்றும் குறிப்பிட்டுள்ளனர். சோழ அரசன் சைவநெறியைப் பின்பற்றி வந்தவன். ஸ்ரீராமாநுஜரின் விசிஷ்டாத்வைத சித்தாந்தம் தவறானது என்று கருதினான். அப்படி அவன் கருதும்படி அவனை உற்ற சைவ நெறியாளர்கள் பேசினர். இதனால், அவன் ஸ்ரீராமாநுஜரோடு பிணக்கு கொண்டு அவரை அழைத்து வந்து பணியவைக்க திட்டமிட்டான்.

இதற்குப் பின்னால் நாலூரான் என்கிற வைணவர்தான் இருந்தார். ஸ்ரீராமாநுஜர் சைவ சித்தாந்தத்தின் பெரும் எதிரி என்பதுபோல சோழனை எண்ணச் செய்தார். இதைத் தன் நண்பர்கள் மூலம் அறிந்த கூரத்தாழ்வான், சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தார். ஸ்ரீராமாநுஜர் சோழனைச் சென்று பார்ப்பது ஸ்ரீராமாநுஜரின் குரு ஸ்தானத்துக்கு அழகில்லை. அவரைப் பார்க்க அரசன் வருவதே சரியாகும். ஆனால், அரசன் அவ்வாறு நடவாமல், தன் வீரர்களை ஏவி விட்டதை





கூரத்தாழ்வான் இழிவாகக் கருதினார். எனவே சோழ அரசனுக்குப் பாடம் கற்பிக்க விரும்பி, தானே ஸ்ரீராமானுஜர் வேடத்தில் செல்ல முடிவு செய்தார்.

தன் குரு எந்த நிலையிலும் சிறு இழிவுக்கும் ஆளாகிவிடக்கூடாது என்று விரும்பினார். இக்கருத்தை அவர் ஸ்ரீராமானுஜரிடம் கூறியபோது, ஸ்ரீராமானுஜர் ஓர் யாத்திரைக்கான ஏற்பாட்டில் இருந்தார். அதைக் கைவிட்டு சோழனைச் சந்திக்கத் தயாரானார். ஆனால், கூரத்தாழ்வான் அவரைத் தடுத்தார்.

"தவறாகக் கருதாதீர்கள். தங்கள் யாத்திரை நிற்கக்கூடாது. சோழ அரசன் உங்களைச் சிறையில்கூட அடைக்க நேரலாம். அதனால் தங்களுக்குச் சோர்வும் தடையும் ஏற்பட்டுத் தாங்கள் செயலற்றுப் போவீர்கள், என்பது அவன் திட்டமாக இருக்கலாம்.

உண்மையில் அவனுக்குத் தன் கொள்கை பெரிது என்றால், தைரியமாக நேரில் அல்லவா அவன் வந்திருக்க வேண்டும். பெரிதும் முரணும் மாறுபட்ட கருத்தும் கொண்ட வடவர்களையே தாங்கள் வென்று விட்ட நிலையில், இந்தச் சோழன் ஒரு பொருட்டே இல்லை. மேலும், தாங்கள் நேரில் செல்ல எண்ணுவது தங்கள் ஸ்தானத்துக்கும் அழகில்லை; தங்களின் நோக்கத்திற்கும் அது சரியில்லை" என்றார்.

இங்ஙனம் ஸ்ரீராமானுஜரை மைசூர் நோக்கிய யாத்திரைக்குத் தயார்படுத்திய கூரத்தாழ்வான், எவரும் அறியாதபடி பெரிய நம்பியைத் துணைக்கு அழைத்துக்கொண்டு, திரிதண்டமுடன் காவி கோலத்தில் சோழன் முன் நின்றார். துணிவுடனும் தெளிவுடனும் நின்றார் என்றே சொல்ல வேண்டும்.



சோழனும் கூரத்தாழ்வானை ஸ்ரீராமானுஜர் என்று கருதியே வரவேற்றான். ஆனால் வந்திருப்பது கூரேசர் என்பதைச் சோழனின் அவையிலிருந்த நாலூரான் கண்டுகொண்டதுடன், "என்ன கூரேசா... இது என்ன ஆள்மாறாட்டம்?"என்று கேட்கவும் செய்தான்.

"உங்கள் சந்தேகங்களைத் தெளிவுபடுத்த நான் போதும்; என் குரு எதற்கு. ஆகவேதான் நான் வந்திருக்கிறேன்" என்றார் கூரேசர்.

"என்ன எங்களுக்குச் சந்தேகமா?" நாலூரான் விடைத்தான்.

"அதிலும் கூடவா சந்தேகம்?" என்று கிண்டலாக பதிலுரைத்தார் கூரேசர்.

"உளறாதே... ராமானுஜர் எங்கே?"

"அவர் இப்போது இந்தச் சோழ நாட்டிலேயே இல்லை. யாத்திரை சென்றிருக்கிறார்."

"இந்தச் சபையைச் சந்திக்கப் பயந்து ஓடி விட்டாரா?"

"இந்த வாலுக்கே அந்தப் பயம் துளியும் இல்லை. அப்படியிருக்க தலையா அஞ்சப் போகிறது..."

"ஒரு குற்றச்செயலைப் புரிந்துவிட்டு திமிராக வேறு பேசுகிறாயா?"

"எது குற்றச் செயல்? இந்த நானிலத்தில் வைணவ நெறியைப் பரப்புவதா, இல்லை வைணவனாக இருப்பதா?"

"நீ எப்படி வேண்டுமானால் இரு. ஆனால் நானே அறுதியானவன்; எனக்குப் பிறகே எதுவும் என்றெல்லாமா சொல்வது?"

"அந்த மாலே எல்லாம் வல்லவன். அவனுக்குள் எல்லாம் அடக்கம். இதுவே எங்கள் வரையில் பரசத்யம். அந்தச் சத்தியத்தை யார் வேண்டுமானாலும் பேசலாம்."

கூரேசனின் பதில் நாலூரானைக் கிளறிற்று.

"அரசே இவன் என்ன பேச்சு பேசுகிறான் பார்த்தீர்களா? நீங்கள் சிவமே பெரிது என்று சொல்வதை, அப்படியே மாற்றி 'திருமாலே பெரியவர்' என்கிறான்" என்ற நாலூரான், அதுவரை அமைதியாக இருந்த அரசனைத் துணைக்கு அழைத்தான். அரசனும் இணையலானான்.

"கூரேசா! இது என்ன பேச்சு? இது அரச சபை. நீ இந்நாட்டின் பிரஜை... ஞாபகம் இருக்கட்டும்."

"அரசர்பிரானே! நானாகப் பேசவில்லை. உங்கள் நாலூரான் பேசவைக்கிறார். நான் என்ன செய்வேன்?"

"சரி, நான் கேட்கிறேன் சிவம் பெரிதா? பெருமாள் பெரிதா?"

"பன்னிரு காப்புடன் உள்ள என் வரையில் பெரிது சிறிதே இல்லை. இருப்பதே ஒன்றே ஒன்றுதான். அது அந்த மாயவனும் அவன் திருவடிகளுமே!"

கூரேசர் கூற்றைத் தொடர்ந்து நாலூரான் இடையிட்டான். "அரசே இவனிடம் பேசினால் அது நமக்கு இழிவு. ஒன்று மட்டும் உறுதி. இவர்களை இப்படியே விட்டால் இம்மண்ணில் ஒரு சிவாலயம்கூட இருக்காது. அவ்வளவும் விஷ்ணு மயமாகிவிடும்."

"சர்வம் விஷ்ணு மயம் ஜகத்.. என்பதுதானே சான்றோர் வாக்கு."

"பேசாதே! ராமானுஜரைக் கட்டுப்படுத்தத்தான்

அழைத்து வரப் பணித்தோம். அவர் கையால் சைவமும் சிவமும் உயர்ந்தது என்று எழுதி வாங்காமல் விடப்போவதில்லை."

"பெரிது சிறிதே இல்லை... ஒன்றே ஒன்றுதான்! உங்கள் வரையில் அது சிவம் என்றால், எங்கள் வரையில் அது விஷ்ணு... அடுத்து எதையும் வற்புறுத்திப் பெறுவது என்பது எந்த விஷயத்திற்கும் அழகல்ல. என்னிடம் அப்படி எதையும் பெற்றிட முடியாது. என்னிடமே பெற முடியாத நிலையில் என் குருவிடம்... அதை நினைத்துக்கூடப் பார்க்க முடியாது."

"இந்த மமதைப் பேச்செல்லாம் உடம்பில் தெம்பு உள்ளவரைதான். கட்டி வைத்துச் சவுக்கால் அடிக்கும்போது தெரிந்துவிடும், உன் உறுதி எதுவரை என்று ..."

"உயிரே ஒரு பொருட்டு இல்லை எனும்போது இந்த மிரட்டலுக்கும் உடல் உபாதைக்குமா அஞ்சுவேன்..?"

கூரேசன் துளியும் சளைக்கவில்லை. பெரிய நம்பிக்கோ அது ஆச்சர்யமாக மட்டுமன்றி அச்சமாகவும் இருந்தது. ஒரு மிகப்பெரும் காரியம் நடக்கப் போவதாக அவருக்குத் தோன்றியது.

நாலூரானை அவருக்கு நன்கு தெரியும். நாலூரானின் தந்தை விஷ்ணு ஆலயம் ஒன்றின் காப்பாளராக இருந்தவர். அதிகாரியான அவர் ஆலய விஷயத்தில் சர்வாதி காரமாக நடந்துகொண்டவர். உற்சவக் காலங்களில் அவர் வருகைக்காக பெருமாளே சப்பரத்தில் காத்திருக்க நேர்ந்தது. அவர் வந்து பரிவட்டம் கட்டி மரியாதை செலுத்திய பிறகே வீதியுலா புறப்படும்.

அதேபோல் அவருக்கு உரியவர்களுக்கே முதல் மரியாதை... மாலடியார்கள் அவரால் பின்தள்ளப் பட்டனர். இதனால் சம்பிரதாயங்களில் ஏகப்பட்ட ஏற்றத்தாழ்வு. ஸ்ரீராமாநுஜர் இதை அறிந்து, அவரைப் பொறுப்பிலிருந்து நீக்கி ஆலயச் செயல்பாடுகளைச் சீர்செய்தார். பெரியவர் சிறியவர் எனும் பாகுபாட்டை நீக்கினார். நாலூரானின் தந்தை செய்த பல ஊழல்களைக் கண்டுபிடித்து ஊர் முன் நிறுத்தினார்.

இவற்றால் நாலூரானின் மனத்தில் விளைந்த கோபம்தான் சோழனின் மனத்தில் தூபம் போட்டது; ஸ்ரீராமாநுஜரை அழைத்து வரச் செய்து அவரை தண்டிக்கத் துடிக்கிறது என்பதை பெரியநம்பி புரிந்துகொண்டார்.

இது ஒரு பழிவாங்கும் செயல். அந்தப் பழி உணர்ச்சி நாலூரானிடம் பொங்கி வழிந்தது.

"அரசே, இனியும் இவனைப் பேச விடக்கூடாது. இவனைச் சவுக்கால் அடிப்பதால் பெரிய பயன் இல்லை. இவன் கண்களைப் பறிக்கவேண்டும். அதைக் கண்டு இவனையொத்தவர்கள் அஞ்ச வேண்டும்" என்றான்.

ஆனால் கூரேசரோ "அடப்பாவி! இப்படிச் சொன்னால் நாங்கள் பயந்துவிடுவோமா? நீ என்ன என் கண்களைப் பறிப்பது? உன் போன்றவர்களைக் கண்ட இந்தக் கண்கள் இருப்பதும் ஒன்றுதான் இல்லாமல் இருப்பதும் ஒன்றுதான்" என்றவாறு, தன் கண்களைத் தன் கைகளால்தானே பெயர்த்து எடுத்து சபையையே அதிர வைத்தார்.

**பூவுலக மனித வாழ்வு மாயைகள் மிகுந்தது. இங்கே ஒரு மனிதன் ஆணவப்பட்டால் அழிந்துபோவான்!**

அந்த நொடியில் சோழனும் தான் தவறு செய்து விட்டதாகக் கருதினான். ஒருவைணவனைப் பொறுத்தவரையில் குருபக்தியும் கொள்கையும் அவனுடைய இரு கண்களை விடவும் மேலானவை. இதைக் கூரத்தாழ்வான் உணர்த்தி விட்டதாகக் கருதினான். பெரிய நம்பியோ நடந்ததை எண்ணி மனம் கலங்கினார்.

கூரத்தாழ்வான் கண்களை இழந்துவிட்டதை எண்ணி வருந்தியவர், அந்த வேதனையிலேயே மாரடைப்பால் உயிர்நீத்தார். தனியே திருவரங்கம் திரும்பிய கூரத்தாழ்வானைக் கண்டு திருவரங்கமே வியந்தது.

அதேநேரம், ஸ்ரீராமாநுஜர் மைசூர் பக்கமாய் யாத்திரை சென்றுவிட்ட நிலையில், திருவரங்கத்தில் தனித்து இருக்கப் பிடிக்காமல், மதுரை ஒட்டிய அழகர்மலை என்னும் திருமாலிருஞ்சோலைக்குச் சென்று தங்கினார் கூரத்தாழ்வான்.

கூரத்தாழ்வானுக்கு நேர்ந்த கதி ஸ்ரீராமாநுஜரின் செவிகளை அடைந்தபோது அவர் மைசூரில் இருந்தார். பெரியநம்பி பரமபதம் அடைந்த செய்தி ஸ்ரீராமாநுஜரை, ஒரு துறவி என்னும் தன்மையை மீறிக் கண்கலங்கச் செய்தது. அந்த நொடியே பெரிய நம்பிக்கு மோட்சம் சித்திக்கவும் கூரத்தாழ்வான் மனம் அமைதி பெறவும், தியானிக்கலானார்.

உடனிருந்த சீடர்களில் சிலர் இதுகுறித்து









ஸ்ரீராமானுஜரிடம் விவாதிக்கலாயினர். "சுவாமி! இது என்ன சோதனை? தங்களை ஆட்கொண்ட எம்பெருமான், ஏன் சோழனை ஆட்கொள்ளவில்லை. எதனால் தங்களைச் சோழன் எதிரியாகக் கருதினான். ஏன் இப்படியெல்லாம் நடக்கின்றன?" என்று கேட்டனர்.

ஸ்ரீ ராமானுஜர் தீர்க்கமாய்ப் பதில் கூறலானார்.

"பூவுலக மனித வாழ்வு மாயைகள் மிகுந்தது. இங்கே ஒரு மனிதன் ஆணவப்பட்டால் அழிந்து போவான். அந்த ஆணவமே ஒருவனை 'நான்... நான்..' என்று பேசச் செய்கிறது. இயக்கத்துக்குக் காரணமும் அதுவே, மயக்கத்துக்குக் காரணமும் அதுவே!

இந்த 'நான்' என்கிற மாமசாரத்தை நான்கூட என்னை அறியாது சில காலம் என்னுள் கொண்டிருந்தேன். திருக்கோட்டியூர் நம்பி என்னும் ஆசார்ய பெருமகனால் பெரும் தெளிவு பெற்றேன். எனக்கு ஓர் ஆசார்ய நம்பி கிட்டியதுபோல, சோழனுக்கு ஒருவர் கிடைக்கவில்லை. கிடைத்திருந்தால் இவ்வாறு நடந்திருக்காது.

எதையும் நாம் அது நம் விருப்பத்திற்கேற்ப  அனுமானிக்கலாம். ஆனால் நடந்தது, நடப்பது, நடக்கப்போவது எல்லாம் அவன் செயல். கூரத்தாழ்வான் கண்களை இழந்ததும் அவன் செயலே. இதன் மூலம் வரலாற்றில் இடம் பெற்றுவிட்டார் கூரத்தாழ்வான். புறக் கண்களை விட அகக் கண்களைத் திறப்பதே சாலச் சிறந்த செயல் என்பதையும் அவர் உணர்த்திவிட்டார்.

நிலத்தை உழுது புண்படுத்தாமல் பண்படுத்த இயலாது. கூரத்தாழ்வான் தன் கண்களைப் புண்ணாக்கி, வைணவத்தைப் பண்படுத்தி, 'மாலடியார் ஆசார்யனுக்கு மட்டுமே தலை வணங்குவர், ஆணவம் மிக்கோருக்கல்ல' என்பதை உணர்த்திவிட்டார். நான் அதை எண்ணி மகிழ்கிறேன். வாழ்க கூரத்தாழ்வானின் திடச் சித்தம்!" என்று ஒரு பிரசங்கமே நிகழ்த்தினார்.

ஸ்ரீராமானுஜர் மைசூரை அடைந்த காலத்தில், மைசூர் மன்னன் - ஹொய்சாள வம்சத்தவனாகிய விட்டலதேவராயனின் மகள் ஒரு பேயால் பிடிக்கப்பட்டு அலங்கோலமாய் இருந்தாள். அவளை ஆசனம் ஒன்றில் இரும்புச் சங்கிலிகளால் கட்டிப்போட்டிருந்தனர். அவள் அருகில் நெருங்கக்கூட பயந்தனர். முதலில் அவளைப் பைத்தியம் என்று கருதினர். பிறகு அவள் துர்ஆத்மாவின் வசம் அகப்பட்டுவிட்டது தெரியவந்தது. தோழிகளுடன் வனத்திற்கு விளையாடச் சென்றவளை, அங்குள்ள மரமொன்றைச் சுற்றி அலைந்த துர்ஆத்மா பிடித்துவிட்டிருந்தது.

இது ஒருவகை ஆத்ம அவஸ்தை... இது எல்லோருக்கும் நிகழாது. ஒருவர் ஜாதகத்தில் ஆத்மகாரகனான சூரியன் நீசமாகி, குரு பார்வையும் இல்லாது போய், சந்திரனும் தீயோர் சேர்க்கையில் இருக்க... இவ்வாறு நிகழும். இது ஒரு வகை ஜாதக அமைப்பு. அதேநேரம் பூர்வ புண்ணிய ஸ்தானம் வலிமை பெற்று இருந்தால், அந்தப் புண்ணியம் உரிய நேரத்தில் காரியமாற்றி அவரைக் காப்பாற்றிவிடும்.

அரசன் மகள் ஜாதகத்திலும் இதே கணக்குதான். அவளின் பூர்வபுண்ணியம், ஸ்ரீராமானுஜர் என்கிற ஜகத்குருவின் பார்வையில் படச் செய்தது அவளை. அரசன் விட்டல தேவராயன் சமண சார்பு கொண்டிருந்தான். சமணத் துறவிகளை அழைத்து வந்து மகளைப் பிடித்த பேயை விடுவிக்கப் பார்த்தான். முடியவில்லை. பின்னர், ஸ்ரீராமானுஜரைப் பற்றி அறிந்து, அவரை அழைத்து வந்து மகளைக் காட்டினான்.

ஆதிசேஷனின் அம்சமான ஸ்ரீராமானுஜரைப் பார்த்த மாத்திரத்தில் அந்தப் பேய் ஒடுங்கிவிட்டது; அவளின் உடலைவிட்டு ஓடிப் போனது. இந்தச் சம்பவம், உடல் உள்ளம் என இரண்டிலும் ஸ்ரீராமானுஜர் எவ்வளவு தூய்மையானவர் என்பதை விட்டல தேவராயனுக்கு உணர்த்தியது.

அவன் ஒரு யுத்தத்தில் பங்கெடுத்ததில் ஊனப்பட்டிருந்தான். ஊனமுற்ற அவனிடம் எதையும் பெறுவது தங்களுக்கு அழகல்ல என்று சமண சமயவாதிகள் நினைத்த நிலையில், ஸ்ரீராமானுஜரோ உன் போன்றவர்களுக்கு என் போன்றோரின் பெரும் துணை அவசியம் என்பதுபோல நடந்து, அவனுக்கு ஆறுதல் அளித்தார்.

அவனும் "இனி நீங்களே என்குரு, என் வழியும் வைணவம்" என்று அறிவித்தான்.

ஒருசோழனால் வந்ததுன்பம் ஹொய்சாளனால் தூள்தூளாகிப் போனது. ஸ்ரீராமானுஜர் வைணவ மரபின்படி அவனுக்கு விஷ்ணுவர்த்தன் என்கிற புதிய பெயரைச் சூட்டினார்.

- தொடரும்...



இந்திரா சௌந்தர்ராஜன் படங்கள்: காவல்கேணி வெங்கடகிருஷ்ணன்

# ரங்க ராஜ்ஜியம் 66

*'பார்த்தான் அறு சமயங்கள் பதைப்ப, இப்பார்முழுதும்*
*போர்த்தான் புகழ் கொண்டு புன்மையினேனிடைத்தான் புகுந்து,*
*தீர்த்தான் இருவினை தீர்த்து அரங்கன் செய்ய தாளினையோடு*
*ஆர்த்தான் இவை எம்மிராமானுசன் செய்யும் அற்புதமே...*

**-இராமானுச நூற்றந்தாதி- 52**

டெல்லி சுல்தான் மாளிகைக்கு மைசூர் செல்லப்பிள்ளை சென்ற விதமே அலாதியானது. அதை அறியும் முன் திருநாராயணபுரம் என்கிற மேல்கோட்டை எப்படி உருவாயிற்று என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

விஷ்ணுவர்த்தனின் மகளைப் பிடித்த பேயை ஸ்ரீராமாநுஜர் விலக்கவும், அவரைத் தன் சென்னிமேல் வைத்துக் கொண்டாடத் தொடங்கிவிட்டான் விஷ்ணுவர்த்தன். ஸ்ரீராமாநுஜர் தன்னுடனேயே இருந்து, தன் குலத்துக்குக் குருவாகி வழிநடத்த வேண்டும் என்றும் அவரிடம் பிரார்த்தித்தான்.

அப்போது சமணத்துறவிகள்தான் பெரிதும் அவனைச் சார்ந்திருந்தனர். ஸ்ரீராமாநுஜரின் வருகை அவர்களில் பலரையும் மனம் மாறச் செய்துவிட்டிருந்தது. ஆயினும் அவர்களில் சிலர், ஸ்ரீராமாநுஜர் அங்கிருந்து சென்றபின், திரும்பவும் தங்களால் விஷ்ணுவர்த்த ராயனைத் தங்கள் பக்கம் திருப்ப முடியும் என்று கருதினர்.

இன்னும் சிலரோ ஸ்ரீராமாநுஜர் அப்போது முதுமையைக் கடந்துகொண்டிருப்பதைக் கண்டு "இவர் இன்னும் சில காலம் இருப்பார். நாம் அதுவரை பொறுத்திருப்போம். வேறு வழியில்லை" என்று எண்ணம் கொண்டிருந்தனர்.

இவையெல்லாம் ஸ்ரீராமாநுஜரின் கவனத்துக்கும் வந்தன. தான் ஏற்படுத்திய மாற்றம், தான் இல்லாத பட்சத்தில் ஒரு தற்காலிகமானதாக மட்டுமே இருந்துவிடும் என்கிற யதார்த்தத்தை ஸ்ரீராமாநுஜர் புரிந்துகொண்டார். அதற்கு நிரந்தர தீர்வு காண விரும்பினார்.

இந்த நேரத்தில்தான் அரசன் விஷ்ணு வர்த்தனின் முன்னோர், ஒரு காட்டுக்குள் பெருமாளைத் தங்கள் குல தெய்வமாக வைத்து வணங்கி வந்தனர் என்ற தகவலும், கால மாற்றம் சமணர்களின் வருகை மற்றும் அந்நிய படையெடுப்பால் அவர்களின் அந்தக் கோயில் அழிந்து போனது என்ற தகவலும் தெரிய வந்தன. இந்தச் செய்திகள் ஸ்ரீராமாநுஜரை அடைந்த நேரம், அதுவரை விண்ணில் மேகங்களால் மறைக்கப்பட்டிருந்த சூரியன் விடுபட்டு ஒளியைத் தரலானான்.

அக்காட்சியைக் கண்ட ஸ்ரீராமாநுஜர் அப்போது தெரிந்த சூரியனைப் பெருமாளாகவும், மறைந்திருந்த மேகக் கூட்டத்தைக் கசப்பான கடந்த காலமாகவும் எண்ணிப் பார்த்தார். இது ஒருவகை நிமித்தம்!

'எப்படி இப்போது சூரியன் புலப்பட்டானோ, அதுபோல் அக்காட்டில் மறைந்துவிட்ட எம்பெருமானும் புலப்படுவான்' என்கிற ஓர் எண்ணம், அந்தக் கோயிலை கண்டறியத் தூண்டியது. ஸ்ரீராமாநுஜர் தன் எண்ணத்தை ஸ்ரீவிஷ்ணுவர்த்தனிடம் சொன்னார்.

விஷ்ணுவர்த்தனும் அக்காட்டைத் திருத்தும் நோக்குடன், அக்காட்டை ஒட்டி வாழ்ந்த பஞ்சமர்களை ஸ்ரீராமாநுஜருக்கு உதவிடப் பணித்தான். தங்களுக்கென்று ஒரு அடையாளமின்றி, கல்விகேள்விகளுக்கும் இடமின்றி, உழைத்தாலே சோறு என்கிற நிலையில் உடல்

உழைப்பை மட்டுமே நம்பி வாழவேண்டிய நிலையில் அவர்கள் இருப்பதைக் கண்ட ஸ்ரீராமாநுஜர், அந்த மக்களிடம் பெரிதும் கனிவைக் காட்டி வழிநடத்தினார்.

அந்தக் காட்டுக்கு 'யதுகிரிக் காடு' என்றொரு பெயரும் இருந்தது. அப்பெயரின்படி பார்த்தால் யாதவனாகிய கிருஷ்ணன் தொடர்புடையவர்கள் அவனுக்கான யுகத்தில் அந்தப் பகுதியில் வாழ்ந்து இருக்க வேண்டும் என்றும் யூகித்தார். பகவான் கிருஷ்ணனும் தன் அவதார நாள்களில் அந்த மலைப் பகுதிக்கு வந்திருக்க வேண்டும் என்றெல்லாம் யோசித்த ஸ்ரீராமாநுஜரின் நம்பிக்கை வீண்போகவில்லை.

அந்தக் காட்ந்த் திருத்திச் செடிகளையும் மரங்களையும் வெட்டி வீழ்த்திய நிலையில், ஆங்காங்கே ஆலயத் தடயங்கள் தெரிந்தன. தங்க நகைகளுடன் எம்பெருமானின் திருவுருவச் சிலைகளும் கிடைக்கத் தொடங்கின. தான் தோண்டிய ஓர் இடத்தில் கிடைத்த எம்பெருமானின் சிலை ரூபத்தைத் தூக்கிக்கொண்டு ஸ்ரீராமாநுஜரைத் தேடி வந்தவன் அவரிடம் அதைக் காட்டியபோது, அவனோடு சேர்ந்து அப்பெருமானை விழுந்து வணங்கினார் ஸ்ரீராமாநுஜர். அவன் ஆச்சர்யமும் அதிர்ச்சியும் அடைந்தான்.

ஸ்ரீராமாநுஜரோ "எதிரியால் புதையுண்டவன் உங்களால் மீண்டும் வெளிப்பட்டு, உங்களுக்குப் பெருமை சேர்த்து விட்டான். இனி நீங்கள் எதிலும் தாழ்ந்தவர் அல்ல" என்றார்.

"அப்படி என்றால் நாங்கள் யார்?" என்று கேள்வி எழுப்பினார் ஒருவர். .

"திருக்குலத்தவர், எம்பெருமானின் கருணைக்கே உரித்தான திருக்குலத்தவர்" என்றார் ஸ்ரீராமாநுஜர். அதைக் கேட்டு அவர்களும் ஆர்ப்பரித்தனர். அங்கே வேகமாக ஆலயப் பணிகள் நடக்கத் தொடங்கின. ஸ்ரீவிஷ்ணுவர்த்தன் ஸ்ரீராமாநுஜரிடம் அந்த ஆலயப் பணிகள் தொடர்பாய் ஒரு கருத்தைக் கூறினான்.

"ஸ்வாமி! நடப்பது எல்லாமே அற்புதமாக இருக்கின்றன. உங்களால் என் வாழ்வு மட்டுமல்ல இந்த அகண்ட மைசூர் சாம்ராஜ்ஜியத்துக்கே ஒளி வந்துவிட்டது போல் உணர்கிறேன்."

"நீ என்னை அதிகம் புகழ்கிறாய்!"

"இல்லை ஸ்வாமி. நான் கூறுவது உண்மை. புதிய ஆலயம் மீளும் என்று நான் நினைத்துக் கூடப் பார்த்ததில்லை. இதையெல்லாம் பார்க்கும்போது, இங்கிருந்து மிலேச்சர்களால் கொள்ளையடித்துச் செல்லப்பட்டவையும் திரும்பக் கிடைத்தால் எப்படி இருக்கும் என்று தோன்றுகிறது."

"புதைந்து போனவையே திரும்பக் கிடைக்கும் போது, நீ சொல்வதும் நடக்கும்."

"அப்படியானால், களவாடப்பட்ட உற்சவ மூர்த்தி விக்கிரகமும் கிடைத்துவிடும் என்று சொல்லுங்கள்."

"யாரால், எப்போது அது களவாடப் பட்டது?"

"இன்று தில்லியை ஆட்சி செய்வோரின் முன்னோரால்."

"அவர்கள், உருவ வழிபாட்டுக்கு எதிரானவர்கள். அதனால் வழிபடப்படும் உருவங்களை அழித்து விடுவார்கள். ஆனாலும்..."

"என்னவென்று கூறுங்கள்..."

"அது பெரிதும் வழிபடப்பட்ட மூர்த்தம் தானே..."

"அதில் என்ன சந்தேகம். உற்சவ மூர்த்தியாய் இந்த மைசூரைச் சுற்றி வந்த தெய்வம் அது. நாடே வணங்கியதே!"

"அப்படியானால், நம் கருத்துப்படி அதற்கென்று ஒரு சக்தி உண்டு. எம்பெருமான் அதனுள் என்றும் தன்னை உயிர்ப்புடனேயே வைத்திருப்பான்."

"நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்..."

"அது அழிந்திருக்காது. அழிந்திருக்க முடியாது. என்றும் அருளப்போவதே அது."

"நீங்கள் சொல்வது உண்மைதான். அந்த உற்சவமூர்த்தியைச் சுல்தானின் சகோதரி தனக்கான விளையாட்டுப் பொருளாக வைத்துக்கொண்டிருப்பதாக எனக்கு நம்பகமான தகவல் ஒன்றும் கிடைத்தது."

## 'காசியில் வாசி அவிநாசி!'



**கோ**வையிலிருந்து ஈரோடு செல்லும் சாலை யில் அமைந்திருக்கிறது அவிநாசி. இங்குள்ள சிவாலயம் பிரசித்திபெற்றது. 'காசியில் வாசி அவிநாசி' என்பார்கள் பெரியோர்கள்.

காசிக்குச் சென்று வழிபட முடியவில்லை என்றால், அவிநாசிக்குச் சென்று இத்தல ஈசனை வழிபடலாம். அதன் மூலம் காசிக்குச் சென்று காசிவிஸ்வநாதரை வழிபட்ட புண்ணியம் கிடைக்கும் என்பது நம்பிக்கை.

இங்கே அம்பாள் சந்நிதியில் பின்பக்க மாடத்தில் தேளின் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. இங்கு விளக்கேற்றி வழிபடுவார்கள். இதன் மூலம் விஷக்கடி பாதிப்புகளிலிருந்து விடுபடலாம் என்பது பக்தர்களது நம்பிக்கை.

- **மல்லிகா அன்பழகன்,** *சென்னை-78*

"என்றால், அதை நாம் திரும்பப் பெறலாமே..."

"திரும்பப் பெறுவதா... அதுவும் எதிரியான தில்லி சுல்தானிடமிருந்தா?"

"ஏன் முடியாது?"

"எப்படி ஸ்வாமி... நான் கேள்விப்பட்ட தகவல் அனுமானமாகக்கூட இருக்கலாம். ஒருவேளை உண்மை என்றாலும், நாம் வழிபட விரும்புவதைச் சுல்தான் ஆதரிப்பானா? தன் மதமும் மதக் கொள்கையும் தழைப்பதை விரும்புபவன், எப்படித் திரும்பத் தருவான்?"



"விஷ்ணுவர்த்தா... அக்கடா என்று திருவரங்கத்திலிருந்த நான் இங்கு வருவேன் என்று நீ நினைத்தாயா? உன் மகளைப் பேய் பிடிக்கும் என நீ கற்பனையிலாவது நினைத்துப் பார்த்தாயா... அவள் குணமானதும், இன்று யதுகிரிக்காடு திருத்தம் கண்டு புதைந்த ஆலயம் திரும்பக் கிடைத்ததும் எப்படி?"

"புரிகிறது... அவன் ஆட்டுவிக்கிறான்; நாம் ஆடுகிறோம்... அப்படித்தானே?"

"அப்படியேதான்... இப்போதும் அவனே என்னுள் இருந்து பேசுகிறான். அவன் திரும்பக் கிடைப்பான் என்றே எனக்குப் படுகிறது. நான் தில்லிக்குச் செல்ல ஏற்பாடு செய். திருக்குலத் தவர்களே எனக்குத் துணையாக வரட்டும். அவர்கள் துணையோடு நான் அந்த உற்சவ மூர்த்தியுடன் திரும்ப வருவேன்."

ஸ்ரீராமாநுஜர் உறுதிபடக் கூறினார். ஸ்ரீவிஷ்ணுவர்த்தனும் பயண ஏற்பாடுகளைச் செய்தான்.

தில்லிப் பட்டணம்... பாரத தேசத்தின் தொண்டைப் பகுதி. தலைப்பாகமான பனி மலை காஷ்மீரம் வரை ஸ்ரீராமாநுஜர் சென்று வந்த அனுபவத்தில், தில்லியை இலகுவாய் அடைந்தார். மடாதிபதிக்கு உண்டான முறையோடு தில்லி சுல்தானுக்குச் செய்தி அனுப்பினார். அதில் சுல்தானைச் சந்திக்க விரும்புவதாகக் கூறியிருந்தார்.

சுல்தான் ஸ்ரீராமாநுஜரை எண்ணி ஆச்சர்யப் பட்டான். 'ஓர் இந்து மதத் துறவி என்னை எதற்குச் சந்திக்க விரும்புகிறார். ஏதாவது உதவி கேட்பதற்காக இருக்குமோ' என்று தன் சக பிரதானிகளிடம் ஆலோசித்தான். பிரதானிகள் அதைப் பொருட்படுத்தவே இல்லை.

'அவர்கள் பக்கிரிகள். நமக்கு நேரம்தான் விரயம்' என்றனர். ஆனாலும் முறையாக ஓர் அரசனைப் போல் தூதுவன் மூலம் செய்தி அனுப்பிய ஸ்ரீராமாநுஜரைச் சாமானியராக சுல்தானால் நினைக்க முடியவில்லை. 'சரி, வரச் சொல் பார்க்கலாம்' என்று பதில் அனுப்பினான்.

ஸ்ரீராமாநுஜரும் அவன் மாளிகைக்கு எழுந்தருளினார். அவரின் தோற்றம், கையில் பிடித்திருந்த தண்டம், நடந்து வந்த விதம் என எல்லாமே சுல்தானை ஆச்சர்யப்படுத்தின. அவனையும் அறியாமல் ஒரு மரியாதை மனத்துக்குள் உருவாயிற்று.

'வந்தால் நிற்கவைத்தே, என்ன விஷயம்...' என்று கேட்க எண்ணியிருந்த அவன், அதை எல்லாம் மறந்தவனாக, அவரைத் தனக்கு நிகராக அமரப் பணித்தான். ஸ்ரீராமாநுஜரும்

அமர்ந்தார். சுல்தானிடம் பேசினார்.

"சுல்தானே உன் அன்புக்கு நன்றி.. இறைவனின் கருணை உனக்கு ஸித்திக்கட்டும். உன் நாடும் மக்களும் நலமோடும் வளமோடும் வாழ்வார்களாக" என்றார்.

சம்ஸ்கிருத மொழியில் ஸ்ரீராமாநுஜர் பேசியது சுல்தானுக்கு எளிதில் புரிந்திருந்தும் அருகிலிருந்த மொழிபெயர்ப்பாளர் அதை விளக்கினார். இருவருக்கும் இடையே விவாதம் தொடங்கியது.

"தாங்கள் யார்... தங்கள் பெயர் என்ன?"

"நான் ஒரு வைணவத் துறவி . என் பெற்றோர் எனக்கிட்ட பெயர் இளையாழ்வான் . ஆனால் ஒரு சந்நியாசியாக மறுபிறப்பெடுத்த நிலையில், என் குருவால் என் பெயர் மாறியது. இந்த சந்நியாசிக்கு அவர் ராமாநுஜன் என்கிற நாமத்தைச் சூட்டினார். அவ்வகையில் உற்ற நாமம் ஒன்று; பெற்ற நாமம் இது."

"விசித்திரமான விளக்கம். அது என்ன வைணவத் துறவி?"

"வைணவம் என்பது எனது பாதை. ஆதலால் நான் வைணவத் துறவி."

"உங்கள் மதத்தில்தான் எத்தனை பாதைகள்..."

"கடவுள் ஒருவர்தான். அவரை நான் 'நாராயணன்' என்பேன். நீங்கள் 'அல்லாஹ்' என்பீர்கள். பெயரில் தான் மாற்றம். பல கடவுளர்கள் என்பது தவறான புரிதல். அனைத்தும் ஒருவனேயான அவன் எடுத்த வடிவங்கள்."

"அப்படியானால் எங்கள் அல்லாஹ்வை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா?"

"எனக்கு அதில் யாதொரு தடையும் இல்லை. அவனால் உண்டானது இந்த உலகு. அதில்தான் நீங்களும் உள்ளீர்கள்; நானும் இருக்கிறேன் என்றால், நாம் எல்லோருமே அவன் படைப்பு தானே?"

"அப்படியானால் வழிமுறைகள் மற்றும் கொள்கைகள் வெவ்வேறாக இருப்பது எதனால்?"

"பூகோளமே அதற்கு முழு முதல் காரணம். எவராயினும் வாழும் நிலப் பரப்பைக் கொண்டும், அதன் சூழலை வைத்துமே தமக்கான அறிவையும் ஆற்றலையும் கொள்ள முடியும்.

ஒருவர் தமக்கான ஊருக்குச் செல்ல பல வழிகள் இருப்பது போன்றதே இதுவும். அவற்றில் ஒரு வழி நீர்வழிப் பாதையாக இருந்தால், படகின் துணை அவசியம். பாதை நிலமிசை என்றால் அதற்கேற்ற வாகனங்கள் அமையும். அதுபோல்தான் மதங்கள் மற்றும் அதன் வழிமுறைகள் அமைகின்றன."

"இதில் என் வழியே உயர்ந்தது - சிறந்தது என்று கூறுவது சரியா, தவறா ?"

"சரியும் இல்லை; தவறும் இல்லை. அது ஓர் அறியாமை. நல்ல ஞானம் ஸித்தித்தால் எல்லாம் சரியாகிவிடும்."

"துளியும் தயக்கமின்றி என் கேள்விகளுக்கு விடைகளைத் தந்த உங்கள் ஞானத்தை எண்ணி வியக்கிறேன். தாங்கள் என்னைக் காண வந்த நோக்கம்?"

"நாங்கள் பெரிதும் வணங்கி வந்த எங்கள் தெய்வச் சிலை ஒன்று உங்களிடம் இருக்கிறது."

"என்னிடமா... தெய்வச் சிலையா... "

"ஆம்! போர் புரிய வந்த போது அள்ளி எடுத்து வந்தவற்றுடன், அந்தச் சிலையும் வந்துவிட்டது."

"எங்கள் கொள்கைக்கு மாறானதை நாங்கள் ஏற்பதில்லை; அழித்துவிடுவோம். அப்படியிருக்க, சிலை எப்படி இங்கு இருக்க முடியும்?"

"அதை ஒரு கலைப்பொருளாகக் கருதும் பட்சத்தில் அழிக்கத் தோன்றாதல்லவா?"

"சரிதான்... அப்படி அது இருந்தால் யோசிக்கிறேன். ஆனால், அது இங்கு இருப்பது எப்படி உங்களுக்குத் தெரியும்?"

"போரிட்டது உங்கள் மூதாதையர். எனவே அது இங்கேதான் இருக்கவேண்டும். இந்த யூகமும் மேலும் நாங்கள் பக்தியோடு வணங்கிய எங்கள் இறைவன் அழிவற்றவன் என்கிற என் நம்பிக்கையுமே நான் இங்கே வரவும் உங்களைச் சந்திக்கவுமான காரணங்கள்."

சுல்தான் சிந்திக்கலானான்.

-தொடரும்...

# ரங்க ராஜ்ஜியம் 67

'கருத்தில் புகுந்து உள்ளில் கள்ளம் கழற்றிக் கருதரிய
வருத்தத்தினால் மிக வஞ்சித்து நீ இந்த மண்ணகத்தே
திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கியபின், என்னெஞ்சினில்
பொருத்தப்படாது, எம் இராமானுச மற்றோர் பொய்ப் பொருளே...'

- *இராமானுச நூற்றந்தாதி - 78*

ஸ்ரீராமநுஜரின் விளக்கம் சுல்தானை சிந்திக்கவைத்தது. இந்த நிலையில் சுல்தானுடன் இருந்த பிரதானி ஒருவர், சுல்தானின் காதில் எதையோ கூறினார். உடன், முகத்தில் ஆச்சரியக் கீற்று தோன்ற, தன்னுடைய குறுந்தாடியை நீவியபடியே சுல்தான் சொன்னான்.

"உங்கள் யூகமும் நம்பிக்கையும் சரி என்றே தெரிகிறது. எனக்கொரு சகோதரி இருக்கிறாள். அவளது விளையாட்டுப் பொருள்களில் செப்புச்சிலை ஒன்று இருப்பதும் இப்போதுதான் எனக்கே தெரிய வந்திருக்கிறது. தாங்கள் குறிப்பிடுவது, அநேகமாக அந்தச் சிலையாகவே இருக்கும் என்று நம்புகிறேன்."

"அதைப் பார்த்த மாத்திரத்தில் நான் சொல்லிவிடுவேன்" என்றார் ஸ்ரீராமாநுஜர்.

"அப்படியானால், அதற்காகவா இவ்வளவு தூரம் வந்தீர்கள்?"

"ஆம்! அழியாத அவனை திரும்பவும் எழுந்தருளச் செய்து வணங்கி ஒய்வு பெற விரும்புகிறோம்."

"விநோதம்... என் சகோதரிவரையிலும் அது விளையாட்டுப் பொருள்தான். அதுவா உங்களுக்கு இறைவன்?"

"எங்கள் கொள்கைப்படி அவன் துணிலும் இருப்பவன்; துரும்பிலும் இருப்பவன். அந்தச் சிலையில் மட்டும் இல்லாது போவானா?"

"அப்படியானால் புதிய சிலை ஒன்றைச் செய்து அதை வழிபடலாமே... எதற்கு இவ்வளவு பிரயத்தனம்?"

"இங்கு உள்ள சிலையில் எங்கள் முன்னோரின் பதிவுகள் உள்ளன. ஆகவே, இது உலோக மீட்பு அல்ல; உணர்ச்சிகளின் மீட்பு."

"அவ்வளவு உயரியது, இப்போது விளையாட்டுப் பொருளாகிவிட்டதே... இன்னமுமா அதனுள் மாண்பு இருக்க முடியும்?"

"அது பார்ப்பவரின் பார்வையைப் பொறுத்தது. இறைவன் வேண்டுபவர்க்கு வேண்டும் விதத்தில் வயப்படுபவன். உங்கள் சகோதரிக்கு விளையாட்டுப் பொருளாய் வயப்பட்டிருப்பதும் அவன் கருணையே."

"எப்படிக் கேட்டாலும் ஒரு தெளிவான பதிலைக் கூறி என்னை வியக்கவைக்கிறீர்கள். உள்ளபடியே நாம் எதிரெதிர் துருவங்கள். இதுபோல் பேசியபடி இருப்பது எனக்கே வியப்பாகதான் உள்ளது."

"எனக்கு யாதொரு வியப்பும் இல்லை. எனது கொள்கையில் நான் உறுதியாக இருக்கிறேன். அதுபோல் உங்கள் கொள்கையில் நீங்கள் உறுதியாக இருக்கிறீர்கள். கொள்கைதான் இங்கே வேறு. ஆனால் உறுதிப்பாடு இருவருக்கும் ஒன்றே. இந்த உறுதியை நீங்களும் நானும் மதித்தால் போதும்... நடப்பதெல்லாம் நலமாகவே இருக்கும்".

ஸ்ரீராமநுஜரின் இந்த விளக்கத்தைத்

தொடர்ந்து அவரை அழைத்துக் கொண்டு தன் சகோதரியின் அந்தப்புரம் நோக்கி புறப் பட்டான் சுல்தான். அவர்களின் வருகையைச் சகோதரிக்குத் தெரிவிக்க பணிப்பெண்கள் விரைந்தனர்.

அவள் வரும்வரை காத்திருந்த தருணத்தில், ஸ்ரீராமநுஜர் தன்னை மிகவும் பெருமிதத்துடன் பார்ப்பதாக உணர்ந்தான் சுல்தான்.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?"

"சகோதரியைப் பார்ப்பதிலும் ஓர் உயர்ந்த நாகரிகத்தைக் கடைப்பிடிப்பதை இப்போது கண்டேன். என்னை அது நெகிழவைத்தது. எங்கள் சமயத்தில் பெண்களுக்கு என்று சில கட்டுப்பாடுகள் உள்ளன. அதேபோல் எங்களுக் கும் உண்டு. ஒரு பெண்ணை அவள் கணவனைத் தவிர மற்றவர்கள் தவறாகப் பார்த்துவிடக் கூடாது என்பதும் காரணம். ஆனால், இங்கே ஒரு சகோதரனுக்குமா அந்தக் கட்டுப்பாடு?"



"அப்படியில்லை. உடன் நீங்கள் வந்திருப்பதால், அதை நானும் பின்பற்றுவதே சிறந்தது."

"அற்புதம், இதை நான் போற்றுகிறேன்!"

இப்படி ஸ்ரீராமநுஜர் சொல்லவும், உள்ளே சென்ற தாதி திரும்பி வந்து பணிவோடு வணங்கி, அவர்களை உள்ளே வருமாறு வேண்டினாள்.

உள்ளே செல்லச் செல்ல நல்ல பரிமள வாசம் வீசியது. உயர்ந்த இடத்துக்குச் செல்வது போல் தோன்றியது. சற்றைக்கெல்லாம் சுல்தானின் சகோதரி ரசியா இருவரையும் எதிர்கொண்டு வரவேற்றாள்.

சல்லடை போன்ற மேலாடை தரித்து, அதனுள் தன் முகம் மறைத்து, பணிந்து, முகம் தாழ்த்திக் கையசைத்து அவள் வரவேற்ற விதம் மிகவும் பணிவானதாகவும் மதிப்பானதாகவும் இருந்தது.

"ரசியா!"

"அண்ணா..."

"உன் பொழுதுகள் நன்றாக கழிகின்றனவா?"

"எல்லாம்வல்ல அல்லாவின் கருணையாலும் தங்களின் பேரன்பினாலும் எனக்கு யாதொரு குறையும் இல்லை அண்ணா."

"உன் இருப்பிடம் மிகவும் வாசமாக உள்ளதே?"

"ஓ அதுவா... நான் என் மனம் கவர்ந்த உலோகச் சிற்பம் ஒன்றுடன் விளையாடி வருகிறேன். அந்தச் சிற்பம், பார்ப்பதற்கு ஓர் அரசனைப் போல் இருக்கிறது. என்னவோ தெரியவில்லை, அதைக் கொண்டாடத் தோன்றியது. அதனால் வாசனைத்திரவியங்கள் தெளித்து ஊர்வலம் போல் பவனி வரச் செய்து, எனக்கு நானே மகிழ்ந்த வண்ணம் உள்ளேன்" என்ற ரசியா, சற்றுத் தள்ளி பின்னால் தண்டமுடன் கண்களை மூடியபடி நின்ற ஸ்ரீராமநுஜரைக் கண்டாள்.

"அண்ணா யார் இவர்?" என வினவினாள்

"இவர் ஒரு துறவியம்மா. நீ எந்தச் சிற்பம் குறித்து சொன்னாயோ, அதற்காக வந்திருப்பவர்."

"என்ன சொல்கிறீர்கள்?"

சுல்தான் ரசியாவிடம் சகலத்தையும் விவரித்தார். அனைத்தையும் கேட்ட ரசியாவின் முகத்தில் வாட்டம்.

"ஏனம்மா உன் முகம் வாடி விட்டது?"

"நான் கொண்டாடும் ஒன்றைப் பிரிவதா என்ற கேள்வியே வாட்டத்தைத் தந்துவிட்டது."

"சிலைகளை ரசிப்பதே நம் வழக்கம். நீ கொண்டாடுகிறேன் என்கிறாயே... எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது."

"எனக்கும்தான் அண்ணா! கண்களைக் கவரும் பல பொருள்களும் ஓவியங்களும் நம் அரண்மனையில் அதிகம் உண்டுதான். ஆனால், அவற்றைவிடவும் இந்தச் சிலையின் மீதுதான் எனக்கு ஈர்ப்பு அதிகமாக உள்ளது. இதைப் பார்த்தாலே மனம் நிறைந்து அமைதி ததும்புகிறது. எனவேதான் இதைப் பிரியாது என் சயனக் கூடத்திலேயே வைத்திருக்கிறேன். பொழுது விடிந்தால் நான் பார்த்திடும் முதல் முகம் இதன் முகமாகவே இருத்தல் வேண்டும் என்றும் மனம் துடிக்கிறது."

**இந்தச் சிலையில் எங்கள் முன்னோரின் தொடர்புகளை நாங்கள் உணர்வதால், கூடுதலாக ஒரு பற்றுதல் உருவாகிறது. பக்தியால் வார்க்கப்பட்டு, பக்தியால் போற்றப்பட்ட பக்திப் பரிபூரணம் இந்த விக்கிரகம்!**





"அப்படியானால் இதைத் திருப்பித் தர நீ சம்மதிக்க மாட்டாயா?"

"ஏனோ அப்படிச் சொல்லவும் மனம் வர மறுக்கிறது. அதேநேரம் பிரியவும் மனம் மறுக்கிறது" என்று அந்தச் சிலையை நெருங்கியபடியே ரசியா கூறவும் ஸ்ரீராமநுஜர் திருவாய் மலர்ந்தார். அந்தச் சிலையைப் பார்த்து கைகூப்பியபடியே பேசலானார்.

"அம்மா உன் பிரேமை எனக்குப் புரிகிறது. எல்லாம் அவன் செயல். இது, நாங்கள் போற்றி வணங்கி வந்த உற்சவ மூர்த்தி விக்கிரகம். இதை நாங்கள் வணங்காத நாளில்லை; போற்றாத நாளும் இல்லை. இது உலோகத்தால் செய்யப்பட்டிருக்கலாம். அவ்வண்ணம் அதைச் செய்யத் தூண்டியது எங்கள் பக்தி உள்ளமே.

ஆம்! பக்தியால் வார்க்கப்பட்டு, பக்தியால் போற்றப்பட்ட பக்தி பரிபூரணம் இந்த விக்கிரகம். அதனாலேயே எவ்வித கொள்ளைச் சம்பவத்திலும் இந்தச் சிலை எந்த பாதிப்புக்கும் ஆளாகவில்லை; இங்கேயும் தங்களால் கொண்டாடப்பட்டிருக்கிறது.

நாங்கள் நினைத்தால் இதைப்போல் அநேக சிலைகளைச் செய்து கொள்ள முடியும். அவற்றிலும் இறைவன் இருக்கவே செய்வான். ஆயினும் ஒரு நெடிய கால தொடர்பு புதியற்றுக்கு ஏற்படாது. இதனுள் நாங்கள் எங்கள் முன்னோரின் தொடர்புகளை உணர்வதால், கூடுதலாக ஒரு பற்றுதல் உருவாகிறது. எனவே, தாங்கள் இச்சிலையைத் திரும்ப அளித்து, எங்களின் குறை நீக்கவேண்டும்."

ஸ்ரீராமநுஜரின் மிக நிதானமான இதமான பேச்சு ரசியாவையும் சிந்திக்க செய்தது. கண்களில் கண்ணீர் துளிர்த்தது. அந்த முத்துமாலை சூட்டப்பட்ட சிலையை எடுத்து அதன் கன்னத்தில் முத்தமிட்டவள், ஒரு குழந்தையைப் பிரிய நேரும் தாயைப் போல பரிதவித்தாள். அதை அவள் ஸ்ரீராமநுஜர் வசம் தந்த தருணத்தில் மயக்கத்துக்கும் ஆளானாள்.

சுல்தான் அதிர்ந்தான். ஒருபுறம் சேடிப் பெண்கள் அவளின் மயக்கத்தைத் தெளிவிக்க முயல, சுல்தான் கவலையோடு ஸ்ரீராமநுஜரைப் பார்த்தான்.

அத்துடன், "இப்படி ஒரு சம்பவத்தை நான் கற்பனையும் செய்து பார்த்ததில்லை. என்

சகோதரியின் நிலை எனக்கே நம்ப முடியாத தாக உள்ளது" என்றான்.

"எனக்கும் இது வியப்பளிக்கும் ஒன்றே. ஆயினும் எம் இறைவன் லீலைகள் பல புரிபவன் என்று அறிந்திருப்பதால், இதையும் அவனின் ஒருலீலாவிநோதமாகவே காண்கிறேன்" என்று ஸ்ரீராமநுஜர் பதில் உரைத்தார்.

"லீலையோ எதுவோ என் சகோதரி வருந்துவதையோ, அதனால் அவள் மயங்குவதையோ என்னால் சகிக்க முடியாது. எனக்கு அவளின் மகிழ்ச்சி முக்கியம்." என்றான் சுல்தான்.

"உங்கள் சகோதரி ஒருவரின் மகிழ்ச்சியே உங்களுக்குப் பிரதானம் என்கிறீர்கள். ஆனால், ஆயிரக்கணக்கான... ஏன், கோடிக்கணக்கான பேர் இந்த இறையுருவைத் திரும்ப ஒப்படைத்தால் மகிழ்வார்கள். ஓர் அரசனின் இடத்திலிருந்து அவர்களை எண்ணிப் பாருங்கள்."

"அப்படி நான் பார்த்ததால்தான், விசேஷ அனுமதியோடு உங்களை இங்கு வரை அழைத்து வந்திருக்கிறேன். ஆனால் இங்கு நடப்பது என்னை வருத்துகிறதே?"



சுல்தான் இப்படிக் கூறவும் மயக்கம் நீங்கி கண் விழித்த ரசியா, கண்கள் கலங்கிட விக்கிரகத்தைப் பார்த்தாள்.

சுல்தான் அவளிடம், "ரசியா! இதைப் போல் நூறு பொம்மைகளை நான் உனக்குச் செய்து தருகிறேன். நீ வருந்தாதே. சிலைகளை நாம் ரசிக்கலாம். வழிபாட்டுக்கு இணையாக நேசிப்பது கூடாது; நம் மார்க்கத்தை நீ மறந்துவிடாதே!"

"அண்ணா நான் மறக்கவில்லை. நம் வரையிலும் இறைவன் ஒருவனே. அவன் வடிவங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்டவன். அப்படிப்பட்டவன், பசியின்போது உணவாய்ப் புலனாவது போல், என் அமைதிக்கு இப்படி ஓர் உருவாகிக் காட்சி தருகிறான். நான் என்ன செய்வேன்?"

ரசியா கண்ணீர் சிந்தினாள்.

சுல்தான் அவளிடம் கேட்டான்: "எனில், சிலையைத் திருப்பித் தர முடியாது எனத் தீர்மான மாகச் சொல்லிவிடலாமே?"

இப்போது ஸ்ரீராமநுஜர் இடைமறித்தார்.

"சுல்தான் அப்படிக் கூறக் கூடாது. இங்கே, நம்மிலும் பெரியவன் இறைவனாகிய அவனே. அவன்தான் நம் எல்லோரையும் ஆட்டிப் படைப்பவன். அவனிடமே நாம் கேட்கலாமே..? என்றார்.

"என்ன.. சிலையிடம் கேட்பதா..?"

சுல்தான் வியந்தான்!

- தொடரும்...

## கந்தன்குடி முருகன்!

**தி**ருவாரூர் மாவட்டம், நன்னிலம் அருகிலுள்ள திருத்தலம் கந்தன்குடி. பிரசித்திபெற்ற முருகன் திருத்தலம் இது.

அம்பன், அம்பரன் ஆகிய அசுரர்களை அழிக்கப் புறப்பட்டாள் சக்திதேவி. அப்போது, 'அவர்களை நானே அழிக்கிறேன்' என்று கொதித்தெழுந்தார் முருகப்பெருமான். 'நீ இங்கு இருந்து கொள். அவர்களை நானே அழித்து வருகிறேன்' என்று முருகனுக்கு அருளி, அம்பாள் அசுரவதம் நிகழ்த்திய தலம் கந்தன்குடி.

இந்தத் தலத்துக்கு வந்து கந்தன்குடி முருகப்பெருமானை மனமுருக வேண்டி வணங்கி வழிபட்டால், தடைகள் மற்றும் தோஷங்கள் நீங்கி, விரைவில் கல்யாண வரம் கிடைக்கும். குழந்தைப் பேறு இல்லாதவர்களுக்குக் கந்தன் கருணையால் பிள்ளை பாக்கியம் கிடைக்கும் என்பது ஐதிகம்.

-ஆர்.கே.லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்





*'தற்க சமணரும் சாக்கிய பேய்களும் தாழ் சடையோன்*
*சொல் கற்ற சோம்பரும் சூனிய வாதரும் நான் மறையும்*
*நிற்க குறும்பு செய் நீசரும் மாண்டனர் நீள் நிலத்தே*
*பொன் கற்பகம் எம் ராமானுச முனி போந்த பின்னே*

*- இராமாநுஜ நூற்றந்தாதி - 99*

சுல்தான் தன் தங்கை கண்ணீர் விடுவதைப் பொறுக்காமல், 'எனில் சிலையைத் தரமுடியாது என்று கூறிவிடலாமே' என்று கூற ராமாநுஜர் இடைமறித்து "இறைவனிடமே தீர்வு கேட்போம்" என்றார்.

'சிலையிடம் கேட்பதா' என்று சுல்தான் வியந்தான்.

"சிலையாக மட்டும் நினைத்தால் கேட்க தோன்றாதுதான். இறைவனே சிலை வடிவில் இருப்பதாக நம்பும்பட்சத்தில் கேட்கத் தோன்றும்" என்றார் ஸ்ரீராமாநுஜர்.



ஸ்ரீ கூரத்தாழ்வான்

"எப்படி?"

"இப்போது இங்கே நாம் பேசுவதை எல்லாமும் அவன் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறான். என்னை இங்கே வரச் செய்தவனும் அவனே. தங்கள் சகோதரியாரின் மனத்தில் இடம் பிடித்தவனும் அவனே. எனவே அவனே இதற்கு விடை கூறட்டும்."

ஸ்ரீராமாநுஜர் இப்படி சொன்ன நொடியில் சிலையின் கழுத்தில் கிடந்த முத்துமாலை தானாய் அவிழ்ந்து கீழே விழுந்தது. அதைப் பார்த்ததும் ஸ்ரீராமாநுஜரிடம் பெரும் சிலிர்ப்பு.

"இதோ அவனே உத்தரவு இட்டுவிட்டான். எம்பெருமானே! உன் கருணையே கருணை..." என்று நெகிழ்ந்தார் ஸ்ரீராமாநுஜர்.

"இதுவா சம்மதம்?" - சந்தேகத்துடன் கேட்டான் சுல்தான்.



"ஆம். நடப்பது கலியுகம். இதில் இறைவனின் பேச்சென்பது இப்படி நிமித்திகம் சார்ந்தே இருக்கும்."

"இதை எப்படி நம்புவது? நூல் நலிந்துபோனதால்கூட மாலை அறுந்து விழுந்திருக்கலாம் அல்லவா?"

"நலிந்த நூலாலும் ஒரு மாலை அறுந்து விழும்தான். ஆனாலும் நாம் பிரார்த்திக்கும் நொடியில் இவ்வாறு நிகழ்ந்ததால், இதை இறைவனின் பதிலாகக் கொள்வதே நமக்கழகு."

"இதற்கு... இறைவன் நேரிலேயே தோன்றி கூறலாமே... ஏன் இந்தக் குழப்பமான செயல்பாடு?"

"அப்படியானால், அவனை நேரில் பார்த்தால்தான் நாம் நம்புவோம் என்றாகிறதே? அவனைப் பார்த்திராதவர் பக்தி எல்லாமும் நம்பிக்கை அற்றது என்றும் ஆகிறதே?"

இப்படி வாதம் வளர்ந்த நிலையில், ரசியாவே அதற்கொரு வழியை காணலானாள். "அண்ணா! நான் இதை பிரிய விரும்பவில்லை. அதே நேரம் இவர் விருப்பமும் ஈடேற வேண்டும். இவர் கூறியது போல், சிலை என்னிடம் இருந்தால் என் ஒருத்திக்கே இது சொந்தம். ஆலயம் கண்டால் ஆயிரமாயிரம் பேருக்கு சொந்தம். எனவே அதற்கேற்ப முடிவு செய்யுங்கள்" என்றாள்.

"தாயே! உங்களை நான் எங்கள் சூடிக் கொடுத்த சுடர்கொடியாகவே காண்கிறேன்" என நெகிழ்ந்தார் ஸ்ரீராமாநுஜர்.

"அது யார்?" எனக் கேட்டான் சுல்தான்.

"ஆண்டாள் அவள் பெயர். தங்கள் சகோதரி இச்சிலையை உயிராகக் கருதுவதுபோல அவளும் திருவில்லிப்புத்தூர் ஆலயத்தின் இறைவந்த் தன் உயிராய்க் கருதி, தினமும் அவனுக்கான மாலையை தான் அணிந்து அழகு பார்த்து பிறகே அனுப்புவாள். அப்படி ஒரு பக்தி. அதன் விளைவாக அவள் இறுதியில் அவனையே மணந்து அவனோடும் கலந்து விட்டாள்."

"அப்படியானால் நானும் அவ்வண்ணமே



# ரங்க ராஜ்ஜியம்




விரும்புகிறேன்."

"உன் விருப்பம் அதுவானால் நீ இவரோடு செல்ல நேரிடும். அதை யோசித்தாயா?"

சுல்தான் கேட்க, அவன் சகோதரி பதில் சொன்னாள்: "நன்றாக யோசித்தே சொல்கிறேன். என் வாழ்வு இனி சிலையோடுதான்!"

"நல்லது தாயே. நான் தங்களை அழைத்துச் சென்று, எங்கள் ஆலயத்தில் இச்சிலையை நிறுத்தி, தங்களையும் உடனிருக்கச் செய்வேன். அங்கு ஆண்டாள் நாச்சியார் போல் தங்களைத் துலுக்க நாச்சியாராக வரித்து தங்களை எல்லோரும் வணங்கச் செய்கிறேன்... போதுமா?" - ஸ்ரீராமாநுஜர் இவ்வாறு கூறவும் சுல்தான் முகத்தில் ஏக சிந்தனை.

"சுல்தானுக்கு இத்தேர்வு உசிதமில்லையோ?"

"அப்படி இல்லை. எனக்கு என் சகோதரியின் மகிழ்ச்சியே முக்கியம். அதேநேரம் எங்கள் மார்க்க நெறிகளை விட்டு அவள் விலகவும் கூடாது. அது குறித்தே யோசிக்கிறேன்."

"என் வழிமுறையைப் பின்பற்ற எனக்கு எப்படி உறுதியும் விருப்பமும் உள்ளனவோ, அப்படியே தங்களின் சகோதரியும் திகழலாம். எனக்கு அதில் ஆட்சேபணையே இல்லை. அவரவர் உணர்வும் நம்பிக்கையும் மதிக்கப்பட வேண்டும். அதுவே முக்கியம்."

இவ்வாறு ஸ்ரீராமாநுஜர் கூறியதுடன், எம்பெருமானின் திருச்சிலையுடன் மைசூர் நோக்கிப் புறப்பட்டார். ஒரு தனித்த ரதத்தில் சேடியர்களோடு ரசியாவும் உடன் புறப்பட்டாள்.



**மை**சூர் நகரமே ஸ்ரீராமாநுஜரின் வருகைக்காகக் காத்திருந்தது. மன்னனான விஷ்ணுவர்த்த ராயன், நடக்க முடியாத விஷயம் நடந்து முடிந்த மகிழ்வில் பெரும் உணர்ச்சிப் பெருக்கில் இருந்தான்!

இந்த நிலையில் ஸ்ரீராமாநுஜர் வந்துசேர்ந்தார். டெல்லியிலிருந்து ரசியா பூஜித்த நம்பி என்கிற செல்லப்பிள்ளையான சம்பத்குமாரனை திருக்குலத்தவர்களே சுமந்து வந்திருந்தனர். ஸ்ரீராமாநுஜர், மன்னன் விஷ்ணுவர்தராயனிடம் திருக்குலத்தவரின் பாதங்களைக் கழுவி அந்நீரை அனைவர் மேலும் தெளிக்கப் பணித்தார்.

எம்பெருமானைத் தங்கள் தோள்களில் சுமந்து வந்தவர்களுக்குக் காட்டப்படும் இந்த வந்தனம், இரண்டு விதங்களில் சிறப்புக்குரியது. ஒன்று சாதி பேதமற்ற பார்வை; அடுத்து இறை அடியவர்களும் இறைவனுக்கு மிகப்



பிரியமானவர்களே என்கிற கோணம்.

அதைத் தொடர்ந்து ஸ்ரீராமாநுஜர் அங்குள்ளோர் முன் ஒரு பிரசங்கம் நிகழ்த்த லானார். முன்னதாய் பெரியாழ்வாரின் பல்லாண்டு பாசுரம் அடியவர்களால் பாடப் பட்டது. அப்போது முதலியாண்டான் கிடம்பி ஆச்சான், கோவிந்தன் உள்ளிட்ட அவரின் முக்கிய சீடர்களும் உடனிருந்தனர். ஸ்ரீராமாநுஜர் திருவாய் மலரலானார்.

"மஹா பக்தச் சிரோமணிகளே... இன்று ஒரு மகத்தான நாள். இரவும் பகலுமாய்க் கழியும் பொழுதுகள் நல்ல அடையாளத்தையும் மதிப்பையும் பெறுவது என்பது, அந்தப் பொழுதுகளில் நடக்கும் சம்பவங்களால்தான்.

அந்த வகையில் இன்றைய பொழுது, நம்பி எனப்படுகிற செல்லப்பிள்ளையான சம்பத் குமாரன், தன் பூலோகக் கிரகத்துக்குத் திரும்பிய பொழுதாகும்!

கொள்ளை போனதாய்க் கருதப்பட்டவன், துளியும் மாசுமருவின்றித் திரும்ப வந்திருக் கிறான். இவன் கொள்ளையடிக்கப்பட்ட போது, 'இவனுக்கே இக்கதியா' என்று கலங்கியவர் பலருண்டு. ஆனால் நம் பார்வைக்கு அது கொள்ளை. உண்மையில் அவன் ஒரு சுற்றுலா சென்றதுபோல்தான் தெரிகிறது. அப்படிச் சென்றவன், தான் சென்ற இடத்தின் செல்லச் சீமாட்டியான நம் தாய்க்கு ஒப்பான ரசியாபேகத்தின் மனத்தைக் கொள்ளைகொண்டு, அவரோடுதான் திரும்ப வந்திருக்கிறான். உண்மையில் இவனே கொள்ளையன்.

கொள்ளை என நாம் கருதும் இச்சம்பவங்கள் வரலாற்றில் அழுத்தமாய்ச் சிந்திக்கப்படும். இக்கொள்ளை மட்டும் நிகழாது போயிருந்தால், இந்தப் பரத கண்டம் முழுக்கச் சென்றவன் என்ற பாக்கியம் எனக்கும் ஏற்பட்டிருக்காது. அவனைச் சுமந்து வரும் பாக்கியம் திருக்குலத் தவர்க்கும் வாய்த்திருக்காது. பாழ்ப்பட்டிருந்த இந்த மேல்கோட்டைக் கோயிலும் புத்துயிர் பெற்றிருக்காது. ஒரு சம்பவம் - ஆனால் எவ்வளவு நன்மைகள்!

இனி, இங்கே இந்த ஆலயம் கால காலத்துக் கும் போற்றப்பட்டு, வைணவம் தழைத்திடத் துணை நிற்கும். அவன் நிர்குணன், சர்வக்ஞன், பேதம் கடந்தவன் என்பதற்குச் சான்றாக அவன்பால் காதல்கொண்ட சுல்தானின் சகோதரி 'துலுக்க நாச்சி' என்றாகி எம்பெருமா னின் திருவடி நிழலில் இளைப்பாறுவாராக.

ஸ்ரீ ஆண்டாளைக் கொண்டாடும் வண்ணம்

இந்தத் துலுக்க நாச்சியையும் நாம் கொண்டாடிடுவோம். என் ஆத்ம குருவான ஆளவந்தாரின் ஆசைகளில் பல இங்கே நிறைவேறியுள்ளன.

இது போதாது. இங்கிருந்து வடக்கு நோக்கி வைணவத்தைப் பரப்பும் வண்ணம் ஸ்ரீமட ஸ்தாபனங்களைச் செய்து, விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தைக் காலமெல்லாம் பரப்புகின்ற கடமையையும் அடியேன் இப்போது இங்கே தொடங்கிட விரும்புகிறேன்.

இவற்றை நிலைப்படுத்திய நிலையில், நான் திருவரங்கம் திரும்பி அங்கே அரங்கனடியில் நின்று என் அந்திமகாலச் சேவையைத் தொடர விரும்புகிறேன்..."

இங்ஙனம் ஸ்ரீராமாநுஜர் கூறவும் அங்கிருந்த அனைவரிடமும் பேரமைதி. மன்னன் விஷ்ணுவர்தராயன் கண்கலங்கினான்.

"ராயா என்ன இது? அரசன் அழலாமா?"

"நல்ல குருவின் நிமித்தம் தாராளமாய் அழலாம் சுவாமி."

"என்றால் காரணம் நான் என்றாகிறதே?"

"ஆம்! தாங்கள் இப்போது வயதில் சதம் கண்டுள்ளீர்கள். இப்படி ஒரு முதுமையில் தாங்கள் டெல்லிவரை சென்று வந்ததே பெரும் பாடு. இந்த நிலையில், மீண்டும் தாங்கள் திருவரங்கம் நோக்கிச் செல்வதை என்னால் ஏற்க முடியாது. தங்களின் அணுக்கம் எங்களுக்கு இப்போதும் எப்போதும் வேண்டும். இனி, இந்த மைசூரும் மேல்கோட்டையுமே தங்களின் கோட்டை. இதைவிட்டுத் தாங்கள் செல்லலாகாது."

"உன் குருபக்தியைக் கண்டு மகிழ்கிறேன். அதேவேளை, என்மீது குருபக்தியோடு திகழ்ந்து தன் இரு கண்களையும் இழந்துவிட்ட கூரத்தாழ்வானை இவ்வேளை எண்ணிப் பார்க்கிறேன். அவன் தியாகத்தை நான் போற்றியாக வேண்டும். அவன் மீண்டும் பார்வை பெறவேண்டும் என்பதன் நிமித்தமே நான் திருவரங்கம் செல்ல விரும்புகிறேன்."

"அப்படியானால், இங்கே உங்கள் இடத்தில் இருந்து யார் வழிகாட்டுவார்?"

"கவலைப்படாதே... இங்கேயும் நான் இருப்பேன்!"

"அது எப்படி?"

"நம் வழக்கில் சிலைகள் கலைப்பொருள்கள் மட்டுமல்ல. மந்திரபூர்வமாக அவற்றுக்கு உயிர் ஊட்டப்படும்போது, அவை சக்திக் களஞ்சியமாகி, வேண்டுவோர்க்கு வேண்டுவதை அருள்வனவாகிவிடுகின்றன. அவ்வகையில் என்னைப் போலவே நீ ஒரு சிலையைச் செய்வாயாக. நான் அதைத் தழுவி என் ஆத்ம சக்தியைச் செலுத்தித் தருவேன். அது நான் உகந்தளித்த 'தமருகந்த மேனியாக' திகழ்ந்து காலாகாலத்துக்கும் உங்களுக்குக் குருவருளோடு இறையருளையும் பெற்றுத் தந்திடும்..."

ஸ்ரீராமாநுஜரின் அக்கருத்தைக் கேட்ட மன்னன் விஷ்ணுவர்தன் உடனடியாக ஒரு சிலையைச் செய்தான். அதை ஸ்ரீராமாநுஜர் தழுவி மகிழ்ந்து, தன் ஆத்ம சக்தியை அதனுள் நிரப்பியவராய் அனைவரிடம் இருந்தும் பிரிந்து புறப்பட்டார்.

முதலியாண்டானும், கிடம்பி ஆச்சானும் உடன் புறப்பட்டனர். விஷ்ணுவர்தராயன் நெடுந்தூரம் வரை வந்து விடை தந்ததோடு ஸ்ரீராமாநுஜரின் பல்லக்கு கண்களை விட்டு மறையும்வரை நின்று பார்த்துவிட்டுப் பிறகே திரும்பிச் சென்றான்.

அப்படிச் சென்றவன் ஸ்ரீ ராமாநுஜரால் நிறுவப்பட்ட பலநூறு மடங்களுக்கும் நிவந்தம் அளித்து, அந்த மடங்கள் தங்கள் வைணவத் திருப்பணியைத் தொடர்ந்திட வழிவகைகள் செய்தான்.



**ஸ்ரீ**ராமாநுஜரும் திருவரங்கம் திரும்பினார். எல்லையைத் தொட்ட நொடி சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கியவர் காவிரியாற்றைத் தாண்டுகையில் சிலிர்த்துப் போய் நின்றார்.

ஸ்ரீராமாநுஜரைத் தண்டிக்க நினைத்த கிருமி கண்ட சோழன் நோயுற்று மாண்டிருந்தான். ஸ்ரீராமாநுஜருக்குக் கேடு நினைத்த எவரும் நல்ல நிலையில் இல்லை. அவரவர் கர்மத்தால் அதற்குரிய இடர்களை அடைந்து, பலர் உயிர் விட்டிருந்தனர். ஸ்ரீராமாநுஜர் இருந்தபோது கூட வராத எழுச்சி அவர் இல்லாதபோது வந்திருந்தது. அது அவருக்குள் எதிரொலித்தது.

கூரத்தாழ்வான் எனப்படும் கூரேசன், தன் கண்களை இழந்த நிலையில், தன் இரு பிள்ளைகளான பராசரனுடனும், வியாச பட்டன் எனப்படும் ராமபிள்ளையுடனும் ஊர் எல்லையில் மலர்களை ஏந்தியபடி காத்திருந்தார்!

**– இன்னும் வரும்...**

இந்திரா சௌந்தர்ராஜன் ஓவியம்: அரஸ்



ஸ்ரீராமாநுஜர் திருவரங்கம் திரும்பினார். எல்லையைத் தொட்ட நொடி சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கியவர், காவிரியாற்றைத் தாண்டுகையில் சிலிர்த்துப்போய் நின்றார்.

அவர் திருவரங்கத்தில் இருந்தபோதுகூட வராத எழுச்சி, அவர் இல்லாதபோது வந்திருந்தது. அது, அவர் ஊருக்குள் நுழைந்தபோது எதிரொலித்தது!

ஊர் எல்லையில் கூரத்தாழ்வான் எனப்படும் கூரேசன் தன் கண்களை இழந்த நிலையில், தன் இரு பிள்ளைகளான பராசரனுடனும் வியாச பட்டன் எனப்படும் ராமபிள்ளையுடனும் மலர்களை ஏந்தியபடி காத்திருந்தார்.

ஸ்ரீராமாநுஜர் வந்ததும் மலர்களைத் தூவி அனைவரும் மகிழ்ந்தனர். ஸ்ரீராமாநுஜர் கூரேசரை ஆரத் தழுவிக்கொண்டார்.

"கூரேசா! என் சீடர்த் திலகமே! உன்னை இந்த நிலையிலா நான் காணவேண்டும்?" என்று கண்ணீர் உகுத்தார்.



"ஸ்வாமி... என்ன இது? தாங்களா கண்ணீர் சிந்துவது? ஐயோ, நான் குருவை அழச்செய்த பாவியாகிவிட்டேனே..." என்று கூரேசரும் படபடத்தார்.

"நீ பாவி இல்லை கூரேசா... நானே பாவி..."

"தாங்களா பாவி? தவறு. வராது வந்த மாமணியும் தாங்களே; மாமுனியும் தாங்களே. தாங்கள் மறந்தும் இப்படிக் கூறக் கூடாது."

"நீ ஸ்ரீவைணவ சித்தாந்தத்தின் வைராக்கிய சாட்சியாகத் திகழ்கிறாய். காவி தரித்து சந்நியாசம் வாங்கிக்கொள்ளாவிட்டாலும் நீ என்னிலும் மேலான சந்நியாசி. ராமாயணத்தில் பரதன் பற்றிக் கூறுகையில், 'ஆயிரம் ராமர் ஒரு பரதனுக்கு ஈடாவரோ' என்பர். நான் இப்போது அதுபோல் சொல்கிறேன்... ஆயிரம் ராமாநுஜர் ஒரு கூரேசனுக்கு ஈடாக முடியாது..."

"இதெல்லாம் பெரும் சொற்கள். இதைக் கேட்க நான் காத்திருக்கவில்லை; தங்களின்





# ரங்க ராஜ்ஜியம்

திருவடி நிழலுக்கே காத்திருந்தேன்."

"உன் ஒவ்வொரு சொல்லும் உன் வைராக்கியத்தை, குருபக்தியைப் பேரொளியோடு வெளிப்படுத்துகிறது. நீ கண்களை இழந்துவிட்ட போதிலும் தைரியத்தையும் வீர்யத்தையும் துளியும் இழக்கவில்லை."

"நான் உங்களால் உருவாக்கப்பட்டவன். அப்படியிருக்க அவை எப்படி என்னிடம் இல்லாமல் போகும்? புறக்கண்கள் போனால் என்ன... அகக் கண்களில் எவ்விதத் தடையும் இன்றி அரங்கனை தரிசித்தப்படி இருக்கிறேன்."

"கேட்கவே ஆனந்தமாக இருக்கிறது. கூரேசா! என் பொருட்டு நீ காஞ்சியம்பதிக்கு என்னுடன் வர வேண்டும்."

"காஞ்சிக்கா... இந்த வயதிலா?"

"உன் முன்னால் வயது ஒரு பொருட்டே இல்லை. காஞ்சிப் பேரருளாளன் வரம் தரும் மூர்த்தியாக - வரதனாகத் திகழ்பவன். அரங்கனே உறங்கன்; நீ கேளாமலேயே உனக்குப் பார்வை அளித்திருக்க வேண்டியவன் அருளாது கிடக்கிறான். அதனாலேயே அவனுடைய வரம் தரும் அம்சத்திடம் சென்று, உனக்குப் பார்வை வேண்டி பிரார்த்திக்க விரும்புகிறேன்.

நான் ஸ்ரீபாஷ்யம் கூறும்போது படி எடுத்து எழுதியவன் நீ. அப்போது நான் பொருள் கூறுமுன், சில பதங்களுக்கான பொருளை வேகமாய்க் கிரகித்துக் கூறி, பின் எழுதியவனும் நீ! இந்த ஒரு செயலுக்குப் பரிசாகவும்... காஞ்சிப் பேரருளாளனிடம் உன் பார்வைக்காகப் பிரார்த்திக்க விரும்புகிறேன்."

"சுவாமி! தங்கள் விருப்பத்தை நிராகரிக்கும் ஆற்றல் எனக்கு எப்போதும் இருந்ததில்லை. இப்போதும் அதுவே உண்மை. உம் விருப்பப்படியே வருகிறேன்" என்று கூறி, அடுத்த சில தினங்களிலேயே ஸ்ரீராமாநுஜருடன் காஞ்சிக்குச் சென்றார் கூரத்தாழ்வார்.





கண்களை இழந்த நிலையில் ஸ்ரீராமாநுஜர் முன்னிலையில் 'வரதராஜ ஸ்தவம்' எனும் துதியினைப் பாடினார். காஞ்சி வரதனிடம், தனக்குப் பார்வை வேண்டும் எனக் கேட்காமல், தனக்கு இந்த நிலை ஏற்படக் காரணமான நாலூரானுக்கு... தனக்குக் கிடைத்த - கிடைக்கப் போகிற அனைத்து நலன்களும் கிடைக்க வேண்டும் என்று பிரார்த்தித்தார்.

கூரேசரின் செய்கை ஸ்ரீராமாநுஜரை நெஞ்சம் விம்மச் செய்தது. பகைவனுக்கும் அருளும் இந்தப் பண்புதான் ஸ்ரீவைணவனின் முதல் அம்சம். உலகில் தன் வரையில் எது நடந்தாலும், அதன் பின்னால் ஒரு சரியான காரண - காரியம் இருப்பதை நம்புபவர்களாலேயே இவ்வாறு செயல்படவும் முடியும்.

தனக்கு நேரும் துன்பங்கள் சோதனை மாத்திரமே! அந்தத் துன்பங்களைத் தாங்கிக் கொள்ள மறுத்து பாதைமாறுவது விசிஷ்டாத்வைத சித்தாந்தத்துக்கு அழகல்லவே. கூரேசரின் இச்செயலால் அவரின் புகழ் விண்ணளவு உயர்ந்தது.

இதன்பின் கூரேசர் அதிக காலம் வாழ்ந்து விடவில்லை. ஸ்ரீராமாநுஜர் பார்த்திட, அவர் எதிரில் ஒரு மகத்தான மனிதனாய், சீடனாய், வைணவனாய்த் திகழ்ந்து, பின் உலகைத் துறந்தார்.

ஸ்ரீராமாநுஜரை கூரேசரின் பிரிவு பெரிதும் பாதித்தபோதிலும் அவர் பிள்ளைகளான பராசரரும், வேதவியாசனும் 'நாங்கள் இருக்கிறோம்' என்று ஸ்ரீராமாநுஜருக்குத் தோள் கொடுத்தனர்!

கூரேசரின் பிள்ளைகளுக்குப் பராசரரின் பெயரையும், வேதவியாசரின் பெயரையும் சூட்டியதே ஸ்ரீராமாநுஜர்தான். அந்தப் பெயர்களுக்கேற்ப அவர்கள் விளங்கினார்கள். தன் காலத்துக்குப் பிறகு இவர்களால் தன் கொள்கைகள் தொடர்ந்திட வேண்டும் என்று ஸ்ரீராமாநுஜர் விரும்பிய வண்ணமே அவர்கள் நடந்துகொண்டனர்.

வைணவம் என்பது உயர்ந்த மானுட நெறி. அது மதம் என்றால் மதம்; இனம் என்றால் இனம்; தடம் என்றால் தடம் என்பதை இவர்கள் வழியாகவும் ஸ்ரீராமாநுஜர் வளர்த்தெடுத்தார்.

வைணவத்திற்குள் சாதிபேதங்களுக்கே இடம் கிடையாது. சாதி என்ற ஓர் அடையாளம் அவசியப்படும் பட்சத்திலும் ஒருவன் தன்னை வைணவன் என்று கூறிக்கொண்டால் போதும், அதிலேயே எல்லாம் அடங்கிவிட வேண்டும் என்று ஸ்ரீராமாநுஜர் விரும்பினார்.

சாதிபேதம், நாத்திகம், ஒழுக்கமின்மை இவையே மனிதர்களைக் குருடர்களாக்கும். இவற்றை அறவே நீக்கி 'ஒன்றே குலம் - ஒருவனே தேவன் - அவன் நாராயணன் - அவனுள் எல்லாம் அடக்கம்' என்பதே விசிஷ்டாத்வைதம்.

> கூரேசரின் செய்கை ஸ்ரீராமாநுஜரை நெஞ்சம் விம்மச் செய்தது. பகைவனுக்கும் அருளும் இந்தப் பண்புதான் ஸ்ரீவைணவனின் முதல் அம்சம்.

தனது கொள்கையை தான் வாழ்ந்த காலத்தில் ஸ்ரீராமாநுஜர் பின்பற்றியும் காட்டினார். அதன்பொருட்டு எவ்வளவோ சம்பவங்கள்!

திருவரங்கச் சுற்றில் அழகன் என்று ஒருவன். அவன் வரையில் பெயர் மட்டும்தான் அழகு. மற்ற எல்லாமே அவனிடம் பழுது.

அதாவது அவனுக்கு வாய் பேச வராது, காது கேட்காது. அதனால் ஊரே அவனை ஒதுக்கி வைத்து ஊமை, செவிடன் என்று மலிவாக அழைத்து வந்தது.

ஸ்ரீராமாநுஜர் ஒருநாள் காவிரிக் குச் சென்று திரும்பும் வழியில், அவரின் பார்வையில் அழகன் தென்பட்டான்.

உடனே ஸ்ரீராமாநுஜருடன் வந்த அவரின் சீடர்கள், 'ஏ ஊமையே! ஓரமாய்ப் போ... ஒரு மகான் வரும்போது இப்படித்தான் அழுக்கு ஆடையும், கலைந்த தலையுமாய் எதிரில் வருவாயா... முட்டாளே...' என்று அவனை விரட்டினர்.

அவனோ பரிதாபமாக ஸ்ரீராமாநுஜரைப் பார்த்தான். சீடர்களில் ஒருவர் அவனைக் கோல் ஒன்றால் தள்ளிவிடவும் முற்பட்டார். உடனேயே ஸ்ரீராமாநுஜர் அவரைத் தடுத்தார்.

''இதுபோல் உடல் குறைபாடு

## தியானமும் தூக்கமும்!

**மா**ணவர்கள் மத்தியில் உரையாற்றிக் கொண்டிருந்தார் சுவாமி விவேகானந்தர். ''அரை மணி நேரம் தியானம் செய்தால் ஆறு மணி நேரம் தூங்குவதற்குச் சமம்'' என்றார். சட்டென்று எழுந்த மாணவன் ஒருவன், "அப்படியெனில், ஆறு மணி நேரம் தூங்கினால் அரை மணி நேரம் தியானம் செய்வதற்குச் சமமா?" என்று கேட்டான்.

சுவாமி விவேகானந்தர் புன்னகையுடன் பதிலளித்தார்... "முட்டாள் ஒருவன் தியானம் செய்தால் அறிவாளியாக முடியும். ஆனால் அறிவாளி ஒருவன் தூங்கத் துவங்கினால் முட்டாளாகி விடுவான்!"

- எஸ். மாரியப்பன், தேனி



உள்ளவர்களிடம் ஒருபோதும் நாம் கோபமோ வெறுப்போ கொள்ளல் ஆகாது. அக்குறைபாடு நமக்கு இருந்தால் எப்படி இருந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்த்து, நம்மை எம்பெருமான் நன்றாக படைத்தமைக்காக நன்றி கூற வேண்டும். அடுத்து, குறைபாடு உடையவருக்கு அந்தக் குறையின் பாதிப்பு தெரியாத அளவுக்கு உதவவேண்டும்" என்றார்.

ஸ்ரீராமாநுஜரின் அந்தக் கருத்தைச் சீடர்கள் இந்தக் காதில் வாங்கி அந்தக் காதின் வழி விட்டுவிட்டனர் என்றே கூறவேண்டும்.

அவனது கர்மவினை அவன் இப்படிப் பிறந்துவிட்டதாக ஒருவர் முணுமுணுத்தார். அவரின் அந்தக் கருத்து ஸ்ரீராமாநுஜரைச் சிந்திக்க வைத்தது.

ஒருவருடைய வாழ்வின் இன்ப துன்பங்களின் பின்னே ஏற்றத்தாழ்வுகள் இருப்பதற்கு, அவருடைய கர்மம் ஒரு காரணம் என்றாலும், காரணத்தைச் சொல்லி அவர்களை ஒதுக்குவதும் அலட்சியப்படுத்துவதும் பெரும் பாவம் என்று உணர்ந்தவர் ஒரு காரியம் செய்யலானார்.



எதையும் வார்த்தைகளால் கூறுவதைவிட செயல் வடிவில் செய்திடும்போது அது ஆயிரம் மடங்கு சக்திமிக்கதாகி விடுகிறது.

தன் சீடன் ஒருவன் மூலம், பேசவும் கேட்கவும் இயலாத அழகனைத் தன் இல்லத்துக்கு அழைத்துவரப் பணித்தார். தட்டுத் தடுமாறியபடி தன் முன் வந்து நின்றவனை, துளியும் தயக்கமின்றி கட்டியணைத்து வரவேற்றார். பின்னர் ஒரு தனி அறைக்கு அவனை அழைத்துச் சென்றார். முன்னதாக அவனுக்கு நல்ல உணவு அளிக்கப்பட்டு அவன் பசியாறினான். அவனுடைய அழுக்கு ஆடைகள் அகற்றப்பட்டு புத்தாடை அணிவிக்கப்பட்டது. பின் அவனுக்குத் திருமண் காப்பும் இடப்பட்டது.

அவன் பார்ப்பதற்கே ஒரு புதிய மனிதனாய்த் தெரிந்தான். மௌனம் மிகுந்த ஒரு வைணவன் இப்படித்தான் இருப்பான் என்று அவனைப் பற்றிய ஒரு விளக்கம் அளித்த ஸ்ரீராமாநுஜர், தனியறைக்குள் கதவைத் தாழிட்டுக் கொண்டு அவனுக்கு ஒரு குருவாய் தன் ஆத்ம சக்தியை வழங்க தீர்மானித்தார்.

- தொடரும்...

சீடர் ஒருவர் மூலம் அழைத்துவரப்பட்ட அழகனைத் துளியும் தயக்கமின்றி கட்டியணைத்து வரவேற்றார் ஸ்ரீராமானுஜர். பின்னர் ஒரு தனி அறைக்கு அவனை அழைத்துச் சென்றார். முன்னதாக உணவு முடித்து, புத்தாடை அணிந்து திருமண் காப்பு இடப்பட்டு, முற்றிலும் புதிய மனிதனாகத் திகழ்ந்த அழகனுக்கு, ஒரு குருவாய் தன் ஆத்ம சக்தியை வழங்கத் தீர்மானித்தார் ஸ்ரீராமானுஜர்.

தான் அவனுக்குச் செய்யப்போகும் கிரியைகளைத் தன் சீடர்கள் பார்ப்பதை, பல காரணங்களைக் கருதி ஸ்ரீராமானுஜர் தவிர்த்தார். அதனால்தான் தனியறைக்குள் கதவைத் தாளிட்டுக்கொண்டு செயல் பட்டார். ஆயினும் உள்ளே நடப்பதைக் காணும் ஆவலில், தான் செய்வது தவறென்று தெரிந்தும், ஒரு வேகத்தில் கதவின் துவாரம் வழியே உள்ளே நோக்கினார் கூரத்தாழ்வார்.

ஸ்ரீராமானுஜர் அழகனிடம் முத்திரை பாஷையில், தன்னைப் பற்றிக்கொண்டு சரணாகதி புரியச் சொன்னார். அத்துடன், ஸ்பரிச தீட்சை முலமே தன் ஆத்மசக்தி அழகனிடம் போய்ச் சேரும் என்பதால், தன் திருவடிகளை அவன் தலைமேல் பதித்து, ஆத்ம சக்தியை அவனுக்கு அளித்தார்.



இந்தக் காட்சியைக் கண்ட கூரேசர் மெய்சிலிர்த்தார். அந்த நொடியில், தான் ஊனம் ஏதுமின்றிப் பிறந்துவிட்டதை நினைத்து வருந்தினார். அழகனைப் போல் தானும் ஏதேனும் ஊனத்துடன் பிறந்திருந்தால், தனக்கும் திருவடி தீட்சை கிடைத்திருக்கும்; குரு குலத்தில் ஆரம்பித்து படிப்படியாகக் கல்வி கற்று காலம்க் கடத்தி யிருக்கவும் தேவை இருந்திருக்காது; குருவின் கருணை ஒரு நொடியில் தன்னைக் கடைத்தேற்றியிருக்கும் என்று எண்ணினார். அந்த நிலையில் கூரேசர் தனக்கு அந்த பாக்கியம் கிட்டாமல் போனதற் காக சுவரில் தலையை மோதிக்கொண்டாராம்.

ஸ்ரீராமாநுஜரின் இந்தச் செயல், ஊனமுற்றவர்களிடம் அவர் காட்டிய கருணைக்கு ஒரு சாட்சி. ஸ்ரீராமாநுஜர் வாழ்ந்த காலத்தில் ஜாதிச் செருக்கு, செல்வச் செருக்கு, கல்விச் செருக்கு, வீரச் செருக்கு என்று பல செருக்குகள் மிகுந்து காணப்பட்டன. அவற்றின் நடுவே வைணவ நெறியை நிறுவ, அவர் பெரும்பாடு பட வேண்டியிருந்தது.



தன் சீடர்களில் ஒருவரான மறவர் குலத்தைச் சேர்ந்த உறங்கா வில்லியின் மரணத்தின்போது, கூரத்தாழ்வானின் மூத்த புதல்வரான பராசரரை அழைத்தார் ஸ்ரீராமாநுஜர். அவரிடம், ஒரு பிராமணன் இறந்தால் எப்படி கிரியைகள் புரிவரோ, அப்படி உறங்காவில்லிக்கும் செய்யப் பணித்தார். அதேநேரம் உறங்காவில்லியின் வழிமுறைகளில் பின்பற்ற வேண்டும்; வழிமுறைகளில் பெரிது-சிறிது எனும் பேதம் கூடாது என்பதைத் தன் செயலால் நிரூபித்தார்.

ஸ்ரீராமாநுஜரின் வாழ்வில் தினமும் ஒரு முன்னுதாரணச் சம்பவம் நிகழ்ந்தது எனலாம். அவற்றில் சில மட்டுமே வரலாற்றில் பதிவாகியுள்ளன. 'ராமாநுஜாசார்ய திவ்ய சரிதை' என்ற நூலில் அந்தப் பதிவுகளைக் காணலாம்.

ஒரு நாளின் விடிகாலை தொடங்கி இரவு படுக்கைக்குச் செல்லும் வரை ஸ்ரீராமாநுஜர் அன்றாடம் செய்யும் செயல்களை, ஒரு பதிவேடு போல குறித்துவைத்துச் சொல்கிறது

அந்த நூல்.

ஸ்ரீராமாநுஜர் திருவரங்கத்தில் வாழ்ந்த வரையிலும் சேரன் மடத்தில்தான் தங்கியிருந்தார். காவிரியில் தவராசன் படித்துறையில் தான் அவர் நீராடுவார். அதனைத் தொடர்ந்து திருவரங்கத்து ஆலயத் திருப்பணிகள் அவருக்காகக் காத்திருந்தன.

இந்தத் திருப்பணிகளில் அவர் செய்த சீர்திருத்தங்கள் அசாதாரண மானவை. கோயில் பணியாளர்களை அவர் பத்துக் கொத்துகளாக வகைப்படுத்திப் பணியில் ஈடுபடுத்தியதை, திருக்கோயிலின் பதிவேடான கோயிலொழுகு மூலம் அறிய முடிகிறது.

வைணவத்தைப் பின்பற்றும் எக்குலத்தவரும் ஒரு குலத்தவரே. அவர்கள் அனைவருக்கும் கோயில் திருப்பணிகளில் உரிமை உண்டு. அந்த வகையில் அவரவர் தன்மைக்கேற்ப பணிகளைப் பிரித்தளித்து, அவர்களின் பூரணச் சம்மதத்துடன் இச்செயலைச் செய்தார்.

திருப்பணி செய்வார், திருப்பதியார், பாகவத நம்பியர், உள்ளூர்வாசிகள், விண்ணப்பதாரர், திருக்கரக்கையர், ஸ்தானத்தார், பட்டாள் கொத்து, ஆரியபட்டாள், தாசநம்பிகள் ஆகிய பிரிவுகளை உருவாக்கி நியமித்து, அனைவரும் அவரவர் கடமைகளை இனிதே செய்திட வகை செய்தார்.

இதுபோக ஏகங்கிகள், சாத்தாத முதலியர் போன்றோருக்கும் கைங்கர்யங்களை நியமித்து, அவற்றை முறைப்படி செய்யப் பணித்தார். இதனால் அனைத்துப் பணிகளும் ஆனந்த உணர்வுடனும், ஒற்றுமையுடனும் நடைபெற்றன.

பணிகளைப் பிரித்தது போலவே கொண்டாட்டங்களையும் வகைப்படுத்தினார். திருமொழித் திருநாள், திருவாய்மொழித் திருநாள் போன்றவற்றைச் சொல்லலாம். இவராலேயே பகல் பத்து - ராப்பத்து திருவத்யயன உற்சவம் போன்ற வழிபாட்டுக் கொண்டாட்டங்கள் உருவாயின.

இத்திருநாளில் ஆழ்வார் பெருமக்கள் உச்சிமேல் வைத்து கொண்டாடப்படுவது சிறப்பான ஒன்றாகும். அம்மட்டில் பாண்டிய நாட்டைச் சேர்ந்த நம்மாழ்வாரின் சிலா ரூபம் அங்கிருந்து பல நாள்கள் பயணித்துத் திருவரங்கத்திற்கு வந்து சேரும். சில வருடங்களில் புயல், மழை போன்ற இயற்கை உபாதைகளால் இந்தப் பயணம் நிகழாது போய், ஒரு குறை உண்டானது. இதைத் தவிர்த்திட நம்மாழ்வாரின் திருவுருவைத் திருவரங்கத்திலேயே வடிவமைத்து பிரதிஷ்டை செய்து, ஆழ்வார்களின் வைபவம் தடைகளின்றித் தொடர வழிகண்டார் ஸ்ரீராமாநுஜர்.

**ஆலயம் என்பது பொது மக்களின் சொத்து. அது ஒரு கலாசாரக் களம். அங்கே நம் கலாசாரத்தின் பிரதிபலிப்புகள் இருக்கவேண்டும்.**



**தி**ருவரங்கம் குறித்துச் சிந்திக்கையில், காவிரியை எண்ணாமல் இருக்க முடியாது. நாலு புறமும் பாய்ந்து செல்லும் இந்நதியின் வெள்ளப் பெருக்கில் பலமுறை மூழ்கி மீண்டிருக்கிறது திருவரங்கம். இன்று போல் அணைகள் எதுவும் கட்டப்பட்டிராத காலம் அது!

ஸ்ரீராமாநுஜரின் காலத்திலும் வெள்ளச் சேதமும் உயிர்ச்சேதமும் மிகுதியாய் ஏற்பட்டது. இப்படியான வெள்ளச் சேதத்திலிருந்து திருவரங்கத்தைக் காத்திட, பொதுப்பணித்துறை அமைப்பை ஏற்படுத்தினார் ஸ்ரீராமாநுஜர். அதில் பணிபுரிந்தோர் 'இருகரை காப்போர்' என்று அழைக்கப்பட்டனர்.

இவ்வாறு திருவரங்கம் பெருவரங்கமாய்த் திகழ பெரும் காரணமாய் இருந்த ஸ்ரீராமாநுஜர், தன் திருப்பணிகளைத் திருவரங்கத்தோடு நிறுத்திக்கொள்ளவில்லை. பல்வேறு வைணவ



ஆலயங்களுக்குச் சென்று அங்கும் திருப்பணிகள் செய்தார். குறிப்பாக ஒரு வைணவ ஆலயம் தூய்மையான திருக்குளம், பாதுகாப்பான மதில் சுவர், ஒரு காத கூரை, கம்பீரமான கோபுரம் ஆகியவற்றுடனும் நந்தவனத்துடனும் திகழவேண்டும் என்பதை எல்லா இடங்களிலும் நிலைப்படுத்தினார்.

ஆலய பூஜைகள் தடைப்படக் கூடாது, வழிபாடுகளில் காலம் தாழ்த்துதலும் தவறுதலும் கூடாது, நைவேத்தியம் - அபிஷேகங்கள் என எதிலும் குறை இருக்கக்கூடாது என்பதில் குறியாக இருந்தார். மேலினும் மேலாக ஆலயத்துக்கு வருவோருக்குப் பிரசாத உணவு தவறாமல் கிடைக்க வேண்டும்; பசியால் பக்தி சிதிலமாகி விடக் கூடாது என்பதில் மிகக் கூர்மையாக இருந்தார்.

ஆலயம் என்பது பொது மக்களின் சொத்து. அது ஒரு கலாசாரக் களம். அங்கே நம் கலாசாரத்தின் பிரதிபலிப்புகள் இருக்கவேண்டும். அதற்காக வசந்த மண்டபங்களை அமைத்து, அவற்றில் உபன்யாசங்கள் நிகழ வகை செய்தார். திருவரங்கத்தைத் திருத்தியதுபோல், திருமலை திருப்பதியையும் பல விதங்களில் திருத்தி வைணவம் பெரிதினும் பெரிதாய்த் தழைத்திட வகை செய்தார்.

ஸ்ரீராமானுஜர் திருவரங்கத்திலிருந்து திருப்பதிக்கு மூன்று முறை சென்றதை உறுதி செய்ய முடிகிறது. இந்த எண்ணிக்கை அதிகமாகவும் இருக்கலாம். முதல்முறை சென்ற போது ஓராண்டுக்கு மேல் அங்கு தங்கியிருந்தார். அங்கேதான் திருமலை நம்பியிடம் ராமாயணம் முழுவதையும் கேட்டு அறிந்து கொண்டார்.

இரண்டாம் முறை சென்றபோது, பல வரலாற்றுச் சிறப்பு மிகுந்த செயல்களைச் செய்தார். அப்போது சைவர்களில் சிலர் திருமலை தங்களுக்குச் சொந்தம் என்று கூறி வழக்கு தொடுத்தனர்.

ஸ்ரீராமானுஜர் இந்த வழக்கில் திருமலை தெய்வம் திருவேங்கடமுடையானே என்பதைப் பலரும் உணரும் வண்ணம் நிரூபித்தார். அதிலிருந்து திருவேங்கடமுடையானின் நெற்றியில் திருமண் காப்பு பிரதானமாகத் தெரியும் விதமாய்ப் பொருத்தப்பட்டது. சங்கும் சக்கரமும் ஆலயமிசை பெரும் சின்னங்களாகிப் பிரகாசிக்கத் தொடங்கின.

ஸ்ரீவராஹர் சந்நிதி, ஸ்ரீநரசிம்மர் சந்நிதி போன்றவை வேங்கடேச மகாத்மியத்தின்படி நிர்மாணிக்கப்பட்டன. கூடுதலாக ஒரு லட்சுமி யந்திரத்தையும் பிரதிஷ்டை செய்தார். அதன் காரணமாக திருமலை உண்டியல் பொங்கி வழிவதை இன்றளவும் காணலாம். திருப்பதி மலைக்கு மேல் மட்டுமல்ல, மலைக்குக் கீழேயும் இவர் அறிய பல திருப்பணிகளைச் செய்தார். அதற்கு பல அரசர் பெருமக்கள் அவருக்குத் துணை நின்றனர்.

- தொடரும்...

29 Dec 2020/ 12-01-2021

# ரங்க ராஜ்ஜியம் - 71

[இந்திரா சௌந்தர்ராஜன்]



பொதுவாக திருப்பணியோ, பொதுப்பணியோ ஆண் மக்களே பெரிதும் முன்வருவதும் அறியப்படுவதுமாகவுள்ளனர்.

*தேசமெலா முகந்திடவே பெரும் பூதூரில்*

*சித்திரையிலா திரைநாள் வந்து தோன்றி*

*காசினி மேல் வாதியரை வென்றரங்கர்*

*கதியாக வாழ்ந்தருளுமெதி ராசா! முன்*

*பூசுரர் கோன் திருவரங்கத்தமுதனா ருன்*

*பொன்னடி மேலந்தாதியாகப் போற்றிப்*

*பேசிய நற்கலித்துறை நூற்றெட்டுப் பாட்டும்*

*பிழையறவே யெனக்கருள் செய்பேணி நீயே!*

**- பிரபந்த சாரத்தில்**

**சுவாமி ஸ்ரீமந் நிகமாந்த மகாதேசிகன் அருளியது**

`**பெ**ரிய திருமுடியடைவு' எனும் நூலின் கூற்றுப்படி, ஸ்ரீராமாநுஜர் திருவரங்கம் கோயிலைச் சீர்திருத்தி, உயரிய நெறிபாடுகளை வகுத்து கோயிலுக்குள் அருள்நதியைப் பெருக் கெடுக்க விட்ட காலத்தில், ஏகாங்கிகள் என்பார் பன்னீராயிரவர் வரை இருந்தனர் என்று அறிய முடிகிறது.

இவர்களில் குறிப்பிடப்படும்படியாக 'பிள்ளை ராமாநுஜர் வேளைக்காரர், ஜகன்னாத பிரம்ம ராயர், தொண்டைமான் சக்ரவர்த்தி முதலான திருநாமதாரிகள் ஸ்ரீராமாநுஜர் காட்டிய வழியில் பெரும் சேவை செய்தவர்கள் ஆவர்.

பொதுவாக திருப்பணியோ, பொதுப்பணியோ ஆண் மக்களே பெரிதும் முன்வருவதும் அறியப்படுவதுமாகவுள்ளனர். எனில் இந்த தேசத்தில் பெண்மக்கள் இதுபோன்ற பணிகளில் பெரிதும் ஈடுபடவில்லையா என்ற கேள்வி எழும்பக்கூடும்.

இந்த விஷயத்தில்... ஸ்ரீராமாநுஜர் எப்படி சாதிபேதமற்ற சமூக நெறிக்கு பாடுபட்டாரோ, அதேபோல் ஆண் - பெண் பேதத்தையும் தவிர்த்தார். ஓர் ஆணின் பக்திக்கும் தியாகத்துக்கும் பெண்மகளின் பக்தியோ தொண்டோ சளைத்தவை அல்ல என்பது அவர் கருத்தாகும்.

இதனால் பெண்டிர் பலரும் ஸ்ரீராமாநுஜரின் வழியில் நடந்து அவரால் ஆட்கொள்ளப் பட்டனர். அவர்களில் பருத்தி கொல்லை யம்மாள் முதலானவராய் விளங்கினார். இவரின் குருபக்தி, பதிபக்தி மற்றும் இறைத் தொண்டு ஸ்ரீராமாநுஜரைச் சிலிர்க்கச் செய்தன.

`பருத்தி கொல்லை' என்பது ஓர் ஊரின் பெயர். இவ்வூரில், ஸ்ரீராமாநுஜரின் வழியைப் பின்பற்றும் வரதன் என்பவன் தன் மனைவியுடன் வாழ்ந்து வந்தான். இவர்களின் திருமணம் ஒரு காதல் திருமணம். வரதன் அந்தணன்; அவன் மனைவி கொல்லை, அப்போதைய



வர்ணாசிரமக் கொள்கையின்படி சூத்திர வகுப்பினள். அவள், ஸ்ரீவைணவ சித்தாந்தத்தின் மீது பெரும் பற்றும் ஈர்ப்பும் கொண்டவள். இதுவே வரதன் இவள்மீது காதல் கொள்ள காரணமானது. இதை ஸ்ரீராமாநுஜரும் அறிவார். ஊரார் இவர்களை ஒதுக்கியபோதும் ஸ்ரீராமாநுஜர் ஆதரித்தார். அதனால் ஊராரும் ஏற்கும் நிலை பின்னர் வந்தது.

ஒருமுறை ஸ்ரீராமாநுஜர் யாத்திரையின் போது பருத்தி கொல்லை வழியாக செல்ல நேர்ந்தது. அப்போது வரதன் நினைப்பு எழ, அவன் இல்லத்தில் தங்கியிருந்து அங்கேயே பசியாறிவிட்டு, பிறகு தன் பயணத்தைத் தொடங்க எண்ணினார். தொண்டர்களுடன் தான் வரும் செய்தியை முதலில் சொல்லி அனுப்பினார்.

செய்தியோடு சீடன் ஒருவன் சென்றபோது, வரதன் வீட்டில் இல்லை. எனவே, செய்தியைப் பருத்தி கொல்லைதான் எதிர்கொண்டாள். கூடவே சஞ்சலத்துக்கும் ஆளானாள்.

காரணம், அப்போது அவள் இல்லத்தில் நிலவிய வறுமை. அடுப்புக்குள் பூனை தூங்கிக் கொண்டிருந்தது. சாப்பிட்டு இரண்டு நாள்கள் ஆகியிருந்தன!

இப்படியான நிலையில்தான் ஸ்ரீராமானுஜர் வருகிறார் என்ற செய்தி வந்து சேர்ந்தது. அவரின் வருகையால் வரதனுக்குக் குருவருள் கிடைப்பதுடன், ஊரிலும் மதிப்பு மரியாதை கூடும். ஜாதி செருக்குடையோர் வரதனை ஒதுக்கியே வைத்திருந்தனர். அவர்களெல்லாம் ஸ்ரீராமானுஜரின் அரவணைப்பு கண்டு தங்களை சிறிதாவது மாற்றிக்கொள்ளக் கூடும் என்பதெல்லாம் உட்பொதிவான விஷயங்கள்.

அடுத்து, எத்தகைய வறுமை நிலையும் குருவருளுக்கும் அன்னதான புண்ணியத் துக்கும் ஆட்படும் பட்சத்தில், அந்த வறுமை நிலை விலகி நன்மை அதிகரித்திடும். ஆக, ஸ்ரீராமானுஜரின் ஒவ்வொரு முடிவும் செயலும் இங்ஙனம் நுட்பங்கள் பல உடையனவாகவே இருந்தன.




எனினும் பருத்தி கொல்லை யைப் பொறுத்தவரையிலும், `ஸ்ரீராமானுஜர் வருகிறார்' என்ற செய்தி, அவளைத் திகைக்கவும் கலங்கவும் வைத்துவிட்டது.

எப்படியும் பத்து பேராவது ஸ்ரீராமாநுஜருடன் வருவார்கள். அவ்வளவு பேருக்கும் உணவிட வேண்டும். இங்கோ இருவருக்கே உணவில்லாத நிலை. என்ன செய்வது?

கணவன் வந்தபிறகு அவனிடம் சொல்லி, ஏற்பாடுகளைக் கவனிக்கச் சொல்லலாம் என்றால், அதற்குப் போதுமான கால அவகாசம் இல்லை. வருபவர் ஒரு மகான். அவரின் பாதம் இல்லத்தில் பட கொடுத்து வைத்திருக்க வேண்டுமே!

`நாங்களே பட்டினியோடு இருக்கிறோம்' என்று கூறி ஸ்ரீராமாநுஜரையும் சீடர்களையும் திருப்பி அனுப்பலாம்தான். இல்லாதபோது வேறு என்ன செய்வது? ஆனால், அப்படிச் செய்தால், அது வாழ்நாள் பிழையாகி

விடுமே. `ஒருவேளை சோறிட வக்கற்று போனோம்' என்பது, நல்ல வைணவனாக வாழ்ந்து புண்ணியம் இல்லை என்ற ஒரு கருத்தை அல்லவா காலத்தால் உருவாக்கிவிடும். எனவே எப்பாடு பட்டாவது இச்சூழலைச் சமாளித்து, வருவோருக்கு விருந்தளிப்பது என்று விவேகமான முடிவை எடுத்தாள் பருத்தி கொல்லை.

அதன்பொருட்டு, மளிகைக் கடைக்குச் சென்று அந்தக் கடை முதலாளியின் முன் நின்று தன் தேவையைச் சொன்னாள்.

அந்த முதலாளி எச்சில் கையால் காக்கை ஓட்டாதவன். ஆசை, காமம், லோபம் ஆகிய குணங்கள் மிகுந்தவன். அவனுக்குப் பருத்திகொல்லையின் மேல் சற்றே காமம் இருந்தது. இப்போது அவள் உதவி என்று வந்து நிற்கவும், இந்தச் சந்தர்ப்பத்தை விட்டுவிடக் கூடாது என்று கருதினான்.

``தாராளமாக உனக்கு அரிசி, பருப்பு, முதல் காய்கறி வரை சகலமும் தருகிறேன். நீ அவற்றுக்குப் பணம் தரத் தேவையில்லை. நான் கேட்கும் வேறு ஒன்றைத் தந்தால் போதும்" என்றான்.

பருத்தி கொல்லைக்குப் புரிந்தது, அவன் தன்னையே கேட்கப் போகிறான் என்று. அவனுடைய எண்ணமும் பேச்சும் முதலில் ஊசியாய்த் தைத்தன. என்றாலும், எப்படியேனும் ஸ்ரீராமாநுஜருக்கு விருந்திட

வேண்டும் என்ற உறுதிமிக்க அவளது எண்ணம், அவனுடைய விருப்பத்துக்குச் சம்மதிக்கச் செய்தது.

இது பாழுடம்பு. உயிர் போனாலோ பூச்சியும் புழுவும் நெளியத் தொடங்கிவிடும். ஆயினும் இந்த உடம்பை சிலர் மோகிப்பதுதான் பெரும் ஆச்சர்யம். இல்லாவிட்டாலும் மனித சமூகம் உருவாகிட வழி இல்லாது போய்விடும். எனவேதான் காம நெருப்பு அடக்கமாய் எரிந்திட, கற்பெனும் கட்டுப்பாடுகள் உருவாக்கப்பட்டன. அந்தக் கட்டுப்பாடுகள் உடைந்துவிடும் பட்சத்தில், அதை விடக் கேடு வேறெதுவும் இல்லை!

தன்னை இழந்த நிலையில் உயிர் வாழ்வதால் தான் என்ன பயன்? எனவே, தன்னையே அடகுவைத்து சோதனையைக் கடப்போம். பின்னர், பட்ட கடனுக்குத் தன்னைத் தந்த நிலையில், பாழ்பட்ட உடலை நெருப்புக்கு இரையாக்கி உயிர் துறப்போம். இப்போதைக்கு இது ஒன்றே வழி என்று தீர்மானித்தாள் பருத்தி கொல்லை.

அவள் தன்னுடைய ஆசைக்கு இணங்கி விட்டதற்காகப் பெரிதும் மகிழ்ந்தான் கடை முதலாளி. சரக்குகளை வாரி வழங்கினான். பருத்தி கொல்லையும் நன்கு சமைத்தாள். இல்லம் தேடி வந்த ஸ்ரீராமாநுஜருக்கும் சீடர்களுக்கும் அருமையாய் அமுது படைத் தாள். நல்லவேளையாக அவளின் கணவன் வரதனும் வந்து அந்த அன்ன மகா யக்ஞத்தை அவளுடன் சேர்ந்து நடத்தினான்.

ஸ்ரீராமாநுஜர் பூரித்துப் போனார். சீடர் களும் பசியாறிக் களைப்பு நீங்கி உற்சாகம் அடைந்தனர். எல்லோரும் ஓய்வெடுத்த நேரத் தில், வரதன் பருத்திகொல்லையிடம், `எதை விற்று இவ்வளவு பொருள்களை வாங்கினாய்' என்று கேட்டான். அவள் கண்ணீர் மல்க விஷயத்தை விவரித்தாள்.

``இந்த உடலை இன்னமும் விற்கவில்லை. அடகுவைத்துள்ளேன். இனி போய் இதை அவனுக்கு விற்றுவிட வேண்டும். அதன்பின் நான் உங்களுக்கு உகந்தவளாய் இருக்க முடியாது; இருக்கவும் கூடாது. எனவே தீப்பாய விரும்புகிறேன்'' என்றாள்.

அடுத்த நொடியில் அவளை இழுத்து அணைத்துக் கொண்டான் வரதன்.

``பருத்தி! நீ மிகவும் உயர்ந்துவிட்டாய். உன் முடிவும் செயலும் அசாதாரணமானவை. பெரும் சோதனையை, உன்னையே பணயம் வைத்துச் சாதனையாக்கிவிட்டாய்.

இம்மட்டில் நான் உனக்குப் பயன் இல்லாத வனாகிவிட்டேன். ஆனால் நீயோ எனக்கும் நம் மகானுக்கும் சீடர்களுக்கும் பெரும் பயனளித்துவிட்டாய். கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டும் நானே உன்னைக் கடை முதலாளியிடம் அழைத்துச் செல்கிறேன். அவன் மோகம் தீரட்டும். பின் நாம் சேர்ந்தே மடிவோம்'' என்று கூறி கண்ணீர் வடித்தான்.

அப்படியே, அந்த வணிகனின் வீட்டுக்கு மனைவியோடு சென்று நின்றான் வரதன். அந்த மளிகைக் கடை வணிகன் ஆடிப்போனான். பருத்திகொல்லை கணவனோடு வந்து தன்னை அடிக்கப் போவதாகக் கருதியவன், அதன்பொருட்டு மிரண்டான்.

ஆனால் வரதனோ ``வணிகரே! நீங்கள் தந்த பொருளுக்கு உரிய விலையை தரத்தான் வந்துள்ளேன். இதோ, நீங்கள் ஆசைப்பட்ட என் மனைவி. இவளை நீங்கள் ஒரு பிணத்தைத் தொடுவது போலத்தான் தொடமுடியும்.

இவள் உங்களுக்குத் தன்னையே தந்திட சம்மதித்த நொடியே உயிரை விட்டுவிட்டாள். ஆயினும் ஒரு பெரிய கடமையைச் செவ்வனே நிறைவேற்றிவிட்டாள். அந்த நிறைவுதான் இப்போது இவள் வசமும் என் வசமும் இருக்கிறது. இவளைப் போல் ஒரு பெண்ணை மணந்த நான் பாக்கியசாலி. நீங்கள் எப்படிப்பட்டவர் என்பதை நீங்களே முடிவுசெய்து கொள்ளுங்கள்'' என்றான்.

வரதனின் பேச்சு அந்த வணிகனை உலுக்கி எடுத்துவிட்டது. சோறிடுவதற்காகத் தன்னையே தருகிறாள் மனைவி. அவளை மெச்சி முன் நிறுத்துகிறான் கணவன்.

இவர்கள் எப்பேர்பட்டவர்கள்... வறுமையி லும் இவர்கள் காட்டும் இந்தச் செம்மையை என்னவென்று சொல்வது?

அந்த வணிகனுக்குள் மனசாட்சி விழித்துக் கொண்டு, அவனைல் கூனிக்குறுகச் செய்தது.

``அம்மா என்னை மன்னித்துவிடு'' என்று அவள் கால்களில் மரம்போல் விழுந்தான். அப்படியே அவளின் கணவனின் கால்களையும் பற்றியவன், ``உண்மையில் நான் ஆண்மகன் இல்லை. நீங்கள்தான் ஆண்மகன். உங்கள் மனைவியின் துணிவைவிட, அதற்கு வழிவிட்ட உங்களின் துணிவு அசாத்தியமான ஒன்று. துளியும் சுயநலமின்றிச் சிந்தித்து நடக்கிறீர்கள்.

உங்கள் முன் நான் ஒரு தூசு! உங்களால் ஒரு பெரும் பாடமும் கற்றேன். என் வாழ்நாளில் நான் இனி காம-குரோதத்துக்கும், சுயநலத்துக்கும் ஒருபோதும் இடம் தரமாட்டேன். இது சத்தியம்'' என்றான்.

கச்சிதமாய் அப்போது அங்கு வந்த ஶ்ரீராமாநுஜர், ``வரதா! ஒரு நல்ல வைணவன் எப்படி நடக்க வேண்டும் என்பதற்கு நீ பெரும் உதாரணம் ஆகி விட்டாய். உன்னை விஞ்சிவிட்டாள் உன் மனைவி. உங்களால் காம - குரோதம் குறித்த ஒரு விழிப்பு ஏற்பட்டுள்ளது.

குருசேவை நிமித்தம் ஒருவர் எவ்வளவு உயரத்துக் குச் செல்ல முடியும் என்பதற்கும் நீ ஓர் அளவைக் கொடுத்துவிட்டாய். என் சீடர்களின் பட்டியலில், பருத்திகொல்லை எப்போதும் முதலில் இருப்பாள்'' என்று ஆசீர்வதித்தார்.

பருத்தி கொல்லையைப் போலவே இன்னும் பல பெண்மக்கள், ஶ்ரீராமாநுஜரைத் தங்களின் ஆத்மகுருவாய் வரித்து, அவர் காட்டிய வழியில் நடந்தனர்.

உக்கலம்மாள், கோமடத்தம்மாள், அம்மாங்கியம் மாள், இளையவில்லி, திருவனந்தபுரத்து அம்மாள், கோட்டியூராண்டாள், தேவகிப்பிராட்டி, அத்துழாய், அம்மங்கி, ஆசூரி, இன்னிளவஞ்சி என்று அந்தப் பட்டியல் நீள்கிறது.

**- தொடரும்.**



**கல்யாண வரம் அருள்வாள் காட்டூர் முத்துமாரி**!

**கோ**வை காந்திபுரத்திலிருந்து சுமார் ஒரு கி.மீ. தொலைவில் உள்ளது காட்டூர். இவ்வூரில் கோயில்கொண்டுள்ள முத்துமாரியம்மன், தொழில் சிறக்கவும் செல்வம் கொழிக்கவும் அருள் பாலிக்கும் அன்னை. சித்திரை 3-வது செவ்வாய் அன்று இந்த அம்மனுக்கு நிகழும் திருக் கல்யாண வைபவத்தின் போது, பூஜையில் வைத்துத் தரப்படும் மஞ்சள் சரடை வாங்கி பெண்கள் அணிந்தால், கணவனின் தீராத நோயும் தீரும்; தாலி பாக்கியம் நிலைக்கும் என்பது நம்பிக்கை. திருமணத் தடை உள்ளவர்கள் இந்த அம்மனை வழிபட்டால், விரைவில் கல்யாணம் கைகூடும். மூலம் நட்சத்திரக்காரர்கள், 9 வெள்ளிக் கிழமைகள் இங்கு வந்து தீபமேற்றி வழிபட்டால், தோஷங்கள் நீங்கும் என்பது நம்பிக்கை.

**-கே.கிருத்திகா, திருப்பூர்-2**



**`சிறப்புகள் அனைத்தும் என் மகிமையே!'**

வாழ்வில் முன்னேற விரும்பு வோர், நிச்சயமாகப் பொறாமையை மனதிலிருந்து நீக்கியே ஆக வேண்டும்.

பொறாமை மனிதனுடைய செல்வத்தையெல்லாம் கவர்ந்து, அவனைத் தீய வழியில் செலுத்தி அழித்துவிடும் என்று எச்சரிக்கிறார் வள்ளுவர்.

பொறாமையில் இருந்து விடுபட இரண்டு வழிகள் உண்டு.

முதலாவது, எவர் முன்னேறினா லும் உளமாரப் பாராட்டுவதை வழக்கமாக்கிக்கொள்ள வேண் டும். இந்த இனிய வழக்கம், தெய்வ நிலைக்கு உயர்த்தும்!

2-வது வழி, எல்லாவற்றையும் இறைவனின் மகிமையாகக் காணப் பழகிக் கொள்ளுதல்.

`எங்கு, எச்சிறப்பு காணப் படினும், அவை அனைத்தும் என் மகிமையே என்று அறிந்துகொள்' என்று கீதையில் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறார் கிருஷ்ணர்.

ஆக, இறையருள் எல்லோரிடத் திலும் வெளிப்படுகிறது. இறையரு ளுடன் போட்டி போடவோ, இறைவனைப் பார்த்துப் பொறாமைப்படவோ நம்மால் முடியாது. எனவே, அனைத்து அனுபவங்களிலும் கடவுளைக் காணப் பழகிக்கொண்டால், பொறாமையிலிருந்து விடுபடலாம்!

(சுவாமி ஓங்காராநந்தரின் அருள் மொழித் தொகுப்பிலிருந்து...)

- ***ஆர்.கண்ணன், சென்னை-44***

**26-01-2021/ 12-01-2021**

# ரங்க ராஜ்ஜியம் - 72

[இந்திரா சௌந்தர்ராஜன்]




ரங்க ராஜ்ஜியம் ( ரங்கராஜ்ஜியம் )

ஓர் ஊருக்குப் பல பாதைகளை இருப்ப தைப் போல ஒன்றாகிய பிரம்மத்தை அல்லது பரம்பொருளை அடைவதற்கு, அவரவர்க்கு உண்டான வழிகளில் சென்று அடைந்திடலாம் என்பதே ஆதிசங்கரரின் கருத்து.

*`ஒன்றுமறியாத ஊமைகாள், தென்னரங்கர்*

*இன்று திருத்தேரிலேறினார். நின்று*

*வடம் பிடிக்க வாருங்கோள், வைகுந்த நாட்டில்*

*இடம் பிடிக்க வேண்டுமென்றக் கால்!'*

*- பரப்பிரம்ம விவேகத்தில் பிள்ளை பெருமாளையங்கார்*




**அ**ந்த நாளில் பெண்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, பெற்றோர்கள் அவர்களுக்குச் சூட்டிய பெயர்களால் அவர்களை அழைக்கும் பழக்கம் இல்லை. உறவினர்களே உரிய பெயர்களைச் சொல்லி அழைத்தனர். மற்றோர் அவர்களை அவர்களின் ஊர் பெயராலேயே அழைத்தனர். அதனாலேயே ராமானுஜரைத் தொடர்ந்த பெண்மக்கள் அவர்களின் ஊர்ப் பெயர்களால் அழைக்கப்பட்டனர்.

பெண் மக்கள் மட்டுமல்ல, பலரும் ஸ்ரீராமானுஜரைத் தொடர்ந்தனர். அவர்களைப் பட்டியலிட்டால் சீயர்கள், ஆசார்யர்கள், சந்நியாசிகள், கொங்கிகள், தாசர்கள், பாதந் தோய்ந்தவர்கள் என்று பட்டியல் விரிந்துகொண்டே செல்லும். தன் விசிஷ்டாத்வைதக் கொள்கையால் ஸ்ரீவைஷ்ணவத்தைத் தழைக்கச் செய்த ஸ்ரீராமானுஜர், அனைவருக்கும் பொதுவான ஒரு கொள்கையாகவே அதைக் கருதினார்.

பாரத மண்ணில் இறைவழி ஆதிசங்கரரின் பகுப்பால் வைணவம், சைவம், சாக்தம், காணாபத்யம், கௌமாரம், சௌரம் என்கிற ஆறு வழிகளாய் கொள்ளப்பட்டது.

ஓர் ஊருக்குப் பல பாதைகளை இருப்ப தைப் போல ஒன்றாகிய பிரம்மத்தை அல்லது பரம்பொருளை அடைவதற்கு, அவரவர்க்கு உண்டான வழிகளில் சென்று அடைந்திடலாம் என்பதே ஆதிசங்கரரின் கருத்து.



பின்னாளில் இந்த ஆறு வழிப்பாதை என்பது 'ஸ்மார்த்தம்' என்பது சேர்ந்து ஏழு வகைப் பாதையாகியது. பாதைகள் ஏழாக இருப்பினும் இறைக்கொள்கை என்பது த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்கிற மூன்றுக்குள் அடங்கிவிட்டது. பொதுவாய் இந்த மூன்றைப் பற்றிப் பேசும்போது, கேட்போர் ஒரு கணக்குப் பாடத்தை அணுகுவது போலத்தான் அணுகுவர். புரிந்தும் புரியாத ஒன்றாகவே இக்கொள்கைகள் பலர் வரையில் இருக்கின்றன.

இக்கொள்கை என்பது, பரப்பிரம்மத்தை அறியும் முயற்சி; அந்த பரப்பிரம்மத்தின் படைப்பான மனிதனே இதை அறிந்துகொள்ள விழைவது என்பதுதான். இது மனிதர்களில் எல்லோருக்கும் சாத்தியமானது கிடையாது.

ஐம்புலன் சுருக்கி உள்ளொளி பெருக்கிய ஞானியர்க்கே இது சாத்தியம். அந்த வகையில்தான் ஆதிசங்கரர் முயன்று, தான் உணர்ந்ததை அத்வைதமாக முன்வைத்தார். மத்வர் என்பவர் த்வைதமாக வைத்தார். ஸ்ரீராமாநுஜரோ 'விசிஷ்டாத்வைதம்' எனும் பதத்தில் முன்வைத்தார். இந்த த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்றால் என்னவென்று முதலில் பார்ப்போம்.



‘த்வைதம்’ என்று கூறும்போது ‘தோ’ என்கிற ஓர் ஒலி மறைந்திருக்க உணரலாம். `தோ' எனில் இரண்டு என்று பொருள். இறைவன், தான் வேறாகவும்; தான் படைத்த உயிர்கள் வேறாகவுமாய் இருக்கிறான். ஆக ‘த்வைதம்’ என்ற இறைக்கொள்கை `அது இரண்டாக இருக்கிறது' என்பதாகும்.

அடுத்து, அத்வைதம். த்வைதம் முன்னால் ஒரு ‘அ’ விழுந்து அத்வைதம் ஆகிறது. அதாவது `இரண்டு இல்லை' என்று கூறுகிறது. அப்படியாயின் அத்வைதக் கொள்கை என்பது ‘அது இரண்டாக இருந்தாலும் இரண்டும் ஒன்றே’ என்பதாகும்.

விசிஷ்டாத்வைதம் என்பது ‘த்வைதம்’ என்ற சொல்லுடன் ‘விசிஸ்டா’ என்கிற சொல்லின் சேர்க்கை ஏற்பட்டு ‘விசிஷ்டாத்வைதம்’ என்றாகிறது.

ஆத்மாவாக விளங்கி, இரு தன்மை கொண்ட வனாகிறான். இந்த இரு கருத்துகளையும் மறுக்காமல், இதனுள் ஒரு விசேஷக் கருத்தைச் சேர்த்தால் அது விசிஷ்டாத்வைதம். விசிஷ்ட என்றால் விசேஷமான என்பதே பொருள். அப்படியாயின் விசேஷமான விசிஷ்டாத்வைத கருத்துதான் யாது?

‘பரமாத்மாவான இறைவன் ஒருவனே! அவனே ஸ்ரீமன் நாராயணன். இந்த பூமிதான் அவன் உடல். இந்த பூமியில் எண்ணில்லாத உயிர்களாய் இருப்பவை ஜீவன்கள். ஆக பரமாத்மா, ஜீவாத்மா, உலகு என்கிற மூன்று அதாவது சித்து, அசித்து, ஈஸ்வரன் என்றும் இதைக் கூறலாம்.

இந்த முப்பொருளின் உண்மையே விசிஷ்டாத்வைதம் என்பதாகும். இதில் சித்து, அறிவு சார்ந்தது. அசித்து என்பது ஜடமாகும். இந்த இரண்டையும் படைத்தவனே பரமாத்மாவான இறைவன் - ஆக சித்து, அசித்து, ஈஸ்வரன் அல்லது பரமாத்மா. அதுவுமல்லது மகாவிஷ்ணு - இதுவே விசிஷ்டாத்வைத கொள்கை.



அதாவது இறைவன் ஒருவனே. அவன் உயிர்களைப் படைத்து, அந்த உயிர்களுக்குள்

புற உலகையும் தனி மனித உயிர் களையும், ஜீவாத்மாக்கள் ஒட்டு மொத்தமாக உடல் எனக் கொண்டால், இறைவனை (பரமாத்மா) அதில் உறையும் உயிர் எனச் சொல்லலாம். எவ்வாறு உடலுக்கு உயிர் ஆதாரமோ அதுபோல புற உலகு ஜீவாத்மாக்களுக்குப் பரமாத்மாவே உயிர் போன்றவன்.



இறைவனே உயிர்களுக்குள்ளும் உலக இயக்கத்துக்குள்ளும் அந்தர்யாமியாக நின்று இயக்குகிறான். எனவே, ஆன்மாக்கள் பலவாயினும் பரமாத்மா ஒன்றே. `பரமாத்மாவே பூரணமானது. அதில், தான் ஓர் அம்சம் என்று ஒரு ஜீவன் தன் சுய அனுபவத் தில் அறிந்துகொள்வதே முக்தி ஆகும். இந்த அனுபவத்துக்கு ஆட்பட்ட ஒரு ஜீவன் சரணாகதி புரிய வேண்டும்.

இப்படி விசிஷ்டாத் வைதக் கொள்கையை எளிமைப்படுத்தியும் பெரிதும் தெளிவுபடுத்தியும் வைணவத்தை சிகரம் ஏற்றினார் ஸ்ரீராமாநுஜர்.

பின்னாளில் வந்த அறிஞர்கள் உலகம், ஆதிசங்கரரின் அத்வைத கருத்தை ‘அறிவு வழி’ என்றும் ராமாநுஜரின் விசிஷ்டாத்வைதக் கருத்தை ‘இதய வழி’ என்றும் விமர்சித்தது.



இறைவன் என்பவன் புரிந்துகொள்ள முடியாதவனாய், எட்ட முடியாதவனாய் இருப்பினும், அவனை அப்படி உணர்வதனால் உருவாகும் பக்தி, அச்சமுள்ள பக்தியாகவும் தாழ்வுமனப்பான்மை கலந்த ஒன்றாகவுமே இருக்க முடியும். இதை இறைவனேகூட விரும் மாட்டான். எனவே இறைவழிபாடு என்பது அழகுணர்ச்சி மிகுந்த - அணுக எளிய ஒன்றாக இருந்தாலே போதும். உடன் மாசு மரு இல்லாத

பக்தி மட்டுமே போதும். இறையருள் முதலில் வசப்படும். பின் இறைவனே வசப்படுவான் என்பது ஸ்ரீராமாநுஜரின் அடிக் கருத்தாகும்.

இக்கருத்தின்படி தானே வாழ்ந்தும் காட்டினார். ராமாநுஜர் ஆழ்வார்களின் பிரபந்த பாசுரங்கள் நாலாயிரத்தையும் அறிந்து ஆராதித்தார். இதில் ஆண்டாளின் திருப்பாவைத் தமிழில் பெரிதும் உருகியதன் காரணமாக, 'திருப்பாவை ஜீயர்' என்கிற பெயரினை யும் பெற்றவர் ஆனார்.

மேலும் வேதம், உபநிடதம், புராணங்கள் என்று சகலத்தையும் அறிந்துகொண்டார். இதையெல்லாம் வைத்தே,

**'சொல்லார் தமிழ் ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும்**

**எல்லையில்லா அறநெறி யாவும் தெரிந்தவன்**

**எண்ணருஞ்சீர் நல்லார் பரவும் இராமாநுசன்' என்றார்**

**திருவரங்கத்து அமுதனார்.**

ஸ்ரீராமாநுஜரால் அந்நாளில் தமிழ் தனித்த ஒரு மதிப்பையும் உயர்வையும் பெற்றது என்றால், அது மிகையில்லை. தமிழின் விரிவாய் இயல், இசை, நாட்டியம் என்கிற மூன்று தோன்றிற்று. இம்மூன்றின் வாயிலாகவும் தமிழ் செழித்தது.

திருவரங்க ஆலயத்தின் கலைச்சிறப்புக்கு அரையர் சேவையை முன்னுதாரண மாகக் கூறலாம். அரையர் என்பதற்கு இறைத்தொண்டு என்பதே பொருள். இந்தத் தொண்டினைப் பாடியும், ஆடியும், நடித்தும் செய்வர்.

ஆழ்வார்களின் பாசுரங்களை எடுத்துக் கொண்டு அதனை இசைபடப் பாடி, அதற்கு ஏற்ப ஆடி, பின் முகபாவங்களோடு நடித்து அனைவரையும் ஈர்க்கும் தொண்டினைச் செய்பவர்களை 'அரையர்' என்பர்.

ஸ்ரீராமாநுஜர் இதைப் பெரிதும் ஊக்கப்படுத்தினார். ஆலயம் செல்வோர் இந்த ஆடல் பாடல் நடிப்பைக் காணும் பட்சத்தில் பாசுரங்கள் ஒருவர் மனதில் ஆழமாய் பொருள்படப் பதிந்துவிடும் என்கிற உண்மையை உணர்ந்து இதை அனைவரும் கண்டு மகிழவேண்டும் என்றும் கூறினார்.

இப்படிப்பட்ட தொண்டு புரிந்திடும் அரையர் களுக்கென திருவரங்கத்தில் மனை இடங்களை ஒதுக்கி, வரிசையாக அவர்களைக் குடியமர்த்தி, அவர்கள் வசிக்கும் தெருவுக்கு 'செந்தமிழ் பாடுவார் வீதி' என்ற பெயரையும் வைத்தார்.

ஒட்டுமொத்தமாய் ‘பிரபந்தாம்ர்தம்’ எனும் நூல் வாயிலாக, தாம் மறைவதற்கு முன், அதாவது தனது 120-வது வயதில் 74 வார்த்தைகளை அவர் அருளிச் செய்தார். நாராயண பக்தர்களை ஆராதிப்பதே புருஷார்த்தம். அவர்களை வெறுப்பதோ நரகுக்கு இட்டுச் சென்று விடும் என்பதே அதன் சுருக்கமாகும். சற்று விரிவாகக் கூறுவதானால், கீழ்க்காணுமாறு கூறிவிடலாம்.

‘விஷ்ணு பக்தர்களை அவர்களின் சாதி கருதி இகழ்வது கூடாது. அவர்கள் சாதியற்ற வர்கள். பிற உயிர்களையும் இகழ்வாய்க் கருதிவிடக்கூடாது.

அனந்தாழ்வானை அதாவது ஆதிசேஷனைப் பாம்பு என்றும், கருடனைப் பறவை என்றும் அனுமனைக் குரங்கு என்றும், கஜேந்திர யானையை ஒரு மிருகமாக மட்டுமே அற்பமாகக் கருதக்கூடாது. பிரகலாதன், விபீஷணன் போன்றோரை அசுரர் கூட்டத்தவர் என்றும் மலிவாகக் கருதக்கூடாது.

அதேபோல் ஆண், பெண் வேற்றுமை, அடியார்களின் உடல்கூற்றை வைத்து அவர் களை விளிப்பதும், இவன் துறவி, இவன் சம்சாரி, இவன் இளைஞன் என்று வேற்றுமை பாராட்டுவதும் தவறு. எல்லோரையும் சரி நிகர் சமானமாகக் கருதிட வேண்டும்.

ஒரு வைணவனின் வாழ்விடமே திவ்யதேசம். அவர்களை ‘ஸ்வாமி’ என்றே அழைக்க வேண்டும். தன்னையும் அடியேனாக்கிக்கொள்ள வேண்டும்.

- இப்படி அவர் கூறிய அறிவுரைகள் ஏராளம். ஆற்றிய தொண்டோ அதனினும் பெரிது.

சித்து, அசித்து, ஈஸ்வரன் என்கிற முப்பொருள் உண்மையைக் கொண்டு விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை அருளிய ஸ்ரீராமாநுஜர், இந்த முப்பொருள் உண்மைச் சாயலில் மூன்று வடிவில் இன்றும் நமக்குக் காட்சி தந்து அருளி வருகிறார்.

இவர் திருநாடு அலங்கரித்த நிலையில், முக்திபெற்ற நிலையில் இவரது பூதவுடலை அரங்கன் கோயில் சுற்றிலேயே பள்ளிப் படுத்தினர். உடலானது கெடாதபடி மூலிகைச் சாறு மற்றும் மெழுகினால் பதப்படுத்தினர். அப்படிப் பதப்படுத்தி அமர்த்திய திருமேனி ‘தாமான திருமேனி’ எனப்படுகிறது. இந்தத் திருமேனியை இன்றும் திருவரங்கத்தில் நாம் தரிசித்து அருள் பெற்றிடலாம்.

இவர் பிறந்து வளர்ந்த ஸ்ரீபெரும்புதூரில் இவர் பொருட்டு வடிக்கப்பட்ட திருமேனி ‘தாம் உகந்த திருமேனி’ என்று அழைக்கப்படுகிறது.

கர்நாடகத்தில் திருநாராயணபுரத்தில் அடியவர்கள் தன் பிரிவைத் தாங்காது அழுதபோது, அவர்கள் நிமித்தம் தன்னைப் போலவே ஒரு சிலையைச் செய்யச் சொல்லி, அதை அணைத்துப் பிடித்து, தன் அருட்சக்தியை அதனுள் நிரப்பி வழங்கிய அந்தத் திருமேனி ‘தமருகந்த திருமேனி.’

இவர் முக்தி அடைந்த வேளையில் அச்செய்தி அறிந்து திருவரங்கம் நோக்கி வந்தவர்களின் எண்ணிக்கையைச் சொன்னால் அது ஆனந்த அதிர்ச்சி அளிப்பதாக இருக்கும்.

இன்றுபோல் பெரும் சாலை வசதிகளோ, போக்குவரத்து சாதனங்களோ இல்லாத அக்காலத்தில், எப்பாடுபட்டேனும் தங்களின் குருவின் பூதவுடலைக் கண்ணாரக் கண்டு வணங்கிடும் விருப்பத்துடன் திருவரங்கம் நோக்கி வந்தோர் எண்ணிக்கை ஆயிரத்தைக் கடந்ததாகவும் எட்டுத் திசையிலிருந்தும் பெருமக்கள் வந்தனர் என்றும் விவரிக்கிறது, குருபரம்பரை ஆறாயிரப்படி என்கிற நூல். இந்த எட்டுத் திசைக்கும் எட்டு தேவதைகள் உள்ள ஒரே கோயில் திருவரங்கப் பெருங்கோயில்.

தெற்கில் உலகளந்த பெருமாள்- இவரை ஆயனார் என்றும் அழைப்பர். தென்மேற்கு மூலையில் யோக நரசிம்மர் எனும் யோக அழகியசிங்கர் (இப்போது இந்த மூர்த்தி கூரத்தாழ்வார் சந்நிதியில் இருப்பதாகக் கூறப்படுகிறது).

மேற்கில் துர்கை இவளை ‘பிடாரி’ என்றும் அழைப்பர். வடமேற்கில் வாதநாராயணர். இவர் சந்நிதி காலத்தால் பழுதடைந்து விட்டதாகக் கூறப்படுகிறது. வடக்கில் தசாவதார சந்நிதி; இன்றும் கொள்ளிடக் கரையில் உள்ளது. வடகிழக்கில் ஆதிகேசவப் பெருமாள் சந்நிதி (இன்று இருப்பதாய் தெரியவில்லை).

கிழக்கில் லட்சுமி நரசிம்மர் சந்நிதி - இதை ‘காட்டழகிய சிங்கர்’ என்றும் அழைக்கிறோம். தென்கிழக்கு மூலையில் ஸ்ரீ கோதண்டராமர் சந்நிதி. இப்படி எட்டுத் திக்குகளிலும் எட்டு தேவதைகள் இருப்பது திருவரங்கத்தின் தனிச்சிறப்பாகும்.

கூடுதலாகக் கோயிலுக்குள் கருடாழ்வார் அமர்ந்த நிலையில் பெரும் வடிவில் காட்சி தருவது இங்கு மட்டுமே!

மற்ற தலங்களில் நின்று காட்சி தரும் கருடன், இங்கே மட்டும்தான் அமர்ந்த நிலையில் காட்சி தருகிறார்.

இதன் பின்புலத்தில் ஒரு ரசமான சம்பவம் ஒன்று உண்டு.

அது..?

- ***தொடரும்.***



**கருட தரிசன விசேஷம்!**

**வை**ணவக் கோயில்களில் பக்தர்களுக்குச் சடாரி சாத்துவது வழக்கம். ஆனால், ஸ்ரீவைகுண்டம் அருகிலுள்ள திருப்புளியங்குடி காய்ச்சின வேந்தன் கோயிலில் மட்டும் சடாரி சாத்துவதில்லை.

இங்கே, எம்பெருமான் தீட்சணமான நெருப்பாக திகழ்வதால், ஸ்ரீசடாரி சேவை கிடையாதாம்.

**நெ**ல்லை மாவட்டம் தென்திருப்பேரையில், பெருமாள் சந்நிதிக்கு நேர் எதிரில் இல்லாமல் இடப்புறமாக சற்றே விலகி இருக்கிறார் கருடாழ்வார்!

நந்தனாருக்காக நந்தி தேவர் வழி விட்டு விலகியது போல், நம்மாழ்வார் பாசுரம் பாடுவதற்காக வடக்குப்புறமாக விலகி அமர்ந்துள்ளாராம் இவர்!

- ***இரா.பாலகிருஷ்ணன், வரக்கால்பட்டு***



**சூரிய வழிபாடு**!

**சூ**ரிய பகவான் தனுசு ராசியில் இருந்து மகர ராசிக்குள் நுழையும் திருநாளை மகரசங்கராந்தி என்று போற்றுவோம்; தைப் பொங்கல் திருநாளாகக் கொண்டாடுகிறோம்.

சூரிய பகவானின் திருவருளைப் பெற்றுத் தரும் காயத்ரீ மந்திரத்தை விஸ்வாமித்திரர் அருளியதும் தைப்பொங்கல் அன்றுதான் என்கின்றன புராணங்கள்.

இந்தத் திருநாளில் மகா விஷ்ணுவை ஸ்ரீசூரிய நாராயணராக வழிபடுவது சிறப்பு.

சூரிய பகவானை, அதிகாலையில்- சந்திரனும்; நண்பகலில்- வாயுவும்; மாலையில்- சந்திரன், வருணன் இருவரும் சேர்ந்தும் வழிபடுகின்றனர்.

***-ஆர்.குமார், திருச்சி-2***

# ரங்க ராஜ்ஜியம் - 73

[இந்திரா சௌந்தர்ராஜன்]




ரங்கராஜ்ஜியம்

## விபீஷணனால் அயோத்தியிலிருந்து கொண்டு வரப்பட்ட பெருமாள், காவிரிக்கரையில் அசைக்க முடியாதபடி அமர்ந்து விட்டார்.

*`பொய் வண்ணம் மனதகற்றிப் புலனைந்தும் செலவைத்து*
*மெய் வண்ணம் நினைத்தவருக்கு மெய் நின்ற வித்தகனை*
*மை வண்ணம் கருமுகில்போல் திகழ் வண்ண மரகதத்தின்*
*அவ்வண்ண வண்ணனையான் கண்டது தென்னராய்கத்தே!'*

- பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வார்.

திருவரங்கம் திருக்கோயிலில் ஸ்ரீகருடன் நின்றவாறில்லாமல் அமர்ந்து காட்சியளிப்பதன் பின்புலத்தில் ஒரு ரசமான கதை உண்டு.

'பெரிய திருவடி' என்றும் விளிக்கப்படும் கருடன் இங்கே விஸ்வரூப கருடனாய், பெருமாளுக்கு உகந்தவராய், அவரையே சுமக்கும் பேறு பெற்றவராய்த் திகழ்கிறார்.



கருடன்

சம்ஸ்கிருதத்தில் ‘கருடன்’ என்றால் ‘அதிகம் சுமப்பவன்’ என்று பொருள். குறிப்பாக, பெருமாளின் வாகனமாகி அவரையே சுமப்பவன் எனும்போது, ‘ஒட்டுமொத்த புவனங்களையெல்லாம் சுமப்பவன் இவரே’ என்ற பொருளும் வந்து விடுகிறது. விபீஷணன் வைத்த இடத்திலிருந்து தற்போதுள்ள திருவரங்க சந்நிதிக்குப் பெருமாளைச் சுமந்து வந்தவரும் இவரே.

பிரம்மாவின் கட்டளைக் கேற்ப பெருமாளைச் சுமந்து வந்தவரிடம், ``இங்கேயே நான் அழைக்கும் வரை காத்திரு'' என்று சொல்லிப் பெருமாளை எடுத்துச் சென்று சந்நிதியை உருவாக்கினார் பிரம்மன்.

முன்னதாய் விபீஷண னால் அயோத்தியிலிருந்து கொண்டு வரப்பட்ட பெருமாள், காவிரிக்கரையில் அசைக்க முடியாதபடி அமர்ந்து விட்டார். பின்னர் பிரம்மா வந்து திருவரங்கத் தீவின் நடுவில் சரியான இடத்தைத் தேர்வு செய்து, அங்கே எம்பெருமானுக்குத் திருச்சந்நிதியைத் தோற்றுவிக்கிறார். அப்போது 'அழைக்கும் வரை காத்திரு' என்று சொன்னதன் பேரில் கருடனும் அமர்ந்த நிலையில் காத்திருக் கத் தொடங்குகிறார்.

அப்படி அவர் காத்திருக்கும் கோலத்தையே நாம் இப்போதும் கண்டு வணங்கி வருகிறோம். பெருமாளிடம் இருந்து எப்போது அழைப்பு வந்தாலும் புறப்படத் தயாராக, எப்போதும் விழிப்புடன் கருடன் காத்திருக்கும் கோலத்தில் இங்கே கோயில் கொண்டிருக்கிறார்.

இந்தச் சந்நிதி மட்டுமல்ல, ஆழ்வார் பெருமக்களுக்கெல்லாம் ஆலயத்தில் ஸ்ரீராமானுஜரால் சந்நிதிகள் ஏற்படுத்தப் பட்டன. அவர்களின் திருநட்சத்திர உற்சவங்கள் கொண்டாடப் பட்டன. அவர்களின் சரிதங்களும் அவர்களுடைய பாசுரங்களும் பெருமளவில் எல்லோராலும் சிந்திக்கப்பட்டன.

பாஞ்சராத்ரம் என்ற ஆகம சாஸ்திரப்படி, பெரிய பெருமாளுக்கு நித்ய உற்சவம், பட்ச உற்சவம், மாத உற்சவம், சம்வத்சரோத்சவ உற்சவம், மஹோத்சவம் போன்றவை கொண்டாடப்பட்டன.

இவ்வளவு பெரிய கோயிலுக்கு அபிஷேகம் மற்றும் பிரசாதத்தின் பொருட்டு எவ்வளவு அரிசி - பருப்பு, பால், தயிர் தேவைப்படும்?! அவை தடையின்றி கிடைக்கவும் ஸ்ரீராமாநுஜர் வழிவகைகளைக் கண்டருளினார்.

ஆலயத்தின் ஈசான்ய பாகத்தில் அதாவது சித்திரை வீதியில் வடகிழக்கு மூலையில் கோ சாலை ஒன்றை ஏற்படுத்தினார்.நூற்றுக் கணக்கான பசுக்கள் இங்கே போஷிக்கப்பட்டன. இந்தப் பசுக்களைப் பாதுகாக்கவும் விருத்தி செய்யவும் கொள்ளிடத்தின் வடகரையில் சோழங்கநல்லூர் என்னும் கிராமத்துக்கு அருகில் ஐந்து கிராமங்களைக் காடாக்கி, அங்கே ஆநிரை காத்த பெருமாளுக்கு ஒரு கோயிலையும் உண்டாக்கினார்.

அதை ஒரு பிருந்தாவனமாகவே கருதி ஆக்கியவர், அடிக்கடி அங்கு சென்று, எல்லாம் முறையாகவும் சிறப்பாகவும் இருக்கின்றனவா என்பதை மேற்பார்வையும் செய்தார்.

பின்னர் அதைப் பராமரிக்கும் பொறுப்பைத் தன் சீடர்களில் ஒருவரான அகளங்க

நாட்டாழ் வானுக்கு அளித்தார். இன்றும் சித்திரை வீதியில் கோசாலை அருகிலிருந்து, பங்குனி பிரம்மோத்சவத்தின் இறுதி நாளன்று எம்பெருமான் திருவீதி உலா வருவார். அப்படி வரும் ரதத்திற்கு 'கோ ரதம்' என்றே பெயர்.

ஸ்ரீராமானுஜர் செய்த சீர்திருத்தங்களில் கோயில் நிலங்களைப் பராமரிப்பதும், அதன் மூலம் வருவாய் திரட்டுவதும் ஓர் அம்சமாகும். இந்தப் பணியையும் அகளங்க நாட்டாழ்வானிடமே ஒப்படைத்தார்.

இந்த நிலங்களிலிருந்து குத்தகைப் பணம் மட்டுமல்ல நெல், வாழை மற்றும் காய்கறிகளும் விளைவிக்கப்பட்டன. அவை கோயிலை அடையும்படிச் செய்தார் அகளங்க நாட்டாழ்வான். இதன் பொருட்டு 'ஸ்ரீ பண்டாரம்' என்கிற ஒரு பண்டகசாலை உருவாக்கப்பட்டு, அதில் ஊழியம் புரிவோர் இவற்றை வாங்கிப் பாதுகாப்பாக வைத்து எம்பெருமானின் அன்றாட ஆராதனைகளுக்கும், பிரசாத விநியோகங்களுக்கும் வழிவகை செய்தனர்.

ஸ்ரீராமானுஜர் இப்படி ஆலய நிர்வாகத் தைச் செம்மைப்படுத்தி ஆகமப் பிசகின்றித் திருவாராதனைகளையும் செய்யச் செய்து 'பூலோக வைகுண்டம்' எனப்படும் திருவரங்கம் தலத்தை இந்தப் பூவுலகிற்கே முன்மாதிரியாக விளங்கச் செய்தார்.

ஸ்ரீராமானுஜர் வாழ்ந்த காலத்தில் திருவரங்கம் வருவோர், திரும்பிச் செல்ல மனமின்றி, ஆலய மண்டபங்களில் தங்கியும் சத்திரங்களில் தங்கியும் தினமும் நித்திய வழிபாடு கண்டனர்.

காவிரியில் நீராடி, அரங்க தரிசனம் முடித்து, பிரசாத அன்னம் உண்டு, மாலைவேளையில் செவிக்கு உணவாக உபன்யாசங்கள் கேட்டு, 'பூலோக வைகுண்டம் என்றால் இதுவே' என்று மனதார உணர்ந்து, இப்படியே தாங்கள் இங்கே இருந்து விடலாகாதா... தங்களின் இன்னுயிர் இங்கே அப்படியே பிரிந்திடாதா என்று ஏக்கம் மிகக் கொண்டனர்.

ஸ்ரீராமானுஜர் இந்தச் சீர்திருத்தங்களை அத்தனை எளிதாய்ச் செய்திடவில்லை. அவருக்கு நிறையவே எதிர்ப்பு இருந்தது. குறிப்பாக, திருச்சந்நிதியில் பணிபுரிந்து வந்த பெரியநம்பி என்பவர் ஸ்ரீராமானுஜரை ஓர் ஆசார்யனாகக் கருதவில்லை. அதேநேரம் அரங்கனுக்கான தன் கைங்கரியத்திலும் ஒரு குறையும் வைக்கவில்லை.

எம்பெருமானிடம் குறையில்லாத பக்தி யும் ஆசார்யனிடம் ஓர் அலட்சியமும் பெரிய நம்பியிடம் காணப்பட்டது. இது ராமானுஜரை வருத்திய நிலையில், எம்பெருமானிடமே பிரார்த்திக்கலானார். அதன் எதிரொலியாக அவர் கனவில் தோன்றிய எம்பெருமான், பெரியநம்பியை அவர் போக்கில் விட்டுவிடக் கூறினார்.

ஸ்ரீராமானுஜர் இச்செய்தியைத் தன் அத்தியந்த சீடர்களில் ஒருவனான கூரத்தாழ்வானிடம் கூறி, "எம்பெருமான் விருப்பமே நம் விருப்பம். ஆகையால்

பெரியநம்பியிடம் என்னைப் பணிக்கும்படி ஆக்ஞையிட வேண்டாம். என்னைப் பணித்த பெருமான் ஒருநாள் அவரையும் பணிப்பான். பணிக்காவிடில் அதுவே அவன் திருவுள்ளம் என்று யாம் வாளாதிருப்போம்" என்றார்.

அதன்பின் கூரத்தாழ்வான் பெரியநம்பியிடம் ஸ்ரீராமாநுஜர் குறித்து ஏதும் பேசுவது இல்லை. அத்துடன் அவர் செயல்பாடுகளை விமர்சித்தோ இல்லை எதிர்த்தோ ஏதும் செய்திடாமல், குருவின் கட்டளையைச் சிரமேற் கொள்ளலானார்.

கூரத்தாழ்வானின் இப்போக்கு பெரியநம்பியைச் சிந்திக்க வைத்தது. ஒரு முறை, தீர்த்தம் சாதிக்கையில் உடன் சடாரி சாதிக்க மறந்துவிட, கூரத்தாழ்வான் அதுகுறித்து ஏதும் கேட்கவில்லை.

'இன்று எம்பெருமானுடைய திருவடி சம்பந்தம் நமக்கு இல்லை. இதுவே அவன் விருப்பம் போலும்' என்று கருதி அமைதி காத்தார். இதை அறிந்த ஒருவர் விஷயத்தைப் பெரிய நம்பியிடம் கூறினார்.

பெரிய நம்பி தன் தவற்றை உணர்ந்து கூரத்தாழ்வான் அடுத்து சேவை புரிகையில், மிக கவனமாக அவருக்குத் தீர்த்தம், சடாரி சாதித்து, "முதல் நாள் எப்படியோ தவறிவிட்டது, வருந்துகிறேன்" என்றார்.

"அதனால் பாதகம் இல்லை நீர் எப்படி நடந்தாலும் அதை எம்பெருமான் பெரிதும் ரசிக்கிறான். அவன் உள்ளம் கவர்ந்த ஓர் அர்ச்சகராய் நீர் திகழ்கிறீர்" என்றார்.

"அது எப்படி உமக்குத் தெரியும்?" என்று பெரியநம்பி கேட்டார்.

"உடையவர் கனவில் சென்று உம்மை உம் போக்கில்விடச் சொல்லியுள்ளார். உமக்காக எம்பெருமானே பரிந்து பேசியது, சாதாரண விஷயமா?" என்று கேட்டிட, பெரிய நம்பி சிலிர்த்துப் போனார்.

``அதனால்தான் சில காலமாய் நீங்கள் உடையவர் குறித்து என்னிடம் ஏதும் பேசுவது இல்லையோ?" என்றும் கேட்டார்.

"ஆம், உடையவரும் எம்பெருமான் விருப்பமே என் விருப்பம் என்றார்" எனப் பதிலுரைத்தார் கூரத்தாழ்வான்.

இச்சம்பவம் பெரியநம்பியைப் பெரிதும் சிந்திக்க வைத்தது. தனக்காக எம்பெருமான் பேசியது, அதை உடையவராகிய ராமாநுஜரும் அப்படியே ஏற்று அதன்படி நடந்தது என்று எல்லாமே அவருக்குள் ராமாநுஜர் மேல் ஒரு பெரும் மதிப்பைத் தோற்றுவிக்கத் தொடங்கின.

இந்த மதிப்பே அபிமான மாகி அவரை ஏற்றுக்கொண்டு அவர் வழியில் நடக்கவும்

தூண்டியது. ஸ்ரீராமாநுஜர் காட்டிய பொறுமையும் விவேகமும் இதுபோல் பலரையும், அவர்பால் ஈர்த்து அவருடைய தாசர்களாக் கியது. இதனால் ஸ்ரீ ராமாநுஜர் வைணவ ஆசார்யர்களில் தனித்து ரத்தினம்போல் பிரகாசமாக விளங்கினார்.

'ஸ்ரீவைஷ்ணவம்' என்கிற ஓர் இறைவழி பெரிய பெருமாளாகிய அரங்கனிடம் தொடங்குகிறது. அதன்பின் அது பெரிய பிராட்டியைத் தொட்டு மணவாள மாமுனிகள், சேனை முதலியார், திருவாய்மொழிப் பிள்ளை, நம்மாழ்வார், பிள்ளை லோகாச்சார்யர், நாதமுனிகள், வடக்கு திருவீதிப் பிள்ளை, உய்யக்கொண்டார், நஞ்சீயர், நம்பிள்ளை, மணக்கால் நம்பி, ஆளவந்தார், பராசரபட்டர், பெரிய நம்பிகள், எம்பார் என்று நீண்டு ராமாநுஜரைத் தொடுகிறது.



கருட வாகன பெருமாள்

இவர்கள் போக திருக்கச்சி நம்பிகள், கூரத் தாழ்வான், முதலியாண்டான், உறங்காவில்லி தாசர், வடுகநம்பி என்கிற சீடர்களாலும் சிறப்புற்றது. நெடிய இந்தப் பட்டியலில் காலத்தால் ஸ்ரீவேதாந்த தேசிகனும் வந்து இணைகிறார்.

காஞ்சிக்கு அருகில் உள்ள 'திருத்தண்கா' என்ற 'தூப்புல்' எனும் ஊரில், வேதாந்த தேசிகரைப் பிறப்பிக்கச் செய்தான் எம்பெருமான்.

அனந்தசூரி என்கிற ஸ்ரீவைஷ்ணவருக்கும் வேதாரம்பை என்கிற அவரின் பத்தினிக்கும் ஒரு வரப்பிரசாதமாக வந்து பிறந்தவர்தான் வேங்கடநாதன் என்னும் வேதாந்த தேசிகன்.

இவர் திருமலைக் கோயில் கண்டாமணியின் அம்சமாய்ப் பிறந்தவர் என்பர். பிள்ளைப் பேறின்றி வருந்திய வேதாரம்பை, ஒரு நாள் திருமலை திருப்பதியில் உள்ள ஆராதனை மணியை விழுங்குவது போல் கனவு கண்டாள்.

எம்பெருமானாகிய அந்த வேங்கடவனே அதைத் தன் கைப்பட எடுத்துக் கொடுத்து 'உம் விழுங்கு' என்று சொல்லித் தர அவளும் விழுங்கினாள். கனவு கலைந்தது!

அன்றே பிள்ளைப் பேற்றுக்கான அறிகுறிகளும் தெரியவந்தன. அதன்பின் ஓர் உண்மையும் தெரிய வந்தது. திருமலையில் வேங்கடவன் திருச்சந்நிதி மணி ஒன்று காணாமல் போயிருந்தது.

'அது எங்கே போயிற்று' என்று திருமலை ஜீயர் மனம் வருந்தினார். 'யாரும் களவாடி விட்டனரோ... இதுபோல் தொடர்ந்து களவு நேருமோ' என்றெல்லாம் அவருக்குள் விசாரங்கள்.

அன்றே அவரின் கனவில் தோன்றினார் திருவேங்கடமுடையான். தானே மணியை வேதாரம்பைக்கு அளித்ததாகவும் அதன் எதிரொலியாக அவளுக்கு ஒரு பிள்ளை பிறக்கப் போவதையும் சொல்லி, அந்தப் பிள்ளை ஸ்ரீவைஷ்ணவ உலகெங்கும் எம் புகழைப் பரப்பிப் பெரும் பேறு பெற்று விளங்கு வான் என்றும் கூறி மறைந்தார்.

அந்தக் கனவிலிருந்து கண்விழித்த ஜீயர் அப்போதே வேங்கடநாதனை எதிர்பார்த்துக் காத்திருக்கத் தொடங்கிவிட்டார்.

பின்னர், வேதாரம்பை புரட்டாசி மாத திருவோண நட்சத்திர நாளில் வேங்கடநாதனை ஈன்றெடுத்தாள். வேங்கடவன் அருளால் பிறந்ததன் பொருட்டு 'வேங்கடநாதன்' என்கிற பெயரையும் சூட்டி மகிழ்ந்தனர்.

குழந்தை எழிலோடு வளரலானான். கருவிலேயே திருவுடைய பிள்ளை ஆதலால், எதையும் ஒருமுறை கேட்டாலே போதும் ஏகாக்ரஹியாக மனத்தில் இறுத்திக் கொண்டார்.

தந்தையிடம் வேதத்தையும், நடாதூர் அம்மாள் என்கிற வைணவப் பெண்மணியிடம்



ராமாநுஜர்

இதிகாசங்களோடு, பதினெட்டு புராணங்களையும் கற்றார். 20 வயது நிறைவடைவதற்குள் கல்வி கேள்விகளில் நல்ல பூரணத்துவம் வேங்கடநாதனுக்கு ஏற்பட்டுவிட்டது.



ஸ்ரீரங்கம்

அக்கால வழக்கிற்கு ஏற்ப உபநயனமும் திருமணமும் உரிய காலத்தில் நடந்தேறின. ஏழு வயதில் உபநயனமும், பதினேழு வயதில் திருமணமும் நடந்து கிரகஸ்த வாழ்வும் தொடங்கியது. திருமங்கை என்பவள் மனைவியாய் வந்தாள்.

வேங்கடநாதனின் மாமாவான 'அப்புள்ளார்' என்பார் ஒரு காரியம் செய்தார். இவர் வசம் ஸ்ரீராமாநுஜர் அணிந்து கலைந்த பாதரட்சைகள் இருந்தன. அதை அப்படியே ஒரு

பெட்டியில் வைத்து அருட்பரிசாக வேங்கடநாதனிடம் வழங்கி ஸ்ரீராமாநுஜரின் சீலத்தையும் எடுத்துரைத்தார்.

அப்படியே ``ஸ்ரீராமாநுஜர் நெறியில் அவரை குருவாய் வரித்துக்கொண்டு, நீ உன் கடமை களைச் செய்வாயாக'' என்றும் கூறினார்.

இதனைத் தொடர்ந்து வேங்கடநாதன் வாழ்வில் பெரும் அதிசயங்கள் நிகழத் தொடங் கின. இவரின் பக்தி யாத்திரையில் கடலூரை அடுத்த திருவஹீந்திரபுரம் ஒரு பெரும் திருப்பத்தை இவர் வரையில் நிகழ்த்தியது.

கருடநதி பாய்ந்திடும் இந்த க்ஷேத்திரத்தில் எம்பெருமான் தேவநாதனாகவும், பெருமாட்டி செங்கமல நாச்சியாகவும் அருள்பாலிக்கின்றனர்.

இங்கொரு சிறுகுன்றும் அதன் மேல் ஓர் அரச மரமும் உள்ளன. இந்த மரத்தடிதான் வேங்கடநாதனைப் பெரும் வேதாந்தியாக்கியது!

எப்படி?

- *தொடரும்.*

# கலியுகத்தில் என்ன நடக்கும்?

**ஸ்ரீமத் ராமாயணத்தில் உத்தர காண்டத்தில், கலியுகத்தில் என்னென்ன நடக்கும் என்று விளக்கப்பட்டுள்ளது. அவை:**

* மனம் போனபடி நடப்பதே வழி என்பார்கள் ஒவ்வொருவருக்கும் தனித் தனி நியாயம்.

* நீதி நூல்கள் படிக்கக் கிடைக்காது. அறங்கள், தீயவர்களின் தூண்டுதல் மற்றும் பேராசையில் நடத்தப்படும்.

* சுய விளம்பரம் செய்பவன் அறிவாளி ஆவான். போலிகள் புகழும் பெருமையும் பெறு வார்கள். உள்ளொன்று வைத்துப் புறம் பேசுவோர் மகான்கள் ஆவார்கள்.



கலியுக ராமர்

* ஊரார் பொருளைக் கொள்ளையடிப் பவர்கள் கெட்டிக்காரர்கள் ஆவர். நெறிப்படி நடப்பவர் அறிவிலிகளாகக் கருதப்படுவர். துறவிகள் அநியாயமாக செல்வம் சேர்ப்பர்.ஞானம், தவம் ஆகியவை கேலிக்குள்ளாகும்.

* பொய் பேசுபவர்கள் புலவர்களாக இருப்பர்; உண்மை உழைப்பாளிகள் ஏழையாக இருப்பர்.

* தற்பெருமைக்காக தானம் வழங்குவர்.ஆயுதங்கள் முக்கியமாகும். விரசமான நூல்கள் பெருகும்.

* மக்கள் உடலை வளர்ப்பார்கள்; உறுதியை மதிக்கமாட்டார்கள். மனைவி வந்த பின் பெற்றவர் களை அலட்சியப் படுத்துவார்கள்.

- *ஆர்.லட்சுமி, கரூர்-4.*

## `போன ஜன்மத்தில் யாரை அடித்தேனோ?'

ஒருமுறை ஆசிரமத்தில் எவரும் இல்லாமல் தனியே அமர்ந்திருந்தார் ஸ்ரீரமண மகரிஷி.

அப்போது அங்கு வந்த ஐந்து முரடர்கள் ஸ்ரீரமணரைக் கடுமையாக அடித்துக் காயப்படுத்தி விட்டு ஓடிவிட்டார்கள்.

சற்று நேரத்தில் அங்கு வந்த ஆசிரமவாசிகள் ஸ்ரீரமணருக்கு ஏற்பட்டிருந்த காயங்களைப் பார்த்துப் பதறினர்.



பகவான் ரமணர்

``உங்களை இந்த நிலைக்கு ஆளாக்கியவர்கள் யாரென்று சொல்லுங்கள்'' என்று கேட்டார்கள்.

பகவானோ எதுவும் பேசாது மௌனமாகவே இருந்தார். ஆசிரமவாசிகள் பொறுமை இழந்தனர். உரிமையோடு பகவானிடம் கோபித்துக் கொண்டனர்.

உடனே பகவான் ரமணர் சொன்னார்:

``போன ஜன்மத்தில் நான் யாரை அடித்தேன் என்று யோசித்துப் பார்க்கிறேன்... ஞாபகம் வரவில்லையே!''

தன்னுடைய முன்வினையே காரணம். வேறு எவரும் இதற்குப் பொறுப்பல்ல என்பதைச் சொல்லாமல் சொல்லி, வினைப்பயனை உணர்த்தினார் பகவான் ஸ்ரீரமணர்.

- *அ.யாழினி பர்வதம், சென்னை-78*

# ரங்க ராஜ்ஜியம் - 74

இந்திரா சௌந்தர்ராஜன்




திருவரங்க சரிதம்

*வித்தகன் வேதியன் வேதாந்த தேசிக னெங்கள் தூப்புல்*
*மெய்த்தவ னுத்தமன் வேங்கட நாதன் வியன் கலைகள்*
*மொய்த்திடு நாவின் முழக்கொடு வாத்தியார் மூலமறக்*
*கைத்தவ னென்றுரைத் தேன் கண்டி லேனென் கடுவினையே*

**- பிள்ளை அந்தாதியில் ஸ்ரீநயினாராச்சாரியார்.**

**ஸ்ரீவேதாந்த தேசிகன்** என்று பின்னாளில் பக்தியோடு அழைக்கப் பட்ட தேசிகனின் தொடக்கக் காலத்தில் அவர் 'வேங்கடநாதன்' என்றே அறியப்பட்டார். காஞ்சியை ஒட்டிய தூப்புல் இவரின் பிறந்த இடமாய் இருந்தபோதும், வளர்ந்து மணம் முடித்த நிலையில் இவர் அதிக காலம் கழித்தது காஞ்சியில்தான்.

முக்திக்குத் திருவரங்கம் எனில் வரத்துக்குக் காஞ்சி என்றொரு வழக்கு உண்டு. திருவரங்கமும் சரி, காஞ்சியும் சரி நேரான பிரம்ம சம்பந்தமுடைய கோயில்களாகும். திருவரங்கப் பெருமானை பிரம்மா, தன் சத்திய லோகத்தில் வைத்து பூஜித்து வந்தார். பின்னர் அது இஷ்வாகு என்கிற சூரிய வம்சத்தவனால் பூவுலகு வந்தது. அதற்கும் பின்

விபீஷணன் மூலம் திருவரங்கம் வந்து காலத்தால் பெரிய கோயில் என்றும் ஆனது.




திருவரங்கம்

இப்பெருமான் நேராக பிரம்மனின் சத்திய லோகத்திலிருந்து வந்தவர் என்றால், காஞ்சி வரதர் காஞ்சியம்பதியில் ‘ஹஸ்தகிரி’ எனும் சிறு குன்றின் மேல் கோயில் கொண்டவர்.

தேவர்களுக்கும் மானுடர்க்கும் வரம் தரவென்றே கோயில் கொண்ட மூர்த்தி என்பதால் ‘வரதராஜன்’ என்று விளிக்கப்பட்டார். இந்த மூர்த்தியைத் தொழுவதைத் தன் அன்றாடக் கடமைகளில் ஒன்றாகக் கொண்டிருந்தார் ஸ்ரீதேசிகன் என்கிற வேங்கடநாதன்.

**ஒருமுறை** வரதன் சந்நிதியில் திருமஞ்சனம் முடிந்து தரிசிக்கக் காத்திருக்கையில் சந்நிதிக்கு வெளியில் ஸ்ரீவேங்கடநாதன் கருடனைக் கண்டார். அந்நிலையில் கருடனின் பக்தியையும் எம்பெருமானையே சுமக்கும் பாக்கியம் பெற்றிருப்பதையும் எண்ணி கருடனைத் துதித்த போது, அசரீரிபோல் ஒரு குரல் வேங்கடநாதன் காதில் ஒலித்து அடங் கியது. அந்த அசரீரிக் குரல்தான் வேங்கடநாதனைத் திருவஹீந்திரபுரம் சென்று அங்கிருக்கும் தேவநாத பெருமானையும் செங்கமல நாச்சியையும் வணங்கிடத் தூண்டியது. அதன் நிமித்தம், காஞ்சியிலிருந்து திருவஹீந்திரபுரம் வந்து பெருமானையும் பிராட்டியையும் வணங்கிய வேங்கடநாதன், அருகிலுள்ள குன்றின் மேலுள்ள அரசமரத்தடியில் பெரும் தியானத்திலும் கோடி நாம ஜபத் திலும் ஆழ்ந்துவிட்டார்.

அதன் விளைவு அபாரமானது!

திருமலை வேங்கடவனின் கண்டாமணி அம்சமான வேங்கட நாதனுக்கு, எம்பெருமானின் கட்டளைக்கும் விருப்பத்திற்கும் இணங்க ஸ்ரீகருடன் தண்ணருள் பாலிக்கத் தீர்மானித்தான்.

வேங்கடநாதனின் கோடி நாம ஜபம் பூர்த்தியாகும் தருணத்தில், கையில் ஒரு ஸ்ரீஹயக்ரீவ மூர்த்தி விக்ரஹத்துடன் விண்ணில் பறந்து வந்து வேங்கடநாதனுக்குக் காட்சி தந்து அருள் பாலிக்கலானான்.

வேங்கடநாதன் தியானம் கலைந்து கண் மலர்ந்த நொடி கண்ணில்பட்ட மூர்த்தி, எம்பெருமானின் வித்யா சொரூப மான ஸ்ரீஹயக்ரீவ மூர்த்திதான். வேங்கடநாதன் சிலிர்த்துப் போனார்.

``பட்சி ராஜனே! என்பொருட்டு வித்யா மூர்த்தியுடன் அருள் பாலிக்க வந்தாயோ'' என்று விம்முதலுடன் வணங்கினார்.

ஸ்ரீகருடனும் ``வேங்கடநாதா! உன் தியானமும் தவமும் வைகுண் டத்தை அடைந்து என் செவிக்குள் புகுந்து இன்புறச் செய்தது.

எம்பெருமானுக்கே பணியும் உனது சிரமும் பக்தியும் அவர் வாகனமான என்பொருட்டும் தியானித்ததை எண்ணி மகிழ்கிறேன். அதேவேளை தலை இருக்க, வாலை அழைத்த உன் செயலின் நோக்கம் அறியவும் வந்துள்ளேன்" என்றார் ஸ்ரீகருடன்.

``பட்சிராஜனே! வைகுண்டக் காவலன் எம்பெருமானை, இமை போலக் காப்பவன் நீ. நம் எல்லோருக்கும் அவரே பெரும் காவலன். ஆயினும் அவர் நம் பொருட்டு தன்னை அடிமையாக்கிக் கொண்டு, நம் பக்திப் பிடிக்குள் அடங்கிவிடுகிறார். அப்படி அவரை பக்தியால் அடக்கியதில் பெரிய திருவடியான தாங்கள் அல்லவா பக்திக்கு முன்னுதாரணம்.



திருமலை வேங்கடவன்

``அதனால்?"

“உம்மைப் போலவே அவர்மீது தாளாத பக்தியும் மாறாத காதலும் கொள்ளவே முன்னுதாரணமான உம்மைத் தியானித்தேன்."

``மகிழ்ச்சி! உனது விருப்பம் ஈடேறக் கடவதாக. கூடுதலாய் வித்யா மற்றும் மேதாவிலாச சொரூப மான இந்த ஹயக்ரீவர் ரூபத்தை அளிப்பதோடு, ஹயக்ரீவர் மூல மந்திரத்தையும் உனக்கு உபதேசிக் கிறேன். இந்த மந்திர உபாசனை ஆயக் கலைகள் அறுபத்து நான்குக்கும் உன்னை அதிபன் ஆக்கும். சர்வசுதந்திரமாக இந்த உலகமே உன்னை அழைக்கும்படிச் செய்யும்’’

- என்றபடியே ஸ்ரீஹயக்ரீவர் விக்ரஹத்தை அளித்து, மந்திரத்தை வேங்கடநாதனின் காதில் உபதேசித்தார் ஸ்ரீகருடன்.

அந்த நொடியே நடமாடும் ஒரு மந்திரமூர்த்தி ஆனார் வேங்கடநாதன். ஸ்ரீஹயக்ரீவரின் வித்யா பலத்தைப் பூவுலகத்தவர் பெற்றிட, அக்குன்றின் மீது கருடன் அளித்த மூர்த்தியை எழுந்தருளச் செய்து ஓர் ஆலயமும் உண்டாக்கினார்.

இதன்பின்னர், காஞ்சியம்பதிக்குத் திரும்பி அத்திகிரி வரதனை தரிசித்துத் தன் இல் வாழ்வைத் தொடர்ந்தார். இந்த நிலையில் அவர் வாழ்வில் பொன்னெழுத்தில் இருக்கும்படியாகப் பல சம்பவங்கள் நிகழ்ந்தன!

அதில் ஒன்று ஸ்ரீதேசிகன் `திருச்சின்னமாலை' என்று எண்சீர் விருத்தமாய் பதினாறு பாகங்கள் கொண்ட பிரபந்தத் தொகுப்பு பாடிய நிகழ்வு.

திருச்சின்னம் என்பது ஊதுகுழல் போல் ஒளியெழுப்பும் ஓர் இசைக்கருவி. இவ்வொலியானது திருமந்திரார்த்தம், த்வ்யம், சரம ஸ்லோகம் ஆகியவற்றின் பொருள் தரும் சிலிர்ப்பைத் தர வல்லது.

காஞ்சிப் பேரருளாளனே இம்மூன்றின் பொருள் வடிவினன்தானே. அப்படிப்பட்ட காஞ்சி வரதன் திருவீதியுலா செய்ய எழுந்தருளும்போது, திருச்சின்னக் கருவி எக்காள ஒலி எழுப்பி அவன் வருவதை உறுதி செய்வதுடன், அவன்பால் மனதைக் குவியவைத்து விடும்.

காஞ்சிப் பேரருளாளன் திருச்சந்நிதியில் அவ்வகையில் இரண்டு கருவிகள் இருந்தன. அவற்றின் ஒலி விசையில் ஈர்க்கப்பட்ட ஸ்ரீவேங்கடநாதன், அவற்றின் பெயரிலேயே அந்த வரதராஜனுக்குத் `திருச்சின்னமாலை' என்கிற பிரபந்தத்தைப் பாடியருளினார்.



அத்திகிரி அருளாளப் பெருமாள்

இப்பாசுரத்தில் பத்தாம் பாசுரம் பாடுவதற்கு எளியது. நம்மையும் தாளம் போடச் செய்திடும் வலிமையுடையது!

*அத்திகிரி அருளாளப் பெருமாள் வந்தார்*
*ஆனை பரி தேரின் மேலழகர் வந்தார்*
*கச்சிதனிற் கண் கொடுக்கும் பெருமாள் வந்தார்*
*கருத வரந்தரு தெய்வப்பெருமாள் வந்தார்*

*முத்தி மழை பொழியு முகில் வண்ணர் வந்தார்*
*மூலமென வோலமிட வல்லார் வந்தார்*
*உத்திர வேதிக்குள்ளேயுதித்தார் வந்தார்*
*உம்பர் தொழுங்கழலுடையார் வந்தார்தாமே*

இப்பாடலைக் கேட்டு இன்புற்ற காஞ்சி வரதன் ஒரு காரியம் செய்யலானார்.

இப்பாடலை ஸ்ரீவேங்கடநாதன் பாடிய அன்று இரவு அவர் கனவில் தோன்றினார். தன் திருச்சந்நிதி திருச்சின்னக்கருவிகள் இரண்டில் ஒன்றை எடுத்து ஸ்ரீ வேங்கடநாதன் வசமளித்தார்.

``இது உனக்கு நான் தரும் பரிசு. உன் திருச் சின்னமாலைக்கு என் திருச்சின்னமே பரிசு'' என்று அளித்து மறைந்தார்.

கண் விழித்த வேங்கடநாதனின் அருகில் கருவி இருந்தது. அதேவேளை, கோயிலில் ஒன்று குறைந்து போனதன் நிமித்தம், ஆலய ஸ்தானிகர் கனவில் தோன்றினார் வரதன்.

"ஒரு கருவி இல்லை என வருந்த வேண்டாம். அது ஸ்ரீவேங்கடநாதனுக்கு அன்புப் பரிசாகி விட்டது. இனி மீதமுள்ள ஒரு கருவியால் இசைத்தால் போதும். ஏன் இரண்டு கருவிகள் இல்லை என்கிற எண்ணம் இதனால் எழும்பும். அவ்வேளை, இரண்டில் ஒன்று ஸ்ரீவேங்கட நாதனுக்குப் பரிசாகிவிட்டது தெரியவரும். அவன் என் பொருட்டுப் பாடிய திருச்சின்னம் நினைவுக்கு வரும்!" என்று கூறி மறைந்தார்.

ஆலய ஸ்தானீகரும் ஆலயத்துக்குச் சென்று பார்த்தார். இரண்டில் ஒன்றே அங்கு இருந்த தைக் கண்டார். அவ்வேளை அங்கு வந்த வேங்கடநாதன், வரதனின் கருணையால் பல பாடல்களைப் பாடலானார்.

மும்மணிக்கோவை, கந்துப்பா, கழற்பா, அம்மானை, ஊசற்பா, ஏசற்பா, நவரத்தினமாலை என்று காலத்தால் ஸ்ரீவேங்கடநாதன் பாடிய பாடல்கள், வைணவ உலகம் கொண்டாடும் தோத்திரப் பாடல்களாயின.

இன்றும் காஞ்சி வரதரின் திருச்சந்நிதியில் ஒரு திருச்சின்னம் மட்டுமே ஒலிக்கப்படுகிறது. வேங்கடநாதன் பரிசாக பெற்ற திருச்சின்னம் தூப்புல் சுவாமி தேசிகன் சந்நிதியில் ஒலிக்கப் படுகிறது.

இச்சம்பவத்துக்குப் பின் ஸ்ரீவேங்கடநாதன் புகழ் எட்டுத் திக்கும் வேகமாய்ப் பரவியது. இவ்வேளையில்தான் திருவரங்கத்தில் ஒரு சம்பவம் நடந்தது.

திருவரங்கத்தில் வசித்து வந்த சில அத்வைத சித்தாந்திகள், ஸ்ரீராமானுஜரின் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை விமர்சித்துத் தங்களின் அத்வைதமே பெரிது என

வாதம் செய்தனர். அவர்களுக்கு உகந்த பதிலை ஸ்ரீவேங்கடநாதன் ஆகிய வேதாந்த தேசிகராலேயே தர இயலும் என்று திருவரங்கத்தில் அப்போதிருந்த வைணவ ஆசார்ய பெருமக்களில் பலர் எண்ணினர்.

இதன் பொருட்டு அவர்கள் காஞ்சியம்பதி வந்து வேங்கடநாதனை அழைத்தனர். அவர்களின் அழைப்பினை திருவரங்கனின் அழைப்பாகவே கருதி, வேங்கடநாதன் திருவரங்கம் எழுந்தருளினார்.

முதல் காரியமாக தன் ஆத்ம குருவாக விளங்கிய ஸ்ரீராமாநுஜரின் தாமான திருமேனியை உடைய சந்நிதிக்கு எழுந்தருளி குரு வணக்கம் செய்தார். அவ்வேளையில் அவர் பாடியதே 'ஸ்ரீயதிராஜ ஸப்ததி' எனப்படுகிறது.

பின்னர் அரங்கனையும் அரங்கநாயகியையும் தரிசித்துச் சிலிர்த்தார். இதன்பின் அத்வைதிகள் உடனான வாதம் தொடங்கியது.



எட்டு நாள்கள் இடைவெளி இன்றித் தொடர்ந்த வாதப் போரில், வேங்கடநாதன் அத்வைதிகளின் சகல கேள்விகளுக்கும் பதிலளித்தார். இறுதியில் அவர் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை நிறுவிக் காட்டவும், அப்போது அங்கு உள்ளவர்களால் `வேதாந்தாச்சார்யர்' என்ற பெயருடன் விளிக்கப்பட்டார்.

இதன்பிறகு இப்பெயரே மருவி 'வேதாந்த தேசிகர்' என்றாகியது. கூடுதலாய், திருவரங்கத்தில் வாழ்ந்த சுதர்சன சூரி என்கிற அன்பர் ஸ்ரீவேதாந்த தேசிகரின் பக்தி

மற்றும் பாடல் புனையும் ஆற்றலால் பெரிதும் கவரப் பட்டு 'கவிதார்ச்சிக சிம்மம்' என்ற பட்டத்தை அளித்தார்.

ஸ்ரீவேதாந்த தேசிகரின் வளர்ச்சியையும் எழுச்சியையும் பொறுத்துக்கொள்ள முடியாத பலரும் அப்போது இருந்தனர். இவர்களால் ஒரு சோதனைக்கு ஸ்ரீவேதாந்த தேசிகர் ஆட்பட நேர்ந்தது.

முன்னதாய் ஒரு நிகழ்வு. மணப்பாக்கத்தில் நம்பி என்றொரு வைஷ்ணவர் வாழ்ந்தார். ஸ்ரீராமாநுஜரால் ஆகர்சிக்கப்பட்டு வைணவ நெறிப்படி வாழ்ந்து வந்தவருக்கு, வைணவம் தொடர்பான சகல நெறிகளையும் கற்கும் விருப்பம் ஏற்பட்டது.

தான் கற்பதோடு வைணவ நெறியை உலகம் முழுக்கப் பரப்பும் எண்ணமும் அவரிடம் இருந்தது. அதன் நிமித்தம் வேட்கையுடன் காஞ்சி வரதன் சந்நிதிக்கு வந்தார்.

காஞ்சி வரதனிடம் ``எம்பெருமானே! என் மரணப் பரியந்தம் நான் ஸ்ரீவைணவ சம்பிரதாயங்களைக் கற்றுக்கொண்டு தெளிவ தோடு, ஒரு நாளைக்கு ஒருவருக்காவது உபதேசிப்பது என்ற எண்ணம் கொண்டு உள்ளேன். இதுகூட உன்னால் வந்ததே. எனக்கு நீயே உற்ற குருவைக் காட்டியருள வேண்டும்'' என்று வேண்டி நின்றார்.

அன்று இரவில் நம்பிகள் கனவில் தோன்றி னார் பேரருளாளன்.

``உனது விருப்பம் ஈடேற உடனே ஸ்ரீரங்கம் செல். அங்கு பிள்ளை லோகாசார்யர் என்பவர் வைஷ்ணவமே உருவெடுத்ததுபோல வாழ்ந்து வருகிறார். அவர் நாவால் உரைப்பவை அனைத்தும் என் கூற்றே. இதை நீ உணர்வாய்.

அப்படியே ஒரு சோதனைக் காலமும் வர உள்ளது. அவ்வேளை லோகாசார்யருக்குத் துணையாகவும் இரு. அங்கு செல்லும் முன் ஸ்ரீதேசிகரின் தண்ணருளைப் பூரண ஆசார்ய அருளாகக் கொள்வாயாக'' என்று கூறி மறைந்தார்.

கண்விழித்த மணப்பாக்கத்து நம்பி முகத்தில் பூரிப்பு. வரதன் வரம் தருவதில் நிகர் இல்லாதவன் என்பது நிரூபணமாகிட, மணப்பாக்கம் நம்பி ஸ்ரீவேதாந்த தேசிகரை நாடிச் சென்றார்.

நம்பி அங்கு சென்றபோதுதான் அந்த விசித்திரமான சம்பவத்தையும் காண நேர்ந்தது. பின் உலகமே அறியும் ஒன்றாகவும் ஆனது அது.

அந்தச் சம்பவம், ஸ்ரீவைஷ்ணவ உலகிற்கு எம்பெருமாட்டியாம் மகாலட்சுமியின் அருளைப் பெற்றுத் தர உகந்த `ஸ்ரீதுதி' என்கிற தோத்திரம் தோன்றவும் காரணமானது.

- *தொடரும்...* ***23-02-2021***

# `நேரில் வந்து கூறிவிடு!'

ஞானக் கண்ணால் பகவானைக் கண்டுவிட்ட நம்மாழ்வாருக்கு, ஊனக் கண்ணாலும் அவரைக் காண ஆசை வந்தது.

ஆனால், அவர் நெஞ்சம் உருகப் பல முறை அழைத்தும் பகவான் அவருக்குக் காட்சி தரவில்லை. உடனே, பகவானிடம் வேறு மாதிரி வேண்டினார் ஆழ்வார்.

''பகவானே! என் ஊனக் கண்களுக்கு நீ காட்சி தர விரும்பவில்லையா? பரவாயில்லை... 'அவ்வாறு காட்சி தர விருப்பம் இல்லை' என்பதையாவது என் முன் தோன்றிக் கூறிவிடு.

'நீ ஒரு மகாபாவி. அதனால் உனக்குக் காட்சி தரமாட்டேன்' என்று உன் குரலால் நேரில் வந்து கூறிச் சென்றுவிடு.

இவ்வாறு நீ விருப்பமுடன் கூறினாலும் சரி; வெறுப்புடன் கூறினாலும் சரி... அதை நான் பொருட்படுத்தவில்லை; உன்னை எப்படியேனும் காண வேண்டும். உன் சொல் கேட்க வேண்டும். இவையே என் ஆசை!'' என்கிறார் நம்மாழ்வார்.

`கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண் பனி சோர நின்றால் பாவி நீ என்று ஒன்று சொல்லாய் பாவியென் காண வந்தே' என்பது அந்தப் பாசுரம்.

பகவானை ஆழ்வார்கள் அனுபவிக்கும் பாங்கே தனிச் சுவைதான்!

*- எஸ்.திருமலை, கோவை-9*

# ரங்க ராஜ்ஜியம் - 75 09-03-2021

இந்திரா சௌந்தர்ராஜன்




ரங்க ராஜ்ஜியம்

*`கற்பகமேயென்று காசினியோரைக் கதிக்க மாட்டேன்*
*வெற்பிடையே நின்று வெந்தவத் தீயிலும் வேக மாட்டேன்*
*பற்பல கலைவல்ல பாவலனே பத்தரேத்தும் தூப்புல்*
*அற்புதனேயருளாயடி யேனுக்கு அரும்பொருளே!'*

**- பிள்ளை அந்தாதியில் ஸ்ரீநயினாராச்சாரியார்**

**`சாரங்கன் என்றோர் இளைஞன். அவனுக்குத் தாய் தந்தை இல்லை. கோயில் பணி செய்தும் சிலர் இடும் ஏவல்களைச் செய்தும் உயிர் வாழ்ந்து வந்தான். 35 வயதிற்கும் மேல் ஆகிவிட்டது. திருமணம் ஆகவில்லை.**

அந்த நாளில் திருமணச் சடங்கின் நிமித்தம், பிள்ளை வீட்டார், பெண் வீட்டாருக்கு வரதட்சணை தரும் வழக்கம் இருந்தது. தான் கஷ்டப்பட்டு, பெற்று வளர்த்து ஆளாக்கும் தன் பெண்ணை, ஒரு தந்தை என்பவன் திருமணத்தின் மூலம் அப்படியே அல்லவா தூக்கிக் கொடுத்துவிடுகிறான்.

அதன்பின் அவன் தனித்து வாழ நேரிடுகிறது. அது ஒரு துன்பம் மட்டுமல்ல, முதுமையில் ஆதரவற்ற ஒரு நிலையும் தோன்றிவிடுகிறது. எனவே, அதை

ஈடுகட்டும்விதமாக பெண் எடுப்போர் பெண்ணைப் பெற்ற தாய் தந்தைக்கு 'வரன் காணிக்கை' என்ற பெயரில் தட்சணை தரும் வழக்கம் இருந்தது. ஆகவே, திருமணம் நடக்கவேண்டும் என்றால், ஓர் ஆண் என்ற வகையில் பல்லாயிரம் பொன், பணம் இருக்கவேண்டும் என்கிற ஒரு நிலை இருந்தது.

சாரங்கனோ அநாதை. பணத்துக்கும் வழி இல்லாதவன். எனவே, அவன் வாழ்வில் திருமணம் என்பது ஒரு கனவே. இதை அறிந்த சில இழிபிறவிகள், அவனை ஸ்ரீவேதாந்ததேசிகரை சோதிக்கும் முகமாய் தூண்டிவிடத் தயாராயினர்.

``ஸ்ரீவேதாந்த தேசிகர்தான் சுத்த சுயம் பிரகாசம் ஆயிற்றே. நினைத்தமாத்திரத்தில் வரதனிட மும் அரங்கனிடம் பேசுபவராயிற்றே. அப்படிப்பட்டவரால் சாரங்கனுக்கு நிதியுதவி செய்து திருமணம் செய்து வைக்க முடியாதா என்ன...'' என்று கேட்டு, சாரங்கனை வேதாந்ததேசிகரை நோக்கி ஓர் ஏவுகணை போல ஏவிவிட்டனர்.

ஸ்ரீவேதாந்ததேசிகரும் காஞ்சிப் பேரருளாளன் ஆலயம் சென்று வழிபாடு முடித்துத் திரும்பி யிருந்தார். அவரது கிரகத் தின் புறத்தில், அவரைத் தரிசிப்பதற்காகவும் ஆலோசனைகள் பெற்றிடவும் பலரும் காத்திருந்தனர். சிலர் புரவி ரதங்களில் வந்திருந்தனர். ஒரு தனவந்தர் பல்லக்கில் வந்திருந்தார். இவர்களில் ஒருவராக மணப்பாக்கத்து நம்பியும் நின்று கொண்டிருந்தார்.

ஸ்ரீதேசிகர் தன் சீடர் குழுவுடன் வரவும், எல்லோரும் கீழே தரையில் சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கினர். தேசிகரும் அனைவருக்கும் ஆசி கூறும் முகமாய் கனிந்த பார்வையுடன் கைகளை உயர்த்தி ஆசீர்வதித்தார்.

அப்போதுதான் அங்கே அந்த சாரங்கனும் வந்து நின்றான். ஓர் ஒழுங்கில்லாமல் அவன் தரித்திருந்த திருமண் காப்பும் அணிந்திருந்த கச்ச வேட்டியும், அவன் கவனிப்பார் இல்லாத போக்கை உடையவன் என்பதை, ஸ்ரீவேதாந்த தேசிகருக்கு முதல் பார்வையிலேயே உணர்த்தி விட்டன. அவனும் தேசிகரைக் குழைவுடன் பார்த்துச் சிரிக்கலானான். சிலர் அவனை `எங்கே வந்தாய்? இங்கு உனக்கு என்ன வேலை?' என்பது போலப் பார்த்தனர்.

"யாரப்பா... நீ உனக்கு என்ன வேண்டும்?" என்று கனிவுடன் அவனிடம் பேசலானார் ஸ்ரீதேசிகர்.

"என் பெயர் சாரங்கன். எனக்கு அப்பா அம்மால்லாம் இல்லை. நான் கொழந்தையா இருக்கறப்பவே அவாள்லாம் பரம பதிச்சுட்டாளாம்."

சாரங்கன் சொன்னவிதமே மிகப் பரிதாபமாக இருந்தது.

"அடடே.. கவலைப்படாதே. உன் வரையில் நம் காஞ்சி வரதனும் தாயாருமே உன்

தந்தை தாயாக இருந்து உன்னைக் காத்து ரட்சிப்பார்கள்."

தேசிகரும் ஆறுதல் வார்த்தைகளைக் கூறினார்.

"எங்கே ரட்சக்கிறா... நான் சிரமப்பட்டுண்டுதான் இருக்கேன். இன்னும் கல்யாணம்கூட ஆகலை நேக்கு."



"ஓ... கல்யாண விருப்பம் இருக்கிறதா உனக்கு?"

"நேற்றுவரை அதைப்பற்றி நினைக்கல. ஆனால், இன்னிக்கி சிலர் எனக்குள் அந்த எண்ணத்தை உருவாக்கி, உங்களண்டையும் என்னை அனுப்பியிருக்கா..."

"யார் அவர்கள்?"

"அவா பேரெல்லாம் தெரியாது. ஆனா எப்ப பார் ஒரு திண்ணைல அரட்டை அடிச்சிண்டே இருப்பா. அவாதான் என்னையைக் கூப்புட்டு, `என்னடா இப்படி ஒரு கல்யாணம் கார்த்திகைன்னு எதுவுமில்லாம ஒத்தையாக சுத்திண்டிருக்கே'ன்னா?"

"நீ என்ன சொன்னே?"

"கல்யாணம் பண்ணிக்கப் பணம் வேணுமே. ஆனா என்கிட்ட ஒரு வராகன்கூட இல்லையேன்னேன். 'அதனால என்னடா... நீ போய் வேதாந்ததேசிகரைப் பார். அவர்

உனக்கு மகாலட்சுமிகிட்ட இருந்தே பொன் வரவைச்சுக் கொடுப்பார். நல்ல இடத்துல கல்யாணம் பண்ணி வைப்பார்'னு சொன்னா.. அதான் கிளம்பி நேரா உங்கள பாக்க வந்துட்டேன்."

"அப்படியா சொன்னார்கள்?"

"ஆமாம்! அப்படியேதான் சொன்னா. எனக்கும் லட்சுமியைப் பார்க்கணும்னு ரொம்ப நாளா ஆசை."

"ஆமாம், அவர்கள் சொன்னதை நீ நம்பிட்டியா. நாமல்லாம் சாமானிய மனுஷப் பிறப்பு. அதுவும் விதி வழிப்பட்ட ஒரு காம்யார்த்த வாழ்வு. நம்மால் மகாலட்சுமியை எல்லாம் பார்க்க முடியுமா?"

"உங்களால முடியுமாமே... அதனாலதான் உங்களை சர்வதந்த்ர சுதந்திரர்னு எல்லாரும் சொல்றாளாமே... நீங்க கூப்பிட்டா மகாலட்சுமி என்ன... அந்த காஞ்சி வரதனே எதிர்ல வந்து விடுவானாமே?"

"அவர்கள் என் மேல உள்ள மதிப்பினால் அப்படிச் சொல் கிறார்கள். நான் ரொம்பவும் சாமானியன்."

"அப்ப உங்களால முடி யாதா? எனக்குக் கல்யாணம் நடக்காதா?"

சாரங்கன் வருத்தமுடன் திருப்பிக் கேட்கவும், அங்கு இருந்தவர்களில் ஒருவர் இடையிடலானார்.

"ஸ்வாமி இவன் அப்பாவி. இவனைச் சிலர் தவறாக ஏவி விட்டுள்ளனர். இவனும் அவர்கள் ஏவிட்டது தெரியாமல் வந்துவிட்டான். இவனை நாங்கள் பார்த்துக்கொள்கிறோம். நீங்கள் கிரகத்துக்குள் செல்லுங்கள்" என்றார். ஆனால் ஸ்ரீவேதாந்த தேசிகர் அதை மறுத்தார்.

"அவர்கள் ஏவியதாகவே இருக்கட்டுமே... அதனாலென்ன? இவனைப் போன்றவர்களுக்கு ஒரு வாழ்க்கைத் துணை அவசியம் இல்லையா?"

"ஸ்வாமி! யாரும் இல்லாத அனாதைக்கு, உருப்படியாக ஒரு நில புலனும் இல்லாதவனுக்கு, நாலாவித வர்ணங்களில் எந்த வர்ணத்திலும் அடங்காமல் சுற்றித் திரிபவனுக்கு யார் முன்வந்து பெண் தருவார்கள்?"

"உண்மைதான்... ஆயினும் அந்தப் பேரரு ளாளன் கருணை புரிய சித்தமாகிவிட்டால், கல்லும் கனியாகுமே... கல் மரத்திலும் பூ பூக்குமே?"

"ஸ்வாமி, இதற்கு மேல் நாங்கள் கூற ஏதும் இல்லை. ஆனால் ஒன்று மட்டும் உறுதி.

ஏதாவது அதிசயம் நடந்தாலன்றி இவன் வாழ்வு மாறப்போவதில்லை. நீங்கள் அதிசயம் ஏதும் நிகழ்த்துகிறீர்களா என்று சோதிக்கவே இவனைச் சில திண்ணைப்பேச்சு மனிதர்கள் ஏவி விட்டுள்ளனர்.

உண்மையில் அவர்கள் நோக்கம் இவன் திருமணம் அல்ல. உங்களைச் சோதிப்பதே."

"அதை நானும் அறிவேன். அவர்கள் என்னைச் சோதிப்பதாகக் கருதிக்கொண்டு நான் சார்ந்திருக்கும் கொள்கைகளைச் சோதிக்கிறார்கள்."

"ஆம் இவர்களுக்கெல்லாம் நீங்கள் பதில் கூறத்தான் வேண்டுமா?"

"அவர்கள் எப்படி வேண்டு மானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். ஆனால் இவன் அவர்களை நம்பி விட்டான். அதைவிட என்னைப் பெரிதும் நம்புகிறான். உங்களைப் போல இவனுக்குள் ஒரு கேள்வி இல்லை. சந்தேகம் என்பதும் துளியும் இல்லை. இப்படி ஒரு மனம் வாய்ப்பது அரிது. யோகம் தெளிந்தவர்களுக்கே இது சாத்தியப்படும். இவனது நம்பிக்கை அசாத்தியமானது. அதுதான் இன்று அதிசயம். இந்த அதிசயம் பல அதிசயங்களை நிச்சயம் நிகழ்த்தும்."

ஸ்ரீவேதாந்த தேசிகர் உணர்ச்சி மேலிடப் பேசினார்.

"எப்படி ஸ்வாமி..." என்று ஒருவர் கேட்கவும் செய்தார்.

"எப்படி என்று எனக்குத் தெரியாது. ஆனால் பேரருளாளன் கைவிடமாட்டான். எம்பெருமாட்டியும் துணை நிற்பாள். இவன் பொருட்டு நான் அவர் களிடம் மன்றாடப் போகிறேன்..." என்றார் ஸ்ரீவேதாந்த தேசிகர்.

தொடர்ந்து, தன் கிரகத்திற் குள் சென்று கை கால்களைக் கழுவிக்கொண்டு வந்து நிஷ்டையில் ஆழ்ந்தார். பின் கண் மலர்ந்தவர், பெருந் தேவியாம் அந்தத் திருமகளை எண்ணிக் கவி பாடத் தொடங்கினார்.

அந்த துதிப் பாடல் வரிகள் ஆற்று பெருக்காய்த் தங்கு தடையின்றிப் பீறிட்டது. அதேவேளை, வானில் பெரும் மேகக்கூட்டமும் கூடி மழையும் வரலாயிற்று. அதன் நிமித்தம் இடியும் மின்னலும் தோன்றிக் காஞ்சி நகரமே நடுங்கிற்று.

ஸ்ரீதேசிகரின் இல்லத்திற்கு அருகிலேயே இடி ஒன்று விழுந்ததில் நிலப்பகுதி தோண்டப் பட்டது போல் பிளந்து கொள்ள, உள்ளிருந்து ஒரு பெரும் புதையல் பானை வழிய வழிய பொற்காசுகளுடன் கண்ணில் படலாயிற்று.

அதைக்கண்ட சகலரும் திகைத்தனர். இன்ப அதிர்வுக்கு ஆளாயினர். ஸ்ரீவேதாந்த தேசிகரும் கண்கள் பனித்திடத் தன் பாடலை முடித்தார்.

அன்று அவர் அப்படிப் பாடிய பாடலே பின்னாளில் ‘ஸ்ரீஸ்துதி’ என்னும் மகாலட்சுமிக் கான ஸ்லோகமாக மாறியது. பெருமாட்டி கைவிடவில்லை. சாரங்கனும் அந்த நிதியால் மட்டுமல்ல, மதியாலும் மாறிப் போனான். திருமகளின் அருள் பெற்றுவிட்ட அவனுக்குத் தேடிக்கொண்டு வந்து பலர் பெண் கொடுக்க சித்தமாயினர்.



அவன் திருமணம் இனிது நடந்தேறிட ஸ்ரீதேசிகரைச் சோதித்தவர்கள் வாயடைத்துப் போனார்கள். இதையெல்லாம் காண நேர்ந்த மணப்பாக்கத்து நம்பி, ஸ்ரீதேசிகரின் திருவடிகளில் விழுந்து தன்னைச் சீடனாக்கிக் கொள்ள மன்றாடினார். ஸ்ரீதேசிகர் அவரை ஆதரித்ததோடு வரதனையும் சிக்கெனப் பற்றிக் கொள்ளும்படி பணித்தார். அதனாலும் அன்றாட வழிபாடு நிமித்தமாயும் வரதன் ஆலயம் ஏகிவிட்டு வந்த மணப்பாக்கத்து நம்பியின் கனவில் தோன்றினார் வரதன்.

‘‘நம்பி! நீ திருவரங்கம் செல்வாயாக. அங்கே பிள்ளை லோகன் என்பான் வடிவில் நானே இருக்கிறேன். அவன் மூலம் நீ ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தங்கள் சகலமும் கற்கலாம். அத்துடன் அங்கேதான் இப்போது பெரும் சலனங்களும் ஏற்பட உள்ளன. அவ்வேளை, உன் போன்ற பெரும் தொண்டர்கள் பிள்ளைலோகனோடு இருப்பது அவசியம். இம்மட்டில் தேசிகனே உனக்கு வழிகாட்டி அருளுவான்’’ என்றார்.

கண்விழித்த நம்பி, தான் கண்ட கனவினை ஸ்ரீவேதாந்த தேசிகரிடம் கூறவும் தேசிகர் சிலிர்த்தார். நம்பியையும் திருவரங்கம் செல்லப் பணித்து அனுப்பி வைத்தார்.

கி.பி. 1323 - பாரத தேசத்தை வடக்கில் டெல்லி யிலிருந்து கொண்டு, துக்ளக் வம்சத்தைச் சேர்ந்த கியாசுதீன் என்பவன் ஆட்சி செய்த காலம். பாரசீக மொழியே அப்போது அலுவல்மொழி. உருதுவும் பல்லோரால் பேசப்பட்டது.

பாரதத்தைத் தாயகமாகக் கொண்டோர், சம்ஸ்கிருதம் மற்றும் ஹிந்தியைப் பேசிய காலம். இந்த கியாசுதீனின் ஆட்சி நான்கு வருடங்களே நடந்தது. அதன் பின் வந்த முகமது பின் துக்ளக் 1351 வரை ஆட்சி செய்தான்.

வடக்கில் இவனது ஆட்சி என்றால், தெற்கே பாண்டிய மண்டலத்தில் மாறவர்மன் குலசேகரன் என்பவன் மதுரையைத் தலைநகரமாகக் கொண்டு வாழ்ந்து வரலானான். அவனுக்குப் பின் அவன் புத்திரர்களான சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் ஆட்சி செய்து வந்தனர். இக்காலகட்டத்தில் காஞ்சியம்பதி வலுவிழந்த சோழர்களின் பிடியிலிருந்தது.

கர்நாடக தேசமும் அதனையொட்டிய ராஷ்ட்ரமும் விஜயநகரப் பேரரசின் கீழ் நிர்வகிக்கப்பட்டன. விஜயநகரப் பிரதிநிதிகள் காஞ்சியிலும் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்த முற்பட்டனர். அதற்கேற்பக் காஞ்சியில் நகரக் காவலும், வரிவசூல், ஊர் நிர்வாகம் ஆகியவையும் இருந்தன.

மொத்தத்தில் தென் பகுதி முழுவதும், விஜயநகரப் பேரரசின் எழுச்சியின் காரணமாக, வடபகுதியைப் போன்று மிலேச்சர் கையில் சிக்கவில்லை. ஆயினும் எப்படியும் தென்பகுதியைத் தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவந்துவிட துக்ளக் முயன்றான்.

அதில் திருவரங்கமே முதல்குறியாக இருந்தது.

அகண்டு விரிந்த காவிரியாறு - மையத்தில் கலைநயம் கொஞ்சும் ஆலயம். அந்த ஆலயத்தின்பால் பெரும் பற்று கொண்ட மக்கள், அவர்களை வழிநடத்திய ஆசார்யர்கள் என்று நம் சமயம் பெரும் உறுதிப் பாட்டுடன் விளங்கியதை மிலேச்சர்களால் ஜீரணிக்க முடியவில்லை. எனவே திருவரங்கத்தைச் சுற்றியுள்ள எல்லா ஆலயங்களையும் குறிவைத்துத் தாக்க முற்பட்டனர். சிலை வழிபாடு என்பது அவர்கள் மதக் கொள் கைக்கு எதிராக இருந்த தால், சிலைகளைச் சிதைப்பதையோ அழிப்ப தையோ அவர்கள் ஒரு பாரமாகவும் கருதவில்லை.

இப்படி ஒரு சூழல் ஸ்ரீராமாநுஜர் வாழ்ந்த நாள்களிலும் இருந்தது. ஆயினும் அப்போது பெரும் யுத்தங்களோ, கலகங்களோ இல்லை.

ஆனால், துக்ளக் வம்சத்தினர் பெரும் சீற்றத்துடன் படை எடுத்து வந்தனர்.

**- தொடரும்...**



# ஏழு புண்ணிய திருத்தலம்!

*திருவாரூரிலிருந்து சுமார் 13 கி.மீ. தொலைவில் உள்ளது திருக்கண்ணபுரம். எம்பெருமான் ஸ்ரீநீலமேக பெருமாள் எனும் திருப் பெயருடன் அருளும் ஊர் இது. உற்சவர்- ஸ்ரீசௌரிராஜபெருமாள்; தாயார் - ஸ்ரீகண்ணபுர நாயகி.*

*1. தலம் - கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரம்*

*2. வனம் - கிருஷ்ணாரண்யம்*

*3. நகரம் - கிருஷ்ணபுரம்*

*4. விமானம் - உத்பலாவதக விமானம்*

*5. நதி - காவிரி*

*6. தீர்த்தம் - நித்திய புஷ்கரணி*

*7. கடல் - கிழக்கு நோக்கிய ஆலயம்; கிழக்குத் திசையில்தான் கடலும் அமைந்துள்ளது.*

*இப்படி ஏழு புண்ணியங்களைக் கொண்ட தலம் என்று திருக்கண்ண புரத்தைச் சிறப்பிக்கிறார்கள். திருக்கண்ணபுரம் - பூலோக வைகுண்டம் எனச் சிறப்பிக்கப்படும் க்ஷேத்திரம் என்பதால், இவ்வூரில் சொர்க்கவாசல் தனியே இல்லை என்பர்.*

**- கே.பிருந்தா, சென்னை-44**

# எழுவர் வழிபாடு ஏற்றம் தரும்!



# எழுவர் வழிபாடு ஏற்றம் தரும்!

*நினைத்ததை அருளும் மகத்து வம் கொண்ட ஞானநூல் தேவி மகாத்மியம். ஒருமுகப்பட்ட மனதுடன்... அஷ்டமி, சதுர்த்தசி மற்றும் நவமி நாட்களில் இந்தக் கதையைக் கேட்பவர்களுக்குப் பகைவர்களாலோ, தீய சக்திகளாலோ பாதிப்புகள் நேராது!*

*தேவிமஹாத்மியம் விவரிக்கும் சப்த மாதர்கள் வரலாறும் சிறப்பானது. முறைப்படி இவர்களை வழிபட, அனைத்து நலன்களும் கிடைக்கும்.*

*பிராம்மியை வழிபட ஞானம் பெருகும்; சரும நோய்கள் குணமாகும்.*

*மகேஸ்வரியை வழிபட, சர்வ மங்கலம் உண்டாகும்.*

*கௌமாரியை வழிபட, ரத்தம் தொடர்பான நோய்கள் நீங்கும்.*

*வைஷ்ணவியை வழிபட, விஷ ஜந்துக்களால் தொல்லைகள் ஏற்படாது.*

*வாராஹியை வழிபட, எதிரிகள் பயம் நீங்கும்; மனதில் தைரியம் பிறக்கும். விவசாயம் செழிக்கவும் இந்தத் தேவியை வழிபடுவர்.*

*இந்திராணியை வழிபட, தாம்பத்தியம் இனிக்கும்.*

*சாமுண்டியை வழிபட... சகல தீவினைகளும் அகலும்*

*- **சி.வேண்டு, மதுரை-2***

# ரங்க ராஜ்ஜியம் - 76 23-03-2021

இந்திரா சௌந்தர்ராஜன்




ஸ்ரீரங்கத்தின் சரிதம்

*`தொண்டருக்குந் துணையடி வாழி*
*நின்றூ முறுவல்*
*கொண்ட முகம் வாழி வாழி*
*வியாக்கியா முத்திரைக்கை*
*வண்டிரு நாமும் வாழி*
*மணிவட முப்புரிநூல்*
*கொண்ட சீர் தூப்புற் குலமணியே*
*வாழி நின் வடிவே!'*

**பாரதம் முழுக்க தங்களின் வசமாக வேண்டும் என்கிற நோக்கில் சீற்றத்துடன் புறப்பட்டு வந்த அந்நியர்கள், தென்பகுதியைப் பாகம் பாகமாக தங்கள் வசப்படுத்தினர்.**

**இதனால், எங்கே நம் சமயமே முற்றாக அழிந்துவிடுமோ என்ற அச்சம் பலருக்கும் ஏற்பட்டபோதிலும், ஆசார்ய புருஷர்கள் துளியும் நம்பிக்கை இழக்காமல் எல்லோரையும் வழிநடத்தினர். அவர்களில், திருவரங்கத்தில்**

பிள்ளைலோகாசார்யர் முக்கியமானவர். அவரை நோக்கியே மணப்பாக்கத்து நம்பியும் புறப்பட்டார்.

ஸ்ரீரங்கத்தில் காட்டழகிய சிங்கரின் சந்நிதி.

அங்குள்ள கல் மண்டபம் ஒன்றில் பிள்ளை லோகாசார்யர் சீடர்களுக்குப் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அங்கு சென்ற மணப்பாக்கத்து நம்பி, பாடம் நடக்கும்போது இடையிடக்கூடாது என்று காத்திருந்தார்.

அப்போது, பிள்ளை லோகாசார்யரின் பாட விளக்கம் நம்பியின் காதில் விழுந்தது.

"சீடர்களே! எம்பெருமான் குறித்து பக்தி செய்யவே நமக்கு இப்பிறப்பு ஏற்பட்டுள்ளது. இந்தப் பூமி மிகப் பெரியது. இதில் மலைகள், கடல்கள், நதிகள், அருவிகள், பாலைவனங்கள், பாழும் நிலங்கள் என்று பல இருப்பினும் மனிதன் வாழ்ந்து தெளிய உகந்த இடமாய் இருப்பது பாரதமும் அதன் க்ஷேத்திரங்களும்தான்!

அந்த க்ஷேத்திரங்களில் முதன்மையானதும் மிகுந்த பெருமைக்குரியதுமான தலம் நம் திருவரங்கம். பிரம்மா, தான் பூஜித்த மூர்த்தியையே நாம் பூஜிக்க இங்கே நமக்காகத் தந்துள்ளான்.

நாம் நம் பகுத்தறிவால் பக்தி பூண்டு, இந்தப் பிறப்பை வென்று முக்தி காணவேண்டும். உடல் இச்சைப்படி வாழ்ந்து மனம் போன போக்கில் போவது சரியான வாழ்வாகாது. அது இந்தச் சாகரத்தில் நம்மைத் திரும்பத் திரும்பப் பிறக்கவைக்கும். எனவே உடல் இச்சையைக் கட்டுப்படுத்தி, எம்பெருமான்மீது பக்திகொண்டு வாழ்ந்து அவன் திருவடிகளைச் சேர்வதையே நாம் நம் வாழ்வின் நோக்கமாகக் கொள்ளவேண்டும்."

ஸ்ரீபிள்ளை லோகாசார்யரின் விளக்கவுரை மணப்பாக்கத்து நம்பியைச் சிலிர்க்கச் செய்தது. கூடவே `யாமே பிள்ளை லோகம் வடிவில் உள்ளோம்' என்று காஞ்சி வரதன் கனவில் வந்து கூறியதும் நினைவுக்கு வந்தது. ஆக, மணப்பாக்கத்து நம்பிக்குக் காஞ்சிப் பேரருளாளனாகவே தென்படத் தொடங்கினார் ஸ்ரீபிள்ளை லோகாசார்யர்.

அந்த நேரத்தில், காட்டழகியசிங்கர் ஆலயத்தை ஒட்டிய பகுதியில் குதிரைகளின் குளம்படிச் சத்தமும், கனைப்புச் சத்தமும் பெருமளவில் கேட்டன. ஆசார்யர் பேசுவதை நிறுத்திவிட்டுப் புறத்தே பார்த்தார். அவரின் பார்வையில் படும்படி ஓரிடத்தில் நின்றுகொண்டிருந்த மணப் பாக்கத்து நம்பியும் குதிரைகளின் சத்தம் வந்த திசை நோக்கித் திரும்பினார்.

நான்கு மிலேச்சர்கள் புரவிகளின் மீது அமர்ந்தபடி புறச்சாலையில் வந்துகொண்டிருந்தனர். அவர்கள் வருகையால், அக்கம்பக்கம் வசிப்போர் தங்களின் வீடுகளில் உள்ளடங்கிவிட, அதைக் கண்டுஅந்த நால்வர் முகங்களிலும் ஒருவித

பெருமிதம்.

குறுந்தாடியும் தலையில் உலோகப் பாகையும் தரித்திருக்கும் நிலையில், அவர்கள் பார்வை பார்க்கும் படியாக இல்லை. வேட்டைச் சிறுத்தை உற்றுப் பார்ப்பது போல் இருந்தது; பார்க்க சகிக்கவில்லை. அவர்களில் ஒருவன் மணப் பாக்கத்து நம்பியைப் பார்த்துவிட்டான்.

கையால் சைகை காட்டி நம்பியை அருகில் அழைத்தான். நம்பி துளியும் அச்சமின்றி அவனை நெருங்கினார்.

``யார் நீ?" என்று உருதுவிலும் பின் நெளிந்த தமிழிலும் கேட்டான்.

``பார்த்தால் தெரியவில்லையா... மனிதன்தான்!'' - அச்சமின்றி பதிலளித்தார் நம்பி.

``என்ன திமிர் உனக்கு? என் கேள்விக்கு இதுவா பதில்?''

``வேறு எது பதில்?''

``நீ இங்கு என்ன செய்கிறாய்? உன் பெயர் என்ன? இந்த ஊரினைச் சேர்ந்தவன்தானா நீ? இப்படி நான் அறிய வேண்டியவை எவ்வளவோ உள்ளன."

``இதையெல்லாம் கேட்டறிந்து நீ என்ன செய்யப் போகிறாய்? சொல்லப்போனால், இந்தக் கேள்விகளை எல்லாம் நான்தான் உன்னைப் பார்த்துக் கேட்கவேண்டும். ஏனென்றால் நீதான் இந்த மண்ணுக்குப் புதியவன். நானோ இந்த மண்ணில் பிறந்து இங்கேயே வாழ்பவன்.''

``நீ தைரியமாகப் பேசுகிறாய். உனக்குச் சில உண்மைகள் தெரியவில்லை. இப்போது நான் தெரிவிக்கிறேன்... தெரிந்துகொள்... நான் தேவகிரி எனப்படும் தௌலதாபாத்தை ஆளும் சக்கரவர்த்தியின் படைக்காவலன்.

மதுரையில் இருந்துகொண்டு இந்தத் தென் பகுதியை வசப்படுத்தி ஆளப் போகிறவன். இனி இந்த மண் எங்கள் மண். உங்களை ஆண்ட மன்னர்கள், எங்களுக்குக் கட்டுப்பட்டு நாட்டை எங்களிடம் ஒப்படைத்துவிட்டு ஓடிவிட்டனர். தெரியும்தானே?''

``யாரும் ஓடவில்லை. ஓட நாங்கள் கோழைகள் இல்லை. தற்காலிகமாய்ப் பதுங்கி வேண்டுமானால் இருக்கலாம்.''

``நீ அதிகம் பேசுகிறாய் உன் நாக்கைத் துண்டித்து விடுவேன்.''

``இப்படி எத்தனைபேர் நாவினை அறுப்பாய்? அப்படி அறுப்பதால் நாங்கள் மாறிவிடுவோமா?''

``மாறவேண்டும். மாறித்தான் ஆகவேண்டும். மாறாவிட்டால் மாற்றிக் காட்டுவோம்... கபர்தார்! போய் உன் மக்களிடம் இதைச் சொல். எங்கள் பேச்சைக் கேட்டு எங்கள் வழியைப் பின்பற்றினால் இம்மண்ணில் ஏகபோகமாக வாழலாம். இல்லாவிட்டால் சிரங்கள் வெட்டப்பட்டு முண்டங்களாகிச் சாவீர்கள்... போ... போய் சொல்...''



ஸ்ரீரங்கம் கோயில்

**அ**வன் எச்சரித்துவிட்டு குதிரையின் தொடையை உதைத்துக் கிளப்பியபடி புறப்பட்டான். அவர்கள் விலகியதும் மணப்பாக்கத்து நம்பியை நாடி பிள்ளை லோகாசார்யரின் சீடர்கள் ஓடி வரலாயினர்.

வந்தவர்கள் வினவத் தொடங்கினர்.

``தாங்கள் யார்?''

``என்னை மணப்பாக்கத்து நம்பி என்பர். நான் காஞ்சியிலிருந்து வருகிறேன்.''

``அப்படியா? வாருங்கள்... வாருங்கள்...'' என்றபடி அவரை ஸ்ரீபிள்ளைலோகாசார்யரிடம் அழைத்துச் சென்றனர். அருகில் சென்றதும் ஆசார்யரின் பாதங்களில் விழுந்துப் பணிந்தார் மணப்பாக்கத்து நம்பி. பின் எழுந்தார்.

``அன்பனே! அந்த மிலேச்சனிடம் நீ தீரமாய்ப் பேசியதைக் கேட்டேன். சில காலமாகவே இங்கு இதுதான் நிலை. ஒரு சோதனையான காலகட்டம் இது.''

``உண்மைதான் சுவாமி. அதனாலேயே ஸ்ரீவேதாந்த தேசிகர் என்னை இங்கு செல்லப் பணித்தாரோ என்று கருதுகிறேன்.''

``ஓ... நீ தேசிகரின் வழிகாட்டலில் வந்தவனா?''

``அதுமட்டுமல்ல... காஞ்சிப் பேரருளாளன் சொப்பனத்தில் வந்து சொன்னதும் இதையே..."

``ஓ... நீ நம்மவனோ?''

ஸ்ரீபிள்ளைலோகாசார்யர் அப்படிக் கேட்ட விதத்தில் ஒரு ஆழ்ந்த வாஞ்சை. அந்தக் காஞ்சி வரதனே பேசுவது போலவும் ஒரு பிரமிப்பு.

``சுவாமி! ஸ்ரீவைஷ்ணவ நிலைப்பாட்டை கசடறக் கற்பதும் பின் அதன் வழி நடப்பதும்தான் என் நோக்கம். அதற்காகவே தங்களை நாடி வந்திருக்கிறேன். ஆனால் நான் வந்திருக்கும் இவ்வேளை, ஒரு சோதனைக் காலமாய் இருக்கும் என்று நான் எண்ணிப் பார்க்கவில்லை.''

``சோதனைகள் வந்தால்தானே சாதனைகள் பிறக்கும்.''

``அப்படியானால், தங்களுக்கு அச்சம் ஏதும் இல்லையா?''

``எம்பெருமானின் திருவடிகளைப் பற்றிக் கொண்டவர்கள் எதற்கும் அஞ்சத் தேவையில்லை.''

``இங்கே இப்போது எம்பெருமானுக்கு அல்லவா சோதனை வந்திருக்கிறது?''

``அவன் வரைவில் அது ஒரு விளையாட்டு.''

``அப்படியானால் அசுரர்களை அழித்திட அவதாரம் எடுத்து வந்தது போல், இப்போதும் அவன் வந்து நம்மைல் காத்திடுவானோ?''

``ஆனால், இப்போது நடப்பது கலியுகம். இந்த யுக தர்மப்படிதான் எதுவும் நடக்கும். இந்த யுகம் மற்ற யுகங்களிலிருந்து பெரிதும் மாறுபட்டது. இந்த யுகத்தில் ஆத்மார்த்த பக்தியும் தியானமுமே ஒருவரை கரைசேர்க்கும். ஆனால் பக்தியும் தியானமும் வசப்படுவது அவ்வளவு சுலபமாக இராது.''

``தாங்கள் என்ன சொல்லவருகிறீர்கள்... எம்பெருமான் நம்மை ரட்சிப்பானா, மாட்டானா அதைச் சொல்லுங்கள்.''

``அவனுக்கு ரட்சிக்க மட்டும்தான் தெரியும் நம்பி. எனவே மாற்றுக் கேள்விக்கு இடமேயில்லை. ஆனால் ரட்சிப்பைப் பெற்றிட, நாம் தகுதி உள்ளவர்களாக

இருக்கவேண்டும்.''

``எது அந்த தகுதி?''

``எந்த நிலையிலும் மாறாத பக்தி. அசைக்க முடியாத பக்தி. மாயைக்கு இடம் தந்திடாத பக்தி. இதுவே அந்தத் தகுதி...''

``எது மாயை?''

``மிலேச்சனே ஒரு மாயைதான்... அவனுடைய நம்பிக்கைகள் வழிமுறைகள் என்று எல்லாமே மாயைதான்.''

ஸ்ரீபிள்ளை லோகாசார்யர் இவ்வாறு நம்பிக்கு விளக்கமளித்தப்படி இருந்தபோது, சிலர் அங்கு மூச்சிரைக்க வந்து நின்றனர். பின் பேசினர்.

``சுவாமி! சிராப்பள்ளி மலைக்கோட்டை முழுவதும் மிலேச்சர் வசமாகிவிட்டதாம். உறையூரையும் அவர்கள் வளைக்கப் போகின் றனராம். அதுமட்டுமல்ல, நம் திருவரங்க ஆலயத்தை வசப்படுத்தி ஆலயத்தைத் தகர்ப்பதுதான் அவர்கள் திட்டமாம்!'' என்றனர். தொடர்ந்து ``அவர்கள் இலக்கு இம்மண்ணில் மனிதர்கள் அல்ல; நம் ஆலயங்கள்தானாம். ஆனைக்காவில் உள்ள சிவாலயத்தையும் சின்னா பின்னமாக்குவது அவர்கள் இலக்காம்'' என்றும் பகிர்ந்தனர்.

``இப்படி வழிபாட்டுத் தலங்களைத் தகர்ப்பது பெரும்பாவம் என்று அவர்களுக்குத் தெரியாதா? அவர்களின் வழிபாட்டு தலங்களை நாம் தகர்த்தால் ஏற்பார்களா?''

``ஒருக்காலும் நாம் அதுபோல் நடக்கப்போவதில்லை. அவர்கள் இம்மண்ணில் பிறந்து நம் நெறிகளை அறியாது போனவர்கள். அவர்கள் வரையிலும் உருவ வழிபாடு தவறானது. எனவே, அவர்கள் நம் ஆலயத்தைச் சிதைப்பதைப் பாவமாய்க் கருதவில்லை. அடுத்து நம்மை ஒன்றிணைப்பது நமக்கு ஆதர்சமாக விளங்குவது நம் ஆலயங்களே. எனவேதான் ஆலயங்களைத் தகர்த்தால் நம்மை எளிதில் மாற்றிவிடலாம் என்று கருதுகின்றனர்.

நாம் அதற்கு ஒருக்காலும் இடம் தந்துவிடக் கூடாது. நம் உயிரைக் கொடுத்தாவது இந்தத் திட்டங்களை முறியடித்திட வேண்டும்."

இப்படி, அங்கே ஒரு வாதப் பிரதிவாதம் தொடங்கிவிட்டது. இதன் நடுவே ஸ்ரீபிள்ளை லோகாசார்யர் மட்டும் `இப்போது நம்மோடு ஸ்ரீவேதாந்த தேசிகரும் இருந்தால், நமக்கு அது பெரும் பலமாயிருக்கும். எம்பெருமான் அதற்கு அருளட்டும்' என்று பிரார்த்தனை புரியலானார்.



**கா**ஞ்சி மாநகர்!

இங்கேயும் மிலேச்சர்களின் புரவிகள் தெருக்களில் வலம் வரத் தொடங்கியிருந்தன. பல பாகங்கள் அவர்களின் வசப்பட்டுவிட்டிருந்தன. ஆனாலும் திருவரங்கம் போல பெரும்படையோ பாதிப்போ இல்லை.

ஆங்காங்கே புதிதாக சுங்க வரியும் வசூலிக்கப்பட்டது. காஞ்சியின் காவல் அதிகாரியாக விளங்கிய மகா வல்லபதேவன் என்பவன், ஒருபுறம் விஜயநகரப் பேரரசின் உதவியைக் கோரிக் கொண்டும் மறு புறம் மிலேச்சர்களின் வரி வசூலிப்புக்கு இடம் கொடுத்தபடியும் அவர்களைச் சமாளித்துக் கொண்டு இருந்தான்.

இந்த நிலையில் ஸ்ரீவேதாந்த தேசிகர் காஞ்சி வரதனை வணங்கி விட்டு, தனது பல்லக்கில் இல்லம் நோக்கி பயணித்துக் கொண்டிருந்தார். உடன் அவரின் சீடர்கள் தொடர்ந்தனர்.

இல்லம் வந்து சேர்ந்த நிலையில் அவர்கள் மிகுந்த சோர்வுடன் பார்த்தனர்.

``உங்கள் பார்வை எனக்கு புரிகிறது கவலை வேண்டாம். எம்பெருமான் கைவிட மாட்டான்'' என்றார் தேசிகன்.

**- தொடரும்...**



# பூஜையும் பலகையும்!

*பூஜை முதலான வைபவங்களின்போது பலகையில் அமர்ந்து பூஜிக்கலாம்.*

*அப்படிப் பலகையில் உட்காரும்போது கால்கள் தரையில் படலாமா என்று சிலருக்குச் சந்தேகம் எழலாம். கால்கள் தரையில் படலாம். பலகையில் கால் இருக்க வேண்டும் என்பதில்லை. பூமியோடு தொடர்பு வேண்டும். அதேநேரம், நம்மிடம் சேமிக்கும் தவம் குறையக் கூடாது.*

*பலகையில் உட்காரும்போது சேமித்த வலிமை பூமியில் இறங்காது. அதேநேரம் கால் பூமியில் இருப்பதால் அதன் தொடர்பும் கிடைத்துவிடும். இருக்கை திடமாகவும், சுகமாகவும் அமைய இந்த முறை சிறப்பாக இருக்கும்.*

*செய்யும் காரியத்தில் ஈடுபாடு சிதறாமல் இருக்க பலகை அவசியம். பண்டைய காலத்தில் ஆமை வடிவில் பலகை அமைந்திருக்கும். கால்களையும் சேர்த்து வைக்கும்படியான அகலம் அதில் தென்படாது.கலியுகத்தில் நன்மைகள் பெற...*

*கடுமையான தியானத்தால் கிருத யுகத்திலும், யாகங்களால் திரேதா யுகத்திலும், பூக்கள் கொண்டு செய்த விரிவான பூஜைகளால் துவாபர யுகத்திலும் கிடைத்த அதே பலன், கலி யுகத்தில் இறைவனின் திரு நாமத்தை உச்சரித்த மாத்திரத்திலேயே கிடைக்கும்.*

*நாம் யாருக்கு உதவினாலும் அது இறைவனுக்கு செய்யப்படும் உதவி என்ற மனோபாவம் வேண்டும்.*

*செயல்களில் பிரதிபலன் எதிர்பார்க்காத எண்ணம் வேண்டும். பொறுமையும், விட்டுக் கொடுக்கும் மனப் பான்மையும் இல்லறத்தாருக்குத் தேவை.*

*இந்த பூமியில் நாம் நிலையாக இருப்போம் என்று எண்ணித் தவறுகளைச் செய்யக் கூடாது. நல்லதைச் செய்வதில் சோம்பல் கூடாது. அகங்காரம் அணுவளவும் கூடாது.*

*இறைவனைப் பற்றிக் கேட்பது, இறை மகிமை யைப் பாடுவது, இறையை நினைப்பது, திருவடி சேவை, இறை வழிபாடு ஆகியவற்றோடு, ஆத்மாவை இறைவனுக்கே சமர்ப்பணம் செய்வதால், நமக்கு நன்மைகள் உண்டாகும்.*

**- சி.சரஸ்வதி, கடலூர்**

# ரங்க ராஜ்ஜியம் - 77 06-04-2021

இந்திரா சௌந்தர்ராஜன்




திருவரங்க சரிதம்

*`அருள் தரும் ஆரண தேசிகனே எங்கள் தூப்புல் தேவே*
*வருகவிதார்க்கிக சிங்கமே வாதியர் வாழ்வறுத்தாய்*
*இருகையும் கூப்பி உரைக்கும் இவ்விண்ணப்பம் ஒன்று கேளாய்*
*உருவ எனக்கருளாய் என்றும் உள்ளம் உன் தொண்டரையே!*

**- ஸ்ரீநயினாச்சாரியார்'**

**காஞ்சி வரதனை வணங்கிவிட்டு, சீடர்கள் தொடர தனது பல்லக்கில் பயணித்து இல்லம் வந்து சேர்ந்தார் வேதாந்த தேசிகர். சீடர்கள் சோர்வுடன் அவரைப் பார்த்தனர்.**

**``உங்கள் பார்வை எனக்குப் புரிகிறது கவலை வேண்டாம். எம்பெருமான் கைவிட மாட்டான்'' என்றார் தேசிகன்.**

**``சுவாமி! தங்களிடம் ஒரு கேள்வி'' என்றான் ஒருவன்.**



``கேள்..."

``எம்பெருமான் கருணைக்குப் பெரிதும் ஆளானவர் நீங்கள். அந்நியர்களின் படையெடுப்பு ஏன் நிகழ்கிறது? எம்பெருமான் ஒருபுறம் நம்மைப் படைத்து விட்டு, மறுபுறத்தில் ஏன் இப்படி எதிரிகளையும் படைக்கவேண்டும். நாம் ஏன் ஏன் அவர்களிடம் போராட வேண்டும்? இந்த உலகமே வைணவ மயமாய் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?"

தேசிகன் புன்னகைத்தபடி கூறினார்...

``இப்படிப்பட்ட கேள்வியை, இந்த உலகில் பல இடங்களில் பலவிதங்களில் நாம் கேட்கலாம். பூவைப் படைத்தவன் ஏன் முள்ளைப் படைக்க வேண்டும், இனிப்பைப் படைத்தவன் ஏன் கசப்பைப் படைக்க வேண்டும்... இப்படி நாம் பல கேள்வி களைக் கேட்டுக்கொண்டே போகலாம்.

ஒரு நல்லதின் அருமை அல்லது அதன் தன்மை, தீயது என்று ஒன்று இருந்தால்தான் தெரியவரும். காரணம் இல்லாமல் இந்த மண்ணில் ஒரு காரியமும் இல்லை என்பதை மறந்துவிடாதீர்கள்."

``சுவாமி! தங்கள் பதில் புரிவைத் தருகிறது. இதெல்லாமே நம் போன்ற மாந்தர்களுக்குப் பொருந்தும். ஆனால், இப்போது சோதனை எம்பெருமானுக்கே அல்லவா வந்துள்ளது.

ஆலயத்தை அழிப்பதே மிலேச்சர்கள் நோக்கு என்று அறிகிறோம். வடக்கில் அவர்கள் பல

ஆலயங்களை நிர்மூலமாக்கிவிட்டதாயும் அறிகிறோம். அப்படியிருக்க உங்கள் கருத்து எம்பெருமானுக்கு எப்படி பொருந்தும்?"

``கவலைவேண்டாம். அவன் அழிவற்றவன். அவனை அழிக்க எவராலும் எதனாலும் முடியாது. இதுவோர் ஆன்ம சோதனைக்கான காலம். நாம் எதை உயிராகக் கருதுகிறோமோ, அதை உயிரைக் கொடுத்தும் காக்கிறோமா என்பதே கேள்வி. அவ்வாறு காத்திடவும், அதற்கான வழியை காட்டவும் அவனே ஆசார்ய புருஷர்களை அனுப்பித் தருவான்."

``தங்களை நாங்கள் எங்கள் ஆசார்யராகவே கருதுகிறோம். இம்மட்டில் தங்கள் கருத்து?"

``தைரியமாக இருங்கள். எம்பெருமானை எண்ணியபடியே இருங்கள். இப்போது நாம் புரியும் பக்தி என்பது, மன உறுதி எனும் வடிவுக்கு மாறிவிட்டது; மாறவும் வேண்டும்."

இங்ஙனம் ஸ்ரீவேதாந்த தேசிகர் கூறிய நேரத்தில், கோயில் ஸ்தானிகர் வேக வேகமாக வந்து வணங்கி நின்றார்.

``ஓ... ஸ்தானிகரா. ஏதும் செய்தி உண்டா?"

``ஆம் சுவாமி. நான் ஒரு கனவு கண்டேன்.

``அது இயற்கைதானே?"

``கனவுகள் வருவது இயற்கையே. ஆனால் சில கனவுகள் எண்ணக்கசிவாக இல்லாமல், இறைமொழியாகவே அல்லவா உள்ளன!"

``அப்படி எதை உணர்ந்தீர்?"

``நம் ஆலயத்துத் திருக்குளமான அனந்த சரசுக்குள் எம்பெருமான் இறங்கி மூழ்கி மறைந்து சென்றது போல் கண்டேன்."

இதைக் கேட்ட தேசிகன், ஆழ்ந்த சிந்தனை யுடன் ``அற்புதம்" என்றார்.

ஸ்தானிகருக்குப் புரியவில்லை. வேதாந்த தேசிகர் தொடர்ந்தார்...

``அந்தத் திருக்குளம் எம்பெருமான் உறங்கிடும் திருக்குளம் என்றாகிறது. இனி அதில் துளியும் அசுத்தம் கூடாது. காலத்தால் அந்தக் குளம் பெரும் பெயர் பெறப் போகிறது என்று என் உள்ளுணர்வு கூறுகிறது."

இவ்வாறு ஸ்ரீவேதாந்த தேசிகர் கூறிய வேளையில், கையில் ஒரு கிளி மற்றும் ஒரு புறாவுடன் வந்த விஜயாபதி என்ற தூதுவன் அவரை வணங்கினான்.

``மகா மகா வந்தனம்'' என்றபடி, எண்சாண் உடம்பையும் ஸ்ரீதேசிகரின் எதிரில் கிடத்தி அவரின் கால்களில் விழுந்து வணங்கினான் விஜயாபதி.

``எழுந்திரு விஜயாபதி. நலமாக இருக்கிறாயா?''




விஜயாபதி பதில்பேசாது மௌனம் காத்தான்.

“புரிகிறது... ஏதாவது பிரச்னையா? இல்லை, உனக்கு ஏதேனும் உடல் உபாதையா?''

``பிரச்னை, உபாதை இரண்டும்தான். ஆனால் எனக்கல்ல; நம் நாட்டுக்கு.''

``நானும் அறிவேன். கவலை வேண்டாம். காலத்தால் எல்லாம் சரியாகும்.''

``இம்முறை அப்படித் தோன்றவில்லை. நமக்கெல்லாம் காலமே இல்லாமல் போய், நம் நாடே காலமாகிவிடுமோ என அஞ்சுகிறது என் மனது...''

``அப்படியானால், உனக்கு எம்பெருமான்மீது நம்பிக்கை இல்லை என்றாகிறது. இப்போது, பெரும் சோதனை எம்பெருமானுக்குத்தான். மிலேச்சர்களின் குறியும் நாமல்ல; நம் ஆலயங்களே. அதை நாம் முறியடிக்க முனைவோம். நம் பக்தியால் நம் ஆலயங்களை நாம் காத்திடுவோம்.''

``மிலேச்சப் படை மிகப் பெரியதாய் உள்ளது. குறிப்பாக இப்போது பெரும் சோதனை பெரியக்கோயில் எனப்படும் திருவரங்கம் திருத்தலத்துக்குதான்.''

``உனக்கு ஏதும் தகவல் வந்ததா?"

``ஆம்! இருவிதங்களில் எனக்குத் தகவல் வந்தது. *ஸ்ரீ*பிள்ளைலோகாசார்யர் சீடர்களில் சிலர் மூலமாகவும், ராஜாங்க முத்ராதிகாரியின் மூலமாகவும் எனக்குத் தகவல் வந்தது. *ஸ்ரீ*பிள்ளை லோகாசாரியர், அவரின் சகோதரர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இருவரும்தான் இப்போது திருவரங்கத்தில் எம்பெருமானுக்குப் பெரும் காவலாக இருக்கிறார்கள்."

``*ஸ்ரீ*பிள்ளைலோகாசார்யர் இருக்கிறாரே... அது போதாதா?"

``என்ன சுவாமி... எதைவைத்து அவரை வியக்கிறீர்கள்... அவர் போதுமென்று கருதுகிறீர்கள்? அவர் முதிர்ந்த வைணவர். சதம் கண்டுவிட்டவர்; இளைஞரல்ல."

``அறிவேன். நீ அவரின் உடற்கூற்றைப் பார்க்கிறாய். நானோ அவரின் ஆத்மக் கூற்றினைப் பார்க்கிறேன்."

``இரண்டுக்கும் என்ன வேற்றுமை சுவாமி?"

``உடலானது நம் தாய் - தந்தையரின் மரபணுக்களின் கூட்டு. இந்த மண்ணில் இருந்து பெறப்பட்டு மண்ணிலேயே சேர்ந்துவிடும் வஸ்து. ஆத்மா அப்படியல்ல. அது ஒளிப் புனல்; ஒலிப் புனலும் கூட!"

``புரியும்படி கூறுங்களேன்..."

``நம் மனம் ஒலி வடிவானதுதானே?"

``ஆம்!"

``வேத மந்திரங்களும் ஒலி வடிவானவை தானே?"

``ஆமாம்."

``எப்படி வேதங்கள் அழியாததவையோ, அப்படியே நம் மனத்தின் ஒலி வடிவமும் அழியாதது. அது உடலைத் துறந்த நிலையில், அடுத்தடுத்த கட்டங்களைக் கர்மாவுக்கு ஏற்ப காண்கிறது."

``அவ்வகையில், *ஸ்ரீ*பிள்ளைலோகாசார்யரின் ஒலிப் புனலாகிய ஆன்மா எதைச் சார்ந்தது?"

``அது அழிவற்றது. ஒன்றை நன்றாகப் புரிந்து கொள். இங்குள்ள காஞ்சிப் பேரருளாளன் வேறு, பிள்ளை லோகாச்சாரியார் வேறில்லை. வரதனின் மானுட சொரூபமே அவர்!"

``அப்படியானால், இந்த வரதன் அங்கே அரங்கனைத் துதித்துக்கொண்டிருக்கிறானா?''

``அழகாகச் சொன்னாய். `துதித்து' என்ப துடன் `காத்து' என்றும் சேர்த்துக்கொள்.''

``எனில், இங்கே வரதனுக்கு ஆபத்து இல்லையா?''

``எங்கும் அவனுக்கு ஆபத்து என்பதே கிடையாது. அவனே ஆபத்சகாயன்!''

``சுவாமி! பல கோயில்களில் மூர்த்தங்களை உடைத்துச் சின்னாபின்னமாக்கிவிட்டார்கள். இதை ஆபத்து என்று கூறாமல், என்னவென்று கூறுவது?''

``நீ சொல்வது புரிகிறது. வணக்கத்திற்குரிய மூர்த்திகளை வெறும் கல்லாகப் பார்க்கும் போது, அது அதன் தன்மையைத்தான் காட்டும். கல்லைக் கடந்து அதனுள் ஆவிர்பவிக்கும் தெய்விகத்தைப் பார்க்கும்போதுதான், அது அற்புதங்களைச் சாதிக்கும்.''

``அப்படியானால், உடைந்துபோன இடங் களில், அவற்றைக் கல்லாக மட்டுமே கருதிய வர்கள்தான் இருந்தனரா?''

``அப்படித்தான் பொருள் கொள்ள வேண்டும்.''

``எனில், மூர்த்தங்கள் உடைவதும் உடையாத தும் நம் கைகளிலா உள்ளது?''

``நம் பக்தியின் கைகளில் என்று சொல்...''

``பக்தி இல்லாமலா வழிபாடுகள் நடை பெறுகின்றன?''

``விஜயாபதி! பேசியபடியே இருப்பதால் பயன் இல்லை. ஒரு குழந்தை தெருவில் விளையாடுகிறது. அப்போது நாய் ஒன்று கடிக்க வருகிறது. நாம் என்ன செய்வோம்?''

``குழந்தையைத் தூக்கிக் கொள்வோம். நாயைத் துரத்துவோம்...''

``இப்போது நாம் செய்யவேண்டியதும் அதையே. குழந்தைக்கு எப்படி பாதுகாப்பு முக்கியமோ, அப்படியே நம் கோயில்களுக்கும் உள்ளிருக்கும் மூர்த்திகளுக்கும் நாம் பாதுகாப்பு அரணாக இருக்கவேண்டும்.''

``புரிகிறது சுவாமி. நம்மை இழந்தாவது நம் மூர்த்திகளை நாம் நிலைநிறுத்த வேண்டும். சரிதானே?''

``மிகவும் சரி. இந்தச் சோதனையில் வெல்ல அவனிடமே மன்றாடுவோம்!''

**- தொடரும்.**



உடுப்பி கிருஷ்ணர்

**மேற்கே திரும்பிய கண்ணன்!**

**க**ன்னட தேசத்தில் அவதரித்த மகான் கனகதாசர். இவர், நந்தனாரைப் போல திருக்குலத்தில் பிறந்து பக்தியால் உயர்ந்தவர்.

ஒருமுறை கனகதாசர் உடுப்பி கிருஷ்ணரை தரிசிக்கச் சென்றார். அக்கால வழக்கப்படி பூசாரிகள் தடுத்தனர். எனவே, கோயிலின் பின்புற வாயிலுக்குச் சென்ற கனகதாசர்,

*அங்கிருந்தே கண்ணை நினைத்து மனமுருகிப் பாட ஆரம்பித்தார்.*

*அவ்வளவுதான்... அவருக்கும் ஸ்ரீகிருஷ்ண விக்கிரகத்திற்கும் இடையே இருந்த சந்நிதிச் சுவரில் கீறல் விழுந்து பிளந்து, ஜன்னல் அளவுக்கு இடைவெளி தோன்றியது.*

*அதேநேரத்தில் கருவறையில் இருந்த ஸ்ரீகிருஷ்ணரும் கனகதாசரை நோக்கித் திரும்பி தரிசனம் அளித்தார்.*

*உடுப்பி கோயிலின் வாயிலில் 'கனகன கிண்டி' எனும் பெயரில் அந்த ஜன்னல் இன்றும் இருக்கிறது. உடுப்பி கிருஷ்ணரும் மேற்கு நோக்கியே அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார்!*

**- கே.மாதவன், வேலூர்**

# ரங்க ராஜ்ஜியம் - 78 20-04-21

[இந்திரா சௌந்தர்ராஜன்]




ரங்க ராஜ்ஜியம்

தேசிகர் தனது கிரகத்துக்குள் நுழைந்து ஆலோசித்தார். இஞ்சிச் சாறு மற்றும் கற்பூரவல்லித் துணுக்குகளுடன் ஒரு பாத்திரத்தில் பசுமோரைக் கொண்டு வந்து கொடுத்தால்

*தற்போதைய நிலைமை, இறைவன் நமக்கு வைத்திருக்கும் சோதனை. இதில் வெல்ல அவனிடமே மன்றாடுவோம். அவனைக் காத்திட அவனிடமே அருளை வேண்டுவோம். மஹா சுதர்சனம் நமக்குத் துணையாக நின்று வழிகாட்டும்.''*

தேசத்தின் நடப்புச் சூழலில் இறையருள் துணையிருக்கும் என்று வேதாந்த தேசிகர் கூறி முடிக்க, விஜயாபதி அந்தத் தகவலைக் கூறினான்.

``சுவாமி! தாங்கள் திருவரங்கத்துக்கு வந்து துணை நிற்கவேண்டும் என்பது ஸ்ரீபிள்ளைலோகாசார்யரின் விருப்பம்."

``அதை நானும் அறிவேன். நான் திருவரங்கம் செல்வதற்குரிய ஏற்பாடு களை நீயே செய். நான் அங்கு வரப் போகும் தகவலையும் சேர்த்துவிடு."

``எனில், இங்கே காஞ்சிக்கு..."

``இப்போதைக்குத் திருவரங்கத்துக்கே சிக்கல். எங்கு நோயின் தாக்கம் அதிகமோ,

அங்கேதானே மருத்துவன் முதலில் செல்லவேண்டும்?"

``நல்லது. நான் இப்போதே தகவல் அனுப்பிவிடுகிறேன்"

என்ற விஜயாபதி அங்கிருந்து நகர்ந்தான்.

தேசிகர் தனது கிரகத்துக்குள் நுழைந்து ஆலோசித்தார். இஞ்சிச் சாறு மற்றும் கற்பூரவல்லித் துணுக்குகளுடன் ஒரு பாத்திரத்தில் பசுமோரைக் கொண்டு வந்து கொடுத்தால், அவரின் தர்மபத்தினியான திருமங்கை. அப்போதைக்கு அந்தத் தாகசாந்தி பரம சுகமாக இருந்தது. மோர் பாத்திரத்தைத் திரும்பத் தருகையில், திருமங்கையின் முகத்தில் தொனித்த வாட்டத்தைக் கவனித்தார் வேதாந்ததேசிகர்.

``என்ன மங்கை... ஏன் இந்த வாட்டம்?"

``நீங்கள் பேசியதைக் கேட்டபடி இருந்தேன். திருவரங்கம் போகப் போவதாக கூறினீர்களே..."

``ஆம்! சென்றாக வேண்டும். பாவம் அங்கே பிள்ளை லோகாசார்யர் தனித்த மனிதராய்ப் போராடிக்கொண்டிருக்கிறார்."

``நீங்கள் சென்றுவிட்டால் நானும் இங்கே தனித்துப் போராட வேண்டி வருமே... யோசித்தீர்களா?"

கணவரை மடக்கிவிட்டதுபோல கேட்டாள் திருமங்கை.

``மங்கை! இக்கட்டான இந்தக் காலகட்டத்தில் நீ இப்படியெல்லாம் யோசிக்கக் கூடாது. யாத்திரை நோக்கம் எனில் உன்னையும் உடன் அழைத்துச் செல்வேன். இப்போதைக்கு என் பயணம் காலத்தின் கட்டாயம். முக்கியக் கடமையும்கூட."

``புரிகிறது. நான் என் வருத்தத்தை ஜீரணிப்பேன். நீங்கள் நல்லபடியாக சென்று வாருங்கள்."

``உடனே புரிந்துகொண்டு வழிவிட்டு விட் டாய். உன்னை மனைவியாக அடைந்ததற்குப் பெருமைப்படுகிறேன்"- என்ற தேசிகர் தன் பயணத்தையும் அன்றே தொடங்கினார்.

திருவரங்கம் -கொள்ளிடக்கரை!

காவிரியின் கிளையான கொள்ளிடக்கரை முழுக்க மணல்வெளி மேல் சுல்தானிய படை வீரர்களின் புரவிகள் திரண்டு நின்றன. சிலர், புரவிகளை ஆற்றில் இறக்கிவிட்டு அவற்றை நீந்தச் செய்தும் புரவிகளின் மீது அமர்ந்து எக்காளமிட்டுக் கொண்டும் இருந்தனர்.

நித்திய கடமையின் நிமித்தம் ஆற்றுக்கு நீராட வந்த பிள்ளை லோகாசார்யர் காட்சிகளைக் கண்டு மிரண்டு போனார். புனிதமான ஆறு, குதிரைக் கொட்டாரமாகி, குதிரைகளின் சாண வாசனையோடு கிடந்தது. பிள்ளை லோகாசார்யர் குளிக்காமல் திரும்பி நடக்கத் தொடங்கினார். எதிரில் சிலர், சட்டிப்பானை தவலைகளுடன் வண்டி கட்டிக்கொண்டு வந்தனர். ஊரைவிட்டு வெளியேறிவிடுவது என்பது அவர்களின் நோக்கமாக இருந்தது. பிள்ளை லோகாசார்யரைக் கண்டதும் அந்த வண்டி நின்றது. வண்டியில் இருந்தவர்கள், தொடர்ந்து வந்தவர்களின் கண்களில் நீர்.

``என்ன ஆயிற்று... எங்கே போகிறீர்கள்?"

``அது தெரியாமல்தான் போய்க் கொண்டிருக் கிறோம்."

``புரிகிறது! இப்படி ஊரைவிட்டுப் போவதால் பிரச்னை தீர்ந்துவிடுமா? எதிர்த்துப் போராட வேண்டாமா?"



``ஏன், நாங்கள் உயிருடன் இருப்பது உங்களுக் குப் பிடிக்கவில்லையா?"

இந்தக் கேள்வி பிள்ளை லோகாசார்யரின் நெஞ்சில் அறைந்தது.

``மிலேச்சர்கள் ஊருக்குள் புகுந்துவிட்டனர். உயிர் பிழைக்க வேண்டும் என்றால் நம்நெறியை கைவிட்டு, அவர்களின் நெறியைப் பின்பற்ற வேண்டும் என்கின்றனர். எனவேதான் எங்கள் வழியே செல்கிறோம்..." அவர்கள் கூறிவிட்டு திரும்ப நடந்தனர். பிள்ளை லோகாசார்யர் கண்கள் கலங்க, அந்த இடத்திலிருந்தபடியே வடக்குக் கோபுரத்தைப் பார்த்தார்.

``அரங்கா! இது என்ன சோதனை? மனிதர்களால் மனிதர்கள் அழியலாமா... அதுவும் இந்த அருள் பூமியில் அவ்வாறு நடக்கலாமா? இவ்வாறெல்லாம் நடக்கும் என்றுதான் நீ உறக்கத்தில் கிடப்பதுபோல் கிடக்கிறாயோ?'' என்று கசிந்து உருகியவர், ஆலயம் நோக்கி நடந்தார். அரங்கனின் சந்நிதிக்குச் செல்லாமல் தாயாரின் சந்நிதிக்குச் சென்றார்.

சீடர் ஒருவர் கேட்டார்: ``சுவாமி! எப்போதும் எம்பெருமானை அல்லவா முதலில் தரிசிப்பீர்கள்?''

``ஆம்! ஆனால் இன்று நான் தாயாரிடம்தான் மன்றாடப் போகிறேன். தாயுள்ளம் மிகக் கருணையானது. எம்பெருமானிடம் வேகமாய் எடுத்துச் சொல்லி நல்வழி காட்ட வழி செய்வாள் அரங்கநாயகி...''

பிள்ளை லோகாசார்யர் இவ்வாறு சொல்லிக் கொண்டிருக்கும்போதே, வேதாந்த தேசிகர் புறப்பட்டு வந்து கொண்டிருப்பதாக செய்தி வந்து சேர்ந்தது.

பிள்ளை லோகாசார்யர் மனம் மகிழ்ந்தார். ``அற்புதம்! அந்தத் திருவேங்கடமுடையானே நேரில் வருவதாக உணர்கிறேன்'' என்றார்.

``அப்படியானால்..?''

``ஆம்! தேசிகர் திருவேங்கடமுடையானின் திருவாராதனை மணியான கண்டத்தின் அம்சம். ஹயக்ரீவனின் ஞான விலாசம். கருடனால் மந்திர பூர்வ பலம் பெற்ற பெரும் மந்திரர்.''

``அவரால் பகைவர்களை ஒடுக்க முடியுமா?''

``நிச்சயமாக ஏதாவது செய்வார். நான் தாயாரை பிரார்த்திக்கும் முன்பே யந்த்ர, மந்த்ர, தந்த்ர ஆகிய மூன்றின் கலவையான வேதாந்த தேசிகர் வரப் போவதாக கிடைத்திருக்கும் தகவல் என்னுள் நம்பிக்கையை உருவாக்கிவிட்டது.''

``ஆனால் ஊரில் எல்லோரும் நம்பிக்கையை இழந்து வருகின்றனர்.''

``கலியுகத்தில் சாமானியர்கள் இவ்வண்ணமே இருப்பர். எவரையும் குறை கூறக்கூடாது. இந்தச் சூழலுக்கு நடுவில்தான் நாம் நம் காரியத்தைச் சாதிக்க வேண்டும்''

``என்ன செய்யப் போகிறோம்?''

``நான் சில திட்டங்கள் வைத்திருக்கிறேன்'' என்ற பிள்ளை லோகாசார்யர், ஒரு திட்டத்தை விவரிக்கத் தொடங்கினார்!

- தொடரும்.

# புத்தரின் வாழ்வில்...



புத்தர்

புத்தர் தினமும் ஒரு கிராமத்தின் வழியாகப் பயணிப்பார். அவரை வெறுத்த அந்த கிராம மக்கள் தினமும் அவரை அடிப்பார்கள். அனைத்தையும் வாங்கிக்கொண்டு புத்தர் புன்னகையோடு கடந்து செல்வார்.

அன்றும் அப்படித்தான் நடந்தது. எல்லோரும் அடித்து முடித்தும் புத்தர் அங்கிருந்து நகரவில்லை. ``ஏன் இன்னும் இங்கேயே நிற்கிறீர்?'' என்று கேட்டனர் மக்கள்.

அதற்குப் புத்தர், ``வழக்கமாக என்னை அடிக்கும் உங்களில் ஒருவர் இன்று என்னை அடிக்கவில்லை. அவரும் அடித்துவிட்டால் நான் கிளம்பி விடுவேன். ஒருவேளை என்னை அடிக்காததால் இன்று அவருக்கு வருத்தம் வந்துவிடலாம்'' என்றார்.

மக்கள் தங்களுக்குள் விசாரித்த போது, அன்று ஒருவர் வரவில்லை என்பதை அறிந்தனர். அந்தக் கணம் அவர்களுக்குள் வெட்கம் பிறந்தது. அடித்தவர்களையும் மன்னித்து ஏற்கும் புத்தரின் ஞானத்தைக் கண்டு கிராம மக்கள் நெகிழ்ந்தனர்; அன்றே புத்தரின் பாதங்களைச் சரணடைந்தனர்.

நல்ல நோக்கத்துக்காக நாம் படும் துன்பங்கள் எதுவும் வீணாகாது என்பதற்குப் புத்தரின் வாழ்வில் நிகழ்ந்த இந்த சம்பவம் உதாரணம்.

- ஆர்.கீதா, சென்னை-44

# ரங்க ராஜ்ஜியம் - 79 04-05-2021

இந்திரா சௌந்தர்ராஜன்




**மனம் இருந்தால் மார்க்கம் உண்டு. இப்போது நாம் இப்படிச் சிந்திக்கவும் அவனே காரணம்.**

`வணக்கம் ஒடுக்கம் வழக்கம்

ஒழுக்கம் இரக்கம் சேரும்

இணக்கம் உறக்கம் இழுக்கும்

அழுக்கும் இகந்து நிற்கும்

குணக்குலம் ஓங்கும்

இராமாநுசன் குணம் கூறும் தூப்புல்

அணுக்கனைப் பிள்ளைதனை

அரணாக அடைபவர்க்கே'

- ஸ்ரீநயினாச்சாரியார்.

``அரங்கன் திருச்சந்நிதிக்கு முன் சுவர் எழுப்பி சந்நிதியை மறைத்துவிட வேண்டும்'' என்று ஸ்ரீலோகாசார்யர் தன்னுடைய திட்டங் களில் ஒன்றை முன்வைத்தார்.

``நல்ல யோசனை'' என்றனர் சிலர்.

ஆனால் வேறு சிலர், முகத்தில் வாட்டத்தை எதிரொலித்தனர்.

``ஏன் இந்த முக வாட்டம்?''

``திருச்சந்நிதியைச் சுவர் எழுப்பி மறைப்பதா? நினைக்கவே நெஞ்சம் கலங்குகிறது'' என்றார் ஒருவர்.

``எனக்கு உள்ளம் பற்றி எரிகிறது...'' என்றார் இன்னொருவர்.

பிள்ளை லோகாசார்யர் தொடர்ந்தார்.

``எம்பெருமானின் திருமேனியை நாம் இங்கிருந்து கொண்டு சென்றுவிடலாம். நித்திய ஆராதனைகளுக்கு ஒரு குந்தகமும் வராதபடி நாம் நமக்குள் வழிபாடுகளை தொடர்வோம்.''

அவர் கூறியதைக் கேட்டு சிலர் வாய்விட்டு அழத் தொடங்கிவிட்டனர்.

``அழாதீர்கள்! அழுவது கோழைகளின் செயல். நாம் இப்போது விவேகமாக நடந்தாக வேண்டும்.''

``அழாமல் இருக்க முடியவில்லை ஸ்வாமி! இதயம் என்று ஒன்று இருக்கிறதே... இது எப்பேர்ப்பட்ட சந்நிதி... இந்த மூர்த்திதான் எவ்வளவு கீர்த்தி படைத்தவர்? பிரம்மனே ஆராதித்த மூர்த்தியைக் கொண்ட இந்தச் சந்நிதியையா சுவர் எழுப்பி மூடுவது?

`` எம்பெருமானின் திருமேனியையா நாம் தூக்கிக்கொண்டு ஓடுவது. அதற்கு இங்கேயே நின்று, எதிரியை எதிர்த்துப் போராடி சாகலாமே?''

``போராடி வெல்ல முடியும் என்று உங்களால் சொல்ல முடியவில்லை பாருங்கள்...''

``என்ன செய்வது? பகைவர்கள் குத்துவெட்டுக்கும், குருதி பார்க்கவும் அஞ்சாத கல்நெஞ்சக் காரர்கள். நாம் அப்படி வளர வில்லையே? எவருக்கேனும் காயம்பட்டு ரத்தம் வரக் கண்டாலே மயங்கி விழுந்துவிடுவோமே..?''

``அப்படிப்பட்ட நாம் ஆயுதங்களை நம்ப முடியாதல்லவா?''

``நிச்சயமாக!''

``அதனால்தான் அறிவுடைமையோடு இப்படி ஒரு முடிவு எடுத்தேன். சில சுவர்கள் காலத்துக்குமானவை. ஆனால், நாம் அமைக்கப் போகும் சுவர் தற்காலிகமானது. திருச் சந்நிதிக் குள் மிலேச்சனின் மூச்சுக் காற்று படுவதுகூட இழுக்கு. எனவே இதைத் தவிர வேறு வழியில்லை.''

``புரிகிறது ஸ்வாமி. அதேநேரம் எம்பிரானின் மூர்த்தத்தை நாம் வெளியே எடுத்துச் சென்று எப்படி ஆராதிக்க முடியும். சூழல் இடம் கொடுக்குமா?''

``மனம் இருந்தால் மார்க்கம் உண்டு. இப்போது நாம் இப்படிச் சிந்திக்கவும் அவனே காரணம். எதையும் நாம் நம் உழைப்பால் செய்வதாகக் கருதவேண்டாம்.

அவன் உள்ளிருந்து ஆட்டி வக்கிறான். நாம் ஆடுகிறோம். அதுவே உண்மை. ஆகவே, இந்த நொடி எது இலகுவோ அதைச் செய்வோம். மற்றவை எல்லாமே நடக்க நடக்க நாரணன் செயல்களே!''

``ஹூம்... இதுவா நாரணன் செயல்? மிலேச்சர்கள் மனத்தில் புகுந்து அவர்களையும் தன்னை வணங்கும்படிச் செய்தால் அதுதான் நாரணன் செயல். குறைந்தபட்சம் நரசிம்மம் போல் தோன்றி, ஒரு செருமி செருமி அவர்களை ஓடச் செய்தால், அது நாரணன் செயல். ஆனால், இங்கே நாரணனே அல்லவா சிக்கலில் சிக்கியுள்ளான்?''

``துளியும் செறிவில்லாத பாமரத்தனமான பேச்சு இந்தப் பேச்சு. இப்படிச் சிந்திப்பதாக இருந்தால், இத்தனை கேள்விகளையே கேட்கத் தேவையில்லையே.

மிலேச்சனை படைக்காமலேயே விட்டிருந் தால், இவ்வளவு பாடுகள் இல்லையே என்று ஒரு கேள்விக்குள் முடித்துவிடலாம் அல்லவா?

ஆக, நான் தொடக்கத்திலேயே சொன்னது போல இது ஒரு சோதனை. இது வேதனையாவ தும், சாதனையாவதும் நம் கைகளில்தான் உள்ளது. நம் புராணங்களைக் கவனித்தாலே தெரியும். அதில் தேவர்கள் மட்டுமல்ல அசுரர் களும் நிரம்ப இருப்பார்கள். அந்த அசுரர்கள் தேவர்களைப் பாடாய்ப் படுத்துவார்கள். இறுதியில் எம்பெருமான் வந்து நல்லோரைக் காத்து ரட்சிப்பான். தேவர்களைப் படைத்த எம்பெருமான், ஏன் அசுரர்களைப் படைத்து அவர்கள் மூலமாய்ப் பெரும் போராட்டங்களை உருவாக்க வேண்டும்?''

பிள்ளைலோகாசார்யர் இப்படிக் கேட்கவும், அங்குள்ள வைணவர்கள் பதில் கூறத் தெரியாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

``ஸ்வாமி! நாங்கள் உங்கள் அளவுவுக்குத் தெளிவில்லாதவர்கள். எங்களுக்குள் தோன்றும் எண்ணங்களை அப்படியே கொட்டி விடுகி றோம். பிழை இருப்பின் மன்னித்து எங்களை நெறிப்படுத்துங்கள். உங்கள் பதிலால்தான் நாங்கள் தெளிவுற வேண்டும்'' என்று ஒருவர் இதமாய்ப் பதில் கூறினார்.

``அப்படியாயின் நான் சொல்லப் போவதைக் கூர்மையாகக் கவனித்து உள்வாங்குங்கள். ஓர் ஆலயம் என்பது, நம் வாழ்வு போல ஒரு நூற்றாண்டுகள் மட்டும் கொண்டதன்று. அது காலகாலத்துக்குமானது. தான் அழியாது நின்று, அழிந்துவிடும் நமக்கு அழியாத முக்தி தருவதற்காக மண்ணில் உருவானது. இதுவே இறைச் சித்தம்!

ஆகவே, காலகாலத்துக்குமான ஒன்றின் மதிப்பு, அதன் சொத்துகளால் ஏற்படுவதல்ல; அது எதிர் கொள்ளும் சகலத்தாலும் ஆனது. ஒருபுறம் புயல், மழை என்று இயற்கையின் சீற்றங்களை எதிர்கொண்டால், மறுபுறம் கொலை-கொள்ளை, சிதைவு என்று செயற்கையான இடப்பாடுகளையும் எதிர்கொள்கிறது.

இந்தத் திருவரங்க ஆலயம் காவிரியால் பலமுறை மூழ்கடிக்கப்பட்டு, பின்னர் நம் போன்றவர்களால் மீட்கப்பட்டுள்ளது. அதுபோல, இப்போது அது மிலேச்சர்களால் வரும் ஆபத்தையும் எதிர்கொள் ளும். இவையெல்லாம் வரலாறாக நின்று பிற் காலத்தில் சிந்திக்கப்படும்.



நாம் எல்லோருமே ஒருநாள் முதுமை கண்டு மரணிக்கவே போகிறோம். அந்த மரணம் எந்த நிலையிலும் காலத்தால் சிந்திக்கப்படாது. ஆனால் இப்போதைய இச்சோதனையின் பொருட்டு நமக்கு ஏதாவது நிகழ்ந்தாலும், அது வரலாற்றில் சிந்திக்கப்படும். அந்தச் சிந்தனை வருங் காலத்த வருக்கு ஒரு பாடமாகவும் அமையும்.

ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு இந்த ஆலய வெளிக்குள் வரும் மனிதர்கள், இதை வெறும் கல் மண்ணாகப் பார்க்கமாட்டார்கள். ஒரு பேரழிவைச் சந்தித்து மீண்ட சக்திமிக்க ஒரு கலைக்களஞ்சிய மாகவும் அருட்கோட்டமாகவுமே இதைக் காண்பர்.

மிலேச்சனே இல்லை; ஆபத்தும் இல்லை என்றால், நான் சொன்ன பாடங்கள் இல்லை; பதிவுகள் இல்லை. சுருக்கமாக கூறுவதனால் காரணம் இல்லாமல் காரியம் இல்லை. எனவே, நாம் இதை ஓர் அரிய வாய்ப்பாகக் கருதுவதே சரியான செயல்.

வரட்டும் மிலேச்சன்! சந்திப்போம் அவனை. அதேநேரம் நம் கலாசாரத்தை அவன் வலிமைக்குப் பலிகொடுத்து விடாதபடி தந்திரமாய்ச் செயல்படுவோம். காலத்தால் நின்று காட்டுவோம். வரலாறு நம்மை தியாகிகள் என்றும் அவர்களை எதிரிகள் என்றும்தான் சொல்லும்.''

பிள்ளை லோகாசாரியரின் நெடிய விளக்கம் அனைவரையும் சற்று ஆற்றுப் படுத்தியது. மெள்ள ஒரு சகஜ நிலை உருவாகி, ஒவ்வொருவரும் அப்போதே மணல் செங்கல் சுண்ணாம்பு, விலாம்பழச்சாறு பூச்சாங்கொட்டை என்று சுவர் எழுப்பத் தேவையான வற்றைச் சேமிக்கத் தொடங்கினார்கள்!



காஞ்சியிலிருந்து வேதாந்த தேசிகன் திருவரங்கத்துக்குப் புறப்பட்டுவிட்டார். இரண்டு குதிரைகள் பூட்டிய ஒரு ரதம்தான் அவர் பயணிக்கும் வாகனம். கிருஷ்ணபாண்டன் என்பவனே அவரின் ரத சாரதி.

கிருஷ்ண பாண்டன் நைச்சியமான வைணவ தாசன். நெற்றியில் திருமண்காப்பு, தலையில் துணிப்பாகையுடன் கச்ச வேட்டி உடுத்தி, மார்பின் குறுக்கே வஸ்திரப்பூணூல் தரித்து, கையில் தோல் கச்சை தரித்துக்கொண்டு, அவன் ரதத்தை ஓட்டும் அழகைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம்.

ரதசாரதியாக இருப்பதால், புரவிகளின் குணத்தையும் அவற்றின் வகைகளையும் அறிந்தவன். அவற்றுக்கு எது பிடிக்கும், எது பிடிக்காது என்பதிலிருந்து அவற்றை ஆரோக் கியமாகப் பாதுகாப்பது வரையிலும் சகலமும் அறிந்தவன்.

அவன் நல்ல பலசாலியும்கூட. எச்சரிக்கை யாக காலில் காலணியை ஒட்டி கச்சணி ஒன்றில் கத்தியைச் செருகி வைத்திருப்பான். கத்தி வீசுவதிலும் வல்லவன்!

இந்தக் கிருஷ்ண பாண்டன் எச்சரிக்கையாக ரதத்தைச் செலுத்த, உள்ளே நாராயணத் தியானத்தில் இருந்தார் தேசிகன்.

நெடிய பயணத்தில் `எண்ணாயிரம்' என்ற பெயர் கொண்ட ஊர் எல்லைப்புறத்தில் வந்து நின்றது அவர்களின் ரதம்.

- தொடரும்...

## சாந்தாகாரம் புஜக சயனம்...

விஷ்ணு சகஸ்ரநாமத்தில் `சாந்தாகாரம் புஜக சயனம்...' எனத் தொடங்கும் வரிகள் நமக்கு உணர்த்துவது என்ன தெரியுமா?

பகவான் விஷ்ணுவினது சாந்தமான உருவம். அவர், புஜகம் அதாவது பாம்பின் மேல் சயனம் செய்வதால், புஜக சயனம்.

தொப்புளில் இருந்து தாமரை வந்திருக்கிறது, பத்மநாபம். தேவர்களுக்கெல்லாம் தலைவர் என்பதால் சுரேசம். அவர் வடிவமே இந்த பூமிதான் என்பதால் விஸ்வாகாரம். அவர் ஆகாயமாக இருப்பதால், வடிவம் இல்லாத ககன சத்ருசம்.

அவர் உருவம், மேகத்தின் வர்ணமான சாம்பல் நிறத்தில் இருக்கும். சுபத்தைக் கொடுக்கும் உடல் உறுப்புகளைக் கொண்டதால், சுபாங்கம். மகாலட்சுமிக்கு, காந்தன். தாமரைக் கண்கள் கொண்டவர் என்பதால் கமல நயனம்.

அவரை அடைவது எப்படி? யோகிகளின் இதயம் இருக்கிறதே, அதுபோல யோகாப்பியாசம் செய்ய வேண்டும். அவர்களின் தியானத்தில்தான் அவர் இருப்பார் என்பதால் யோகிஹ்ருத்யான கம்யம். இந்த உலகத்தில் நமக்கு இருக்கும் எத்தனையோ விதமான பயங்களை அழிப்பதால் பவபய ஹரம். இவ்வளவு மகிமைகள் கொண்டவரே, சர்வ லோகங்களுக்கும் நாதனான பகவான். அவரை வணங்கு.

- கே.ஆண்டாள், மதுரை-1

# ரங்க ராஜ்ஜியம் - 80

[இந்திரா சௌந்தர்ராஜன்]






**திருவரங்க சரிதம்**

*'அருள் தரு மாரண தேசிகனை*

*யெங்கள் தூப்புற்றேவே*

*வருகவி தார்க்கிக சிம்மமே வாதியர்*

*வாழ்வறுத்தா*

*இருகையுங் கூப்பி உரைக்குமிவ்*

*விண்ணப்பம் ஒன்று கேளா*

*யுருவ வெனக்கருளா எண்ணுமுள்ள*

*முன் தொண்டையே...'*

*- நயினாராச்சாரியார்*

நெடிய பயணத்தில் `எண்ணாயிரம்' என்ற பெயர் கொண்ட ஊரின் எல்லைப்புறத்தில் வந்து

நின்றது அவர்களின் ரதம். கிருஷ்ணபாண்டன் இறங்கவும், தேசிகன் திரைச்சிலையை விலக்கிப் பார்த்தார்.

``சாமி... நீங்க ஞாபகமா நிறுத்தச் சொன்ன எண்ணாயிரம்கற ஊர் வந்துடுச்சிங்க... இதுதான் ஊர் எல்லை'' என்றான் கிருஷ்ணபாண்டன்.

உடனே குனிந்து ஒரு சிட்டிகை மண்ணை எடுத்துத் தன் தலைமீது தூவிக்கொண்டு, கிருஷ்ணபாண்டனின் தலைப்பாகை மீதும் தூவினார் ஸ்ரீதேசிகன்.

பன்னிரு திருமண் காப்புடன், திவ்யமங்கள ரூபத்துடன் பச்சை மரகதக் கடுக்கன் காதுகளில் மின்னிட, கழுத்தில் துளசிமணி மாலைகள் மற்றும் பவித்ர மாலைகளுடன்... தோளில் பொறிக்கப்பட்ட சங்கு - சக்கர முத்திரைகள் பளிச்சென தெரியும் வண்ணம் நின்ற அவரைக் காண அப்போது ஒரு கூட்டம் கூடிவிட்டது.

அவ்வளவு பேர் நெற்றியிலும் திருமண் காப்பு. அவ்வளவு பேருமே வைணவ நெறியைப் பின்பற்றுபவர்கள் என்பது தெரிந்தது. அவர்களில் புண்டரீகாட்சன் என்பவர் முன்வந்து தேசிகனை வரவேற்கச் சித்தமானார்.

``வரவேண்டும்... வரவேண்டும்... ஸ்ரீஉபய வேதாந்த தேசிக ஸ்வாமிகளே, வரவேண்டும். தங்களின் திருப்பாதங்கள் இந்த மண்ணில் பட்டிட, நாங்கள் புண்ணியம் செய்திருக்க வேண்டும்'' என்றார் புண்டரீகாட்சன்.

``மிக்க மகிழ்ச்சி! தாங்கள் யாரென்று நான் அறியலாமா?''

``நான் ஒரு பரம வைணவன். ஸ்ரீராமாநுஜ மகாத்மாவால் ஆட்கொள்ளப் பட்ட குலத்தில் வந்தவன். என் பெயர் புண்டரீகாட்சன்.''

``அப்படியா? இந்த எண்ணாயிரம்தானே அவரது கருணை மற்றும் வாதப் பிரதிவாதத்துக்குக் கட்டியம் கூறிய ஊர்?''

``ஆம்! நீங்கள் வந்த அதே வழியில்தான் காஞ்சியிலிருந்து அவரும் வந்தார். திருவரங்கம் தான் அவருக்கும் இலக்கு. நாங்கள்... அதாவது எங்கள் பாட்டன்மார்கள் அப்போது இம்மண் ணில் சமணர்களாய் இருந்தோம். நாங்கள் ஒருவர் இருவர் அல்ல... எண்ணாயிரம் பேர் அப்படி இருந்தோம். எங்களை தனது விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தால் ஆட்கொண்டு, சமணச் சார்பு வாதங்களையும் தவிடுபொடியாக்கிக் காட்டினார் ராமாநுஜர்.''

``உண்மை. அந்த வரலாற்றை நானும் அறிவேன். வாதப்பிரதிவாதத்தில் தோற்றால் அவ்வளவு பேரும் கழுவில் ஏறிட வேண்டும். அதற்கேற்ப, தோற்றுப்போன உங்கள் முன்னோர்களும் கழுவில் ஏறிட தயாராகி விட்டனர். ஆனால் ராமாநுஜ கருணாகரர் அதைத் தடுத்து உங்களையெல்லாம் ஆட்கொண்டார்...''

``கழுவிலேற்றி அபானம் பிளந்து உயிர் போகச் செய்வதைப் பெரும் பாவமாகக் கருதியவர்,

எங்களுக்கெல்லாம் யாக்கை தந்து, வைணவத்தைப் பின்பற்றி கழுவாய் தேடிக்கொள்ளச் செய்தார். தானே ஆசார்யனாக நின்று பூணூல் தரிக்கச் செய்து, எங்களுக்கு ரகஸ்யார்த்த மந்திர உபதேசத்தையும் செய்வித்தார்.

அன்று அப்படித் தழுவியவர்கள் வரிசையில் நான் இன்று நான்காம் தலைமுறையினன். மௌரியப் பேரரசனான சந்திரகுப்த மௌரியரின் ஆட்சியில், வடக்கில் வாழ்ந்த என் முன்னோர் இப்போது அஷ்டசகஸ்ரம் என்னும் பிரிவினராய் இங்கே அடையாளம் கொண்டி ருக்கிறோம். இது எங்களுக்கான சுருக்கமான வரலாறு" என்றார் புண்டரீகாட்சன்.

அந்த வரலாற்றைக் கேள்வியுற்ற நிலையில், நேரிலேயே கேட்கவும் பார்க்கவும் நேர்ந்த மகிழ்வுடன் “இம்மண் மீது நான் நிற்பதைப் பெருமையாகக் கருதுகிறேன்” என்றார் வேதாந்த தேசிகன்!

அவ்வாறு அவர் நெகிழ்ந்த நொடியில், ``தங்களின் யாத்திரை நோக்கை நாங்கள் அறிய லாமா?" என்று கேட்டார் புண்டரீகாட்சன்.

``திருவரங்கம் நோக்கி சென்றபடி இருக்கிறேன். வழியில் இத்திருமண்ணைத் தீண்டும் பாக்கியம் வாய்த்தது"

``அப்படியாயின் தங்கள் திருவடிகள் எங்கள் இல்லத்தில் படவேண்டும். தங்களுக்கு அமுது படைக்கும் பாக்கியத்தை எங்களுக்கு அருளவேண்டும்."

``மன்னிக்கவேண்டும். மிலேச்ச பயத்தால் திருவரங் கத்தில் மிக மோசமான நிலை. ஸ்ரீபிள்ளை லோகாசார்யர் என் வருகையை உத்தேசித்துக் காத்துக் கொண்டிருக்கிறார்."

``புரிகிறது... அதன் எதிரொலிகளை நாங்கள் இங்கும் உணர்கிறோம். தங்கள் விருப்பப்படியே தங்களின் பயணம் தொடரட்டும். அதேநேரம், எண்ணாயிர வருக்கும் யாக்கையை வழங்கிய ராமாநுஜரின் திருமண்பாடு என்னுமிடத்தைத் தாங்கள் கண்டு செல்ல வேண்டும்."

``அதற்கென்ன... இப்போதே வருகிறேன். அப்படியே இந்த க்ஷேத்திரத்து நரசிங்கப்பெருமா ளையும் வழிபட விரும்புகிறேன். வழி காண முடியாத இடங்களிலும் வழிகண்டது நரசிம்மம். அந்த நரசிம்மம் இப்போது வழிகாட்டட்டும்" என்ற தேசிகன் ஸ்ரீபுண்டரீகாட்ச னோடு திருமண்பாடு என்கிற அந்த இடத்துக்குச் சென்றார்

ஓங்கி உயர்ந்து வளர்ந்து நிற்கும் ஓர் அரச மரம். அதன் கீழே ஒரு கல் மேடை. அந்த மேடை முகப்பில் பெரிதாக திருமண் காப்பு சாற்றப்பட்டு, இருபுறமும் சங்கும் சக்கரமும் வரையப்பட்டிருந்தன. மேடைமேல் ராமாநுஜராக அவரின் பாதரட்சைகள் இருக்க, அவற்றுக்கு வழிபாடு நடத்தப்பட்டிருந்தது. அருகில் இரு அகல் விளக்குகள் செங்கல் மாடங்களுக்குள் நந்தா விளக்கு போல் எரிந்துகொண்டிருந்தன.

அந்தப் பாதரட்சைகளைப் பார்த்தமாத்திரத்தில் தேசிகனின் விழிகள் ஆனந்த பாஷ்யத்தைச்

சொரியத் தொடங்கின. மானசீகமாய் அங்கே ராமாநுஜர் தன் பூத உடலோடு தோன்றி, தேசிகனை வாழ்த்துவது போலவும் ஓர் உணர்ச்சி ஏற்பட்டு அடங்கியது.

``இங்கே இந்தக் கல் மேடை மேல் அமர்ந்தே, எங்கள் முன்னோர்களை ஆட்கொண்டார் ராமாநுஜர். இதோ எதிரில் உள்ள இந்த இடத்தில்தான் நாங்கள் எண்ணாயிரவரும் அவரால் யாக்கை பெற்றோம். தெளிவாகச் சொல்லப்போனால் இன்னொரு ஜன்மம் உற்றோம். தெளிவில்லாத குழப்பமான வழியில் சென்றபடி இருந்த எங்களுக்கு மறுவாழ்வும் நித்திய வெளிச்சமும் சித்தித்தது இங்கேதான்'' என்று புண்டரீகாட்சன் சொல்லச் சொல்ல தேசிகன் உணர்ச்சிப் பிரவாகத்துக்கு ஆளானார்!

அந்த இடம் குறித்து விளக்கமளித்த ஸ்ரீபுண்டரீகாட்சன் ஸ்வாமி, ``அப்போதைய இருளிலி ருந்து எங்களை ராமாநுஜர் ஆட்கொண்டார். அதுபோல், இப்போது வரும் இருளிலிருந்து எம்மை மட்டுமல்ல, எல்லோரை யும் ஆட்கொள்ள நீர் வந்திருப்பதாய் நாங்கள் கருதுகிறோம்'' என்று கூறவும், அவரின் திருக்கரங்ளைப்பற்றி கண்களில் ஒற்றிக்கொண்டார் தேசிகன்.

``காரணமில்லாமல் காரியங்களில்லை. காரண காரியங்கள் தெரிந்துவிட்டால் வருத்தங்கள் இல்லை. வாழும்நாள்களின் பயனாவது, அன்றைய கடமைகளை எப்படி செய்கிறோம் என்பதில்தான் உள்ளது. இம்மட்டில் அவனே கடமைகளை அளித்து அவற்றைச் செய்விக் கும் சக்தியையும் அளித்து வழிநடத்துகிறான்... இனியும் நடத்துவான். கவலையோ, கலக்கமோ வேண்டாம். நாம் நம் கொள்கையில் உறுதியாக இருப்போம். எவ்வளவு நாளைக் குத் தான் இனிப்பையே சாப்பிட்டுக் கொண்டிருப்பது. சிறிது கசப்பும் தேவைதான். அதீத இனிப்பிற்கான மருந்தே கசப்புதான். அம்மட்டில் இப்போது நடப்பது மருந்துக்கான மருந்து காலம்''

என்று வியாக்கியானம் அளித்த தேசிகன், அதன்பின் அனைவரையும் ஆசீர்வதித்து விட்டு, அங்கிருந்து புறப்பட்டார். சிறிது தூரத்திலேயே, வழியில் அநேக யானைகள் ரதச்சாலையின் மேல் நின்று கொண்டு பிளிறிக் கொண்டிருந்தன. கிருஷ்ண பாண்டன் ரதத்தை உடனேயே தேக்கி நிறுத்தி, சற்று அச்சத்தை எதிரொலித்தான். யானைகளும் கடிதுப் பிளிறி முழக்க மிட்டன.

``என்ன கிருஷ்ணபாண்டா... கஜப் படை அச்சுறுத்துகிறதா?''

``ஆம் சுவாமி! அவற்றின் முழக்கத்தைக் கேட்டால், மதக் கஜங்களோ என்று கருதத் தோன்று கிறது.''

``உண்மையான மதக் கஜங்களை நாம் இனிதான் சந்திக்கப் போகிறோம். இவை பாவம். கவலைப்படாதே! அந்த நரசிம்மனை இப்போது துதித்திட, இவை தானாக விலகி வழிவிடும் பார்...'' - என்ற தேசிகன் ஸ்ரீநரசிம்ம ஸ்துதியை புரிந்திட யானைகள் விலகி வழிவிட்டன.

கிருஷ்ணபாண்டனும் ``ஆறறிவு இல்லாத இவையே தங்களின் பக்திக்குக் கட்டுப்பட்டு

விலகிவிட்டன. அதேபோல், ஆறறிவு கொண்ட அந்த மத யானைகளும் அவ்வாறே நடந்து கொண்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்?'' என்று கேட்டான்.



ஸ்ரீரங்கம்

தேசிகன் புன்னகைத்தபடி கூறினார்...

``இந்த யானைகளுக்குத் தற்செருக்கு கிடையாது. தான் யார் என்பதும் தெரியாது. ஆனால், அவர்கள் அப்படியல்ல. தான் என்னும் செருக்கும் தனக்கென்று பிரத்யேக போக்கும் கொண்டவர்கள். ஆகையால் அவர்களோடு இந்த யானைகளை ஒப்பிடாதே!''

``அப்படியானால், அவர்கள் மிக ஆபத்தான வர்கள் என்பதுதானே உண்மை?''

``அதில் என்ன சந்தேகம் கிருஷ்ண பாண்டா?''

``நாம் எப்படி சுவாமி அவர்களை வெற்றிக் கொள்ளப் போகிறோம்?''

``எதற்கு இந்த கலக்கம்?''

``கலங்காது இருக்க முடியவில்லையே..?''

``அப்படியானால், நீ எம்பெருமானிடம் முழுமையான சரணாகதி புரியவில்லை என்று பொருள்.''

``இது என்ன பதில் சுவாமி?''

``இதுவே பதில்... சரணாகதி புரிந்தவர்கள், தங்களின் அன்றாட கடமைகளைச் செய்தபடி சென்றால் போதும். மற்றதை அவன் பார்த்துக் கொள்வான்."

தேசிகன், கிருஷ்ண பாண்டனுக்கு அளித்த விளக்கம் அவனுக்கானது மட்டுமல்ல; அது எல்லோருக்குமான ஒன்றாகத்தான் இருந்தது.

தேசிகனின் ரதம் விரைவில் கஜப் படையின் தடையைக் கடந்து திருவரங்க பாதையில் செல்லத் தொடங்கியது. கிருஷ்ண பாண்டன் ரதத்தை செலுத்திக்கொண்டே, ``சுவாமி! எனக்குள் இன்னமும் பல கேள்விகள் விடை தெரியாது உள்ளன. தங்களிடம் நான் அவற்றைக் கேட்கலாமா?" என்று கேட்டான்.

``தாராளமாய் கேள்... எப்போதும் பயணத்தின் போதுதான் மனது கூர்மை கொள்ளும்..."

``நாம் வசிக்கும் காஞ்சியும் திருவரங்கம் போல் ஒரு தலம்தானே? காஞ்சிக்கு எந்த பாதகமும் வராதா? திருவரங்கத்தின் மீது மட்டும் ஏன் இவ்வளவு கரிசனம் தங்களுக்கு?"




திருவரங்கம்

கிருஷ்ணபாண்டன் அப்படிக் கேட்ட போதிலும் அதை அவன் கேட்டதாகவே தேசிகன் கருதவில்லை. அந்தக் காஞ்சியம்பதி பேரருளாளனே கிருஷ்ணபாண்டன் வடிவில் கேட்டதாகக் கருதினார். அக்கேள்வி முன் சற்றே மந்தகாசமாய்ப் புன்னகைத்தவர், தொடர்ந்து பதில் சொன்னார்:

``கிருஷ்ண பாண்டா இக்கேள்வியை நீ கேட்கவில்லை உன் மூலம் அந்த வரதனே

கேட்கிறான். பரவாயில்லை... நான் உணர்ந்திருப்பதை உரைப்பதற்கு இது ஒரு சந்தர்ப்பம்.

எங்கும் அவன் இருக்கிறான். அவன் இல்லாத இடம்தான் ஏது? அவனது பரந்துவிரிந்த தன்மையை நம்மாழ்வார் எப்படி யெல்லாம் அனுபவித்து இருக்கிறார் தெரியுமா?

`மாயா வாமனனே மதுசூதா நீயருள்வாய்.

தீயாய், நீராய், நிலனாய், விசும்பாய், காலாய்,

தாயாய், தந்தையாய், மக்களாய், மற்றுமாய்,

முற்றுமாய், நீயாய் நீ நின்ற வாறிவை

யென்ன நியாயங்களே' என்கிற அவரின் திருவாய்மொழிப் பாசுர வரிகள்தான் இப்போது என் நினைவுக்கு வருகின்றன.

எங்கும் அவன் வியாபித்திருந்தாலும், பசுவின் உடலில் உள்ள அதன் பால் மடிக் காம்புகள் வழியாக வெளிப்படுவது போல, அவனது பேரருள் திருவரங்கம், காஞ்சி, திருமலை திருவஹீந்திரபுரம் என்று தலங்கள் வழியாக வெளிப்படுகிறது. இவற்றில் திருவரங்கம் இதயம் போன்றது..."

தேசிகனின் விளக்க உரையாடல் தொடர்ந்தது.

- தொடரும்...

`**கழுதை தந்த பாடம்**!'



கழுதை தந்த பாடம் Therd oval

ஞானி ஒருவரிடம் அவரின் சீடன், ‘‘குருவே... நீங்கள் இன்பத்தில் மகிழ்ச்சியோ, துன்பத்தில் சோர்வோ அடைவதில்லை. இரண்டையும் சமமாக பாவிக்கும் பண்பு, உங்களுக்கு எப்படி வந்தது?’’ என்று கேட்டான்.

‘‘கழுதையிடமிருந்துதான்’’ என்றார் ஞானி.

‘‘என்னது... கழுதையிடம் இருந்தா?’’ என்று சீடர்கள் வியந்தனர்.

‘‘ஆமாம், கழுதையிடமிருந்துதான். காலையிலும், மாலையிலும் வீதி வழியே செல்லும் கழுதையை நீங்கள் பார்த்ததில்லையா? காலையில் அழுக்கு உடைகளை சுமந்து செல்லும் கழுதை, அதற்காக வருத்தம் கொள்வதில்லை. மாலையில் வெளுத்த துணிகளைச் சுமந்த படி திரும்பும். அப்போதும் அது, ‘தூய்மையான துணிகளைச் சுமந்து வருகிறோம்’ என்று மகிழ்ச்சி அடைவதில்லை. இதைப் பார்த்துதான் இத்தகைய ஒரு பண்பை நான் கற்றுக் கொண்டேன்!’’ என்றார் அந்த ஞானி.

- உமா ராணி, கிருஷ்ணகிரி

**ஆசையின் விளைவு அவஸ்தையே!**



`பேராசை பெருநஷ்டம்’ என்பதற்கு கபீர்தாசர் கூறிய விளக்கம்:

`தேனீ ஒன்று தேன் குடிப்பதைப் பார்த்துவிட்டு ஒரு சாதாரண ஈயும் தேன் ததும்பும் மலரின் மீது உட்கார்ந்தது. அதன் சிறு இறகு தேனில் ஒட்டிக் கொண்டது. அதிலிருந்து விடுபடுவதற்கு ஆன மட்டும் முயற்சி செய்தது ஈ. உருண்டது, புரண்டது. அதனால் அதன் சிறு உடலும், கால்களும் கூட ஒட்டிக் கொண்டன.

பாவம் ஈ! ஒரு துளி தேனுக்கு ஆசைப் பட்டு, அது தன் இன்னுயிரை இழந்தது.'

- எம்.கீர்த்தனா, பெங்களூரு.

# ரங்க ராஜ்ஜியம் - 81 01-06-2021

இந்திரா சௌந்தர்ராஜன்




ரங்க ராஜ்ஜியம்

திருவரங்க சரிதம்

**அ***த்திகிரியருளாள ரனுமதியோன் வாழியே*

*ஐப்பசியில் திருவோணத் தவதரித்தான் வாழியே*

*முத்திநெறி மறைத் தமிழால் மொழிந்தருள்வோன் வாழியே*

*மூதரிய மணவாளன் முன்புதித்தான் வாழியே*

*நித்தியம் நம் பிள்ளை பதம் நெஞ்சில் வைப்போன் வாழியே*

*நீள்வசன பூடணத்தால் நியமித்தான் வாழியே*

*உத்தமமாம் முடும்பை நகருதித்த வள்ளல் வாழியே...*

*உலகாரியன் பதங்களூழி தொலும் வாழியே...*

*- பிள்ளைலோகாசார்யர் வாழித் திருநாமம்.*

``**எ**ங்கும் அவன் வியாபித்திருந்தாலும்... பசுவின் உடலிலுள்ள அதன் பால், மடிக்

காம்புகளின் வழியாக வெளிப்படுவது போல், இறைவனின் பேரருள் திருவரங்கம், காஞ்சி, திருமலை, திருவஹீந்திரபுரம் என்று தலங்கள் வழியாக வெளிப்படுகிறது. இதில் திருவரங்கம் இதயம் போன்றது.

இதயத் துடிப்பு நின்று போனால், உடம்பில் மற்ற பாகங்கள் செம்மையாக இருந்தாலும் பயனில்லை. அதேவேளை, மற்ற பாகங்களில் ஏதாவது குறை இருந்தபோதிலும் இதயம் சீராக இயங்கும்பட்சத்தில், அந்தக் குறையைக் காலத்தால் சரி செய்துவிடலாம். என் வரையிலும் திருவரங்கம் இதயம் போன்றது. காஞ்சி எனக்கு ஒரு கண் என்றால், திருமலை இன்னொரு கண். திருவஹீந்திர புரம் என் மூச்சுக்காற்று. இப்போது இதயத்தில் பிரச்னை!

முன்பும் திருவரங்கம் மிலேச்சக் கூட்டத்தால் கொள்ளைக்கு ஆளானது. அப்போது ராமாநுஜர் இருந்தார். அவர், மிலேச்சர்களால் கவர்ந்து செல்லப்பட்ட அழகிய மணவாளப் பெருமாளையும் சேரகுலவல்லித் தாயாரையும் டெல்லிக்கே சென்று மீட்டு வந்தார்.

இப்போது மீண்டும் அதேபோல் ஒரு சோதனை. சோதனையில் நான் என்ன செய்யப் போகிறேன் என்று பார்க்கப் போகிறான் வரதன்.

திருவரங்கத்தில் உள்ள மூர்த்தி ஆதிமூர்த்தியா வார். பிரம்மன் வழிபட்ட மூர்த்தி அவர். காஞ்சி வரதனோ பிரம்மன் வேள்விப் பயனாக பெற்ற மூர்த்தி. இப்போது பெரும் சோதனை திருவரங் கத்துக்கே. திருவரங்கத்தைக் காப்பாற்றி விட்டால், மற்ற தலங்கள் தானாகவே காக்கப் பெற்றிடும்.''

தேசிகன் அளித்த விளக்கத்தால் கிருஷ்ண பாண்டனுக்குத் தெளிவு பிறந்தது!

**திருவரங்கம்**!

அந்த இரவுப் பொழுதில், காட்டழகிய சிங்கர் சந்நிதியின் புற மண்டபத்துக்கு, அளவில் பெரிய மரப்பெட்டி ஒன்று பூட்டுப் போடப் பட்ட நிலையில், சிலரால் எடுத்துவரப்பட்டிருந் தது. கூடவே சில தச்சர்களும் இருந்தனர். அவர்கள் வசம் இழைக்கப்பட்ட மரத்துண்டு களும் பலகைகளும் இருந்தன.

அவர்களை வரவேற்ற பிள்ளை லோகாசார்யர், தன் தள்ளாத முதுநிலையிலும் அவர்களிடம் திடமாக உரையாடினார். அவர் களோடு பிள்ளைலோகாசார்யரின் சகோதரர் அழகிய மணவாளப் பெருமாள் இருந்தார். மேலும் மணப்பாக்கத்து நம்பி, கோட்டூர் அண்ணன் சொல்லிக் காவலதாசன், திருக் கண்ணக்குடிப் பிள்ளை ஆகிய பல சீடர்களும் உடனிருந்தனர்.

தச்சர்களிடம் பிள்ளை லோகாசார்யர், ``கவனமாகச் சென்று அளவெடுத்து வர

வேண்டும். இது உங்களுக்குக் கிடைத்திருக்கும் பெரும் பாக்கியம்'' என்றார்.

திருவரங்கச் சந்நிதிக்குள் உற்சவ மூர்த்தியா கக் கோயில்கொண்டிருக்கும் அழகிய மணவாளனை அளந்து, அதற்கேற்ப பெட்டி செய்யவேண்டும். அதற்காகவே அவர்கள் வந்திருந்தனர். ஏற்கெனவே கைவசம் இருக்கும் பெட்டி, சாளக்ராமம் உள்ளிட்ட பூஜைப் பொருள்கள் மற்றும் பாத்திரங்களை வைத்துக் கொள்ளவும், அவர்கள் செய்யப் போகும் புதிய பெட்டி, அரங்கனைப் பாதுகாப்பாகக் கொண்டு செல்வதற்காகவும் பயன்படும்.



ரங்கநாதர்

அவ்வேளையில், உத்தமன் என்பவன் ஒரு மணிப் புறாவுடன் வந்து சேர்ந்தான். அவன் பிள்ளைலோகாசார்யரின் திருமுன் தரையில் விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தான். பின்னர் ``வேதாந்த தேசிகர் திருவரங்கத்தின் எல்லையை எட்டிவிட்டார்; சமயபுரத்துக்கு அருகே வந்துவிட்டார்'' என்றான்.

அதைக் கேட்டதும் பிள்ளை லோகாசார்யர் முகத்தில் ஒரு பிரகாசம்.

``வரதனின் துணை கிடைக்கப்போகிறது. பேரருளாளனின் சகாயம் பொங்கி வழியப் போகிறது. நீங்கள் எல்லோரும் வேகமாய்ச் சென்று அளவெடுத்து வாருங்கள்'' என்றார் மிக உற்சாகமாய்!

அவர்களும் அந்த இரவில் அளவுக் கருவி களை மடியில் மறைவாகக் கட்டிக் கொண்டு, திருவரங்கத் திருவீதிகளுக்குள் மெள்ள நுழைந்தனர். வடக்கு வாயில் வழியாக உள்ளே சென்று, பின் தெற்கு வாசல் வழியாக உட்புகுந்து, நேராக திருச் சந்நிதிக்குள் நுழைய வேண்டும்.

மிலேச்ச பயத்தால் கதவுகள் தாழிடப்பட்டுப் பெரும் பாறைகளைக் கொண்டு எளிதில் கதவு களைத் திறக்கமுடியாதபடி செய்யப் பட்டிருந்தது. பல இடங்களில் நுழைவாயில்கள் மூங்கில் சாரங்களால் மூடப்பட்டிருந்தன. அவற்றின் முன்னால் அந்த வாயில்களின் இருப்பு தெரியாதபடி வைக்கோல் போர் குவிக்கப்பட்டிருந்தது.

வெள்ளைக் கோபுரம் மற்றும் கிழக்குக் கோபுரத்திம் மீது இருந்தபடி பிள்ளை லோகாசார்யரின் சீடர்கள் மிலேச்சப் படைகள் வருவதைக் கண்காணித்தபடி இருந்தனர்.

அன்று மாலைப் பொழுதில், திருவரங்க வேடுபரி வேட்டை நடக்கும் மணல் தளத்தில், பிள்ளைலோகாசார்யர் தலைமையில் ஒரு சங்கக் கூட்டம் நடந்திருந்தது. அதில் ஐயாயிரம் வைணவ தாசர்கள் பங்கேற்றிருந்தனர். அப்போது பேசிய பிள்ளை லோகாசார்யர் நிறைவாகக் கூறியது ஒன்றைத்தான்.

``உயிரைக் கொடுத்தேனும் அரங்கனைக் காப்போம். அரங்கத் திருமேனிமேல் தூசி படக்கூட அனுமதியோம். முன்னிலும் தீவிர மாக அரங்கனின் திருநாமம் உரைப்போம''[. என்றவர் ``ரங்கா...'' என்று உரத்தக் குரல் எழுப்ப, `ரங்கா' என்று ஒட்டுமொத்த கூட்டமும் ரங்க நாமம் முழங்கியது.

மாலைவேளையில் இப்படியான ஆர்ப்பரிப் புடன் திகழ்ந்த ஆலயவெளி, இப்போது தச்சர்கள் உள்நுழைய காத்திருந்தது.

தச்சர்கள் வைணவக் குடியிருப்பு மிகுந்த தெருக்களில் நடந்தனர். பல குடியிருப் புகளுக்கு வெளியே புரவிகள் கட்டப்பட்டிருந்தன. உள்ளே புலால் சமைக்கும் வாடை

மூக்கை நிரவிற்று. அங்கிருந்தவர்கள் வெளியேறிவிட்ட நிலையில், வாய்ப்பு கிடைத்த இடத்திலெல்லாம் சுல்தானின் படைகள் உட்புகுந்து இருந்தனர்.

மேலும் பெரும் படை வந்து கொண்டிருப்ப தாகத் தகவல். அது திருவரங்கத்தை நெருங்கி னால்… அவ்வளவுதான்... அவர்களின் இலக்கு ஆலயத்தை நிர்மூலமாக்குவதுதான்!

அடுத்து அவ்வளவு பேரையும் கைது செய்வார்கள். எவர் மிலேச்ச ராஜ்ஜியத் திற்கு உடன்படுகின்றனரோ, அவர்களை விடுவித்து அவர்களுக்குப் பரிசுகளும் பதவிகளும் வழங்கப்படும். ஏற்றுக்கொள்ள மறுப்போரைச் சிரச்சேதம் செய்வார்கள்.

இதுவே மிலேச்சர்களின் திட்டம் என்பதாக ஒரு கருத்து ஊர் முழுக்கப் பரவி இருந்தது.

அங்ஙனம் பெரும்படை திருவரங்கத்தை அடைந்து, அது கோயிலை நிர்மூலமாக்கும் முன், அனைத்துத் திருச்சந்நிதி மூர்த்திகளையும் இடம் மாற்றி விடவேண்டும். அரங்கனின் சொத்தில் செப்புக் காசைக் கூட மிலேச்சன் கொண்டு சென்றுவிட இடம் கொடுத்துவிடக் கூடாது.

தங்கக் குடங்களில் தொடங்குகிறது அவனு டைய பொக்கிஷங்கள்!



ஸ்ரீரங்கம்

தாடங்கம் என்ன... காசுமாலை என்ன... தங்கப் பூணூல் என்ன... இன்னும் நவரத்தினக் கிரீடம், ஆரம் சேரம் பூண், தோள்வளை, மணிக்காப்பு, புல்லாக்கு, ஒட்டியானம், சூரிய பிரபை, சூடாமணி, சூளாமணி, சூழி, சேகரம், தலைப்பட்டம், புல்லகம், சூடிகை, பொற்றாமரை முகச்சரம், கொப்பு, ஓலை, கொந்திளவோலை, டோலாக்கு செவிப்பூ, தண்டட்டி, நெல்லிக்காய் மாலை, கடுமணி மாலை, மாங்காய் மாலை, காரைப்பூ அட்டிகை, கண்டசரம், கோதை மாலை, கோவை பவழத்தாலி, மாம்பிஞ்சுக் கொலுசு, அத்திக்காய் கொலுசு, கான்மோதிரம், பாம்பாழி, சதங்கை, அரைஞாண்கொடி, வீரவளைப் பதக்கம், குண்டலம் என்று அவற்றின் பட்டியல் மிக நீளமானது.

அரங்கனை வணங்கிப் பணிந்து அரசர் பெருமக்கள் உவந்து கொடுத்த எளிய காணிக்கைகள் அவை. அவை எல்லாவற்றையும் பாதுகாத்திட வேண்டும். மணப்பாக்கத்து நம்பியுடன் கோட்டூர் அண்ணனும், சொல்லிக் காவலதாசனும் தச்சர்களுடன் நடந்து செல்கையில், எம்பெருமானின் திருமேனிச் செல்வங்களை எப்பாடு பட்டேனும் காத்திட வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தனர்.

ஒருவழியாக அவர்கள் உள்ளே சென்று திருச்சந்நிதி முகப்பை அடைந்தனர். திருச்சந்நிதியின் முன் மறைப்புச் சுவர் கட்டி முடிக்கப்பட்டு, திட்டிவாசல் அளவுக்கு சிறு நுழைவு வழி மட்டும் அந்தச் சுவரில் விடப் பட்டிருந்தது.

கோஷ்டியாக ஒரு நாற்பது பேர் நின்று பிரபந்த பாசுரங்களைப் பாடி வணங்கும் ஓர் இடம்... இன்று சுவரால் மூடப்பட்டுவிட்ட நிலை, கண்களில் நீரை வரவழைத்தது.

கோட்டூர் அண்ணன் தேம்பி அழலானார். சொல்லிக்காவல தாசரோ தலையில் அடித்துக் கொண்டார். மணப்பாக்கத்து நம்பி மனத்தைத் தேற்றிக்கொண்டு, தச்சர்கள் உற்சவ மூர்த்திப் பெருமாளாகிய அழகிய மணவாளனை அளந்து எடுக்க ஒத்தாசித்தார். உலகை அளந்த வனை அந்த வேளையில் அவர்கள் அளந்தனர். முன்னதாக தொழுது விழுந்தனர்.

``எம்பெருமானே உன்னைப் பாதுகாக்கவே பெட்டியைச் செய்யவுள்ளோம். மீண்டும் நீ இங்கே எழுந்தருளி பக்தர்களுக்குக் காட்சி தரும் நாள் வரையிலும், நாங்கள் எங்கள் கையால் ஒரு மரத்துண்டைக் கூட தொட மாட்டோம். நாங்கள் இயங்கவேண்டும் என்றால், நீயும் இங்கே இயங்கியாக வேண்டும்'' என்று பிரார்த்தித்துக் கொண்டனர் அந்தத் தச்சர்கள். பின், அங்கிருந்து தீப்பந்த ஒளி வழி காட்ட புறப்பட்டனர். கிளி மண்டபம் அருகில் நின்று கோபுர விமானத்தை ஒரு பார்வை பார்த்தனர். விண்ணில் நட்சத்திரங்களுடன் நிலாத் துண்டு தென்பட்டது. `இனி எப்போது இங்கே இப்படி நின்று சேவிப் போமோ' எனும் ஏக்கத்துடன் அவர்கள் புறப்பட்டனர்.

**திருவரங்க எல்லை. காலை வேளை!**

கிருஷ்ண பாண்டன் ரதத்தைச் செலுத்திக் கொண்டிருந் தான். ஆங்காங்கே புரவிகளும் மிலேச்சர்களும் கண்ணில் பட்டனர். கிருஷ்ண பாண்டனுக்குள் அச்சம் எழுந்தது. எங்கே... தடுத்து நிறுத்தப்படுவோமோ என்கிற சந்தேகம் எழவும், திரும்பி தேசிகனைப் பார்த்தான்.

``அச்சமின்றி செல் பாண்டா. நான் இப்போது காப்புக் கவசம் சொல்லிக்கொண்டிருக் கிறேன். மிலேச்சர்கள் பார்த்தாலும் அவர்களுக்கு நாம் விரோதிகளாகத் தெரியமாட்டோம்'' என்றார் தேசிகன். அந்த நொடியில், அவர் ஒரு சுத்த ஸ்வயம் பிரகாசர் என்பதுடன், யந்த்ர - மந்த்ர - தந்திரங்களைக் கசடறக் கற்றுத் தெளிந்தவர் என்பதும் கிருஷ்ண பாண்டனுக்குப் புலனாயிற்று.

தேசிகன் சொன்னபடியேதான் ஆயிற்று. அவர்களின் ரதத்தை எங்கும் எவரும் கண்டுகொண்டதாகவே தெரிய வில்லை. ஓரிடத்தில், தேசிகனை அழைத்துச் செல்ல பிள்ளை லோகாசார்யரால் அனுப்பப் பட்டிருந்த அனந்த பத்மன், விக்கிரமதாசன் ஆகியோர் நின்றிருந்தனர். அவர்கள் புரவி ரதத்தை அடையாளம் கண்டுகொண்டு, பிள்ளைலோகாசார்யர் இருக்கும் இடத்துக்கு அழைத்துச் சென்றனர்.

தேசிகன் திருவரங்க வீதிகளைப் பார்த்தவாறே பயணித்தார். திருமண் காப்புடன் காவிப் பூசப்பட்டு, முல்லைக்கொடி படர்ந்த வாசல்களுடன் கூடிய - மாக்கோலம் துலங்கும் வீடுகளுடன் எழிலோடு காட்சி தரும் திருவரங்க வீதிகள் அன்று சோபையிழந்து கிடந்தன.

- *தொடரும்...*

## மருதமலையின் விசேஷம்!



மருதமலை

சத்-சித்-ஆனந்தம் எனும் அற்புதத் தத்துவத்தை உணர்த்துவது சோமாஸ்கந்த திருவடிவம் என்கின்றன ஞானநூல்கள். அம்மை-அப்பனுக்கு நடுவில் முருகன் அருளும் இந்தத் திருவடிவைத் தியானித்து வணங்கினால் இல்லறம் இனிமையாகும் என்பது நம்பிக்கை.

முருகன் தலங்களில் மருத மலை சோமாஸ்கந்த அம்சமானது என்பார்கள் பெரியோர்கள்.

ஆம்! இத்தலத்தின் அருகிலுள்ள வெள்ளியங்கிரி ஈசனின் அம்சம்; நீலி மலை அம்பிகையின் அம்சம். இரண்டுக்கும் நடுவிலுள்ள மருதமலையில் முருகன் அருள்கிறான். ஆகவே இந்த அமைப்பு சோமாஸ்கந்த அமைப்பு என்று சிறப்பிப்பார்

# `ராம நாமம் போதுமே!'



ராமா ராமா

காந்திஜி ஒருமுறை, `அம்கி' எனும் ஊரில் தங்கியிருந்தார். அப்போது ஆட்டுப்பால் கிடைக்காததால், காந்திஜி தேங்காய்ப் பால் குடிக்க நேர்ந்தது. இதனால் அவருக்கு வயிற்றுப்போக்கு ஏற்பட்டது.

ஒரு கட்டத்தில் மயங்கி விழுந்துவிட்டார் காந்திஜி. இதைக் கண்டு பதறிப்போன மதுபென், ``டாக்டர் சுசீலாவை உடனே அழைத்து வாருங்கள்'' என்று பரபரத்தார்.

அரை மயக்கத்தில் இருந்த காந்திஜி, ``வேண்டாம்! அதற்கு பதில், `ராமா ராமா...' என்று சொல்லு போதும். ராமனே சிறந்த மருத்துவன். என் ஒருவனுக்காக டாக்டர் சுசீலா இங்கு வந்துவிட்டால், அவரை நம்பி காத்திருக்கும் நோயாளிகள் ரொம்பவே அவதிப்படுவார்கள்'' என்றாராம்!

அவர் சொன்னபடியே `ராம் ராம்' என்று தொடர்ந்து ஜபித்தனர். காந்திஜியும் குணம் அடைந்தாராம்.

- *எஸ்.மாரியப்பன், தேனி*

# ரங்க ராஜ்ஜியம் - 82 15-06-2021

[இந்திரா சௌந்தர்ராஜன்]




திருவரங்க சரிதம்

**ஸ்ரீ** *தேசிகன், பிள்ளைலோகாசார்யரின் இருப்பிடத்தை அடைந்ததும், தன் தள்ளாமையையும் பொருட்படுத்தாது வேகவேகமாக ``வரவேண்டும் வரவேண்டும்... எம்பெருமானாரின் செல்லப்பிள்ளை வரவேண்டும்... திருமலை தந்த திவ்யதேவர் வரவேண்டும்...'' என்று வாயார வரவேற்றார் பிள்ளை லோகாசார்யர். அத்துடன் ஸ்ரீதேசிகரைப் பணியவும் முற்பட்டார்.*

அவசரமாய் அவரைத் தடுத்த தேசிகன், “இது அபசாரம். தாங்கள் நான் வணங்கிடும் வரதாம்சம்” என்று கூறி வணங்கினார். அவ்வாறு அவர் வணங்கி எழுந்த கணத்தில், ஒரு விநாடிப் பொழுது அவருக்கு பிள்ளைலோகாசார்யர் காஞ்சிப் பேரருளாளனாகவே காட்சி தந்தார். அல்லல் காலத்தில் ஓர் அருட்காட்சியாக அதை உணர்ந்த தேசிகன், அடுத்துச் சென்று வணங்கியது ஸ்ரீகாட்டழகிய சிங்கப் பெருமானைத்தான். பிறகு வைணவ தாசர்கள் புடைசூழ, பிள்ளை லோகாசார்யரின் எதிரில் அமர்ந்தார். அவர்களிடையே உரையாடல் ஆரம்பமானது.

முன்னதாக சிரமப் பரிகாரத்தின் பொருட்டு பானகமும் தேங்காய்ப்பூ வெல்லமும், மலைவாழைப் பழங்களுடன் வழங்கப்பட்டன. அவை ஸ்ரீகாட்டழகிய சிங்கருக்கான நிவேதனப் பிரசாதமாகும். பிரசாதத்தை உண்டு முடித்த நிலையில் பிள்ளை லோகாசார்யர் பயணம் குறித்து வினவினார். ``எம்பெருமானின் கருணையினால்

யாதொரு தடையுமில்லை'' என்றார் தேசிகன்.

``மற்றபடி எல்லோரும் நலம்தானே?'' என்று தேசிகன் கேட்டிட, எல்லோரிடமும் ஒரு வகை அமைதி.

``புரிகிறது... உங்களின் மௌனமே பதிலாகிவிட்டது. நாம் நலமற்ற நிலையில் இருந்தாலும் நம் மனத்தை அவ்வாறு எண்ண விடக்கூடாது'' என்றார் தேசிகன்.

``உங்கள் பக்குவம் எங்களுக்கில்லை சுவாமி'' என்றனர்.

``இப்போதைய திருவரங்க நிலைப்பாடு என்ன... அதைச் சொல்வீர்களா?''

``டெல்லி சுல்தானின் பிடிக்குள் சீராப்பள்ளி மலைக்கோட்டை வந்துவிட்டது. அங்குள்ள தாயுமானவர் சந்நிதி ஆயுதக் கிடங்காகிவிட்டது. தற்போது சில நூறுபேர்தான் உள்ளனர். ஆனால் இருபதாயிரம் பேர் கொண்ட ஒரு பெரும்படை வந்து கொண்டிருப்பதாக தகவல். அவர்களில் ஒரு குறிப்பிட்ட பிரிவினர் ஆலயங்களை இடித்து அழிப்பதை மட்டுமே தங்கள் செயலாகக் கொண்டவர்களாம்.

அப்படியே ஆலயச் செல்வங்களைக் கொள்ளையடித்து மூட்டை கட்டிக்கொண்டு போய், சுல்தான் முன் காட்டி நல்ல பெயர் பெற்று விடுவார்களாம். இப்படி அவர்கள் சீரழித்த ஆலயங்கள் பல! அப்போது கொன்று குவிக்கப்பட்ட பக்தர்கள் எண்ணிக்கைக்கும் ஓர் அளவில்லையாம்...'' என்று வைணவ தாசர்கள் விவரம் பகிர்ந்தனர்.



ரங்கநாதர்

அவர்களே மேலும் தொடர்ந்தனர்...

``சிராப்பள்ளியில்தான் இப்படி ஒரு நிலை. ஆனால் துக்ளக் எனப்படும் சுல்தானின் படையை, மதுரை சுந்தரபாண்டியன் அடக்கிப் புறமுதுகு காட்டி ஓடச் செய்துவிட்டார். அந்த யுத்தத்தில் அவர் தன் உயிரையும் இழந்துவிட்டார். வரலாறு இந்த 1323-ம் ஆண்டை ஒருபுறம் வெற்றி; மறுபுறம் தோல்வி என்று பதிவு செய்துகொள்ளும். இந்த இக்கட்டான தருணத் தில் ஆறுதலான ஒரு நல்ல விஷயமும் உண்டு. மதுரை சுந்தர பாண்டியனின் வாரிசான பராக்கிரமப் பாண்டியனுக்கு இப்போது பத்து வயதுதான் ஆகிறது. ராஜ்ஜியத்தை நிர்வகிக் கும் வயதோ ஆற்றலோ இல்லை. இந்த நிலையில் சுந்தர பாண்டியனின் ஆசார்யரும் பரம வைணவருமான திருமலை ஆழ்வார்தான் பராக்கிரமனின் அருகில் இருந்து வழிநடத்து கிறார். அதாவது இப்போதைக்கு திருமலை ஆழ்வாரே மதுரையின் மாமன்னர்.

என்ன ஒரு விசித்திரம்!

இங்கே சோழமண்டலம் மிலேச்சனுக்கு அடிமைப்பட்டு இங்குள்ள ஆசார்யர்கள் ஓடி ஒளியும் நிலை. ஆனால், மதுரையிலோ ஆட்சி புரியும் நிலை... இதை என்னவென்பது?''

ஒருவர் இப்படிக் கூறி முடிக்க அடுத்தடுத்து வேறு சில அன்பர் களும் தொடர்ந்து பேசினர்.

``இப்படிப் பேசிக்கொண்டிருந் தால் அதற்கு முடிவிருக்காது. 20,000 பேர் கொண்ட மிலேச்சர் கொள்ளைப் படை திருவரங் கத்தை இன்னும் சில தினங்களில் அடைந்துவிடக் கூடும். இந்த வேளையில் நாம் செய்ய வேண்டி யது குறித்தே எண்ணவேண்டும்.''

``ஆம்.. அதுபற்றி ஒரு முடிவுக்கு வருவோம். எம்பெருமானின் உற்சவர் திருமேனி, பெருமாட்டி யின் உற்சவத் திருமேனி மற்றும் சாளக்கிராமப் பூஜைப் பொருள் களைப் பாதுகாப்பாய் ஒரு பெட்டியில் வைத்து மிலேச்சன் பார்வையில் பட்டுவிடாதபடி நாம் எங்காவது கொண்டு சென்றுவிட வேண்டும். இது முதல் செயல்பாடு.

எக்காரணம் கொண்டும் எம்பெருமானுக்கான நித்திய பூசைகள் நின்றுவிடாது தொடர்ந்திட ஆவண செய்ய வேண்டும். இது அடுத்த செயல்பாடு. எத்தனை ஆயிரம் பேர் வந்தாலும் ஆலயத்தில் சயன நிலையில் இருக்கும் மூல விக்கிரகத்தை மிலேச்சன் நெருங்கிவிடாதபடி காவல் காத்திட வேண்டும். அந்தப் பணிக்காக உயிரை இழக்க நேர்ந்தால், அதை உவகையுடன் ஏற்றிட வேண்டும். அவ்வாறு மரிப்போருக்கு எம்பெருமானின் திருவடி நிழலில் இடம் நிச்சயம்.''

இங்ஙனம் எல்லோரும் தங்கள் கருத்துக்களைச் சொல்லி முடித்த நிலையில், தேசிகன் திருவாய் மலரலானார்.

``தாசர்களே! இதைவிட பதற்றமான தருணங்கள் நம் முன்னோர் வாழ்வில் வந்து சென்றுள்ளன. கம்சன் மற்றும் நரகாசுரனால் நம் முன்னோர் அனுபவித்த கொடுமைகள் ஏராளம். அரசர் பெருமக்களை எல்லாம் சிறைப்படுத்திக் கசையடி கொடுத்து அவர்கள் அழுவதைக் கண்டு இன்புற்றான் நரகாசுரன். இந்நிலையில்தான் நம்பெருமான் கிருஷ்ணனாக பாமாதேவியுடன் சென்று அவனை சம்ஹாரம் செய்தார்.



ஸ்ரீரங்கம்

அதனால் தீபாவளி என்கிற ஒரு திருநாளும் நமக்கெல்லாம் கிடைத்தது. ஒரு பெரும் கொடூரம், பின்னர் பெரும் மகிழ்ச்சி யைத் தரும் ஒளி மிகுந்த நாளாகியது. அதுபோல், இப்போது நாம் சந்திக்கும் துன்பங்களும் பின்னாளில் பெரும் இன்பத் திற்குக் காரணமாகும். நாம் நம் கடமையை நம்பிக்கையோடு செய்வோம்'' என்று தேசிகன் கூறிட, எல்லோருக்கும் அவரின் பேச்சு ஆறுதலாய் அமைந்தது.

பின்னர் தேசிகன் உரியோர் துணையுடன் திருவரங்க ஆலயத் தினுள் சென்று, அங்கு எழுப்பப்பட்டிருக்கும் சுவரின் சிறு துவார திட்டி வாசல் வழியே உள்ளே நுழைந்து, மூலவரைக் கண்குளிர வணங்கினார். அவர் வெளியே வரவும் அந்தத் துவாரமும் அடைக்கப் பட்டது. தொடர்ந்து அந்தச் சுவருக்குமுன் ஒரு மேடை அமைக்கப்பட்டு, அதன்மீது களி மண்ணால் செய்யப்பட்ட அரங்கனின் கொலுப் பொம்மை போன்ற உருவம் வைக்கப்பட்டு, அதுவே திருச்சந்நிதி எனும்படி செய்யப்பட்டது.

தேசிகன் ஆசிரமத்திற்குத் திரும்பியதும் பிள்ளை லோகாசார்யர் தான் எழுதிய `அஷ்ட தச ரகசியம்' என்று வைணவர்களால் அழைக்கப்படும் 18 நூல் ஏட்டுக் கட்டுகளைத் தந்தார். அவற்றில் தத்வத்ரயம், முமூக்சுப்படி வசனபூஷணம், அர்த்த பஞ்சகம்,

நவரத்னமாலை, நவவித சம்பந்தம் என்று பலப் பல தலைப்புகளில் எம்பெருமானுக்கான துதிகள் அடங்கியிருந்தன.

அவற்றை தேசிகரிடம் ஒப்படைத்த பிள்ளை லோகாசார்யர் ``தேசிகரே! நீரே இந்நூல்கள் அழிந்திடாது காத்திட வேண்டும். நான் முதிர் நிலையில் இருக்கிறேன். எப்போது வேண்டுமானால் நான் பரமபதிக்கலாம். இதன் மதிப்பறிந்து காத்திட உம்மாலேயே முடியும். நாளை இந்த ஊரேகூட மிலேச்சரால் எரியூட்டப்படலாம். இலங்கைக்கு நேர்ந்த நிலை இந்தத் திருவரங்கத்துக்கு நேராது என்று சொல்வதற்கில்லை. எனவே இவற்றை இப்போதே ஒப்படைக்கிறேன்...'' என்றார்.

பின்னர், சுதர்சனசூரி என்ற தன் அறத் தொண்டர் ஒருவரை தேசிகரின் முன் நிறுத்தி, ``இந்தச் சுதர்சனசூரி உமக்கு பெரும் துணையாக இருப்பான். நீங்கள் எனக்கு உதவ வேண்டியது ஒரு விஷயத்தில்தான். நானும் என் கோஷ்டியாரும் அரங்கனின் உற்சவ மூர்த்தி சிலைகளோடும் உபய நாச்சிமார் சிலைகளோடும் இந்தத் திருவரங்கத்தைவிட்டுச் செல்ல தீர்மானித்துவிட்டோம்.

இப்போதைக்கு மதுரைக்குச் சென்றால், அங்குள்ள திருமலை ஆழ்வாரால் பாதுகாப்பு கிடைக்கும் என்று தோன்றுகிறது. ஆகவே இன்று இரவே நானும் என் குழுவினரும் திருவரங்கத்தை விட்டு மதுரை நோக்கிப் புறப்பட சித்தம் கொண்டுள்ளோம். எமது பயணம் யாதொரு தடையுமின்றி வெற்றிப் பயணமாகத் திகழ தாங்கள் ஆசீர்வதிக்க வேண்டும்'' என்றார்.

தேசிகன் அந்த ஏடுகளைக் கண்களில் ஒற்றிக்கொண்டு, பின்னர் அவற்றைச் சுதர்சன சூரி வசம் தந்துவிட்டுப் பேசலானார்.

``ஆசார்ய புருஷரே... சதம் கடந்தது உங்கள் முதுமை. ஆயினும் தாங்கள் எம்பெருமான் பொருட்டு ஆற்றும் தொண்டு பிரமிப்பிற்குரியது. தங்கள் எண்ணப்படியே தாங்கள் புறப்படுங்கள்.

அஞ்சி ஓடுவதாகக் கருதாதீர்கள். அரங்கத் திருமேனி ஊர் உலா செல்வதாகக் கருதுங்கள். அரங்கன் இருக்கும் இடமே திருவரங்கம். அப்படிப் பார்த்தால் அரங்கன் உம்மோடு பயணிக்கும் இடங்கள் எல்லாம் திருவரங்கம் ஆகப்போகின்றன. திருவரங்கத்துக்குத் தேடி வந்து வணங்க வழியற்றவர்களைத் தேடி அந்த அரங்கனே செல்வதாக இந்தப் பயணத்தைக் கருதலாம். என்னைப் பற்றி கவலை வேண்டாம். தங்களைப் பற்றிய கவலையும் எவருக்கும் வேண்டாம். அரங்கன் நமக்கு பல வகையில் துணை வருவான்...'' என்று வாழ்த்தி அருளினார்.

அன்று இரவில் அரங்கனின் உற்சவ மூர்த்தம் மரப்பெட்டிக்குள் அடங்கிய நிலையில், பஞ்சு மூட்டைகள் அடுக்கப்பட்ட ஒரு மாட்டு வண்டியின் நடுவில் வைக்கப்பட்டு, மதுரையை நோக்கிப் புறப்பட்டது. எம்பெருமானின் நகைநட்டுகள் திருவரங்கத்திலேயே

சுதர்சனசூரியால் ரகசியமாய் ஓர் இடத்தில் வைக்கப்பட்டன.

அந்த முயற்சிக்கு சுதர்சன சூரியின் புதல்வர்களான மாலோலனும் அனந்தனும் துணை நின்றனர். மொத்தத்தில் ஆலயத்தில் வழிபாட்டுக்குரிய சகலமும் அகற்றப்பட்டன. வரலாற்றில், பூஜைகளற்ற மக்கள் நடமாட்டம் இல்லாத ஒரு கதியைத் திருவரங்க ஆலயம் அன்று கண்டது. இதை அறியாமல் ஆலயத்தையே இடித்துத் தரைமட்டமாக்கிவிடும் வெறியோடு திருவரங்கம் நோக்கி வந்த வண்ணம் இருந்தது மிலேச்சப் படை.

தேசிகனும் பிள்ளை லோகாசார்யரின் அஷ்டதச நூல்களுடன் சுதர்சன சூரியின் பிள்ளை களான மாலோலனுடனும் ஆனந்தனு டனும் புறப்படத் தயாரானார்.

ஆனால் அது அவ்வளவு சுலபம் இல்லை என்பதுபோல், மிலேச்சப் படை திருவரங்கத் தைச் சுற்றி வளைத்து நின்றது. இந்நிலையில் பிள்ளை லோகாசார்யரின் மதுரை நோக்கிய பயணத்திலும் சில இடையூறுகள்!

கி.பி.1323-ம் ஆண்டின் தொடக்கமே இதுபோல் பெரும் சோதனைகளைக் கொண் டிருந்த நிலையில், பல ஆச்சரியங்களும் காத்திருந்தன!

அந்த ஆச்சரியங்கள், அதிசயங்கள், இதற்குப் பிறகான வரலாற்றுடன் மந் நாதமுனிகள் உள்ளிட்ட பலரின் செயல்பாடுகளை நாம் ரங்க ராஜ்ஜியம் இரண்டாம் பாகத்தில் காணலாம்.

**(முதலாம் பாகம் நிறைவுற்றது!)**

## ஆலயங்கள் அற்புதங்கள்!



ஆலயங்கள் அற்புதங்கள்

நான்கு முகங்கள் கொண்ட லிங்கத் திருவுருவை திருவதிகைக் கோயிலின் திருச்சுற்றில் காணலாம்.

திருமோகூர் தலத்தில் ஆதிசேஷனுக்குத் தங்கக் கவசம் சாத்தப்படுகிறது.

திருக்கோட்டியூர் நாச்சியாருக்கு திருமாமகள், நிலமாமகள், குலமாமகள் என்று மூன்று திருப்பெயர்கள் உண்டு.

மயிலாடுதுறை வள்ளலார் கோயிலிலும் சேத்தமங்கலம் ஆபத்சகாயேஸ்வர்ரர் கோயிலிலும், தட்சிணாமூர்த்தி காளையுடன் தரிசனம் தருகிறார்.

குழந்தை வடிவில் யாதவ குலத்துப் பாலகனாக வலக் கையில் மத்தும் இடக் கையில் கயிறும் ஏந்தி கண்ணன் அருள்வது உடுப்பியில் மட்டும்தான்!

- சு.இலக்குமணசுவாமி, திருநகர்